# இராமாயணம்

[ சக்கரவர்த்தித் திருமகன் ]

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி







| | | | |
|---|---|---|---|
| முதற் பதிப்பு | : | ஜனவரி | 1973 |
| முப்பதாம் பதிப்பு | : | அக்டோபர் | 2004 |
| ஐம்பதாம் பதிப்பு | : | நவம்பர் | 2017 |
| ஐம்பத்தி ஒன்றாம் பதிப்பு | : | செப்டம்பர் | 2018 |
| ஐம்பத்தி இரண்டாம் பதிப்பு | : | செப்டம்பர் | 2019 |

வானதி வெளியீடு

விலை : ரூ. **220.00**

---

| | | |
|---|---|---|
| Title | : | **RAMAYANAM** |
| Author | : | CHAKKARAVARTHI RAJAGOPALACHARI |
| Language | : | Tamil |
| Edition | : | 52 st Edition, September 2019 |
| Pages | : | xii + 602 = 614 |
| Published by | : | **VANATHI PATHIPPAKAM** |

23, Deenadayalu Street,
Thyagaraya Nagar, Chennai - 600 017.
Phone : 24342810, 24310769
E-mail : vanathipathipakam@gmail.com

Price : **Rs. 220.00**

சக்கரவர்த்தித் திருமகன் என்ற தலைப்பில் 9 பதிப்புக்கள் வெளிவந்த நூல், சாகித்திய அகாதமி பரிசு பெற்ற நூல், ராஜாஜியின் விருப்பப்படி இராமாயணம் என்ற பெயரில் வெளிவருகிறது.

---

Printed at : Bala Offset, Chennai - 42. Ph: 2243 1730, 4303 7730

என்னுடைய "சக்கரவர்த்தித் திருமகன்", "வியாசர் விருந்து" இந்த இரண்டு நூல்களையும் "**இராமாயணம்**" "**மகாபாரதம்**" என்ற பெயரில் வானதி பதிப்பகத்தார் என்னுடன் ஒப்பந்தம் செய்துகொண்டு வெளியிடுகிறார்கள்.

*சென்னை-31*
*26-8-'72*

— சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

சக்கரவர்த்தித் திருமகன் என்ற தலைப்பில்

## ஆசிரியரின் முதற்பதிப்பு முன்னுரை

சக்கரவர்த்தித் திருமகன்' எழுதி முடித்ததும் புஸ்தக மாகத் தொகுத்து நன்றாக அச்சடித்துக் குறைந்த விலைக்கு மக்களுக்குத் தரவேண்டிய பணியைப் பாரி நிலையத்தார் எடுத்துக் கொண்டார்கள். அவர்களுக்கு என்னுடைய நன்றி!

சீதை, ராமன், ஹனுமான், பரதன் இவர்களை விட்டால் நமக்கு வேறு என்ன செல்வமோ நிம்மதியோ இருக் கிறது? இந்தப் பழஞ்செல்வத்தை எடுத்து, வாசகத் தமிழில் எழுதும் சந்தர்ப்பம் எனக்கு ஏற்பட்டது. அதிருஷ்டம். தமிழ் நாட்டில் அனைவரும் நான் எழுதியதைக் 'கல்கி' பத்திரிக்கையில் படித்துச் சந்தோஷித்து எனக்கு உற்சாகம் ஊட்டினார்கள். கங்கையும் காவேரியும் ஓடும் வரையில், சீதா ராம சரிதம் பாரத நாட்டில் ஆண் பெண் குழந்தை களனைவரையும் தாய்போல் பக்கத்திலிருந்து காக்கும். தமிழ் மக்களே ! இராமாயணம் படிப்பதும் கேட்பதும் நல்லதா என்கிற கேள்விக்கு வெகு நாட்களுக்கு முன் தமிழன் கம்பன் பதில் சொல்லி விட்டான். வழி காட்டி விட்டான். கம்பனை விட அறிவாளியோ, நமக்கு நண்பனோ வேறு இல்லை.

நாட்டுக்கு நான் பல பணிகள் செய்ததாக நண்பர்கள் போற்றுவதுண்டு. அவற்றிலெல்லாம் 'வியாசர் விருந்தும்' 'சக்கரவர்த்தித் திருமகனும்' எழுதிமுடித்ததுதான் மேலான பணி என்பது என் கருத்து. எல்லாவற்றையும்விட அதுவே என் உள்ளத்திற்கு மகிழ்ச்சியையும் அமைதியையும் தந்தது.

பிராட்டியைத் தியானிப்போமாக. நம்முடைய பிழை கள் அதிகம். அவளுடைய கருணையின்றி நமக்குக் கதியில்லை. "குற்றம் செய்யாதார் எவர்தாம்" என்று கேட்ட அவள், நம்மையும் காப்பாள். குறையும் பிழையும் நிரம்பிய இந்த நூலை அவள் பாதத்தில் வைத்து வணங்குகிறேன். என் பணி பயன்படுவதாக.

தியாகராய நகரம்,
3-3-1956

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

சக்கரவர்த்தித் திருமகன் எட்டாம் பதிப்பின்

# முன்னுரை

இந்த எட்டாம் பதிப்பு ராம சரித்திரத்தைத் தமிழ் மக்கள் ஆண், பெண், பெரியோர், குழந்தைகள் எல்லாரும் படிக்க வேண்டும். படித்தால், நல்ல பயனையும் பகவான் கருணையையும் பெறுவார்கள்.

*சேத்துப்பட்டு*
*28-7-1967*

**– சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி**

# இந்த நூலைப் பற்றி

## மீ.ப. சோமசுந்தரம்

இராயப்பேட்டை, வைட் சாலையில் நான் குடியிருந்த மாடியின் கீழ் வீட்டிற்கு, மலேயாவில் இருந்து என் நண்பர் விருந்தாளியாக வந்திருந்தார். எங்கள் வீட்டுக்கு ராஜாஜி அடிக்கடி வந்து போவதைப் பார்த்த அந்த மலேயா நண்பர் ஒரு நாள் ராஜாஜியிடம் இராமாயணத்தைப் பற்றி ஒரு கருத்தை விவாதிக்க வேண்டும் என்று விரும்பி மாடிக்கு வந்தார்.

ஆங்கில நூல்கள் பலவற்றை ஆழ்ந்து படித்து நன்கு தேறியிருந்தவர் அந்த நண்பர். 'இராமனையும் சீதையையும் ஒரு கதையில் வரும் முக்கிய பாத்திரங்கள் என்று கருதிப் பார்க்காமல், தெய்வங்களை வணங்குவது போலக் கும்பிட்டு, அந்தக் கதையின் நிகழ்ச்சிச் சுவையை அனுபவிக்க முடியாமல் நம் நாட்டு மக்கள் தங்கள் கண்களை மூடிக்கொள்கிறார்களே' என்று, ராஜாஜியிடம் வருத்தத்தோடு பேசத் தொடங்கினார். அவர் மேனாட்டு இலக்கிய விமரிசனப் பாங்கிலே அழகாகப் பேசினார். ராஜாஜி புன்முறுவலோடு கேட்டுக் கொண்டே வந்தார். பிறகு பேச ஆரம்பித்தார்.

"நம்முடைய புனிதமான புராணக் கதைகளையெல்லாம் வெறும் உருவகங்களாகவும், ஈசாப் கதைகளாகவும் ஆக்கிவிடுவது எனக்குச் சம்மதம் இல்லை-"

இவ்வாறு தொடங்கினார் ராஜாஜி.

"உருவகங்களைக் கொண்டு நாம் வாழ முடியுமா? கண்ணனும், பார்த்தனும், சீதையும், அநுமனும், பரதனும் பூஜைக்கு உரிய மூர்த்திகள்; வெறும் கதாபாத்திரங்கள் அல்ல. பெரியோர்களையும், வீர புருஷர்களையும் பார்த்து அவர்களைப் பின்பற்றுவது ஒரு விதம். கதைகளைப் படித்து அந்தக் கதாபாத்திரங்களைப் பின்பற்றுவது மற்றொரு விதம்.

பரதனையும் சீதையையும் பீமனையும் பின்பற்றுவது உயிர் கொண்ட நம் முன்னோர்களைப் பின்பற்றுவது போல்.

"கங்கையிலும் காவேரியிலும் தாகத்துக்குத் தண்ணீர் எடுத்துக் கொள்ளலாம். ஆனால் அந்த ஆறுகள் குடி தண்ணீர் சாதனங்கள் மட்டும் அல்ல; அவை ஜீவ நதிகள்; வணங்க வேண்டிய தெய்வங்கள்!"

ராஜாஜியின் இந்த விளக்கத்தைக் கேட்டதும், நண்பர் மனம் உருகிவிட்டார். அவர் சென்ற பிறகு புன்முறுவலோடு ராஜாஜி தமது கண்ணாடியைக் கழற்றித் துடைத்துக் கொண்டே என்னைப் பார்த்தார்;

"இந்த விளக்கத்தை எழுத்திலே போடவேண்டும். மலிவுப் பதிப்புக்கு முன்னுரையாகவே போட்டுவிடலாம் !"

"சரி, இப்போதே எழுதிவிடலாம் !" என்றார் ராஜாஜி.

இது நடந்தது 1956-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 18-ந் தேதி. இன்று இந்த வானதிப் பதிப்பு வெளிவரும்போது ராமன், சீதை, பரதன் முதலிய வணக்கத்துக்கு உரிய மூர்த்திகளின் வரிசையிலே ராஜாஜியும் சேர்ந்துவிட்டார். "பரதனையும் சீதையையும் பின்பற்றுவது, உயிர்கொண்ட முன்னோர்களைப் பின்பற்றுவதுபோல் !" என்று சொன்ன ராஜாஜி, இன்று நம்மிடையே இல்லாமல் "முன்னோரில்" ஒருவராக ஆகிவிட்டார். அவருடைய அறிவுரைகளைப் பின்பற்றுவதற்கு இன்று நமக்கு உறுதுணையாக நிற்பன அவருடைய நூல்களே ! அந்த நூல்களிலும் ராஜாஜியின் உள்ளத்துக்கு மிகவும் உவப்பாக இருந்த ஒரு முக்கிய நூல் இராமாயணம்.

வானதியார் மிகுந்த முயற்சி எடுத்துப் பயபக்தியோடு இந்த நூலை வெளியிடுகிறார். ராஜாஜி அடிக்கடி வற்புறுத்தி வந்த ஆர்வத்தோடும் பக்தியோடும் நாம் இந்த இலக்கியக் கோயிலுக்குள் செல்வோமாக !

சென்னை }
16-1-78 }

மீ.ப. சோமசுந்தரம்

# வானதியின் பதிப்புரை

தலைமுறை தலைமுறையாக நம் மக்கள் படித்தும், கேட்டும், அனுபவித்தும் மனத் தூய்மை பெற்று வந்த பேரிதிகாசம் இராமாயணம்.

'அநீதி, அக்கிரமம், கொடுமை ஆகியவற்றையொழித்து, அறமும், நலமும், இன்பமும் பெருக ஆண்டவன் அருள் பாலிப்பான்' என்ற தத்துவ உண்மையை இது விளக்குகிறது.

பண்புகள் மேலோங்கிய இக் காவியத்தின் குணச் சித்தரப் பாத்திரங்கள், நம்மைத் தீய நெறியினின்றும் விலக்கி, நாம் சீரும் சிறப்புமிக்க வாழ்வைப் பெற வழிகாட்டிகளாக உள்ளன.

எனவேதான் இக் காவியம் நமது பழமைச் செல்வமாகவும், பண்பாட்டின் களஞ்சியமாகவும், நெறி காட்டும் கலங்கரை விளக்காகவும் ஆன்றோரால் போற்றப் பட்டு வந்தது. கால முகில்களை விலக்கி, தண்ணொளி பரப்பும் வெண்மதியாக இந் நூல் விளங்குகின்றது.

நமது மதிப்பிற்குரிய பெருந்தலைவர், நம் நாட்டுப் பண்பாடுகளில் முற்றும் தோய்ந்த ஞான அருளாளர் ராஜாஜி அவர்கள், இந் நூலைச் சாதாரண மக்களும்–பெண்களும் சிறுவர்களுங்கூடப் படித்துப் பயன்பெறத் தக்க முறையில் எளிய இனிய வாசகத்தமிழில் வழங்கியுள்ளார்கள்.

இந் நூலின் பயனைப்பற்றிக் குறிப்பிடும்போது மேதகு ராஜாஜி அவர்கள், "கங்கையும் காவேரியும் ஓடும்வரையில் சீதா-ராமசரிதம் பாரதநாட்டின் ஆண் பெண் குழந்தைகளனைவரையும் தாய்போல் பக்கத்திலிருந்து காக்கும்." என்று கூறியுள்ளார்கள்.

இந் நூல் இதற்குமுன் 'சக்கரவர்த்தித் திருமகன்' என்ற தலைப்பில் ஒன்பது பதிப்புகள் வெளிவந்துள்ளது. சாகித்ய

அகாடமி பரிசு பெற்றுள்ளது. ஆங்கிலத்தில் பல இலட்சம் பிரதிகளுக்கு மேல் விற்பனையாகிப் பயன் தந்துள்ளது. இப்போது "இராமாயணம்" என்ற தலைப்பில், மதிப்பிற்குரிய ராஜாஜி அவர்களால் பல திருத்தங்கள் செய்யப்பெற்று, வானதி பதிப்பகத்தின் சிறந்த பதிப்பாக வெளிவருகிறது. இவ் வாய்ப்பை எங்களுக்குக் கிடைத்த பெரும் பேறாகக் கருதுகிறோம். இதற்கு இசைவளித்த பேரருளாளர் ராஜாஜி அவர்களுக்கு எங்கள் இதயம் கனிந்த நன்றியையும், பேரன்பையும் காணிக்கையாக்குகிறோம்.

ராஜாஜி அவர்களின் நூல்களை எல்லாம், தமிழில் வெளியிடும் பாக்கியத்தை எங்களுக்கு அளித்த ஞான அருளாளர் ராஜாஜியின் பொற்பாத கமலங்களைப் போற்றி வணங்குகிறோம்.

ராஜாஜி அவர்களின் நூல்களை எல்லாம் தமிழில் வானதி பதிப்பகம் அச்சிட, அநுமதி பெற்று வெளியிட உடனிருந்து உதவியவரும் நூல்கள் சிறப்புடன் வெளிவரத் தக்க ஆலோசனைகள் அளித்து வருபவருமாகிய திரு. மீ.ப. சோமசுந்தரம் அவர்களுக்கு நன்றி.

ராஜாஜி அவர்களுடன் இருந்து, நூல்களைத் திருத்தம் செய்து உதவிய கல்கி காரியாலய திரு. முரளி அவர்களுக்கு நன்றி.

இந் நூலால் தமிழ்ப் பெருமக்கள் சிறந்த பயன் பெறுவார்களாக.

ஏ. திருநாவுக்கரசு
வானதி பதிப்பகம்

# பொருளடக்கம்

# இராமாயணம்

## வால்மீகியும் கம்பரும்

ஆண்டவன் விளையாட்டின் ரகசியத்தை யாரே அறிவார். நம் செயல்கள் அனைத்தும் அவ் விளையாட்டில் அடங்கிய ஓர் அற்ப அம்சம். வால்மீகி பாடிய ராம சரிதத்தை நம் மக்களுக்கு எளிய பேச்சு நடையில் சொல்லலாம் என்று எண்ணி, பண்டிதனல்லாத நான் ஆரம்பிக்கிறேன். கம்பர் பாடிய அவையடக்கத்தை வைத்துச் சொல்லுகிறேன். பெரும் பாற்கடலை ஒரு பூனையானது மெள்ள உருட்டிக் குடித்து விடலாம் என்று பார்ப்பது போலாகும், நான் வால்மீகி ராமாயணத்தை எளிய முறையில் சரியாக எடுத்துச் சொல்ல முயல்வது. ஆயினும், கடலைத் தாண்டிய ஆஞ்சநேயன் ராம கதையை எந்தவிதமாக யார் சொல்ல முயன்றாலும் உதவுவான்.

பக்தியுடன் ஒருவன் செய்யும் பணியில் பெரியோர்கள் குற்றம் பார்க்க மாட்டார்கள்; உற்சாகப் படுத்தி, பணியைப் பயன்படும்படி செய்வார்கள்.

பிராணிகளுக்கு எலும்பும் சதையும் இருப்பது போல் தாவரங்களுக்கும் உண்டு. சில தாவரங்களுக்கு நம்மைப் போல் உள்ளே எலும்பும் வெளியே சதையும் இருக்கும். வேறு சிலவற்றிற்கு உள்ளே சதையும் வெளியே எலும்பும் அமைந்திருக்கும். மா, பலா, புளி, தேக்கு முதலிய மரங்களின் சதை, அவற்றின் பச்சைப்பட்டை. மரத்தின் உயிர்ச்சத்து அந்தப் பட்டையின் வாயிலாகவே செல்கிறது. மரத்தின் உள்ளே நின்று பாரத்தைத் தாங்கும் நடுமரமே அதனுடைய எலும்பாகும். ஆனால் மரத்துக்கு வேண்டிய உயிர்ச்சத்து மரத்தின் பச்சைப் பட்டையில் தான் பாய்ந்து வருகிறது. எலும்பு உள்ளேயும்,

உயிர்ச் சத்து பச்சைப் பட்டையிலுமாக இந்த வகைத் தாவரங்களின் ஜீவனம் நடைபெறுகிறது.

இதற்கு நேர்மாறாக இருப்பது வாழை, தென்னை, பனை, கமுகு, நெல், புல், சோளம், கரும்பு. இவைகளின் அமைப்பு வெளிப்புறத்தில் எலும்பு; உள்ளே தண்டில் உயிர். பனை, தென்னை, வாழை, கரும்பு-இவ்வகைத் தாவரங்களைப்போல் பிராணி வர்க்கத்திலும் ஆமை, சங்கு, சிப்பி, கிளிஞ்சல் முதலிய பிராணி வகைகள் உள்ளே உயிரும் வெளியே ஓடுமாக இருக்கின்றன. கிளிஞ்சல் சங்கு முதலிய பொருள்களை நாம் அந்தப் பிராணிகள் செத்த பின்னரே உபயோகப்படுத்துகிறோம்; ஆனால் நீரில் உயிருடன் வாழும் போது ஓட்டிற்குள் உயிரும் சதையும் இருக்கும். நம்முடைய எலும்பு உள்ளே இருப்பது போல், இவற்றின் வெளியோடு அவற்றின் எலும்பு; உயிரும் உணர்ச்சியும் சதையும் ஓட்டிற்குள் மூடி காக்கப்பட்டிருக்கும்.

இவ்வாறே நூல்களையும் இருவகையாக வகுக்கலாம். ஒருவகைக்கு உயிர் அதன் பொருள்; மற்றொரு வகை நூல்களுக்கு அதன் வடிவமே உயிர். விஷயங்களை விளக்கித் தரும் நூல்களான ரசாயனம், வைத்தியம், தேச சரித்திரம், பூகோளம், கணிதம் முதலியவை நூல்களின் பொருளில் உயிர் கொண்ட வகை. பாடல்களும் பெருங் காவியங்களும் கவிஞர் தந்த வடிவழகிலேயே தம் உயிரை வைத்து நிற்கின்றன.

செய்யுளைப் பிரித்து உரைநடையில் எழுதினால் அந்தப் பொழிப்புரையில் உயிர் இருக்காது. கவிஞன் கொடுத்த வடிவத்தைச் சோதித்துவிட்டால் உயிர் மாண்டு போகிறது. ஒரு கணித நூலோ அல்லது வைத்திய நூலோ அவ்வாறு அல்ல. மனனம் செய்வதற்காக ஆசிரியர் செய்யுள் வடிவம் தந்திருந்தாலும்-பழைய நாட்டுக் கணித நூல்களும் வைத்திய நூல்களும் இவ்வாறே செய்யுள் உருவத்தில் அமைக்கப்பட்டு வந்தன-அவற்றை விரித்து உரைநடையில்

எழுதினாலும் பொருளிலே உயிர் கிடப்பதால் அதன் உயிர் நீங்காது.

கம்பர் பாட்டையோ அல்லது பாரதியார் பாட்டையோ உரைநடையில் எழுதினால் உயிரில்லாத உடல்தான் நிற்கும். பொருளுக்குச் சேதமில்லையாயினும், உரை நடையில் மாற்றி எழுதிய பாடல் உயிரிழந்த பிராணியைப் போல் கிடக்கும். அதனோடு பதவுரையும், 'விசேஷ' உரையும், இலக்கணக் குறிப்பும் எழுதி விட்டாலோ, அது சவச்சோதனை ஆலயமாகத்தான் பயன்படும். பிரேத சோதனையில் அறிவு வளர்ச்சிக்கு மிக்க பயன் உண்டு; ஆனால், அழகு இல்லை. உரைநடையில் மொழி பெயர்க்கப்பட்ட பாடலில் ஒளி இல்லை; உயிர் இல்லை; பாடலின் தனிப்பயன் இல்லை.

எவ்வாறாயினும், "யானை இருந்தாலும் ஆயிரம் வெள்ளி, இறந்தாலும் ஆயிரம் வெள்ளி" என்பதுபோல், சில நூல்கள் இரு விதத்திலும் பயன்தரும். காவியங்களையும் பாடல்களையும், அன்னியருக்காக மொழி பெயர்ப்பது தற் கால வழக்கத்தில் பதிந்து போயிருக்கிறது. தமிழரும் கூட கம்பனையும் பாரதியையும் திருக்குறளையும், ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பதில் மிகவும் ஈடுபடுகிறார்கள். சில தமிழர் அவ்விதம் மொழி பெயர்த்ததைப் படித்து வருகிறார்கள். மொழிபெயர்த்த ராமாயணத்துக்கும் இறந்துபோன யானையைப் போல் கொஞ்சம் விலையுண்டு என்பதைச் சொல்லி விளக்குவதற் காகவே இந்த நீண்ட முன்னுரை.

வால்மீகி பகவான் ராமாயணம் பாடிய காலமும், ஸ்ரீ ராமச்சந்திரன் அவதரித்து இம்மண்ணுலகில் வாழ்ந்த கால மும் ஒன்றே என்பது புராணம் வாசிப்பவர்களுடைய பரம் பரைக் கொள்கை. உலக அனுபவத்தை வைத்து ஆராய்ந்து யோசித்தால், வால்மீகி ரிஷியானவர் ராமாயணத்தைப் பாடி யதற்கு முன்னமேயே, அதாவது புராதன காலந்தொட்டே

சீதாராம சரித்திரம் மக்களிடை எழுத்து வடிவம் பெறாமலே பல நூற்றாண்டுகள் வாய்வழிக் கதையாக வழங்கி வந்திருப் பதாகத் தோன்றுகிறது. கர்ண பரம்பரையாக முன்னமேயே இருந்த ராம சரிதத்தை எடுத்துக் கொண்டு, அதற்கு வால்மீகி பகவான் நூல்வடிவம் கொடுத்தாற்போல் தோன்றுகிறது. அதனாலேயே கதையில் பல சிக்கல்கள் ஏற்பட்டதென்றும் ஊகிக்கலாம். வாலியைக் கொன்ற முறை, அதில் காணும் நியாயக் குறை, சீதையைக் காட்டுக்கு அனுப்பிய அநீதி, இவை போன்ற இன்னும் பல சிக்கல்கள்.

வால்மீகி ரிஷியின் காவியத்தில் இராமருடைய நட வடிக்கைகளை ஈசுவர அவதாரமாக வைத்து எழுதவில்லை. சில அதிகாரங்களிலும், இங்குமங்கும் சுலோகங்களிலும் தெய்வ அவதார விஷயத்தைச் சொல்லி வந்தாலும், மொத் தத்தில் வால்மீகி ராமாயணத்தில் காணப்படும் ராமன் ஒரு சிறந்த ராஜகுமாரன்; வீர புருஷன்; அபூர்வமான தெய்வீக நற்குணங்கள் பெற்றவன்; அம்மட்டே . கடவுளாக வேலை செய்யவில்லை.

வால்மீகி முனிவரின் காலத்திலேயே ஸ்ரீராமனைப் பற்றிய அவதாரக் கொள்கை ஓரளவு ஜனங்களின் மனத்தில் இருந்து வந்தது. வால்மீகி ராமாயணம் இயற்றிப் பல நூற் றாண்டுகளுக்குப் பிறகு கம்பரும் துளசிதாசரும் ராமாயணம் பாடினார்கள். இதற்குள் ஸ்ரீராமன் மகாவிஷ்ணுவின் அவ தாரமே என்பது நாட்டில் நன்றாக ஊர்ஜிதப்பட்டுப் போன கொள்கையாகி விட்டது. ராமன் என்றாலும் கிருஷ்ணன் என்றாலும் மகாவிஷ்ணுவே; மகாவிஷ்ணு என்றால் ராமனே- கிருஷ்ணனே- இந்த நிலைக்கு ஜனங்களின் கொள்கை வந்து விட்டது. இதற்கு ஏற்ப, பக்தியும் கோயில்களும் வழிபாடும் ஏற்பட்டு ஸ்திரமாகி விட்டன.

மக்களுடைய நம்பிக்கையும் வழிபாடும் இவ்வாறு பரிணமித்துவிட்ட பிறகு, கம்பரோ, துளசிதாசரோ மீண்டும் ராமனை எப்படி வெறும் வீரனாக வைத்துப் பாட இயலும்?

அப்படிப் பாட முயன்றாலும் அது வீணாகும். கம்பரும், துளஸிதாஸரும் பரிபூரண பக்தர்கள்; ஆழ்வார்களேயா வார்கள். அவர்கள் தற்கால சரித்திர ஆராய்ச்சியாளர் அல்லது நெடுங்கதை எழுத்தாளர்களைப் போன்றவர்கள் அல்ல ! ராமாவதாரத்தை வால்மீகியைப்போல் வெறும் ஒரு வீர புருஷனைப் பற்றிய கதையாக எழுத முடியாத நிலை யிலும், காலத்திலும் கம்பரும் துளசிதாசரும் பாடினார்கள். ராமனை மானிடப் பிறவியில் அடக்கக் கம்பருடைய பக்தி இடம் தரவில்லை. ஆனபடியால் கம்பராமாயணத்தில், அடிக்கடி மிக ரசமான இடங்களில் ராமன் மகாவிஷ்ணுவே, கடவுளே, அனைத்திலும் பரவி நிற்கும் பரம்பொருளே என்று வைத்து, மனத்தை உருக்கும் முறையில் அற்புத அழகோடு பாடியிருக்கிறார்.

காலத்துக்கும் சூழ்நிலைக்கும் தக்கவாறு உண்மைக் கவிஞர்கள் பாடமுடியுமே யொழிய, வெறும் வற்றல் ஆராய்ச்சிகளைப் பாட்டாகப் பாடமாட்டார்கள்.

வால்மீகி ராமாயணத்துக்கும் கம்பராமாயணத்துக்கும் மற்றொரு பெரும் வித்தியாசம் . வால்மீகி பகவான் பாடிய நூல் தமிழ் அகவற்பா முறையில் அமைந்தது என்று சொல்லலாம். கம்பர் பாடியது நிருத்தியத்துக்குத் தகுந்த பாட்டு. ஆங்கிலத்தில் சொல்வோமேயானால், வால்மீகி ராமாயணம் கம்பீர நாதம் பொருந்திய Blank verse என்றும், கம்பராமாயணம் ஒரு Lyric என்றும் கூற வேண்டும். கம்பரு டைய பாட்டுக்கள் ஒவ்வொன்றும் எதுகையும் மோனையும் சந்தமும் கலந்து, பளிச்சுப்பளிச் சென்று ஆபரணங்களைப் பூண்ட மங்கையின் ஆடலைப் போல் மின்னித் துள்ளி நடன மாடுகின்றது. தெய்வீக அவதார விஷயத்தை வைத்து உண் டாகும் உணர்ச்சியுடன், நடனச் சுவையும் கலந்து கம்பரு டைய ராமாயணம் பேரழகு அடைந்து விளங்குகிறது. ஆனால் அதைத் தமிழ் மக்கள் மட்டுமே அனுபவிக்க முடியும். அதன் அழகு மற்றவர்களுக்குச் சரியாக விளங்காது. கம்ப

ராமாயணத்தை அன்னிய மொழியில் பெயர்த்து எழுதுவதிலாவது, தமிழில் செய்யுள் உருவத்திலிருந்து வசனமாக்குவதிலாவது பெரும் பயன் ஒன்றுமில்லை. வசனமாக எடுத்துச் சொல்லி விளக்கிவிட்டு, உடனே சரியான முறையில் பாட்டைப் பாடினால் நல்ல பயன் ஏற்படும். டி.கே.சி. மறைந்த பின் இதைச் சொல்லித்தான் என்ன பயன்?

## 1. சந்தத்தைக் கண்டார்

ஒருநாள் காலை வால்மீகி ரிஷியின் ஆசிரமத்துக்கு நாரத முனிவர் வந்தார். வால்மீகி ரிஷி அவரை உபசரித்து வணங்கி, "சகலமும் தெரிந்த நாரதரே, இந்த உலகத்தில் வீரர்களுக்குள் எல்லா நற்குணங்களும் அறிவும் பெற்ற உத்தம புருஷன் யார்?" எனக் கேட்டார்.

எதற்காக வால்மீகி ரிஷி இதைக் கேட்கிறார் என்று ஞான திருஷ்டியால் நாரதர் தெரிந்து கொண்டு, "சூரிய வம்சத்தில் பிறந்த ராமன், அயோத்தியில் அரசு புரிந்து வருகின்றான். நீர் கேட்கும் உத்தம வீரன் அவன்தான்" என்றார்.

இப்படிச் சொல்லிவிட்டு ராம சரித்திரத்தைச் சுருக்கமாக விளக்கிச் சொன்னார். அதைக் கேட்ட வால்மீகி ரிஷி மிகவும் மகிழ்ச்சியடைந்தார். நாரதர் விடை பெற்றுச் சென்ற பிறகும், அதைப் பற்றியே தியானித்துக் கொண்டிருந்தார். பிறகு நதிக்கரைக்குப் போனார்.

குளிப்பதற்காக முனிவர் இடம் பார்த்துக் கொண்டு, ஆற்றங்கரையில் உலாவிக் கொண்டிருந்த அந்தச் சமயம், மரக்கிளையில் ஆணும் பெண்ணுமாக விளையாடிக் கொண்டிருந்த இரண்டு கிரௌஞ்ச பட்சிகளுள் ஒன்று எங்கேயோ நின்ற வேடன் எய்த அம்பு பட்டுக் கீழே விழுந்தது. பெண் பறவை தன் காதலன் திடீர் என்று அடிபட்டுக் கீழே விழுந்து புரள்வதைப் பார்த்துக் கதறிக் கதறி அழுதது.

இந்த நிகழ்ச்சியைக் கண்ட ரிஷி, "அடே, பாபீ! இப்படிச் செய்தாயே, நீ எவ்வளவு நாள் வாழ்ந்தாலும் இருக்க

இடமின்றி அலையக் கடவாய்" என்று தன்னையுமறியாமல் வேடனைச் சபித்துவிட்டார். அடுத்த கணம், 'இப்படி ஏன் செய்தேன்' என்று எண்ணி எண்ணி வருத்தப்பட்டார். 'வேடனை நான் ஏன் சபித்தேன்? எனக்கென்ன உரிமை இதற்கு? கோபாவேசத்துக்கு இடம் தந்து விட்டேனே என்று துக்கப் பட்டார்.

ரிஷியின் வாயினின்று வெளிப்பட்ட சாபமொழிகள் ஓர் அற்புத நாதத்தோடும் சந்தத்தோடும் அவருடைய காதிலேயே தொனித்தன. அதைக் கண்டு ரிஷியானவர் வியப்பு அடைந்தார். பறவைகளின் துக்கத்தைக் கண்டு தம் உள்ளத்தில் உதித்த கருணையும் அடங்காத மனக்கலக்கமும் சாப உருவம் கொண்டு, தம்மை அறியாமல் ஓர் அருமையான பாட்டாக அமைந்து விட்டதைக் கண்டு பேராச்சரியங் கொண்டார். 'இது எனக்கு விளங்காத ஆண்டவன் திரு விளையாடல்' என்று எண்ணி தியானத்தில் அமர்ந்தார்.

இந் நிலையில் சாட்சாத் நான்முகக் கடவுளே பிரத்யட்சமாக வந்து, "ரிஷி சிரேஷ்டரே, திகைக்காதீர்! ராம சரித்திரத்தை எழுதும் முறையை உமக்குக் காட்டவே இந்த நிகழ்ச்சி நடந்தது. சோகத்திலிருந்து தோன்றிய சுலோகத்தையே வைத்து ரகுநாதரின் கதையைப் பாடி, உலகத்துக்கு உதவும் திறமையை உமக்கு வரமாகத் தந்தேன்" என்று சொல்லி மறைந்தார்.

அதன்மேல் வேடனைக் கோபித்துச் சொன்ன சாப மொழிகளைத் திரும்பத் திரும்ப ரிஷியும் சீடர்களுமாகப் பாடிப் பாடி, அந்தச் செய்யுள் வடிவத்தை மனத்தில் அமைத்துக் கொண்டார்கள். பின்னர், அந்தச் சந்தத்தில் ரிஷியானவர் ராம சரித்திரத்தைப் பூரணமாகப் பாடித் தம்முடைய சீடர்களுக்கும் கற்பித்தார். இதுவே வால்மீகி ராமாயணம் என்னும் புண்ணிய நூலின் அற்புதத் தோற்றுவாய்.

மக்களின் துக்கங்களை, ஈசுவரனும், ஈசுவரியும் மானிட ஜாதியில் பிறந்து தாமே நேரில் அனுபவித்து, தருமத்தை

உறுதிப்படுத்திவிட்டு மறைந்த இந்தப் புண்ணிய கதையை வால்மீகி மகரிஷி ஒப்பற்ற மதுரமான முறையில் பாடி, உலகத்துக்குத் தந்தார். "பூமியில் மலைகளும் ஆறுகளும் உள்ள வரையில் இந்த ராமாயணம் மக்களிடையே வழங்கும், எல்லாப் பாபங்களினின்றும் விடுதலை தரும்" என்று நான்முகன் ஆசீர்வதித்துச் சொன்னது பொய்யாகாது.

கோசல தேசமானது கங்கைக்கு வடக்கே சரயுநதி பாய்ந்து செழிப்புற்ற விசாலமான தேசம். அந்த நாட்டின் தலைநகரம் அயோத்தி. மனு என்னும் புகழ்பெற்ற சூரியகுல அரசனால் நிர்மாணிக்கப்பட்ட நகரம், மிக்க அழகும் புகழும் பெற்ற பெரிய நகரம். வால்மீகி வருணித்திருப்பதைப் படித்தால், தற்கால ராஜதானி நகரங்களுக்கு எந்த விதத்திலும் அயோத்தி குறைந்ததாகத் தோன்றவில்லை. அந்த நாட்களிலேயே பாரத தேசத்தில் நகரங்களும் நகரப் பண்பாடும் மிக உன்னத நிலை அடைந்திருந்தன என்று தெரிகிறது.

தசரத சக்கவர்த்தி இந்த அயோத்தி நகரத்தி லிருந்து கொண்டு ராஜ்யத்தை ஆண்டு வந்தான். தசரதன் தேவர்களுக்காக யுத்தம் செய்தவன். மூன்று உலகங்களிலும் புகழ் பெற்ற அரசன். இந்திரன், குபேரன் இவர்களுக்குச் சமானமாக இருந்தான். கோசல நாட்டு ஜனங்கள் மிகச் சந்தோஷமாகவும் யோக்கியமாகவும் வாழ்ந்து வந்தார்கள். எண்ணிறந்த வீரர்களடங்கிய பெருஞ்சேனை ராஜ்யத்தை நன்றாகப் பாதுகாத்து வந்தது. சத்துருக்கள் கிட்ட நெருங்க முடியாத நிலையில், தசரதன் அயோத்தி நகரத்தைப் பாதுகாத்து வந்தான். சேனாபலம், கோட்டை மதில் சுவர்கள், அகழிகள், எதிரிகளைத் தாக்கும் எந்திர அமைப்பு இவைகளால் காக்கப்பட்ட அந்த நகரம், சத்துருக்களால் யுத்தம் செய்து பிடிக்க முடியாததாக இருந்தது. ஆனபடியால் அந்த நகரத்திற்கு அயோத்தி என்று பெயர். 'யுத்தத்தால் பிடிக்க முடியாத' என்று பொருள் அதற்கு.

தேவராஜனைப் போல் புகழும் ஐசுவரியமும் பெற்று அரசாண்டு வந்த தசரதனுக்கு மந்திரிகளும் சரியாக அமைந்திருந்தார்கள். அரசனுக்கு யோசனை சொல்வதிலும், இட்ட பணிகளை உடனே நிறைவேற்றுவதிலும் மிகுந்த சாமர்த்தியம் பெற்ற எட்டு மந்திரிகள், தசரதனுக்குச் சேவை செய்து வந்தார்கள். தர்மோபதேசம் செய்வதற்கும், பூஜை வேள்விச் சடங்குகள் முதலிய காரியங்களை நடத்துவதற்கும் வசிஷ்டர், வாமதேவர் முதலிய ரிஷிகளும், வேறு சிறந்து பிராமணர்களும் அரசன் பக்கத்திலிருந்து வந்தார்கள்.

ஜனங்களைக் கஷ்டப்படுத்தாமல், சக்திக்குத் தக்கவாறு வரிகள் வசூலிக்கப்பட்டன. குற்றவாளியின் சக்தி, சூழ்நிலை இவற்றை உத்தேசித்து தண்டனைகள் விதிக்கப்பட்டன. ஆலோசனை சொல்லுவதில் நிபுணர்களும் ராஜ்ய காரியங்களில் சமர்த்தர்களுமான மந்திரிகளாலும் அதிகாரிகளாலும் சூழப்பட்டு ஆட்சிபுரிந்த தசரதன், உதயசூரியன் ஜொலிப்பதுபோல் ஜொலித்தான்.

## 2. குறை தீர்ந்தது

ஆண்டுகள் பல நன்றாகக் கழிந்தன. ஆயினும் அரசனுக்கு ஒரு பெருங் குறை, புத்திரபாக்கியம் இல்லாத குறை. ஒருநாள்-அப்போது வசந்த ருது-அரசனுக்கு ஓர் எண்ணம் தோன்றிற்று. 'அசுவமேத யாகமும் புத்திர காமேஷ்டியும் செய்வித்தேனானால் ஒருவேளை மக்கட்பேறு பெறுவேனோ' என்று எண்ணினான். குருக்களைக் கேட்டதில், அவர்களும் ரிஷ்ய சிருங்க முனிவரைத் தருவித்து, அவர் தலைமையில் வேள்வியை நடத்தத் தீர்மானித்தார்கள். தீர்மானித்தபடி சகல ஏற்பாடுகளையும் செய்தார்கள். அரசர்களுக்கு அழைப்பு, யாகசாலை நிர்மாணத்துக்கு வேண்டிய காரியங்கள் எல்லாம் மிகத் தீவிரமாக நடைபெற்றன.

அந்தக் காலத்தில் வேள்வியென்றால் சாமான்ய மல்ல, யாகமேடைக்கு உரிய அளவுகள் எடுத்து பக்க

ஜாக்கிரதையாகச் செய்யவேண்டும். அதற்கே தனி நிபுணர் கள் உண்டு. அவர்கள் கலந்து நிச்சயித்து உத்தரவிட்டபடி, வேலைக்காரர்களைக் கொண்டு எல்லாம் தயாரிக்கவேண்டும். யாக ஸாதனங்கள் செய்யும் நிபுணர்களைத் திரட்டி, அவர்க ளுககு இன்ன இன்னது செய்யுங்கள் என்று சொல்லி, வேலை வாங்க வேண்டும். தச்சர்கள், சிற்பிகள், குளம், கிணறு வெட்டுகிறவர்கள், சித்திரக் காரர்கள், பாடகர்கள், வாத்திய சங்கீதக்காரர்கள், நிருத்தியக் கலைஞர்கள் - இன்னும் இம் மாதிரியான பல பேர்களைத் திரட்ட வேண்டும். விருந்தி னர்கள் தங்குவதற்கு ஒரு புதிய நகரமே நிருமாணித்து, ஆயிரக்கணக்கான ஜனங்களுக்குப் போஜனமளித்து, உபச ரித்து, மாடுகள், துணிகள் முதலியன கொடுக்க வேண்டும். ஆட்டம், சங்கீதம், வேடிக்கை முதலியவைகளையும் ஏற்பாடு செய்து, பெருங்கூட்டத்தைத் திருப்தி செய்து அனுப்ப வேண் டும். தற்கால உலகில் ராஜாங்க ஆதரவில் நடத்தப்படும் பெரிய சம்மேளனங்களைப் போலவே அந்தக் காலத்தில் வேள்விகள் நடத்தப்பட்டன.

எல்லாக் காரியங்களும் சரியாகவும் மும்முரமாகவும் நடத்தப்பட்டு, யாகக் குதிரையும் அதனுடன் ஒரு வீரர் படையும் பல நாடுகள் சுற்றிவரும்படி அனுப்பப்பட்டன. ஒரு வருஷம் கழித்து, எந்த இடையூறுமில்லாமல், யாகக் குதிரை யும், குதிரையை அழைத்துச் சென்ற வீரர்களும் வெற்றிக் கொண்டாட்டத்துடன் நகரத்துக்குத் திரும்பி வந்தார்கள்.

அதன்மேல் யாகத்தைச் சாஸ்திரப்படி செய்ய ஆரம் பித்தார்கள். அயோத்தியில் இது நடக்க, தேவர்களுக்குள் நடந்த யோசனையை வால்மீகி சொல்கிறார்.

நான்முகக் கடவுளைப் பார்த்துத் தேவர்கள் சொன் னார்கள். "பகவானே! உம்முடைய வரத்தைப் பெற்றுக் கொ ண்டு, ராவணன் என்ற அரக்கன் எங்களுக்கெல்லாம் மிகுந்த தொல்லை தந்து வருகின்றான். அவனை நாம் அடக்கவோ,

ஜெயிக்கவோ, கொல்லவோ முடியவில்லை. உம்முடைய வரத்தினால் அவனுக்குப் பாதுகாப்பு ஏற்பட்டு, அவனுடைய அகங்காரம் அதிகரித்து, துஷ்டனாகப் போய், அவன் எல்லோரையும் அவமதித்தும் கொடுமை செய்தும் வருகிறான். இந்திரனைத் துரத்தி விட்டு தேவலோகத்தையே கைப்பற்ற எண்ணுகிறான். அவனைக் கண்ட சூரியனும் வாயுவும் வருணனும் யாவருமே பயப்பட்டு நடுங்குகிறார்கள். அவன் அகங்காரத்தை, அவன் கொடுமையை ஒரு முடிவுக்குக் கொண்டு வரும் யோசனையை நீர்தான் சொல்ல வேண்டும்."

இதைக்கேட்ட பிரமன், "இந்த ராவணன் தவம் செய்து வரம் பெற்றிருக்கிறான். வரம் கேட்கும்போது, நல்ல வேளை யாக அவனே ஒரு விஷயத்தை விட்டு விட்டான். தேவ கந்தருவ ராக்ஷசர்களால் தனக்கு மரணம் உண்டாகக் கூடாது என்று வரம் பெற்றானே யொழிய, மானிடர்களைப் பற்றிக் கேட்கவில்லை. மனித ஜாதியை மறந்தோ, அலட்சியம் செய்தோ விட்டுவிட்டான். ஆன படியால் இதற்கு வழி உண்டு" என்றார்.

எல்லாருக்கும் ஒரே மகிழ்ச்சி. உடனே மகா விஷ்ணுவைச் சரணடைந்தார்கள். "லோகநாதனே! ராவணன் என்ற துஷ்டன் பிரம்மாவிடம் வரம் பெற்று, உலகத்தை இம்சை செய்து வருகிறான். அதைப் பொறுக்க முடியவில்லை. அவன் அமரத்வம் கேட்டுப் பெற்ற வரத்தில் மனிதனால் அவனுக்கு மரணமில்லை என்று சேர்க்கப்படவில்லை. மறந் தோ, அலட்சியம் செய்தோ அவன் அதைக் கேட்கவு மில்லை. பிரம்மனிடமிருந்து பெறவில்லை. ஆகையால் தங்களுடைய அருள் எங்களுக்கு வேண்டும். மனித ஜன்மம் எடுத்துத் தாங்கள்தான் எங்களைக் காப்பாற்றவேண்டும்" என்றார்கள்.

நாராயணனும், அப்படியே என்று ஒப்புக்கொண்டு "பூவுலகில் புத்திர பாக்கியத்துக்காக யாகம் செய்யும் தசரத னுக்கு நான்கு குமாரர்களாக நான் அவதரித்து, ராவணனைக்

கொன்று, உங்களுக்கு விடுதலையும் தருவேன்" என்றார். அவ்வாறே தசரதனுடைய மூன்று மனைவியரின் வயிற்றில் கர்ப்பவாசம் செய்யத் திருவுளங் கொண்டார்.

* * *

ரிஷ்ய சிருங்கர் வேள்வித் தீயில் ஆகுதி விட்டார். நெய்யைத் தீ விழுங்கிற்று. தீயிலிருந்து பொங்கி எழுந்தது கொழுங்கனல் போன்ற ஒரு பெரிய உருவம். அதன் பிரகாசம் சூரியனைப்போல் கண்களைக் கூசச் செய்தது.

இரு கைகளாலும் ஒரு திவ்விய தங்கப் பாத்திரத்தை ஏந்தி நின்றது. கம்பீரமான துந்துபி ஸ்வரத்தில் சொல்லிற்று: "தசரத மகாராஜனே, உன்னுடைய பிரார்த்தனையை ஒப்புக் கொண்டு, தேவர்கள் இந்தப் பாயசத்தை உன் மனைவியர் களுக்கென்று அனுப்பியிருக்கிறார்கள். உனக்குப் புத்திர பாக்கியம் உண்டாகும். இதைப் பெற்றுக் கொண்டு உன் பத்தினிகளுக்குத் தருவாயாக. மங்களம்!" என்றது.

தசரதனும் அடங்கா மகிழ்ச்சியடைந்து, குழந்தையைத் தூக்கியெடுப்பது போல், வெகு பிரியமாகப் பாத்திரத்தைப் பெற்றுக் கொண்டான். நெருப்பினின்று கிளம்பிய யாக புருஷ னும் மறைந்தான்.

வேள்வி முடிந்தபின், அரசன் பாயசப் பாத்திரத்தை அப்படியே எடுத்துக்கொண்டு, அந்தப்புரம் சென்று தனது மனைவியரிடம் கூறினான்:

"தேவர்கள் பிரசாதம் இதோ கொண்டு வந்திருக் கிறேன். நீங்கள் இதை மூவரும் அருந்திப் புத்திரப் பேறு அடையுங்கள்!" என்று சொன்னான்.

இந்த மகிழ்ச்சிச் செய்தியைக் கேட்டதுமே, அந்தப் புரம் சரத்கால சந்திர காந்தியின் பொலிவு அடைந்தது. தசரதனுக்கு மூன்று பத்தினிகள். பாத்திரத்திலுள்ள பாய சத்தில் பாதியை கௌசல்யா தேவி அருந்தினாள். சுமத்திரைக்கும் அப்படியே தந்து, மிகுதியில் ஒரு பாதியை

கைகேயி அருந்தினாள். பின்னர் எஞ்சி நின்ற பாயசத்தைத் தசரதன் மறுபடி சுமித்திரைக்குக் கொடுத்தான்.

பரம ஏழை ஒருவன், பணம் நிறைந்த பானை ஒன்று புதைந்து கிடந்ததைத் திடீர் என்று அடைந்து பெற்ற மகிழ்ச்சியைப் போல, தசரதனுடைய மூன்று மனைவிகளும் மகிழ்ந்து மனம் பூரித்தார்கள். எதிர்பார்த்தபடி மூன்று ராஜ பத்தினிகளும் கர்ப்பம் தரித்தார்கள்.

## 3. விசுவாமித்திரர்

வேள்வியில் அடைந்த பாயசத்தை அருந்தியதன் பயனாக மூன்று பத்தினிகளும் கர்ப்பம் தரித்தார்கள். காலக்கிரமத்தில் கௌசல்யா தேவி, ராமனைப் பெற்றாள். அடுத்தபடி கைகேயி பரதனைப் பெற்றாள். சுமித்திரா தேவி இரு குமாரர்களைப் பெற்றாள். அவர்களே இரட்டையர்களான லக்ஷ்மணனும் சத்ருக்கனனும். பாயசத்தில் அருந்திய பங்கின் விகிதாசாரப்படி, இந்த நான்கு குமாரர்களுக்கும் விஷ்ணு அம்சம் சொல்லப்படுகிறது. முறையே ராமன் விஷ்ணுவில் பாதி என்றும், லக்ஷ்மணன் விஷ்ணுவில் கால் பங்கு என்றும், பரதனும் சத்ருக்கனனும் ஒவ்வொருவர் அரைக்கால் பங்காகவும் சொல்லப்படுகிறது. சுமித்திரை முதலில் அருந்தியது கால்பாகம், கடைசியாக அருந்தியது கைகேயிக்குத் தந்ததுபோக மிஞ்சி நின்ற அரைக்கால் பாகம். முந்தி அருந்திய கால்பங்கு பாயசம் லக்ஷ்மண சொரூபமாயிற்று; பிந்திய அரைக்கால் பங்கு சத்ருக்கனன் சொரூபமாயிற்று. இந்த விஷயங்கள் அவ்வளவு முக்கியமல்ல. கடவுளைப் பங்கு பண்ணிக் கணக்கிட முடியாது. பரம்பொருளில் ஒரு சிறு பங்கும் பூரணமாகவே நிற்கும் என்பது சுருதி.

ஓம் பூரண மதஹ் பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமே வா வசிஷ்யதே

"அங்கிருப்பதும் பூரணம் இங்கிருப்பதும் பூரணம். பூரணத்திலிருந்து பூரணம் உண்டாகியுள்ளது. பூரணத்தினின்று பூரணத்தை எடுத்த பிறகும் மிஞ்சி நிற்பதும் பூரணமே."

பரம்பொருள், பௌதிக கணித நூல் நியதிக்கு அடங்காது.

நான்கு பேர்களுக்கும் அரச குமாரர்களுக்கு விதிக்கப்பட்ட எல்லாப் பயிற்சிகளும் தரப்பட்டன. குழந்தைப் பருவத்திலிருந்து லக்ஷ்மணனுக்கும் ராமனுக்கும் விசேஷப் பிரியம் வளர்ந்து வந்தது. அப்படியேதான் பரதனுக்கும் சத்ருக்கனனுக்கும் பரஸ்பரம் அதிக அன்பு. எப்போதும் கூடவே இருப்பார்கள். இதுவும் தாய்மார்கள் பாயசம் அருந்திய முறையிலிருந்து உண்டாகிய நெருங்கிய பற்று என்று வைத்துக் கொள்ளலாம்.

நான்கு குமாரர்களைப் பெற்று, அவர்களுடைய குணங்களும் சாமர்த்தியமும் பிரீதியும் தேஜசும் வளர்ந்து சிறப்புற்று வர, தசரத மகாராஜன் தேவர்களால் சூழ்ந்த நான்முகக் கடவுளைப்போல சந்தோஷமாக இருந்து வந்தான்.

ஒரு நாள் தசரதன் தன்னுடைய மந்திரிகளுடன் உட்கார்ந்து குமாரர்களுக்கு விவாகம் செய்வதைப் பற்றி யோசனை செய்து கொண்டிருந்தான். அப்போது காவல் அதிகாரிகள் பரபரப்புடன் உள்ளே வந்து, "விசுவாமித்திர மகா முனிவர் அரசனைக் காணக் காத்திருக்கிறார்" என்றார்கள். விசுவாமித்திரர் என்றால் எல்லோருக்கும் பயம்.

மகாசக்தியும் புகழும் பெற்ற முனிவர், எதிர்பாராதபடி தன்னைக் காண வந்திருக்கிறார் என்று தெரிந்ததும், தசரதன் தன் ஆசனம் விட்டு எழுந்து, முனிவரை எதிர்கொண்டு வரவேற்று, முறைப்படி ஆசனத்தில் அமரச் செய்தான்.

விசுவாமித்திர முனிவர் ஓர் அரசனாக இருந்து பிறகு தவஞ்செய்து முனிவரானவர். தவத்திலும் வெகு பாடுபட்டு வெற்றி பெற்றவர். சாபத்தால் வருந்திய திரிசங்குவின் பேரில் கருணை கொண்டு, முன்னொரு காலத்தில் புதியதொரு பிரம்மாவையே உண்டாக்கி, ஒரு புதுப் பிரபஞ்சத்தையும் சிருஷ்டி செய்து விடுவேன் என்று தொடங்கி, தம் தபோ பலத்தால் நட்சத்திரங்களை உண்டாக்கி, ஆகாயத்தின் தென் பாகத்தில் நிலைக்கச் செய்தவர். தேவர்களின் வேண்டு கோளுக்கு இணங்கி புது சிருஷ்டியை அந்த அளவில் நிறுத்திக்கொண்டவர். இவை ராமாயண நிகழ்ச்சிக்கு முன்பு.

விசுவாமித்திரர் முனிவராவதற்குமுன், கௌசிக ராஜாவாக இருந்த காலத்தில், தம் சைந்யத்துடன் சுற்றுப் பயணம் செய்து கொண்டு போகும் சமயம், ஒரு நாள் வசிஷ்ட மகரிஷியின் ஆசிரமத்துக்குச் சென்றார். வசிஷ்ட மகா முனிவரை நமஸ்கரித்து, அவரிடம் தாமும் மரியாதை பெற்றுக் கொண்டார்.

க்ஷேம சமாசாரம் விசாரித்த பிறகு, "உமக்கும் உம்மு டைய ஆட்களுக்கும் நான் அதிதி உபசாரம் செய்து போஜ னம் செய்வித்துக் கௌரவம் அடையவேண்டும். இந்த ஆசையை நிறைவேற்றுவீராக" என்று வசிஷ்டர் சொன்னார்.

விசுவாமித்திரர், "சுவாமி, தாங்கள் எனக்கு ஜலம் தந்து செய்த உபசாரமே பெரிய விருந்தாக வைத்துக் கொள்கிறேன். தங்களைத் தரிசித்ததே என் பாக்கியம். 'உனக்கு அதிதி பூஜை செய்ய விரும்புகிறேன்' என்று தாங்கள் சொன்ன அன்பான வார்த்தைகளே எனக்கும் என் சேனைக்கும் செய்த பெரும் விருந்தாகும். எனக்குப் போகவிடை கொடுத்தருளவேண்டும்" என்றார்.

ரிஷியாசிரமத்தில் பெரும் சேனையோடு வந்த ஓர் அரசனுக்கு எவ்வாறு விருந்து செய்விக்க முடியும்? ஆகையால் வசிஷ்டர் சொன்னதைச் சாதாரண உபசார வார்த்தையாக

வைத்துக் கொண்டு, விசுவாமித்திரர் மேற்கண்டவாறு சொன்னார்.

ஆனால் வசிஷ்டர் போஜனம் செய்தே போக வேண்டும் என்று நிர்ப்பந்தித்தார்.

விசுவாமித்திரர், "கோபித்துக்கொள்ளக்கூடாது. தங்களுடைய போஜன உபசாரத்தை நான் இகழ்ந்ததாக வைத்துக் கொள்ள வேண்டாம். எனக்கும் என்னுடைய பெரும் பரிவாரத்துக்கும் இவ்விடம் ஆசிரமத்தில் எப்படி போஜன பதார்த்தங்கள் திடீர் என்று கிடைக்கும்? இதற்காகத்தான் கவலைப்படுகிறேன்" என்று வியக்தமாகச் சொன்னார்.

வசிஷ்ட முனிவர் புன்னகை செய்து, தம் பசுவை அழைத்து, "குழந்தாய், சபலையே! அரசனுக்கும் பரிவாரத்துக்கும் வேண்டிய போஜனம் உடனே தந்து உபசரிப்பாய்" என்றார்.

அப்போது கௌசிக ராஜன் திகைத்துப் போகும் படியான ஓர் அற்புத நிகழ்ச்சி நடந்தது. அரசனுடைய பரிவாரத்துக்கு மேல், பெரும் சேனைக்கும் வேண்டிய அளவில் அனேக விதமான ருசியான பதார்த்தங்கள் தாமாகத் தோன்றிக் குவிந்து விழுந்தன. அன்னபான வகைகள், பணியாரங்கள், நெய், தயிர், புஷ்பம், வாசனைத் திரவியங்கள் ஒன்றும் விடாமல் எல்லாம் மனத்தில் நினைத்த மாத்திரத்தில் ஆசிரமத்தில் எல்லோருக்கும் பரிமாறப்பட்டன. கௌசிகருடைய பத்தினிமார்கள், மந்திரிகள், பந்து பரிவாரங்கள், புரோகிதர்கள், சேனையாட்கள், வேலையாட்கள் அனைவரும் ரிஷியாசிரமத்தில் திருப்தியாக விருந்து உண்டு, ரிஷியின் தபோபலத்தைக் கண்டு வியப்பில் மூழ்கினார்கள்.

விசுவாமித்திரர் தம்முடைய நன்றியைத் தெரிவித்து விட்டு, முடிவில் வசிஷ்டரைக் கேட்டுக் கொண்டார்.

"இந்தச் சபலையை எனக்குத் தரவேண்டும். இதன் சக்தியை நான் கண்டேன். இத்தகைய பொருள் ராஜதருமத்தின்படி அரசனுக்கே உரியது" என்றார்.

இதைக் கேட்ட வசிஷ்டர் மிகவும் வருத்தப் பட்டார். சபலையை விட்டுத் தாம் பிரிய முடியாது. அதற்குப் பல காரணங்கள் உண்டு என்று சொல்லி, பசுவை கொடுக்க மறுத்தார்.

மறுக்க மறுக்க அரசனுக்கு ஆசை அதிகரித்தது. பசுவைத் தந்தால் உமக்கு இதைத் தருவேன் அதைத் தருவேன் என்று கௌசிகர் வசிஷ்டருடைய மனத்தை மாற்றப் பார்த்தார். முடியவில்லை. வசிஷ்டர் ஒரே உறுதியாக, "இந்தப் பசுவுக்கு விலையாக நீர் கொடுக்க கூடிய செல்வம் அனைத்தும் எனக்குக் கொடுத்தாலும் பயனில்லை. சபலையைக் கொடுக்க முடியாது" என்று சொல்லிவிட்டார்.

அதன் பேரில் விசுவாமித்திரர் கடுங்கோபம் கொண்டு தம் சேனையாட்களுக்கு உத்தரவிட்டுச் சபலையைப் பலாத்காரமாக இழுத்துப் போகப் பார்த்தார்.

சபலை கண்ணீர் விட்டு அழுது கொண்டு, "நான் ரிஷிக்கு என்ன அபராதம் செய்தேன்; ஏன் என்னைக் கைவிட்டார்? இவர்கள் என்னை இழுத்துக் கொண்டு போகப் பார்க்கிறார்களே! என் எஜமானராகிய முனிவர் சும்மா பார்த்துக் கொண்டிருக்கிறாரே!" என்று சுற்றி நின்ற சேனையாட்களை முட்டித் துரத்திவிட்டு வசிஷ்டரிடம் சரணமடைந்தது.

கூடப் பிறந்த தங்கையைப் போல் பிரியமான தம் அருமைப்பசுவின் சோகத்தைப் பார்த்து வசிஷ்டர், "குழந்தாய்! உன்னை இம்சிக்கும் இவர்களைத் தாக்கும்படியான சேனையை நீ உண்டாக்குவாயாக!" என்று சொன்னார்.

உடனே அப்பசு, "ஹூம்" "ஹூம்" என்று கர்ஜித்தது. எண்ணிறந்த வீரர்களை உண்டாக்கி விசுவாமித்தி ரருடைய ஆட்களைச் சிதற அடித்தது.

இதைக் கண்ட விசுவாமித்திரர், கண்கள் சிவந்து அடங்காக் கோபங்கொண்டு, ரதம் ஏறிப் பாணங்களை பிரயோகித்தார். சபலையும் புதிய புதிய படைவீரர் களைத் தன் உடலிலிருந்து வெளிப்படச் செய்து, விசுவாமித்திரரை முறியடித்து, அவர் பெருஞ் சேனையையும் நாசம் செய்து விட்டது. போர் முற்றிப்போயிற்று. விசுவாமித்திரருடைய குமாரர்களில் சிலர் வசிஷ்டரையே கொல்லவந்தார்கள். வசிஷ்டர் அவர்களைப் பார்த்து வாயால் அதட்டியதும் சாம்பலானார்கள்.

அவமானமடைந்த விசுவாமித்திரர், முகக் காந்தியை இழந்து, அந்த இடத்திலேயே தம் ராஜ்யத்தை ஒரு மகனிடம் ஒப்படைத்துவிட்டு, வசிஷ்டரை எப்படியாவது அடக்க வேண்டும் என்றும் உமாபதியை நோக்கித் தவஞ்செய்ய மலைச்சாரலுக்குப் போய் விட்டார்.

## 4 பிரம்ம தண்டம்

விசுவாமித்திரருடைய உக்கிர தவத்தைக் கண்டு பரமசிவன் மகிழ்ந்து தரிசனம் தந்தார்.

"அரசே, உனக்கு என்ன வேண்டும், எதை விரும்பித் தவம் செய்தாய்?" என்று மகாதேவன் கேட்டார்.

விசுவாமித்திரர் கைகூப்பி வணங்கி, "சுவாமி, என் தபசு உமாபதிக்குத் திருப்தி தந்திருந்தால், தனுர் வேதத்தை எனக்குப் பூரணமாக அருள வேண்டும். சகல அஸ்திரங்களும் எனக்கு வசமாக்கித் தந்தருள வேண்டும்." என்றார்.

"அப்படியே ஆகட்டும்" என்று சொல்லி, தேவர்கள், வானவர்கள், கந்தர்வர்கள், ரிஷிகள், யக்ஷர்கள் ராக்ஷஸர்கள் அனைவரும் அடைந்த எல்லா அஸ்திரங்களையும் விசுவாமித்திரருக்கு மகாதேவன் தந்தார்.

பரமேசுவரன் தந்த வரத்தைப் பெற்றுக்கொண்டு விசுவாமித்திரர் திரும்பினார். தவத்தால் தாம் அடைந்த சக்தியைக் குறித்து, பருவகால சமுத்திரத்தைப்போல் அகங்காரம் பொங்கி, வசிஷ்டரைத் தீர்த்துவிட்டேன் என்று எண்ணிக் கொண்டு திரும்பினார்.

நேரே வசிஷ்டர் ஆசிரமத்துக்குச் சென்றார். விசுவாமித்திரர் கோபத்தோடு யமனைப்போல் வருவதைக் கண்டு வசிஷ்டரின் ஆசிரமத்திலிருந்த சீடர்களும் பிராணிகளும் திகில் கொண்டு மூலைக்கு மூலை ஓடினார்கள்.

விசுவாமித்திரர் விட்ட ஆக்னேயாஸ்திரத்தின் வேகத்தால் ஆசிரமம் எரிந்து போயிற்று. 'பயப்பட வேண்டாம்' என்று வசிஷ்டர் எவ்வளவு சொன்னாலும், சிதறி ஓடுகிறவர்கள் பயம் தாங்காமல் ஓடினார்கள்.

வசிஷ்டர் இதைக் கண்டு வருத்தப்பட்டு, 'இந்தக் கௌசிகருடைய கர்வத்தை அடக்க வேண்டும்' என்று காலாக்கினி போல் ஜொலிக்கும் தம் பிரம்ம தண்டத்தைக் கையில் எடுத்து, " மூடனே!" என்றார்.

விசுவாமித்திரர் ஆக்ரோஷங்கொண்டு "ஏய் வசிஷ்டரே! நில்லும், நில்லும்" என்று அதட்டி, தாம் புதிதாக கற்ற ஆக்னேயாஸ்திரத்தை அவர் மேல் விட்டார்.

வசிஷ்ட மகாமுனிவர். "இதோ நிற்கிறேன். நான் ஓடவில்லை" என்று கூறிப் பிரமதண்டத்தை தம் முன்னே நிறுத்தினார். விசுவாமித்திரருடைய அஸ்திரமெல்லாம் தண்ணீரைக் கண்ட நெருப்பைப்போல் அணைந்து போயின.

பிறகு விசுவாமித்திரர் தாம் அடைந்த அஸ்திரங்கள் அவ்வளவையும் பிரயோகித்தார். அவை அனைத்தையும் வசிஷ்டருடைய பிரம்ம தண்டம் விழுங்கிற்று. முனிவர்

சுகமாக நின்றார். இந்த அற்புத நிகழ்ச்சியைக் கண்டு விசுவாமித்திரர் பிரம்மாஸ்திரத்தை விடுத்தார்.

'பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்து விட்டாரே, என்ன கதியாகுமோ" என்று ரிஷிகளும் தேவர்களும் கவலை யுற்றார்கள். முனிவருடைய பிரம்ம தண்டம் அரச னுடைய பிரம்மாஸ்திரத்தையும் விழுங்கிவிட்டது. அஸ்திரத்தை உட்கொண்ட வசிஷ்டரின் பிரம்மதண்டத்தினின்று நெருப் புப் பொறிகள் சுற்றிலும் பறந்தன. தண்டத்தைப் பிடித்து நின்ற வசிஷ்டருடைய உடலும் நெருப்பாக ஜொலித்தது.

விசுவாமித்திரர் பிரமித்துப் போனார். பெருமூச் செறிந்து "நான் தோற்றேன். க்ஷத்திரிய பலம் என்னத்துக் காகும், இந்த ரிஷி ஒரு கோலை வைத்து, நான் விடுத்த அஸ்திரங்களையெல்லாம் விழுங்கித் தீர்த்தார். பரமசிவன் என்னை ஏமாற்றி விட்டார். இவரைப்போல் நானும் பிரம்ம ரிஷியாக வேண்டுமேயொழிய வேறு வழியில்லை" என்று யுத்தத்தை நிறுத்தி, மறுபடியும் கடுந்தவம் செய்வதற்காகத் தென்புறம் சென்றார்.

பிரம்மாவை உபாசித்து அநேக ஆண்டுகள் தவம் செய்தார். முடிவில் நான்முகன் பிரஸன்னமானான். "குசிக புத்திரனே! உன் தவத்தால் ராஜரிஷி பதவியை அடைந்தாய்" என்று விசுவாமித்திரரை ஆசீர்வதித்து விட்டு மறைந்தார்.

தாம் செய்த கோரமான தவமெல்லாம் ராஜரிஷி பதவியைத்தானே தந்தது என்று துக்கமடைந்து, இன்னும் மிக்க கோரமான தவங்களைச் செய்யலானார்.

## 5. திரிசங்கு

விசுவாமித்திரர் இவ்வாறு தவம் செய்து கொண்டி ருந்த காலத்தில், சூரியகுல அரசன் திரிசங்கு என்பவன் பெரும் புகழுடன் அநேக ஆண்டுகள் அரசு புரிந்து, தேகத்துடன் சுவர்க்கம் போக வேண்டும் என்று ஆசை கொண்டான்.

அதற்காக வசிஷ்டரிடம் சென்றான். வசிஷ்டர் அவனுடைய குலகுரு.

அவர், "உம்மால் அது இயலாது. வேண்டாம். இந்த யோசனையை விட்டுவிடுவீராக".என்றார்.

திரிசங்குவுக்கு இது பிடிக்கவில்லை. வசிஷ்டருடைய புத்திரர்களிடம் போய், "உங்களுடைய தகப்பனார், என்னுடைய குருவானவர், முடியாது என்று சொல்லிவிட்ட இந்த யாகத்தை நீங்கள் நடத்தித் தாருங்கள். என்னுடைய குரு என்னைக் கைவிட்டு விட்டார். நீங்கள் என் வேள்வியை நடத்தித் தரவேண்டும்" என்றான்.

வசிஷ்ட குமாரர்களுக்குக் கோபம் வந்தது.

"ஏன் உமக்கு இந்தத் துர்புத்தி பிடித்தது; உம்முடைய குருவும் எங்கள் பிதாவும் சொன்ன சொல்லுக்குக் கட்டுப்படாமல் எங்களிடம் வந்திருக்கிறீர். திரும்பிப் போவீராக" என்றார்கள். திரிசங்கு அதைக் கேட்காமல், மீண்டும் மீண்டும் வற்புறுத்திக் கொண்டே நின்றான்.

"மூர்க்க அரசனே! எங்கள் பிதாவை அவமதிக்க எங்களை நீர் பயன்படுத்திக் கொள்ளப் பார்க்கிறீர். திரும்பிப் போவீராக!" என்றார்கள்.

"உங்களால் முடியாவிட்டால் வேறு யாரையாவது நான் தேடியடைந்து என் காரியத்தை முடித்தே தீருவேன்" என்று திரிசங்கு அவர்களுக்குக் கோபம் அதிகரிக்கும் முறையில் சொன்னான்.

அவர்கள், அதைப் பொறுக்காமல், அவனை, "குருவை அவமதித்த அரசனே, நீ சண்டாளன்" என்று சபித்துவிட்டு அவனை அனுப்பிவிட்டார்கள்.

அன்றிரவு தூங்கினவன் காலையில், தன் அழகிய உருவமும் காந்தியும் நிறமும் இழந்து, அவலட்சண வடிவத்தோடு பீதாம்பரத்துக்குப்பதில் அழுக்குத் துணியோடு

எழுந்தான். அவன் அணிந்திருந்த ஆபரணங்கள் எல்லாம் மாறிவிட்டன. மந்திரிகளும் பரிவாரமும் நகரத்து ஜனங்களும் அரசனுடைய சாப உருவத்தைப் பார்த்துத் தூர விலகி ஓடினார்கள். எல்லோரும் அவனைக் கண்டு வெறுத்தார்கள். வெட்கமும் துக்கமும் மேலிட்டு, அரசன் தன்னந்தனியாக ஊரைவிட்டு விலகி, ஊண் உறக்கமின்றி இரவும் பகலும் திரிந்தான்.

சண்டாள வேஷத்தோடு திரிசங்கு ராஜன் தபோதனராகிய விசுவாமித்திரர் ஆசிரமத்துக்குச் சென்றான். அவர் இவனைக் கண்டதும் கருணைமேலிட்டு, "நீ திரிசங்கு ராஜன் அல்லவா? ஏன் இந்த வடிவம் அடைந்தாய்? யாருடைய சாபம்?" என்று கேட்டார்.

திரிசங்கு நடந்த விஷயம் எல்லாம் சொல்லி, "நான் என் ராஜ்யத்தைத் தருமம் தவறாமல் பரிபாலித்தேன். சத்திய வாழ்க்கை நடத்தினேன். நான் ஒரு பாபமும் செய்ததில்லை. எந்த விதத்திலும் யாருக்கும் தீங்கு செய்தது கிடையாது. என் குருவும் அவருடைய குமாரர்களும் என்னைக் கைவிட்டு, என்னை இந்த நிலை அடையச் சாபமிட்டு விட்டார்கள். நீர்தான் காப்பாற்ற வேண்டும்!" என்று கூறி, அவர் காலில் விழுந்தான்.

சாபத்தின் பயனாகச் சண்டாளனாகிவிட்ட அரசனிடம் விசுவாமித்திரருக்கு அனுதாபம் பொங்கிற்று. விசுவாமித்திரருடைய கஷ்டம் இதுவே. அவருடைய இரக்கம், அன்பு, கோபம் முதலிய உணர்ச்சி வேகங்கள் அதிக தீவிரமடைந்தன.

அவனைப் பார்த்து மதுரமான மொழியில் சொன்னார். "அப்பனே, இக்ஷுவாகு குலத்தரசனே, உனக்கு நல்வரவு. உன் தரும வாழ்க்கையைப் பற்றி நான் நன்றாக அறிந்தவன். உனக்கு நான் அபயம் தந்தேன். ரிஷிகள் உள்பட எல்லோரையும் அழைத்து, நீ நடத்த வேண்டும் என்று விரும்பிய வேள்வியை நான் நடத்தித் தருவேன். குருவின் கோபத்தால்

நீ அடைந்த இந்தச் சண்டாள வடிவத்தோடேயே நீ சுவர்க்கம் சேருவாய், இது நிச்சயம்!" என்று வாக்களித்து விட்டார்.

யாகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்துவிட்டு, "உன் குருவால் உனக்கு நேர்ந்த இந்தச் சண்டாள தேகத்தோடு நீ சுவர்க்கம் அடைவாய். எப்போது நீ கௌசிகனிடம் சரணமடைந்தாயோ அப்போதே நீ கோரிய எண்ணம் நிறைவேறினதாக வைத்துக்கொள்" என்று திரிசங்கு மகாரா ஜனுக்கு மறுபடியும் தைரியம் சொன்னார்.

சொல்லிவிட்டுத் தம் சீடர்களுக்கு உத்தரவிட்டார். "நீங்கள் போய் எல்லா ரிஷிகளையும் சிஷ்யர்களோடு வேள் விக்கு வரும்படி நான் அழைத்ததாகச் சொல்லுங்கள்!" என்றார்.

சீடர்களும் அவ்விதமே எல்லாப் பெரியோர் களிடமும் சென்று விசுவாமித்திரருடைய அழைப்பைத் தெரிவித் தார்கள். அநேகமாக எல்லாரும் வருவதற்குச் சம்மதித் தார்கள். மகா தபஸ்வியான விசுவாமித்திரரின் அழைப்பை நிராகரிக்க அவர்களுக்குத் தைரியமில்லை.

ஆனால் வசிஷ்டரின் குமாரர்களை அழைத்தபோது, அவர்கள், "நாங்கள் வரமாட்டோம் என்று ரிஷியிடம் சொல் லுங்கள். ரிஷி எவ்வளவு தபஸ்வியாயிருந்தாலும் க்ஷத்தி ரியரான ஒருவர் எப்படி இவ்விதமாக மந்திரச் சடங்குகளை நடத்தக்கூடும்? அதிலும் சண்டாளனுக்காக எப்படி யாகம் நடத்தலாம்?" என்று ஆட்சேபித்து மறுத்துவிட்டார்கள்.

இதைக் கேட்டதும் விசுவாமித்திர ரிஷி கடுங் கோபங்கொண்டு, "நான் செய்யும் காரியத்தில் ஒரு தவறு மில்லை. கர்வங்கொண்ட இந்த வசிஷ்ட குமாரர்கள் இறந்து சாம்பலாகக் கடவார்கள். அவர்கள் ஏழு ஜன்மம் வரையில் நாய் தின்னும் ஜாதியாகக் கடவார்கள்" என்று சபித்துவிட்டு, நிச்சயித்தபடி யாகத்தைச் செய்ய ஆரம்பித்தார்.

கூடியிருந்த பெரியோர்களுக்கெல்லாம் காரியத்தை எடுத்துச் சொன்னார்.

"மகா தர்மவான், சத்தியவான், இக்ஷ்வாகு குலத்தரசன் சரீரத்தோடு சுவர்க்கம் செல்லவேண்டுமென்று இந்த வேள்வியைச் செய்ய நான் நிச்சயித்திருக்கிறேன். நீங்கள் அனைவரும் கலந்துகொண்டு காரியத்தை நிறைவேற்றித் தரவேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

'இவர் மகா பலம் பெற்ற தபஸ்வி; இவருடைய கோபத்தை நாம் தாங்க முடியாது' என்று பயந்து எல்லாரும் வேள்வியில் கலந்து கொண்டார்கள். எல்லாச் சடங்குகளையும் விசுவாமித்திரருடைய தலைமையில் கிரமப்படி நடத்தினார்கள்.

வேள்வியின் முடிவில் தேவர்களை அழைத்து, "அவியை ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று சொல்லவேண்டிய கட்டம் வந்தது. அப்படியே விசுவாமித்திரர், தேவர்களை மந்திரம் சொல்லி அழைத்தார். ஆனால், யாரும் வரவில்லை! வேள்வி வீணாயிற்று. அழைப்புக்கு பயந்து வந்த ரிஷிகள், மனத்துக்குள் விசுவாமித்திரரைப் பரிகசித்தார்கள்.

விசுவாமித்திரர் கடுங்கோபம் கொண்டு, தன் கையில் வைத்திருந்த நெய்க் கரண்டியை உயரத் தூக்கித் திரிசங்கு ராஜனை நோக்கி, "என் தவத்தின் வலிமையைப் பார்ப்பாய், திரிசங்குவே! என் முயற்சியும் தவமும், சக்தி அவ்வளவும் உனக்குப் பயன்படுவதாக. என் தவத்துக்குச் சிறிதளவேனும் சக்தி உண்டாயின், நீ உன் சாரீரத்துடன் இப்போதே சுவர்க்கம் ஏகுவாய்! தேவர்கள் அவி எடுத்துக் கொள்ளாதது பற்றி எனக்குக் கவலையில்லை. அரசனே செல் மேலே!" என்றார்.

அப்போது ஓர் அற்புதம் நடந்தது. அங்கே கூடி யிருந்த ரிஷிகள், பிராம்மணர்கள் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கச் சண்டாளனான ராஜா, அப்படியே ஆகா

யத்தில் கிளம்பினான். விசுவாமித்திரருடைய தவ வலிமையை அப்போது உலகம் கண்டது.

திரிசங்கு சுவர்க்கத்தை அடைந்தான். உடனே இந்திரன் பார்த்தான். "சண்டாள சரீரத்துடன் எவன் இங்கே வருகிறான்? குருவினிடம் சாபம் பெற்ற மூடனே போ!" என்று கீழே தள்ளிவிட்டான். சுவர்க்கத்திலிருந்து திரிசங்கு கதறிக்கொண்டு தலை கீழாக விழுந்தான். கீழே விழ, விழ, "ஐயோ, என்னைக் காப்பாற்றுவீர்! காப்பாற்றுவீர்!" என்று திரிசங்கு கதறினான்.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த விசுவாமித்திரர், தம் தபோபலத்தை தேவர்கள் இப்படியா இகழ்கிறார்கள் என்று கோபாவேசங் கொண்டு, "நில் நில்" என்று அத்தனை ரிஷிகளுக்குமிடையில் ஒரு புது சதுர்முகப் பிரம்மா வைப் போல் ஜொலித்தார். தலைகீழாக விழுந்த திரிசங்கு, விசுவாமித்திரர் 'நில்' என்றதும் நடு ஆகாயத்தில் ஒரு நட்சத்திரமாகப் பிரகாசித்துக் கொண்டு அப்படியே நின்றான். அந்தக் கணமே திரிசங்கு நின்ற தென்திசையில் புதிய துருவம், புதிய சப்தரிஷிகள் இன்னும் பல நட்சத்திரங்களையும் சிருஷ்டித்து நிறைத்து விட்டார்.

"புது இந்திரனையும் உண்டாக்கி நிலைபெறச் செய்வேன். புதிய தேவர்களையும் உண்டாக்குவேன்!" என்று சொல்லிச் சொன்னபடியே செய்ய ஆயத்தமானார்.

"இது என்ன விபரீதமாக முடியும் போலிருக்கிறதே" என்று எண்ணித் தேவர்களும், ரிஷிகளும் விசுவாமித்திரரிடம் வந்தார்கள்.

விசுவாமித்திரரிடம் நயமாகப் பேசி, "இந்தக் காரியம் வேண்டாம்; திரிசங்கு முதலிய எல்லா நட்சத்திரங்களும் தாங்கள் நிர்ணயித்தபடியே சாசுவதமாக இருக்கட்டும். தங்களுடைய புகழுக்குக் குறைவு வேண்டாம். கோபத்தைத் தணித்துக்கொண்டு எங்களைக் காப்பாற்ற வேண்டும்" என்று

கேட்டுக்கொண்டார்கள். இப்படி விசுவாமித்திரரை ஒருவாறு சமாதானப்படுத்திவிட்டுத் திரும்பினார்கள். அதுவரை விசுவாமித்திரர் செய்த தவம் இவ்வாறு செலவழிந்து போய் விட்டது.

## 6. வசிஷ்டர் வாயால்

கோபத்திலும் சாபத்திலும் தம் தபோபலம் செலவழிந்து போனதைக் கண்டு, விசுவாமித்திரர் மறுபடியும் கோரமான தவஞ்செய்வதற்காக மேற்கே புஷ்கர தீர்த்தத்துக்குச் சென்றார்.

அவ்விடத்திலும் பல ஆண்டுகள் செய்த தவம் நன்றாக முற்றிப் பயன்தரும் சமயத்தில் ஒரு நிகழ்ச்சி நடந்து மறுபடியும் கோபத்தால் சமநிலை இழந்து விட்டார். தம் புத்திரர்களையே சபித்துவிட்டார். அதன் பின், இனி கோபத்துக்கு இடம் தரக்கூடாது என்று சங்கற்பம் செய்து கொண்டு, மறுபடியும் தவஞ்செய்ய ஆரம்பித்தார். பல்லாண்டுகளுக்குப் பின் பிரம்மனும் தேவர்களும் அவருக்குத் தரிசனம் தந்தார்கள்.

"கௌசிகரே! நீர் செய்த தவம் பலித்தது. நீர் இனி அரசர் கணக்கில் இல்லை, பூரண ரிஷியாகி விட்டீர்" என்று சொல்லிக் கௌரவித்துவிட்டு நான்முகன் திரும்பினான்.

அதனால் விசுவாமித்திரர் எப்படித் திருப்தியடைவார்? பரமசிவனிடம் பெற்றது அஸ்திரங்கள். இப்போது பெற்றது ரிஷிபதவி. அவர் விரும்பியதோ வசிஷ்டருக்குச் சமமான சக்தி. ஆனபடியால், இன்னும் பல்லாண்டு கடுந் தவஞ்செய்ய நிச்சயித்தார்.

தேவர்களுக்கு இது பிடிக்கவில்லை. இதை எப்படியாவது தடுக்க வேண்டும் என்று புஷ்கர தீர்த்தத்திற்கு மேனகையை அனுப்பினார்கள். புஷ்கர தீர்த்தத்தில் அந்த அப்ஸர ஸ்திரீ ஸ்நானம் செய்ய வந்தாள். அவளுடைய அழகினால்

விசுவாமித்திரர் வஞ்சிக்கப்பட்டார். தம் தவத்தை நிறுத்தி விட்டு, சுகமாகப் பத்து ஆண்டுகள் கழித்தார். பத்து ஆண்டு களும் ஒரு பகல் ஓர் இரவு போல் கழிந்து விட்டன.

பிறகு, விழித்துக் கொண்டார். "ஐயோ, இப்படியா யிற்றே!" என்று வருந்தித் துக்கப்பட்டார்.

மேனகைக்கு நடுக்கம். சாபத்துக்குத் தயாராகக் கைகூப்பி நின்றாள். முனிவர் தம் கோபத்தை அடக்கிக் கொண்டு, "இது என்னுடைய மடமை; உன் குற்றமல்ல," என்று மதுரமாகப் பேசி அனுப்பிவிட்டு, இமாலயம் சென்றார். மறுபடி ஆயிரம் வருஷங்கள் இந்திரியங்களை அடக்கி உக்கிர தபசு செய்தார்.

தேவர்கள் சூழ நான்முகன் பிரசன்னமாகி, "விசுவா மித்திரரே! நீர் மேனகையைச் சபிக்காமல் பொறுத்து, மறு படியும் கடுந்தவம் ஆரம்பித்து முடித்தீர். நீர் மகரிஷி பதவியை அடைந்து விட்டீர்" என்று ஆசீர்வதித்தார்.

விசுவாமித்திரர் மகிழ்ந்தார். ஆயினும் அவருடைய எண்ணம் அப்போதும் நிறைவேறவில்லை. மறுபடியும் அற் புதமானதும் அதுவரை யாருமே செய்யாததுமான ஒரு தவம் ஆரம்பித்தார். ஆயிரம் வருஷம் செய்தார்.

தேவர்கள் மிகவும் கவலை கொண்டார்கள். மறுபடி ஓர் அப்ஸர ஸ்திரீயை அனுப்பி வைத்தார்கள்.

"ரம்பையே! உன்னுடைய தயவு வேண்டும். நீ எப்படி யாவது விசுவாமித்திர ரிஷியை ஏமாற்றி அவருடைய தவத்தை நிறுத்தவேண்டும்" என்று இந்திரன் கேட்டுக் கொண்டான். அவள் பயப்பட்டாள். ஆயினும் இந்திர னுடைய ஏவலை ஒப்புக் கொண்டு போய் விசுவாமித்திர ருடைய மனத்தைக் கலைத்தாள். கிளம்பிய காமத்தை அடக்கிக் கொண்டாராயினும் இப்படி மோசம் செய்ய வந்தாளே என்று கோபங்கொண்டு, "நீ கல்லாகப் போவாய்" என்று சாபமிட்டார். ரிஷிகளுடைய சாபம் அவர்கள்

மனத்தில் எழும் கோபமே. எண்ணிய எண்ணம் தபோ பலத்தால் உடனே. சாபமாகி நிறைவேறி விடுகிறது. தவம் நஷ்டமாகி விடுகிறது.

மறுபடி உறுதியான தீர்மானம் செய்துகொண்டு, அன்னபானம் பேச்சு மூச்சு எல்லாம் அடக்கிவிட்டு, அது வரையில் ஒருவரும் செய்யாத மகா தபஸை ஆரம்பித்து முடித்தார்.

இதுவும் ஆயிர வருஷங்கள் நடந்தது. தேவர்கள் பலவித இடையூறுகள் செய்து பார்த்தார்கள். தவத்தைக் கலைக்க முடியவில்லை. விசுவாமித்திரருடைய உடல் மரக் கட்டைபோல் ஆயிற்று. இந்திரியச் செயல்கள் எல்லாம் நின்று போய் உயிர்மட்டும் இருந்தது.

தேவர்கள் அனைவரும் விசுவாமித்திரர் செய்த தவத்தின் உக்கிரத்தால் தவித்தார்கள். அந்த வேதனை தாங்க முடியாமல் அவர்கள் பிரம்மனிடம் சென்று கை கூப்பி, "நாதனே! எங்களால் கௌசிக மகரிஷியினுடைய தவத்தை இனிப் பொறுக்க முடியாது. இடையூறு செய்ய நாம் எடுத்துக் கொண்ட முயற்சிகள் ஒன்றும் பயன்பட வில்லை. அவருடைய தவத்தின் வெப்பத்தால் அழிந்து போவோம் போலிருக்கிறது. அவர் விரும்பிய வரத்தைத் தந்துவிடவேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள்.

அப்படியே தேவர்கள் சூழ நான்முகன் விசுவாமித்திரரிடம் சென்று தரிசனம் தந்து, "நீர் பிரம்மரிஷியாகி விட்டீர். உமக்கு எல்லா மங்களமும் ஆகுக" என்று ஆசிர்வதித்தான். விசுவாமித்திரர் மகிழ்ந்தார்.

ஆயினும், "இந்தப் பதவி வசிஷ்டர் வாயால வந்தால் அல்லவா நான் பூரண திருப்தியடையலாம்?" என்று மிக வினயமாகச் சொன்னார்.

வசிஷ்டரும் பழைய சண்டையை நினைத்துப் புன்னகை செய்து, "நீர் செய்த கடுந்தவங்களின் பயனை நீர்

அடைந்தீர்; நீர் பிரம்மரிஷி என்பதைப் பற்றி ஒரு சந்தேகமுமில்லை" என்றார். எல்லோரும் மகிழ்ந்தார்கள்.

இவ்வாறு அற்புதத் தவங்களை அற்புத முறையில் செய்து வெற்றி பெற்ற மாமுனிவர், தசரதன் சபைக்கு எதிர் பாராமல் திடீர் என்று வந்தார்.

இந்திரனுடைய சபைக்கு நான்முகன் வந்தால் தேவ ராஜன் எவ்வாறு வரவேற்பானோ, அதுபோல் தசரதன் முனிவரை வரவேற்று, முனிவருடைய பாதங்களைத் தொழுது "இன்றே என் வினைத் தொடர்பு தீர்ந்து விட்டது. இது என் முன்னோர் செய்த தவப்பயனே. இரவு தீர்ந்து சூர்யோதயமானது போல் தங்களுடைய திருமுகம் கண்டேன். இனி எனக்கென்ன குறை? அரசனாக ராஜ்யத்தை ஆண்டு தவத்தினால் பிரம்ம ரிஷியான தாங்கள் என்னைத் தேடி வந்தீர்கள்; என்னால் என்ன காரியம் ஆகவேண்டும்? சொல்லி அருள வேண்டும்! அதைச் செய்யக் கடமைப்பட்டவன் நான். எதை விரும்புகிறீரோ அதைச் செய்வேன்" என்றான்.

தசரதன் சொன்ன சொல்லைக் கேட்ட விசுவாமித்திரர் அகமகிழ்ந்தார். அவருடைய தேஜசு இன்னும் அதிகமாகப் பிரகாசித்தது.

"அரசனே! உம்முடைய பொன்மொழிகள் உமக்கே தகும். உம்மைத் தவிர வேறு யார் இப்படிப் பேசுவார்கள்? நீர் பிறந்த குலம் இக்ஷுவாகு குலம்; நீர் அடைந்திருக்கும் குருவோ வசிஷ்ட முனிவர். வேறு எவ்வாறு நீர் பேசுவீர். நான் கேளாமலேயே நீர் வாக்குத் தந்து விட்டீர். அது என் இதயத்தைத் திருப்தி செய்துவிட்டது. நான் வந்த காரியத்தைப் பூர்த்தி செய்து தருவீராக" என்று கூறித் தாம் வந்த காரியத்தை உடனே சொல்ல ஆரம்பித்தார்.

## 7. ராமனைத் தருவீர்

"நான் நியமம் பூண்டு ஒரு வேள்வி நடத்துகிறேன். ஆரம்பித்து முடியும் தறுவாயில் மாரீசன், சுபாஹு என்ற

இரண்டு அரக்கர்கள் அதைக் கெடுத்து வருகிறார்கள். அவர்கள் தேகப்பலமும் வீரியமும் யுத்தப் பயிற்சியும் பெற்ற அரக்கர்கள். சாபமிட்டு அவர்களை நானும் மற்ற ரிஷிகளும் அடக்கமுடியும். ஆனால் நியமமும் தவமும் கெடாமல் நடந்து கொள்ள வேண்டியதாக இருக்கிறது. இந்தச் சங்கடத்தில் நானும் மற்ற ரிஷிகளும் கஷ்டப்படுகிறோம். மாமிசமும் ரத்தமும் யாகவேதிகை பேரில் எறிந்து வேள்வி நடைபெறாமல் செய்து வருகிறார்கள். உம்முடைய வீரகுமாரர்களில் மூத்தவனான ராமனை என்னுடன் அனுப்பினீரானால், எங்களுடைய கஷ்டம் நீங்கும். என் பாதுகாப்பில் அவனுடைய வீரமும் திவ்விய பலமும் வளர்ந்து, இந்த அரக்கர்களை எதிர்த்து வெற்றியோடு பெரும் புகழ் அடைவான். இது நிச்சயம். ராஜகுமாரனை சில நாட்களுக்கு என்னிடம் ஒப்புவிப்பீராக. நான் கேட்டதை மறுக்க வேண்டாம். நான் கேட்காததற்கு முன்பே நீர் அளித்த வாக்குறுதியை நிறைவேற்றுவீராக. குமாரனுடைய க்ஷேமத்தைப் பற்றிச் சந்தேகப்பட வேண்டாம். இந்தக் காரியத்தை நீர் செய்தால் மூவுலகத்திலும் என்றென்றைக்கும் புகழடைவீர். வசிஷ்டரும் மந்திரிகளும் நான் சொல்வதை அங்கீகரிப்பார்கள்" என்றார் விசுவாமித்திரர்.

முனிவர் சபைக்கு வந்தபொழுது பெருமகிழ்ச்சியடைந்த அரசன், இதைக் கேட்டதும் சொல்லொணாத பயமும் கவலையும் உண்டாகி நடுங்கினான். எவ்வளவோ ஆசைப்பட்டுப் பெற்ற அருமைப் புத்திரனை அரக்கர்களுக்குப் பலி கொடுக்க வேண்டியதாயிற்றே. இல்லையெனில் விசுவாமித்திரருடைய பெரும் கோபத்துக்கு ஆளாக வேண்டுமே, இதற்கென்ன செய்வது என்று ஒன்றும் தோன்றாமல் திகைத்தான். கொஞ்சநேரம் கழித்துத் திகைப்பிலிருந்து புத்தியைச் சுவாதீனப்படுத்திக் கொண்டு சொன்னான்.

"பதினாறு வயது பூர்த்தியாகாத ராமனுக்கு ராக்ஷசர்களோடு யுத்தம் செய்யும் தகுதியை நான் காணவில்

லையே! அவனை அனுப்பச் சொல்கிறீரே. இது என்ன பயன் தரும்? யுத்தங்களிலுள்ள மோசடிகள் ஒன்றைப் பற்றியும் அவனுக்குத் தெரியாதே! ராக்ஷசர்கள் எப்போதும் மோச யுத்தம்தானே செய்வார்கள்! அந்த அரக்கர்களை எதிர்ப்ப தற்குச் சின்னஞ்சிறுவனை அனுப்புவதும் சரியான யோசனை யல்ல. நான் இருக்கிறேன்! என்னுடைய சதுரங்க சேனை இருக்கிறது. அதையெல்லாம் விட்டுவிட்டுக் குழந்தை யைக் கேட்கிறீரே! அரக்கர்கள் எங்கே? இவன் எங்கே? இவனா அவர்களை எதிர்த்து உம்முடைய வேள்வியைக் காக்கப் போகிறான்? எனக்கு உம்முடைய எதிரியைப் பற்றி எல்லா விஷயமும் சொல்லுவீர். நான் உம்முடன் என் சேனை யைக் கூட்டிக்கொண்டு வந்து வேண்டியதையெல்லாம் செய்வேன். அது இருக் கட்டும். அந்த அரக்கர்களைப் பற்றியும் அவர்கள் பலத்தைப்பற்றியும் விவரமாகச் சொல்லவும்" என்று பேச்சை மாற்றுவதற்காகக் கேட்டான்.

விசுவாமித்திரர், மாரீசனைப் பற்றியும், சுபாஹு வைப் பற்றியும் அவர்களுடைய எஜமானன் ராவணனைப் பற்றியும் விவரமாகச் சொல்லி, ராமனை அனுப்பவேண்டும் என்று மறுபடியும் வற்புறுத்தினார்.

"தவமிருந்து பெற்ற என் அருமை ராமனை விட்டுப் பிரிந்தால் என் உயிர் போய்விடும். வேண்டுமானால், நான் சேனையுடன் வருவேன். நீர் சொல்வதைப் பார்த்தால், என் னாலும் கூட இந்த வேலையை முடிப்பது கடினமாக இருக்கும் போல் தோன்றுகிறது! அப்படியிருக்க என் மகனை அனுப் பவாவது? முடியாது" என்றான்.

திடீர் என்று ஏற்பட்ட திகைப்பினால், முன்னுக்கும் பின்னுக்கும் முரணாகப் பலவிதமாகப் பேச ஆரம்பித்தான் தசரதன். அப்படி அவன் பேசி ராமனை அனுப்ப மறுத்ததைக் கண்டு விசுவாமித்திரருக்கு, கோபம் நெய்விட்ட வேள்வித் தீயைப்போல் பொங்கிற்று.

"முதலில் கேட்டதையெல்லாம் தருகிறேன் என்று தாராளமாகச் சொல்லிவிட்டு, இப்போது அதைப் பொய் யாக்கினீர். இந்த நடவடிக்கை இக்ஷுவாகு குலத்துக்குத் தகுந்த தல்ல. நீர் பிறந்த சிறந்த வம்சத்துக்குத் துரோகம் செய்கிறீர். இதுவே உம்முடைய முடிவாயின், நான் வந்த வழி திரும்புகிறேன். சத்தியம் தவறி, பந்து மித்திரர்களுடன் சுகமாக இருப்பீராக" என்று விசுவாமித்திரர் சொன்னார்.

முனிவருடைய கோபத்தால் பூதேவி நடுங்கினாள். தேவர்களும் பயந்தார்கள். வசிஷ்டர், அரசனை நோக்கி மெது வாகச் சொன்னார்.

"தருமமே மானிட உருவம் எடுத்ததுபோல இக்ஷுவாகு வம்சத்தில் உதித்துப் புகழும் திருவும்பெற்ற நீர், சத்தியத் தினின்றும் பிறழ்தல் தகாது. உம்முடைய வாயினின்று 'செய்கிறேன்' என்று ஒரு தடவை வார்த்தை வெளியான பின் அதைப் பிறகு செய்யாதிருத்தல் தகாது. உம்முடைய தான தரும வேள்விகளையெல்லாம் ஒரேயடியாக அது அழித்து விடும். ராமனை முனிவருடன் அனுப்புவீராக. லக்ஷ்ம ணனையும் சேர்த்து அனுப்புவீராக. யுத்தப் பயிற்சியைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். குசிக புத்திரருடைய பாதுகாப்பிலுள்ள உம் குமாரர்களை ராக்ஷசர்கள் தீண்ட முடியாது. அமிர்தத்தை அக்னி சக்கரம் காப்பது போல், இவர் ராமனைக் காப்பார். இவருடைய பூரண மகிமை உமக்குத் தெரியவில்லை. தவமே உருக் கொண்டு நிற்கிறவர். வீரர்களுள் வீரர். அறிவிற்கும் தவத்துக்கும் இவரே எல்லை. இவருக்குத் தெரியாத அஸ்திரமில்லை. அந்த விஷயத்தில் மூன்று உலகங்களிலும்' இவருக்குச் சமானமானவன் ஒருவன் இருந்ததில்லை; இருக்கப் போவதுமில்லை. இவர் அரசனாக இருந்த காலத்தில் எல்லா அஸ்திர வித்தைகளையும் வசமாகப் பெற்றிருக்கிறார். இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய மூன்று காலங்களிலும் இவர் அறியாதது இந்த

உலகத்தில் ஒன்றுமில்லை. இத்தகைய மகாவீரமும் தேஜசும் பொருந்திய விசுவாமித்திர முனிவருடன் உம் குமாரன் ராமனை அனுப்புவதைப்பற்றிச் சந்தேகமே வேண்டாம். முனிவருடைய காரியத்தை முனிவரே பார்த்துக் கொள்வதற்கு வேண்டிய சக்தி அவருக்கு உண்டு. உம்முடைய குமாரனுடைய நன்மைக்காகவே அல்லவோ அவர் இங்கே வந்து உம்மைக் கேட்கிறார்! தயங்காமல் உம் குமாரனை அவர் கேட்கிறபடி அவருடன் அனுப்புவீராக."

இவ்வாறு மகாஞானியான வசிஷ்டர் சொன்னதைக் கேட்டதும், அரசருடைய புத்தி தெளிவு பெற்றது. ராம லக்ஷ்மணர்கள் இருவரையும் அனுப்புவதென்று நிச்சயம் செய்தார்.

ராம லக்ஷ்மணர்கள் முனிவர் முன் வந்து நின்றார்கள். அரசனுடைய தாய்மார்களும் வசிஷ்டரும் மங்கள மந்திரம் சொல்லியானபின், உச்சி மோந்து, "முனிவருடன் செல்லுங்கள்" என்று வழி அனுப்பி வைத்தார்கள்.

அச்சமயம் சுகமாகக் காற்று வீசிற்று. ஆகாயத்தினின்றும் பூமாரி பொழிந்தது. அசரீரி ஒலித்தது. கையில் வில் பிடித்து, இரு யுவர்களும் முனிவருடன் கம்பீரமாகச் சென்றார்கள்.

ரிஷியுலகத்துக்கே சிகரமாக விளங்கிய விசுவாமித்திரரும், அழகே தேகமெடுத்தாற்போன்ற ராஜகுமாரர்களும் தசரதனிடம் விடைபெற்றுக் கொண்டு போகும் மங்களக் காட்சியை வால்மீகியும் கம்பரும் மிகவும் அனுபவித்துப் பாடியிருக்கிறார்கள்.

தம்முடைய தவ வலிமையால் ஒரு புது உலகத்தையே சிருஷ்டிக்கும் சக்திவாய்ந்த ஆசாரியர், அரக்கர்களை ஒழித்துக் கட்டவே அவதரித்தவர்கள் மாணவர்கள் - இத் தகைய குருசிஷ்யச் சேர்க்கையின் அழகை வால்மீகி முனிவர் கம்பீர நாதம் பொருந்திய எட்டுச் சுலோகங்களில் வர்ணிக்கிறார்.

*வெற்றிவாள் இடுப்பில் தொங்க, குன்றைப் போன்ற தோள்களின் மேல் ஒரு பக்கம் வில்லும் ஒரு பக்கம் தூணியும், மத்தியில் கம்பீரமாக உயர்ந்து நிற்கும் தலையுமாக, முத் தலை நாகங்கள் படமெடுத்துச் செல்வது போல் ராஜ குமாரர்கள் காட்சி தந்தார்கள்.*

*கம்பர் தமக்கே உரிய பாணியில் பாடுகிறார்:*

வென்றி வாள்புடை விசித்து மெய்ம்மைபோல்
என்றும் தேய்வுறாத் தூணி யாத்திரு
குன்று போன்றுயர் தோளிற் கொற்றவில்
ஒன்று தாங்கினான் உலகம் தாங்கினான்.

அன்ன தம்பியும் தானும் ஐயனும்
மன்னன் இன்னுயிர் வழிக்கொண் டாலெனச்
சொன்ன மாதவன் தொடர்ந்த சாயைபோல்
பொன்னின் மாநகர் புரிசை நீங்கினான்.

## 8. தாடகை

*அன்றிரவு சரயூ நதிக்கரையில் முனிவரும் ராஜ குமாரர்களும் தரையில் படுத்துத் தூங்கினார்கள். படுப்ப தற்கு முன் விசுவாமித்திரர், 'பலம்' 'அதிபலம்' என்ற இரண்டு ரகசிய மந்திரங்களை உபதேசம் செய்துவிட்டு, "இந்த மந்திரங்களை ஜபித்தவனை எந்தத் தீங்கும் அண்டாது" என்று சொல்லி ராஜகுமாரர்களை ஆசீர்வதித்தார்.*

*அடுத்தநாள் காலை எழுந்து புறப்பட்டுப்போய், அங்கதேசத்தில் காமாசிரமத்தை அடைந்தார்கள். அங்கே தவம் செய்து கொண்டிருந்த ரிஷிகளுக்கு, ராம லக்ஷ்மணர் களை அறிமுகம் செய்துவிட்டு, காமாசிரமக் கதையை விசுவா மித்திரர் சொன்னார்.*

"இதுதான் பரமசிவன் நீண்ட காலம் தவம் செய்த இடம். மதியற்ற மன்மதன், சங்கரன்மேல் பாணம்விட்டு, பகவானுடைய கோபத்துக்கு ஆளாகி, இந்த இடத்தில் எரிக்கப்பட்டான். அதனால் இந்த இடம் காமாசிரமம் என்று பெயர் அடைந்தது."

அன்று இரவு காமாசிரம ரிஷிகளுடைய அதிதி களாக முனிவரும் ராஜகுமாரர்களும் தங்கினார்கள்.

காலையில் நித்திய கர்மங்களை முடித்துவிட்டுப் புறப் பட்டார்கள். கங்கைக் கரையை அடைந்ததும், அவ்விடத் திலுள்ள ரிஷிகள் அமைத்துத் தந்த ஓர் ஓடத்தில் ஏறிக் கொண்டு கங்கையைத் தாண்டிச் சென்றார்கள்.

ஆற்றின் நடுவில் ஓடம் செல்லும்போது ஒருவிதப் பெருஞ்சத்தம் கேட்டு, ராஜகுமாரர்கள், "அது என்ன?" என்று கேட்டார்கள். "அது சரயூ நதியானது கங்கையில் பாய்ந்து சேருவதினால் உண்டாகும் ஓசை" யென்று விளக்கினார். அவ்விடத்தில் ராஜகுமாரர்கள் இரு புண்ணிய நதிகளையும் தியானித்து வணக்கம் செலுத்தினார்கள். பரம்பொருளைத் தியானிக்க ஆறும் மலையும் மரமும் மேகமும் பயன்படும். எந்தப் பொருளும் பயன்படும். ஆயினும் தலைமுறையாக மக்கள் பக்தி செலுத்தின நதியும், மூர்த்தியும் குலமும் நம்முடைய உள்ளத்தை எளிதில் கடவுள் வழியில் செல்லச் செய்யும்.

கங்கையைத் தாண்டி நடந்து சென்றார்கள். வழி ஒரு பயங்கரமான காட்டுக்குள் சென்றது. மரங்களும் புதர்களும் அடர்ந்து ,நுழைந்து போவதே மிகக் கஷ்டமாக இருந்தது. துஷ்ட மிருகங்களின் சத்தம் பயங்கரமாக இருந்தது.

ராமலக்ஷ்மணர்களுக்கு முனிவர் சொன்னார்: "இதுவே தாடகாவனம். இப்பொழுது பயங்கரக் காடாக இருக்கும் இந்த இடம், பூர்வத்தில் மிகச் செழிப்பும் செல்வமும் நிறைந்த பிரதேசமாக இருந்தது. ஒரு காலத்தில் இந்திரன் விருத்தி

ராசுரனைக் கொன்று, பிரம்மஹத்தி தோஷம் அடைந்தான். அதனால் தகாதவனாகி மிக வருந்தினான். தேவராஜனாகிய இந்திரனுடைய பாபத்தைப் போக்கத் தேவர்கள் எல்லாரும் சேர்ந்து மிகவும் சிரமப்பட்டார்கள். புண்ணிய நதிகளி லிருந்து பெரிய பாத்திரங்களில் ஜலம் கொண்டு வந்து, அவனை ஸ்நானம் செய்வித்து மந்திரங்களினால் பரிசுத்தப் படுத்தினார்கள். அந்த ஸ்நான நீரினால் அவனிடம் தங்கி யிருந்த மாசு கழுவப்பட்டு, பூமியின் சக்தியால் அது ஜீரணிக்கப்பட்டு உரமாகி, அந்தப் பிரதேசம் மிகச் செழிப்படைந்தது.

"எத்தகைய அழுகிப்போன, புழுத்துப் போன பொரு ளும் - பிரேதம், துர்க்கந்த மலம் உள்பட-பூமியில் புதைத்து விட்டால் மண்ணோடு மண்ணாகிப்போய்ப் பயன்பட்டு விடுகிறது. அதுவே புல்லும் செடியும் பழமும் கிழங்கும் அமிருதமும் போன்ற உணவுமாகிறது. இதுவே பூதேவியின் அருட்சக்தி.

"வெகு காலம் வரையில் இங்கே ஜனங்கள் சுகமாக இருந்தார்கள். பிறகு சுந்தன் என்கிற யக்ஷனுடைய மனை வியான தாடகையும், அவன் மகன் மாரீசனும் இந்தத் தேசத்தை நாசம் செய்து, கோர வனமாக்கிவிட்டார்கள். அவர்கள் இன்னும் இந்த வனத்தில் இருந்துகொண்டு வருகிறார்கள். "பத்ரம்தே!"- (அதாவது "உனக்கு மங்களம்" என்று ராமாயணத்தில் அடிக்கடி வரும். இது ஆசீர்வாத மொழி. பயம் அல்லது துக்கம் தரக்கூடிய விஷயத்தைச் சொல்லும்போது, அன்புடன் இவ்விதக் காப்பு மொழியைச் சேர்த்துச் சொல்வது மரபு.)

"அந்தத் தாடகைக்குப் பயந்து இங்கே யாரும் வருவ தில்லை. அவள் ஆயிரம் யானை பலம் கொண்டவள். அவளு டைய உபத்திரவத்தைப் போக்கவே உன்னை அழைத்து வந்தேன். ரிஷிகளைத் தொந்தரவு செய்யும் இந்த அரக்கி,

உன்னால் கொல்லப்படுவாள் என்பதில் சந்தேகமில்லை" என்றார்.

தாடகையைப்பற்றி விசுவாமித்திரர் சொன்னதைக் கேட்ட ராமன், "சுவாமி! தாடகை யக்ஷ ஸ்திரீ என்று சொன்னீர். யக்ஷர்களைப்பற்றி அவர்கள் இவ்வளவு தேக பலம் கொண்டவர்கள் என்று நான் கேள்விப்படவில்லையே! யக்ஷர்களுக்குத் தேக பலம் ராக்ஷசர்களைப் போல் இல்லை என்றுதான் இதுவரை எண்ணி வந்தேன். அதிலும் ஸ்திரீ ஒருத்திக்கு எவ்வாறு இத்தகைய பலம் உண்டா யிற்று?" என்று கேட்டான்.

"நீ கேட்கும் கேள்வி பொருத்தமானதே. இதற்குக் காரணம் பிதாமகர் கொடுத்த வரமாகும். சுகேது என்ற யக்ஷன் இருந்தான். அவனுக்குச் சந்ததி உண்டாகாமல் தவ மிருந்தான். பிரம்மா அவனுடைய நன்னடத்தையையும் தவத்தையும் கண்டு திருப்தியடைந்து வரம் தந்தார். "அழகான ஒரு பெண் குழந்தை உனக்கு உண்டாவாள். அவள் வளர்ந்து ஆயிரம் யானைகளின் தேகபலம் அடைவாள். ஆனால், உனக்கு ஆண் சந்ததி உண்டாகாது" என்று வரம் தந்தார்.

"அதுபடியே அவனுக்கு ஒரு மகள் பிறந்தாள். அவள் தான் தாடகை. மிக சௌந்தரிய ரூபவதியான அவளைச் சுந்தன் என்ற யக்ஷனுக்குக் கொடுத்து விவாகமாயிற்று. அவர்களுக்கு மாரீசன் பிறந்தான்.

"ஒரு சமயம் அகஸ்தியருடைய கோபத்தினால் சாபம் அடைந்த சுந்தன், மரணமடைந்தான். இதனால் சுந்தனு டைய மனைவி தாடகையும், மகன் மாரீசனும் ரோஷங் கொண்டு அகஸ்தியரை எதிர்த்தார்கள். தேக பலத்தைக் கொண்டு எதிர்க்க வந்த அவர்களை அகஸ்தியர், சாப மிட்டார். அதன் பயனாக அவர்கள் நரமாமிசம் தின்னும் ராக்ஷசப் பிராணிகளாகி விட்டார்கள். தாடகையின் அழகு

தீர்ந்து போய்க் கோரமான ராக்ஷச உருவமடைந்து விட்டாள்.

"தாடகையும் மாரீசனும் அகஸ்தியருடைய பிரதேசத்தில் இருக்கும் மக்களை அது முதற்கொண்டு இடைவிடாமல் இம்சித்து வருகிறார்கள். பெண்ணைக் கொல்லுவது க்ஷத்திரிய தருமத்துக்கு விரோதம் என்று நீ தயங்க வேண்டாம். இவளுடைய அக்கிரமங்களைப் பொறுக்க முடியாது. மிகக் குரூரமான அரக்கி. இத்தகையோரை, அவர்கள் ஆணாயிருந்தாலும் பெண்ணாயிருந்தாலும் தண்டிப்பது அரசர்களுடைய கடமை. அனைவருடைய க்ஷேமத்திற்காகக் காட்டுமிருகங்களைக் கொல்லுவது போல், இந்த அரக்கியைக் கொல்லுவது நியாயமேயாகும். ராஜ்ய பாரம் வகிப்பவர்களுக்கு இது கடைமையாகிறது. அதர்மத்தைச் செய்த பல மானிட ஸ்திரீகளுக்கும் இவ்வாறு மரணம் ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் நீ தயங்க வேண்டியதில்லை" என்றார்.

எல்லாத் தேசங்களிலும் பெண்களைத் தண்டிக்க வேண்டி நேரிட்டாலும், மரண தண்டனை விதிக்கக் கூடாது என்கிற பழைய வழக்கம் உண்டு. ஆனால் எந்தப் பொது விதிக்கும் விலக்குகள் இருந்தே தீரும். இல்லாவிடில் பொது நன்மை நிலைபெறாது.

"குருவே! சபையில் எங்கள் தந்தை தாங்கள் சொல்லும்படி நடந்துகொள்ளவேண்டும் என்று ஆணையிட்டிருக்கிறார். உங்களுடைய சொற்படி மக்கள் க்ஷேமத்துக்காக இந்தத் தாடகையைக் கொல்வேன்" என்று சொல்லிக் கோதண்டத்தை வளைத்து, நாண் ஏற்றித் தோள்வரை நாணை இழுத்து ஒலி எழுப்பினான். அந்த ஒலி வனம் முழுதும் நிரம்பி, எட்டுத் திசையிலிருந்தும் எதிரொலி கிளம்பிற்று. வனத்திலுள்ள பிராணிகள் அனைத்தும் நடுங்கின.

தாடகை இந்தச் சப்தத்தைக் கேட்டு, யாருக்கு இவ்வளவு தைரியம் என்று திகைத்தாள். பிறகு சப்தம் வந்த

இடத்தைத் தேடி, மகாகோபத்தோடு ராமன் மேல் பாய்ந் தாள்.

முதலில் கைகால்களை வெட்டிவிட்டு அங்கஹீனம் செய்தால் போதும் என்று ராமன் எண்ணி, அவ்விதம் செய்யப் பார்த்தான். ஆனால், தாடகையின் பாய்ச்சல் அதிக ரித்தது. இங்குமங்கும் சஞ்சரித்து, கல்மாரி பொழிந்தாள். ராமனும் லக்ஷ்மணனும் அம்புகளைக் கொண்டு கல்மாரியைத் தடுத்து வந்தார்கள்.

யுத்தம் நடந்துகொண்டே இருந்தது. "இவ்விதம் இது முடியாது. இரக்கம் காட்டவேண்டாம். மாலையாகி விட்டது. இருட்டின பின் அரக்கியின் பலம் அதிகமாகப் பெருகும்; தாம தம் வேண்டாம்" என்று முனிவர் எச்சரித்தார்.

அதன்மேல் அரக்கியைக் கொல்லுவதே சரி என்று, ஒரு கொல்லும் அம்பை எய்தான். அது அரக்கியின் மார்பைத் துளைத்தது. அவளுடைய கோரமான பெருந்தேகம் உயிரற்று பூமியில் வீழ்ந்தது.

தேவர்கள் ஆரவாரித்தார்கள். முனிவரும் அடங்கா மகிழ்ச்சியடைந்து சக்கரவர்த்தித் திருமகனை உச்சி மோந்து ஆசீர்வதித்தார்.

தாடகை இறந்து வீழ்ந்ததும் அந்த வனம் உடனே சாபம் நீங்கினது போல், மிக ரமணீயமாய் விளங்கிற்று. இரவை அரச குமாரர்கள் அங்கேயே கழித்தார்கள். அதி காலையில் எழுந்து அனுஷ்டானங்கள் முடித்துக்கொண்டு, மூவரும் அங்கிருந்து விசுவாமித்திரருடைய ஆசிரமத்துக்குச் சென்றார்கள்.

## 9. வேள்வி காத்தது

காலையானதும், முனிவர் சக்கரவர்த்தித் திருமகனைப் பக்கத்தில் உட்காரவைத்து, "அப்பனே! உனக்கு மங்களம், என் உள்ளம் திருப்தி அடைந்தது. நீ செய்த காரியத்துக்காக

உனக்கு நான் எப்படி கைம்மாறு செய்வேன்? இப்போது உனக்கு அஸ்திர உபதேசம் செய்யப் போகிறேன்; பெற்றுக் கொள்வாயாக" என்று சொல்லி, முறைப்படி ராமச்சந்திரனுக் குத் தாம் தவத்தினால் பெற்ற சகல திவ்யாஸ்திரங்களையும் உபதேசித்தார்.

அந்தந்த அஸ்திரங்களை பிரயோகிக்கவும், அவற்றை அடக்கிப் பின் திருப்பவும் உரிய மந்திரங்களையெல்லாம் உபதேசித்தார். அஸ்திரங்களுக்குரிய தேவதைகளும் ராம னுக்குப் பிரத்யட்சமாகத் தரிசனம் தந்துவிட்டு, "உன் உத்தரவுக்கு அடங்கி எல்லாம் செய்வோம்" என்று சொல்லி மறைந்தன. ராமச்சந்திரனும் அவற்றையெல்லாம் தம்பி லக்ஷ்மணனுக்கு உபதேசித்தான்.

அஸ்திர மந்திரங்களை ராமன் சரியாகப் பெற்றானா என்பதைப் பரீக்ஷை செய்து திருப்தியடைந்த பிறகு, "இந்த அஸ்திரங்களைக் கொண்டு தேவாசுர, கந்தர்வ, அரக்கர் களையும் நீ யுத்தத்தில் அழித்து வெற்றி பெறுவாய்" என்று ராமனை முனிவர் ஆசீர்வதித்தார்.

கொஞ்சதூரம் நடந்துசென்றபின், ராமன் முனிவரைக் கேட்டான், "அதோ, இங்கே தெரிகிறதே பெரிய மலையும் ரமணீயமான வனமும், அதுவா நாம் போகவேண்டிய இடம்? உங்கள் வேள்வியைக் கெடுக்கும் துராத்மாக்கள் யார்? அவர்களை ஒழித்துத் தீர்க்க நாம் என்னவெல்லாம் செய்ய வேண்டும்? எனக்கு விவரமாகச் சொல்வீர்" என்றான்.

ராமச்சந்திரனுடைய கை துடித்தது. யுத்தம் செய்து வெற்றி பெற்று முனிவருடைய ஆசீர்வாதத்தைப் பெற ஆவல் கொண்டான்.

"அப்பனே! அந்த இடம்தான் நாம் போக வேண்டிய இடம். அதுவே ஆதிநாராயணன் மக்களுக்கு தவ வழியை உபதேசிக்க உதாரணமாக முன்னால் தவமிருந்த இடம். மகா விஷ்ணு வாமனனாக அவதரித்த இடமும் அதுவே, அதனா

லேயே அந்த ஆசிரமத்துக்குப் பெயர் 'சித்தாசிரமம்' என்று வழங்கி வருகிறது" என்றார் முனிவர்.

பிரஹலாதனுடைய மகனான வீரசேனனுடைய புத்திரன், மகாபலி என்ற அசுரன். புகழுடன் அரசு புரிந்தான். அவனுடைய ஆதிக்கப் பெருக்கத்தைக் கண்டு தேவர்கள் பயந்தார்கள். இந்திரன் ஆதிக்கத்தையெல்லாம் மகாபலி ஆக்கிரமித்துக் கொண்டு விட்டான்.

இந்திரனைப் பெற்ற காசியப முனிவரும், மனைவி அதிதியும் மகாவிஷ்ணுவைக் குறித்துப் பெருந்தவம் செய்து "லோக நாதனே! எங்களுக்குப் புத்திரனாகவும், எங்கள் மகன் இந்திரனுக்குத் தம்பியாகவும் நீயே அவதரித்து இந்திரனையும் தேவர்களையும் மகாபலியினிடமிருந்து காப்பாற்றுவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள். அதன்மேல் மகாவிஷ்ணு வாமனாவதாரம் எடுக்கத் தீர்மானித்து, அதிதிக்கு மகனாகப் பிறந்து வளர்ந்தார்.

மகாபலி செய்த ஒரு யாகத்துக்கு அழகிய சிறு பிரமச்சாரியாக வாமனன் சென்றான். மகாபலியின் ஆசிரியரான சுக்கிரர்-அசுரர் குலத்துக்கு இவர்தான் குரு- விஷயத்தைத் தெரிந்துகொண்டு - 'இந்தப் பிராமணன் யாசிப்பதைத் தரவேண்டாம்' என்று எச்சரித்தார்.

"மகாவிஷ்ணுவே என் யாகத்தில் வந்து யாசகம் கேட்டுப் பெறுவதைவிட, எனக்கு என்ன மேலான நன்மை உண்டு' என்று மகாபலி தன் ஆசிரியருக்குச் சொன்னான்.

"என் பாதத்தால் அளந்த மூவடிப் பிரதேசம் வேண்டும்" என்று சிறுவன் கேட்டதை, மகாபலிச் சக்கரவர்த்தி "தந்தேன்" என்று ஜலம் வார்த்துத் தந்துவிட்டான்.

வாமனன் உடனே திரிவிக்கிரமனாகிப் பூவுலகை ஓரடியாலும், வானுலகை ஓரடியாலும் அளந்துவிட்டான். மூன்றாவது அடியாகத் தன் திருப்பாதத்தை நாராயணன்

மகாபலிக்கு அபயம் என்று அவன் தலைமேல் வைத்தான். உலகப் பரப்புக்குச் சமானம் பக்தனுடைய தலை என்பது இந்தக் கடைசி நிகழ்ச்சியின் பொருள். ஏழு சிரஞ்சீவிகளுள் ஒருவன் ஆனான் மகாபலி.

இந்தப் புண்ணிய கதையைச் சொல்லி, "ஆதியில் நாராயணன் தவமிருந்ததும், பிறகு காசியபர் தவஞ்செய்து தேவர்களைக் காப்பாற்ற வாமனனைப் பெற்றதுமான இந்த இடம், சித்தாசிரமம் என்கிற பெயர் பெற்றது. இந்தப் புண்ணியப் பிரதேசத்தில் நானும் ஆசிரமம் அமைத்து அதில் இருந்து வருகிறேன். என்னுடைய வேள்விக்குத் தடையாக அரக்கர்கள் அந்த வனத்துக்கு வந்து வேதனை செய்கிறார்கள். யாகம் நடைபெறாமல் செய்துவிடுகிறார்கள். இப்போது நீ வந்திருப்பதே அவர்களுடைய முடிவு என்றார் விசுவாமித்திரர்.

"அப்படியேயாகுக" என்றான் ராமன்.

அரசு குமாரர்களுடன் விசுவாமித்திரர் வந்துவிட்டதைக் கண்டு, அங்குள்ள மற்ற ரிஷிகள் மிக மகிழ்ச்சியடைந்து, ஒருவர் பின் ஒருவராக வந்து, விசுவாமித்திர முனிவரை வணங்கி வரவேற்றார்கள். ராஜகுமாரர்களுக்கும் முறைப்படி அதிதி பூஜை செய்து அமர்ந்தார்கள்.

"இன்றே தாங்கள் யாக தீக்ஷையெடுக்கலாம்" என்று சக்கரவர்த்தித் திருமகன் பரபரப்புடன் முனிவருக்குச் சொன்னான். அவ்வாறே விசுவாமித்திரர் வேள்வித் துவக்கத்துக்கு உரிய விரதம் அன்றிரவு எடுத்துக் கொண்டார்.

மறுநாள் காலை, சீக்கிரமாகவே ராஜகுமாரர்கள் எழுந்து யாகசாலையிலிருந்த முனிவரை வணங்கி, "ராக்ஷசர்கள் எப்போது வருவார்கள்? நாம் அஜாக்கிரதையாக இருக்கக் கூடாதல்லவா? எங்களுக்கு விவரமாகச் சமயத்தைத் தெரியப்படுத்த வேண்டும்" என்றார்கள்.

அங்கிருந்த ரிஷிகள் இதைக் கேட்டு வெகு சந்தோஷ மடைந்தார்கள்.

"முனிவர் விசுவாமித்திரர் மௌன விரதத்திலிருக் கிறபடியால் இனிப் பேசமாட்டார். ஆறு நாட்கள் இரவும் பகலும் நீங்கள் தூங்காமல் யாகத்தைக் காப்பாற்ற வேண்டும்" என்றார்கள்.

ராஜகுமாரர்கள் வில்லும் கையுமாக ஆறு நாட்கள் இரவும் பகலுமாகக் காத்தார்கள். ஆறாவது நாள் காலையில் லக்ஷ்மணனுக்கு ராமன் சொன்னான்: "தம்பீ! இப்போது வெகு ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். இதுதான் அரக்கர்கள் வரும் சமயம்" என்றான்.

இதைச் சொல்லும்போதே அக்னி குண்டத்திலிருந்து நெருப்பு கொழுந்து விட்டு எழுந்தது. ராக்ஷசர்கள் ஆகா யத்தில் வந்து நின்றது அக்கினிக்குத் தெரியும். யாக காரியம் சகலமும் கிரமமாக நடந்து கொண்டிருக்க, மேலே ஆகாயத் தில் ஒரு பெரும் கர்ஜனை கேட்டது. ராமன் மேலே பார்த்தான்.

மாரீசனும் சுபாஹுவும் அவர்கள் பரிவாரமும் அசுத்த மாமிசமும் ரத்தமும் கொண்டு வேதிகையின்மேல் சொரிந்து யாகத்தைக் கெடுக்க ஆயத்தமாக நின்றதைக் கண்டான். ஆகாயம் முழுவதும் நீர்கொண்ட மேகம் மூடினாற்போல் அரக்கர் கூட்டம் நின்றது. உடனே மானவஸ்திரத்தை எடுத்து "லக்ஷ்மணா பார்!" என்றான் ராமன்.

அந்த அஸ்திரம் மாரீசனைத் தாக்கி, அவனை நூறு யோசனை தூரம் தாண்டிக் கடற்கரையில் கொல்லாமல் வீழ்த்திற்று.

பிறகு ராமன் ஆக்னேயாஸ்திரம் விட்டான். அது சுபாஹுவைத் தாக்க, அவன் மாண்டு விழுந்தான். பிறகு வேறு அஸ்திரங்களையும் பிரயோகித்து, அரக்கர் கூட்டத்தை ராஜகுமாரர்கள் முற்றிலும் அழித்தார்கள்.

ஆகாயம் மறுபடியும் வெண்மையாகப் பிரகாசித்தது.

இவ்வாறு யாகத்தை கெடுக்கவந்த அரக்கர்கள் வீழ்த் தப்பட்டு, ரிஷிகளுக்கு ஏதொரு தொந்தரவுமில்லாமல் காரியம் முடிந்தது. விசுவாமித்திரர் எல்லைகடந்த மகிழ்ச்சியடைந் தார்.

"சக்கரவர்த்தி தசரதனுக்கு நன்றி செலுத்துகிறேன். அவன் ஆணைப்படி நடத்திக் கொடுத்தீர்கள். உங்களுடைய பராக்கிரமத்தைப் பாராட்டுகிறேன். இந்த ஆசிரமம் மறுபடியும் எங்களுக்குச் சித்தாசிரமம் ஆயிற்று" என்று சொல்லி ராஜகுமாரர்களை ஆசீர்வதித்தார்.

அன்றிரவு ராஜகுமாரர்கள் சித்தாசிரமத்தில் தூங்கிக் களைப்புத் தீர்த்துக் கொண்டார்கள்.

மறுநாள் காலை நியமங்களை முடித்துவிட்டு ராம லக்ஷ்மணர்கள் முனிவர் முன் நின்று வணங்கி, "என்ன உத்தரவு?" என்றார்கள்.

அவதார ரகசியம் முனிவருக்குத் தெரிந்ததுதான். உபதேசித்துத் தந்த அஸ்திரங்களின் வல்லமையும் அவர் அறிந்ததே. ஆயினும் எதிர்பார்ப்பது வேறு, எடுத்த காரியம் முடிந்து அதை நேரில் அனுபவிக்கும் மகிழ்ச்சியே வேறு.

விசுவாமித்திர முனிவருக்குச் சொல்லொணாத மகிழ்ச்சி. அவர் முகம் அக்னி ஜுவாலையைப் போலப் பிரகாசித்தது. இன்னும் ராமச்சந்திரனுக்குத் தாம் செய்ய வேண்டிய பணியைப்பற்றி நினைக்கலானார். அதுவே சீதா கல்யாணம்.

அங்கு கூடிய ரிஷிகளும் விசுவாமித்திரரும் ராமனை நோக்கிச் சொன்னார்கள்.

"நாங்கள் மிதிலைக்குப் போவதாக இருக்கிறோம். ராஜ சிரேஷ்டரான ஜனகர் ஒரு யாகம் செய்யப்போகிறார். அங்கே நாம் அனைவரும் போகப்போகிறோம். ராஜ குமாரர்

களும் நம்முடன் வருவது நல்லது. ஜனகருடைய அற்புத வில்லைச் சக்கரவர்த்தித் திருமகன் தரிசித்தல் தகும்."

அவ்வாறே நிச்சயம் செய்தார்கள். ராம லக்ஷ்மணர்கள் விசுவாமித்திரருடன் மிதிலைக்குச் சென்றார்கள்.

## 10. கொழுமுகத்துக் குழந்தை

விதேஹ மன்னரான ஜனகர் மிகவும் நல்லமுறையில் தம் தேசத்தை ஆண்டு வந்தார். தசரதச் சக்கரவர்த்திக்குப் பழைய மித்திரர். தசரதன் புத்திரப் பேற்றுக்காகச் செய்த பெரிய யாகத்திற்கு அரசர்களை அழைத்தபோது "ஜனகரிடம் தூதுவர்களை அனுப்பவேண்டாம். மந்திரிகளே நேரில் போய் அழைக்க வேண்டும்" என்று தனி உத்தரவிட்டான். ஜனகர் ஒரு ராஜரிஷி; சூரர்; எல்லாச் சாஸ்திரங்களையும் நன்றாகக் கற்றவர்; வேத வேதாந்தங்களில் நிபுணர்; நியமம் காத்தவர்; பிரம்மஞானி. கடமைகளைச் செய்தே சித்தியடைவதைப் பற்றி அர்ச்சுனனுக்கு எடுத்துச் சொல்லும்போது, கண்ணன் ஜனகரைச் சிறந்த உதாரணமாக எடுத்துச் சொன்னான். அவதார தேவி சீதையை மகளாகப் பெற்ற தகுதி கொண்ட மகான்.

ஒரு காலத்தில் ஜனக மகாராஜா யாகம் செய்வதற்கென்று இடம் கண்டு, அதைத் தாமே கலப்பை பிடித்து உழுதார். உழுது, புதரும் பூண்டுமாக இருந்த பூமியைத் திருத்தி ஒழுங்குபடுத்திக் கொண்டிருக்கும்போது, மண்ணில் ஒரு திவ்ய ரூபமான பெண் குழந்தையைக் கண்டார். ஜனகருக்குக் குழந்தையில்லை. தரையில் புரண்டு உடலெல் லாம் மண் பூசிக் கிடந்த அக்குழந்தையைப் பூதேவியே தமக்குத் தந்த வரம் என்று மகிழ்ச்சிப் பரவசமாகக் கையில் எடுத்துக்கொண்டு தம் பிரிய பார்யையிடம் சென்று, "இதோ, நமக்குக் கிடைத்த பெருந்தனம்! யாக பூமியில் இவளை அடைந்தேன். இவளே நம்முடைய சந்தானம்!" என்று குழந் தையைப் பட்ட மகிஷியிடம் கொடுத்தார். அவளும் அக்குழந்

தையைத் தான் பெற்ற குழந்தையாகவே வளர்த்தாள். கம்பர் பாடியிருக்கும் மிக அழகிய பாட்டை இவ்விடம் சொல்லலாம்.

பூதேவியை நாம் நேரில் பார்க்க முடியாது. உழுகின்ற கொழுமுகத்தில், தன் அபார சௌந்தரியத்தை அழகிய பச்சைப் பயிர்களின் வாயிலாகக் காட்டுகிறாள். உதிக்கும் சூரியனுடைய கிரணங்களுக்குச் சமமான பொலிவுடன் முளைக்கும் பயிர்களில் விளங்குகிறாள் பூமாதேவி. உள்ளே மறைந்து நிற்கும் தேவியின் முழு அழகு நமக்குத் தெரியாது. அந்தப் பூதேவியே சீதையாக வெளிப்பட்டு ஜனகருடைய கலப்பைக் கொழுமுகத்தில் தோன்றினாள். கடலைக் கடந்த போது அமுதத்தோடு எழுந்த ஸ்ரீதேவியும், சீதையின் அழகைக் கண்டு வியந்து தொழுவாள் என்று கம்பர் பாடுகிறார்.

உழுகின்ற கொழுமுகத்தின் உதிக்கின்ற கதிரின் ஒளி
பொழிகின்ற புவிமடந்தை உருவெளிப்பட் டெனப்புணரி*
எழுகின்ற தெள்ளமுதோ (டு) எழுந்தவளும் இழிந்(து) ஒதுங்கித்
தொழுகின்ற நன்னலத்துப் பெண்ணரசி தோன்றினாள்.

பாட்டில் மொழிச் சிக்கனம் அதிகம். பொருளோ மிக அடர்த்தி. இது கம்பர் பாடல்களின் தனிப் பண்பு.

தெய்வீகக் குழந்தையான சீதையை மிகவும் அன்போடு ஜனகரும் அவர் பிரிய பத்தினியும் வளர்த்தார்கள்.

விவாகத்துக்குரிய காலம் வந்தது. இவளை விட்டுப் பிரிய வேண்டுமே என்று ஜனகர் துக்கப்பட்டார். தெய்வீகப் பெண்ணாகிய இவளை, மனைவியாகப் பெறக்கூடிய அரச குமாரன் யார் என்று யோசித்து, ஒருவரையும் காணாமல் வெகு காலம் ஜனகர் வருத்தப்பட்டார். அரசர்கள் பலர் வந்து கேட்டார்கள். ஆனால் அவர்களில் யாரும் சீதையைப் பெறும் தகுதி வாய்ந்தவராக ஜனகர் மதிக்கவில்லை. இந்த நிலையில் ஒரு நாள் ஜனகர் நிச்சயித்தார். முன்னொரு சமயம் மகாயாகம் செய்த காலத்தில் வருணன் ஜனகருடைய யாகத்தைப்

*புணரி - பாற்கடல்

போற்றி, ருத்திர வில்லையும் இரண்டு அம்பறாத் தூணி களையும் ஜனகருக்குத் தந்தான். அந்த வில்லானது மிகப் புராதன தெய்வீகமான வில். அதைச் சாமான்ய ஜனங்கள் கையால் அசைக்கக்கூட முடியாது. எடுத்து, வளைத்து, நாண் ஏற்றுவதைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்! முடியாத காரியம். ஜனகர் அரச சமூகத்துக்குத் தெரியப்படுத்தினார்.

"என்னிடமிருக்கும் வருணதேவப் பிரசாதமான இந்த ருத்திரவில்லை எந்த அரசகுமாரன் வளைத்து நாண் பூட்டுகிறானோ அவனுக்கு என் மகள் சீதையைத் தருவேன். இதுவே என் மகளுடைய சுயம்வர நிபந்தனை."

சீதையின் அழகைப்பற்றிக் கேள்விப்பட்டு, பல அரச குமாரர்கள் வந்து வில்லைப் பார்த்துவிட்டு, ஒன்றும் செய்ய முடியாமல் திரும்பிவிட்டார்கள்.

## 11. சகரன்

விசுவாமித்திரர் தலைமையில் புறப்பட்ட ரிஷிகள் மாட்டு வண்டிகளில் மிதிலை நோக்கி வடக்கே சென்றார்கள். ஆசிரம வனத்திலிருந்த பட்சிகள் மான்கள் எல்லாம் கூடவே சென்றதைப் பார்த்து, விசுவாமித்திரர் அவற்றை அன்புடன் அங்கேயே நிறுத்தினார்.

சோணா நதிக்கரை சேர்ந்ததும் மாலையாயிற்று. அங்கே அந்த இரவு தங்கினார்கள். அந்த இடத்தின் பூர்வ கதைகளை ராஜகுமாரர்களுக்கு முனிவர் சொல்ல, இரவு சந்தோஷமாகக் கழிந்தது. அடுத்த நாள் காலை எழுந்து ஒரு நதியைத் தாண்டினார்கள். ஜலம் ஆழமில்லாமலிருந்த படியால் நடந்தே தாண்டினார்கள். பிறகு நடுப்பகலில் கங்கைக் கரையை அடைந்தார்கள். எல்லோரும் கங்கையில் ஸ்நானம் செய்து, தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் முன்னோர் களுக்கும் தர்ப்பணம் செய்தார்கள். அங்கேயே ஆகாரம்

சமைத்துப் பூஜை செய்து போஜனம் செய்தார்கள். எல்லாரும் விசுவாமித்திரரைச் சுற்றி உட்கார்ந்தார்கள்.

"முனிவரே! கங்கையின் வரலாற்றைச் சொல்ல வேண்டும்" என்று ராஜகுமாரர்கள் ஆவலுடன் கேட்க, முனிவரும் சொல்லப் புகுந்தார்.

பர்வத ராஜனான ஹிமவானுக்கும் மனைவி மனோரமைக்கும் அபூர்வ லட்சணம் பொருந்திய இரண்டு புதல்விகள் இருந்தார்கள். மூத்தவளான கங்காதேவியைத் தேவர்களின் பிரார்த்தனையின் பேரில் ஹிமவான் தேவலோகத்துக்கு அனுப்பிக் கொடுத்தான். இளைய குமாரி உமை, சங்கரனை விரும்பி, பெரும் தவம் புரிந்தாள். பரமசிவனும் திருப்தியடைந்து உமையைத் தன் பத்தினியாகப் பெற்றான். ஹிமவானுடைய இருபெண்களும் இவ்வாறு மிகப்புண்ணிய நிலையை அடைந்தார்கள். எல்லாப் பாவங்களையும் போக்கும் கங்காதேவி, தேவலோகத்திலேயே இருந்து வந்தாள்.

அயோத்தியாதிபதி சகரன் என்ற மகாராஜன் வெகு நாள் சந்தானமில்லாமல் வருந்தினான். கேசினி, சுமதி என்ற தன் இருபத்தினிகளையும் அழைத்துக் கொண்டு இமயமலையில் தவம் செய்தான். பிறகு பிருகு முனிவர் அவன் தவத்தைக் கண்டு மகிழ்ந்து, 'சந்தானம் பெறுவாய்' என்று வரம் தந்தார்.

"வீரனே! நீ மகத்தான சந்தானம் பெறுவாய். அபார கீர்த்தியும் பெறுவாய். உன் பத்தினிகளில் ஒருத்தி ஒரு புத்திரனைப் பெறுவாள். உன்னுடைய வம்சம் அவன் வழியாகப் பெருகும். இன்னொரு பத்தினி பலவான்களான அறுபதினாயிரம் புத்திரர்களைப் பெறுவாள்" என்று ஆசீர்வதித்தார்.

ராஜபத்தினிகள் முனிவரைப் பணிந்து, "சுவாமி, யாருக்கு ஒரே மகனும், யாருக்குப் பல குமாரர்களையும் தந்தீர்?" என்று கேட்டார்கள்.

"ஒருத்தி பெறும் ஒரே மகன் வழியாகத்தான் வம்சம் பெருகும். மற்றவள் பெறும் அநேக புத்திரர்கள் பலவான்களாக வளர்ந்து பெரும் புகழ் பெறுவார்கள். உங்களில் யாருக்கு எது இஷ்டம்" என்று முனிவர் கேட்டார்.

மக்களின் ஆசை பலவிதம். கேசினியானவள் வம்சம் வளர்க்கும் ஒருமகன் தனக்குப் போதும் என்றாள். சுமதியோ பலமும் கீர்த்தியும் அடையப்போகும் அநேக மக்களைப்பெற விரும்பினாள். "அப்படியேயாகட்டும்" என்று முனிவர் சொன்னார். வரம் தந்த முனிவரை வலம் வந்து வணங்கி, இரு மனைவிமாருடனும் அரசன் மிக்க திருப்தியோடு நகரத்துக்குத் திரும்பிப் போனான்.

கொஞ்ச காலங் கழித்த பின் கேசினியானவள் அசமஞ்சன் என்ற மகனைப் பெற்றாள். சுமதி வடிவமற்ற ஒரு பிண்டத்தைப் பிரசவித்தாள். அந்தப் பிண்டம் பொரிந்து அதனின்று முனிவர் சொன்னபடி அறுபதினாயிரம் குழந்தைகள் உண்டானார்கள். குழந்தைக் கூட்டத்தைத் தாதிமார்கள் நன்றாகப் பாதுகாத்து வந்தார்கள்.

காலக்கிரமத்தில் குழந்தைகள் யௌவன நிலையடைந்து மிக்க அழகும் வீரமும் கொண்ட ராஜகுமார்களாக வளர்ந்தார்கள். மூத்த மனைவியின் குமாரன் அசமஞ்சன் வளரவளர, குரூர குணத்தையடைந்தான். ஊரிலுள்ள குழந்தைகளைப் பிடித்து ஆற்றின் மடுவில் போட்டு, அவை தத்தளித்துச் சாவதைக் கண்டு சிரித்துச் சந்தோஷப்படுவான்.

இவ்வாறு பயித்தியம் பிடித்துப்போன அசமஞ்சனை ஜனங்கள் மிகவும் வெறுத்தார்கள்.

அரசனுடைய அனுமதியுடன், அவனை ராஜ்யத்தை விட்டே துரத்தி விட்டார்கள். ஆனால், அவனுக்குப் பிறந்த மகன் அம்சுமான் என்ற ராஜகுமாரன் மிகவும் குணசாலி. எல்லாருடைய அன்பையும் நன்மதிப்பையும் சம்பாதித்தான். சீலமும் அறிவும் பொருந்தியவனாக வளர்ந்தான்.

சகரன் ஒருபெரும் அசுவமேத யாகம் செய்ய நிச்சயித்ததின்பேரில், அதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. அசுவமேத யாகத்துக்குரிய குதிரையை ராஜகுமாரன் அம்சுமான் காத்து வந்தான். ஆனால், இந்திரன் ராக்ஷச வேஷம் பூண்டு குதிரையைக் கொண்டு போய் விட்டான்.

அசுவமேத யாகங்களைத் தடைசெய்வது தேவர்களுடைய வழக்கம். இந்திரனுடைய பதவிக்குப் போட்டி ஏற்படும் என்கிற பயம். ஆயினும், தடைகளைத் தாண்டி யாகம் நடைபெற்றுவிட்டால், யாகத்தில் தரப்படும் ஹவிஸுகளைத் தேவர்கள் பெற்றுத்தான் போகவேண்டும். அதன் மேல் யாகத்தைச் செய்தவன் யாகத்தின், பலனை அடைவான்.

குதிரை காணாமல் போயிற்று என்று அரசனுக்குத் தெரிந்ததும் மிக வருத்தப்பட்டு, எப்படியாவது குதிரையைக் கண்டு பிடித்துக் கொண்டுவர வேண்டுமென்று, சுமதி புத்திரர்களான அறுபதினாயிரம் ராஜகுமாரர்களையும் பூமண்டலம் முழுதும் தேடி வரும்படி அனுப்பினான் அரசன். "யாகக் குதிரையை இழந்தால் யாகம் கெடுவதுமல்லாமல், சம்பந்தப்பட்ட எல்லாரையும் பாவம் சுற்றிக்கொள்ளும். ஆகையால், " திருடிப்போனவன் எங்கே மறைத்து வைத்திருந்தாலும், போய்க் கண்டுபிடித்து குதிரையைக் கொண்டுவர வேண்டும்" என்று சகரன் வீரமும் சௌந்தரியமும் கொண்ட தன் புத்திரப் பெருங்கூட்டத்துக்கு உத்தரவிட்டான்.

சகர புத்திரர்களும் மிக உற்சாகமாக உலகமெல்லாம் சுற்றி அட்டகாசம் செய்தார்கள். குதிரை எங்கும் கிடைக்கவில்லை.

பூமியை வெட்டித் தோண்டினார்கள். எங்கும் வெட்டித் தள்ளி, வெட்டித் தள்ளிப் பெரும் அதிர்ச்சியை உண்டாக்கினார்கள். "நீதான் திருடினாய், நீதான் திருடினாய்!" என்று

எங்கேயும் எல்லோரையும் குற்றம்சாட்டி அதட்டி, இம்சை செய்து வந்தார்கள். எங்கு தேடியும் அகப்படவில்லை. இதை அரசனிடம் சொன்னார்கள். துயரப்பட்ட அரசன், "நீங்கள் பூமியைப் பிளந்து பாதாளம் புகுந்து பாருங்கள்" என்று உத்தரவிட்டான்.

தந்தை சொற்படி சகர குமாரர்கள் பூமியைத் தோண்டிப் பாதாளம் புகுந்து, பூமியைத் தாங்கி நின்ற யானைகளை நமஸ்கரித்துவிட்டு, யாகக் குதிரையைத் தேடிச் சென்றார்கள். அங்கே வடகிழக்கு மூலையில் ஓரிடத்தில் தங்கள் குதிரையைக் கண்டார்கள்.

மகாவிஷ்ணுவாகிய கபிலர் அங்கே யோகத்திலிருந்தார். பக்கத்தில் யாகக்குதிரை தன் பாட்டுக்குப் புல் மேய்ந்து கொண்டிருந்தது. இதைக்கண்டதும் சகர புத்திரர்கள், "இதோ திருடன்! குதிரையைத் திருடிவிட்டுத் தவவேஷம் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கிறான்" என்று கோபாவேசமாய்க் கபிலர் மேல் பாய்ந்தார்கள்.

யோகத்திலிருந்த கபில முனிவர், கண்களைத் திறந்து "ஹூம்" என்று மூச்செறிந்தார். ராஜபுத்திரர்கள் அறுபதினாயிரம் பேரும் அங்கேயே சாம்பற் குவியலாய்ப் போனார்கள். இந்திரன் குதிரையைக் கொண்டுபோய் பாதாளத்தில் ஒளித்து வைத்திருந்ததின் பயனாக, இவ்விதம் சகர புத்திரர்கள் சாபமடைந்து சாம்பலானார்கள்.

## 12. பகீரதன்

யாகக் குதிரையைத் தேடிச்சென்ற தன் குமாரர்கள் திரும்பி வரவில்லையே என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்த அரசன், சில நாட்கள் கழித்துப் பேரன் அம்சுமானை அழைத்து "பாதாளம் போன குமாரர்களுக்கு என்ன நேர்ந்ததோ தெரியவில்லை. நீ வீரன் அல்லவா? ஆயுத பாணியாகச்

சென்று பார்த்துவிட்டு வருவாய், வெற்றியோடு வருவாய்!" என்று அம்சுமானை ஆசீர்வதித்து அனுப்பினான்.

அம்சுமான் தன் சிறிய தகப்பன்மார், சகரகுமாரர்கள் பூமியைத் தோண்டிக் கொண்டுபோன வழியைப் பிடித்துச் சென்றான். திக்கு கஜங்களைக் கண்டபோது, அவற்றை வணங்கிப் பூஜித்துத் தன் காரியத்தைச் சொல்லிக் கொண்டான். அந்த யானைகளும், "நீ காரிய சித்தியடைவாய்" என்று ராஜகுமாரனை ஆசீர்வதித்தும் தைரியப்படுத்தியும் அனுப்பி வைத்தன. அதன் பேரில் தாமதமின்றி உற்சாகமாகச் சென்றான்.

பாதாளத்தில் எல்லாப் பக்கங்களும் சுற்றிப் பார்த்தான். ஓர் இடத்தில் பெரியதொரு சாம்பற் குவியலையும் பக்கத்தில் யாகக் குதிரையையும் கண்டு திருப்தியும் திகைப்பும் அடைந்தான்.

சகர ராஜாவின் பத்தினி சுமதியின் சகோதரனாகிய கருடபகவான், அங்கே தற்செயலாக வந்தவன், அம்சுமானை நோக்கி, "திகைக்காதே! இந்தச் சாம்பற் குவியலே உன் பித்ருக்களான சகர குமாரர்களின் மிச்சம். கபில தேவரால் சபிக்கப்பட்டுச் சாம்பலானார்கள். அன்புக்குரிய குழந்தாய்! குதிரையைப் பிடித்துச் சென்று யாகத்தை முடித்துக் கொள்ளுங்கள். சபிக்கப்பட்ட ராஜகுமாரர்கள் நற்கதியடைய வேண்டுமானால் தேவலோகத்துக் கங்கையை இங்கே வரவழைத்துச் சாம்பலைக் கரைக்க வேண்டும்" என்றார் கருடபகவான்.

குதிரையுடன் அம்சுமான் வேகமாகத் திரும்பிப் போய் பாட்டன் மகாராஜாவிடம் விஷயத்தைச் சொன்னான்.

தன் புத்திரர்களுடைய கதியைக்கேட்டு அரசன் துயரக் கடலில் மூழ்கினான். குதிரை திரும்பி வந்தபடியால், யாகத்தைக் கிரமமாக முடித்துவிட்டு, குமாரர்களின் கதியைப்

பற்றியும் கங்கையைப் பற்றியும் யோசித்தான். யோசித்து யோசித்து, இன்னது செய்வது என்று தோன்றாமல், அந்தத் துயரத்திலேயே உயிர் நீத்தான்.

முப்பதினாயிரம் ஆண்டு வாழ்ந்து சகரன் இறந்தான் என்று ராமாயணத்தில் சொல்லப்படுகிறது. ராமாயணத்தில் முப்பதினாயிரம் அறுபதினாயிரம் என்கிற பெரிய எண்களைப் படித்து நாம் திகைக்க வேண்டியதில்லை. முப்பது "வருஷ சஹஸ்ரம்" என்றால், அநேக வருஷங்கள் என்றோ, அல்லது முப்பது வருஷமாகவேயும் வைத்துக்கொள்ளலாம். 'சஹஸ்ரம்' என்பதை "வருஷம்" என்பதற்கு ஒரு மங்கள அடைமொழியாக வைத்துக் கொள்ளலாம். 'ஷஷ்டி சஹஸ்ர மக்கள்' என்றால் அறுபது மக்களாகவே வைத்துக் கொள்ளலாம்.

சகரனுக்குப் பிறகு அம்சுமானும், அம்சுமானுக்குப் பிறகு. திலீபனும் திலீபனுக்குப் பிறகு பகீரதனும் அயோத்தியில் அரசாண்டார்கள். அம்சுமானும் திலீபனும் தங்கள் மூதாதையர்களுடைய நற்கதிக்கு வேண்டியதைச் செய்ய முடியவில்லையே என்று எண்ணி எண்ணி, மற்ற எல்லா விதத்திலும் சம்பத்தும் புகழும் அமைந்திருந்தாலும், அந்தப் பெருங்குறையின் காரணமாகத் தலைமுறை தலைமுறையாகத் துக்கப்பட்டுக்கொண்டே காலகதியடைந்தார்கள்.

திலீபனுக்குப் பின் அவன் குமாரன் பகீரதன் அயோத்தியாதிபதியானான். அவன் மகாதீரன். பகீரதனுக்கு மக்கட்பேறு வாய்க்கவில்லை. அதைக் கருதியும், கங்கையைக் கொண்டு வருவதற்காகவும் ராஜ்யத்தை மந்திரிகள் வசம் ஒப்பித்துவிட்டுக் கோகர்ணத்தில் நீண்ட தவம் புரியப் போனான். நான்கு பக்கங்களிலும் தீ மூட்டி, தலை மேலே வெயிலும் காய, மாதம் ஒருமுறையே ஆகாரம் உண்டு பல்லாண்டுகள் உக்கிரமான தவம் புரிந்தான். விடா முயற்சிக்கு ஒரு பெயரே ஆயிற்று பகீரதனுடைய நாமம்.

'பகீரதப் பிரயத்தனம்' என்று வழக்கத்திலிருக்கும் சொல் தொடரை எல்லாரும் அறிவார்கள்.

பிரஜாபதி பிரம்மா பகீரதனுடைய தவத்தை அங்கீகரித்து, அவனுக்குத் தரிசனம் தந்து "என்ன வேண்டும்" என்று கேட்டார். பகீரதன் தன் இரண்டு விருப்பத்தையும் தெரிவித்தான். "என்பேரில் தாங்கள் இரக்கங்கொண்டால், எங்கள் குலம் அறுபட்டுப் போகாமல் எனக்குப் புத்திரப் பேறு தரவேண்டும். என் மூதாதையர்கள் சாபத்துக்கு இரையாகி, ஜலக்கிரியை இல்லாமல் சாம்பலாகப் பாதாளத்தில் கிடப்பதைக் கங்காஜலத்தில் கரைத்து, நீர்க்கடன் செய்து முடித்து- அவர்களைச் சுவர்க்கம் சேரச் செய்ய வேண்டும். அதற்காகக் கங்கை கீழே இறங்கி எங்கள் குலத்தின் பெருந்துயரத்தை நீக்கவேண்டும். இதுவே நான் கோரும் வரம்" என்று பகீரதன் பிரம்மாவை மிக வணக்கமாகப் பிரார்த்தித்தான்.

"உன் தவம் தேவர்களுக்குத் திருப்தி தந்தது. உன் இஷ்டங்கள் நிறைவேறும். ஆனால் ஒன்று; ஹிமவானுடைய மூத்த புத்திரியான கங்கை கீழே இறங்கினால், அந்த வேகத்தை இந்தப் பூமி தாங்காதே! அதைத் தாங்கக் கூடியவன் உமாபதி ஒருவனே. அவனைக் குறித்துத் தவஞ் செய்வாய்" என்று சொல்லி, உடன் வந்த தேவகணங்களுடன் பிரம்மா மறைந்தார்!

மறுபடியும் பகீரதன் நீண்ட காலம் அன்ன ஆகாரமின்றிக் கடுந்தவம் செய்து, உமாபதியின் அருளைப் பெற்றான். பரமசிவன் பிரத்தியக்ஷ தரிசனம் தந்து, "உன் விருப்பத்தை நிறைவேற்றுவேன். மலைராஜன் மகளாகிய கங்கை இறங்கும்போது, என் தலையில் அவளைத் தாங்குவேன். அவள் உனக்கு அருள்வாளாக" என்றார்.

பரமேஸ்வரன் பகீரதனுக்கு இந்த வரத்தைத் தந்ததும், பிரம்மா சொல்லியிருந்தபடி கங்காதேவி இறங்கினாள். தன் முழு வேகத்துடன், ஆகாயத்திலிருந்து கீழே மகாதேவனுடைய சிரசின் மேல் வீழ்ந்தாள். தன்னுடைய

அபாரவேகத்தால் சங்கரனையும் தள்ளிக்கொண்டு, நேராகப் பாதாளம் போவேன் என்று அவள் எண்ணினாள். அவளுடைய கர்வத்தையடக்க வேண்டும் என்று முக்கண்ணன் உத்தேசித்தார். அதன்படி, நினைத்த மாத்திரத்தில் தலையில் இறங்கிய பவித்திர ஜலப் பிரவாகம் அவருடைய பெருஞ்சடையில் அகப்பட்டுக்கொண்டு, வெளியில் வர முடியாமல் நின்றுவிட்டது.

எவ்வளவோ முயன்று பார்த்தாள். ஆயினும் இமய மலைச் சொரூபரான மகாதேவருடைய சடையில் குகைக ளினின்று வெளிப்பட்டு வந்து பூமியில் இறங்கமுடியாமல் திகைத்துப்போனாள்.

கங்கைக்காகத் தவமிருந்து சித்தி அடைந்த பகீரதன் "ஐயோ! இப்படியாயிற்றே! ஜலப்பிரவாகமெல்லாம் எங்கே போயிற்று?" என்று நினைத்து மறுபடியும் மகாதேவனை நோக்கித் தவம் செய்தான்.

மகாதேவன் அவனுக்கிரங்கி பிந்து ஸரஸில் கங்கையை மெதுவாக விட்டார். அங்கிருந்து ஏழு சிறு ஆறுகளாக மிக அடக்கத்துடன் கங்காதேவி வெளிப்பட்டாள். மூன்று ஆறுகள் கிழக்கு முகமாகவும், மூன்று ஆறுகள் மேற்கு முகமாகவும் சென்றன. ஏழாவது ஆறு பகீரதன் பின்னால் சென்றது. பகீரதன் மகிழ்ச்சிப் பரவசமானான். தலைமுறை தலைமுறையாகக் காத்திருந்த தன் மூதாதைகளுக்கு நற்கதியுண்டாயிற்று என்று அவன் மனம் பூரித்தது. வெற்றித் தேர்ஏறி முன் சென்றான். கங்கை ஆறு அவனைத் தொட ர்ந்து துள்ளிக் குதித்துப் பெரும் பிரவாகமாகிச் சென்றது. ஜலத்துடன் பல ஜல ஜந்துக்களும், பறவைகளும் விளையாடிக் கொண்டு செல்ல, மின்னல் பாய்வதுபோல் விளங்கிற்று. அந்த மகத்தான காட்சியைக் காண, தேவகந்தர்வர் கூட்டம் ஆகாயத்தில் கூடிற்று. நதியின் கதியும் சில இடங்களில் மெதுவாகவும், சில இடங்களில் மகா வேகமாகவும், சில இடங்களில் மேலே குதித்தெழுந்தும், கங்காதேவி மனத்தைக்

கவரும் கதிகளுடன் பகீரதன் தேரைப் பின்பற்றி நர்த்தனம் செய்துகொண்டு சென்றாள். ஆகாயத்தில் தேவகந்தர்வர் கூட்டங்களும் நதியின் கூடவே சென்றன.

இப்படிச் சென்ற புண்ணிய நதியானது, வழியில் ஓர் இடத்தில் ஜன்ஹுரிஷியினுடைய யாகவேதியைக் கலைத்துச் சேதம் செய்தது. ஒதுங்கிப் போகாமல் இப்படிச் செய்தாளே என்று ரிஷியானவர், நதியை அப்படியே கையில் எடுத்து உறிஞ்சி ஆசமனம் செய்துவிட்டார். கங்கை முற்றிலும் மறைந்து ஒழிந்து போயிற்று.

மறுபடியும் பகீரதன், 'ஐயோ!' என்று திகைத்தான். ஆனால் தேவரிஷி கணங்கள் ரிஷியை வணங்கி, கங்கையின் அபராதத்தை மன்னித்து, பகீரதனுடைய தவத்தைப் பயனடையச் செய்யவேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். ரிஷியும் அங்கீகரித்து நதியைத் தமது வலது காதின் வழியாக வெளிப்படுத்தி, மேலே போகவிட்டார்.

"ரிஷியின் உடலிலிருந்து வெளிப்பட்டு ரிஷியின் பெண்ணே ஆனாய். ஜான்ஹவி என்ற பெயரும் பெறுவாய்" என்று தேவர்கள் மகிழ்ச்சியுடன் ஆசீர்வதித்தார்கள்.

பிறகு யாதொரு இடையூறுமில்லாமல் கங்கை சாகரம் சேர்ந்தாள். அங்கிருந்து பாதாளம் புகுந்து, சகர புத்திரர்கள் எரிந்து சாம்பலான இடத்தைச் சேர்ந்தாள். பகீரதனும் தன் மூதாதையர்களுக்கு நீர்க்கடன் செய்து முடித்து, அவர்களை உத்தமலோகம் அடையச் செய்தான்.

பகீரதன் தன் தளரா முயற்சியால் பூமிக்குக் கொண்டு வந்த புண்ணிய நதிக்கு பாகீரதி என்று பெயர் வழங்கலாயிற்று.

விசுவாமித்திரர், "உன் முன்னோர்களாகிய சகர குமாரர்கள் வெட்டிய சாகர சரித்திரமும், பகீரதன் தவத்தின் பயனாக ஆகாய கங்கை பூமிக்கு இறங்கிய சரித்திரமும் கேட்டாய். உனக்கு மங்களமாகும். மாலை ஆயிற்று. உன் மூதாதை

பூஉலகத்துக்குத் தந்த கங்கையில் இறங்கி சந்தியா வந்தனம் செய்வோம்" என்று ராமச்சந்திரனுக்குச் சொல்லி முடித்தார்.

கங்கைக்குப் போய் ஸ்நானம் செய்தாலும், அல்லது இந்தப் புண்ணியக் கதையைப் பக்தியுடன் படித்தாலும், படிக்கச் சொல்லிக் கேட்டாலும் பாவங்கள் தீர்ந்து சுத்த உள்ளத்தையடைந்து, நல்ல சீலமும், எடுத்த காரியத்தில் தளரா முயற்சியும் அடைவார்கள். இது வால்மீகி முனிவருடைய பலச்ருதி.

## 13. அகலிகை

எல்லாரும் விசால நகரத்தில் ஒரு நாள் தங்கி, அடுத்த நாள் விடியற்காலை மிதிலை நோக்கிச் சென்றார்கள்.

ஜனகராஜனுடைய நகரத்துக்குக் கொஞ்ச தூரம் இருக்க, மிக ரம்மியமான ஓர் ஆசிரமத்தைக் கண்டார்கள். ராமன், "முனிவர் யாரும் இல்லாததாகக் காணப்படும் இந்தப் புராதன ஆசிரமம் யாருடையது? ஏன் இந்த அழகான ஆசிரமம் வாசம் இல்லாமல் கிடக்கிறது?" என்று வினவினான்.

முனிவர் சொன்னார்: "இதை நீ தெரிந்து கொள்வது அவசியம். இந்த ஆசிரமம் ஒரு சாபத்துக்கு உட்பட்டிருக்கிறது. இது கௌதம மஹா முனிவருடைய ஆசிரமம். முன்னால் அவர் இங்கே இருந்து வந்தார்.

"நீண்ட காலம் அவரும் அவர் மனைவி அகலிகையும் இங்கே இருந்து வந்தார்கள். இடையூறின்றி அவர்களுடைய தவமும் நடந்து வந்தது. ஒரு நாள் இந்திரன் சமயம் பார்த்து, ஆசிரமத்தில் முனிவர் இல்லாத காலத்தில், கௌதமருடைய உருவத்தையும் முனி வேஷத்தையும் தரித்துக் கொண்டு ஆசிரமத்துக்குள் புகுந்தான். அகலிகையின் உலகப் பிரசித்தமான அழகை நினைத்து, அவளையடையும் கெட்ட

எண்ணத்துடன் வந்தான். இவ்வாறு திருட்டுத்தனமாக வந்த தேவராஜன், அகல்யா தேவியைப் பார்த்து, "அழகியே! எனக்கு ஆசை மேலிட்டிருக்கிறது. இந்த நிலையில் காலப் பொருத்தம் பார்க்கலாகாது. நாம் கூடுவோம்" என்று முனிவர் சொல்வதுபோல் சொன்னான்.

"ரிஷியின் மனைவி உடனே விஷயத்தைத் தெரிந்து கொண்டுவிட்டாள். இவன் தன் புருஷன் இல்லை. இந்திரன் என்பது அவளுக்குத் தெரிந்துவிட்டது. ஆயினும், தேவ ராஜனே தன்னைத் தேடிவந்தான் என்று தன் அழகைப் பற்றிக் கர்வப்பட்டு மனநிலை இழந்து விட்டாள். தேவ ராஜனுடைய விருப்பத்துக்கு உடன்பட்டு விட்டாள்.

பிறகு, "தேவராஜனே! சீக்கிரம் புறப்பட்டுப் போ. பெரும் அபாயத்தினின்று எப்படியாவது காப்பாற்றிக் கொள்" என்று எச்சரித்தாள். இந்திரனும், 'உனக்கு நன்றி' என்று சொல்லிவிட்டு, வேகமாகத் திரும்பிப் போனான்.

"வெளியில் சென்றிருந்த கௌதமர், ஸ்நானம் ஜபங்கள் முடித்துக்கொண்டு ஆசிரமத்துக்கு வந்து கொண்டிருந்தார். தேவதானவர்களும் பயப்படும்படியான தபோபலம் அடைந்த முனிவர், ஸ்நானம் செய்து ஈரத்துணியோடு முகத்தில் அக்னிபகவானைப் போல் காந்தி ஜொலிக்க, அன்று ஓமத்துக்கு வேண்டிய தர்ப்பையும் ஸமித்துக்களும் கையில் எடுத்துக்கொண்டு வந்தார். அவரைக் கண்டதும் அதுவரை மிகத் தைரியமாக இருந்த இந்திரன், மிக நடுங்கினான். முகம் வாடி அவர் எதிரில் வணங்கி நின்றான். "மூடனே! என் வேஷத்தைத் தரித்துக் கொண்டு ஆசிரமத்துக்குள் புகுந்து தகாததைச் செய்தாய்! நீ நபும்சகனாய் போவாய்!" என்று கோபம் மேலிட்டுச் சொன்னார்.

"சினங்கொண்ட முனிவர் இவ்வாறு சொன்ன அக் கணமே, இந்திரன் தன் ஆண்மை அங்கத்தை இழந்தான். தேவர்கள் பரிதவித்தார்கள்.

"முனிவர் தம் மனைவிக்கும் பிராயச்சித்தம் விதித்தார். "அகலிகையே, நீ இங்கே நீண்டகாலம் காற்றே உணவாக, ஏதொரு ஆகாரமுமின்றிச் சாம்பல்மேல் படுத்து, யார் கண் ணுக்கும் தென்படாமல் மறைந்து வசிப்பாயாக. பல காலம் கழித்து இவ்விடம் தசரதன் மகன், ஒருநாள் வருவான். அந்த வீரன் இந்த ஆசிரமத்தில் கால் வைக்கும்போது உன் பாபம் நீங்கும். நீ அவனை அதிதியாக வரவேற்று உபசரிப்பாய். அப்போது உன்னுடைய இயற்கைக் குணத்தையும் காந்தி யையும் மறுபடியும் அடைந்து என்னுடன் வாழ்வாய்."

"இவ்வாறு சொல்லிவிட்டுக் கௌதமர் நெறி தவறிய மனைவியை விட்டு விலகி, இமயமலை சென்றுவிட்டார். அங்கே தவமிருக்கிறார்.

"ஆசிரமத்துக்குள் நாம் செல்வோம். திக்கற்ற இந்த அகலிகைக்கு முனிவர் சொல்லியபடி நீ விமோசனம் தருவாய் என்றார்" விசுவாமித்திர முனிவர்.

அவ்வாறே ஆசிரமத்துக்குள் சென்றனர். ராமன் உள்ளே கால் வைத்ததும், அகலிகையின் பாவம் தீர்ந்தது. பாவம் தீர்ந்து காந்தியுடன் விளங்கிய அகலிகையைக் கண் டான் ராமன். அகலிகை உலகத்திலுள்ள எல்லா ஸ்திரீ களுடைய அழகையும் ஒன்று சேர்த்து, பிரம்மாவால் ஆக்கப் பட்ட தனி அழகை அடைந்தவள். இலைகளிலும் கொடிக ளிலும் மறைந்து யாருக்கும் தென்படாமல் பல்லாண்டுகள் விரதம் காத்து வந்த அவள், அன்று, பனியால் மூடப்பட்ட சந்திரனைப் போலும், புகையால் மறைக்கப்பட்ட அக்கினி ஜ்வாலையைப் போலும், அசையும் ஜலத்தில் காணப்படும் சூரிய பிம்பம்போலும் ராமன் ஆசிரமத்திற்குள் சென்ற பொழுது காணப்பட்டாள்.

ராமனும் லக்ஷ்மணனும் முனி பத்தினியின் பாதங் களைத் தொட்டு நமஸ்கரித்தார்கள். நெடுங்காலம் காத்

திருந்த அகலிகை, தன்னுடைய விமோசன காலம் வந்து விட்டதென்று மகிழ்ந்து, சக்கரவர்த்தித் திருமகனுக்கு அர்க்கியம் பாத்தியம் முதலியன தந்து உபசாரம் செய்தாள். ராமனும் அங்கீகரித்தான். ஆகாயத்திலிருந்து புஷ்பமாரி பெய்ய அவளுடைய கொடிய பாவம் தீர்ந்து, தேவகன்னிகை போல் பிரகாசித்தாள். கௌதமரும் அச்சமயம் அங்கே வந்து சேர்ந்தார்.

இது வால்மீகி ராமாயணத்தில் உள்ள அகலிகை கதை. மற்ற புராணங்களிலும் கதைகளிலும் சில விஷயங்கள் பேசப்பட்டு வழங்கி வருகின்றன. அதனால் குழப்பம் வேண்டியதில்லை.

இவ்விடத்தில் கொஞ்சம் நின்று, ராமாயணம், பாரதம் முதலிய புராணங்களைப் படிக்கும் இக்காலத்தவர்களுக்குப் பொதுவாகச் சில வார்த்தைகள்.

புராணங்களில் தேவர்களும் ராக்ஷசர்களும் அடிக்கடி வருவார்கள். ராக்ஷசர்கள் என்பவர்கள் அதருமத்துக்குக் கொஞ்சமும் பயப்படாத துஷ்டர்கள் குலம். சர்வ சாதாரணமாகத் தீய காரியங்களைச் செய்வார்கள்.

இரக்கமென்(று) ஒருபொருள்
இல்லாத நெஞ்சினர்
அரக்கர் என்று உளர்பலர்
அறத்தின் நீங்கினார்

என்று கம்பர் விளக்கியிருக்கும் கூட்டம் அசுரர்களும் ராக்ஷசர்களைப் போன்றவர்களே.

ராக்ஷசர்களிலுங்கூட ஒருசில அறிவாளிகளும் நல்லவர்களும் இருந்தார்கள். எந்த நல்ல குலத்திலும் சில தீயவர்கள் உண்டாவார்கள். அப்படியே எந்தக் கெட்ட குலத்திலும் சில சமயம் நல்லவர்களும் இருப்பதுண்டு. ஆனால் மொத்தத்தில் ராக்ஷசர்களும் அசுரர்களும் கம்பர் சொல்

லியிருக்கிறபடி தீய கருமங்களிலேயே ஈடுபட்டுச் சந்தோஷப் பட்ட கூட்டம். அவர்களைத் தமிழர்கள் என்றும் தம் முன்னோர்கள் என்றும் சிலர் இக்காலத்தில் அறிவீனமாக எண்ணியும் பேசியும் வருவது பரிதாபம். எந்தப் பழைய தமிழ் நூலிலாவது சரித்திரத்திலாவது தனிப்பாட்டிலாவது கிரா மப்பாட்டிலாவது இப்படிச் சொன்னதில்லை. தமிழர்களுக்கு "நீங்கள்தான் புராணத்தில் அரக்கர் என்று சொல்லப் பட்டவர்கள்" என்கிற புதுப்பட்டம் அளிப்பதற்குப் பழைய தமிழ் நூல்களில் ஆதாரம் எங்கும் கிடையாது.

தேவர்கள் என்கிற கூட்டம் சாதாரணமாக அதர் மத்துக்கு அஞ்சும் சுபாவம் கொண்ட கூட்டம். ராக்ஷசர்களை ஒழிப்பதே தேவர்களுடைய வேலையாக இருந்தது. இந்தக் காரியத்தில் புராணங்களின்படி சில சமயம் தருமத்துக்கு விரோதமான முறைகளிலும் தேவர்கள் இறங்கியதும் உண்டு. இதற்குக் காரணம் ராக்ஷசர்கள் தவம் செய்து பெற்ற வரங்களேயாகும். தவம் செய்து பெற்றுவிட்ட வரங்களின் பலத்தினால் உலகத்தைத் துன்புறுத்தும் அசுரர்களைத் தேவர்களால் எதிர்க்க முடியாமற் போகும். அச்சமயங்களில் தேவர்களும் ஏதோ வழி தேடி, முறை தவறியும் நடக்க வேண்டியதாகும். ஆனால், மொத்தத்தில் தேவர்கள் நல்ல சுபாவம் கொண்டவர்கள். அவர்களிலும் பலர் தீய காரியங் களைச் செய்து, அதனால் கஷ்டமும் படுவார்கள். அப்படிச் செய்த அதர்மங்களின் பயனைத் தேவர்களும் அனுபவிப் பார்கள். தேவர்களாயிற்றே என்று அவர்களுக்கு வேறு நியதியில்லை. கரும விதிகளுக்கு இவர்களும் உட்பட்டவர் களேயாவர்.

தேவர்கள் மொத்தத்தில் நல்ல வழியில் நிற்பவர் களானபடியால், அவர்களில் யாரேனும் பிழை செய்தால், அந்தப் பிழை இப்போது படிக்கும்போது நம் கருத்தில் பெரும் பிழையாகத் தோன்றும். இது இயற்கை. வெள்ளைத் துணியில் பட்ட கறையானது கண்ணைக் குத்துவதுபோல்.

எப்போதுமே தீய காரியங்களில் ஈடுபட்டிருக்கும் ராக்ஷசர்களுடைய பிழையைப் படிக்கும்போது நமக்கு அவ்வளவு பெரிதாகக் காணப்படாது-கருப்புத் துணியில் பட்ட அழுக்கைப் போல் மறைந்து நிற்கும்.

யோக்கியர்கள் நல்ல வழியிலிருந்து வழுவினால் அது நம்மை மிகவும் புண்படுத்துகிறது. எப்போதுமே தீய எண்ண மும் துஷ்ட காரியமுமாக இருப்பவர்களை, 'ஐயோ!' பாவம் என்று விட்டுவிட்டுத் தருமசங்கடத்தில் சிக்கிக் கொண்டு ஏதேனும் பிழை செய்கிறவர்களை அதிகம் கடுமையாகக் கண் டித்து விமரிசனம் செய்வதும் பேசுவதும் வழக்கம். ஆனால், இது நியாயமாகாது.

புராண கர்த்தாக்களே தேவர்களை அவ்வப்போது அநீதியிலும் பாபத்திலும் சிக்கிக்கொள்ளச் செய்திருப்பதை நாம் ஆராய்ந்து பார்க்க வேண்டும். அதனுள் அடங்கி நிற்கும் பாடத்தைக் கற்கவேண்டும். புராண கர்த்தர்கள் எந்தக் காரணத்தைக்கொண்டு இந்திரன் முதலிய தேவர்களும் சில சமயம் மகா பயங்கர பாபங்களைச் செய்ததாகச் சொல்லி யிருக்கிறார்கள்? தருமசங்கடங்களையும் சிக்கல்களையும் தாமே ஏன் உண்டாக்கிக் கொண்டிருக்கிறார்கள்? இதை யெல்லாம் நாம் ஆராயவேண்டும். இவற்றின் நோக்கம் மக்களுக்கு விவேகமும் அடக்கமும் பயபக்தியும் உண்டாக்கித் தரவே என்பது வெளிப்படை. இல்லாவிடில் முனிவர்கள் தாமாகவே தங்கள் கருத்துக்கும் நோக்கத்துக்கும் முற்றிலும் விரோதமாக நல்லவர்களுக்குச் சங்கடங்களை உண்டாக் கியிருக்க வேண்டிய அவசியமில்லை.

இத்தகைய தரும சங்கட நிகழ்ச்சிகளை வைத்துச் சிலர் மூர்க்கமாகத் தவறான முடிவுகளைக் கட்டிக்கொண்டு சந் தோஷப்படுகிறார்கள். "ராவணன் மிக நல்லவன்; அவனுடைய காரியங்களைப் பற்றி வால்மீகி இல்லாததைச் சொல்லி அவதூறு செய்திருக்கிறார். ராமன் குறிப்பிட்ட ஒரு சம யத்தில் அநீதி செய்தான் அல்லவா? சீதை ஒரு சமயம்

பொய்யே சொல்லிவிட்டாள் அல்லவா?" என்று இவ்வாறு வாதம் செய்து பேசுவதைக் கேட்டிருக்கிறோம்.

எதை எப்படியேனும் எழுதும் அவகாசம் பெற்றிருந்த வால்மீகி முனிவர், ஏன் இவ்வாறு தம் கருத்துக்கே விரோத மாகவும் தம் கதாநாயகனுக்கே இழுக்குத் தரும்படியானது மான நிகழ்ச்சிகளைக் கற்பித்துக்கொண்டு அலையவேண்டும்? முற்றிலும் வால்மீகியே கொடுத்த பாத்திரம் அல்லவா ராமனும் ராவணனும்? ராவணனைப்பற்றி வேறு கதையோ, சரித்திரமோ இருந்ததா? இல்லை. வால்மீகிக்கு முன்னதாக யாரேனும் ஒரு புராணப் பாட்டோ சரித்திரமோ அல்லது கல் சாசனமோ எழுதியிருந்து, அதில் விஷயங்கள் வேறு விதமாக எழுதி வைத்திருப்பதைக் காண்கிறோமா? இல்லை. அப்படி ஏதேனுமிருக்கும் பட்சத்தில் வால்மீகி முனிவரானவர் ராமனுக்கும் சீதைக்கும் தேவர்களுக்கும் பட்சபாதமாக மாற்றியும், விஷயங்களை மூடியும் மறைத்தும் சொல்லி, சமாதனங்களைக் காட்டி நம்மை ஏமாற்றுகிறார் என்று வாதாடலாம்.

ராம கதையைப்பற்றிய விசேஷங்களைப் பெற்றது வால்மீகி நூல் வழியேதான்; வேறு எங்கிருந்தும் அல்ல. தரும சங்கடங்களைக் காட்டுவதும் அந்நூலே. பிழைகளாகத் தோன்றும் நிகழ்ச்சிகளும் அந்நூலிலேதான் கண்டோம். இதற்கெல்லாம் காரணம் என்னவென்று, மூளையில் குழப் பமாவது அசூயையாவது இன்றி ஆழ்ந்து ஆராய்ந்தால்; அவற்றிற்கெல்லாம் சாதாரண மக்களுடைய வாழ்க்கைச் சிக்கல்களின் சித்திரத்தைக் காண்போம். நம்மால் பின்பற்றக்கூடிய நல்ல உபதேசத்தை அவற்றினின்றும் பெறலாம். நாம் உணர்ந்து நடக்கக்கூடிய நெறியைக் கண்டு பயன் அடையலாம்.

எவ்வளவு பெரிய பாபத்தைச் செய்துவிட்டாலும், பச் சாதாபப்பட்டு, தண்டனையைப் பொறுத்துத் தவ மிருந்தால் விடுதலை அடையலாம் என்பது அகலிகை நிகழ்ச்

சியின் பாடம். பாபம் செய்த மற்றவர்களை இகழாமல், அவரவர்கள் தத்தம் உள்ளங்களில் உண்டாகும் தோஷங்களை அகற்றுவதில் முயற்சி செலுத்த வேண்டும். எவ்வளவு சுத்தமான நிலையிலிருந்தாலும் சதா ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்பது பாடம்.

## 14. சீதா கல்யாணம்

மிதிலையில் ஜனக மகாராஜனுடைய யாகத்துக்காகச் சகல ஏற்பாடுகளும் செய்யப்பட்டு, பல்வேறு தேசங்களிலிருந்து ரிஷிகளும் பிராமண சிரேஷ்டர்களும் வந்து சேர்ந்திருந்தார்கள். விசுவாமித்திரருக்கும் ராஜகுமாரர்களுக்கும் தகுந்த விடுதி கட்டப்பட்டு அங்கே அவர்கள் தங்கினார்கள். ஜனகருடைய புரோகிதரான சதானந்தர், விசுவாமித்திர முனிவரை எதிர்கொண்டு உபசரித்தார். பிறகு ஜனகரே நேரில் வந்தார்.

"இந்த வாலிபர்கள் யார்? இவர்களைப் பார்த்தால் தேவலோக வாசிகளைப் போலிருக்கிறார்கள். ஆயுதங்களைத் தரிக்கும் தோரணையைப் பார்த்தால் தேர்ச்சியடைந்த வீரர்களாகக் காணப்படுகிறார்கள். இவர்கள் இருவரும் ஒரே சாயலாகவும் இருக்கிறார்கள். இவர்களைப் பெற்ற மகா பாக்கியவான் யார்?" என்று ஜனகர் கேட்டார்.

விசுவாமித்திர முனிவர், அவர்கள் தசரத சக்கரவர்த்தியின் குமாரர்கள் என்பதையும், தாம் செய்த யாகத்தை அவர்கள் காத்து, அரக்கர்களை அழித்த விவரத்தையும் ஜனக மகாராஜனுக்குத் தெரிவித்தார்.

விருத்தாந்தம் எல்லாம் சொல்லி, "மிதிலையிலுள்ள ருத்திர தனுசைப் பற்றிக் கேள்விப்பட்டு, தாங்கள் அனுமதித்தால் அதைப் பார்க்க வந்திருக்கிறார்கள்" என்று பொருளை அடக்கி முனிவர் சொன்னதும், ஜனகர் அளவில்லாத மகிழ்ச்சி அடைந்தார்.

"வில்லைப் பார்க்க வந்திருக்கிற ராஜகுமாரன் வில்லைப் பார்க்கலாம்! வில்லை வளைத்து நாண் ஏற்றினால், என் மகளையும் பெறுவான். இந்த வில்லைப் பார்த்து அசைக்கவும் முடியாதென்று திரும்பிப்போன ராஜகுலத்தவர்கள் பலர். சரீர சம்பந்தமின்றித் தெய்வீகமாகத் தோன்றிய என் மகள் சீதையைத் தசரதருடைய மகன் அடைந்தானாகில் நான் மகிழ்வேன்" என்றார் ஜனகர்.

வில்லைக் கொண்டுவரும்படியாக ஜனகர் தம் ஆட்களுக்கு உத்தரவிட்டார்.

வில்லானது ஓர் இரும்புப் பெட்டியில் பூஜை பந்தோபஸ்துடன் வைக்கப்பட்டிருந்ததை எட்டுச் சக்கரங்கள் கொண்ட வண்டியில் ஏற்றி, ஆயிரக்கணக்கான ஜனங்கள் சேர்ந்து உற்சவத் தேரை இழுத்து வருவதுபோல் இழுத்து வந்து, சபா மண்டபத்தில் சேர்த்தார்கள்.

"இதோ, நானும் என் முன்னோரும் பூஜித்த மகாதேவனுடைய வில். ராஜகுமாரி சீதையை அடைய இதைப் பல அரசர்கள் வளைத்து, நாண் ஏற்றிப் பார்த்து, முடியாமல் திரும்பிப் போயினர். இதைக் காண விரும்பும் தசரத குமாரனும் பார்க்கலாம்" என்றார் ஜனகர்.

சபையில் இவ்வாறு ஜனகர் சொன்னதும் "ராமச்சந்திரனே! பெட்டியைத் திறந்து, வில்லைப் பார்" என்றார் விசுவாமித்திர முனிவர்.

குருவின் ஆணையைப் பெற்ற ராமன், இரும்புப் பெட்டியைத் திறந்து, வில்லைப் பார்த்துவிட்டு, மிக வினயமாக, "இந்தப் புண்ணிய தனுசை நான் தீண்டலாமா? எடுத்து நாண் ஏற்ற அனுமதி உண்டா?" என்றான்.

ஜனகரும் விசுவாமித்திர முனிவரும், "மங்களம் ஆகுக" என்றார்கள்.

சபையிலிருந்த அனைவரும் கண்களை மூடாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு பூமாலையை எடுப்பதுபோல் அவ் வில்லை விளை யாட்டாக எடுத்தான் ராமன்!

"..... சீதை எனும் பூந்
தோடலர் கொம்பினைச் சூட்டிட நீட்டும்
ஏடவிழ் மாலை இதென்ன எடுத்தான் !"

எடுத்து நிறுத்தித் தன் கால் கட்டைவிரலால் தாக்குக் கொடுத்து, வில்லை வளைத்து நாண் ஏற்றிவிட்டான். பிறகு நாணைப் பிடித்துக் காது வரையில் இழுத்தான்.

தடுத்(து) இமை யாமல் இருந்தவர் தாளில்
மடுத்ததும் நாண்நுதி வைத்ததும் நோக்கார்
கடுப்பினை*யாரும் அறிந்திலர் கையால்
எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்!

நாணை இழுத்த வேகத்தில், வில் வளைந்து திடீர் என்று இடியோசையுடன் முறிந்தது. தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள்.

"என் உயிரைவிடப் பிரியமான சீதையை ராமனுக்குத் தந்தேன்" என்றார் ஜனகர்.

"மிக வேகமாகச் செல்லும் தூதர்களை அயோத்திக்கு அனுப்பித் தசரத மகாராஜனை அழைத்துவர உத்தரவு இடுவீராக" என்றார் விசுவாமித்திர முனிவர்.

அப்படியே தூதர்கள் சென்றார்கள்.

* * *

ஜனக மகாராஜனுடைய தூதர்கள் மூன்று நாட்கள் வெகு வேகமாகப் பிரயாணம் செய்து, அயோத்தி போய்ச் சேர்ந்தார்கள். தேவராஜனைப்போல் சிம்மாசனத்தில் அமர்ந்திருந்த தசரத சக்கரவர்த்தியைக் கண்டு, தூதர்கள் "விசுவாமித்திர முனிவரும் ஜனக மகாராஜாவும் தங்களுக்கு

* கடுப்பு- வேகம்

நற்செய்தி அனுப்பியிருக்கிறார்கள். திருமகன் மிதிலைக்கு வந்தவன், சீதா சுயம்வரத்திற்கு அமைக்கப்பட்டிருந்த பரம சிவனார் வில்லை வளைத்து நாணேற்றி, நாணை இழுத்து வில்லை ஒடித்தே விட்டான். சீதையைத் தங்கள் வீரகுமாரன் ராமச்சந்திரனுக்குக் கொடுத்து விவாஹம் செய்யத் தங்கள் அனுமதியையும், தங்கள் நல் வரவையும் ஜனக மகாராஜா எதிர்பார்க்கிறார். அனைவரும் உள்ளம் பூரித்து மகிழுமாறு தாங்களும் பரிவாரமும் உடனே மிதிலை வர வேண்டும்" என்று கூறினார்கள்.

பயந்து பயந்து ராஜகுமார்களை விசுவாமித்திர முனிவருடன் அனுப்பிய தசரதனுக்கு, இந்த விதமான சந்தோஷச் செய்தி வந்ததும் அவன் பரவசப்பட்டான் என்று சொல்லவும் வேண்டுமா? உடனே மந்திரிகளுக்குச் சொல்லி, எல்லா ஏற்பாடுகளும் செய்து, அடுத்த நாளே தசரதன் பரிவாரங்களுடன் மிதிலைக்குப் புறப்பட்டான்.

தசரதன் சகல பரிவாரங்களுடனும் அரசர்க்குரிய ரத்தினாதி பரிசுகளுடனும் மிதிலை போய்ச் சேர்ந்தான். ஜனகரும் தசரத சக்கரவர்த்தியும் சந்தித்து உபசாரங்கள் முடிந்ததும் "யாகம் சீக்கிரத்தில் முடியும். அது முடிந்தவுடனே இந்த விவாகத்தை நடத்திவிடுவது சிலாக்கியமாக எண்ணுகிறேன்" என்று ஜனக மகாராஜா தசரதனுக்குச் சொல்லிச் சம்மதம் கேட்டார்.

"பெண்ணைக் கொடுப்பவராகிய நீர் அல்லவோ செய்ய வேண்டியதற்கெல்லாம் அதிகாரி! நீர் சொல்லுகிறபடி எல்லாம் நடக்கவேண்டியது" என்றான் தசரதன்.

"இதோ என் மகள் சீதை! மகனே, நீ செல்லும் தரும நெறியில் இவள் உன்னுடன் துணையாகச் செல்வாள், கையைப் பிடித்துப் பெற்றுக் கொள்வாய். மங்களம் ஆகுக. கற்பைக் காத்து மிக பாக்கியவதியாக உன் நிழலைப்போல் உன்னைப் பற்றி நிற்பாள். எப்போதும் விட்டுப் பிரிய மாட்டாள்."

இயம்ஸிதா மம ஸுதா
ஸஹ தர்மசரீ தவ
ப்ரதீச்ச சைனாம் பத்ரம்தே
பாணிமா க்ருண்ணீஷ்வ பாணீநா
பதிவ்ரதா மஹா பாகா
சாயா இவானுகதா ஸதா

வடநாட்டில் எல்லா விவாகங்களிலும் பெண்ணைக் கொடுக்கும்போது, இந்த சீதா கல்யாண மந்திரத்தைச் சொல்லி வருகிறார்கள்.

இவ்வாறு ஜனகர் சீதையை ராமனிடம் ஒப்பித்து விட்டார். சீதையும் சக்கரவர்த்தித் திருமகனும் பழைய பாற் கடல் காதலர்கள் அல்லவோ? பிரிந்தவர்கள் மறுபடியும் ஒன்றுகூடும் பெருமகிழ்ச்சி அடைந்தார்கள்.

## 15. பரசுராமர்

அயோத்தியில் தன்னிடம் ஒப்புவித்த ராஜ குமாரர்களை மிதிலையில் தசரதனிடம் க்ஷேமமாக ஒப்புவித்துவிட்ட விசுவாமித்திர மகாமுனிவர், மங்கள காரியங்கள் முடிந் தவுடன், இரண்டு அரசர்களிடமும் விடைபெற்றுக் கொண்டு இமயமலைக்குச் சென்றார். இராமாவதார சரித்திரத்தில் விசுவாமித்திரருடைய பங்கு இந்த இடத்துடன் முற்றிற்று.

இராம சரித்திரம் என்கிற மகாகோபுரத்திற்கு விசுவாமித்திரர், அஸ்திவாரக் கல் என்றே சொல்லலாம். இதற்குப் பிறகு விசுவாமித்திரைப் பற்றி ராமாயணத்தில் ஒன்றுமில்லை. வால்மீகி ராமாயணத்தில் கவனிக்க வேண்டிய ஒரு விஷயம். ஒரு காண்டத்தில் மிக முக்கியமான பங் கெடுத்துக் கொள்ளும் பாத்திரங்கள் அந்தக் காண்டத்தோடு வெகுவாக மறைந்து போகிறார்கள். பால காண்டத்து விசுவா

மித்திரர் பிறகு காணப்படுவதே இல்லை. அயோத்தியா காண்டத்துக் கைகேயி பிறகு எங்கேயோ பேச்சின்றி மறைந்து போகிறாள். குகனும் அப்படியே. பரதனும் இவ்வாறே. சித்திரகூடத்திலிருந்து திரும்பிப் போனவனை மறுபடி ராமன் அயோத்தி திரும்பும் வரையில் எந்தச் சந்தர்ப்பத்திலும் நாம் காண்பதில்லை. ராமனுடைய பல கஷ்டங்களிலும் கவலைகளிலும் பரதனைக் கவிஞர் நம்முன் கொண்டுவருவதில்லை. சாதாரண நாடகங்களில் வரும் பாத்திரங்களைப் போல், வால்மீகியின் இதிகாசத்திலுள்ள பாத்திரங்கள் கடைசிவரையில் நின்று, அவ்வப்போது தகுந்த சமயங்களில் திரும்பி வந்து, தங்களைக் காட்டிக் கொள்ளுகிறதில்லை. கதாபாத்திரங்களை விமரிசனம் செய்வதில் விசேஷ ரஸம் காணும் நம்முடைய நாவலர்கள் இதைக் கவனத்தில் வைக்கவேண்டும்.

விவாகம் முடிந்ததும் தசரத சக்கரவர்த்தி அயோத்திக்குத் திரும்பினார். அவருடைய பெரும் பரிவாரமும் கூடச் சென்றது.

வழியில் ஓர் இடத்தில் திடீரென்று அபசகுனங்கள் தென்பட்டன. கவலைப்பட்ட தசரதன், காரணம் என்னவென்று வசிஷ்டரைக் கேட்டார்.

"கெட்ட நிமித்தங்கள் உண்மையே. ஆயினும் கெடுதலில்லை. பறவைகளின் குறிகள் அசுபமாக இருந்தாலும் தரையில் நடக்கும் பிராணிகளின் குறிகள் சுபமாகவே இருக்கின்றன. ஆகையினால் பயத்துக்கு காரணமில்லை" என்றார்.

இவ்வாறு வசிஷ்ட மகரிஷியும் தசரத சக்கவர்த்தியும் பேசிக்கொண்டிருக்கையிலேயே பயங்கரமான காற்று வீசிற்று. மரங்கள் ஒடிந்து விழுந்தன. பூமியில் ஒரு பெரிய அதிர்ச்சி உண்டாயிற்று. புழுதி உயரக் கிளம்பிச் சூரியனை மறைத்தது. எட்டுத் திக்குகளும் இருண்டுவிட்டன. எல்லோரும் பயந்து போனார்கள். பிறகு காரணம் கண்டார்கள்.

க்ஷத்திரியர் கூட்டத்துக்கே யமனாக அவதரித்த பரசுராமர் வந்து நின்றார்.

தோளில் வில்லும் கோடரியும் கையில் மின்ன லைப்போல் ஜொலிக்கும் ஓர் அம்புமாகத் திரிபுரம் எரித்த ருத்திரனைப்போலவே, பார்த்தவர்கள் நடுங்க, தலையில் ஜடையுடன் பரசுராமர் விளங்கினார். அவர் முகத்தினின்று காலாக்கினி போலத் தாங்கமுடியாத ஒளி வீசிற்று. தலை முறை தலைமுறையாக க்ஷத்திரியர்களை ஹதம் செய்த ஜம தக்னி குமாரர் பரசுராமர் எங்கே சென்றாலும், பூகம்பமும் பெருங்காற்றும் அவருக்கு முன் செல்லும். க்ஷத்திரியர் குலம் நடுங்கும்.

தசரதனுடைய பரிவாரத்திலிருந்த பிராமணர்கள் தங்க ளுக்குள் பேசிக் கொண்டார்கள். "ஜமதக்னி முனிவருடைய குமாரரான பரசுராமர் தம்முடைய தந்தை ஓர் அரசனால் கொல்லப்பட்ட காரணத்தினால், க்ஷத்திரிய குலத்தையே அழித்துவிடுவதாகப் பிரதிக்ஞை எடுத்து, பிரதிக்ஞைப்படி நூற்றுக்கணக்கான அரசர்களை ஹதம் செய்து சினம் தணிந்ததாக எண்ணினோமே, மறுபடியும் தம் கோர யுத்தத்தை ஆரம்பித்துவிட்டாரா என்ன?" என்று பயந்து தமக்குள் பேசிக்கொண்டார்கள். இவ்வாறு சந்தேகித்துக் கொண்டே, அவருக்கு அர்க்கியம் சமர்ப்பித்து உபச ரித்தார்கள்.

அவர்கள் செய்த உபசாரத்தை அங்கீகரித்துப் பரசு ராமர் ராமச்சந்திரனைப் பார்த்துப் பேசலானார்.

"தசரதன் மகனே! உன் வீரச் செயல்களைப்பற்றி நான் கேள்விப்பட்டேன். ஜனகர் சபையில் பரமசிவனுடைய தனுஸை நீ வளைத்துவிட்டதும் அது ஒடிந்ததும் எல்லாம் நான் கேட்டு, இது எவ்வாறு நடந்தது என்று ஆச்சரி யப்பட்டுத்தான் உன்னைப் பார்க்க வந்தேன். இதோ என்னி டம் இருக்கும் வில், நீ ஒடித்த வில்லுக்குச் சமமானது. என்

தந்தை ஜமதக்னி அடைந்த விஷ்ணு தனுசு இது. இதை வளைத்து நாண் ஏற்றுவாய். பாணமும் தருகிறேன். இதைச் செய்வாயேல் நாமிருவரும் யுத்தம் செய்வோம்" என்றார்.

தசரதன் இதையெல்லாம் பார்த்துப் பெருந் திகிலடைந்தான். மகனை எப்படியாவது இந்தக் கொடிய பரசுராமரிடமிருந்து மீட்டு அவன் உயிரைக் காப்பாற்ற வேண்டுமென்று அடக்கமாகப் பேசினார்.

"நீர் பிராமணர். க்ஷத்திரிய ஜாதியின் பேரில் உமக்கிருந்த கோபமும் இதற்கு முந்தியே தணிந்துவிட்டதல்லவா? பிறகு தவம் செய்யப் புகுந்தீர் அல்லவா? என் குமாரன் சிறுவன். அவனுடனா நீர் யுத்தம் செய்வது? அபயம் தருவீராக. இனி ஆயுதம் எடுப்பதில்லை என்று தேவராஜனிடம் நீர் வாக்குறுதி செய்துவிட்டீர். காசியபருக்கு பூமண்டல ஆதிபத்தியத்தையும் தந்துவிட்டு, மகேந்திர பர்வ தத்தில் தவம் செய்யப் போனீரல்லவா? பிரதிக்ஞை தவறலாமா? ராமனிடத்தில் நாங்கள் எல்லோரும் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறோம். அவனை நீர் ஹதம் செய்துவிட்டால் நாங்களும் கூடவே மடிந்து போவோம்." இவ்வாறு தசரதன் திகிலடைந்து கெஞ்சியதைப் பரசுராமர் கவனிக்கவேயில்லை. அவர் தசரதனைப் பார்க்காமல் ராமச்சந்திரனிடமே பேசிக்கொண்டு போனார்.

"விசுவ கர்மாவால் பூர்வம் இரண்டு சிறந்த வில்கள் செய்யப்பட்டன. இரண்டும் சிறப்பு வாய்ந்தவை. ஒன்று திரிபுரத்தை எரித்த திரியம்பகனுக்குத் தரப்பட்டது. இரண்டாவது வில் திருமாலுக்குத் தரப்பட்டது. அந்த விஷ்ணு தனுசு இது. நீ வளைத்து ஒடித்ததாகச் சொல்லப்படுவது சிவன் வில். இந்த வில்லை வளைக்க முடியுமா, பார்; வளைத்தாயானால் உன் வீரியம் எனக்கு நிச்சயமாகும். அப்போது நாமிருவரும் யுத்தம் செய்வோம்" என்றார்.

இவ்வாறு தனக்குச் சமானம் யாருமில்லை என்று எண்ணி வந்த பரசுராமர் மிக உரத்த குரலில் பேசியதைக்

கேட்ட சக்கரவர்த்தித் திருமகன், மெதுவாகவே, அடக்கமும் கம்பீரமும் கொண்ட குரலில் பதில் சொன்னான்.

"ஜமதக்னி புத்திரரே! தந்தை கொல்லப்பட்ட கோபத்தால் நீர் பழி வாங்கினீர். அதில் நான் குற்றம் காணவில்லை. ஆனால் மற்றவர்களைப்போல் என்னை நீர் அடக்கமுடியாது. தயவுசெய்து வில்லைக் கொடும்" என்று சொல்லி தசரத ராமன் ஜமதக்னி ராமனிடமிருந்து வில்லையும் அம்பையும் வாங்கினான். வில்லை வளைத்து அம்பையும் வைத்து நாணையும் இழுத்தான்.

"பிராமணரே! இப்போது என்ன செய்யச் சொல்கிறீர்? இந்த அம்பு வீணாகாதே?" என்றான் சக்கரவர்த்தித் திருமகன் புன்னகையுடன்.

இரண்டு ராமர்களும் கூடியதைப் பார்க்க, தேவ கந்தர்வ யக்ஷ கணங்கள் ஆகாயத்தில் வந்து நின்றார்கள்.

தசரத ராமன் வில்லை வளைத்ததும் பரசுராமனுடைய தேஜஸானது வாடிவிட்டது. அவருடைய அவதார சக்தி கணத்தில் மறைந்தது.

"உன் பிரபாவத்தைக் கண்டேன். நீ என்னைக் கர்வபங்கம்செய்ததில் எனக்கு வருத்தமில்லை. நீ யார் என்பதை அறிந்தேன். என் தவம் முழுவதும் உனதாகக் கடவது. ஆனால் காசியபரிடம் நான் செய்த பிரதிக்ஞைப்படி அவருக்குக் கொடுத்துவிட்ட பூமியில் நான் இரவில் தங்கக் கூடாது. ஆனபடியால் என் தவவலிமையால் சூரியாஸ்தமனத்துக்கு முன் மகேந்திர மலைக்கும் போய்ச் சேர வேண்டும். அதற்கு மட்டும் அனுமதிப்பாயாக. மற்றபடி உன்கையிலிருக்கும் அம்புக்கு என்னுடைய தவத்தின் பயன் முழுவதும் இரையாகக் கடவது" என்று சொல்லிவிட்டுச் சக்கரவர்த்தித் திருமகனைப் பிரதக்ஷிணம் செய்து வணங்கித் தாம் வந்த வழியே திரும்பினார்.

# 16. சுகவாழ்வு

சக்கரவர்த்தியும் ராஜகுமாரர்களும் திரும்பி வருவதை அறிந்து, அயோத்தி நகரத்தினரின் மகிழ்ச்சி கரைபுரண்டு ஓடிற்று.தசரதனையும் பரிவாரத்தையும் ராஜகுமாரர்களையும், வரவேற்பதற்காக அலங்கரிக்கப்பட்ட அயோத்தி நகரம் தேவலோகத்தைப் போல் ஜொலித்தது.

* * *

ராமனும் சீதையும் மிகவும் சந்தோஷமாக அயோத்தியில் ஒரு குறைவுமின்றிப் பன்னிரண்டு ஆண்டுகள் கழித்தார்கள். ராமன் தன் இதயத்தை அப்படியே சீதைக்கு அர்ப்பணம் செய்துவிட்டான். இருவர்களுக்குமிடையில் வளர்ந்த பிரியமானது, இருவர்களுடைய குணங்களைப் பற்றியதா?- அல்லது இருவர்களுடைய சம அழகைப் பற்றியதா? என்பதைச் சொல்லமுடியாமலிருந்தது. இரண்டும் சேர்ந்தே அவர்களுடைய பரஸ்பர அன்பு இருமடங்காக வளர்ந்து கொண்டு போயிற்று. ராமனுடைய உள்ளமும், சீதையினுடைய உள்ளமும் சம்பாஷணையின்றியே ஒன்றோடொன்று பேசும் என்கிறார் கவி. இவ்வாறு ராமனுடைய பிரியத்தை அனுபவித்த சீதையின் காந்தியானது தேவலோகத்தில் சாக்ஷாத் ஸ்ரீதேவியின் காந்தியைப் போல் பிரகாசித்தது. வெகு நாட்களுக்குப் பிறகு, வனவாசம் ஆரம்பித்த சமயம் மகா தபஸ்வி அனசூயை, ராமன் மேல் சீதை வைத்து வந்த அன்பைப்பற்றிப் பாராட்டிப் பேசியபோது, சீதை சொன்னாள், "ராமர் எல்லா நற்குணங்களையும் அடைந்தவர். அவருடைய அன்பு என் அன்புக்குச் சமமான அன்பு. எந்த நிலையிலும் மாறாத அன்பு. மாசற்ற சிந்தனையும், புலன்களை அடக்கியாளும் சக்தியும் பெற்றவர் அவர். தாயைப்போலும் தகப்பனைப்போலும் என்னைக் காத்து

வருகிற இவரை நான் எப்படிக் காதலிக்காமலிருக்க முடியும்?" என்றாள்.

காதலைப்பற்றி ஆராய்ச்சி செய்கிறவர்களும் விவாகம் செய்துகொண்டு நன்றாக வாழவேண்டும் என்று ஆசைப்படும் யுவர்களும் யுவதிகளும் சீதை அனசூயைக்குச் சொன்ன இந்த வார்த்தைகளைக் கவனிக்க வேண்டும். அவற்றில் பொருள் நிறைந்து கிடக்கிறது. இருவர்களுடைய அன்பும் சமமாக இருக்கவேண்டும். ஒன்று அதிகமாகவும் ஒன்று குறைவாகவும் இருக்கலாகாது. எந்தக் காரணத்தைக் கொண்டும் அன்பு மாறலாகாது. வாழ்க்கையில் பல நிகழ்ச்சிகள் நிகழும். அன்பு ஒன்று போலவேயிருக்க வேண்டும். என்ன நேர்ந்தாலும் அதனால் அன்பானது ஏற்றத் தாழ்வு அடையக்கூடாது. கொண்ட மனைவிக்குப் புருஷன் தாயைப் போலும் தந்தையைப் போலும் இருக்க வேண்டும். இப்படியெல்லாம் இருந்தால் வாழ்க்கையில் மகிழ்ச்சி நிறைந்து தேவியின் அருளைப் பெறுவோம்.

## 17. யுவராஜ்யம்

பன்னிரண்டு ஆண்டுகள் ஆனந்தமாக ராமனும் சீதையும் அயோத்தியில் சுகம் அனுபவித்தார்கள். இனி உலகில் மக்கள் படும் இடையூறுகள், துயரங்கள், கோப தாபங்கள் எல்லாவற்றையுமே பகவானும் ஈசுவரியும் நேராக ஊனுடலில் அனுபவிக்கப் போகிறார்கள். "எந்த அவதாரம் எடுக்கிறேனோ அந்த அவதாரத்துக்குரிய தேகமும் உணர்வுமாகத்தான் என் திருவிளையாடல் நடைபெற்று வரும்" என்பது பகவானே சொல்லிய விளக்கம்.

தன்னுடைய ஊன் உயிர் உணர்வில் மற்ற மக்களைப் போல் துன்பப்பட்டு இமையோர் இடுக்கண் காத்த சக்கர வர்த்தித் திருமகன் யார்? எங்கும் எதிலும் உள்ளும் புறமும் உள்ள லோகநாதனே! இதைப் பெரியோர் அறிவார்கள்

என்று விளக்கிச் சொல்லிக் கவிச்சக்கரவர்த்தி கம்பர் அயோத்தியா காண்டம் ஆரம்பிக்கிறார்.

வானின்(று) இழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பெங்கும்
ஊனும் உயிரும் உணர்வும்போல் உள்ளும் புறத்தும் உளன் என்ப
கூனும் சிறியகோத் தாயும் கொடுமை இழைப்பக் கோல்துறந்து
கானும் கடலும் கடந்திமையோர் இடுக்கண் காத்த கழல்வேந்தை

  

நான்கு புத்திரர்களிடமும் தசரதனுக்கு மிகமிகப் பிரியம். ஆயினும் ராமனிடத்தில் அதிகப் பிரியம் என்றே சொல்லலாம். அந்தப் பிரியத்துக்குத் தகுந்த ராஜலக்ஷணங்களும், பலமும் ராமனிடமிருந்தன. கௌசல்யா தேவியோ, இந்திரனைப் பெற்ற அதிதியைப்போல் ராமனை மகனாக அடைந்து, சொல்லுக்கடங்காத பெருமிதத்தை அனுபவித்து வந்தாள்.

சக்கரவர்த்தித் திருமகனுடைய குணங்களையும் எடுத்துக்காட்டி, வால்மீகி ஸ்லோகம் ஸ்லோகமாக அடுக்கியிருக்கிறார். ராம குணங்களாகிய சமுத்திரத்திலிருந்து எவ்வளவு எடுத்துக் குடித்தாலும் முனிவருக்குத் திருப்தியில்லை. தாமே சொல்லுவதாகவும், தசரதன் கண்டு அனுபவிப்பதாகவும், ஜனங்கள் அவனைப்பற்றிப் புகழ்வதாகவும், இன்னும் இவ்வாறு பல துறைகளிலும், பல இடங்களில் ராமனுடைய குணாதிசயங்களை எடுத்துக் காட்டியிருக்கிறார். எழுத்துச் சிக்கனம் அதிகம். அப்படியாயினும் பக்கம் பக்கமாக நிறைந்து கிடக்கிறது. மக்களுக்கு இருக்க வேண்டிய நற்குணங்கள், லக்ஷணங்கள் இவையனைத்தும் ராமனிடமிருந்தன என்பது முனிவருடைய கருத்து. அந்தக் குணங்களைப் பற்றிப் படித்தும் கேட்டும் மக்கள் மேன்மை அடைவார்கள் என்று கருதி, வால்மீகி ரிஷி ராமனுடைய குணாதிசயங்களை அடிக்கடி மிக விரிவாகப் பாடியிருக்கிறார்.

ராமனுடைய திருமேனியழகு, பராக்கிரமம், உள்ளத்தின் தூய்மை, வாழ்க்கையில் சீலம், இரக்கம், பேச்சினிமை, சாந்தம், நிறைந்த அறிவு இவற்றுடன் அபூர்வதேக பலம், வியாதியற்ற சரீரம், ராஜ்ய பரிபாலனத்துக்குரிய நீதி சாஸ்திரங்களில் பயிற்சி இவைகளையெல்லாம் கண்டு ஜனங்கள், ராமன் எப்போது அரசனாவான் என்று விரும்பி எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள், தசரதன் இதை நன்றாய் அறிந்தான். ஆனபடியால் தன் முதிய வயதைக் கருத்தில் கொண்டு ராமனுக்கு யுவராஜ்ய மகுடாபிஷேகம் செய்து விட்டு, அவனிடம் ராஜ்ய பரிபாலனத்தை ஒப்புவித்துவிட விரும்பினான். இதை ஒரு நாள் மந்திரிகளிடத்தில் சொல்லி ராஜ சபையைக் கூட்டினான்.

ரிஷிகளும் அறிஞர்களும் அயோத்தி நகரத்து வியாபாரத் தலைவர்களும் பல தேசங்களின் அரசர்களும் தசரதன கூட்டிய ராஜசபைக்கு வந்து அவர்களுக்குரிய ஆசனங்களில் உட்கார்ந்தார்கள். கிரமப்படி எல்லோரும் அமர்ந்தபின் தசரதன் எழுந்து பேசினான். துந்துபி நாதம் கொண்ட அவனுடைய குரல், மேக கர்ஜனை போல் கம்பீர பிரதித்துவனியோடு சபா மண்டபத்தில் விம்மியது. தசரதன் முகத்தில் ராஜலக்ஷண காந்தி ஜொலித்தது. அவன் பேச்சு பொருள் செறிந்து, கேட்போர் மனத்தைக் கவர்ந்தது.

"என் முன்னோர்களைப் போலவே நானும், பெற்ற குழந்தையைப் போல இந்த ராஜ்யத்தைப் போற்றி வந்தேன். சோம்பலின்றி மக்களுக்காக உழைத்து வந்தேன். இப்போது என் உடல் மூப்பினால் தளர்ந்து போயிருக்கிறது. என் மூத்த மகனை யுவராஜனாக நியமித்து, ராஜ்யபாரத்தை அவனிடம் ஒப்படைத்துவிட்டு, நான் ஓய்வுபெற விரும்புகிறேன். என் முன்னோர்களின் வழியைப் பின்பற்றி நானும் மிகுதியுள்ள என் வாழ்நாளை வனத்தில் கழிக்கவேண்டுமென்று ஆசைப் படுகிறேன்.

"என் மூத்த மகன் ராமன், ராஜ்ய பாரத்தை என்னைப் போலவே நன்றாகத் தாங்குவான். அதற்கு வேண்டிய எல்லா குணங்களும் அவன் பெற்றிருக்கிறான். ராஜசாஸ்திர நிபுணன். நீதி சாஸ்திரமும் நன்றாக அறிந்தவன். சத்துருக்களின் பலத்தை அடக்கும் வீரமும் சக்தியுமுடையவன். என் பாரத்தை அவன் தோளின் மேல் வைத்துவிட்டு ராஜ்யத்தின் க்ஷேமத்தைப் பற்றி நான் கவலையற்றிருக்க விரும்புகிறேன். சபையிலுள்ள பெரியோர்களும் அரசர்களும் மகாஜனங்களும் அனுமதிப்பார்கள் என்று எதிர்பார்க்கிறேன். என் யோசனை தவறாக இருந்தால் சொல்லுவீர்களாக" என்றான்.

அரசனுடைய பேச்சைக் கேட்டதும் சபையில் மகிழ்ச்சியைக் குறிக்கும் சப்தம் அலையலையாகக் கிளம்பிற்று. ராமனை யுவராஜாவாக்குகிறேன் என்ற பேச்சைக் கேட்டதும், கருமேகத்தைக் கண்ட மயில்கள் நர்த்தனம் செய்து மகிழ்வது போல, "அப்படியே செய்வீர்; அப்படியே செய்வீர்!" என்று சபையில் நான்கு பக்கத்திலிருந்தும் பெரும் குரல் எழுந்தது. அந்தணர்களும், சேனைத் தலைவர்களும், நகரத்துச் சிரேஷ்டர்களும், கிராமங்களிலிருந்து வந்திருந்த ஜனபதத் தலைவர்களும், எல்லோரும் "ராமனுக்கு யுவராஜ அபிஷேகம் செய்து, ராஜ காரியங்களை அவனிடம் ஒப்புவிப்பதை நாங்கள் அனைவரும் விரும்புகிறோம்!" என்று ஏகோபித்து ஆமோதித்தார்கள்.

இதைக் கேட்டு அரசன் மறுபடியும் பேசலானான். "நீங்கள் கொடுத்த அபிப்ராயத்துக்குக் காரணங்கள் காட்டாமல், நான் சொன்னதை அப்படியே ஒப்புக்கொண்டு விட்டதில் எனக்குத் திருப்தியில்லை. பெரியோர்கள் விஷயங்களை விளக்கிப் பேச வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று சொன்னான்.

அப்போது சபையில் பலர் எழுந்து, இராமனுடைய குணாதிசயங்களையும் ராஜ்ய பாரம் தாங்கும் தகுதியையும்

விஸ்தாரமாக எடுத்துக் காட்டினார்கள். அதைக் கேட்கக் கேட்க அரசனுடைய உள்ளம் ஆனந்தத்தில் மூழ்கிற்று. முடிவில், "தாமதம் செய்ய வேண்டாம். உடனே ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்வீர்" என்று ஜனங்கள் யாவரும் ஒருமிக்க நின்று கைகூப்பிக் கேட்டுக் கொண்டார்கள்.

"என் அன்பார்ந்த பிரஜைகளே! நீங்கள் சொல்லுவதைக் கேட்டு நான் எல்லை கடந்த மகிழ்ச்சி அடைந்தேன். அப்படியே செய்வேன். யுவராஜ்ய பட்டாபிஷேகம் மங்கள காரியம் கிரமப்படி நடைபெறும்" என்றான் அரசன்.

* * *

வசிஷ்டர், வாமதேவர் முதலிய பெரியோர்களைப் பார்த்து தசரதன், "இது சித்திரை மாதம், மங்களமான காலம், வனங்களெல்லாம் பூத்து அழகாக விளங்கும் பருவம். அபிஷேகத்துக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் செய்யுங்கள்" என்று சொன்னான்.

இவ்வாறு உத்தரவிட்டதும் ஜனக்கூட்டத்தினிடையே பெரிய சந்தோஷ ஆரவாரம் பொங்கிற்று.

* * *

மன்னனுடைய உத்தரவின்பேரில், அந்தரங்க அமாத்தியனான சுமந்திரன் ராமனை அழைத்துவரச் சென்றான். ராமன் விஷயம் தெரியாதவனாகத் தந்தையின் முன்னால் வந்து நின்றான். பட்டாபிஷேக நிச்சயத்தைப்பற்றி அரசன் சொன்னதைக் கேட்டு, "தங்கள் ஆணைப்படி நடக்க நான் கடமைப்பட்டவன்" என்றான்.

"உனக்கு நான் சொல்ல வேண்டியது ஒன்றுமில்லை. நீ குணவான். ஜனங்கள் எல்லாரும் உன்னை விரும்புகிறார்கள். இனி நீ முன்னைவிட அதிகமான வினயத்துடனும் ஜாக்கிரதையுடனும் நடந்துகொண்டு, எல்லா பாக்கியமும் புகழும்

அடைவாயாக" என்று அரசன் மகனை ஆசீர்வதித்தான். ராமனும் தன் இருப்பிடம் திரும்பினான்.

* * *

மறுபடியும் அரசன் ஏதோ யோசித்தவனாக, "ராமனை அழைத்து வா" என்று சுமந்திரனுக்கு உத்தரவிட்டான். "இதென்ன காரணம்? எதற்காகச் சக்கரவர்த்தி மறுபடியும் என்னை வரச்சொன்னது?" என்று ராமன் கேட்டான்.

"எனக்குக் காரணம் தெரியாது. அரசன் அழைத்து வரச் சொன்னதுதான் எனக்குத் தெரியும்" என்று சொன்னான் சுமந்திரன்.

"யுவராஜ்ய பட்டாபிஷேக விஷயத்தில் மந்திரா லோசனை செய்து உசித அனுசித சந்தேகம் ஏதாவது ஏற்பட்டிருக்கலாம். எப்படியானாலும் சரியே; தான் அவசரப் பட வேண்டியதில்லை" என்பது ராமனுடைய எண்ணம்; ராஜ்யாதிகாரம் உடனே வகிக்க வேண்டும் என்று ராமனுக்கு ஆசை இருக்கவில்லை. அதைக் கடமையாகவே பாவித்தான். அரசன் ஒப்புக் கொள்ளும்படி சொன்னால் சரி; இல்லா விட்டால் வேண்டியதில்லை என்பது அவன் கருத்து.

கம்பர் பாட்டும் இதை எடுத்துக் காட்டுகிறது.

தாதை அப்பரி(சு) உரைசெயத் தாமரைக் கண்ணன்
காதல் உற்றிலன் இகழ்ந்திலன் கடன்இதென்(று) உணர்ந்தும்
யாது கொற்றவன் ஏவிய(து) அதுசெயல் அன்றோ
நீதி எற்(கு) எனநினைத்தும் அப்பணி தலை நின்றான்.

உடனே ராமன் அரசனிருந்த இடம் சென்றான். மகனைக் கட்டியணைத்து ஆசனத்தில் அமரச்செய்து, "ராமனே, எனக்கு வயது அதிகமாகிவிட்டது. எல்லாச் சுகங்களும் நீண்ட ஆயுளும் அனுபவித்துவிட்டேன். செய்ய வேண்டிய தேவ, பித்ரு காரியங்களையெல்லாம் செய்து தீர்த் தேன். இனிச்செய்ய வேண்டியது ஒன்றுமில்லை. உனக்கு

அபிஷேகம் செய்வித்துச் சிம்மாசனத்தில் அமரச் செய்வதைத் தவிர வேறொன்றும் நான் ஆசைப்படவில்லை. நான் நேற்றிரவு கெட்ட சொப்பனங்கள் கண்டேன். தவிர வருங்கால விஷயமறிந்தவர்கள் என்னுடைய ஜாதகத்தின்படி இப்போது எனக்கு மரணமும் பெரிய துக்கமும் சம்பவிக்கலாம் என்கிறார்கள். ஆனபடியால் உன் பட்டாபிஷேகத்தை நாளைய தினமே செய்து முடித்து விடவேண்டும் என்பது என் எண்ணம். நாளைய தினம் புஷ்ய நட்சத்திரம்; நல்ல நாள் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். இந்தக் காரியத்தை உடனே செய்து முடிக்க வேண்டும் என்று என் உள்ளத்தில் ஏதோ என்னைத் தூண்டித் துரிதப்படுத்துகிறது. உடனே நீயும் சீதையும் பட்டாபிஷேகத்துக்காக விரதமிருங்கள். கிரமப்படி இன்று உபவாசமிருந்து, தரையில் படுத்துத் தூங்கி, மங்கள காரியத்துக்கு ஏதொரு இடையூறும் வராதபடி பூஜை செய்வாயாக. பரதன் ஊரிலில்லை. அவன் தன் மாமனுடைய ஊருக்குப் போய் வெகு நாட்களாயின. கேகயதேசம் வெகு தூரத்தில் இருக்கிறது. அவனுக்கு இப்போது சொல்லி அனுப்பி வரவழைக்க அவகாசமில்லை. அவன் வருவதற்காகக் காரியத்தை நிறுத்தி வைப்பதும் உசிதமல்ல" என்றான்.

* * *

தசரதன் பேசிய பேச்சில் கவி நமக்கு இடம் தருகிறார். கைகேயியை விவாகம் செய்துகொண்ட காலத்தில், தசரதன் கேகயனுக்குக் கொடுத்த வாக்கு அவன் நினைவுக்கு வந்து, அது அவனை மனத்தில் வேதனை செய்ததுபோலத் தோன்றுகிறது. பரதன் மிக நல்லவன். அண்ணனிடம் அவன் அளவற்ற அன்பும் பக்தியும் வைத்தவன். ஆனபடியால் கைகேயி விவாக நிபந்தனையை அவன் பொருட்படுத்த மாட்டான். ராமனுடைய பட்டாபிஷேகத்தை அவன் ஆட்சேபிக்கவே

மாட்டான். ஆயினும் மனிதனுடைய மனத்தை நம்பக்கூடாது. நல்லவர்களுடைய புத்தியும் சில சமயம் மாறிப்போகும் என்று தசரதன் பயந்தான்.

"பரதன் அண்ணனைக் குருவாகக் கருதுகிறவன்; தர்மாத்மா; சுத்தமான உள்ளமும் ஆசைகளை அடக்கும் சக்தியும் பெற்றவன். ஆயினும் மனுஷ்யனுடைய சித்தம் எப்போதும் ஒரே விதமாக இருக்காது" என்று தசரதன் ராமனிடம் சொல்லி, மறுநாளே பட்டாபிஷேகம் முடித்து விட வேண்டும். பரதன் வருவதற்காகக் காக்க வேண்டாம் என்று வசிஷ்டருக்கு தெரிவித்துவிட்டான்.

* * *

தந்தையிடம் விடை பெற்றுக்கொண்டு ராமன் கௌசல்யா தேவியின் அந்தப்புரத்துக்குச் சென்றான். பெற்ற தாய்க்கு விஷயத்தைச் சொல்லி ஆசி பெறுவதற்காகச் சென்றான். அதற்கு முன்னதாகவே கௌசல்யைக்கு சமாசாரம் எட்டிவிட்டிருந்தது. சுபத்திரை, சீதை, லக்ஷ்மணன் எல்லாரும் கௌசல்யா தேவியுடன் இருந்தார்கள்.

கௌசல்யா மடிப்பட்டு உடுத்தி, மகனுடைய சுபத்தைக் குறித்து பூஜையில் அமர்ந்தாள்.

தந்தை இட்ட ஆணையைப் பற்றிக் கௌசல்யையிடம் ராமன் சொன்னான்.

"கேள்விப்பட்டேன், மகனே! இது உண்மையென்று நீயும் சொல்லுகிறாய். சிரஞ்சீவியாக இருப்பாயாக, ராஜ்யத்தையும் வகித்து, விரோதிகளை அடக்கி, பிரஜைகளையும் பந்துக்களையும் காப்பாற்றி வருவாய். உன் குணங்களால் பிதாவைத் திருப்தி செய்தாய். அது என்னுடைய பாக்கியம்" என்று சொல்லி மகனை ஆசீர்வதித்தாள்.

ராமன் தன் பக்கத்தில் நின்ற தம்பி லக்ஷ்மணனைப் பார்த்து சிறிது நகைத்து, "லக்ஷ்மணா, என்னோடு சமமாக இருந்து செல்வம் நிறைந்த இந்த நாட்டை நீ ஆள்வாயாக,

என் உடலுக்கு நீ வெளியில் நடமாடும் இரண்டாவது உயிரல்லவா! உனக்காகத்தான் இந்த ராஜ்ய பதவி என்னை அடைந்திருக்கிறது. எனக்குச் சேர்ந்த பாக்கியமெல்லாம் உன்னுடையதுமேயாகும்" என்று சொன்னான்.

ராஜ்யபாரத்தை லக்ஷ்மணனும் சேர்ந்து வகிக்க வேண்டும் என்று கோரியது, அன்பினால் உண்டான பேச்சு. சிறு நகைப்பு, தானாக வந்து சேர்ந்தது. சௌபாக்கியத்தைக் குறித்து உள்ளத்தில் பற்றின்மையினால் உண்டான மெய்ப் பாடு.

பிறகு இரு தாய்மார்களையும் வணங்கி விடைபெற்றுச் சீதையை அழைத்துக்கொண்டு தன் இல்லத்துக்குச் சென் றான்.

அரசன் கட்டளைப்படி வசிஷ்டர், ராமனுடைய இல்லத்துக்கு வந்தார். இதையறிந்ததும் ராமன் வெளியில் சென்று வசிஷ்டரை வணங்கி, வாகனத்திலிருந்து கை கொடுத்து இறக்கி, உள்ளே அழைத்துச் சென்றான்.

வசிஷ்டர் மந்திர பூர்வமாக உபவாச சங்கற்பம் செய் வித்துவிட்டு, அரசனிடம் திரும்பிச்சென்றார். போகும்போது ஜனங்கள் ராஜமார்க்கத்தில் ஆங்காங்கே கும்பல் கும்பலாகக் கூடிப் பட்டாபிஷேக மகோற்சவத்தைப் பற்றிச் சந்தோஷ மாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். நகரவாசிகள் வீடுகளை யெல்லாம் அலங்கரித்துக் கொடிகள் ஏற்றிக் கொண்டிருந் தார்கள். தெருக் கூட்டத்துக்கு இடையில் கஷ்டப்பட்டு வசிஷ்டருடைய தேர் மெல்லச் சென்றது.

வசிஷ்டர் வந்ததும் அரசன் ஆசனத்திலிருந்து இறங்கி அவரைக் கண்டு "செய்யவேண்டிய உபவாச சங்கற்பம் செய்வித்தீர்களா?" என்று கேட்க, "ஆயிற்று" என்று அவர் சொன்னதும் மகிழ்ந்தான். ஏதாவது இடையூறு நேரிடுமோ என்று தசரதனுக்குத் திகில் இருந்து கொண்டேயிருந்தது.

நகரம் மகிழ்ச்சிக் கடலில் மிதந்து கொண்டிருந்தது. அடங்காத உற்சாகம் பெண்களுக்கு, எல்லா வீடுகளிலும் எல்லாத் தெருக்களிலும், தங்களுடைய சொந்த மங்கள நிகழ்ச்சியாகவே ராமனுடைய பட்டாபிஷேகத்தை ஆண் பெண் குழந்தைகள் எல்லாரும் பாவித்து, எல்லை கடந்த குதூகலத்திலிருந்தார்கள்.

மறுநாள் காலையே இந்த மகோற்சவம் நடக்கப் போகிறது என்பது தெரிந்ததும், சந்தோஷமும் பரபரப்பும் இருமடங்காய் விட்டன. சுற்றுப் பக்கத்துப் பிரதேசவாசிகள் எல்லாம் அயோத்திக்குப் பட்டாபிஷேக மகோற்சவத்தைப் பார்க்க வந்து சேர ஆரம்பித்து விட்டார்கள். எங்கு பார்த்தாலும் மங்கள வாத்தியமும் கோஷங்களுமாக இருந்தன.

ராமனும் சீதையும் தங்களுடைய மனையில் நாராயணனைத் தியானித்து ஓமத் தீயில் நெய்விட்டு, எஞ்சிநின்ற நெய்யைத் தேவப் பிரசாதமாகப் பக்தியுடன் அருந்தி, இருவரும் தரையில் புல் பரப்பி அன்றிரவு படுத்தார்கள். அதிகாலையில் மங்கல வாத்தியங்கள் எழுப்ப, இருவரும் எழுந்தார்கள்.

## 18. கைகேயி

ராஜகுல அந்தப்புர வழக்கத்தை அனுசரித்து, கைகேயிக்குத் தோழியும் அந்தரங்க வேலைக்காரியுமாக ஒரு கூனியம்மை எங்கிருந்தோ வந்து சேர்ந்திருந்தாள். எஜமானி கைகேயிக்கு இவள் கொஞ்சம் சொந்தங்கூட. அதனால் நெருங்கிப் பழகும் உரிமையைக் கொண்டாடி வந்தாள். இவள் பெயர் மந்தரை, ராமாயணக் கதையில் மிகப் பிரசித்தி பெற்ற பாத்திரம். நம்நாட்டு மக்கள் அனைவரும், ஆண் பெண் குழந்தைகள் எல்லாரும் வெறுக்கும் பாத்திரம் இவளே. ராமனைக் காட்டுக்கு அனுப்பச் செய்தவள். இவள் என்ன செய்தாள், எப்படிச் செய்தாள் என்பதை விவரமாக இனிப் பார்க்கலாம்.

தசரதன் ராஜ சபையைக் கூட்டி, ராமச்சந்திரனுக்கு நாளைக்கே பட்டாபிஷேகம் செய்துவிட வேண்டும் என்று நிச்சயித்த அந்த நாள், மந்தரை தற்செயலாக அந்தப்புரத்து மேல்மாடி ஏறி, அழகிய உப்பரிகையிலே போய் நின்றாள். உயரத்திலிருந்து நகரத்தைப் பார்த்தாள். தெருவெல்லாம் தண்ணீர் தெளித்து அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. ஜனங்கள் தங்களின் வீடுகளின்மேல் பலவித அழகிய கொடிகள் பறக்க விட்டிருந்தார்கள். ஆடை ஆணிகள் பூண்டு, சந்தனம் பூசி, புஷ்பம் அணிந்து, எங்கே பார்த்தாலும் கூட்டமாக ஜனங்கள் ஏதோ பேசிக்கொண்டு, மிக சந்தோஷமாக இருப்பதைக் கண்டாள். கோயில்களில் எல்லாம் வாத்திய கோஷம். ஏதோ பெரிய மங்கள உற்சவம் நடக்கப் போவதாகத் தெரிந்தது.

மந்தரை, பக்கத்தில் நின்ற அந்தப்புர வேலைக்காரியை பார்த்து "என்ன நீ பட்டு உடுத்தி இருக்கிறாய்! என்ன விசேஷம் ஊரில்? கௌசல்யாதேவி பிராம்மணர்களுக்குத் தக்ஷிணை கொடுத்துக் கொண்டிருக்கிறாள் போலிருக்கிறதே! பணத்தைச் சாதாரணமாக வீண் செலவு செய்யமாட்டாளே! எங்கே பார்த்தாலும் திருவிழா வாத்தியமும் அலங்காரமுமாக இருக்கிறதே! உனக்கு ஏதாவது தெரியுமா?" என்று கேட்டாள்.

"உனக்குத் தெரியாதா? நம் ராமச்சந்திரனுக்கு நாளைக் காலை யுவராஜ பட்டாபிஷேகம்" என்று அந்த வேலைக் காரச் சிறுமி சொன்னாள்.

இதைக் கேட்டதும் மந்தரைக்கு அடங்காத கோபம் மேலிட்டது. மிக வேகமாகக் கீழே இறங்கினாள். நேராகக் கைகேயியின் அறைக்குள் சென்றாள். அப்போது கைகேயி படுத்திருந்தாள்.

"மூடப்பெண்ணே! எழுந்திரு! எழுந்திரு! தலைக்குமேல் பெரிய வெள்ளம் வருகிறது. நீ மோசம் போனாய், மூடப்பெண்ணே, தூங்குகிறாயே!" என்றாள்.

மந்தரையின் துக்கத்தைப் பார்த்து, அவளுக்கு ஏதாவது நேர்ந்து விட்டதோ என்று கைகேயி எண்ணி, "மந்தரை, உனக்கு என்ன துயரம் ஏற்பட்டது? ஏன் இப்படித் துக்கப் படுகிறாய்?" என்று மெதுவாகக் கேட்டாள்.

மிகக் கெட்டிக்காரியான மந்தரை பேச ஆரம்பித்தாள்.

"உனக்கும் எனக்கும் நாசம் வந்துவிட்டது பெண்ணே! ராமனை யுவராஜனாகச் செய்துவிட்டான். இதற்குமேல் எனக்கு என்ன துக்கம் வேண்டும்? உனக்குத் துக்கம் வந்தால் நான் எப்படிச் சும்மா இருக்கமுடியும்! ஓடி வந்தேன். அரச குலத்தில் பிறந்து வளர்ந்தாய். மகாராஜனுடைய வீட்டில் அரசியாகவும் புகுந்தாய். ஐயோ! கெட்டுப் போனாயே! ஒன்றும் அறியாத அப்பாவிப் பெண்ணாயிருக்கிறாய். இனிய மொழிகள் பேசிப் பேசி உன் புருஷன் உன்னை ஏமாற்றியே விட்டான். வஞ்சனைக்காரன், எல்லாம் கௌசல்யைக்குக் கொடுத்துவிட்டு, உன்னைத் தெருவில் திண்டாட விட்டு விட்டான். மோசக்காரன், பரதனை 'மாமன் வீட்டுக்குப் போ' என்று சொல்லி வெகுதூர தேசத்துக்கு அனுப்பிவிட்டு, இங்கே அவசரம் அவசரமாக ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்யப் போகிறான். நாளைக்கே எல்லாம் முடிந்துவிடப் போகிறது. நீயோ எல்லாம் பார்த்துக்கொண்டு சும்மா படுத்துக்கிடக் கிறாய்; நீயும் உன்னை நம்பியிருக்கிற எல்லோரும் அழிந்தீர்கள்."

இப்படி மந்தரை அடுக்கிக்கொண்டே போனாள். கைகேயிக்கு இந்தப் பேச்சு காதில் பட்டதேயொழிய, அதன் பொருளில் கவனம் செல்லவில்லை. அவள் ஒன்றே ஒன்றைத் தான் கவனித்தாள். அதாவது ராமனுக்குப் பட்டாபிஷேக மகோற்சவம் நடக்கப்போகிறது என்பதைத்தான்.

"என் குமாரன் ராமனுக்குப் பட்டாபிஷேகம் என்கிற செய்தியைக் கொண்டுவந்தாய் மந்தரா! இதைவிட என்ன சந்தோஷம் எனக்கு? இந்தா இதைப் பெற்றுக்கொள்!

இன்னும் என்ன வேண்டுமோ, கேள்!" என்று தன் கழுத்தி லிருந்த மாலையை எடுத்து மந்தரைக்குக் கொடுத்தாள். மங்களச் செய்தி கொண்டுவந்தவர்களுக்கு, ஏதாவது பொருள் உடனே தருவது ராஜகுல வழக்கம்.

மந்தரை வீணாகப் பயப்படுகிறாள். அவள் ஒரு வேலைக்காரிதானே! பெரிய வீட்டு விஷயங்களை அவளால் தெரிந்து கொள்ள முடியாது. அவளுடைய மூட பயத்தைப் போக்கி, தைரியம் உண்டாக்க ஆபரணத்தை அவளுக்குத் தந்து, தன் மகிழ்ச்சியை அவளும் அடையச் செய்யலாம் என்று கைகேயி எண்ணினாள்.

கைகேயியினுடைய உள்ளம் எளிதில் கெடவில்லை. நல்ல பண்பாடு பெற்றவள். தாழ்ந்த புத்திக்கு உடனே இடம் கொடுக்கவில்லை. மந்தரைக்கோ இதைக் கண்டு துக்கம் இன்னும் அதிகரித்தது.

கைகேயி தந்த மாலையை அப்படியே வீசி எறிந்து விட்டு மந்தரை, "ஐயோ பைத்தியக்காரி, தலைக்குமேல் வந்தி ருக்கிறது வெள்ளம், மடப்பெண்ணே! நீயோ ஹாஹா என்று சிரித்து மகிழ்கின்றாய். தீராத கஷ்டம் வந்து உன் வாழ்க் கையைக் கவிழ்ப்பதற்கு நிற்கும்போது, நீ கண்ணை மூடிக் கொண்டிருக்கிறாய். உன்னைப் பார்த்து நான் சிரிக்கவா, அழவா? உன் சக்களத்தியானவள் தன் மகன் பட்டத்துக்கு வர ஏற்பாடு செய்துவிட்டாள். நீ இது வெகு மங்களம் என்று கூத்தாடுகிறாய். உன் மதியை நான் என்னென்று சொல்வேன்? ராமன் பட்டம் பெற்றபின், பரதன் இருக்கும் வரையில் தனக்கு என்றைக்குமே அபாயம் என்று ராமன் எண்ணுவான் அல்லவா? இயற்கையின் போக்கு ராமனுக்குத் தெரியும். ஆனபடியால் பரதன் ராமனுக்குப் பகையாகி விட்டான். பயத்தினால்தான் விரோதிகளை அரசர்கள் கொல்லுவது. ராமன் பட்டம் பெற்றபின் பரதனைக் கண்டு அவன் பயப்படுவான். பயத்தினால் அல்லவா பாம்புகளைக் கண்ட வுடன் கொல்லு கிறோம்? பரதன் உயிரைப்பற்றி இனிமேல்

சந்தேகப்பட்டுக் கொண்டே இருக்க வேண்டியதாகும். நாளைப் பொழுது விடிந்ததும் கௌசல்யை பாக்கியவதி யானாள். நீ அவளுக்குத் தாசியானாய். அவள்முன் கைகூப்பி வணங்கி ஒரு வேலைக்காரியாக நிற்பாய். நாளை முதல் உன் மகனுடைய சுதந்திரமும் முடிந்தது. அவன் இனிமேல் ராமனுக்கு ஒரு சாதாரண வேலைக்காரன். நம்முடைய அந்தப்புரத்தில் இனி மானம், சந்தோஷம் என்பது இல்லை" என்று சொல்லித் துக்கத்தினால் மேலே பேசாமல் நிறுத்தி னாள்.

கைகேயி இதையெல்லாம் கேட்டு உண்மையில் வியப்படைந்தாள். "ஏன் இவ்வாறு பயப்படுகிறாள் மந்தரை? ராமனுடைய குணம் இவளுக்குத் தெரியாதா? தருமமே வடிவம் கொண்டவன் அல்லவா அவன்?" என்று எண்ணினாள்.

"மந்தரா! ராமனுடைய சத்தியம், சீலம், அடக்கம் இவற்றை நாம் எல்லோரும் கண்டு மகிழ்ந்தோம் அல்லவா? அவன் மூத்தவன்; ராஜ்யம் அடைகிறான். அவனுக்குப் பிறகு பரதன் அடையப்போகிறான். இதில் என்ன கெட்டுப் போச்சு? ஏன் தோழி நீ வருத்தப்படுகிறாய்? ராமனுக்குப் பிறகு நூறு வருஷம் பரதனும் அரசனாக வாழ்வான். அழாதே, துக்கப்படாதே! ராமன் என்னிடம் எவ்வளவு அன்பாக இருக்கிறான்! தன்னைப் பெற்றவளிடம்கூட அவ்வளவு பிரியம் அவனுக்கு இல்லையே! தன் தம்பி ஒவ்வொருவனையும் அவன் தன் உயிராகவே அல்லவா கருதி வருகிறான்? அவனைப் பற்றி நீ பயப்படுவது சரியே அல்ல" என்று சொல்லி, இயற்கை அன்புடன் கைகேயி மந்தரையின் பயத்தைத் தணிக்கப் பார்த்தாள்.

"ஐயோ, உன் புத்திக்கு நான் என்ன சொல்லுவேன்? ஏன் உன் மூளை இப்படிக் கெட்டுப்போயிற்று? ராமன் அரசனாக அபிஷேகமான பின் பரதனுக்கு ஏது இடம்? ராஜகுல வழக்கம் உனக்குச் கொஞ்சமும் தெரியவேயில்லை. ராமன் சிம்மாசனம் ஏறினால் அத்துடன் பரதனுடைய ராஜ

வாழ்க்கை முடிந்தது. ராமனுக்குப் பிறகு அவனுடைய மூத்தமகன். இப்படித்தான் உரிமை செல்லும். தம்பியைப் பற்றிப் பேச்சே கிடையாது. மூத்த மகன் மூத்த மகனாகவே சங்கிலி கோத்த வரிசைக் கிரமமாகப் போகும். தம்பி எவ்வளவு குணவானாக இருந்தாலும் அவனுக்கு இடமில்லை. இதுவே ராஜகுல வரிசைக்கிரமம். ராமனுக்குப் பட்டா பிஷேகம் செய்து முடித்தபின், உன் மகன் அநாதையாவான். ராஜவம்சத்தில் அவனுக்காவது அவன் மக்களுக்காவது இட மில்லை. இது உனக்குத் தெரியவில்லையே. என் கண்மணி! நான் என்ன செய்வேன்!

"ராமன் பட்டம் பெற்றபின் அவன் பரதனைச் சும்மா விடமாட்டான். பரதன் உயிருக்கும் ஆபத்துண்டாகும். பரதன் உயிரோடு இருக்க நீ வேண்டினாயானால், அவன் மாமன் வீட்டிலிருந்தே எங்கேயாவது போய் மறைந்து க்ஷேமமாக இருக்கட்டும். இங்கே வந்தால் அவனுக்கு ஆபத்தே உண்டாகும். கௌசல்யைக்கு உன்மேல் மிகக் கோபம். அரச னுடைய பிரீதியை நீ சம்பாதித்திருப்பதாக எண்ணி, அவளைப் பல தடவை நீ அலட்சியம் செய்திருக்கிறாய். இப்போது பழி வாங்குவாள் நிச்சயம். சக்களத்தியின் கோபம் மிகப் பொல்லாதது. ராமன் பட்டமடைந்தால் நம்முடைய பரதன் செத்தான் என்றே வைத்துக்கொள். ஆனபடியால் உறுதியாகத் தீர்மானிப்பாய். எப்படியாவது பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்விக்க வேண்டும். ராமனை ராஜ்யத் திலிருந்து வெளியேற்றி விடவேண்டும்."

இவ்வாறு முடித்தாள் மந்தரை, கைகேயியின் உள்ளத்தில் பயம் புகுந்து கொண்டது. மந்தரை வெற்றிய டைந்து விட் டாள். கிலி பிடித்த கைகேயியின் முகம் சிவந்து போய்ச் சுவாசம் வெப்பமடைந்தது. இன்னது செய்வது என்று தெரியாமல், மந்தரையிடம் தஞ்சமடைந்து பேச ஆரம்பித்தாள்.

புத்திர பாக்கியம் பெறாமலிருந்த காலத்தில், கைகேயியைத் தசரதன் ராஜகுல வழக்கத்தை அனுசரித்து விவாகம் செய்து கொண்டான். அச்சமயம் கைகேயியினுடைய தந்தை கேகய ராஜன் தசரதனிடம் அவள் வயிற்றில் பிறக்கும் மகனுக்குப் பட்டம் வேண்டும் என்று வாக்குறுதி பெற்றான். இப்படி அப்போது சொன்னதில் ஒன்றும் வியப்போ, வித்தியாசமோ இருந்திருக்க இடமில்லை. அப்போது யாருக்குமே குழந்தை இல்லை. மற்ற மனைவிகளுக்குப் புத்திரப்பேறு உண்டாகவில்லை. புத்திரப்பேற்றுக்கு ஆசைப் பட்டே மூன்றாவது மனைவியைக் கொண்டது. அந்த ஆசையும் நிறைவேறவில்லை. வெகுநாட்கள் கழித்து யாகம் செய்து மூன்று மனைவிகளும் குழந்தை பெற்றார்கள். பட்டமகிஷியின் மகனான ராமன், நான்கு புத்திரர்களுக்குள் மூத்தவனாகவும், சகல உத்தம குணங்களையுடையவனாகவும், மந்திரிமார்கள், நகரத்தார், கிராமவாசிகள், சிற்றரசர்கள் அனைவரும் யுவராஜ பதவிக்குத் தகுந்தவன் என்று சொல்லும்படி அவர்களுடைய அன்பைச் சம்பாதித்தவனாகவும் இருக்க, எப்படி அவனுடைய உரிமையையும் ராஜகுல முறையையும் புறக்கணித்துப் பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வது நியாயமாகும்? தவிர பரதனும் கைகேயியும் இதைப்பற்றி ஏதொரு ஆசை அல்லது எண்ணங்கூட வைத்தது கிடையாது. அதைப்பற்றிப் பேச்சே கிடையாது. ஆனபடியால் முறைப்படி ராமனை யுவராஜ பதவியில் அமர்த்துவதில் ஒரு சிக்கலும் ஏற்படாது என்று அரசன் எண்ணினான். அவ்வாறே கைகேயியின் உள்ளத்திலும் ஏதொரு கல்மிஷமும் இருக்கவில்லை. இது கைகேயியின் நடவடிக்கைகளினால் வியக்தமாகத் தெரிகிறது. பரதன் உள்ளத்தைப்பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை.

ஆயினும் தசரதன் ராமனிடம் சொன்னதைப்போல் நல்லவர்களுடைய தூய சிந்தையும் திடீர் என்று திரிந்து போகும். கெட்டவர்களுடைய துர்ப்புத்தியும் அதனோடு விதி

யும் சேர்ந்துவிட்டால் யாருமே கெட்டுப்போகலாம். இதுவே கைகேயி விஷயத்தில் நடந்துவிட்டது.

> "தீய மந்தரை இவ்வுரை செப்பலும் தேவி
> தூய சிந்தையும் திரிந்தது சூழ்ச்சியின் அரக்கர்
> மாய வானவர் பெற்றநல் வரம் உண்மை யாலும்
> ஆய அந்தணர் இயற்றிய அருந்தவத் தாலும்"

என்று பாடுகிறார் கம்பர். தாமதப்பட்டால் ஒரு வேளை இடையூறு ஏற்படும் என்று எந்தக் காரணத்துக்காகப் பரதன் வருவதை எதிர்பாராமல் பட்டாபிஷேகம் முடித்துவிடலாம் என்று தசரதன் அவசரப்பட்டானோ, அதே காரணமும் அதே அவசரமும் கைகேயின் சித்தத்தைக் கோணல் வழியில் செலுத்த மந்தரைக்கு நன்றாக உபயோகப்பட்டுவிட்டன.

"பார், இவ்வளவு அவசரம் ஏன்? உன் மகன் ஊரில் இல்லாத சமயத்தில் அவனை மோசம் செய்யவே இந்த அவசர ஏற்பாடுகள் எல்லாம்! காதல் வேஷம் போடும் உன் அரசனுடைய வஞ்சக சமத்காரத்தைப் பார்!" என்றாள்.

மந்தரை கைகேயியினுடைய உள்ளத்தைக் கெடுத்துத் தன் ஆலோசனைக்குச் சம்மதிக்கச் செய்துவிட்டாள். மொத் தத்தில் கைகேயியினுடைய சுபாவம் சாதாரண ஸ்திரீ சுபா வம். நல்ல உணர்ச்சியும் பண்பாடும் உண்டு. கூர்மையான புத்தியும் உண்டு. ஆனால் லோக விவகாரம் அதிகமாக அறிந்தவளல்ல. பிடிவாதம் அதிகம். எளிதில் ஏமாற்றப் பட்டாள். செய்யும் காரியத்தின் முழுப்பலனை ஊகித்து அறியும் ஆற்றல் பெற்றிருக்கவில்லை. ராமாயணச் சங்கடப் படலம் ஆரம்பித்து விட்டது.

## 19. கூனியின் போதனை

அதுவரையில் ராமனைத் தன் வயிற்றில் பிறந்த குழந்தையாகவே பாவித்து வந்த கைகேயி, இப்போது மந்தரையின் உபதேச வலையில் சிக்கிக் கெட்டுப் போனாள்.

"பயமாக இருக்கிறது. என்ன செய்யலாம் சொல், மந்தரா! கௌசல்யைக்கு அடங்கி நான் அவளுடைய வேலைக்காரியாகப் போவதா? ஒருநாளும் முடியாது. பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தே தீரவேண்டும். நீ சொல்வதே சரி. ராமனை வனத்துக்கு அனுப்பிவிட வேண்டும் என்பது நிச்சயம். இதற்கு என்ன உபாயம் செய்யலாம்? சொல். நீதான் சாமர்த்தியசாலி" என்று மந்தரையைச் சரணடைந்தாள். அந்தச் சமயம், கைகேயியின் கண்களுக்கு மந்தரையின் கூன் வடிவங்கூட மிகச் சௌந்தர்யமாகக் காணப்பட்டது. இது வெறும் ஹாஸ்யம் அல்ல; சூட்சுமமான மனத்தத்துவம்.

"கைகேயி! இது என்ன வித்தை! உபாயம் என்னையா கேட்கிறாய்? உனக்கு ஏன் இவ்வளவு மறதி வந்து மூடிக் கொண்டது? அல்லது வேஷம் போடுகிறாயா? நானே சொல்ல வேண்டுமென்றால் சொல்லுகிறேன். கேள்" என்றாள் மந்தரை.

இதைச் சொல்லிவிட்டுக் கொஞ்சம் நிறுத்தினாள்.

"சொல், சொல், எப்படியாவது பரதனுக்குப் பட்டம் சூட்டவேண்டும். ராமனுக்கு பட்டாபிஷேகம் நடக்காமல் செய்ய வேண்டும்" என்றாள் கைகேயி பரபரப்பாக.

"சொல்லுகிறேன். அவசரப்படாதே! முன்னொரு காலத்தில் உன் புருஷன் தசரதசக்கரவர்த்தி தெற்கே சம்பரனோடு யுத்தம் செய்தது நினைவு இருக்கிறதா? நீயும் கூட இருந்தாயே! இந்திரனுக்கு உதவியாகப் போனான் அல்லவா உன் புருஷன்? வைஜயந்தி நகரத்துச் சம்பரனை இந்திரன் சமாளிக்க முடியாமல் தசரதனுடைய உதவியை நாடினான். தசரதன் சென்று சண்டையிட்டு, உடம்பெல்லாம் காயம்பட்டு நினைவிழந்து போனான் அல்லவா? அப்போது அவனுடைய தேரை நீயே நடத்திச் சாமர்த்தியமாக யுத்த

காயம்பட்டு நினைவிழந்து போனான் அல்லவா? அப்போது அவனுடைய தேரை நீயே நடத்திச் சாமர்த்தியமாக யுத்த களத்திலிருந்து வெளியே கொண்டு போய், அரசன் உடலில் பாய்ந்திருந்த அம்புகளையெல்லாம் மெதுவாக எடுத்து, நினைவு தெளியச் செய்து, அவன் உயிரைக் காப்பாற்றினாய். மறந்து விட்டாயா?

"அப்போது அவன் உனக்கு என்ன சொன்னான்? 'இரண்டு வரங்களைக் கேள், எதைக்கேட்டாலும் நான் தருவேன்' என்று அவன் சொல்ல, 'எனக்கு வேண்டும் போது கேட்கிறேன்; இப்போது வேண்டாம்' என்று நீ சொல்ல, 'அப்படியே' என்று அவன் கூறினான் அல்லவா? நீயே எனக்கு இதைச் சொல்லியிருக்கிறாய். நீ மறந்துவிட்டாய்; நான் மறக்கவில்லை. அதை வைத்து இப்போது காரியத்தைச் சாதிக்கலாம். ராமன் பட்டாபிஷேகத்தை நிறுத்தி, பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய் என்று புருஷனைக்கேள். இரண்டு வரத்தில் முதலாவதாக அதைக்கேள். இரண்டாவதாக ராமனைப் பதினான்கு வருடம் காட்டுக்கு அனுப்பி விட வேண்டும் என்று கேள். பாபம் என்று தயங்காதே. பயப்பட்டு நடுங்காதே! நான் சொல்வதைக் கேள். அப்படி ராமனைக் காட்டுக்கு அனுப்பிவிட்டால்தான், ஜனங்கள் அவனிடம் வைத்திருக்கும் அபார அன்பும் பற்றும் நாளடைவில் மறைந்துபோய் உன் குமாரனுடைய யுவராஜ பட்டம் ஊர்ஜிதப்படும். போய் கோப கிரஹத்தில் தரையில் படுத்துக்கொள். பழைய துணி உடுத்திக்கொண்டு தரையில் கிட! அரசன் வரும்போது பேசவேண்டாம். கண்ணெடுத்துப் பார்க்கவேண்டாம். உன் துயரத்தை அவன் சகிக்க மாட்டான் என்பது எனக்குத் தெரியும். நம்முடைய காரியம் வெற்றி யுடன் முடியும்" என்றாள் மந்தரை.

"அரசன் என்னவெல்லாமோ ஆசை காட்டுவான். அதற்கு உட்படாதே. கேட்ட இரண்டு வரமே வேண்டும்

என்று பிடிவாதமாக இரு. சத்தியத்துக்குப் பயந்து அரசன் கட்டாயம் வழிக்கு வருவான். உன்னிடம் அவன் வைத்திருக்கும் காதலின் வேகம் எனக்குத் தெரியும். உனக்காக உயிரைக் கொடுக்கவேண்டுமானாலும் கொடுப்பான். நெருப்பில் விழச் சொன்னாலும் விழுவான். நான் சொன்னபடி செய். பயப்பட வேண்டாம். ராமனை வனத்துக்கு அனுப்பினாலொழிய உன் காரியம் சாதகமாகாது. ராமன் வெளியேற்றப்பட வேண்டும். அப்போதுதான் பரதனுக்கு நீ சம்பாதித்துத் தரும் பதவி ஸ்திரமாகும். இல்லாமற் போனால், பெற்ற பதவி கனவாக மறைந்து போகும். இதை நினைவில் வைத்துக்கொள். இந்த விஷயத்தில் விட்டுக் கொடுக்காதே; ஜாக்கிரதை!" என்றாள் மறுபடியும்.

கூனியின் இந்த உபதேசத்தை ஏற்றதும், முதலில் பயத்தில் மூழ்கிய கைகேயியின் முகம் பிறகு மலர்ந்தது. "உன் புத்திக்கூர்மையை நான் என்னவென்று சொல்வேன் மந்தரா! என்னைக் காப்பாற்றினாய்" என்று சொல்லிக் குதிரைக் குட்டியைப் போலத் துள்ளிக் குதித்தாள்.

"தாமதம் செய்யாதே. செய்யவேண்டியதை உடனே செய். கரை உடைந்துபோன பிறகு ஏரிக்கு அணை கட்ட முடியாது. சொன்னதையெல்லாம் கவனத்தில் வை. பிடிவாதமாக இருக்கவேண்டும். நிச்சயமாக உன் காரியம் சித்தியாகும்" என்று ராமனை வனத்துக்கு அனுப்புவதைப் பற்றி மறுபடி வற்புறுத்திச் சொன்னாள்.

கைகேயி, "சந்தேகப்படாதே. நான் உறுதியாக இருப்பேன். இதோ பார்!" என்று அப்போதே கோப கிருஹத்துக்குள் நுழைந்து, தன் ஆபரணங்களையெல்லாம் சிதறி இறைத்துவிட்டு, துணியை மாற்றிக்கொண்டு தரையில் படுத்துக்கொண்டாள். படுத்தவள் அழுத குரலில் மந்தரைக்குச் சொன்னாள். "மந்தரா! என் தந்தை கேகய ராஜனிடம் நீயே போய்ச் சொல்லுவாய்; பரதனுக்குப்

பட்டாபிஷேகம் என்றோ அல்லது கைகேயி இறந்தாள் என்றோ இரண்டில் ஒன்று நீ போய்ச் செய்தி சொல்லிவிடு, என் மந்தரையே!" இவ்வாறு சொல்லி, உண்மையிலேயே தசரதன் செய்ததெல்லாம் மோசம் என்று எண்ணி, அவன் மேல் கடுங்கோபத்தோடு தரையில் படுத்தாள்.

அப்போது அவள் அழகு குறையவில்லை. சிரித்தாலும் அழகு, கோபித்தால் அதுவும் ஓர் அழகு அல்லவா, அழகைப் பெற்ற பெண்ணின் முகம்.

பாப எண்ணம் நன்றாகப் புகுந்துவிட்டது. கைகேயியினுடைய சுபாவம் முற்றிலும் மாறிப்போயிற்று. தன்னுடைய வாழ்க்கை அடிமை வாழ்க்கையாகப் போகும், பரதன் உயிருக்கு பெரிய ஆபத்து அருகில் வந்துவிட்டது என்ற திகிலானது, பிசாசுபோல் அவள் உயிரைப் பிடித்துக் கொண்டது. புருஷனை ஒரு பெரிய விஷயத்திலே நிர்ப்பந்திப்பதனால் ஏற்படக்கூடிய கூச்சமும், ராமனைக் காட்டுக்கு அனுப்பு என்று கேட்கப் போவதில் உண்டாகும் வெட்கம், பாப பயம் அனைத்தையும் உடனே மனதிலிருந்து துரத்தி விட்டாள். உள்ளத்தைக் கல்லாக்கிக் கொண்டுவிட்டாள்.

மிகப் பெரிய துக்கம் மேலிட்டவளாக, உயிர்த்தும் வியர்த்தும் கண்களை மூடியும், நாககன்னிகையின் அழகைப் பெற்ற கைகேயி கூந்தலை விரித்தும் தூசி படிந்த தரையில் கிடந்தாள்; ஓர் அழகிய பறவை வேடனுடைய அம்பால் தாக்கப்பட்டுக் கீழே திடீரென்று விழுந்ததுபோல் தரையில் கிடந்தாள். அவளுடைய உடலை அலங்கரித்த சகல திவ்விய ஆபரணங்களும் இங்குமங்கும் கருத்த ஆகாயத்தில் நட்சத்திரங்களைப்போல் பிரகாசித்துக்கொண்டு ஊடல் அறையில் சிதறிக் கிடந்தன.

## 20. சத்தியம் தவறாதீர்!

சபையில் காரியங்களையெல்லாம் முடித்துவிட்டு, பட்டாபிஷேக மகோற்சவத்துக்காகச் செய்யவேண்டியதைப்

பற்றியெல்லாம் பூர்த்தியாக உத்தரவிட்டு, ஒரு கவலையும் இனி இல்லை என்று சந்தோஷமடைந்த தசரதன், தன் காதல் மனைவி கைகேயி தேவியினுடைய அந்தப்புரத்தை நோக்கிச் சென்றான். அரசியல் காரியங்களில் கிரமப்படி கேட்க வேண்டியவர்களையெல்லாம் கேட்டுச் சம்மதம் பெற்றுப் பட்டாபிஷேகத் தீர்மானம் முடிந்துவிட்டது. ஒரு பெரிய பாரம் தீர்ந்து கவலையற்ற ஓய்வு ஏற்பட்டது. இயற்கைப் பசு தர்மம் தலை எடுத்தது. உடனே போய் தன் அழகிய காதல் மனைவியோடு விஷயங்களைச் சொல்லிச் சல்லாபச் சுகம் அடையலாம். பொழுது விடிந்ததும் உற்சவம்; அதுவரையில் ஆசைதீரப் போகத்தில் மூழ்கலாம் என்கிற எண்ணத்தோடு வெள்ளை மனத்து தசரதன், அந்தப்புரத்தில் புகுந்தான். எப்போதுமே இளைய மனைவியின் அரண்மனை, விசேஷ மான அழகு வாய்ந்தது. ரமணீயமான தோட்டமும், வாவி களும், மேலே பறக்கும் பறவைகளும், நீரில் விளையாடும் பறவைகளும், சித்திரத் தோகை விரித்து ஆடும் மயில்களும், மரங்களிலெல்லாம் விதம்விதமான புஷ்பங்கள் மலர்ந்து பிரகாசிக்கும் காட்சியுமாக அந்த அந்தப்புரம் எப்போ தையும் விட அதிக அழகு பெற்று விளங்குவதாக எண்ணி னான் தசரதன். ஆகாயத்தில் ராகுக்கிரகம் விழுங்கக் காத்துக் கொண்டிருக்கிற நாளில் அதையறியாத சந்திரன் பயமின்றிப் பூரண களையுடன் உதயமாவதுபோல், முகத்தில் மகிழ்ச்சி ஜொலிக்கத் தசரதன் கைகேயியின் அழகிய இல்லத்தில் பிரவேசித்தான். அங்கே என்ன காத்திருக்கிறது என்று அறியவில்லை.

அரண்மனையில் வாசனைத் திரவியங்கள், பான விசேஷங்கள் எல்லாம் வழக்கம்போல அந்த அந்த இடத்தில் வைக்கப்பட்டிருந்தன. அவனுடைய பிரகிருதி வேகம் அதி கரித்தது. ஆசனங்களையெல்லாம் பார்த்தான். அவனுடைய காதலியைக் காணவில்லை.

இன்பத்துக்கென்றே தனியாக அமையப்பெற்ற மனைவியாவாள் கைகேயி. அவள் ராஜ விவகார விஷயங்கள் எதிலும் தலையிடுவதில்லை. அவளுடைய அந்தப்புரம் நுழைந்ததுமே அரசனுக்கு உள்ளம் முழுவதும் காதல் வேகம் பொங்கும். எப்போதும் அரசன் வரும் சமயம் அவள் காத்திருந்து எதிர்கொண்டு அணைத்துக்கொள்வாள். இன்று ஏன் அவள் காணப்படவில்லை? அரசன் கொஞ்சம் திகைத்தான். படுக்கைகள் ஆசனங்கள் எல்லாம் மறுபடி உற்றுப் பார்த்தான். விளையாட்டுக்காக ஒளிந்து கொண்டிருக்கிறாளோ என்று எண்ணி மகிழ்ச்சியடைந்து, திரும்பத் திரும்பக் கவனித்துப் பார்த்தான். என்றும் இப்படி இருந்தது இல்லையே, என்ன காரணம் என்று யோசித்து அங்கிருந்த ஒரு காவல் பெண்ணைக் கேட்டான். அவள் கைகூப்பி, "சுவாமி! தேவியார் மிகக் கோபங் கொண்டு உள்ளே போய் விட்டார்கள்" என்றாள்.

அரசன் பயந்தான். உள்ளே சென்று ஊடலறைக்குள் நுழைந்தான்; கொஞ்சமும் எதிர்பாரத விபரீதக் காட்சியைக் கண்டான்.

கைகேயி அரசனைக் கண்ணெடுத்துப் பார்க்கவில்லை. அப்பாவி அரசனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. எவ்வாறு விளங்கும்? கல்மிஷம் என்பது கொஞ்சமும் அவன் உள்ளத்திலில்லை. கைகேயியினுடைய உள்ளத்திலோ பாபம் நிறைந்து அடைத்துக் கொண்டிருந்தது. இவன் வயதோ அதிகம். அவளோ இன்னும் சிறுவயது. காதல் உணர்ச்சியோ அரசனுக்கு அதிக வேகத்திலிருந்தது. இந்த நிலையில் அவனுக்கு ஒன்றும் விளங்காமல் பைத்தியக்காரனைப்போல் நடந்து கொண்டான்.

கீழே கிடந்த கைகேயிக்கு அருகில் இவனும் தரையில் உட்கார்ந்து, அவள் தலையை மெதுவாகத் தூக்கித் தன் மடியின் மேல் வைத்துக்கொண்டு தடவிக்கொடுத்தான்.

"உனக்கென்னவாயிற்று? உடம்பில் என்ன? எங்கே யாவது வலியா? எனக்குச் சேவை செய்யச் சிறந்த வைத்தி யர்கள் இல்லையா? உடனே வரவழைக்கிறேன். எதுவாயி ருந்தாலும் சரிப்படுத்தி விடுவார்கள். நீ பயப்படவேண்டாம்" என்றான்.

கைகேயி பெருமூச்சுவிட்டாள், பேசவில்லை.

"உன்னை யாராவது அரண்மனையில் அவமதித்து பேசி விட்டார்களா? யாராவது ஏதாவது தவறு செய்திருந்தால் எனக்குச் சொல். கடுந்தண்டனை விதித்து விடுவேன். யாரா வது உன்னை அலட்சியம் செய்து உனக்குக் கோபம் உண்டாக் கினார்களா? அல்லது உனக்கு ஏதாவது வேண்டியதாயிருந்து என்னையறியாமல் அதை நான் கவனிக்காமல் விட்டு விட்டேனா? சொல்!"

இவ்வாறெல்லாம், சாதாரணமாகப் பெரிய வீட்டு நிருவாகத்தில் ஏற்படக்கூடிய குறைகளை எல்லாம் கேட்டுப் பார்த்தான்.

கைகேயியோ இதையெல்லாம் ஒன்றும் கவனிக்காமல் பிசாசு பிடித்தவள்போல் பேசாமல் கிடந்தாள்.

"உனக்கு என்ன வேண்டுமானாலும் கேள், யாரைத் தண்டிக்க வேண்டும்? தண்டிப்பேன். யாரை தண்டனை யிலிருந்து விடுவிக்க வேண்டும்? உடனே கொலையாளியாக இருந்தாலும் விட்டுவிடுவேன்"- இப்படியெல்லாம் காம மோகத்தால் பீடிக்கப்பட்டுக் கெஞ்சிக் கேட்டுக் கொண் டான்.

"எனக்குள்ள சர்வாதிகாரம் உனக்குத் தெரியாதா? யாருக்கு என்ன கொடுக்கவேண்டும்? எந்த தேசத்தில் யாரை என்ன செய்யவேண்டும்? சொல். அதை உடனே செய்து விடுவேன்" என்றான் மறுபடியும்.

கைகேயி எழுந்து உட்கார்ந்தாள். அரசனுக்கு உடனே சந்தோஷமாய் விட்டது. கைகேயி பேச ஆரம்பித்தாள்:

"என்னை யாரும் அலட்சியமாகப் பேசவில்லை; யாரும் நிந்திக்கவில்லை; அவமானப்படுத்தியதில்லை. அரசனே உம் மால் ஆகவேண்டிய காரியம் இருக்கிறது. அதை நீர் செய்து தரவேண்டும். சம்மதம் தந்தால் சொல்கிறேன்" என்றாள்.

இதைக் கேட்டதும் தசரதனுக்கு மனம் பூரித்து விட்டது. "எது வேண்டினும் அதைச் செய்யும் சக்தி எனக் கிருக்க, இனி என்ன கவலை?" என்று தைரியம் அடைந்தான். முகம் மலர்ந்து,"கைகேயி, உடனே சொல். உனக்கு என்ன வேண்டும்? அதைச் செய்கிறேன். எதன்மேல் ஆணையிட்டுச் சொல்லவேண்டும்? உனக்குப் பிரியமானது எது? பெண்களுக் குள் நீதான் என் அன்பின் உச்சிக்கோடு. ஆண்களுக்குள் ராமச்சந்திரனைவிட எனக்கு வேறு யாரும் பிரியமில்லை. அந்த ராமன் பேரில் ஆணையிட்டுச் சொல்கிறேன். நீ எது வேண்டுமென்கிறாயோ அதைச் செய்வேன். இது உறுதி" என்றான்.

பாபம் முற்றிக்கொண்டு வந்தது. 'ராமன்மேல் ஆணை' என்றதுமே, கைகேயிக்குத் தைரியம் பிறந்தது.

"அப்படியா? ஆனால் சரி, 'ராமன்மேல் ஆணையிட்டுச் சொல்வீர்.நான் கேட்பதை மறுக்காமல் தருவதாக மறுபடியும் சபதம்செய்வீராக" என்றாள்.

"என் காதல் அரசி, அப்படியே! இதோ சபதம் செய்கிறேன். என் அன்புக்குரிய ராமன்மேல் ஆணை, நான் அடைந்த சகல புண்ணியத்தின் மேலும் ஆணை, நீ என்ன விரும்புகிறாயோ, அதைச் செய்வேன். இது சத்தியம்" என்றான் அரசன்.

இந்தச் சந்தர்ப்பத்தில் கைகேயிக்குத் தன் மகா பாப எண்ணத்தைக் கருதி ஒரளவு சந்தேகம் உண்டாயிற்று. ஒரு வேளை "மாட்டேன், இது மகா பாபம். ஆணையும் சபதமும் இத்தனை பெரிய பாபம் செய்யும்படி இடம் தரா" என்று சொல்லிவிடுவானோ என்று பயம் ஏற்பட்டது. எழுந்து நின்று

கைகள் கூப்பி நான்கு திசைகளும் பார்த்து உரத்த குரலில், "ஓ தேவர்களே! என் புருஷன் செய்த சபதத்திற்கு நீங்கள் எல்லோரும் சாட்சியாவீர்கள். ஏ! சூரிய சந்திராதி கிரகங் களே, நீங்களும் சாட்சி, ஏ! பஞ்சபூதங்களே, நீங்களும் சாட்சி, சத்தியம் தவறாத என் புருஷன் செய்த சபதத்திற்கு நீங்கள் எல்லாரும் சாட்சியாவீர்கள்!" என்று சொன்னாள்.

மகிழ்ச்சி மலர்ந்த முகத்தோடு தசரதன் கண் கொட் டாமல் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தான். காமமோகத் தால் அரசன் மதியிழந்து வலையில் சிக்கினான் என்று நிச் சயம் செய்து கொண்டாள். அதன்மேல் தைரியமாக ஆரம்பித் தாள்.

"அரசனே! நினைவிருக்கிறதா? முன்னாளில் யுத்த பூமியில் காயப்பட்டு உயிரிழக்கும் தறுவாயில் நீர் இருந்த போது, இருட்டில் ரதத்தை நானே மெள்ளச் செலுத்தி அப் புறப்படுத்தி, உம்முடைய உடலில் பாய்ந்திருந்த அம்பு களையெல்லாம் எடுத்துச் சுத்தப்படுத்தினேன். மூர்ச்சை தெளிந்ததும் 'பகைவர்கள் என்னைக் கொன்றிருப்பார்கள். நீ எனக்கு உயிர் கொடுத்தாய். உனக்கு வேண்டிய வரங்கள் இரண்டு கேள்,' என்றீர். நான் 'இப்போது வேண்டாம். பிறகு வேண்டும்போது கேட்கிறேன். இப்போது நீர் உயிர் தப் பியதே எனக்குப் பெருமகிழ்ச்சி' என்று சொன்னேன் அல்லவா?" என்றாள்.

"நன்றாக நினைவிருக்கிறது! இரண்டு வரங்களையும் கேள். இப்போதே தருகிறேன்" என்றான் தசரதன்.

"சபதம் செய்திருக்கிறீர். ராமன்மேல் ஆணையிட்டுச் சபதம் செய்திருக்கிறீர். தேவர்களும் பஞ்ச பூதங்களும் சாட்சியாக இருக்கிறார்கள். இதோ கேட்கிறேன். சத்தியத் தைக் காப்பாற்றுவீர். உம்முடைய முன்னோர்கள் வழியில் நின்று நல்ல கதியடைவீர். வாக்குத் தவறாதீர். இப்போது அமைத்து வைத்திருக்கும் பட்டாபிஷேக சாமக் கிரியை

களைக் கொண்டு, பரதனுக்குப் பட்டங்கட்டுவீராக. உம்முடைய மகன் ராமனைப் பதினான்கு வருஷம் வனவாசம் செய்யும்படி உடனே தண்டகாரண்யம் அனுப்புவீர். செய்த பிரதிக்ஞையைப் புறக்கணிக்காதீர். உம்முடைய குலத்தின் புகழையும் புண்ணியத்தையும் காப்பாற்றுவீர்!" என்றாள்.

## 21. மனைவியா? பிசாசா?

"இது தூக்கத்தில் காணும் துர்ச் சொப்பனமா! நான் விழித்திருக்கிறேனா, இல்லை தூங்குகிறேனா? ஏதாவது சித்தப்பிரமை வியாதி என்னைப் பீடிக்கிறதா? முன்ஜன்ம பாபங்களின் நினைவுவந்து அதை இப்போது நிகழும் உண்மை போல் காண்கிறேனா, ஏதாவது கிரகபீடையா? பைத்தியம் பிடித்து ஏதோ நடக்கிறதாகக் காண்கிறேனா? ஒன்றும் விளங்கவில்லையே!" என்று தசரதன் சித்தம் கலங்கி மனத்தில் உண்டான பயத்தைத் தாங்க முடியாமல் தவித்துத் தவித்துப் பிரக்ஞை இழந்தான். கொஞ்ச நேரம் கழித்துக் கண்ணைத் திறந்து புலியைக் கண்ட மானைப் போல கைகேயியைப் பார்த்து நடுங்கினான். 'ஐயோ!' என்று தரையில் உட்கார்ந்து கதறினான். மந்திரவாதியால் பிடிக்கப்படும் பாம்பைப்போல் ஆடினான். மறுபடி மூர்ச்சையடைந்து விட்டான். பிறகு வெகுநேரம் கழித்து நினைவு அடைந்து கண்களினின்று நெருப்புப் பொறிகள் பறக்க, "ஏ கொடிய அரக்கியே! குலத்தைக் கெடுக்கவந்த பாவியே! உனக்கு என்ன தீங்கு செய்தான் ராமன்? பெற்ற தாயைப் போல் உன்னை பாவித்து வந்தானே! உன்னை நான் ஒரு பெண் என்று எண்ணினேனே! கொல்லும் விஷப்பாம்பு என்பதைத் தெரியாமல் உன்னை எங்கிருந்தோ கொண்டுவந்து மடியில் வைத்துக் கொண்டேனே!" என்றான்.

கைகேயி ஒன்றும் பேசவில்லை. "நாடெல்லாம் புகழும் ராமனை என்ன குற்றம் சொல்லி நான் தள்ளுவேன்? கௌசல்யையைத் தள்ளிவிட்டுப் பிழைக்கலாம். தருமசொரூபி

சுமத்திரையையும் இழந்து பிழைப்பேன். ராமனை இழந்தால் பிறகு என்னுயிர் நிற்காது. ஜலமில்லாமல் பிழைப்பேன். சூரிய ஒளியில்லாமல் சமாளிப்பேன். ராமனை விட்டுவிட்டு உயிரை வைத்திருக்க என்னால் முடியாது. இந்த மகா பாப எண் ணத்தை மனத்தினின்று விலக்கித் தள்ளு. உன் பாதத்தில் என் தலையை வைத்து வருந்தி வேண்டிக் கொள்கிறேன். எவ்வளவு தடவை நீயே சொல்லியிருக்கிறாய். 'எனக்கு இரண்டு அரு மைக் குழந்தைகள்; அதில் மூத்தவன் இராமன்தான் எனக்கு அதிகப் பிரியமானவன்' என்று. இவ்வாறு பல தடவை நீ சொல்லியிருக்கிறாயே. நீ எப்போதும் நினைத்து வந்ததை இப்போது நான் காரியத்தில் நிறைவேற்றினேனேயன்றி வேறில்லை. அப்படியிருக்க, ஏன் இம்மாதிரி கொடிய வரத்தைக் கேட்கிறாய்? இல்லை, இல்லை, என்னைப் பரீட்சை செய்கிறாய். பரதன்மேல் எனக்குப் பிரியம் உண்டா என்பதைக் காண இப்படிச் செய்கிறாயா? பெரும்புகழ் பெற்ற குலத்தைப் பாபச் செயலில் அழித்துவிடாதே" என் றான். அப்போதும் கைகேயி ஒன்றும் பேசவில்லை. கோபப் பார்வை பார்த்தாள்.

"இதுவரையில் எனக்கு வருத்தம் தரக்கூடிய காரியம் ஏதும் நீ செய்யவில்லை. இப்பொழுது யார் உன் புத்தியைக் கெடுத்தது? இது உன் செயல் அல்ல. நான் நம்ப மாட்டேன். என் காதலியே! எத்தனை தடவை நீ என்னிடம் சொல்லி யிருக்கிறாய்! 'பரதன் மிகப் பெருந்தன்மையான பிள்ளை, சந்தேகமில்லை. ஆனால் ராமனுக்குச் சமானமாக மாட்டான் பரதன்' என்று மகிழ்ந்து சொல்லுவாயே! அந்த ராமனையா நீ இப்போது கூசாமல் காட்டுக்கு அனுப்பு என்கிறாய்? அவனால் காட்டில் இருக்க முடியுமா? இதையா நீ விரும்புகிறாய்? மிருகங்கள் நிறைந்த பயங்கரமான காட்டுக்கு நம்முடைய ராமனை அனுப்பச் சொல்லுகிறாயா? அவன் எவ்வளவு அன்பு செலுத்தி உனக்குச் சேவை செய்தி ருக்கிறான்? அதை மறந்துவிட்டு எப்படி உனக்கு மனம்

வந்தது, அவனைக் காட்டுக்கு அனுப்பு என்று வாயால் சொல்ல? அவன் என்ன தவறு செய்தான்? இந்த அரண் மனையில் நூற்றுக்கணக்கான ஸ்திரீகள் இருக்கிறார்கள். யாராவது ராமனைப்பற்றி ஒரு வார்த்தை, ஓர் அபவாதம், ஒரு குற்றம் சொல்லியதுண்டா? உலகமெல்லாம் அவனை விரும்புகிறதே! எல்லாருடைய அன்பையும் தன்னுடைய குணத்தாலும் சீலத்தாலும் சம்பாதித்திருக்கிறானே; உனக்கு ஏன் வந்தது அவன்மேல் இப்போது வெறுப்பு! இந்திராதி தேவர்களுக்குச் சமானமாக இருக்கிறானே என் மூத்தமகன்! தவம் செய்யும் ரிஷிகளுடைய முக தேஜஸை அடைந்தி ருக்கிறானே! ராமனுடைய சத்திய சீலம், சினேகம், அறிவு, படிப்பு, வீரம், பெரியோர்களிடம் அடக்கம் இவற்றை எல்லோரும் பாராட்டுகிறார்களே; அவன் வாயில் ஒரு கடினமான வார்த்தை வந்ததை நான் பார்த்ததில்லையே. அவனை எப்படி 'நீ காட்டுக்குப் போ' என்று தந்தையான நான் சொல்வேன்? இது சாத்தியமா? நான் கிழவன். எனது அந்திம காலத்தில் என்னிடம் இரக்கம் காட்டு, கைகேயி. இந்த ராஜ்யத்தில் உள்ள செல்வத்தில் எதை வேண்டு மானலும் கேள். எல்லாவற்றையும் கேள். உனக்குத் தருவேன். என்னை யமனிடம் அனுப்பாதே! கை கூப்பித் தொழுகிறேன். உன் இரு பாதங்களையும் பிடித்து வேண்டிக் கொள்கிறேன். சரணம் சரணம்! ராமனைக் காப்பாற்றுவாயாக, அதர்மத்தைச் செய்யச் சொல்லாதே!" என்றான்.

இப்படிச் சோகக் கடலில் விழுந்து மூழ்கித் தவித்துக் கொண்டு கரையேற வகை தெரியாமல், அடிக்கடி நினைவு இழந்தும் கண்ணீர் விட்டு அலறியும், வேதனைப் பட்டுக் கொண்டுமிருந்த மகாராஜனைப் பார்த்து, கைகேயி சிறிதும் இரக்கமின்றிக் கொடிய மொழிகளைப் பேசினாள்.

"அரசனே! வரங்கள் கொடுத்துவிட்டுப் பிறகு கொடுத் தேனே என்று வருத்தப்பட்டுப் புறக்கணித்தீரானால், அரசராகிய உமக்கு எப்படி வாய் எழும் சத்தியம் என்றாவது

தருமம் என்றாவது பேச ? மற்ற அரசர்களிடம் என்ன சொல்வீர்? 'ஆம், என்னைக் காபாற்றி எனக்கு உயிர் தந்த கைகேயிக்கு வாக்குத் தந்தேன். பிறகு அது எனக்குப் பிடிக்க வில்லை. கொடுத்த வாக்கைப் பொய்யாக்கினேன்' என்று சொல்லுவீரா? வேறென்ன சொல்லுவீர்? ராஜகுலத்துக்கே அபவாதம் சம்பாதித்துக் கொடுக்கிறீர். 'அரசர்கள் மனைவிக்குக் கொடுத்த வாக்கைப் பொய்யாக்குவார்கள்: சொன்னதைச் செய்யமாட்டார்கள்' என்கிற அபவாதத்தை உம்மால் அரசகுலம் அடையும். சிபி ஒரு பட்சிக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றத் தன் உடலிலிருந்து மாமிசத்தை அறுத்தெடுத்துத் தந்தான் என்பது உமக்குத் தெரியாதா? அலர்க்கன் தன் கண்ணைப் பறித்துத் தந்து சத்தியம் காத்து உத்தம கதியடைந்தான் என்று நீர் கேட்டதில்லையா? சமுத்திரமானது ஒப்பந்தம் செய்து கொண்டபின், அந்த ஒப்பந்தத்தை மதித்து, கரையை மீறாது நிற்கிறது. செய்த பிரதிக்ஞையைப் பொய்யாக்காதீர், நல்ல குலத்தைச் சார்ந்தவர் நீர். முன்னோர் வழியில் நடப்பீராக. இல்லை இல்லை! நீர் தருமத்தை விட்டுவிட்டு ராமனுக்குப் பட்டமளித்துக் கௌசல்யையுடன் போகித்துச் சுகமாக வாழ்வீர். உமக்குச் சத்தியம் எங்கே போனால் என்ன? தருமம் எங்கே போனால் என்ன? எனக்குச் சபதம் செய்து தந்த வரங்களைப் புறக் கணித்தீராகில் உம்மெதிரில் இன்றே விஷம் குடித்து இறப்பேன், ராமனுக்கு நீர் பட்டாபிஷேகம் செய்வீர்; இன்றே நான் சத்தியம் தவறிய உம் எதிரில் உயிர் விடுவேன். நிச்சயம் நான் பரதன் மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். வாக்குத் தந்தபடி ராமனைக் காட்டுக்கு அனுப்பினீரானால் சரி, இல்லையேல் உயிரை விடுவேன்" என்று கைகேயி உறுதியாகச் சொல்லிவிட்டுப் பேச்சை நிறுத்தினாள்.

இரக்கமற்ற மனைவியின் முகத்தைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டு தசரதன் பேச்சில்லாமல் நின்றான். இவள் கைகேயியா அல்லது பிசாசா என்று

சந்தேகப்பட்டுப் பார்த்தான். பிறகு கோடரியால் வெட்டப் பட்ட மரத்தைப்போல் கீழே விழுந்தான்.

கொஞ்ச நேரம் கழித்து நினைவு வந்து தீன சுரத்தில் மெதுவாகப் பேசினான்: "யார் உனக்கு இந்த உபதேசம் செய்து உன் புத்தியைக் கெடுத்தது, கைகேயி! நான் செத் தேன், குலமும் அழிந்தது. பிசாசு உன்னைப் பிடித்துக் கொண்டு இப்படி வெட்கமிழந்து உன்னை ஆடச் செய்கிறது. நீ என்ன நினைக்கிறாய்? என் மகன் பரதன், அண்ணன் ராமனைக் காட்டுக்கு அனுப்பிவிட்டுத் தான் அரசனாக இருக்க ஒப்புவானா? ஒருநாளும் ஒப்பமாட்டான். இதை நீ அறிவாயா? ராமனையும் வனவாசம் போ என்று நான் சொல் லவாவது? இது நடக்கக்கூடிய பேச்சா? உலகத்திலுள்ள அரசர்கள் என்னை இகழமாட்டார்களா? மனைவியினுடைய நிர்ப்பந்தத்தால் இந்தக் கிழவனாகிய மூடன் தன் மூத்த குமாரனும் உத்தம புருஷனுமான ராமனை அவனுக்குரிய ராஜ்யத்திலிருந்து துரத்தி விட்டான், என்று சொல்லிச் சிரிப்பார்கள் என்பது உனக்கு விளங்கவில்லையா? ராமனைக் காட்டுக்கு அனுப்பு என்று சுலபமாகச் சொல்லுகிறாய். கௌசல்யை உயிர்விட மாட்டாளா? நான்தான் உயிர் வைத் திருப்பேனா? ஜனகருடைய மகளைப்பற்றி யோசித்தாயா? ராமன் தண்டகாரண்யம் போகவேண்டும் என்ற சொல்லைக் கேட்ட மாத்திரத்தில் அவள் உயிர் துறப்பாளே! உன்னை ஒரு ஸ்திரீ என்று நம்பி மனைவியாகக் கொண்டேன். உன் ரூபத்தைக் கண்டு மோசம் போனேன். மதியிழந்தவன் விஷம் கலந்த தேனைக் குடிப்பதுபோல், உன் அழகைக் கண்டு மயங்கி உன்னைக் கட்டிக் கொண்டேன். வேடனுடைய பாட்டைக் கேட்டு மான் வலையில் சிக்குவதுபோல, உன் வலையில் சிக்கிப்போய் மாள்கிறேன். உலகம் என்னைச் 'சீ' என்று வெறுத்து என்னை விட்டுத் தூர விலகும். கள் குடித்த பிராமணனைத் தெருவில் எல்லாரும் வெறுப்பது போல என்னை எல்லாரும் வெறுப்பார்கள். ஆஹா! என்ன

வரத்தைக் கேட்டாய்? குலம் அழிந்து போகப்போகிறது. ஒரு பெண்ணின் வசம் சிக்கித் தன் அன்புக்குரிய குமாரனைக் காட்டுக்கு அனுப்பிய மூடன் என்கிற இகழ் என்றென்றைக்கும் என்னைப் பற்றிக்கொண்டு நிற்கும். "நீ வனம் செல்ல வேண்டும்" என்று நான் ராமனுக்குச் சொன்னேனானால் மறு பேச்சுப் பேசமாட்டான். போகிறேன் என்று உடனே சந்தோஷமாகப் போய் விடுவான்; நானும் எனக்குப் பின் கௌசல்யையும் சுமித்திரையும் உயிர் நீப்போம். இப்படிச் சம்பாதித்த ராஜ்யத்தை நீ சுகமாக அனுபவிப்பாய், பாவி, மூடப்பெண்ணே!

"பரதன் இதற்கெல்லாம் சம்மதிப்பானா? அவனும் இதற்குச் சம்மதித்தானானால், அவன் எனக்கு உத்தர கிரியையும் செய்ய வேண்டியதில்லை. வெட்கமற்ற ஸ்திரீயே, என் சத்துருவே, புருஷனையிழந்து விதவையாகி, உன் மகனுடன் ராஜ்யத்தைச் சந்தோஷமாக அனுபவிப்பாயாக.

"ஹா! ராமனைக் காட்டுக்கு அனுப்பவேண்டுமா! ஆஹா! ஸ்திரீகளுடைய சுபாவம் எவ்வளவு பாப சுபாவம்! எவ்வளவு கொடியவர்கள்! இல்லையில்லை; இவள்தான் கொடியவள், மற்றவர்களை ஏன் நான் நிந்திக்க வேண்டும்? பரதன் தனக்குத் தாயாக இவளைப் பெற்றானே! ஒரு நாளும் என்னால் இது செய்ய முடியாது கைகேயி! உன் காலைப் பிடித்துக் கேட்டுக் கொள்கிறேன். கொஞ்சம் இரக்கம் காட்டு" என்று கதறிக்கொண்டு தசரதன் கீழே தரையில் புரண்டான்.

மகாராஜாவாகப் பல்லாண்டுகள் ராஜ்ய பரிபாலனம் செய்து பெருங் கீர்த்தியைப் பெற்ற தசரதச் சக்கரவர்த்தியானவன், பூமியில் புரண்டு அழுதுகொண்டு, மனைவியின் பாதங்களைப் பிடித்து இறைஞ்சும் நிலையை என்னவென்று சொல்வது! சம்பாதித்த புண்ணியம் தீர்ந்ததும், யயாதி சுவர்க்கத்திலிருந்து அப்புறப்படுத்தப்பட்டுப் பூமியில் வீழ்ந்த காட்சியாக இருந்தது அது.

மகாராஜன் எவ்வளவு வணங்கி, எவ்வளவு தீனமாகக் கேட்டுக்கொண்டும், கைகேயி பிடிவாதமாக, "நீர் சத்திய சந்தர், சொன்ன சொல் தவறாதவர் என்று இவ்வளவுநாள் எல்லாரிடமும் பறைசாற்றி வந்தீர். தெய்வங்கள் சாட்சியாக எனக்கு வரம் தந்துவிட்டு, அதைப்புறக்கணிக்கப் பார்க்கிறீர். நீர் வார்த்தை தவறினால் என் உயிரை மாய்த்துக் கொள்வேன், இது நிச்சயம்" என்று முடிவாகச் சொல்லிவிட்டாள்.

"அப்படியானால் பாவி, ராமன் வனம் போவான், நான் சாவேன். நீ எனக்கும் என் குலத்துக்கும் பகையாகி, உன் விருப்பத்தையடைந்து என்ன சுகமடைய வேண்டுமோ அதை அடைவாயாக" என்றான் தசரதன்.

மறுபடியும் "ராமனைக் காட்டுக்கு அனுப்பி, நீ என்ன பிரயோஜனத்தைப் பெறுவாய் என்பதை நான் அறியவில்லை. உலகம் முழுவதும் உன்னை இகழ்வதைத் தவிர, வேறொரு பிரயோஜனமும் நீ அடையப்போவதில்லை. புத்திரப்பேறு இல்லாது பல்லாண்டு வருந்தி, பிறகு ஆண்டவன் அருளால் ராமனை அடைந்தேன். அவனை இப்போது காட்டுக்கு அனுப்புகிறேன், ஆஹா! என்ன பாக்கியத்தைப் பெற்றேன்!" என்று கிழ அரசன் அழுதான்.

பிறகு அவன் ஆகாயத்தை நோக்கி, "ஹ, நிசியே, நீ தீர்ந்து பொழுது விடிந்துவிட்டால் நான் என்ன செய்வேன்? பட்டாபிஷேகத்தை எதிர்பார்த்திருப்பவர்களுக்கு என்ன சொல்லுவேன்? ஆகாயமே! நட்சத்திரங்களுடன் எனக்காக அப்படியே நிற்பாயாக; ஐயோ! வேண்டாம். அப்படியானால் இந்தப் பாவியின் முகத்தில் விழித்துக்கொண்டே இருக்க வேண்டியதாகும்! சீக்கிரம் தீர்ந்து போவாய் நிசியே, விடிந்தால் இவள் முகத்தைப் பார்க்காமலிருக்கலாம்" என்று இவ்வாறு பேசிக்கொண்டு, உன்மத்த நிலையும் மூர்ச்சையுமாக மாறிமாறி வேதனைப்பட்டான், அப்பாவி தசரதன். அறுபதினாயிரம் ஆண்டுகள் ஆண்டு முதுமையடைந்த பேரரசன்.

"என் மேல் இரக்கம் கொள்வாய், கைகேயி! நான் கோபம் கொண்டு சொன்னதையெல்லாம் மறந்துவிடு. உனக்கு என் பேரிலிருந்து அன்பை வைத்துக் கேட்டுக் கொள்கிறேன். ராஜ்யம் உனக்குத் தந்தேன் என்றே வைத்துக் கொண்டு, ராமனுக்கு அதை நீ உன்னுடையதாக, உன்னுடைய கையால் கொடுத்து, நாளை நடக்கவேண்டிய பட்டா பிஷேகம் நடைபெறும்படி செய். நாளை ராமனுக்குப் பட்டா பிஷேகமென்று ராஜ சபையில் தீர்மானித்துப் பெரியோர் களுக்கும் ராமனுக்கும் நான் சொன்னதைப் பொய்யாக்க வேண்டாம். என்மேல் இரக்கம் கொள். ராமனுக்கு ராஜ்யத்தை நீயாகக் கொடு. உலகமுள்ள வரையில் நிற்கும் பெருங் கீர்த்தியை அடைவாய். என் விருப்பம், ஜனங்களின் விருப்பம், பெரியோர்களின் விருப்பம், பரதன் விருப்பமும் எல்லாமும் இதுவேயாகும். இதைச் செய்வாய் என் உயிரே, என் காதலியே" என்று மறுபடியும் அரசன் கொடிய கைகேயியின் காலைப் பிடித்து வேண்டிக் கொண்டான்.

"முடியாது; கொடுத்த வரத்தைப் பொய்யாக்காதீர். சத்தியம் சத்தியம் என்று பேசிக்கொண்டிருந்து, ஏன் இப் போது அசத்தியத்தில் புகப் பார்க்கிறீர்? அப்படிச் செய்தீ ரானால் என் உயிரை மாய்த்துக் கொள்வேன், அறிவீர். வீண் காலதாமதம் வேண்டாம்" என்றாள் கைகேயி.

* * *

"மந்திரத்துடன் கையைப் பிடித்துத் தீயின்முன் உன்னைக் கொண்டேன். இப்பொழுது உன்னை நீக்கினேன். எனக்கும் உனக்கும் பிறந்த மகனையும் நீக்கிவிட்டேன். இரவு தீர்ந்தது, பொழுது விடியப் போகிறது. பட்டாபிஷேகம் இல்லை. ராமன் எனக்கு உத்தரகிரியை செய்வான்" என்றான் அரசன்.

"வீணாகப் பிதற்றிக் கொண்டிருக்கிறீர். ராமனுக்குச் சொல்லியனுப்பி அவனை இங்கே உடனே வரவழைக்கவும்.

பரதனுக்கே ராஜ்யம் என்று சொல்லி, வனத்துக்கு அனுப்பி சத்தியத்தைக் காப்பாற்றவும், தாமதம் செய்யவேண்டாம்" என்றாள் கைகேயி.

"அப்படியா?" என்றான் அரசன்.

"சரி, என் மகன் முகத்தையாவது பார்ப்பேன். நான் இறப்பது நிச்சயம். உடனே அவனை வரச்சொல். இறப் பதற்கு முன் அவன் முகத்தையாவது பார்ப்பேன். சத்தியம் என்கிற கயிற்றினால் கட்டப்பட்ட இந்த மூடக் கிழவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை" என்று தீனச் சுரத்தில் சொல்லிவிட்டு, மறுபடியும் நினைவு இழந்தான்.

## 22. கைகேயி வியந்தாள்!

ஒரு பக்கம் இயற்கை வேகம் ராமனைப் பற்றிய அன்பு, மற்றொரு பக்கம் பிரதிக்ஞையை எவ்வாறு என் போன்றவன் பொய்யாக்கலாம் என்கிற தருமசங்கடச் சிக்கல். கைகேயி முடிவில் எப்படியோ இரக்கம் கொள்வாள், தருமசங்கடம் தீர்ந்து விடும் என்று தசரதன் எதிர்பார்த்தான். ஆனால், அது இல்லையென்று இப்போது முடிவாகத் தெரிந்து விட்டது.

இனி ஒரே ஒரு கடைசி ஆசை- "நான் தந்துவிட்ட வரப் பிரதிக்ஞையில் எவ்விதத்திலும் ராமன் கட்டுப்படவில்லை. என் பிரதிக்ஞையைப்பற்றி அவனுக்கென்ன தருமசங்கடம்? அவனுக்குப் பலம் இருக்கிறது. ஆதரவு இருக்கிறது. அவன் என் பேச்சைப் புறக்கணிக்கலாம். ஆனால் அவன் சுபாவத் துக்கு இது விரோதம். ஆயினும், ஒருவேளை தெய்வாதீனமாக என்னை எதிர்க்கும் எண்ணம் அவனுக்குத் தோன்றலாம். அப்படிச் செய்வானானால் என் சத்தியம் என்னால் குறை வின்றிக் காப்பாற்றப்பட்டதாகும். குலநீதி, தருமம், ஜனங் களுடைய விருப்பம் இவையும் அவன் எதிர்ப்பின் மூலம் வெற்றியடையலாம். ராமன் என் பேச்சைக் கேளாமற் போனால் எல்லாம் சரியாகிப்போகும்."

இவ்வாறு தசரதன் எண்ணினான். பித்ரு வாக்ய பரிபாலன தருமத்தை ராமன் கைவிடமாட்டான் என்ற விஷயத்தை தசரதன் மறந்துவிட்டு, இவ்வாறு குழப்பமும் துக்கமும் நிறைந்த தன் மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டதாகத் தோன்றுகிறது.

தன்னுடைய மரணத்தை எப்படியும் நிச்சயமாக எதிர் பார்த்தான். இந்த தரும சங்கடத்தில் இது அவனுக்குக் கொஞ்சம் ஆறுதல் தந்தது. பின்னால் வரப்போகும் கஷ்டங்களைத் தன்னுடைய கண்களால் பார்க்க வேண்டியதில்லையல்லவா?

மரணம் அருகில் வந்து நிற்பதைக் கண்டுவிட்டதும் பூர்வ நிகழ்ச்சிகள் ஞாபகத்துக்கு வந்தன. சிறு வயதில் தான் செய்த பாவம் ஞாபகத்துக்கு வந்தது. "அதன் விளைவை இப்போது அனுபவிக்கிறேன். ரிஷி குமாரனைக் கொன்று, அவருடைய வயோதிகப் பெற்றோர்களுக்கு எத்தகைய பெருந் துக்கம் உண்டாக்கினேன்! அது வீண்போகுமா? நானும் புத்திரனைப் பிரியும் சோகத்தை அனுபவித்தாலே அந்தப் பாபம் தீரும்" - இவ்வாறு தன் உள்ளத்தைத் தசரதன் சமாதானப்படுத்திக் கொண்டான்.

எப்படியாயினும் கொடிய மனைவி தன்னிடம் பெற்று விட்ட வாக்கை நிறைவேற்றுவதைத் தவிர, வேறு வழியில்லை என்று தீர்மானித்து விட்டான். ஆனபடியால், காரியக் கிரமத்தையெல்லாம் கைகேயிக்கு விட்டுவிட்டான்.

பொழுது விடிந்தது. முகூர்த்த காலம் நெருங்கி விட்டதென்று வசிஷ்ட முனிவரும் சிஷ்யர்களும் பொன் பாத்திரங்களில் புண்ணிய நதிகளின் ஜலமும், இன்னும் பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய பொருள்களும் எடுத்துக் கொண்டு அரண்மனை நோக்கி, நகரத்து ராஜவீதியில் சென்றார்கள். தெருவெல்லாம் மகோற்சவத்துக்காக அலங்கரிக்கப்பட்டு எங்கும் ஜனங்கள் நிறைந்து நின்றார்கள். "எப்போது? எப்போது?" என்று குதூகலமாகப் பேசிக்

கொண்டிருந்த ஜனங்கள், வசிஷ்ட முனிவரும் அவருடைய சிஷ்யர்களும் செல்வதைப் பார்த்ததும் அடங்கா மகிழ்ச்சி அடைந்தார்கள். நீர்க்குடங்கள், தானியங்கள், ரத்தினங்கள், தேன், தயிர், நெய், பொரி, தர்ப்பைப்புல், சமித்து, புஷ்பம், பால், கனிகள், யானை, குதிரை, புலித்தோலாசனம் இவையெல்லாம் வாத்திய கோஷத்துடன் செல்வதைக் கண்டதும், ஜனங்களுடைய ஆரவாரமும் உற்சாகமும் முன்னைவிட அதிகமாயின.

வசிஷ்டர் அரண்மனை வாயிலில் சுமந்திரனைக் கண்டார். "எல்லாரும் காத்திருக்கிறார்கள். சகல ஏற்பாடுகளும் செய்தாயிற்று என்று அரசனுக்கு உடனே தெரிவிக்க வேண்டும்" என்றார்.

சுமந்திரனும் கைகூப்பி வணங்கி, அரசன் படுத்திருந்த படுக்கை அறைக்கு வெளியிலிருந்து கொண்டு, வழக்கப்படி மங்கள ஸ்துதி செய்துவிட்டு, வசிஷ்டருடைய பிரார்த்தனையைத் தெரியப்படுத்தினான்.

"அரசனே, இந்திரனுக்குச் சமானமானவனே, இந்திரனுடைய சூதனான மாதலியைப்போல் நான் உம்மை எழுப்புகிறேன். எல்லாத் தேவர்களும் உமக்கு வெற்றி தருவார்களாக. பெரியோர்களும், படைத்தலைவர்களும், நகரத் தலைவர்களும் தரிசனத்துக்குக் காத்திருக்கிறார்கள். நிசிதேவி மறைந்தாள். காலையில் செய்ய வேண்டியது சகலமும் உம்முடைய ஆணையை எதிர்பார்த்து நிற்கிறது. அரசர்க்கரசே! எழுந்தருள வேண்டும்! வசிஷ்ட பகவான் பிராமணர்களுடன் காத்திருக்கிறார்" என்றான்.

அச்சமயம் அரசனோ பேச முடியாமல் சங்கடத்தின் உச்சியை அடைந்திருந்தான். ஆகவே, அரசனுக்குப் பதிலாக கைகேயி தைரியமாகச் சுமந்திரனிடம் சொன்னாள். "சுமந்திரரே! மகாராஜா ராத்திரி முழுவதும் ராமபட்டாபிஷேகத்தைப் பற்றியே பேசிக்கொண்டு தூங்காமல் கழித்தார்.

இப்போதுதான் அயர்ந்து கொஞ்சம் தூங்குகிறார். சீக்கிரம் சென்று ராமனை அழைத்து வாரும்" என்று சமத்காரமாகப் பேசிச் சுமந்திரனை ராமனிடம் அனுப்பினாள்.

தசரதன் தன் யோசனைக்கு ஒப்புக்கொண்டு விட்டான்; ஆயினும் அதைச்செய்து முடிக்கும் ஆற்றல் அவனுக்கு இல்லை. ஆனபடியால் இனிச் செய்யவேண்டியதை யெல்லாம் தானே செய்யவேண்டும் என்று கைகேயி தனக்குள் தீர்மானித்து விட்டாள்.

* * *

சுமந்திரன் ராமனுடைய அரண்மனைக்குச் சென்றான். சீதையும் ராமனும் மகோற்சவத்துக்கு ஆயத்தமாகிக் கொண்டிருந்தார்கள்.

அந்தச் சமயம் சுமந்திரன், "மன்னனும் கைகேயி அரசியும் உம்மை உடனே வரச்சொன்னார்கள்" என்று சங்கதியைத் தெரிவித்தான்.

ராமன் உடனே புறப்பட்டான். இந்தத் தாமதமும் நடவடிக்கைகளும் கண்டு, எல்லாருக்குமே கொஞ்சம் சந்தேகம் உண்டாயிற்று. ஆனாலும் அவர்களுக்கு விஷயம் விளங்கவில்லை. அதைப்பற்றிப் பேசவும் மனமில்லை. எல்லாம் நல்லதாகத்தான் முடியும் என்று அவரவர்கள் செய்ய வேண்டியதைச் செய்துகொண்டு போனார்கள்.

தெருக்களெல்லாம் உற்சவ அமர்க்களம். முகூர்த்தமோ அடுத்து வந்துவிட்டது. இதனிடையில் அரண்மனை அந்தப்புரத்தில், ஜனங்கள் கொஞ்சமும் எதிர்பாராத காரியம் நடந்து கொண்டிருந்தது.

'ஏன் வீணாகத் தாமதம் செய்கிறார்கள்? ஒருவேளை ஏதோ செய்ய வேண்டிய கிரியைகளும் முறைகளும் நீடித்துக்

கொண்டு போகிறது போலிருக்கிறது' என்று ஜனங்கள் சமாதானப்படுத்திக் கொண்டு காத்திருந்தார்கள்.

வீதிகளில் ஜனக்கூட்டம் வரவர அதிகரித்து வந்தது.

சுமந்திரன் ராமனை அழைத்து வந்தான். கூட்டமாக நின்ற ஜனங்களை மெதுவாக ஒதுக்கி வழி செய்து கொண்டு அவர்கள் சென்றார்கள். அந்தப்புரத்தில் தந்தையின் படுக்கை யறையில் ராமன் நுழைந்தான். நுழைந்ததும் பாம்பின்மேல் கால்வைத்தாற்போல் பயந்து திடுக்கிட்டான். அங்கே தந்தை யின் நிலையைப் பார்த்து ராமனுக்கு ஒன்றும் விளங்கவில்லை.

அரசன் ஏதோ பெருந் துக்கத்தில் மூழ்கிக் கிடந்தான். அவனுடைய முகம் மல்லிகைப் புஷ்பம் வெயிலில் உலர்ந்து போனால் எப்படியிருக்குமோ அப்படியிருந்தது.

தந்தையின் பாதங்களைத் தொட்டு வணங்கினான். பிறகு கைகேயியின் பாதங்களையும் தொட்டு, அவளையும் வணங்கினான்.

"ராம!" என்று ஒரு வார்த்தை தீனசுரத்தில் தசரதன் சொல்லி விட்டுச் சும்மா இருந்து விட்டான்; பேசவில்லை. ராமனுடைய முகத்தை நேராகப் பார்க்க அரசனால் முடிய வில்லை.

தன்னுடன் பேசாமலும், தன் முகத்தைப் பாராமலும் படுத்துக் கிடந்த தந்தையின் நிலையைப் பார்த்து ராமன் வியப்பும் பயமும் அடைந்தான்.

* * *

தாங்க முடியாத சோதனையிலிருந்து அரசனை பார்த்து, ஒன்றும் விளங்காமல் திகைத்து ராமன், 'அம்மா! இதென்ன ஆச்சரியமாக இருக்கிறது! எவ்வளவு கோபமாயி ருந்தாலும் என்னிடம் எப்போதும் இனிய பேச்சுப் பேசுவாரே தந்தை? ஏதாவது நானும் அறியாமல் தவறு செய்துவிட்டேனா? ஏதாவது உடம்பில் திடீரென்று அசௌக்

கியம் ஏற்பட்டு விட்டதா? யாராவது ஏதாவது அவருக்குக் கோபமூட்டும்படியான சொல் பேசிவிட்டார்களா? தயவு செய்து நடந்ததை எனக்குச் சொல்ல வேண்டும். இதை என்னால் பொறுக்க முடியவில்லை" என்றான்.

இப்படியாக ராமன் துக்கத்திலும் வியப்பிலும் மூழ்கிக் கேட்ட கேள்வியினால், கைகேயி கூச்சம் கொஞ்சமுமின்றித் தன் காரியத்தை நிறைவேற்றிக்கொள்ளும் சமயம் வந்துவிட்டது என்று எண்ணிப் பேசினாள்.

"அரசருக்கு யார் பேரிலும் கோபமில்லை. ஏதோ அவர் மனத்திலுள்ள விஷயத்தை உன்னிடம் சொல்லப் பயப் படுகிறார், அவ்வளவுதான். நீ மனம் நொந்து கொள்வாய் என்று உன்னிடம் விஷயத்தைச் சொல்லப் பயப்படுகிறார். அதனால் பேசமுடியாமலிருக்கிறார். முன்னொரு சமயம் என் னிடம் சந்தோஷப்பட்டு எனக்கு வரம் தந்தார். இப்போது, 'ஏன் தந்தேன்' என்று பாமரர்களைப்போல் அரசர் வருத்தப் படுகிறார். இது அவருக்குத் தகாததல்லவா! கொடுத்தேன் என்று ராஜாவான ஒருவர் பிரதிக்ஞை செய்துவிட்டுப் பின் வருத்தப்படுவது மடமையல்லவா? அவர் கொடுத்த வரத்தைச் செய்து தீர்க்கவேண்டியது உன் கையில் இருக்கிறது. உனக்குச் சொல்லப் பயந்துகொண்டு, கொடுத்த வரத்தையும், செய்த பிரதிக்ஞையையும் பொய்யாக்கலாம் என்று யோசிக்கிறார். இது அவருக்குத் தகுமா? 'பயப்பட வேண்டாம், எனக்காக நீர் சத்தியத்தைக் கைவிடவேண்டாம்,' என்று நீ அவருக்குத் தைரியமும் உறுதியும் சொல்லி விட்டால் அவர் பேசுவார். அவருக்கு நீ இந்த உதவி செய்யவேண்டும். எல்லாம் உன் கையிலிருக்கிறது. 'செய்து தீர்க்கிறேன். அதற்குத் தடை யில்லை' என்று நீ எனக்கு உறுதி கூறினால் விஷயத்தைப் பிற்பாடு சொல்கிறேன்" என்றாள்.

இதைக் கேட்டு ராமன் வருத்தம் மேலிட்டு, அரசன் பக்கத்தில் நின்ற கைகேயிக்குச் சொன்னான்:

"அம்மா! என்னைப் பற்றியா இந்தக் கஷ்டம்? என்னைப் பற்றி நீங்கள் இம்மாதிரி சந்தேகப்படலாகாது. நான் அவ்வளவு கெட்டுப்போனவன் அல்ல. என்னைத் தந்தை நெருப்பில் விழச்சொன்னால் விழுவேன் என்று நீங்கள் அறி வீர்கள். இதோ தாயே, சபதம் செய்கிறேன். ஒன்றும் விசா ரிக்க வேண்டியதில்லை. அரசர் இதைச் செய்யவேண்டும் என்று, என்னால் ஆகக்கூடியதை ஆணையிடலாம். அவர் ஆணை எதுவாயினும் அதைச் செய்வேன், சத்தியம்" என்றான்.

* * *

இப்படி ராமன் சொன்னதைக் கேட்டதும் 'முடிந்தது காரியம்' என்று மகிழ்ச்சி அடைந்தாள் கைகேயி. அரசனும் 'இனித் தப்புவதற்கு வழியில்லை' என்று துக்கத்தில் மூழ் கினான்.

அதன்மேல் நாணம், இரக்கம் கொஞ்சமுமின்றி, மகா பயங்கரமான விஷயத்தைப் பாவி கைகேயி சொன்னாள்.

"ராம்! நீ சொன்னமொழி, உனக்கே தகும். தந்தையைச் சத்தியவானாகச் செய்வதைவிட ஒரு மகனுக்கு வேறு என்ன மேலான காரியம்? விஷயத்தை இப்போது சொல்லுகிறேன். கேள். ஏன் உனக்குச் சொல்ல அரசர் பயந்தார் என்பது விளங்கும். சம்பரனுடன் உன் தந்தை சண்டையிட்டுக் காயம்பட்ட காலத்தில் அவருடைய உயிரைக் காப்பாற்றிய எனக்கு அவர், நான் இஷ்டப்பட்ட இரண்டு வரங்களைத் தருவேன் என்றார். 'இப்போது வேண்டாம், வேண்டும் போது கேட்பேன்' என்றேன். 'அப்படியே ஆகட்டும்' என்று அவரும் ஒப்புக்கொண்டார். இப்போது அந்த வரங்களைக் கேட்டுப் பெற்றேன். பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டும் என்றும், இன்றே நீ இராஜ்யத்தைவிட்டு விலகித் தண்டகாரண்யம் போகவேண்டும் என்றும், அந்த இரண்டு வரங்களையும் அரசனிடம் அடைந்திருக்கிறேன். உன்னுடைய

பிரதிக்ஞையையும் தந்தையின் சத்தியத்தையும் காப்பாற்றுவாயாக. நீயும் பொய்யனாகப் போனால், அது வேறு சங்கதி. இல்லையேல் நான் சொல்வதைக் கேள்; தாமதமில்லாமல் உனக்கு ராஜ்யாபிஷேகம் செய்ய வைத்திருக்கும் ஜலத்தைக் கொண்டே பரதனுக்குப் பட்டாபிஷேகம் நடத்திவிடச் சொல். ஜடையும் மரவுரியும் தரித்து நீ உடனே தண்டகவனம் செல். சம்மதித்தேன் என்று சொல்லி அரசனுடைய பெருங்கஷ்டத்தைத் தீர்ப்பாயாக. இது உனக்குப் புகழ் தரும்" என்றாள்.

* * *

'புகழ் தரும்' என்று கைகேயி வாயால் வந்த வார்த்தை உண்மையே அல்லவா? இமயமலையும் கங்கையாறும் சமுத்திரமும் இருக்கும் வரையில், இராமனுடைய புகழ் இருந்தே வரும்!

இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த தசரதனுடைய உள்ளம் கொதித்தது. ஆனால் கைகேயியின் வியப்பே வியப்பு! ராமனுடைய முகத்தில் வருத்தம் என்பது அடையாளத்துக்கூட காணப்படவில்லை. சக்கரவர்த்தித் திருமகன் புன்னகை செய்து பேசினான்.

"அப்படியா, தாயே! அரசனுடைய பிரதிக்ஞை நிறைவேறும்படி சடையும் மரவுரியும் தரித்து இன்றைக்கே வனம் செல்கிறேன்" என்றான்.

ராமன் கைகேயியைப் பார்த்துக் கம்பீரமாகப் பேசலானான்.

"தாயே, எனக்கு எள்ளளவும் வருத்தம் இல்லை, பரதனுக்கு நான் எதையும் கொடுத்துவிட்டுப் பரம சந்தோஷத்தை அடைவேன், நீங்கள் யாரும் என்னைக் கேட்காமலே நான் அவனுக்குத் தருவேன். அப்படியிருக்கத் தந்தையின் ஆணை ஏற்பட்டதும் ஒரு கணம் தயங்குவேனா? அரசர் சந்தேகப்பட்டதுதான் எனக்கு வருத்தம் தருகிறது.

அவர் இஷ்டத்தை எனக்கு நேரில் சொல்ல அவருக்கு ஏன் கூச்சம்? அவருக்கு நான் அடிமையல்லவா? அவருடைய வாக்கைச் சத்திய வாக்காகச் செய்வதைவிட எனக்கு வேறு என்ன புகழ்? என்ன பாக்கியம்? இதற்காகவா தந்தை எப்போதும்போல் பிரியமாகப் பேசாமல் முகத்தை எனக்குக் காட்டாமல் கஷ்டப்பட்டது? அவரே நேரில் என்னை அழைத்து இந்த ஆணையைச் சொல்லாததுதான் என்னுடைய குறை. இன்றே ஒரு விசாரமுமில்லாமல் வனம் செல்கிறேன். உடனே தூதர்களை வேகமாகப் போகச் சொல்லி, பரதனை அழைத்து வர ஏற்பாடு செய்யுங்கள். தாமதிக்க வேண்டாம்" என்றான்.

சக்கரவர்த்தித் திருமகன் முகத்தில், அந்தக் கணத்தில் தேஜஸ், நெய்விட்ட அக்கினிபோல் வளர்ந்தது. பாவி கைகேயியோ தான் வெற்றியடைந்து விட்டதாக எண்ணிச் சந்தோஷப்பட்டாள். வரப்போகும் துக்கத்தை அவள் அறியவில்லை. பெற்ற மகனுடைய இகழ்ச்சியைவிட வேறு என்ன வேண்டும் ஒரு ஸ்திரீக்குத் துக்கம்! இது பின்னால் விவரிக்கப்படும். ஆசை என்பது கைகேயியை ஏமாற்றி விட்டது. சொந்த மகனான பரதனுடைய குணத்தைக் கூட அவள் சரியாக உணர முடியாமல் செய்துவிட்டது.

* * *

நான்கு பக்கமும் வழியடைத்து அகப்பட்டுக்கொண்ட காட்டு யானைப்போல் தசரதன் தவித்துக்கொண்டிருக்க, கைகேயி அனாவசியமாக, "அரசன் பேசுவதற்காகத் தாமதிக்க வேண்டாம்" என்று ராமனைத் துரிதப் படுத்தினாள்.

"தாயே! என்னை நீங்கள் அறிந்துகொள்ளவில்லை" என்றான் இராமன். "தந்தையின் சொல்லை நிறைவேற்றுவதைவிட நான் எந்தச் சுகத்தையும் அதிகமாக மதிக்கவில்லை. பொருளுக்கு ஆசைப்படுவேன் என்று எண்ண வேண்

டாம். பரதன் ராஜ்யபாரத்தை வகித்து மூப்படைந்த தந்தையைச் சரியாகப் பார்த்து வரவேண்டும். அது என்னுடைய மகிழ்ச்சியாகும்."

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த தசரதன் 'ஓ'! என்று பெருங்குரலிட்டு அழுதான். அரசனையும் கைகேயியையும் பாதங்களைத் தொட்டு வணங்கிவிட்டு, ராமன் துரிதமாக அவ்விடத்தைவிட்டு வெளியே சென்றான்.

* * *

வெளியே இருந்த லக்ஷ்மணன் கண்கள் சிவந்து மகாகோபத்துடன் ராமன் பின் சென்றான்.

வழியில் அபிஷேக ஜலக் குடங்களைக் கண்டு, முகத்தில் கொஞ்சமும் வருத்தக்குறி இல்லாமல் கம்பீரமாக அவற்றை வலம் செய்து ராமன் சென்றான். தன்னுடன் வந்த வெண் குடை, சாமரம் முதலியவைகளை விலக்கிவிட்டு, அங்கிருந்த நகரத்து ஜனங்களையும் கலைந்துபோகச் சொல்லிவிட்டு, ஜிதேந்திரியனான சக்கரவர்த்தித் திருமகன், கௌசல்யா தேவியின் மனைக்குச் சென்றான்-தாயிடம் விஷயத்தைச் சொல்லி, உடனே வனம் செல்வதற்கு விடை பெற்றுக் கொள்வதற்காக.

* * *

இந்தக் கட்டத்தில், நிகழ்ந்த உணர்ச்சி வேகங்களை எழுத்தில் படித்துவிட்டு மட்டும் உணர்வது கஷ்டம். அவரவர் பெற்றிருக்கும் கற்பனைச் செல்வத்தை உபயோகித்து, அகக் கண்ணால் நிகழ்ச்சிகளைக் காண வேண்டும். தசரதன் உள்ளமும், சக்கரவர்த்தித் திருமகன் உள்ளமும், ஆசைக் கிரையான கைகேயியின் உள்ளமும், வாழ்க்கையில் தினமும் அடிபடும் நம்முடைய உள்ளங்களே.

வால்மீகி அகக்கண்ணால் முற்றிலும் ராம சரித்திர நிகழ்ச்சிகளைக் கண்டு பாடினார்; கம்பரும் அப்படியே பாடி

னார். ஆழ்வார்களும் கண்டு உள்ளம் உருகிப் பாடியிருக்கிறார்கள். எந்த இடத்தில் எங்கேயாயினும் ராமாயணக் கதையை யாரேனும் சொன்னால், அவ்விடம், "பாஷ்பவாரி பரிபூரணலோசன" த்துடன் 'கண்களிலிருந்து நீர் பெருக' ஆஞ்சனேயர் கைகூப்பி நின்று கேட்டுக் கொண்டிருப்பார் என்று பெரியோர்கள் சொல்வதின் கருத்து இதுவே.

இந்தக் கட்டத்தைப் பக்தியுடன் படிக்கும் ஆண், பெண்குழந்தைகளுக்கு, எப்போது எந்தத் துக்கம் வந்தாலும், ஸ்ரீராமன் அருளால் அந்தத் துக்கத்தைத் தாங்கும் சக்தி உண்டாகுக.

## 23. கோபமும், சமாதானமும்

ராமன் கௌசல்யாதேவியின் மனைக்குச் சென்றான். அங்கே பிராமணர்கள், விருந்தினர்கள், ஸ்திரீகள் எல்லாரும் சந்தோஷமாகப் பட்டாபிஷேகத்தை எதிர்பார்த்துக் கூடியிருந்தார்கள். மூன்றாம் கட்டுக்குள் கௌசல்யாதேவி வெண் பட்டு உடுத்தி, ஓமத்தீயில் நெய்விட்டுக் குமாரனுடைய க்ஷேமத்திற்காகத் தேவதைகளைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள். ராமன் வந்ததும் எழுந்து அவனை ஆலிங்கனம் செய்து, உச்சி மோந்து யுவராஜா ஆகப்போகும் குமாரனுக்குத் தகுந்த ஓர் ஆசனத்தைக் காட்டி உட்காரச் சொன்னாள்.

"அம்மா! எனக்கு இந்த ஆசனம் தகாது; கீழே தர்ப்பைப் புல் பரப்பி உட்கார வேண்டிய தபஸ்வி நான். தங்களுக்கு வருத்தம் தரக்கூடிய சமாசாரத்தைக் கொண்டு வந்திருக்கிறேன். பொறுத்துக் கொண்டு என்னை ஆசீர்வதிக்கவேண்டும்" என்று கூறிச் சுருக்கமாக நடந்த விஷயத்தைக் கௌசல்யைக்குச் சொன்னான்.

"அரசர் இராஜ்யத்தைப் பரதனுக்கு அளிக்க விரும்புகிறார். நான் பதினான்கு வருஷம் தண்டகாரண்

யத்தில் வனவாசம் செய்யவேண்டும் என்பது அரசருடைய ஆணை. உங்களிடம் சொல்லி விடைபெற்றுக்கொண்டு, இன்றே நான் செல்லவேண்டும்" என்றான்.

இதைக் கேட்டதும் வாழை மரம் அறுபட்டுக் கீழே விழுவதுபோல் கோசலை தரையில் விழுந்தாள். லக்ஷ்மணனும் ராமனும் அவளை எடுத்துத் தடவிக்கொடுத்து உட்கார வைத்தார்கள்.

"என் இதயம் இரும்போ? கல்லோ? நான் இன்னும் உயிருடன் இருக்கிறேனே!" என்று மகனைக் கட்டிக்கொண்டு அழுதாள்.

லக்ஷ்மணனுக்குக் கௌசல்யா தேவியின் துக்கத்தைப் பார்த்துச் சகிக்கவில்லை. அரசன்மேல் கடுங்கோபம் மேலிட்டுப் பேச ஆரம்பித்தான்.

"கொடும் பாதகங்கள் செய்த துன்மார்க்கர்களுக்கு விதிக்கும் தண்டனையை ராமச்சந்திரனுக்கு இந்தக் கிழ அரசர் விதித்திருக்கிறார். ராமன் என்ன குற்றம் செய்தான் என்று கண்டு இந்தப் பிராயச்சித்தத்தை விதித்தார்? எவனும் ராமன் பேரில் ஒரு குற்றம் சாட்டினதில்லை. மூடனாய்ப் போனார் நம் தந்தை. கிழ வயதில் காதலின் காரணமாகப் புத்தியை இழந்தார். இவர் அரசராக இருக்க இனித் தகுந்தவரல்லர். ஸ்திரீயின் பேச்சைக்கேட்டு அதருமம் செய்யும் ஒருவர் எப்படி அரசராக இருக்கலாம்? பகைவர்கள்கூட உன்னைக் கண்ட மாத்திரத்தில் உன்மேல் அன்பு செலுத்துவார்கள், உன்னை வனம் போகச் சொல்லுகிறார் மூடர். அண்ணா! நீயும் நானும் சேர்ந்து இவரைத் தகர்த்து விட்டு, ராஜ்யத்தை இன்று முதல் ஆள்வோம். யார் நம்மை எதிர்க்கத் துணிவார்கள்? எதிர்க்கத் துணிந்தவர்களை ஹதம் செய்வேன். நீ எனக்கு அநுமதி கொடுத்தால் போதும், நான் ஒருவனே பார்த்துக் கொள்ளுகிறேன். பரதன் ராஜ்ய பதவிக்கு வருவதாம். நீ வனம் புகுவதாம்! உலகம் சிரிக்கும்.

இதற்குச் சம்மதிக்கவேண்டாம். நான் இதைப் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது. நம்மை எதிர்ப்பவர்களை ஹதம் செய்துவிட்டு, எந்த இடைஞ்சலுமில்லாமல் நீ ஆட்சி புரிந்து வரும்படி நான் பார்ப்பேன். இந்தச் சக்தி எனக்கு உண்டு. சூரியன் உதிப்பதற்குப் பதிலாகப் பெரிய இருள் உண்டாகி விட்டது. பட்டாபிஷேகம் எதிர்பார்த்துக் கொண்டிருக்க, வனவாசம் என்கிறார் அரசர். இந்த அதருமத்தைப் பொறுத் துக்கொண்டு நயமாகப் பேசுவதில் பயனில்லை. என்னால் இதைச் சகிக்க முடியாது. நான் காணும் என் தருமத்தை நடத்தியே தீருவேன். அம்மா நீ பார்,ராமா நீயும் பார் என் சக்தியை" என்றான்.

லக்ஷ்மணன் சொன்னது கௌசல்யைக்கு ஆறுதல் தந் தது. ஆயினும் புருஷனை ராஜ்யாதிகாரத்தினின்று நீக்கி விட்டு, ராஜ்யத்தை ஆக்கிரமிப்பது போன்ற,அதற்கு முன் என்றும் கேளாத பேச்சுக்களைக் கேட்டு பயந்தாள்.

"ராம! லக்ஷ்மணன் சொல்வதையெல்லாம் சரியாக ஆலோசித்துப் பார். காட்டுக்குப் போகவேண்டாம். போனால் நான் தனியாக எப்படி இங்கே சத்ருக்களிடையில் இருக்க முடியும்? உன்னுடன் நானும் வந்துவிடுகிறேன்!" என்றாள்.

தம்பி சொன்னதைச் சாந்தமாகக் கேட்டுக் கொண்டி ருந்தான் ராமன். லக்ஷ்மணனுடைய ரோஷம் பொங்கி வடிய வேண்டும்; அதை முற்றிலும் அடக்க இயலாது என்று எண்ணிக் கோபம் தீரப் பேசவிட்டான்.

பிறகு கௌசல்யா தேவியை நோக்கி, "தாயே! என்னுடன் யாரும் காட்டுக்கு வரும் பேச்சு வேண்டாம். வயோதிக அரசருக்கு நீங்கள் சிசுருஷை செய்துகொண்டு, பொறுமையுடன் இங்கேயே இருப்பது உங்கள் கடமை. மகாராஜனைப் புருஷனாகக் கொண்ட பட்டமகிஷி, எவ் வாறு புருஷனை இழந்த ஒரு ஸ்திரீயைப்போல் வனத்துக்கு என்கூட வரலாம். அது தகாது. நான் வனவாசம் முடிந்து

திரும்பி வரப்போகிறேன். எல்லாரும் சுகமாகப் பல்லாண்டு வாழ்வோம். தந்தையின் வாக்கு தருமமோ அதருமமோ, சுயமாகச் சொன்னதோ, பிறர் சொல்லக் கேட்டு மோசம் போய்ச் சொன்னதோ, எப்படியாயினும் சரி, அதைச் சிரமேற்கொண்டு நிறைவேற்றுவது என் கடமை. இந்தத் தருமத்தை நான் புறக்கணித்துவிட்டு எந்தப் பொருளைப் பெற்றும், எந்தப் பதவியை வகித்தும் சுகமோ புகழோ பெற முடியாது" என்று கூறி, லக்ஷ்மணனைப் பார்த்து, "லக்ஷ்மணா, நீ சொல்லும் யோசனை முற்றிலும் தவறு. உன் சக்தியை நான் அறிவேன், சந்தேகமேயில்லை. எல்லாரையும் தோற் கடித்து ஹதம் செய்து, எனக்கு நீ ராஜ்யம் சம்பாதித்துக் கொடுப்பாய். என்மேல் இருக்கும் அன்பும் எனக்குத் தெரியும். ஆனால் அது நம்முடைய வம்சத்துக்குத் தகாது. பித்ரு வாக்கு பரிபாலனம் என்பது சிறந்த தருமம். அதை இழந்து வேறு எதைச் சம்பாதித்தாலும் ஈடு ஆகாது" என்றான்.

இவ்வாறு இருவரையும் சமாதானப்படுத்த முயன்றான் ராமன். லக்ஷ்மணனுடைய கோபம் அவ்வளவு சுலபமாகத் தணியுமா? தன்னைப்பற்றிய விஷயமாக இருப்பின், ஒரு வேளை கோபம் எளிதில் தணியும். ராமனுக்கு இந்தத் துக்கம் கொஞ்சமும் காரணமின்றி மிக அநியாயமாய் நேர்ந்ததே என்கிற கோபம் அவனைவிட்டு அகலவில்லை. படம் எடுத்துச் சீறும் நாகப் பாம்பைப்போல், கண்களின்றும் கோபப் பொறிகள் பறந்து கொண்டிருந்த லஷ்மணனைத் தனியாக உட்கார வைத்து, ராமன் நிதானமாகப் பேசினான்.

"தம்பி, எனக்கு நீ வெளியில் நடமாடும் உயிரல்லவா? நான் சொல்லுவதைக் கேள். நீ தைரியசாலி. உன் கோபத்தையும், என்னைப் பற்றிய துக்கத்தையும் நீ அடக்கியாள வேண்டும். அது உன்னைப் பிடித்துக் கொண்டு வெறியாட்டமாட இடம் கொடுக்காதே. தருமம் என்பதைப் பலமாகப் பற்றிப் பிடித்து, இப்போது ஏற்பட்ட அவ மானத்தை ஒரு பெரிய சந்தோஷமாக மாற்றுவோம். பட்டா

பிஷேகத்தை முற்றிலும் மறந்துவிட்டு, நம் கருத்தை யெல்லாம் வேறு துறையில் செலுத்துவோம். நம்மைப் பெற்ற தந்தையின் நிலை இப்போது என்ன என்பதை நன்றாக ஆலோசிப்போம். அவருக்கு ஏற்பட்டிருக்கும் பயம் என்னவென்பதை நாம் உணர்ந்து நடந்து கொள்ளவேண்டும். எந்தக் காரணத்தைக் கொண்டோ கொடுத்துவிட்ட ஒரு வரத்தை இல்லையென்று இப்போது சொன்னால், அசத்தி யத்தில் இறங்கினதாகும்; பாவம் வந்து சுற்றிக்கொள்ளும்; இதுவரையில் அவர் நடத்திய சகல தருமமும் தானமும் புண்ணிய கருமங்களும் பயனின்றிப் போகும். இந்தப் பெரும் பயத்தினால் நம் தந்தை வேதனைப்படுகிறார். அவருடைய பயத்தைத் தீர்ப்பதல்லவோ நம்முடைய கடமை? என்னைப் பற்றி வருந்துகிறார். எனக்கு வருத்தம் கொஞ்சமுமில்லை. உனக்கும் வருத்தமில்லையென்று அவருடைய சந்தேகத்தை முற்றிலும் போக்கி, அவருக்கு நாம் வழி ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும். நமக்கு உயிர் கொடுத்த தந்தையின் பயத்தைப் போக்கி, அவர் மனம் நிம்மதியடையச் செய்வது புத்திரர்களாகிய நம்முடைய கடமை. பரலோகத்தைப் பற்றி நம்முடைய தந்தை பயப்படுகிறார். அந்தப் பயத்தை நாம் போக்கவேண்டும். இதுவரையில் நாம் அவருக்கு எள்ளளவும் துக்கமோ அதிருப்தியோ தந்ததில்லை. இப்போது நாம் அவர் பரலோகத்தைக் குறித்துப் பயப்படுவதற்குக் காரணமாய் விட்டோம். அதைச் சுலபமாக நாம் தீர்க்கலாம். அப்படிச் செய்யாமல் அவருடைய சங்கடத்தை அதிகப் படுத்தலாமா? இந்தக் காரணத்தினால், லக்ஷ்மணா, பட்டாபிஷேகத்தைப் பற்றி முற்றிலும் என் மனம் விலகி, வனம் போவதிலேயே ஈடுபட்டுவிட்டது. நான் காட்டுக்குப் போய்ப் பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்விப்பதே என்னுடைய ஆசையும் மகிழ்ச்சியுமாகிவிட்டது. இதைத் தாமதப்படுத்தினால் கைகேயிக்குச் சந்தேகம் உண்டாகும். ஆனபடியால் இன்றே வனம் சென்று அவளுடைய மனம் நிம்மதியடையச் செய்ய

வேண்டும்; சத்தியப் பிரதிக்ஞையைப் பற்றிய பயம் தீர்ந்துபோய் நம் தந்தை சுகமாக இருப்பார். நான் துயரமடைவேன் என்றல்லவா அவர் வேதனைப்படுகிறார்; எனக்குக் கொஞ்சமும் துக்கமில்லை என்று அவருக்குத் தெளிவாகச் செய்தால், அவருடைய வேதனை அவரை விட்டு விலகும். இதனாலேதான் நான் அவசரப்படுகிறேன். கைகேயியைப் பற்றி நாம் கோபித்துக் கொள்ளக் கூடாது. நம்மிடத்தில் அவள் இதுவரையில் எவ்வளவு பிரீதி வைத்திருந்தாள்! திடீர் என்று இம்மாதிரியான எண்ணம் அவளுக்கு உண்டாவது விதியின் காரியம். நாம் அவளை நிந்திக்கலாகாது. மனிதர்கள் ஏதேதோ சங்கற்பம் செய்வார்கள். ஆனால் விதி வேறு விதமாகத் தீர்த்துவிடுகிறது. இது கைகேயியினுடைய காரியம் அல்ல. விதி அவளை ஒரு அறிவில்லாத கருவியாகப் பயன்படுத்தியிருக்கிறது. பழியைச் சுமக்கும் துக்கம் அவளுக்கு வந்து சேர்ந்திருக்கிறது. அவளிடத்தில் நாம் வைத்து வந்த அன்பு அப்படியே இருக்கவேண்டும். வஞ்சக எண்ணம் அவள் உள்ளத்தில் முந்தியே இருந்திருந்தால், அவள் நடவடிக்கை வேறு விதமாக இருந்திருக்கும். திடீர் என்று இந்த விதம் நிர்தாட்சண்யமாக 'ராமனே, நீ வனம்செல்' என்று தன் வாயாலேயே சொல்லுவதற்குக் காரணம் தெய்வச் செயலே, சந்தேகமில்லை. அவள் மேல் நாம் கோபம் கொள்ளலாகாது. அவள் எவ்வளவு மேன்மைக் குணம் பொருந்தியவள். நம்மைப் பெற்ற தாயைப் போல் பார்த்து வந்தவள்; பண்பாடு அடைந்தவள். புருஷன் எதிரில் இம்மாதிரி கூச்சமின்றி ஏன் நடந்துகொண்டாள்? இதற்குத் தெய்வத்தின் செயலல்லாமல் வேறு காரணமிருக்க முடியாது. விதியை யார்தான் எதிர்க்க முடியும்; மகாதீரர்களான ரிஷிகள்கூடத் தங்கள் தவத்திலிருந்து திடீரென்று வழுவிப் போயிருக்கிறார்கள். தெய்வத்தால் வந்ததை எதிர்க்கும் ஆற்றலைக் கைகேயி எப்படிப் பெறுவாள்? நம்முடைய மனோ தைரியத்தால் இந்த அனர்த்தத்தை நாம் சந்தோஷ

நிகழ்ச்சியாகச் செய்து விடுவோம். அதுவே நம்முடைய வீரத்துக்கு அடையாளம். லக்ஷ்மணா! வனம் செல்வதற்குச் சங்கற்பம் முறைப்படி செய்து, பெரியோர்களுடைய ஆசியைப் பெற்றுக்கொண்டு நான் உடனே போகவேண்டும். தாமதம் கூடாது. அபிஷேகத்துக்கென்று கொண்டு வந்திருக்கும் கங்கை ஜலத்தைக் கொண்டுவா! அதையே வனவாச விரத சங்கல்பத்துக்கு உபயோகித்துக் கொள்கிறேன். இல்லை! வேண்டாம்! அந்த ஜலம் பட்டாபிஷேகத்துக்கு உபயோகப்படவேண்டிய ராஜாங்கப் பொருள். அதை நாம் எப்படித் தொடலாம்? நாமே கங்கை சென்று ஜலம் கொண்டு வருவது நலம். தம்பி, விசனப்படாதே. ராஜ்யம், சம்பத்து இவை பற்றிச் சிந்தனை செய்யாதே. வனவாசம் எனக்கு மேன்மையான பாக்கியம். நம்முடைய சிறிய அன்னை பேரில் கோபிக்கவேண்டாம். அபிஷேக காரியங்களைத் தடுத்தது அவளல்ல. தெய்வம் வகுத்ததை அவள் பேரில் போடலாகாது." இவ்வாறு ராமன் சாந்தமாகத் தம்பிக்குத் தன் அந்தராத்மாவின் கருத்தை விவரமாக எடுத்துச் சொன்னான்.

இந்த இடத்திலெல்லாம் வால்மீகி உயோகித்திருக்கும் பதம், "தைவம்." சமஸ்கிருத இலக்கியங்களில் "தைவம்" என்றால் "விதி" என்று பொருள்; தைவம், திஷ்டம், பாக்கியம், நியதி, விதி இந்தப் பதங்களெல்லாம் எதிர்பாராததும் காரணமறியாததுமான நிகழ்ச்சிக்கு ஒரு பொருள் கொண்ட பலமொழிகள். தன்னுடைய முயற்சியோ அல்லது பிறருடைய சூழ்ச்சியோ இல்லாமல் நிகழும் நிகழ்ச்சியை இந்தப் பெயர்களிட்டுச் சொல்வார்கள். "எல்லாம் ஈசுவரனுடைய செயல்" என்ற கொள்கையினால், 'விதி'க்கும் ஈசுவர சங்கல்பத்துக்கும் கொஞ்சம் குழப்பம் ஏற்படுவது இயற்கை. ஆனால் ராமன் இந்தச் சந்தர்ப்பத்தில் தம்பிக்குச் செய்த உபதேசத்தில் கைகேயியினுடைய காரியத்தைத் தேவர்கள் தங்களுக்காகச் செய்த சூழ்ச்சி என்று அறிந்து சொல்லவில்லை. சாதாரண மக்கள் வாழ்க்கையில் 'விதியால் நடந்தது.

வருத்தப்படாதே. யார் பேரிலும் குற்றம் சொல்லுவதற் கில்லை.' என்று ஆறுதல் சொல்லுவது போல் சொன் னான்; அவ்வளவே.

கம்ப ராமாயணத்திலும் 'யாவராலும் மூட்டாத காலக் கடைத்தீயென மூண்டெழுந்த' இளையோனைப் பார்த்து ராமன் சொல்லுகிறான்:

நதியின் பிழையன்று; நறும்புன லிம்மை அற்றே;
பதியின் பிழையன்று பயந்து நமைப் புரந்தான்
மதியின் பிழையன்று; மகன்பிழை யன்று மைந்த!
விதியின் பிழை; நீ எதற்கு என்னை வெகுண்ட தென்றான்.

ராமன் சொன்ன சமாதானம் தம்பியின் கோபத்தைக் கொஞ்சநேரம் அடக்கிற்று. ஆனால் மறுபடியும் மிக வேகத் துடன் கோபம் பொங்கிவிட்டது: "இது விதியின் வேலை. சிற்றன்னையின் மதி கெட்டதற்கு அது காரணமாயிருக் கலாம். ஒப்புக் கொள்ளுகிறேன். அவளை நான் கோபிக்க வில்லை. ஆனால், விதியினால் அனர்த்தம் நடந்து விட்டது என்று சும்மா இருந்துவிடலாகாது. அனர்த்தத்தைச் சீர் படுத்தி நியாயத்தை ஸ்தாபிப்பது க்ஷத்ரியனுடைய தருமம். வீரபுருஷன் விதிக்கு அடங்கிப் போவதா? ராமனுக்குப் பட்டாபிஷேகம் என்று நகரமும் நாடும்பறைசாற்றிவிட்டு, எப்போதோ கொடுத்து மறந்துபோன வரங்களை இப்போது கிளப்பி உன்னைக் காட்டுக்குப் போ என்று ஒரு வஞ்சகர் உத்திரவிட்டால் அதை விதி என்று வைத்துக்கொண்டு அடங்கிப் போவது புருஷ லக்ஷணமல்ல. கீழான ஜனங்களே விதிக்குத் தலை வணங்குவார்கள். நம்மைப் போன்ற வீரர்கள் விதியை எதிர்த்து வெற்றி பெறவேண்டும். வீரியமில் லாதவர்களே விதிக்குத் தலை வணங்குவார்கள்; நான் அப்படிச் செய்ய முடியாது. இன்று பார்ப்பீர்கள், விதியின் பலத்துக்கும் வீரபுருஷனுடைய பலத்துக்குமுள்ள வித்தி யாசத்தை. விதி என்கிற மதயானையை நான் அடக்கித்

திருப்பிக்கொண்டு வரப் போகிறேன். உம்மை வனம் செல்லும்படி சூழ்ச்சி செய்தவர்களையே நான் காட்டுக்கு அனுப்புகிறேன். உமக்கு வனம் போகும் ஆசை இருந்தால் அதைப் பிறகு நிறைவேற்றிக் கொள்ளலாம். அதற்குத் தகுந்த காலம் உண்டு. பல்லாண்டு ராஜ்யத்தை ஆண்டு நம்முடைய முன்னோர் செய்து காட்டியபடி ராஜ்யத்தை புத்திரர் களிடத்தில் ஒப்புவித்துவிட்டு, வனம் சென்று தவம் செய்ய லாம். இப்போது உம்முடைய ஆட்சியை யாரேனும் எதிர்த் தால், அவர்களைத் தொலைத்துவிட நான் இருக்கிறேன். என் இரு புயங்களை அழகுக்காகவா பெற்றேன்? இந்த வில்லும் இந்தப் பாணங்களும் இடுப்பில் தொங்கும் இந்தக் கத்தியும் அலங்காரத்துக்கா? அல்லது இவை நாடக மேடை வேஷப் பொருள்களா? நான் உம்முடைய வேலைக்காரன். உத்தரவு தரவேண்டும். பிறகு பார்க்கவும், இந்த வேலைக்காரனுடைய வேலையை."

இவ்வாறு மறுபடியும் கொழுந்து விட்டெரியும் தீ போலக் கிளம்பிய லக்ஷ்மணனுடைய ஆத்திரத்தை ராமன் மெதுவாகத் தணித்தான்.

"நம்முடைய பெற்றோர் உயிருடன் இருக்கும் வரையில், அவர்களுடைய சொற்படி நடப்பது நம்முடைய கடமை. பிதாவின் கட்டளையை மீறும் காரியம் என்னால் முடியாது. அவர் சொன்ன சொல்லை நிறைவேற்றித் தந்து, அவரைச் சத்திய பிரதிக்ஞராக்குவது நம்முடைய முதல் கடமை. பெற்ற தாய் தந்தையரை அவமதித்து, தருமமே உருவான பரத னையும் கொன்றுவிட்டா ராஜ்யத்தைச் சம்பாதிப்பது? அப்படிச் செய்து விட்டாலும் அதனால் ஏதேனும் சந்தோ ஷம் அடைய முடியுமா? நான் சொல்லுவதைக் கேள்" என்று சொல்லி, லக்ஷ்மணனுடைய கண்ணில் பெருகிய கண்ணீரைக் கையால் துடைத்துச் சமாதானப்படுத்தினான்.

ராமபிரான் தன் கையால் கண்ணீரைத் துடைத்த பிறகும் கோபம் நிற்குமா? லக்ஷ்மணன் சாந்தமானான்.

# 24. சீதையின் தீர்மானம்

அந்தப்புரத்தில் நடந்த விஷயங்கள் இன்னும் நகரத்து ஜனங்களுக்குச் சரியாகத் தெரியவில்லை. ராமனோ வனம் செல்லுவதில் தன் முழு மனதையும் செலுத்தி, அதற்கு வேண்டியதையெல்லாம் மிகவும் துரிதமாகக் கவனித்து வந்தான்.

எல்லாக் காரியங்களும் முடித்துவிட்டுக் கௌசல்யா தேவியிடம் மங்கள ஆசீர்வாதம் பெறப்போனான்.

"நீ போய்விட்ட பிறகு நான் இந்த அயோத்தியில் எப்படி இருக்கமுடியும்? உன்னுடன் நானும் வனம் போவதே நலம்" என்று கௌசல்யை திரும்பச் சொன்னாள்.

வேண்டாமென்று ராமன் அவர்களுக்குக் காரணங் களையும் தருமத்தையும் எடுத்துக் காட்டினான். அரசனாகிய புருஷனை விட்டுவிட்டு, மகனோடு காடு செல்வது தகாது. மூப்படைந்த புருஷனுக்கு சிசுருஷை செய்துகொண்டு சுகமோ, கஷ்டமோ சமாளித்துக் கொண்டு, அயோத்தியில் இருப்பது தான் கடமை என்பது அவளுக்கே தெரிந்த விஷயமானாலும், துக்கத்தால் குழப்பமடைந்திருந்த அவளுக்கு ராமன் எடுத்துச் சொன்னான். தாயுள்ளத்தில் கிளம்பிய புகையை அகற்றி விட்டு, ராமன் சொல்லுவதே சரி என்று அவளும் ஒப்புக் கொண்டாள்.

மகனை சுவஸ்தி மந்திரங்கள் சொல்லி ஆசீர்வதித்து "தகப்பன் ஆணையைச் செய்து முடித்துவிட்டு, வெற்றியுடன் திரும்பி வருவாயாக" என்றாள்.

"பதினான்கு வருஷங்களையும் சுலபமாகக் கழித்து விட்டு வந்துவிடுகிறேன்" என்று ராமனும் சிரித்துக்கொண்டு சொல்லி அவளைத் தேற்றினான்.

தாயின் மங்கள ஆசிகளைப் பெற்ற சக்கரவர்த்தித் திருமகனுடைய முகத்தில் தேஜஸ் முன்னைவிட அதிகமாகப்

பிரகாசித்தது என்கிறார் வால்மீகி முனிவர். கடமையைக் கருதி ஒரு பெரிய தியாகம் செய்யச் சங்கற்பம் செய்பவர் களுடைய முகத்தைப் பார்க்கும் போதுதான் முனிவருடைய சொற்களின் பொருள் விளங்கும்.

அரசன் அழைத்துவரச் சொன்னான் என்று சுமந்திர னோடு சென்றானல்லவா ராமன்? தேரும் குடையும் சாமரங் களும் பரிவாரங்களுமாக எப்போது திரும்பிவருவான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் சீதை. தந்தையின் வாக்கை நிறைவேற்றுவதற்காக வனத்துக்குப் போகிறேன் என்று தன் காதலிக்கு எவ்வாறு சொல்லிச் சமாளிப்பது என்கிற ஏக்கத் தோடே சென்றான் ராமன். சாமரங்களின்றி ராமன் தனி யாகத் திரும்பி வந்ததைப் பார்த்தாள்.

"ஏன் என் நாதர் ஏதோ மனதில் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்? எது எப்படியாயினும் நம்மிருவருக்கும் உள்ள அன்பு ஒன்று போதாதா?" என்று எண்ணி, "என்ன விஷ யம், ஒரு மாதிரி இருக்கிறீர்களே?" என்று கேட்டாள்.

வெகு சுருக்கமாகவே ராமன் நடந்த விஷயத்தைச் சொன்னான். சொல்லிவிட்டு, "வைதேஹி, நீ என்னைவிட்டுப் பிரிந்து, இவ்விடம் தனியாக இருப்பதில் உனக்கு ஏற்படக் கூடிய துக்கம் எனக்குத் தெரியும். ஆயினும் தருமத்தை நீ நன்றாக அறிவாய். ஜனகனுடைய மகளுக்கு நான் சொல்ல வேண்டியதொன்றுமில்லை. மகாராஜாவிடமும் தாய்மார்கள் மூவரிடமும் ஜாக்கிரதையாக நடந்துகொள். மற்ற அந்தப் புரப் பெண்களைக்காட்டிலும் அதிகமாக நீ எதையும் எதிர் பார்க்கவேண்டாம். அரசனாகிய பரதனிடம் ஜாக்கிர தையாக நடந்துகொள்ள வேண்டும். உன்னிடம் அவனுக் குள்ள பிரியம் குறையாமலிருக்கும்படி நடந்துகொள்ள வேண் டும். வைதேஹி! என்மேல் நீ வைத்திருக்கும் அன்பு கொஞ்ச மும் குறையாமல் பார்த்துக்கொள்வாய் அல்லவா? நான் வனத்தில் பதினான்கு வருடம் கழித்து திரும்பி வருவேன்.

அதுவரையில் தெய்வ பூஜையை சரியாகக் காத்துவரவேண்டும். கௌசல்யாதேவி மிகவும் துக்கப் படுவாள். அவளைக் கவலையோடு பார்த்துவரவேண்டும். பரதனும் சத்துருக்கனனும் எனக்குப் பிரியமானவர்கள். அவர் களைச் சகோதரர்கள் போல் கருதி வருவாய். அரசகுல சுபா வங்களை மனத்தில் வைத்து நடந்துகொள். என்னை அதிக மாகப் புகழ்ந்து பேசாதே. நான் இன்றே வனம் போக வேண்டும். மனத்தை நிலையில் வைத்துக் கொண்டிருப் பாயாக" என்றான் ராமன்.

இந்தப் பேச்சைக் கேட்ட சீதைக்குப் பெருங்கோபம் வந்துவிட்டது! அன்பெல்லாம் கோப உருவாக வெளிப் பட்டது.

"நன்றாகப் பேசினீர்; தருமமெல்லாம் அறிந்த ராஜ குமாரரே! எனக்குச் சிரிப்பு வருகிறது. புருஷன் வேறு, மனைவி வேறு என்பதை இன்றுதான் உம்முடைய பேச்சில் அறிந்தேன். ராமச்சந்திரன் வனம் போகவேண்டியதானால், அந்த ஆணையானது சீதைக்கும்தான். வனத்தில் செல்லும் போது நான் முன்னால் சென்று, காட்டுப் பாதையிலுள்ள முள்ளையும் புல்லையும் மிதித்து, உமக்கு மெதுவாக்கிக் கொண்டு செல்வேன். பிடிவாதம் செய்கிறேன் என்று கோபம் கொள்ள வேண்டாம். என்னுடைய தாயும் தந்தையும் தருமத் தைப் பற்றி எனக்குச் சொல்லியிருக்கிறார்கள். நீர் இன்று எனக்குச் சொன்னது, நான் இதற்குமுன் கேட்டதற்கெல்லாம் முற்றிலும் விரோதமாக இருக்கிறது. நீர் செல்லும் இடம் நானும் கூடச் செல்லவேண்டும் என்பதே நான் கற்ற ஒழுக்கம். இன்றே நீர் வனம் போகவேண்டிய தானால், உம்முடன் நானும் இன்றே வருவேன். இதைப்பற்றி அதிகம் பேச வேண்டிய அவசியமில்லை. வனம் சென்றால் நான் கஷ்டப் படுவேன், துக்கப்படுவேன் என்றெல்லாம் எண்ணவேண்டாம். வனவாசத்தை மிகவும் சந்தோஷமாகவே அனுபவிப்பேன்.

உம்முடன் இருந்தால் வனவாசம் என்பது எனக்கு ஒரு விளையாட்டாகத்தான் இருக்கும். இங்கே என்னைத் தனியாக விட்டுப் போகாதீர். நீர் வனம் சென்றால் இங்கே எனக்கு என்ன வேலை? வனத்தில் என்னால் உமக்கு ஒரு இடைஞ்சலும் ஏற்படாது. காயும் கிழங்கும் சாப்பிட்டுக் கொண்டு நிச்சயமாக உமக்கு முன்னால் நான் நடந்து செல்வேன். உம்முடன் சென்று, மலையும் ஆறும் பார்த்து மகிழவேண்டுமென்பது என் ஆசை. பறவைகளும் புஷ்பங் களும் நிறைந்த வனத்தில், உம்முடன் நானும் இருந்து சந்தோஷமாக ஆறுகளில் குளித்தும், நித்திய கருமங்களைச் செய்தும் சுகமாகக் காலம் கழிப்பேன். உம்முடனில்லாமல் சுவர்க்கமும் எனக்கு வேண்டாம்.

"என்னைத் தனியாக விட்டுப் போனால் என் மரணம் நிச்சயம். நான் உம்மிடம் யாசிக்கிறேன். என்னை அழைத்துப் போக வேண்டும். என்மேல் இரக்கம் கொள்வீர். என்னை நிர்க்கதியாக்க வேண்டாம்" என்றாள் சீதை. கோபமாக ஆரம்பித்தவள் மிகவும் கெஞ்சிக் கேட்டு முடித்தாள்.

ராமன் காட்டில் ஏற்படும் பயம், கஷ்டம் எல்லாவற் றையும் விஸ்தாரமாக எடுத்துச் சொல்லி, "நீ காட்டுக்கு என்னுடன் வருவது தகாது" என்றான்.

சீதையின் கண்களில் நீர் பெருகிற்று. "புலி, சிங்கம், கரடி, பாம்பு இவையெல்லாம் உம்மைக் கண்டால்,தூரவிலகிச் செல்லும். நீர் சொல்லும் வெயில், மழை, காற்று, பசி, முள் அனைத்தையும் நான் சந்தோஷமாகப் பொறுத்துக் கொள்வேன். எனக்கு வனவாசத்தைப் பற்றிக் கொஞ்சமும் பயமில்லை. நீர் என்னை இங்கே விட்டுவிட்டுப் போனீரானால், என் உயிர் என்னை விட்டு நீங்கும். நிச்சயம்" என்று சந்தேகத்துக்கும் மறுபேச்சுக்கும் இடமின்றிச் சொல்லிவிட்டாள்.

சீதை அதனோடு விடவில்லை. "நான் மிதிலையிலிருந்த காலத்தில் பிராமணர்களும் ஜோதிடர்களும் இவளுக்கு வனவாசம் பிராப்தி என்று என்னைக் குறித்து என் தாயிடம் சொல்லியிருக்கிறார்கள். நான் தனியாக வனவாசம் செய்யமுடியுமா? உம்முடன் சேர்ந்து வனவாசம் செய்துவிட்டு, எப்படியும் நடக்கவேண்டிய அந்த நிகழ்ச்சியை சுகமாக முடித்து விடுவதற்கு இதுவே சமயம். வனவாசம் மிகக் கஷ்டம் என்பதெல்லாம் யாருக்கு? இந்திரியங்களை வசப்படுத்தாமலிருக்கும் ஸ்திரீ புருஷர்களுக்குத்தான். நீராவது நானாவது அவ்விதம் கஷ்டப்பட மாட்டோம். என்னைத் தடுக்காதீர்கள்" என்றாள்.

## 25. மரவுரி தரித்தார்கள்

ராமனுடன் சீதையும் வனம்போவது என்று நிச்சயமாகி விட்டது. ஏழை அந்தணர்களை அழைத்துச் சகல பொருள்களையும் தானம் கொடுத்துவிட்டு, வனவாசத்திற்குச் சீதை ஆயத்தமாகி விட்டாள்.

லக்ஷ்மணனும் அண்ணனுக்குச் சகாயமாக வனம் போகத் தீர்மானித்து ராமனுடைய சம்மதமும் பெற்றான். மூவரும் தந்தை தசரதனிடம் விடை பெற்றுக் கொள்வதற்காகச் சென்றார்கள்.

தெருக்களிலும் ராஜ வீதியின் இரு பக்கத்திலுமுள்ள மாளிகைகளின் உப்பரிகைகளிலும், சாளரங்களின் பின்னாலும் ஜனங்கள் கூட்டங்கூட்டமாக நின்று ராமலக்ஷ்மணர்களும் சீதையும் நடந்து போவதைக் கண்டார்கள்.

அடங்காத துக்கமும் வியப்பும் கோபமும் அடைந்து, "இப்படியும் ஓர் அரசன் உண்டா? இத்தகைய ராஜகுமாரனை எவனாவது வனத்துக்கு அனுப்புவானா? ஐயோ, பாவம்! காலால் தெருவில் நடந்து போகிறாளே சீதை! வனத்தில் வெயிலும் மழையும் அவள் தாங்குவாளா? இது என்ன விபரீதம்! சரி, இந்த நகரத்தைவிட்டு நாம் அனைவரும் ராஜ

குமாரர்கள் செல்லும் வனத்துக்கே போக வேண்டியது தான். வீட்டிலுள்ள பொருள்களையெல்லாம் எடுத்துக் கொண்டு நாமும் வனம் செல்வோம். ராமன் இருக்கும் வனமே நமக்கு அயோத்தி. இந்த நகரம் பாம்புகள் புகும் புற்றும், எலிகள் தோண்டிய வளைகளுமாக வீடுகளெல்லாம் பாழாகப் போக வேண்டியதுதான். கைகேயி இங்கே அரசு புரியட்டும். நாம் போகும் வனத்திலிருக்கும் காட்டு மிருகங்களும், பிணம் தின்னும் பறவைகளும் அந்த இடத்தை விட்டுவிட்டு அயோத் திக்கு வந்துவிடும்; இதுவே காடாகும். அது நகரமாகும்."

இவ்வாறெல்லாம் மக்கள் பேசிய பேச்சு ராமன் காதில் விழுந்தாலும், அதை அவன் கவனிக்காமல் சென்றான்.

அரசனுடைய மாளிகையின் வாயிலருகே, துக்கம் நிறைந்த முகத்தோடு மூலையில் உட்கார்ந்திருந்த சுமந்தி ரனைப் பார்த்து ராமன், இனிய குரலில், "மூவரும் அரசனைக் காண வந்திருக்கிறோம், தெரியப்படுத்தி உள்ளே வருவதற்கு அனுமதி கேட்டுவரவேண்டும்" என்று சொன்னான். சுமந்தி ரனும் அவ்வாறே சொல்லுவதற்குச் சென்றான்.

ராகுவால் பிடிக்கப்பட்ட சூரியனைப்போல், சாம்பல் நிறைந்த அடுப்புப்போல், நீர் வற்றிய தடாகத்தைப்போல் காட்சி தந்தார் சக்கரவர்த்தி.

சுமந்திரன் கைகூப்பி, துக்கத்தால் பேச்சு தடுமாறிச் சொன்னான்.

"அந்தப்புர வாயிலில் ராஜகுமாரன் நிற்கிறான். பிராம ணர்களுக்குத் தன் பொருள்களைக் கொடுத்துவிட்டு, எல் லோரிடமும் சொல்லி விடைபெற்றுக் கொண்டு, தண்டகாரு ணியம் போவதற்குமுன் தங்களைக் காண விரும்புகிறான்" என்றான். மன்னன் அழைத்து வரச்சொன்னான்.

ராமன் வந்து கொஞ்சம் எட்டி நின்று அஞ்சலி செய்தான். ராமனைக் கண்டதும் படுத்திருந்த அரசன் குதித் தெழுந்து மகனைக் கட்டியணைத்துக் கொள்ளச் சென்றான்.

கைகளை விரித்துக்கொண்டு தாவிப்போனவன், ராமனை யடைவதற்கு முன்னே மூர்ச்சையடைந்து தரையில் விழுந் தான்.

ராமனும் லக்ஷ்மணனும் கீழே விழுந்த மன்னனைத் தூக்கிப் படுக்கையில் உட்கார வைத்துத் தடவிக் கொடுத் தார்கள். பிறகு ராமன், "பெருமானே! விடை பெற்றுக் கொண்டு போக வந்திருக்கிறோம். என்னுடன் லக்ஷ்மணனும் வைதேஹியும் வனத்துக்கு வருகிறார்கள். எவ்வளவு சொல் லியும் கேட்காமல் அவர்கள் என்கூட வரவேண்டும் என்று தீர்மானித்திருக்கிறார்கள். எங்களுக்கு அனுமதி கொடுத்து ஆசிர்வதித்து அனுப்புவீராக" என்றான்.

அப்போது தசரதன், "கைகேயிக்கு நான் கொடுத்த வரத்தால் நான் கட்டுப்பட்டேன். நீ கட்டுப்படவில்லை; நீ என்னை மதிக்காமல் உன் பலத்தால் அயோத்தியைக் கைப் பற்றிக் கொண்டு அரசனாக இருக்கலாமே" என்றான்.

முன்னால் மனத்தில் மட்டும் இருந்த கருத்தை, இப் போது அரசன் வியக்தமாக வாய்விட்டுச் சொன்னான்.

"தாங்கள் இன்னும் ஆயிரம் வருடங்கள் ஆண்டு வரவேண்டிய இந்த ராஜ்யத்துக்கு நான் ஆசைப்படவில்லை; நான் பதினான்கு வருஷம் அரண்ய வாசம் செய்துவிட்டுத் திரும்பி வந்து, உம்முடைய பாதங்களைத் தொட்டு வணங் குவேன்" என்றான் சக்கரவர்த்தித் திருமகன். அரசன் சொன்னபடி ராமன் செய்யமாட்டான் என்று தீர்ந்து விட்டது.

"குலத்தின் புகழைப் பெருக்குவாய், மகனே! போய்த் திரும்பிவா, மங்களமாகுக! பயம் என்பது உன் வழியை விட்டு விலகி நிற்கக் கடவது. தருமத்தினின்று பிறழாத உத்தமனே! திடசங்கற்பம் கொண்ட வீரனே! யாரும் உன் எண்ணத்தை மாற்ற முடியாது. ஆனால் இன்றே போகவேண்டாம். ஒரு ராத்திரி இருந்துவிட்டுப் போகலாம். உன்னை நான்

மனதாரப் பார்த்துத் திருப்தி அடைய விரும்புகிறேன். நாளை விடிந்ததும் நீ போகலாம். ராம! நான் கைகேயியால் வஞ்சிக்கப்பட்டேன். அவளுக்கு நான் தந்த வரத்தால் கட்டுப் பட்டு இந்தப் பாப காரியத்தைச் செய்ய வேண்டிய தாயிற்று. அவள் என்னை மோசம் செய்துவிட்டாள். சாம்பல் பூத்து மூடிய நெருப்பைப் போல் மறைந்திருந்த அவளுடைய எண் ணத்தை நான் அறியாமல் ஏமாந்து போனேன். அவள் வலையில் சிக்கி விட்டேன். நீயோ தந்தையின் சொல்லைச் சத்தியமாக்கியே தீருவேன், தந்தையைப் பொய்யாக்கிவிட மாட்டேன் என்று ராஜ்யத்தையும் நாட்டையும் விட்டு வனம் போகத் தீர்மானித்துவிட்டாய். உலகத்தில் உன்னைப் போல் சிரேஷ்ட குமாரன் வேறு யார் இருக்கிறான்? இந்த அனர்த்தம் என் சம்மதம் பெற்றதல்ல என்று சத்தியமாக சொல்லுகிறேன்" என்று பரிதாபமாக அரசன் கூறினான்.

அந்திம காலத்தில் ராமனுடைய அன்பை இழக்காமல் உயிர் நீக்க வேண்டும் என்பது தசரதனுடைய ஆசை.

"தந்தையே! பரதனுக்குச் சொல்லியனுப்பி நீர் என் தாய்க்குத் தந்த வரத்தைப் பூர்த்தி செய்யவும். ராஜ்யத்தை நான் மனதால் துறந்தாயிற்று. என் உள்ளம் இப்போது வனத்தைப் பற்றி நிற்கிறது. உம்முடைய மனத்தில் ஒரு குறையும் வருத்தமும் இல்லாமல் நீர் பரதனுக்குப் பட்டா பிஷேகம் செய்து ஆசீர்வதித்து முடிக்கவேண்டும். நான் இப்போது இந்த ராஜ்யத்திலாவது, வேறு சம்பத்திலாவது, ஒரு சிறிதும் மனத்தை வைக்கவில்லை. தந்தையே, துக்கத்தை முற்றிலும் அகற்றிக் கொள்வீராக. கண்ணீர் விடாதீர். சமுத்திரம் உலர்ந்து போகுமா? அதைப் போன்ற தீரராகிய நீர் நிலையை இழக்காதீர். உம்மைச் சத் தியவாதியாக்குவதே என் ஆசை. உம்மைப் பொய்யனாக்கி விட்டு நான் மற்ற பொருட்களை வைத்துக் கொண்டு என்ன சுகம் சம்பாதிப்பேன். நீர் மனதை முற்றிலும் சாந்தப் படுத்திக்

கொண்டு துக்கத்தை விலக்கிவிட வேண்டும். நான் வனத்தில் ஆனந்தமாகக் காலங்கழிப்பேன். வனத்தில் உள்ள அழகும் சுகமும் வேறு எங்கே கிடைக்கும்? தகப்பனாராகிய நீரே எனக்குத் தெய்வம். ஆனபடியால் நான் வனம் போவது தெய்வவாக்கின் படியாகும். பதினான்கு வருஷங்கள் தீர்ந்த பின் என்னை மறுபடியும் பார்ப்பீர்! விசனப்படாதீர்! இந்த ராத்திரி இருந்து நாளை போகச் சொல்கிறீர்! அதில் என்ன பயன்? இன்று போலவே மறுநாளும் ஆனபடியால் இன்றே போக அனுமதி தருவீராக" என்றான்.

அதன் பிறகு தசரதன் சுமந்திரனுக்குச் சொன்னான். "சரி, அப்படியானால் நம்முடைய சேனைத் தலைவர்களுக்குச் சொல்லி, நல்ல சதுரங்க சேனை ஒன்றைத் தயார் செய்து ராமனுடன் வனம்போக உடனே உத்தரவிடுவாய், ராமன் காட்டில் சுகமாக ரிஷிகளுடன் காலங்கழிப்பதற்கு வேண்டிய சகல பொருள்களும் திரட்டி அமைத்துச் சேனையுடன் அனுப்பிவிட வேண்டியது. தனம், தானியம் ஆட்கள் எல்லாம் ஒரு குறைவுமின்றித் திரட்டி அனுப்ப வேண்டியது."

பாவம்! வனவாசம் என்றால் அரசர்கள் செய்யும் சுற்றுப் பிரயாணம் போல் செய்துவிடலாம் என்று பார்த்தான் தசரதன்.

கைகேயி , பக்கத்திலிருந்தவள், சிரித்தாள்: "அப்படியா? வரத்தை மிக அழகாகப் பூர்த்தி செய்கிறீர்கள்! 'பரதனுக்கு ராஜ்யம் கொடுத்தேன்' என்று சொல்லி, ராஜ்யத்திலுள்ள செல்வத்தையெல்லாம் வாரி எடுத்து ராமனுக்குக் கொடுத்து விட்டு ராஜ்யத்தைப் பாழ் செய்து, அதைப் பரதனுக்குத் தருகிறீரா?" என்றாள் கைகேயி.

தசரதன் கோபாவேசமாகப் பேசப்போனான். ராமன் அமாத்தியர்களைப் பார்த்துச் சொன்னான்.

"வணக்கத்துடன் நான் கேட்டுக் கொள்கிறேன். நான் வனம்போக நிச்சயித்தது. இந்த வகையில் அல்ல. ராஜ்ய

போகங்கள் அனைத்தையும் விட்டுவிட்டுத் தவசிகளின் தவ வாழ்க்கை வாழவே நான் வனம் செல்லுகிறேன். பரிவாரமும் பொருள்களும் எனக்கு எவ்விதத்தில் உதவும்? யானையைத் தானம் செய்தபின் அதைக் கட்டும் கயிற்றில் ஆசை வைப்பதா? தயவுசெய்து மரவுரியைக் கொண்டுவரச் சொல்லுங்கள்! மண்வெட்டியும் கூடையும் கொண்டுவரச் சொல்லுங்கள்! அவைபோதும்" என்றான்.

கைகேயி ஓடிப்போய்த் தயாராக வைத்திருந்த மரவுரியைக் கொண்டுவந்து, ராமனுக்குத் தானே வெட்கப்படாமல் கொடுத்தாள். உடனே அவ்விடத்திலேயே ராமன் மரவுரியை உடுத்துக் கொண்டான். ரிஷியைப்போல் பொலிவடைந்தான். லக்ஷ்மணனும் தன் ஆடையைக் களைந்து மரவுரியைத் தரித்தான். தசரதன் இதையெல்லாம் பார்த்துக் கொண்டேயிருந்தான்.

பிறகு சீதைக்காகவும் மரவுரி கொண்டுவந்தாள் கைகேயி. அதை வாங்கி சீதை இன்னது செய்வது என்று தெரியாமல், ஒரு கணம் திகைத்து நின்றாள். அவள் இதற்கு முன் இத்தகைய ஆடையை உடுத்தினதில்லையல்லவா!

பக்கத்தில் கந்தர்வ ராஜனைப் போல் அழகு வீசிக் கொண்டு நின்ற ராமனைப் பார்த்துக் கொஞ்சம் கூச்சத்துடன், "இதை எப்படிக் கட்டிக்கொள்வது, சொல்வீர்" என்றாள்.

ராமன் அதை எடுத்துச் சீதை உடுத்தியிருந்த பட்டின் மேல் மரவுரியையும் உடுத்தித் தானே முடிபோட்டான். அச்சமயம், பார்த்துக் கொண்டிருந்த அந்தப்புர ஸ்திரீகள் அனைவரும் 'கோ!' என்று அழுதார்கள். தசரதன் நினைவு இழந்து விட்டான்.

மூர்ச்சை தெளிந்த பிறகு, கைகேயியை அனைவருக்கு மெதிரில் தசரதன் மிகக் கடுமையாகத் திட்டினான். அவள் அதைப் பொருட்படுத்தவில்லை. தவிர, இப்போது யார்

என்ன செய்ய முடியும்? சீதை வனம் போவது கைகேயிக்காக அல்ல. ராமனுடன் வனம் போவதிலேயே அவள் சுகம் கண்டாள். யார் சொல்லியும் அவள் நிற்கமாட்டாள். போகும் போது தரையைப் பார்த்தவண்ணம் அரசனை வணங்கி ராமன் சொன்னான்:

"தந்தையே! தாய் கௌசல்யா தேவியை இவ்விடம் விட்டுவிட்டுப் போகிறேன். ஒப்பற்றவள். யார் பேரிலும் அவளுக்குக் கோபமில்லை மகாராஜனே! அவளைச் சரியாகப் பார்த்துக் கொள்ளவும். என்னைவிட்டுப் பிரிந்து இதற்குமுன் அவள் கண்டிராத துக்கத்தில்-பெருந்துயரக் கடலில் மூழ்கி னாளாயினும் உமக்காக உயிரை வைத்துக் கொண்டிருக் கிறாள். நான் வனத்திலிருந்து திரும்பி வரும்போது அவளை நான் இங்கேயே காணவேண்டும். யமாலயத்தில் தேடும்படி நேராமல் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று துக்கம் தாங்காமல் சொன்னான்.

ராமன் இப்படிச் சொல்லிவிட்டு வெளியே செல்லும் காட்சியைப் பார்க்கக் கிழ அரசனால் சகிக்க முடியவில்லை. கண்களைக் கைகளால் மூடிக்கொண்டான்.

## 26. வனம் சென்றனர்

குமாரன் மரவுரி தரித்துக் கடைசியாகப் பேசியதைக் கேட்ட அரசன், மனமுடைந்து போய்ப் படுக்கையில் கிடந் தான். ராமனை நினைத்துக் கொண்டு அழுதான்; பேசமுடிய வில்லை.

பேசுவதற்குக் கொஞ்சம் சக்தி வந்ததும், "நான் எத்த னையோ கன்றுகளைக் கொன்று, தாய்ப்பசுக்களை இம் சித்திருக்க வேண்டும். இல்லாவிடில் இந்தத் துக்கம் எனக்கு நேர்ந்திருக்காது. மரணமும் நாம் வேண்டுகிறபோது நம் இஷ்டப்பிரகாரம் வராது. கைகேயியினுடைய இம்சையை நான் அனுபவிக்க வேண்டியதாக இருக்கிறது.

"அக்கினி தேவனைப் போல் எழில் கொண்ட என் மகன், தன் உடையைக் கழற்றிவிட்டு மரவுரியைத் தரித்தான். நானும் பார்த்துக்கொண்டு உயிருடன் இருக்கிறேன். ராமா ராமா ராமா வனம் போய்விட்டாயா?" என்று முணு முணுத்துக் கொண்டு படுக்கையில் அரை நினைவாகக் கிடந்தான்.

பிறகு தெளிந்து, "சுமந்திரனே, ரதம் கொண்டு வந்து குழந்தைகளையும் ஜானகியையும் ஏற்றிக் கொண்டு ராஜ் யத்து எல்லை வரையில் போ!" என்றான்.

லக்ஷ்மணன் சுமித்திராதேவியின் பாதங்களைத் தொட்டு வணங்கி "அம்மா!" என்று சொல்லி வேறு பேச்சில்லாமல் நின்றான்.

அவனைக் கட்டியணைத்துச் சுமத்திரை, உச்சிமோந்து, "நீ அண்ணன் பேரில் வைத்திருக்கும் அன்பே போதும். உன் னைப் பெற்றதன் பெரும் பாக்கியம் அடைந்து விட்டேன். குழந்தாய், ராமனைக் காப்பது உன் கடமை. வனத்தில் மிக ஜாக்கிரதையாக அண்ணன் பக்கத்தில் எப்போதும் இருக்க வேண்டும். தம்பிக்கு அண்ணன் குருவும் அரசனுமேயாவான். இது நம் குலத்தின் தருமம். போய் வருவாய் லக்ஷ்மணா! காட்டில் ராமனே உனக்குத் தந்தை. ஜானகியே நான். இதை அறிவாய். வனத்தை அயோத்தியாகவே பாவிப்பாய். சந்தோஷமாகப் போ, என் அன்புக்குரிய மகனே!" என்றாள்.

ராமாயணக் கதையில் அதிகம் பேசாத ஞானி, எதையும் முதிர்ந்த அறிவுடன் சரியாக உணர்ந்து நடந்து கொள்கிறவள் சுமித்திராதேவி. ராமனுடைய அவதார ரகசியம் சுமித்திரைக்குத் தெரிந்திருந்ததாகப் பெரியோர்கள் சொல்லுவார்கள். கௌசல்யா தேவியைப்போல் மகனைத் தடுத்துப் பேசாமல் "போய் வருவாய்" என்று சுமித்திரை தன் மகன் லக்ஷ்மணனுக்குத் தைரியமாகச் சொன்னாள்.

"ரதத்தில் ஏறுவாய் சக்கரவர்த்தித் திருமகனே! புகழின் சிகரமே! உனக்கு மங்களம்! எங்கு செல்லவேண்டுமோ, சொல்லுவாய். உனக்கு மங்களம்! பதினான்கு வருஷம் இப்பொழுதிலிருந்தே ஆரம்பமாகிவிட்டது ராஜகுமாரா!" என்றான் சுமந்திரன்.

சீதை சிரிப்பும் சந்தோஷமுமாகத் தேரில் ஏறினாள். அவளுக்கு வேண்டிய துணிமணிகளையெல்லாம் மாமி கௌசல்யை கட்டிக் கொடுத்தாள். இரு சகோதரர்களுடைய கவசங்களும் ஆயுதங்களும், கிழங்கு தேடி வெட்டிக் கொள்வதற்கான குந்தாலியும் கூடையும் தேரில் வைக்கப்பட்டன. வனவாசத்துக்கு முக்கியமாகக் கூடையும் குந்தாலியும் வேண்டும்.

ராம லக்ஷ்மணர்களும் ஏறினார்கள். சுமந்திரன் தேரை ஓட்டினான்.

* * *

இந்தக் கட்டத்தில் கொஞ்சம் நின்று, நாம் ஆண்டவனைத் தியானிக்கலாம். வனவாசம் ஆரம்பமாகிய இந்தப் புண்ணிய கட்டத்தில் நம்முடைய பாப எண்ணங்களை விலக்கித் தூய்மையடைய விரும்பிப் பிரார்த்திப்போமாக. சத்தியம், தீரம், அன்பு இவை ராமாயணத்திலிருந்து நாம் பெறும் பிரசாதம். அதற்காகவேதான் ராமாவதாரம். மரவுரி உடுத்திய சக்கரவர்த்தித் திருமகனையும், தம்பி லக்ஷ்மணனையும், ஜானகியையும் மனத்தில் நிறுத்தி, ஆண்டவன் அருட்பிரசாதத்தைக் கேட்போமாக.

* * *

"இழுத்துப் பிடி, இழுத்துப்பிடி, சாரதியே! ரதத்தை மெல்ல ஓட்டு! ராமன் முகத்தையாவது நன்றாகப் பார்ப்போம்" என்று தெருவில் நின்ற ஜனங்கள் கத்தினார்கள்.

"ஐயோ, இப்படிப்பட்ட புதல்வர்களைப் பெற்றுவிட்டு, காட்டுக்கு அனுப்புகிறார்களே! இவர்களைப் பெற்ற தாய்மார்களுடைய வயிறு எரியாதா? உயிர் நிற்குமா? பார்த்தாயா வைதேஹியை? இவளல்லவோ புண்ணியவதி! இந்த லக்ஷ்மணன் அல்லவோ பாக்கியவான்! இவனல்லவோ ஒரு தம்பி! தருமம் அறிந்த வீரன்."

இப்படியெல்லாம் பேசிக் கொண்டு, ரதத்தைத் தொடர்ந்து நகரத்து ஜனங்கள் ஓடினார்கள். அவர்களுடைய துக்கம் ஆறாகப் பெருகிற்று.

ஒரு பக்கம், "ரதத்தை வேகமாகச் செலுத்து" என்கிறான் ராமன். ஜனங்களோ 'மெள்ள மெள்ள' என்கிறார்கள். கூட்டமோ மிகப் பெருங்கூட்டமாகப் போயிற்று.

எப்படியோ சமாளித்துக்கொண்டு சுமந்திரன் ரதத்தை அயோத்தியைவிட்டு வெளியே செலுத்தினான். நகரம் துக்கத்தில் மூழ்கிற்று. ஒவ்வொரு வீட்டிலும் கண்ணீரும் உபவாசமும் நிந்தனையுமாக இருந்தன.

* * *

அரசன் அந்தப்புரத்தைவிட்டு வெளியே வந்து, ரதம் புறப்பட்டதைப் பார்த்துக்கொண்டு வெகுநேரம் நின்றான். தேர் கிளப்பிய தூசியையே ராமனாகப் பாவித்து, அந்தத் தூசி கண்ணுக்குத் தெரியும் வரையில் பார்த்துக்கொண்டு நின்றான். அந்தத் தூசியும் மறைந்து போனபின், 'ஐயோ!' என்று கதறிக் கீழே விழுந்தான். ஒரு பக்கம் கௌசல்யையும், ஒரு பக்கம் கைகேயியும் இருந்தார்கள்.

தசரதன் கைகேயியைப் பார்த்துச் சொன்னான். "பாவியே என்னைத் தொடாதே. நெறி தவறியவளே, உன் முகத்தைப் பார்க்க எனக்கு வேண்டியிருக்கவில்லை. உனக்கும் எனக்கும் சம்பந்தம் அற்றது. உன்னை விட்டேன்! விட்டேன்!" என்றான்.

"பரதனும் இதற்குச் சம்மதித்து ராஜ்யத்தைச் சந்தோஷமாக ஏற்றுக் கொண்டானேயானால், எனக்காக அவன் நீர்க்கடன் செய்தாலும் அது என்னைச் சேராது" என்றான்.

"ராமன் எவ்வாறு காட்டில் வசிப்பான்? கல்லோ கட்டையோ தலைக்கு வைத்துத் தரையிலா படுப்பான்? ஐயோ, அவன் எவ்வாறு கிழங்கும் காயும் உண்டு பிழைப்பான்?"

இப்படிப் பலவாறு பிரலாபித்தான். தானே நெருப்பில் கை வைத்துக் கையைச் சுட்டுக்கொண்டு அழுவதுபோல், தசரதன் தானே செய்த காரியத்தின் முடிவை எண்ணி எண்ணிப் பிரலாபித்தான்.

"கைகேயி, நீ சுகமாக இரு. உன் காரியத்தை நடத்தி முடித்தாய் அல்லவா? விதவையாகிச் சந்தோஷமாக இரு!" என்று அவளை நினைத்துக் கோபாவேசமானான். மயானத்தில் ஸ்நானம் செய்து திரும்பிய நிலையில் அந்தப்புரம் போய்ச் சேர்ந்தான்.

"இங்கே வேண்டாம். என்னைக் கௌசல்யை வீட்டுக்குக் கொண்டுபோய்ச் சேர்த்துவிடுங்கள்!" என்றான்.

அவ்வாறே செய்தார்கள். கௌசல்யா தேவியின் அந்தப்புரத்தில் தசரதன் பிரலாபித்துக் கொண்டு படுத்தான்.

நடுராத்திரியில் "கௌசல்யா, நீ இருக்கிறாயா? கைகளால் தொட்டுக் காட்டு. என் கண்களில் திருஷ்டி போய் விட்டது, ராமனுடன் போய்விட்டது" என்றான்.

கௌசல்யா தேவியின் துக்கமோ மிகப் பெரிது. தன் துக்கத்தையும் பொறுத்து, அவள் என்ன சமாதானம் சொல்லமுடியும்?

"இராத்திரி நேரங்கூட நடு மத்தியான வெயிலைப் போல் உடலைச் சுடுகிறதே" என்று அவளும் அழுதாள்.

சுமித்திரை கௌசல்யைக்குச் சொன்னாள். "அக்கா! சாஸ்திரமும் தருமமும் தெரிந்த நீ ஏன் துக்கப்படுகிறாய்? மற்

றவர்களுக்கு வழிகாட்ட வேண்டிய நீ இப்படித் தைரியம் இழக்கலாகாது. சத்தியத்துக்காக அல்லவோ ராமன் வனம் சென்றிருக்கிறான்! ராஜ்யத்தைத் துச்சமாக எண்ணித் தந்தையைச் சத்தியவான் ஆக்குவதே தன் கடமை என்று வனம் சென்ற தீரனை மகனாய்ப் பெற்ற நீ அல்லவோ பாக்கியசாலி! கஷ்டமான தருமத்தைக் குறைவற நடத்திப் பயனடையும் உன் மகனைப்பற்றி நீ துக்கப்படலாமா? முன்னோர் வழியில் நடந்து அனந்தமான- முடிவில்லாத- புகழ் பெறும் ராமனைப்பற்றி நாம் துயரப்படலாகாது. லக்ஷ்மணனும் அவனுடன் சென்றானே என்று என் மகனைப் பற்றி நான் பெருமைப்படுகிறேன். வனவாசத்தின் கஷ்டங் களை நன்றாகத் தெரிந்தும் ஜானகி உன் மகனுடன் சென் றிருக்கிறாளே! ராமனுடைய கீர்த்தி மேலோங்கிப் பிரகாசித்து உலகமெல்லாம் ஒளிவீசும். நாம் துக்கப்படலா காது. மகாத்மாவான உன் மகனுடைய பரிசுத்தமும் உத்தம குணங்களும் அவனுக்குப் பூரண கவசமும் காப்புமாகும். சூரிய னுடைய வெயில் அவன் உடலின்மேல் பட்டாலும் அது சுடாது. காற்றும் அவன்மேல் குளிர்ந்து வீசும். இரவில் தூங் கும்போது அவனுடைய புண்ணிய தேகத்தைச் சந்திரனுடைய கிரணங்கள், பெற்ற குழந்தையைத் தகப்பன் தழுவி ஆலிங்கனம் செய்வதுபோல், அவன்மேல் வீசிக் காப்பாற்றும். நம்முடைய வீரராகவனைப்பற்றி நீ கவலைப்படாதே! எந் தப் பகைவனும் அவனை எதிர்த்து உயிருடன் மீள முடியாது. நம்முடைய ராமன் சர்வ கல்யாண குணங்களும் பொருந் தியவன். சூரன், அவன் நிச்சயம் திரும்பி வந்து, அயோத்தி யாதிபதியாகிச் சிம்மாசனம் ஏறுவான். லோகநாதனே இராமன். உன் மருமகள் சீதை அவனுடன் சென்றிருக்கிறாள். சீதை வேறு, லக்ஷ்மி வேறல்ல. திரும்பி வந்ததும் பூதேவியை யும் ராமன் அடைவான். நீ சந்தேகப்படாதே. அவன் வனம் போவதைக் கண்ணுற்ற நகரத்து ஜனங்களுடைய அநுதா பத்தைப் பார்த்தாய். என் வீரமகன் வில்லும் கத்தியும்

கையில் தாங்கி, அவனைக் காக்கக் கூடவே போயிருக்கிறான். ராமனுக்கு ஒரு குறையோ பயமோ கிடையாது. செய்த பிரதிக்ஞையை முடித்துவிட்டு அவன் திரும்பி வருவதை உன் கண்ணாலேயே பார்ப்பாய்; சோகத்தை விடு; நான் சொல்வது சத்தியம். சந்திரனைப்போல் பூரண கலையுடன் திரும்பி வந்து, உன் பாதங்களைத் தொட்டு வணங்கி நிற்பதைப் பார்ப்பாய்; அப்போது உன் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருகும். என் அன்புக்குரிய கௌசல்யே துக்கம் வேண்டாம். மூவரும் திரும்பி வருவார்கள். துக்கப் படும் அந்தப்புரத்து ஜனங்களுக்கு ஆறுதலும் தைரியமும் நீ சொல்லவேண்டும். அப்படியிருக்க, நீயே மனமுடைந்து நிற்கிறாய்? வேண்டாம். இந்த உலகத்தில் ராமனைப்போல் தருமத்தில் உறுதியாய் நிற்பவன் வேறு யார்? அதைப்பற்றி நாம் துக்கப்படலாமா? நீ பெருமைப்பட வேண்டும்."

இவ்வாறு சுமித்திரை தேற்றினாள். சுமித்திராதேவியின் தைரியமான வார்த்தைகளைக் கேட்டு, கௌசல்யாவின் துக்கம் ஓரளவு அகன்றது.

* * *

ராமனுடைய தேருடன் கூடவே நகரத்து ஜனங்கள் பெருங்கூட்டமாகத் தொடர்ந்து சென்றார்கள்.

"வனம் போகவேண்டாம். திரும்புங்கள்" என்று ரதம் போவதைத் தடுத்துக்கொண்டு ஓடினார்கள்.

"தகப்பனாரைச் சத்திய சந்தராகச் செய்வதற்காக நான் வனம் போகிறேன். இதற்கு நீங்கள் துக்கப்படலாகாது. என்னை நிறுத்த வேண்டாம்" என்று எவ்வளவு கேட்டுக் கொண்டும் அவர்கள் விடவில்லை. கூடவே சென்றார்கள். ராமன் பேரில் அவர்களுக்கிருந்த அளவற்ற பிரியத்தினால் என்ன சொல்லியும், "வனம் போகவேண்டாம்! வனம்போக வேண்டாம்" என்று சொல்லிக் கொண்டு ரதத்தோடு ஓடினார்கள்.

ராமன் ரதத்தை நிறுத்தி, அன்பு நிறைந்த பார்வை யுடன் அவர்களுக்குச் சொன்னான்.

"அயோத்தி நகரத்து மக்களே! என்மேல் நீங்கள் வைத் திருக்கும் பிரியமும் கௌரவமும் நான் அறிவேன். அதை யெல்லாம் நீங்கள் இனி பரதன்மேல் செலுத்த வேண்டும். அதுவே எனக்குத் திருப்தி தரும். சீலமும் சகல கல்யாண குணங்களும் பொருந்தியவன் பரதன். அவன் மனம் திருப்தி யடையுமாறு நடந்து கொள்ளுங்கள். அவனுக்குச் செய்ய வேண்டியதையெல்லாம் சரியாகச் செய்யுங்கள். வயதில் சிறிய வனாக இருந்தாலும் ஞானத்தில் முதிர்ந்தவன் அவன். வீரமும் மென்மையும் இரண்டும் கலந்த சிரேஷ்டமான உள்ளம் பெற்றவன். உங்களை க்ஷேமமாகக் காப்பாற்றும் சக்தி அவனுக்கு உண்டு. அவனே உங்கள் நாதன். வனம் போகிறேன். பரதனை யுவராஜனாக அரசர் நியமித்திருக்கிறார். அவன் அரச பதவிக்குத் தகுந்த குணங் களைப் பெற்றவன். மகாராஜா விதித்தபடி நானும் நீங்களும் எல்லாரும் நடக்க வேண்டும். தந்தைக்கு உண்டாகும் துயரத் தைப் போக்க நீங்கள் எல்லா முயற்சிகளும் செய்யவேண்டும்."

இப்படி ராமன் அவர்களுக்குப் புத்திமதியும் நல்ல வார்த்தையும் சொன்னான். ஆனால், அவர்களோ, ராமனு டைய வார்த்தைகளில் நிறைந்திருந்த தருமமும் நீதியும் அன்பும் கண்டு, முன்னைவிட அதிகமாகவே அவனை விரும்பி னார்கள்.

சிரேஷ்ட குணம் பொருந்தியவர்களும், வயதில் மிக முதிர்ந்தவர்களுமான பிராமணர்கள் சிலர், வேகமாகப் போகும் தேரைப் பார்த்து "ஹே! தேரை இழுக்கும் குதிரை களே! ஏன் எங்கள் ராமனை வனம் கொண்டு போகிறீர்கள்? வேண்டாம்! குதிரைகளின் செவிப்புலன் மிகக் கூர்மையானது என்று சொல்லக் கேட்டிருக்கிறோம். நாங்கள் சொல்வதைக் காதில் வாங்கி நின்று ராமனைத் திருப்பிக் கொண்டு வந்து எங்களிடம் விட்டுவிடுவீர்களாக!" என்று புலம்பினார்கள்.

இப்படி வயோதிக அந்தணர்கள் இரங்குவதைக் கண்டு ராமன் தேரை நிறுத்தினான். மூவரும் தேரிலிருந்து இறங்கிக் காலால் நடந்து சென்றார்கள்.

பாமர ஜனங்களும், நகரத்து முக்கியஸ்தர்களும், ஞானமும் வயதும் விரத நியமங்களால் சித்தியும் அடைந்த அந்தணர்களும், அயோத்தியில் பறக்கும் பறவைகளும்கூட ராமனை வனம் போகவேண்டாம் என்று வற்புறுத்தி வருவதைப் பார்த்து, தமஸா நதியும் குறுக்கே வந்து தடுத்தது. தமஸா நதிக்கரையில் தேர் நின்றது. சுமந்திரன் குதிரைகளை அவிழ்த்துத் தண்ணீர் காட்டிப் புல் மேயவிட்டான்.

"லக்ஷ்மணா! இதுவே நம்முடைய வனவாசத்தில் முதல் ராத்திரி. இந்தப் புண்ணிய நதிக்கரையில் இன்று தங்குவோம். வனவாசம் ஒன்றும் கஷ்டமில்லை. .பார், வனத்திலுள்ள பக்ஷிகளும், மிருகங்களும், மரங்களுங்கூட நம்மிடம் அநுதாபம் காட்டுவனபோல் சப்தமும் காட்சியும் அளிக்கின்றன. ஆனால், அயோத்தியில் நம்முடைய பெற்றோர்களின் துயரத்தை நினைத்தால் கஷ்டமாகத்தான் இருக்கிறது. பரதனுடைய குணங்களை நினைத்துத் தைரியம் அடைகிறேன். அவன் நம்முடைய பெற்றோர்களைப் பிரியமாகக் கவனித்துக் கொள்ளுவான். சந்தேகமில்லை. சுமந்திரரே, குதிரைகளுக்கு வேண்டியதைச் செய்யவும்" என்றான் ராமன்.

பிறகு நதியில் மாலை வந்தனங்கள் செய்துவிட்டு ராமன் "இன்று உபவாசமிருக்கலாம். இது நம்முடைய வனவாச ஆரம்ப ராத்திரி. லக்ஷ்மணா! நீ என்னுடன் இருக்கிறபடியால் எனக்கு ஒரு கவலையுமில்லாமலிருக்கிறது" என்றான்.

ராமனுக்கும் சீதைக்கும் படுப்பதற்குப் புல் பரப்பி அமைத்துக்கொடுத்து, லக்ஷ்மணன் சுமந்திரனுடன் பேசிக் கொண்டே இரவைக் கழித்தான்; தூங்கவில்லை.

அதிகாலையில், விடிவதற்குமுன் ராமன் எழுந்திருந்து சுமந்திரனைப் பார்த்து, "நகரத்து ஜனங்கள் ஆற்றங்கரையில் எங்கெங்கோ படுத்து, ஓடிவந்த களைப்பினால் நன்றாகத் தூங்குகிறார்கள். எங்கள் பேரில் இவர்கள் வைத்திருக்கும் அன்பைப் பார்த்து எனக்குத் துக்கமாக இருக்கிறது. எப்படியாவது என்னை நிர்ப்பந்தித்துத் திருப்பி அழைத்துப் போவதே இவர்கள் எண்ணம். ஆகையால் நாம் இப்போதே கிளம்புவோம்" என்றான்.

குதிரைகளைப் பூட்டி, நதியை மெள்ளத் தாண்டி அக்கரை சேர்ந்தார்கள். அங்கே நின்று ராமன் சுமந்திரனுக்குச் சொன்னான்; "தேரை மறுபடி ஜனங்கள் தூங்கும் அக்கரைக்குச்,செலுத்தி, அங்கிருந்து அயோத்தியை நோக்கிக் கொஞ்ச தூரம் ஓட்டிப் பிறகு தேரைத் திருப்பி இவ்விடம் ஓட்டி வந்தால், ஜனங்கள் விழிப்பதற்கு முன் நாம் ஏறிச் செல்வோம். தேரின் சுவடு பார்த்து நாம் நகரத்துக்குத் திரும்பிப் போய்விட்டதாக எண்ணி அவர்களும் ஊர் திரும்புவார்கள். இல்லாவிடில் இந்த ஜனக் கூட்டம் நம்மை விடாமல் பின் தொடர்ந்து வரும்" என்றான்.

சுமந்திரனும் அப்படியே செய்தான். தேர் திரும்பியதும் மூவரும் ஏறி தெற்கு முகமாகச் சென்றார்கள்.

## 27. கங்கையைத் தாண்டினர்

தமஸா நதிக்கரையில் படுத்து உறங்கின அயோத்தி நகரவாசிகள் காலையில் எழுந்து பார்த்தார்கள். ராமனையும் தேரையும் காணாமல் பிரமித்து இங்குமங்கும் தேடிப்பார்த்து தேர்ச் சக்கரத்தின் சுவட்டைப் பின் பற்றிப் போய் மறுபடி அயோத்திக்குப் போகும் வழியோடு அது கலந்து போனதைக் கண்டு ஏமாற்றமடைந்தார்கள். நகரத்துக்குத் திரும்பித் தத்தம் வீடுகளுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். கைகேயியைப் பலவாறாக நிந்தித்துத் திருப்தியடையப் பார்த்தார்கள். ராமனையிழந்த நகரம் அழகையிழந்து துயரத்தில் மூழ்கிற்று.

விடிவதற்கு முன்னமே புறப்பட்டுபோன ரதம், வனத்தில் வெகுதூரம் சென்று விட்டது. பல நதிகளைக் கடந்து கோசல தேசத்தின் தெற்கு எல்லையை நோக்கிச் சென்றார்கள். ராமன் சுமந்திரனோடு பேசிக்கொண்டே போனான். "நான் மறுபடியும் சரயூ நதிக்கரை வனத்தில் நின்றே வேட்டையாடுவேன். வேட்டையாடுவது சரியா? ஒரளவுதான் அத்தகைய காரியங்களில் அரசகுமாரர்கள் ஈடுபடவேண்டும். அளவுக்கு மிஞ்சிப் போனால் அது கெட்ட வழக்கமாகும்."

இம்மாதிரிப் பொழுது போக்காகப் பல விஷயங்கள் பேசிக்கொண்டே அவர்கள் சென்றார்கள்.

கோசல நாட்டின் தென் எல்லையைச் சேர்ந்ததும் ராமன் தேரை நிறுத்தி, அயோத்தி நகரத்துத் திசை நோக்கி வணக்கம் செலுத்தினான்.

"நகரங்களுக்குள் மாணிக்கமே! இக்ஷ்வாகு வம்சத்தின் தலைநகரமே! என் வனவாச விரதம் முடிந்து தந்தை தாய்களையும் உன்னையும் மறுபடி தரிசிப்பேனா? நீ அந்தச் சந்தோஷத்தை எனக்குத் தரவேண்டும்" என்று பிரார்த்தனை செலுத்தினான்.

தேர் கங்கை நதிக்கரையை அடைந்தது. அந் நதியின் அபார அழகை அனுபவித்துக்கொண்டே சென்றார்கள். மிக ரம்மியமான ஓர் இடத்தைக் கண்டதும் ராமன், "இவ்விடம் இன்று இரவு தங்கலாம்" என்றான்.

குதிரைகளை அவிழ்த்துவிட்டு ஒரு மரத்தடியில் எல்லோரும் உட்கார்ந்தார்கள். அந்தப் பிரதேசத்துக்கு அதிபதி குகன். ராமன் வருவான் என்பதைத் தன்னுடைய ஆட்களால் முன்னாலேயே அறிந்த குகன், தன் பரிவாரங்களுடன் ராம லக்ஷ்மணர்களைத் தரிசிக்க வந்தான்.

குகன் ராமனிடம் அபார அன்பு கொண்டவன்; கங்கைக் கரை நிஷாதர்களுக்குத் தலைவன். மிகவும் செல்வாக்கும் புகழும் பெற்ற ஸ்தலபதி. தூரத்தில் வரும்போதே

குகனைப் பார்த்துச் சக்கரவர்த்தித் திருமகனும் லக்ஷ்மணனும் எழுந்து அவனிடம் சென்றார்கள். குகன் ராமனை ஆலிங் கனம் செய்து வரவேற்றான்.

"இந்த தேசம் உனதாகவே வைத்துக்கொள்வாய். அயோத்தி எப்படியோ அப்படியே இதுவும் உன்னு டைய தாகும்! இத்தகைய அதிதி எவனுக்கு கிடைப்பான்? இது என் பாக்கியம்" என்றான் குகன்.

குகனுடைய உபசாரம் அபாரமாக இருந்தது. அவனு டைய ஆட்கள் பலவித உணவுப் பதார்த்தங்களும் பணியாரங் களும் கொண்டு வந்து வைத்தார்கள். "என் ராஜ்யத்தில் நீ சுகமாக இருக்கலாம். பதினான்கு வருஷங்களும் இங்கேயே கழிக்கலாம். ஒன்றும் குறைவு இருக்காது. உன்னை உபசரிப்பது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தரும். அருள்வாய்" என்றான்.

ராமன் அவனை இறுகத் தழுவி, "அப்பனே! உன் அன்பு எனக்குத் தெரியும். உன் உபசாரத்தை இங்கே பெற்றேன். அதற்குமேல் நான் விரதத்தால் கட்டுப்பட்டு நிற்கிறேன். வனவாசம் செய்ய வந்திருக்கிறேன் அல்லவா? இதோ இந்தக் குதிரைகள். என் தந்தைக்கு இவை மிகப் பிரியமான குதி ரைகள். அவற்றிற்கு நல்ல தீனி ஏற்பாடு செய்வாய். நாங்கள் வனவாசத்துக்குரிய உணவைப் புசித்துப் படுக்கிறோம்" என்றான்.

அன்று அந்த மரத்தடியில் ராமனும் சீதையும் தங்கி னார்கள். லக்ஷ்மணன், குகனுடனும் சுமந்திரனுடனும் பேசிக் கொண்டே அன்று இரவும் தூங்காமலே கழித்தான்.

குகன் லக்ஷ்மணனுக்குச் சொன்னான்:

"அப்பனே, நீ படுத்துத் தூங்குவாய். அதோ உனக்கு இடம் தனியாகப் பண்ணி வைக்கப்பட்டிருக்கிறது. இந்த வனத்தில் என்னையறியாமல் யாரும் ஏதும் செய்ய முடியாது.

என்னுடைய ஆட்கள் மிகக் கவனமாகக் காவலிருக்கிறார்கள். ராமனைப் பற்றிக் கவலையோ பயமோ வேண்டியதில்லை. தூங்குவாய்."

இதைக் கேட்டு லக்ஷ்மணன், "குகனே! எனக்குத் தூக்கம் வரவில்லை. அதோ சீதை, ஜனக மகாராஜனின் மகள், தசரத சக்கரவர்த்தியின் மருமகள், தரையில் படுத்திருக்கிறாள். மூன்று உலகமும் யுத்தம் செய்து வசமாக்கிக் கொள்ளும் சக்தி வாய்ந்த புருஷோத்தமன் புல்தரையின் மேல் படுத்துக் கிடக்கிறான். இதைப் பார்த்தும் எனக்கு எப்படித் தூக்கம் வரும்?" என்றான்.

"ராமனை வனத்துக்கு அனுப்பிவிட்ட அயோத்தி நகரம் எவ்வாறு பிழைக்கும்? அரண்மனை அந்தப்புரம் அழு குரலால் நிரம்பும். கௌசல்யையும் என் தாயும் இப்போது உயிருடன் இருக்கிறார்களோ, உயிர் நீத்தார்களோ, எனக்குச் சந்தேகமாகத்தான் இருக்கிறது. 'வனம் போ' என்று தந்தை எளிதில் சொல்லிவிட்டாரேயொழிய ராமனை அனுப்பி விட்டபின் அவர் உயிர் வைத்திருப்பது சந்தேகம். அவர் இறந்தால் பிறகு எங்கள் தாய்மார்களின் கதியும் அதுவே. அந்திமக்கடன் செய்வதற்குக்கூட நாங்கள் கொடுத்து வைத் திருக்கிறோமோ இல்லையோ? எங்களுடைய வனவாச விரதம் முடிந்ததும் நாங்கள் திரும்பி ஊர்போய்ச் சேரும் போது, தந்தையும் தாய்மார்களும் உயிருடனிருந்து சந் தோஷப்படுவார்களா என்பது எனக்கு மிகவும் சந்தேகமாகத்தான் இருக்கிறது" என்றான்.

இப்படித் துயரம் நிறைந்த மொழிகளை மனமுருகிப் பேசினான் லக்ஷ்மணன். லக்ஷ்மணன் சொன்னதைக் கேட்ட குகனும் கண்ணீர் விட்டான். இரவெல்லாம் இவ்வாறு பேசிக் கொண்டு கழித்தார்கள்.

அதிகாலையில் ராமன் எழுந்து லக்ஷ்மணனுக்குச் சொன்னான்:

"நதியைத் தாண்டிப் போகவேண்டும். குகனுக்குச் சொல்லி, இந்த அகலமான நதியைக் கடப்பதற்குப் பெரிய ஓடம் ஏற்பாடு செய்யும்படி சொல்லுவாய்!" என்றான்.

அவ்வாறே குகனும் தன் காரியஸ்தர்களுக்குச் சொல்லி ஒரு நல்ல ஓடத்தை அமைத்து, ராமனுக்குத் தெரிவித்தான். ஆயுதபாணிகளாக ராம லக்ஷ்மணர்களும் சீதையும் நதியை நோக்கிச் சென்றார்கள்.

சுமந்திரன் ராமனை வணங்கி, "இனி நான் என்ன செய்யவேண்டும்?" என்று கேட்டான்.

ராமன் சுமந்திரன் தோளின் மேல் கையை வைத்து, "சுமந்திரரே, சீக்கிரம் அயோத்தி திரும்பிச் செல்வீர். அரசன் பக்கத்திலிருப்பீர். அவரை நன்றாகப் பார்த்துக் கொள்வீர்" என்றான்.

"உலகத்தில் சீலம், அத்தியயனம், நல்ல நடத்தை இவையெல்லாம் ஒரு பயனும் இல்லை என்பதை இப்போது அறிந்தேன். நீயும் தம்பியும் வைதேஹியுடன் வனத்தில் வசிக்கப் போகிறீர்களே! எங்களுக்கு இனி என்ன கதி? கைகேயி ஆட்சியில் நாங்கள் எப்படிப் பிழைப்போம்?" என்று சொல்லிச் சுமந்திரன் குழந்தைபோல உரக்க அழுதான்.

ராமன் அவன் கண்களைத் துடைத்து, "எங்கள் குலத்துக்கு உத்தமமான நண்பர் உம்மைப்போல் வேறு யாரும் இல்லை. தந்தை துக்கம் அடையாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது உம்முடைய கடமை. மனம் உடைந்து போயிருக்கிறார். அவர் என்ன சொன்னாலும், அது சரியா அல்லது கைகேயியைத் திருப்தி செய்வதற்காகச் சொல்கிறாரா என்று விசாரியாமல், அவர் சொன்னபடி செய்து, அவருடைய மனதில் கஷ்டம் உண்டாகாமல் பார்த்துக் கொள்ளுங்கள். வனத்திலிருக்கும் எங்களைப்பற்றிக் கவலைப்படாதீர்கள். நாங்கள் பதினான்கு வருஷம் சுலபமாகக் கழித்துத் திரும்பி வந்து விடுகிறோம் என்று நான் சொன்னதாக அரசனிடமும்

எல்லோரிடமும் சொல்ல வேண்டும். பரதனைச் சீக்கிரம் வருவித்து, அரச பதவியில் அமர்த்தி, எங்கள் அன்பைச் சொல்லி, பெரிய அன்னைகள் இருவரையும், தன்னைப் பெற்ற தாய் கைகேயியைப் போலவே பார்த்துக் கொள்ளச் சொல்லவேண்டும்" என்றான்.

இவ்வாறு ராமன் சொன்னான். ஆனாலும் சுமந்திரன் துக்கம் தாளாமல், "நான் எப்படித் திரும்பிப்போய், என்ன சொல்லி, யாரைச் சமாதானப்படுத்துவேன்?" என்றான். தேரைப் பார்த்து, "நீ இல்லாமல் சூனியமாக நிற்கும் இந்தத் தேரை நான் எப்படி ஓட்டுவேன்?" என்று அழுது கொண்டேயிருந்தான்.

ராமன் மறுபடியும் சுமந்திரனுக்கு ஆறுதலும் தைரியமும் சொல்லிக் கஷ்டங்களைச் சகித்துக்கொண்டு பொறுமையுடன் இருப்பதே கடமை என்று கூறி அனுப்பினான்.

"குகனே! நீ விரும்பியபடி உன் ராஜ்யத்தில் நான் சந்தோஷமாக இருந்துகொண்டு பதினான்கு வருஷங்கள் கழிக்கலாம். ஆனால், அது நான் பிரதிக்ஞை செய்த வனவாசம் ஆகுமா? தகப்பனார் கொடுத்த வாக்கைச் சத்தியமாக்க நான் அயோத்தியைவிட்டு வந்திருக்கிறேன். ஆனபடியால் தவ வாழ்க்கை வாழவேண்டும். ருசியாகச் சமைக்கத் தெரிந்தவர்கள் பக்குவப்படுத்திய பதார்த்தங்களை நான் தொடக்கூடாது. பழம், கிழங்கு, காய் அல்லது விலக்கப்படாத மாமிசத்தை நாங்களே சம்பாதித்து, வேள்வித் தீயில் சுட்டு ஆகாரம் செய்யவேண்டும்."

இப்படிச் சொல்லிக் குகனைச் சமாதானப்படுத்தித் தங்கள் தலைமயிரை அவ்விடத்தில் ஆலமரத்துப் பாலால் ஜடையாகச் செய்து முடித்துக் கொண்டார்கள்.

சீதையை ஓடத்தில் ஏற்றி உட்காரவைத்து, பிறகு இரு ராஜகுமாரர்களும் ஏறினார்கள். குகன் தன் ஆட்களுக்குச் சொல்லி ஓடத்தைச் செலுத்த உத்தரவிட்டான்.

ஓடக்காரர்கள் ஓடத்தை கங்கையில் வேகமாகச் செலுத்தினார்கள். நடு ஆற்றில் சீதை பாகீரதியைத் தியானித்து, "தேவி! எங்களுடைய விரதத்தை முடித்து, மறு படியும் உன்னைக் கடந்து க்ஷேமமாக ஊர் திரும்ப அருள் வாயாக" என்று நமஸ்கரித்தாள்.

பிறகு பேசிக்கொண்டே கங்கையைக் கடந்து, அக்கரை அடைந்தார்கள்: அங்கே மூவரும் முதல் முதலாக வேறு துணையின்றி நின்றார்கள்.

"லக்ஷ்மணா! நீதான் இனி எனக்குக் காவல்படை!" என்றான் ராமன். "நீ முன்னால் செல். சீதை உன்னை அடுத்தாற்போல் செல்லவேண்டியது. நான் உங்கள் இருவருக்கும் பின்னால் வருவேன். வனவாசத்தில் கஷ்டங்கள் சீதைக்கு அதிகமாயிராமல் நாம் பார்த்துக்கொள்ள வேண்டும். இனி ஜனக்கூட்டம் கிடையாது. விளையாட்டு வேடிக்கைகள் கிடையாது."

அன்று ராமனுக்குக் கௌசல்யாதேவியின் நினைவு வந்து ரொம்பவும் துக்கப்பட்டான்.

"லஷ்மணா! நீ திரும்பிப் போய் என்னைப் பெற்ற கௌசல்யா தேவியையும், உன்னைப் பெற்ற சுமித்திரா தேவியையும் பாதுகாத்தல் நலமல்லவா? நான் எப்படியாவது சமாளித்துக் கொள்ளுகிறேன்" என்றான். இதற்கு லக்ஷ்மணன் "மன்னிக்கவும். நான் அயோத்திக்குத் திரும்பிப் போக முடியாது! " என்றான். இது ராமன் எதிர்பார்த்த பதிலே.

இப்படி அடிக்கடி மனுஷ சுபாவம் தலையெடுத்துச் சக்கரவர்த்தித் திருமகன் துக்கப்படுவதையும் பேசுவதையும் பார்ப்போம். இதுவே ராமாயணத்தின் அழகு. சர்வ வல்லமை பொருந்திய ஈசுவரன், ஈசுவரனாகவே இருந்து எல்லாம் செய்து முடித்துவிட்டால் பிற்பாடு அவதாரம் ஏது? சாமான்ய தருமத்தை நிலைநாட்டுவது ஏது? ஆதி அவதாரங்

களுக்கும் பிந்திய அவதாரங்களுக்கும் பேதம் இதுவே. ராமாவதாரத்தில் மானுஷ சுபாவத்தின் போக்கும் அதனுடன் சாதாரண தருமத்தின் விளக்கமும் சேர்ந்து வரும். இதைத் தான் ராமச்சந்திரன் யுத்தம் முடிந்து சீதை அக்கினிப் பிரவேசம் செய்யும் போது சொன்னான்.

ஆத்மானம் மானுஷம் மன்யே
ராமம் தசரதாத்மஜம்

"நான் என்னைத் தசரதன் மகன் ராமன் என்கிற மனிதனாகத்தான் எண்ணி வருகிறேன். உண்மையில் நான் யார்? யாரைச் சேர்ந்தவன்? எதற்காகப் பிறந்தேன்? இந்த விஷயங்கள் எனக்கு எப்படித் தெரியும்? தாங்கள்தான் எனக்குச் சொல்லவேண்டும்." இவ்வாறு அச்சமயம் ராமனே பிரம்மா விடம் சொன்னதாக வால்மீகி எழுதியிருக்கிறார்.

கங்கையின் தென்கரையில் ராமன் துக்கப்பட்டுப் பேசியபோது லக்ஷ்மணன் ராமனுக்குத் தைரியம் சொல்லித் தேற்றினான்.

அன்றைய இரவு ஆலமரத்தடியில் கழித்து, மறுநாள் காலையில் புறப்பட்டு, அஸ்தமிக்கும் சமயம் பரத்துவாஜ முனிவருடைய ஆசிரமம் போய்ச் சேர்ந்தார்கள். அவ்விடம் உபசாரங்களைப் பெற்று, "எந்த இடத்தில் நாம் வனவாசம் ஏகாந்தமாகச் செய்ய முடியும்" என்று முனிவரைக் கேட்டு, அவருடைய யோசனையையும் ஆசியையும் பெற்றுச் சித்திர கூடம் சென்றார்கள்.

## 28. சித்திரகூடம்

பரத்துவாஜருடைய ஆசிரமத்தில் ஒரு ராத்திரி படுத்துத் தூங்கி, காலையில் எழுந்து ராம லக்ஷ்மணர்களும் சீதையும் மகரிஷியை வணங்கிவிட்டுச் சித்திரகூட மலைக்குப் போகப் புறப்பட்டார்கள். தம் சொந்தக் குழந்தைகளை ஆசீர்வதிப்பது போல, வேறு துணையின்றி வனம்செல்லும்

ராஜகுமாரர்களை முனிவர் மிக்க அன்புடன் மந்திர பூர்வ மாக நற்செலவு ஆசீர்வாதம் கூறி வழி அனுப்பினார். போகும் வழியை நன்றாக விளக்கிச் சொன்னார். அவர் குறிப்பிட்ட மார்க்கமாகவே மூவரும் சென்றார்கள். முனிவர் சொல்லியபடி வேகமாக ஓடும் காளிந்தி யாற்றைக் கடப்பதற்கு ஒரு தெப்பம் கட்டினார்கள். அதற்கு வேண்டிய மரக்கட்டைகளும் மூங்கில்களும் வெட்டிச் சேர்த்துக் காட்டு கொடிகளால் நன்றாகக் கட்டினார்கள். அதில் சீதை உட்காரு வதற்காக லக்ஷ்மணன் இலைகளும் சிறு கிளைகளும் பரப்பி நன்றாக அமைத்தான். தெப்பத்தில் சீதையை ராமன் உட்காரச் சொன்னபோது கொஞ்சம் கூச்சத்தோடு ஏறி உட் கார்ந்தாள். பிறகு சீதையின் துணி மூட்டையையும் கிழங்கு வெட்டுவதற்கான குந்தாலி, கூடை முதலியவற்றையும் சரியா கத் தெப்பத்தில் வைத்துத் தாங்களும் ஏறினார்கள். ஏறி மெதுவாக ஆற்றைத் தாண்டினார்கள்.

ஆற்றின் நடுவே செல்லும்போது, சீதை நதியை வணங்கி 'நாதனுடைய பிரதிக்ஞை க்ஷேமமாக முடிந்து மூவரும் ஊர் திரும்பும்படி அருள்வாயாக' என்று வேண்டிக் கொண்டாள்.

இவ்வாறே இன்னும் சில ஆறுகளையும் கடந்து சென்ற பின் பரத்துவாஜ முனிவர் குறிப்பிட்ட பெரிய ஆலமரத்தைக் கண்டார்கள். அந்த ஆலமரத்தடியிலும் சீதாதேவி பூஜை செய்தாள். "என் புருஷனுடைய விரதம் முடிவடைய வேண் டும். மரமே! கௌசல்யை, சுமத்திரை இவர்களை நான் திரும் பிப் பார்க்கும்படி அருள்வாய்" என்று பிரார்த்தனை செய்தாள்.

"லக்ஷ்மணா, நீ முன்னால் சீதையுடன் செல்வாய். நான் பின்னால் ஆயுதபாணியாய் நடப்பேன். வழியில் அவள் கேட்கும் பூவோ, பழமோ எதை இஷ்டப்பட்டாலும் அதைப் பறித்துக் கொடுத்து, அவளை உற்சாகப்படுத்திக் கொண்டே நடப்பாய்" என்றான் ராமன்.

அவ்வாறே சீதையும் 'அந்த மரம் என்ன மரம்?' 'இந்தச் செடி என்ன செடி?' 'அதோ அந்தக் கொடியைப் பாருங்கள்; அதில் புஷ்பங்களைப் பாருங்கள்!' என்று மிக ஆனந்தமாய் ராமனையும் லக்ஷ்மணனையும் கேட்டுக்கொண்டும், அதற்கு முன் தான் பார்த்திராத புஷ்பங்களையும் பழங்களையும் பார்த்து மகிழ்ந்து கொண்டும் சென்றாள்.

பிறகு ஓர் ஆற்றங்கரையை அடைந்தார்கள். வனத்தில் அநேக வித மிருகங்களையும் பட்சிகளையும் சீதைக்குக் காட்டிச் சந்தோஷமாக உலாவிவிட்டு ஆற்றங்கரையில் தங்கி னார்கள்.

இவ்விடத்திலும் இன்னும் பலவிடங்களிலும் ராமலக்ஷ் மணர்கள் வேட்டையாடி, பூஜைக்குத் தகுந்த, அதாவது வழக்கப்படி சாப்பிடத் தகுந்த வேட்டையாகாரம் சம்பா தித்து உண்டார்கள் என்று வால்மீகி முனிவர் பாடியி ருக்கிறார். சந்தேகத்துக்கு இடமில்லாமல் வியக்தமாகப் பாடியிருக்கிறார். இதைப்பற்றி நாம் குழப்பமடைய வேண்டியதில்லை. க்ஷத்திரியர்களின் ஆசாரப்படி மாமிச ஆகாரத்தில் குற்றமில்லை. காலத்துக்கும் குல வழக்கத்துக்கும் ஏற்றபடி உடலைப் பாதுகாப்பதற்காக எந்த உணவும் தக்க வழியில் சம்பாதித்து, பூஜையில் வைத்து, அளவுக்கு மிஞ் சாமல் உண்பதில் யாதொரு தவறுமில்லை என்பது பாரத தேசத்துக்குப் பொது தர்மம்.

மறுநாள் காலையில் ராமன் லக்ஷ்மணனை எழுப்பி, "தம்பி, மரங்களில் பறவைகள் மதுரமாகச் சப்திப்பதைக் கேள்! புறப்படுவதற்கு நேரமாயிற்று" என்றான்.

லஷ்மணன் வனவாச காலம் முழுவதும் சாப்பி டாமலும் தூங்காமலும் விரதம் காத்தான் என்கிற கதை வால்மீகி ராமாயணத்தில் சொல்லப்படவில்லை. ஆனபடி யால் லஷ்மணனை அதிகாலையில் இன்னும் கொஞ்சம் தூக்க மயக்கத்திலிருந்த சமயம் ராமன் எழுப்பினான் என்று இவ் விடத்தில் சொல்லியிருப்பதில் முரண் ஒன்றுமில்லை.

உடனே லக்ஷ்மணன் தூக்கம் தெளிந்து எழுந்தான். எல்லாரும் ஸ்நானம், ஜபம் முதலிய காரியங்களை முடித்துக் கொண்டு கிளம்பினார்கள்.

பரத்துவாஜர் குறிப்பிட்டிருந்த வழியே சென்றார்கள். அப்போது வசந்தகாலம். மரங்களும் செடிகளும் சித்திர விசித்திர வண்ணப் புஷ்பங்களைப் பூத்து, கொழுந்து விட்டெரியும் நெருப்பைப்போல் பிரகாசித்தன. சில மரங்களில் கனிகளும் துளிர்களும் கிளைகள் தாங்கமுடியாத பெரும் பாரமாகத் தொங்கின. 'மனிதர்களால் சேதப்படுத்தப்படாத விருக்ஷங்களின் அழகைப் பார்! தேன்கூடுகள் தொங்குவதைப் பார்; புஷ்பங்கள் உதிர்ந்து புஷ்பப் படுக்கையாக விளங்கும் தரையைப் பார்! கூவும் பறவைகளின் குரலைக் கேட்டாயா? எவ்வளவு மனோகரமாக ஒன்றுக் கொன்று பிரதிநாதம் செய்துகொண்டு ஆனந்தமாக வசிக்கின்றன! இதையெல்லாம் அநுபவித்துக்கொண்டு, நம்முடைய வனவாசத்தைச் சுகமாகக் கழித்துவிடலாம்" என்று ராமன் லக்ஷ்மணனுக்கும் சீதைக்கும் அவ்வப்போது சொல்லிக் கொண்டே நடந்தான்.

அதற்குள் சித்திரகூடமலை தென்பட்டது. அதைக் கண்டதும் மகிழ்ச்சியடைந்து வேகமாக நடந்தார்கள்.

"இந்த மலைப் பிரதேசத்தின் அழகு, பார்க்கப் பார்க்க வளர்ந்து கொண்டே போகிறது. கிழங்குகளும், பழங்களும் நிறைந்து வளமாக இருக்கிறது. ஜலம் எவ்வளவு சுத்தமாகவும் ருசியாகவும் இருக்கிறது. ரிஷிகளும் ஆசிரமவாசிகளும் இருக்கும் இந்த வனத்தில் நாமும் சந்தோஷமாக இருக்கலாம்" என்றான் ராமன்.

* * *

பிறகு வசிப்பதற்கு ஆசிரமம் கட்டத் தீர்மானித்தார்கள். லக்ஷ்மணன் மிக சாமர்த்தியசாலி. எல்லா சௌகரியங்களும் கொண்ட வசதியான குடிசையைக் காற்றுக்

கும் மழைக்கும் அசையாதபடி கட்டி முடித்தான். சாளரமும் கதவுகளும் அமைத்துப் பாய்களும் வேய்ந்து தொங்கவிட்டு, எல்லாம் அழகாக லக்ஷ்மணன் ஒருவனாகவே செய்துமுடித்து விட்டான்.

ரமணியமான சித்திரகூட மலைப்பிரதேசத்தில் மால்யவதி நதிக்கரையில் கட்டிய இந்த ஆசிரமத்தில் மூவரும் வசித்து வந்தார்கள். எந்தக் கவலையுமின்றி வனவாச தருமத்தை அனுசரித்து வந்தார்கள். பிறந்து வளர்ந்த நகரத்தைவிட்டு வெளியேற்றப்பட்ட துக்கத்தை மறந்துவிட்டு, இந்திரன் தேவகணகங்களுடன் சுவர்க்கத்தில் வசிப்பதுபோல் சந்தோஷமாகக் காலங்கழித்தார்கள்.

* * *

கம்பரும் வால்மீகியும் இந்தக் கட்டத்தை ஒருவருடன் ஒருவர் போட்டி போட்டுக் கொண்டவர்கள்போல் அழகாக வர்ணிக்கிறார்கள்.

ஆசிரமம் கட்டி முடித்ததும் அந்தப் பர்ண சாலையைப் பார்த்து,

''என்று கற்றனை நீ இதுபோல்?''

என்று ராமன் தம்பியைக் கட்டி அணைத்துக் கண்ணீர் விட்டதாகக் கம்பர் பாடியிருக்கிறார். அப்படித்தானே நடந்திருக்க வேண்டும்!

"பூவைவிட மெல்லிய பாதங்களைப் படைத்த இந்த மிதிலை ராஜகுமாரி, பெருங்காட்டையும் நடந்து தாண்டினாள். அவளுடைய பாதங்கள் செய்த அற்புதத்தைப்போல், தம்பி உன் கைகள் இந்தத் தச்சு, கொத்து வேலையும் செய்துவிட்டன! நம்முடைய துரதிர்ஷ்டத்திலிருந்து உண்டான நல்ல அதிர்ஷ்டத்தை உன் கைவேலையில் கண்டேன்" என்று ராமன் ஆனந்தக் கண்ணீர் விட்டதைக் கம்பர் அற்புதமான முறையில் பாடியிருக்கிறார். இதை டி.கே.சி. எனக்குப் பல

தடவை அவருடைய தனிப்பாங்கில் பாடிக் காட்டி, உள்ளத்தை உருக்கி வந்தார். பின்னால் வரும் கஷ்டங் களையும் துக்கங்களையும் எடுத்துக்காட்ட இந்த சித்திரகூட மகிழ்ச்சி நிலை, ராமாயணத்தில் ஒரு அற்புத கட்டமாகிறது.

கம்பரும் வால்மீகியும் இந்த இடத்தில் ராம லக்ஷ்மணர்களையும் சீதையையும் விட்டுவிட்டு அயோத் திக்குச் செல்லுகிறார்கள். அயோத்தியின் பரிதாப நிலையை யும், பரதனுக்கு ஏற்பட்ட அநியாயப் பழியையும் துக்கத் தையும் பாடப்போகிறார்கள்.

## 29. பெற்ற தாயின் துக்கம்

மூவருடைய உருவமும் கண்ணுக்குத் தெரிந்து கொண்டிருக்கும் வரையில் சுமந்திரனும் குகனும் அவர்களைப் பார்த்துக்கொண்டே நின்றார்கள். கண்ணுக்கு மறைந்து போனதும், அவர்கள் இருவரும் துக்கத்தில் மூழ்கிக் குகனு டைய நகரம் சென்றார்கள். பிறகு அங்கிருந்து சுமந்திரன் குகனிடம் விடை பெற்றுக்கொண்டு அயோத்திக்குத் திரும் பினான்.

அயோத்தியா நகரத்தை அணுக அணுக வழக்கமாக நகரத்திலிருந்து கிளம்பி வரும் சப்தங்களுக்கும் காட்சி களுக்கும் பதில், பாழடைந்த ஊர்போல் தென்பட்டது. சுமந்திரனுடைய தேரானது கோட்டை வாயிலைக் கடந்து ஊருக் குள் பிரவேசித்ததும் "ராமன் எங்கே?" என்று ஊரார் தேரைச் சுற்றிக் கொண்டார்கள்.

"அருமை ஜனங்களே! ராமலஷ்மணர்கள் கங்கையைத் தாண்டிவிட்டார்கள். என்னை ஊருக்குத் திரும்பு என்று சொல்லிவிட்டு அவர்கள் வனத்தில் கால்நடையாகச் சென்றார்கள்" என்று கூறினான்.

"ஐயோ!" என்று கதறினார்கள். "இந்த ஜன்மம் எடுத் தோமே; என்ன பாவம் செய்தோம்!" என்று அழுதார்கள்.

ரதத்தைப் பார்த்து, "இந்தத் தேர் பாழடைந்து கிடக்கிறதே! இந்தத் தேரில் ராமனும் சீதையும் லக்ஷ்மணனும் உட்கார்ந்து சென்றார்களே!" என்று கடைவீதி, ராஜவீதி இவைகளின் இருபுறத்தினின்றும் பெண்கள் அழுத சப்தத்தைச் சுமந்திரன் கேட்டுக் கொண்டே தன் முகத்தைத் துணியால் மறைத்துக்கொண்டு சென்றான். தசரதனது அரண்மனைக்கு முன் தேரை நிறுத்திவிட்டு இறங்கினான்.

அங்கேயும் அரண்மனை வாயிலில் ஒரே ஜனக் கூட்டமாயிருந்தது. "ராமனை வனத்தில் விட்டுவிட்டு வரும் இவர், கௌசல்யைக்கு என்ன சொல்லப் போகிறார்? அவள் எப்படி உயிரை வைத்துக் கொண்டிருப்பாள்?" என்றெல்லாம் பெண்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். இதைக் கேட்கக் கேட்கச் சுமந்திரன் துக்கம் அதிகரித்தவனாக, மெள்ள அந்தப் புரத்துக்குள்ளே சென்றான்.

அங்கே குற்றுயிராகக் கிடந்த அரசனைப் பார்த்தான். ராமன் அரசனிடம் கூறும்படி சொல்லியிருந்ததையெல்லாம் பக்கத்தில் நின்று மெதுவாகச் சொன்னான். தசரதன் ஒன்றும் பேசவில்லை.

அப்போது கௌசல்யாதேவி துக்கம் தாங்காமல் தசரதனைப் பார்த்துக் கடுமையாகப் பேசினாள்.

"மகா பாக்கியவானே! உலகம் வியக்கும்படியான விரதத்தை ஒப்புக்கொண்ட என் குழந்தையைக் காட்டில் விட்டுவிட்டுத் திரும்பி வந்த தங்களுடைய அமாத்தியர் இதோ நிற்கிறார். ஏன் அவரிடம் ஒன்றும் பேசாமல் இருக்கிறீர்! கைகேயிக்கு வரம் தந்தது அப்போது எளிதாகவும் சந்தோஷமாகவும் இருந்தது. இப்போது ஏன் வெட்கப்படுகிறீர்? வரத்தின் பயன் இதுவாகும் என்று உமக்குத் தெரியாதோ? நீர் என்னவோ உம்முடைய சத்தியத்தைக் காப்பாற்றிக் கொண்டீர். உமக்கு என்ன குறை?

என் துக்கத்தில் யார் பங்கு எடுத்துக்கொள்ள முடியும்? அதை நான்தான் அனுபவிக்க வேண்டும். நீர் துக்கப்படுவதைப் பார்த்து எனக்குத் திருப்தி ஏற்படமுடியுமா? துக்கப்பட வேண்டிய முறையாயிற்றே என்று நீர் துக்கப்பட வேண்டிய தில்லை. ஏன் பேசாமல் இருக்கிறீர்? இங்கே கைகேயி இல்லை. பயப்படவேண்டாம், ராமனைப்பற்றி அவனை வனத்தில் விட்டுத் திரும்பிய சுமந்திரரை விசாரித்துக் கேட்பீராக, பயப்படவேண்டாம். இயற்கையை ஏன் வழியடைக்கிறீர்? கைகேயி இல்லை." துக்கத்தைத் தாங்கமுடியாமல் புருஷனை இவ்வாறு குறைகூறிப் பேசினாள் கௌசல்யை.

கோபமும் துக்கமும் பதிபக்தியும் எல்லாம் ஒன்று சேர்ந்து, அவள் உள்ளத்தை வேதனை செய்தன. அந்தத் துக்க வேகத்தைத் தாங்காமல் தசரதன் மூர்ச்சையடைந்தான். இதைக் கண்டு உயிர் போய் விட்டதோ என்று அந்தப்புரம் முழுவதும் பயந்தார்கள். அலங்கோலமாயிற்று.

புத்திர சோகத்தினால் கௌசல்யாதேவி தன்னுடைய புருஷனின் உடல் நிலையையாவது, மன நிலையையாவது சரியாக உணரவில்லை. அவனுடைய துக்கத்தைக் குறைப் பதற்குப் பதில் அதிகமாக்கினாள். தசரதன் மூர்ச்சை தெளிந்த பிறகு, சுமந்திரனை விசாரித்தான். சுமந்திரனும் ராமன் சொல்லியனுப்பியவாறு எல்லோருக்கும் சொல்ல வேண்டியதைச் சொல்லித் தன் கடமையைச் செய்து முடித் தான்.

கௌசல்யா தேவியைச் சுமந்திரன் பலவாறாகத் தேற்றிச் சமாதானப்படுத்திப் பார்த்தான். "ராமன் இருக்கு மிடத்தில் என்னைக் கொண்டுபோய்ச் சேர்த்து விடுங்கள். சீதையைக் காட்டுக்கு அனுப்பி விட்டோமே, என்னால் துக்கம் பொறுக்க முடியவில்லை. தண்டகாரண்யத்தில் சீதையுடன் நானும் இருப்பேன்" என்று கௌசல்யை அழுது கொண்டேயிருந்தாள்.

"தேவி, இந்த மனக்குழப்பத்தை அகற்றிவிட்டுத் தைரியமாக இருக்க வேண்டும். அயோத்தியிலிருந்ததைக் காட்டிலும் வனத்தில் ராமன் மிக ஆனந்தமாகக் காலம் கழித்து வருகிறான். துக்கப்படவே இல்லை. லக்ஷ்மணனும் ராமனுக்குப் பணிவிடை செய்து கொண்டு தரும வாழ்க்கையின் பயனை அடைந்து வருகிறான். அவனுக்கும் ஒரு குறையுமில்லை. சீதையோ அரண்மனையில் இருந்தது போலே வனத்திலும் தன் பிராணனை ராமனிடத்தில் நாட்டிப் பயம், விசனம் ஒன்றுமில்லாமல் மிகச் சந்தோஷமாகவே இருக்கிறாள். பிறந்தது முதல் காட்டில் வளர்ந்தவளைப் போலவே விளையாட்டாகக் காலங் கழிக்கிறாள். அயோத்தியில் உத்தியான வனத்தில் ராமனுடன் விநோதமாகக் காலம் கழிப்பதுபோல் வனத்திலும் சந்தோஷமாகவே இருக்கிறாள். உதயசந்திரனைப் போன்ற அவளுடைய முகத்தின் அழகு கொஞ்சமும் குறையவில்லை. குழந்தையைப்போல் கவலையாவது பயமாவது கொஞ்சமும் இல்லாமல் விளையாடிக்கொண்டிருக்கிறாள். ராமன் பக்கத்திலிருப்பதால் அவளுக்கு வருத்தம் என்பது அணுவளவுமில்லை. செல்லும் வழியில் கிராமங்கள், ஊர்கள், ஆறுகள், மரம், செடி, புஷ்பம் இவைகளைப்பற்றியெல்லாம் விசாரித்தவாறு லக்ஷ்மணனோடும், ராமனோடும், சம்பாஷித்துக் கொண்டு உல்லாசமாக நடந்து போகிறாள். வனவாசம் அவளுக்கு ஒரு தோட்டத்தில் விளையாடுவது போலிருக்கிறது. எழில் எள்ளளவும் குன்றவில்லை. நடப்பதினால் அவள் பாதங்கள் மருதாணி இட்டுக் கொள்ளாமலேயே சிவந்த தாமரையைப் போல் பொலிவு அடைந்து வருகின்றன. வனத்தில் ஆனந்த நர்த்தனம் செய்வது போலவே நடக்கிறாள். கால்களில் சலங்கைகள் இல்லையென்பதுதான் வித்தியாசம். நான் சொல்லுவது எல்லாம் உண்மை. நீங்கள் விசனப்பட வேண்டாம். அவர்கள் மூவரும் உலகத்துக்கொரு பாடமாகத் தருமத்தை நடத்தி வருகிறார்கள். சக்கரவர்த்தியின் பிரதிக்ஞையை

நிறைவேற்றி வருகிறார்கள். பித்ரு வாக்கிய பரிபாலனம் செய்கிறார்கள். அவர்களுடைய தவம் உலகத்தில் பெரும் புகழுடன் என்றென்றும் நிற்கும். துக்கப்படுவதற்குக் காரணமில்லை.

இவ்வாறெல்லாம் பல சொல்லித் தேற்றிப் பார்த்தான் சுமந்திரன். ஆனாலும் கௌசல்யை கொஞ்சநேரம் சமாதானப்படுவாள். பிறகு, "ஐயோ ராமா!" "ஐயோ! குழந்தாய்!" என்று கதறுவாள். காட்டில் ராமனை விட்டுவிட்டு வந்த சுமந்திரனைப் பார்த்த பிறகு அவள் துக்கம் அதிகரித்தது.

## 30. முன்னாள் நிகழ்ச்சி

கௌசல்யை, தசரதனை நிந்தித்துக் கொண்டேயிருந்தாள். அப்படிப் பேசுவதில் புத்திரனை இழந்த தன் பெருந்துக்கத்துக்கு ஒருவித ஆறுதலைக் கண்டாள்.

தசரதன் நிலைமையோ, ஒரு சிக்கலில் அகப்பட்டுப் போய்ப் பெருங் குரூரத்தைச் செய்ய வேண்டியதாக நேரிட்டது. தான் செய்த பிழையும் அதனால் ஏற்பட்ட அக்கிரமமும் அவன் அறியாதவன் அல்ல. ஆயினும் தருமசங்கடத்தினின்று தப்பும் வழியை அவன் காணவில்லை. தகப்பன் உத்தரவை மீறி ராஜ்யத்தை விடமாட்டேன் என்று ராமன் எதிர்த்துப் போர் செய்திருந்தால், தசரதனுக்குச் சந்தோஷமாகவே இருந்திருக்கும். தான் பிடிபட்ட வலையிலிருந்து தப்பித்துக் கொண்டிருப்பான். ஆனால் ராமனோ 'தந்தையினுடைய உத்தரவை மீற மாட்டேன். காட்டுக்குப் போவதே என் கடமை' என்று தருமப் பிடிவாதம் செய்து காட்டுக்குப் போய்விட்டான். சீதையும் லக்ஷ்மணனும் ராமனோடு காட்டுக்குப் போவதே தங்களுடைய கடமை என்று, யாருடைய யோசனையையும் கேட்காமல் தீர்மானித்துக் கொண்டு வனம் சென்று விட்டார்கள்.

இவ்வாறு ஏற்பட்ட நிலைமையில் அரசன் இன்னது செய்வது என்று தெரியாமல் தத்தளித்து, அரை ஜீவனாக இருக்கும் சமயத்தில், கௌசல்யை தனக்குத் தோன்றின நியாயத்தையெல்லாம் சொல்லித் தசரதனுடைய குற்றத்தை வெகு கடுமையான முறையில் குத்திக் குத்திக் காட்டிப் பேசினாள்.

"யாரைப்பற்றி உமக்கு என்ன கவலை? நீர் சத்தியம் தவறாமல் இருந்துவிட்டால் உமக்குப் போதும். இளம் பெண்ணோடு சுகமாக இருப்பதில் உமக்குத் திருப்தி ஆகி விட்டது. எனக்கு யார் கதி? ஸ்திரீக்குப் புருஷன்தான் கதி. நான் அடைந்த புருஷனோ வேறு மனைவியுடன் சேர்ந்து கொண்டு என்னைக் கைவிட்டு விட்டான். என் மகனோ காட்டுக்குப் போய்விட்டான். என் பிறந்தகத்துப் பந்துக்கள் தூர தேசத்திலிருக்கிறார்கள். புருஷன் உயிரோடிருக்க அங்கே போய் நான் எப்படிப் பந்துக்களை அண்டிப் பிழைக்க முடியும்? நிர்க்கதியாக நிற்கிறேன். உமக்கு இதைப்பற்றியெல்லாம் என்ன கவலை? கைகேயியும் பரதனும் சுகமாக இருந்தால் உமக்குப் போதும். நீர் ஒன்றும் யோசிக்க வேண்டாம். ராமன் காட்டில் பதினான்கு வருஷங்கள் கழித்துத் திரும்பி வந்தாலும்கூட, உம்முடைய சுகத்தை அவன் கெடுப்பான் என்று பயப்பட வேண்டாம். ராமன் திரும்பி வந்தாலும் பரதன் ஆண்ட ராஜ்யத்தை அவன் மறுபடி தீண்ட மாட்டான். வேறு மிருகம் கொன்று தின்ற மாமிசத்தின் மிகுதியைக் காட்டுப்புலி தீண்டாது. மீன் தன் குஞ்சுகளைக் கொன்று தின்றுவிடுவது போல் பெற்ற பிள்ளையைக் கொன்றீர்."

இவ்விதமாக, காயம்பட்ட புண்ணில் குத்திக் குத்தி வேதனை செய்யும் முறையில், புருஷனைத் தாக்கிப் பேசிக் கொண்டேயிருந்தாள் கௌசல்யை.

இந்தப் பேச்சைக் கேட்டு வேதனைப பட்ட அரசன், "என்னுடைய கதி ஏன் இப்படியாயிற்று?" என்று பால்ய காலத்து நிகழ்ச்சிகளை மனதுக்குக் கொண்டு வந்து சிந்தனையில் ஆழ்ந்தான்.

பிறகு கொஞ்ச நேரம் கழித்துப் பெருமூச்சு விட்டுக் கண்களைத் திறந்து பார்த்தான்; பக்கத்தில் கௌசல்யை இருக்கக் கண்டான்.

பூர்வகாலத்து நிகழ்ச்சி ஒன்று நினைவுக்கு வந்து, தசரதனுடைய துக்கம் இருமடங்காயிற்று. இந்தப் பரிதாப நிலையில் மனைவியைப் பார்த்து இரு கைகளும் கூப்பி "கௌசல்யே! என் பேரில் இரக்கங்கொள்!" என்று அழுதான்.

"அந்நியர்கள் செய்த குற்றத்தைக்கூட நீ எப்போதும் மன்னித்து விடுவாயே! ஏன் என்பால் இப்படி நடந்து கொள்கிறாய்? புருஷனானவன் கெட்டவனாயிருந்தாலும், மனைவிக்கு அவனே தெய்வம் என்றெல்லாம் பெரியோர்கள் சொல்லுகிறார்கள். பெருந் துக்கத்தை நீ அடைந்தாய் என்பது உண்மை. ஆயினும், என்னை இப்படிப் பேசி நீ இம்சிக்கலாமா?" என்றான்.

இதைக் கேட்ட கௌசல்யை, "படையெடுத்துவரும் சத்துருவால் ஏற்படும் துன்பங்களைவிட, உள்ளே வேலை செய்யும் துக்கத்தால் உண்டாகும் தாபம் பெரிது. என்னால் தடுத்துக் கொள்ள முடியவில்லை. மன்னிப்பீராக! ராமன் வனம் சென்று ஐந்து ராத்திரியாயிற்று என்று கணக்கு சொல்லுகிறார்கள். ஐந்து வருஷங்கள் ஆனதைப்போல் அல்லவா எனக்குத் தோன்றுகின்றது. அவனை நினைந்து நினைந்து எனக்கு உண்டாகும் துக்கம், நதிகளில் வெள்ளம் பொங்கிப் பெருகுவது போல் அதிகரிக்கிறது! நான் என்ன செய்வேன்? இந்தத் துயர வெள்ளத்தில் நான் சுயவசமிழந்தேன். என்னை மன்னிப்பீராக" என்றாள்.

இவ்வாறு கௌசல்யை பேசிய அன்பான மொழிகளைக் கேட்டுத் தசரதன் கொஞ்சம் ஆறுதலடைந்தான். அந்தச் சமயம் சூரியன் மறைந்து இருள் மூட ஆரம்பித்தது. வேதனையால் ஓய்ந்துபோன அரசன் மெல்லத் தூங்கினான்.

அர்த்த ராத்திரியில், மறுபடியும் தசரதன் விழித்துக் கொண்டு பக்கத்தில் கௌசல்யாதேவி இருப்பதையறிந்தான்.

"பிரியமானவளே! இருக்கிறாயா பக்கத்தில்? கர்ம பலனை மாற்ற முடியாது. நான் செய்த பாவத்தின் விளைவை இப்போது அனுபவிக்கிறேன். அற்ப சந்தோஷங்களுக்காகப் பெருந்தீமை விளைவிக்கக்கூடிய காரியத்தை அறியாமையால் மக்கள் செய்துவிடுகிறார்கள். பிறகு பயனை அனுபவிக்கும் போது வருந்துகிறார்கள். நான் சிறுவனாக இருந்த காலத்தில், குறியைப் பார்க்காமல் ஓசையைக் கேட்டு அம்பு எய்யும் திறமை பெற்றிருந்தேன். இந்தச் சாமர்த்தியத்தின் அற்ப சந்தோஷத்துக்காக, ஒரு காலத்தில் நான் பெரும் பாவத்தைச் செய்ய நேர்ந்தது. அந்த நிகழ்ச்சியைச் சொல்லுகிறேன் கேள்" என்று ஆரம்பித்தான். "அக்காலத்தில் நீ என்னை வந்து அடைந்திருக்கவில்லை. ஒரு நாள் இரவில் தேர் ஏறிச் சரயூ நதிக்கரையில் வேட்டையாடப் போனேன். மழை பெய்து மலைதாதுக்களும் புதுமண்ணும் கலந்து, பலவித நிறங்களில் ஜலம் எங்கு பார்த்தாலும் ஆறுகளாக ஓடிக்கொண்டிருந்தது. பட்சிகளின் சப்தம் ஒடுங்கிப்போய் வனம் தூங்கினாற்போல் இருந்தது. இரவில் தண்ணீர் குடிக்கப் புலி, கரடி முதலிய மிருகங்கள் வரும் சப்தத்தை வைத்துக் குறிப்பார்த்து அம்பு எய்யும் பயிற்சி எனக்கு இருந்தபடியால், அதைப் பயன்படுத்தி பரீட்சிக்கலாம் என்று ஆசை தோன்றிற்று. நல்ல இருட்டு, அந்தச் சமயம் ஒரு யானை தண்ணீர் குடிக்கும் சத்தம்போல் "பொளு பொளு" வென்று கேட்டது. உடனே சாமர்த்தியமாகச் சப்தத்தைக் குறிவைத்து அம்பை எய்தேன். என்னுடைய அம்பு விஷ சர்ப்பம்போல் பாய்ந்து சரியாகவே போய்க் குறியைத் தாக்கிற்று. "ஐயோ செத்தேன்!" என்று ஒரு மனிதக் குரல் கிளம்பியதைக் கேட்டுத் திடுக்கிட்டேன்.

"என் பேரில் யாருக்குத் துவேஷம்? நான் யாருக்கும் ஒரு குற்றமும் செய்யவில்லையே. தண்ணீர் மொண்டு கொண்டு

போக வந்த என்னை எவனோ கொன்றானே! என்ன பயனைக் கருதி என்னைக் கொன்றான்! நான் ஒரு பாவமும் செய்யவில்லையே. விரத வாழ்க்கை வாழும் தபஸ்வியான என் பேரில் யாருக்கு என்ன விரோதம்? கண்ணில்லாத என் கிழத்தாயும் தகப்பனாரும் இனி என்ன செய்வார்கள்? என் னையே நம்பியிருந்தார்களே! அவர்கள் இனி எப்படி உயிர் வாழ்வார்கள்? ஐயோ! நான் இப்படி அநியாயமாய்க் கொல்லப்பட்டேனே!" என்று பரிதாபக் குரலில் ஒருவன் அழுத வார்த்தைகளைக் கேட்டேன். பெருந் திகிலடைந்து, என் வில்லும் கையிலிருந்த அம்பும் கீழே நழுவி விழுந்தன.

"அழுகுரல் வந்த இடம் நோக்கிச் சென்றேன். தலைமுடி விரிந்து சிதறி, உடல் எல்லாம் ரத்தமும் சேறுமாகத் தரையில் புரண்டு கொண்டிருந்த ஒரு தபஸ்வியைக் கண்டேன். பக் கத்தில் தண்ணீர்க்குடம் உருண்டு கிடந்தது. என்னைப் பார்த் ததும் அவர் கண்களிலிருந்து வீசிய ஒளி என்னைச் சுடும் போலிருந்தது.

"பாவி, நீயா என்னைக் கொன்றது? தண்ணீர் மொள்ள வந்த என் பேரில் ஏன் அம்பு எய்து கொன்றாய்? கண்ணிழந்த வயோதிகப் பெற்றோர் ஆசிரமத்தில் தாகத்தோடு காத்திருக் கிறார்களே! நான் தண்ணீர் எடுத்துக்கொண்டு வருவேன் என்று இப்போது எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். அடேபாவி! ஏன் என்னைக் கொன்றாய்? ஐயோ தெய்வமே! என் தவமும் விரதமும் வேத அத்யயனமும் வியர்த்தமாய்ப் போயிற்றா? நான் இப்படி அடிபட்டுக் கிடக்கிறேன் என்பது என் வயோதிகத் தாய் தந்தையருக்குத் தெரியாதே? வருவான், வருவான் என்று எதிர்பார்த்த வண்ணமாகவே இருப்பார்கள். விஷயம் தெரிந்தாலும் நடக்க முடியாத கபோதிகள் என்ன செய்வார்கள்? நீ யார்? கோசல தேசத்து அரசன் அல்லவா? என்னை அரசனா கொன்றான்? சரி, அரசனே! நீ போய் அவர்களுக்கு விஷயத்தைச் சொல்லி அவர்கள் காலில் விழுந்து சரணடைவாய். இல்லாவிடில் அவர்களுடைய கோபம்

உன்னை எரித்துவிடும். அவர்களுடைய சாபம் உன்னைச் சாம்பலாக்கிவிடும். தாமதமின்றி அவர்கள் கிடக்கும் ஆசிரமத்துக்கு நேராகப் போவாய். இங்கிருந்து அவ்விடத்திற்கு ஒற்றையடிப் பாதை போகிறது. அதன் வழியாகச் சீக்கிரம் சென்று உன்னைக் காப்பாற்றிக்கொள். ஐயோ, இந்த அம்பு என் பிராணனை வேதனை செய்கிறது. இதை இழுத்து எடுத்து விட்டுப் போ" என்றார் தபஸ்வி.

"தபஸ்வியின் உடலில் பாய்ந்திருந்த அம்பைப் பிடுங்கினால் அவருடைய வேதனை தீரும். ஆனால் என் கையால் உடனே அவர் உயிர் போய்விடும்படியான காரியத்தைச் செய்ய மனம் வரவில்லை. இந்தத் தருமசங்கடத்தில் நான் ஒன்றும் செய்யத்தோன்றாமல் ஒரு கணம் திகைத்து நின்றேன்.

"அப்போது அந்த முனிகுமாரர், "யோசிக்க வேண்டாம். அம்பைப் பிடுங்கிவிட்டு என் வேதனையைத் தீர்த்துவிடு; ஸ்திர சித்தமடைந்துவிட்டேன். உன் பாவத்தைப் பற்றி யோசிக்காதே. தைரியமாக அம்பைப் பிடுங்கியெறிந்து, என் உயிர் வெளியேறச் செய்வாய்" என்று சொன்னார்.

"அம்பைப் பிடித்து மெதுவாக இழுத்துவிட்டேன். உடனே தரையில் புரண்டு வேதனைப்பட்டுக் கொண்டிருந்த தபோதனர் என்னைப் பார்த்த வண்ணம் பெருமூச்சு விட்டு உயிர் நீத்தார்.

"இந்தப் பாவமல்லவா என்னை இப்போது வாட்டுகிறது. கபோதியான அந்தப் பெற்றோர்கள் பட்ட துக்கத்தை நான் இப்போது அனுபவிக்கிறேன்" என்றான்.

## 31. உயிர் நீத்தான்

"அன்று அதற்குப் பிறகு நடந்ததையும் சொல்லுகிறேன் கேள்!" என்றான் தசரதன்.

"மகா பாவ காரியத்தைச் செய்துவிட்டு, ரிஷிகுமாரர் உயிர் நீத்ததையும் பார்த்துவிட்டு, இனி என்ன செய்யலாம் என்று யோசித்தேன். சரி, இவர் சொன்னபடி செய்வதே கடமையும் நன்மையும் என்று தீர்மானித்தேன். அவருடைய குடத்தை எடுத்துச் சுத்தமான தண்ணீர் மொண்டு கொண்டு அவர் சொன்ன ஒற்றையடிப் பாதை வழியாகச் சென்று ஆசிரமத்தையடைந்தேன். அங்கே வயது முதிர்ந்த தாயும் தந்தையும் தங்கள் மகனுடைய வருகைக்காகக் காத்திருந்ததைக் கண்டேன். சிறகிழந்த இரண்டு பட்சிகளைப் போல் சுருங்கிப்போன தேகங்களோடு, இருந்த இடத்திலிருந்து நகர முடியாதவர்களாக, ஆசிரமத்தில் உட்கார்ந்திருந்தார்கள். இருவரும் கண்பார்வை இழந்தவர்கள். ஏன் தண்ணீர் கொண்டுவரப் போனவன் இத்தனை நேரமாகியும் இன்னும் வரவில்லை என்று தங்கள் மகனைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். "ஐயோ இவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருப்பவனை நான் கொன்றுவிட்டு இவர்களை அநாதைகளாக்கி விட்டேனே!" என்று பயமும் துயரமும் அடைந்து மெள்ள நடந்து போனேன். என் காலடிச் சத்தத்தைக் கேட்டதும் தந்தையானவர், "அப்பனே, சீக்கிரம் தாகத்துக்குத் தா. ஏன் இவ்வளவு நேரம்? ஆற்றில் விளையாடிக் கொண்டு காலங் கழித்தாயா? உன் தாயார் தாகத்துக்குத் தவிக்கிறாள் அப்பனே! ஏன் பேசமாட்டேன் என்கிறாய்? நானாவது உன் தாயாராவது ஏதாகிலும் குற்றம் செய்தோமோ? நீ எங்கள் பேரில் கோபங் கொள்ளலாகாது. நீ ஒழுக்கம் குறையாத தரும சீலன். நீதான் எங்களுக்குக் கதி என்பதை நீ அறிவாய். பார்வை இழந்த எங்களுக்கு நீதான் கண்ணாவாய். மகனே! எங்கள் இருவருடைய உயிரும் நீயேதான்! ஏன் பேசாமலிருக்கிறாய்? நான் இப்படிச் சொல்லுகிறேன் என்று கோபமா?" இப்படி அந்தப் பல்லில்லாத கிழவர் குழகுழவென்று பேசினார். நானோ சாப பயத்தால் நடுங்கி னேன். மெல்லத் தைரியப்படுத்திக் கொண்டு பேச ஆரம்பித்தேன்.

"சுவாமி, நான் தசரதன்; உங்கள் ஆணைக்குக் கட்டுப் பட்ட க்ஷத்திரியன். உங்களுடைய குமாரன் அல்ல; என்பூர்வ ஜன்ம பாவத்தின் பயனாக எவராலும் வெறுக்கத்தக்க பெரும் பாவச் செயலைச் செய்துவிட்டு உங்கள் முன் வணங்கி நிற்கிறேன், பகவானே. நான் யானையோ புலியோ காட்டு மிருகம் ஏதேனுமோ வரும் என்று நதிக்கரையில் இரவில் வேட்டையாடப் போனவன், குடத்தில் தண்ணீர் மொள்ளும் சப்தத்தைக் கேட்டு, காட்டு யானை தண்ணீர் குடிக்கிறது என்று எண்ணி, இருட்டில் பாணத்தை எய்து உங்கள் அருமைக் குமாரனைத் தெரியாமல் கொன்று விட்டேன். எய்த சரம் மார்பில் பாய்ந்து கீழே ரத்தவெள்ளத்தில் புரண்டு கொண்டிருந்ததை நான் போய்ப் பார்த்ததும், ஐயோ, என் அறியாமையால் நடந்துவிட்டதே என்று துயரமும் திகிலும் அடைந்து, இன்னது செய்வதென்று தெரியாமல் திகைத்தேன். உங்கள் குமாரர் வேண்டுகோளின் படி அவருடைய வேதனை தீருவதற்காக மார்பில் பாய்ந்த அம்பை நான் இழுத்து எடுத்துவிட்டேன். உங்கள் குமாரன் மேலுலகம் சென்று விட்டார். நான் அஞ்ஞானத்தில் செய்து விட்ட பாதகத்தைச் சொன்னேன். இனி உங்கள் திருவுள்ளம் எப்படியோ அப்படி, சாபத்துக்குக் காத்திருக்கிறேன் அடியேன்" என்றேன்.

"நான் சொன்ன பயங்கர விருத்தாந்தத்தைக் கேட்ட கிழவர்கள் பேச்சிழந்தனர். கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகப் பெருகிற்று. பிறகு தந்தையானவர் சொன்னார். "அரசனே! நீ செய்தது மிகப்பெரிய பாவம். ஆயினும் தெரியாமல் செய்தாய். நீயே வந்து சொல்லவும் செய்தாய். ஆதலினால் பிழைத்தாய். எங்களிருவரையும் அங்கே கொண்டுபோய்ச் சேர்ப்பாயாக. மகனைத் தொட்டுத் தடவித் தருமராஜன் வசம் போய்ச்சேர அனுப்பி விடுவாய்." என்றார்.

"அப்படியே அவர்கள் இருவரையும் தூக்கிக்கொண்டு, ஆற்றங்கரையில் ரிஷி குமாரர் விழுந்து கிடக்கும் இடத்துக

குச் சென்றேன். உயிர் நீத்த உடலைத் தடவி, அழுது, அவர்கள் தங்கள் துக்கத்தைத் தீர்த்துக்கொண்டு பிறகு, குமாரனை ஆசீர்வதித்துத் தகனக் கிரியைகள் செய்து முடித்தார்கள்.

"அரசே! எங்களுக்கு நீ விளைவித்த துக்கத்தை நீயும் அனுபவிப்பாய். புத்திர சோகத்தால் நீயும் மாள்வாய்" என்று சொல்லிவிட்டுச் சிதையிலேறித் தீக்கிரையாகிச் சுவர்க்கம் சென்றார்கள். நான் அன்று செய்த பெரும்பாவம் இன்று என்னைப் பற்றிக் கொண்டது.

"பத்தியத்திற்கு மாறான உணவையுண்ட நோயாளியின் வியாதி அதிகரித்து அவனைக் கொல்லுவது போல், அந்தப் பாவம் இப்போது என்னைக் கொல்லப் போகிறது. கண் தெரியாத அந்தக் கிழவர் தம் துக்கத்தைப் பொறுக்க மாட்டாமல் சொன்ன சொல் உண்மையாயிற்று. என்னாலேயே என் அருமை மகன் வனத்துக்குத் துரத்தப்பட்டான். அந்தக் துக்கத்தில் இன்று யமாலயம் செல்லப் போகிறேன்.

"எதிர்பாராதபடியும், சுபாவத்துக்கு விரோதமாகவும் நிகழ்ச்சிகள் நிகழ்வதற்கு வேறு காரணமில்லை. நான் ஏன் இப்படி மோசம் போகவேண்டும்? நான் ராமனைக் காட்டுக்குப் போ என்றாலும் அவன் ஏன் என் வார்த்தையைச் சிரமேற்கொண்டு வனம் போகவேண்டும்? கௌசல்யே, பார்வையை இழந்தேன். நீ என் கண்களுக்குத் தெரியவில்லை; மரணம் நெருங்குகிறது. அருகில் வா. எல்லாம் முடிந்தது. யமதூதர்கள் புறப்படு என்கிறார்கள். ராமன் திரும்பி வந்து அவனைப் பார்க்கும் வரையில் என் உயிர் நிற்காது. கிழமுனிவர் சாபத்திலிருந்து தப்பமாட்டேன். மார்பு அடைக்கிறது. இனி ஏதும் மிச்சம் இல்லை. விளக்கில் எண்ணெய் வற்றிப் போயிற்று. கௌசல்யே! சுமித்ரே!" என்று சொல்லி வரவரப் பேச்சு அடங்கிப் போய், அன்றிரவே உயிர் நீத்தான் அரசன்.

வால்மீகி முனிவர் ராமாயணத்தை ஆரம்பிக்கும்போது 'எல்லா வேதங்களையும் சாஸ்திரங்களையும் ஓதியவன்,

தீர்க்கதரிசி, தேஜஸ் அடைந்தவன், யுத்தங்களில் வெற்றி பெற்ற வீரன், யாகங்கள் செய்து முடித்தவன், தருமத்தில் ஈடுபட்டவன், ரிஷியைப் போன்றவன். மூவுலகங்களிலும் புகழ்பெற்றவன், பகைவர்களையொழித்தவன், பல அரசர் களின் நட்பை அடைந்தவன், புலன்களையடக்கியாளும் திறமை கொண்டவன், பெருஞ்செல்வம் திரட்டியதில் இந்திரன் குபேரன் இவர்களுக்குச் சமானமானவன், ராஜ்ய பரிபாலனத்தில் மனுவைப் போன்றவன்' என்று சொல் லுகிறார் தசரதனைப் பற்றி. அந்தத் தசரதன் புத்திர சோகத்தால் கர்ம விதிப்படி தாங்க முடியாத துக்கத்தை யடைந்து உயிர் நீத்தான்.

அடிக்கடி மூர்ச்சை போவதும் பிறகு பிரக்ஞை வருவதுமாக இருந்த தசரதன், உயிர் நீத்துவிட்ட விஷயம் பக்கத்திலிருந்த கௌசல்யை சுமித்திரைக்குக்கூடத் தெரிய வில்லை. அவர்கள் சோகத்தாலும் கண்விழித்த களைப் பாலும் அந்தப்புரத்தில் ஒரு மூலையில் அயர்ந்து கிடந் தார்கள். பொழுது விடியும் காலத்தில் சூத மாகத காயகர்கள் அந்தப்புர வாயிலில் வழக்கம்போல் கூடி, அவர்களுடைய கிரமப்படி அரசனையெழுப்ப சுப்பிரபாதம் பாடவும் வாத்தி யம் வாசிக்கவும் செய்தார்கள். அரசன் எழுந்திருக்கவில்லை. அரசன் எழுந்ததும் அவன் தேவைகளைக் கவனிக்க வேண்டிய பணியாட்கள் வெகு நேரம் காத்திருந்துவிட்டு, "இன்று அரசன் ஏன் இன்னும் எழுந்திருக்கவில்லை?" என்று சந்தேகத் துடன் உள்ளே பிரவேசித்தார்கள். அரசன் உயிரற்றுக் கிடப்பதைக் கண்டார்கள்.

பிறகு அரண்மனை முழுவதும் விஷயம் தெரிந்து ஓரே துயரக் கடலாயிற்று. மூவுலகம் புகழ்பெற்ற தசரத மகா ராஜாவின் மனைவிகள் ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டு துக்கம் தாங்காமல் அழுதார்கள்.

## 32. பரதனுக்குச் செய்தி

கௌசல்யா தேவி இறந்துபோன அரசனைக் கட்டிக் கொண்டு, "இன்றே நானும் அரசனோடு கட்டை ஏறுவேன்! புத்திரனில்லாமலும் புருஷனில்லாமலும் அனாதையாக என்னால் ஜீவித்திருக்க முடியாது" என்று அழுதாள். அரண் மனையில் கூடிய பெரியோர்களும் உத்தியோகஸ்தர்களும் கஷ்டப்பட்டு அவளை மெதுவாக அழைத்துச் சென்றார்கள்.

பிறகு உத்திர கிரியைகளைப் பற்றி யோசித்தார்கள். அரசனுடைய புதல்வர்கள் யாருமே பக்கத்திலில்லை; ராம லக்ஷ்மணர்கள் வனம் சென்றுவிட்டார்கள். பரதனும் சத்ருக் னனும் மாமன் வீட்டில் வெகு தூரத்திலிருக்கிறார்கள். என்ன செய்வதென்று யோசித்து, முடிவில் பரதனுக்குச் சொல்லியனுப்புவது என்று தீர்மானித்தார்கள். அவன் வந்து சேரும் வரையில் தேகம் கெடாமலிருக்க ஏற்பாடுகள் செய் தார்கள்.

உலகமெல்லாம் புகழ் பரவிப் பல்லாண்டு அரசு புரிந்த மகாராஜாவினுடைய உடலானது எண்ணெய்க் கொப் பரையில் கிடந்தது! அயோத்தியா நகரம் தன் பிரபாவத்தை இழந்து இருளில் ஆழ்ந்தது. எங்கும் அழுகுரலும் கண்ணீ ருமாக இருந்தது. ஜனங்கள் ஆண்களும் பெண்களும் கூடிக் கூடிக் கைகேயியை நிந்தித்துப் பேசினார்கள். ஊர் முழுவதும் பெருங்கவலையில் மூழ்கிற்று. இளவரசனாக வேண்டியவன் காடு சென்றான். பரதன் நகரத்தில் இல்லை. ராஜ்யத்துக்குப் பெரும் ஆபத்து வரும் என்று திகிலடைந்தார்கள். அரசனில்லாமல் ஒரு மக்கட் கூட்டம் இருக்க முடியும் என்பதை அந்த நாளில் யாரும் கண்டதில்லை.

அன்றிரவு எப்படியோ கழிந்தது. மறுநாள் காலை மந்திரிகளும் காரியஸ்தர்களும் பெரியோர்களும் சபா மண் டபத்தில் கூடினார்கள். மார்க்கண்டேயர், மௌத்கல்யர், வாமதேவர், காசியபர், காத்தியாயனர், கௌதமர், ஜாபாலி

இன்னும் பல வேதியர்களும் சுமந்திரன் முதலிய மந்திரிகளும் வசிஷ்டரை வணங்கி, "சுவாமி, ஒரு ராத்திரி ஒரு நூற்றாண்டாக இருந்தது. மகாராஜா சுவர்க்கம் சென்றார். ராமனும் லக்ஷ்மணனும் வனம் சென்று விட்டார்கள். பரதனும் சத்ருக்னனும் கேகய நாட்டில் பாட்டன் வீட்டில் வெகு தூரத்தில் இருக்கிறார்கள். தேசம் அராஜக நிலையிலிருக்கிறது. உடனே யாரையாவது ராஜ்யப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளச் செய்யவேண்டும். அரசன் இல்லாத தேசம் பாழாகிப் போகும் அல்லவா?

"அரசன் இல்லாத நாட்டில் நியாயமிருக்காது. தகப்பன் சொற்படி மகன் கேட்கமாட்டான். மனைவி புருஷனுக்குக் கட்டுப்படமாட்டாள். மழைகூடப் பெய்யாது. நாடெல்லாம் திருட்டும் கொள்ளையுமாக இருக்கும். ஜனங்களுக்குள் பரஸ்பர நம்பிக்கையும் ஒத்துழைப்பும் இருக்காது. பயிர்த் தொழில், வியாபாரம் எதுவுமே சரிவர இருக்காது. அரசனுடைய காப்பின்றி எப்படிப் போக்குவரவு, வியாபாரம் அல்லது பயிர்த்தொழில் நடக்கும்? செல்வம் குன்றிப் போகும். தேவலாயங்களில் திருவிழாக்களும் பூஜைகளும் சரியாக நடைபெறாமல் நாட்டில் மக்களுடைய வாழ்க்கை கெட்டுப் போகும். இதிகாசங்களையும் புண்ணிய கதைகளையும் சொல்லுவோரும் இருக்கமாட்டார்கள்; கேட்போரும் இருக்க மாட்டார்கள். கதவைத் திறந்து வைத்துத் தூங்கமுடியாது. நாகரிகம் என்பது தேய்ந்து தேய்ந்து ஒழிந்தே போகும். தவம், விரதம், ஆனந்தம் எதுவுமே இருக்காது. சாஸ்திரம் படிப்போர் இருக்கமாட்டார்கள். அரசன் ஒருவன் இருந்து நாட்டின் அமைதியைக் காத்தால் அல்லவோ இவை யாவும் நடைபெறும்? அரசனில்லாவிடில் பெண்களுடைய இயற்கை அழகும் ஒழிந்து போகும். தன் பொருள் தனது என்கிற உறுதியில்லாமல் போகும். மீன்களைப்போல் ஒருவரையொருவர் தின்று சாவார்கள். கொடுமையும் துன்பமும் வளர்ந்து கொண்டு போய் நாடும் பாழாகிப் போகும். நாட்டில்

நிலைத்து நிற்க வேண்டிய எல்லாவித நன்மைகளுக்கும் ஒரு அரசன் வேண்டும்."

இவ்வாறெல்லாம் அந்தச் சபையில் கூடிப் பெரியோர் அராஜகத்தின் அபாயங்களைப் பற்றிப் பேசியதாக வால்மீகி மிக்க அழகுடன் வர்ணித்திருக்கிறார். "நாடெல்லாம் இருள் மூடிவிட்டாற் போலாகிவிட்டது. தருமமும் அழிந்தே போகும் போலிருக்கிறது. உடனே அரசனை அமைத்துக் கொள்ள வேண்டும்" என்றார்கள்.

சாமர்த்தியமான தூதர்களை அழைத்து வசிஷ்டர், "உடனே புறப்படுங்கள். நான் சொல்வதைக் கவனமாய்க் கேளுங்கள், எங்கும் நிற்காமல் அதிவேகமாகப் போய்க் கேகய தேசம் சேரவேண்டும். உங்கள் முகங்களிலாவது நடவடிக்கைகளிலாவது துக்கக்குறிகள் ஏதும் இருக்கக்கூடாது. பரதன் தாங்கமாட்டான். அரசன் இறந்துபோன விஷயத்தை வெளியிடாமல் இருக்கவேண்டும். 'குலத்தின் குருவும் மந்திரிகளும் உங்களை உடனே அயோத்திக்கு வரும்படியாகச் சொல்ல எங்களை அனுப்பியிருக்கிறார்கள். உடனே புறப்பட்டு வரச் சொல்லியிருக்கிறார்கள்' என்று சொல்லி அழைத்துவர வேண்டும். ராமனும், சீதையும் வனம்போன விஷயமாவது, அரசன் துக்கப்பட்டு மரணமடைந்ததைப் பற்றியாவது ஒன்றும் சொல்ல வேண்டாம். துக்கக் குறிப்பு இல்லாமலிருப்பதற்காக ஆபரணங்களும், ஆடைகளும் எடுத்துக் கொண்டு போய்க் கேகய ராஜனுக்கு வழக்கம் போல தந்து மரியாதை செய்யுங்கள்" என்றார்.

"வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்"

"பொய்மையும் வாய்மை யிடத்து, புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்"

என்று குறளாசிரியர் சொல்லியிருப்பதின் உண்மைப் பொருளை இதனால் அறியலாம்.

தூதர்களும் உடனே தாமதமின்றிப் பிரயாணத்துக்கு வேண்டிய உணவு உடையெல்லாம் கட்டிக்கொண்டு, மரியாதைப் பரிசுகளும் எடுத்துக்கொண்டு, வேகமாகச் செல்லும் குதிரைகளில் ஏறிக் குறுக்கு வழியாகக் காடும் மலையும் ஆறுகளும் கடந்து சென்றார்கள்.

கேகய தேசம் அயோத்தியிலிருந்து வெகு தூரத்திலிருந்தது. அது தற்காலத்துப் பஞ்சாப் தேசமும் அதற்கும் மேற்கிலிருக்கும் பிரதேசமுமாக வைத்துக் கொள்ளலாம். மலைகளும் ஆறுகளும் தாண்டிக் குதிரைகள் மிகவும் களைத்துப் போய்த் தூதர்கள் கேகய ராஜாவின் பிரதான நகரமான ராஜக்கிரகம் போய்ச் சேர்ந்தார்கள். மறுநாள் காலை பரதனைப் பார்க்க ஏற்பாடு செய்தார்கள்.

தூதர்கள் போய்ச் சேர்ந்த அன்று இரவில் பரதன் பயங்கரமான கனவுகளைக் கண்டு, அதனால் காலை எழுந்த போது கவலைகொண்டு முகம் வாடி எழுந்தான். அவனுடைய சிநேகிதர்கள் இதைக் கண்டு நர்த்தனமும் ஹாஸ்யமும் செய்து, இன்னமும் பலவிதத்தில் அவன் கவலையைப் போக்க வாடிய முகத்தை மலரச் செய்ய முயன்றார்கள். ஆயினும் அவன் கவலைப்பட்ட நிலையிலேயே இருந்தான்.

அன்பின் ரகசிய வேகங்களை நாம் இன்னும் முற்றிலும் காணவில்லை. தசரதனுடைய மனோ வேதனையும் மரண சங்கடமும் வெகு தூரத்திலிருந்த பரதனுடைய உள்ளத்தையடைந்து தாக்கிக் கனவை உண்டாக்கியதாகக் கருதலாம்.

"என் பிரிய சகோதரனான ராமனோ, அல்லது லக்ஷ்மணனோ அல்லது நானோ மரணம் அடையப் போவதாகத் தோன்றுகிறது. அதிகாலையில் கண்ட கனவு வீண் போகாது என்று சொல்லுவார்கள். பயங்கரமான ஸ்வப்பனத்தைக் கண்டேன். என் மனம் விவரிக்க முடியாத கலவரத்திலிருக்கிறது; ரொம்பவும் திகிலாக இருக்கிறது. என்ன செய்வேன்?" என்று சொல்லிக் கொண்டேயிருந்தான்.

அச்சமயம் தூதர்கள் தாங்கள் வந்திருப்பதைத் தெரிவித்துச் சந்நிதானத்துக்கு வர அனுமதி கேட்டார்கள்.

கேகய ராஜனும் அவனுடைய குமாரன் யுதாஜித்தும் தூதர்களை வெகு மரியாதையுடன் வரவேற்றார்கள். அவர்களும் செலுத்த வேண்டிய வணக்கங்களை முறைப்படி செலுத்திய பிறகு பரதனை நோக்கிச் சென்றார்கள்.

"புரோகிதர்களும் மந்திரிகளும் தங்களுக்கு மங்கள வாழ்த்துக்கள் சொல்லி, உடனே அயோத்தியா நகரத்துக்கு அழைத்து வர எங்களை அனுப்பியிருக்கிறார்கள். இந்த வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் தாங்கள் தொட்டு,அரசனுக்கும் மாமனுக்கும் சமர்ப்பிக்க வேண்டும்." என்று அவர்கள் கொண்டுவந்த ஆடையாபரணப் பொருள்களைப் பரதன் முன் வைத்தார்கள்.

அவனும் அவற்றைப் பெற்றுக் கொணடு, "தந்தை தசரதன் க்ஷேமமா? ராமனும் லக்ஷ்மணனும் சுகமா? அனைவரும் நோயொன்றுமில்லாமல் சுகமாக இருக்கிறார்களா?" என்று கேட்டான்.

"அனைவரும் நோயின்றி இருக்கிறார்கள் ராஜ குமாரனே! உன் மங்களத்தை எல்லோரும் கோருகிறார்கள். அதற்காகவே சீக்கிரம் வரச் சொன்னார்கள்" என்றார்கள்.

உண்மையை மறைத்துப் பேசின போதிலும், அவர்களுடைய பேச்சில் பரதனுக்கு மங்கள நிகழ்ச்சி நடை பெறும் என்பது தொனிக்குமாறு முனிவர் பாடுகிறார்.

தூதர்களுடைய விருப்பப்படியே அயோத்தி போக ராஜகுமாரன் தன்னுடைய பாட்டனார், மாமன் முதலியவர்களுடைய அனுமதியைக் கேட்டுப் பெற்றான். பரதன் அயோத்திக்கு உடனே போவதற்கான ஏற்பாடுகளைக் கேகய ராஜனும் யுதாஜித்தும் செய்தார்கள். அயோத்தியில் தசரத மகாராஜாவுக்கும் ராமனுக்கும் மற்றவர்களுக்கும் தருவதற்கென்று கேகய ராஜ்யத்தில் கிடைக்கக்கூடிய மிக விலை

உயர்ந்த சன்மானப் பொருள்களைத் திரட்டித் தேர்களில் வைத்து, பரதனையும் சத்துருக்கனனையும் பெரும் பரிவாரத் துடன் அனுப்பி வைத்தார்கள். தேர்கள் வேகமாக அயோத்தி யை நோக்கிச் சென்றன.

## 33. களங்கமற்ற உள்ளம்

பரதனும் பரிவாரமும் வேகு துரிதமாகவே புறப்பட்டு, வேகமாகப் பிரயாணம் செய்தார்கள். குதிரைகளுக்கு ஆங்காங்கு குளிப்பாட்டி, தீனிபோட்டு, இரவில் சில இடங் களில் தங்கி, எட்டாவது தினம் அதிகாலையில், அயோத்தி நகரம் வந்து சேர்ந்தார்கள்.

"இதென்ன சாரதியே! நகரம், நான் ஊரை விட்ட போது இருந்த மாதிரி இல்லையே! எப்போதும் கலகல வென்று சந்தோஷமாகவே இருக்குமே! இன்று அப்படி இல் லையே! காலையில் நகரத்திலிருந்து ஜனங்கள் வெளியே வருவதும் உள்ளே புகுவதுமாக எப்போதுமுள்ள காட்சி இன்று காணவில்லையே!"

இவ்வாறு பரதன் சந்தேகப்பட்டு, சாரதியுடன் பேசிக் கொண்டே போனான்.

"ஊருக்கு வெளியே தோட்டங்களில் சந்தோஷ முகங் களுடன் இருக்க வேண்டிய மகளிரும் யுவர்களும் இன்று ஏன் துக்கக் குறிப்புகளோடு காணப்படுகிறார்கள்? எல்லாம் ஏதோ துயர நிலையில் இருப்பதாகத் தோன்றுகிறது" என் றான்.

"மங்கள வாத்தியங்கள் ஏதும் முழங்கவில்லை; புஷ்பம் அணிந்து சந்தனம் பூசி உல்லாசமாக இருக்கும் நகரவாசிகள் யாரையும் காணவில்லை. ஊரில் வழக்கமாகக் கேட்கும் பேரிகை மிருதங்க ஒலி காதில் விழவில்லை. இது என்ன ஆச்சரியம்! பல கெட்ட சகுனங்கள் காணப்படுகின்றனவே! என் கவலையை அடக்க முடியவில்லையே" என்றான்.

வைஜயந்தம் என்ற கோட்டைவாயில் வழியாகப் பரதனுடைய ரதம் நகரத்துக்குள் பிரவேசித்தது. கடைத் தெருக்களும், மாளிகைகளும், கோயில்களும் எவ்வித அலங் காரமுமில்லாமல் சரியாக மெழுகிக் கோலமிடாமலும் இருந்ததைப் பார்த்தான். ஜனங்கள் பட்டினி கிடந்த முகங் களோடு காணப்பட்டார்கள். கெட்ட நிமித்தங்களே மேலும் மேலும் காணப்பட்டன. எல்லாவற்றையும் பார்த்துப் பரதன் ஏதோ பெரும் விபத்துதான் நடந்திருக்கிறது என்று நிச்சயித்துக் கொண்டான். இதற்காகவே இவ்வளவு அவசரமாக உடனே வரவேண்டும் என்று சொல்லியனுப் பினார்கள் என்றும் உணர்ந்தான்.

தசரதனுடைய மாளிகைக்குள் பிரவேசித்தான். அங்கே தந்தையைக் காணவில்லை. கவலை இன்னும் அதிகரித்தது. உடனே தாய் கைகேயியைப் பார்க்கலாம் என்று, அவளுடைய மாளிகைக்குள் புகுந்தான். ஊரிலிருந்து திரும்பி வந்த தன் மகனைப் பார்த்ததும், கைகேயி அவனைக் கட்டியணைத்துக் கொள்ளத் தன் தங்க ஆசனத்தை விட்டுக் குதித்து இறங்கினாள்.

அவனும் அவள் கால்களைத் தொட்டு வணங்கினான்.

மகனை அணைத்து உச்சி மோந்து, "வந்தாயே அப் பனே! மகாராஜனாக இருப்பாய்! பிரயாணம் சுகமாக இருந் ததா? மாமன் முதலானோர் க்ஷேமமா? அங்குள்ளவர்கள் எல்லோரையும் பற்றிச் சொல்!" என்று மடியின் மீது உட்காரவைத்துக் கொண்டு, மிக்க பரிவுடன் கேட்டாள்.

"நான் புறப்பட்டு ஏழுநாள் ஆயிற்று. அங்கு எல் லோரும் சௌக்கியமாக இருக்கிறார்கள். பாட்டனார், மாமன் யுதாஜித் எல்லோரும் உன் சுகத்தை விசாரித்ததாகச் சொல்லச் சொன்னார்கள். நிறையச் சாமான்கள் கொடுத்த னுப்பியிருக்கிறார்கள். எல்லாம் பின்னால் வரும். நான் அவசரமாக முன்னால் ரதத்தில் வேகமாக வந்தேன். மிக

முக்கியமான காரியம்; உடனே வரவேண்டுமென்று இங்கிருந்து வந்த தூதர்கள் என்னை மட்டும் வேகமாக முன்னால் அழைத்து வந்தார்கள். இதற்கென்ன காரணம் அம்மா? மகாராஜாவைப் பார்த்து வணங்க அவருடைய மனைக்குச் சென்றேன். அவர் இல்லை. இங்கேயும் அவருடைய ஆசனம் காலியாக இருக்கிறது. இங்கேதானே வழக்கமாகப் படுத்திருப்பார். ஒரு வேளை பெரிய தாயார் மனைக்குப் போயிருக்கிறாரோ? நான் உடனே அவரைத் தரிசித்து வணக்கம் செலுத்த வேண்டும்" என்றான்.

நடந்த நிகழ்ச்சிகளில் ஒன்றும் அறியாத தன் மகனுடைய அந்தக் கேள்விக்கு - ராஜ்யாதிகார ஆசையால் மகிழ்ந்து போன கைகேயி பதில் சொல்லுகிறாள்.

"குழந்தாய்! உன் தகப்பனார் உலகத்தில் பிறந்தவர்கள் அடையவேண்டிய சுகபோகங்களை எல்லாம் அடைந்தார். அரசர் மகா பாக்கியவான்; பெரும்புகழ் பெற்றவர். செய்ய வேண்டிய பெரிய வேள்விகளையெல்லாம் செய்து தீர்த்தார். நல்ல வழியில் நின்றவர்களுக்குப் புகலிடமாயிருந்தார். அவர் அடைய வேண்டிய பரமபதத்தை அடைந்துவிட்டார்" என்றாள்.

இதைக் கேட்டதும் பரதன், "ஐயோ! நான் செத்தேன்!" என்று கதறி, அழகிய நீண்ட கைகளை விரித்துக் கொண்டு கீழே விழுந்தான்.

பின்னர் எழுந்து அரசனுடைய படுக்கையைப் பார்த்து "இந்தப் படுக்கை சூனியமாகப் போயிற்றே!" என்று அங்க வஸ்திரத்தால் முகத்தைத் துடைத்துக் கொண்டு, கண்ணீர் தாரை தாரையாகப் பெருக, அரசகுமாரன் ஏழை அநாதையைப் போல் அழுதான். இளம் யானையைப் போன்ற தேகமும், சந்திரனைப் போன்ற முகமும் கொண்ட வீரன், பூமியில் விழுந்து புரண்டு அழுதான். காட்டில் கோடரியால்

வெட்டித் தள்ளப்பட்ட பெரிய ஆச்சா மரம் போன்று தரையில் கிடந்த மகனைப் பார்த்து கைகேயி, "எழுந்து நில் அரசனே, எழுந்து நில்! தரையில் ஏன் கிடக்கிறாய்? இது அரசனுக்குத் தகாது. பெரியோர்களுடைய பெருமதிப்பும் நல் கீர்த்தியும் பெற்றிருக்கிறாய். சனாதன வேதவழியில் நின்று, தருமமும் வேள்வியும் செய்யும் பதவியை அடைந்திருக்கிறாய், உன் முகம் ஜோதிமய சூரியனைப் போல் பிரகாசிக்கிறது. உனக்கு ஒரு குறையுமில்லை. மனக்கலக்கத்தை யொழித்து தைரியம் பூண்டு எழுந்து நில்!" என்றாள்.

களங்கமென்பது துளிக்கூட இல்லாத உள்ளத்தைப் பெற்ற மகான் பரதன் வெகு நேரம் அழுது புரண்டு அலறிய பின் எழுந்து தாயைப் பார்த்து, "அரசன், ராமனுக்கு யுவ ராஜ்ய அபிஷேகம் வெகு விமரிசையாகச் செய்வான்; திரும்பி வந்து அதையெல்லாம் பார்க்கலாம் என்கிற எண்ணத் தோடல்லவா நான் மாமன் வீட்டுக்குப் போனேன். இப் போது இப்படியாகி விட்டதே. ஐயோ! என்னால் பொறுக்க முடியவில்லையே! தந்தையின் பிரிய முகத்தைக் காணவில் லையே! என்ன வியாதி? எப்படி வந்து விட்டது? நான் பக்கத்தில் இல்லாமல் போய்விட்டேனே! என் அம்மா! ராம னும் மற்றவர்களும் அல்லவோ புண்ணியம் செய்தவர்கள்! தந்தையை உபசரித்து நோயின் உபத்திரவத்தைத் தணித்து வந்தார்கள். அவர்கள் பாக்யசாலிகள்! எனக்கு அந்தப் பாக்கியம் இல்லாமல் போய் விட்டதே! என் உடம்பில் பட்ட மண்ணைத் தன் கையால் பிரியமாகத் துடைப்பாரே. அவர் கைகள் என் உடலில் படும்போது அந்த ஸ்பரிசம் சொல்ல முடியாத ஆனந்தத்தைத் தந்ததே! நான் அவருக்குக் கொஞ் சமும் உதவாமல் போய்விட்டேனே! அம்மா! அண்ணன் ராமன் எங்கே? அவனே எனக்குப் பிதாவும் குருவும். உடனே அவனைக் கண்டு அவன் பாதத்தில் விழவேண்டும். இனி அவனே அல்லவா எனக்குக் கதி? அம்மா, கடைசியாகத் தந்தை எனக்காக என்ன சொல்லிவிட்டுப் போனார்? அவரு

டைய கடைசி சொற்கள் என்னவென்று அவர் சொன்ன மொழிகளாகவே நான் கேட்க விரும்புகிறேன்" என்று இவ்வாறு அழுது கொண்டு பரதன் கேட்டான்.

உண்மைக்கு மாறாக ஏதுமில்லாமல், தன் எண்ணத்தை நிறைவேற்றும் கருத்தாகவே கைகேயி பதில் சொன்னாள். பண்பாட்டின் தடை ஒருபுறம், ஆசையின் வேகம் ஒருபுறம்; இவற்றிற்கு இடையில் பரதனுக்காக அரசன் அந்திமக் காலத்தில் ஏதும் சொல்லவில்லை என்கிற பொருள்படவும், இன்னும் சொல்லித் தீரவேண்டிய கொடிய நிகழ்ச்சிகளைச் சொல்லுவதற்கு வசதி ஏற்படவும் பேசினாள்.

"உன் பிதா! 'ஹா ராமா! ஹா லக்ஷ்மணா! ஹா ஜானகி!" என்று கதறிக் கொண்டு பிராணனை விட்டார். உன் பிதாவானவர் அந்திம காலத்தில் சொன்னது இவ்வளவே. ராமனும் லக்ஷ்மணனும் சீதையும் திரும்பி வருவதை நான் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை. பார்ப்பவர்கள் பாக்கியம் பெற்றவர்கள், என்று சொல்லி அரசர் இறந்தார்." என்றாள்.

இதைக் கேட்டதும், "ஐயோ, பக்கத்தில் ராம லக்ஷ்மணர்களும் இருக்கவில்லையா?" என்று பரதனுடைய துக்கம் இரு மடங்காயிற்று.

"அவர்கள் எங்கே? என்ன காரியமாகப் பக்கத்தில் இல்லாமல் போய்விட்டார்கள்?" என்று பரதன் கைகேயியைக் கேட்டான்.

அதன்மேல் எல்லாவற்றையும் சொல்லி அவனைச் சமாதானப்படுத்தலாம் என்று எண்ணி, "அப்பா, உன் அண்ணன் ராமன், லக்ஷ்மணனையும் சீதையையும் அழைத்துக் கொண்டு, தண்டகாரண்ய வனத்துக்கு தவவேஷம் பூண்டு சென்று விட்டான்", என்றாள்.

அதைக்கேட்ட பரதன் வியப்படைந்து, "இது என்ன எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. ராமன் என்ன குற்றம்

இழைத்து இந்தத் தவம் செய்யச் சென்றான்? எந்தப் பிராம ணன் சொத்தை அபகரித்தான்? அவன் எந்த நிரபராதியை இம்சித்தான்? அவன் எந்த அந்நிய ஸ்திரீயை விரும்பிப் பிழை செய்தான். எதற்காக ராமன் தண்டகாரண்ய வனம் போக வேண்டியதாயிற்று? யார் இந்தப் பிராயசித்தம் விதித்தது?" என்று கேட்டான்.

அந்தக் காலத்தில் வனம் போகும் தண்டனை இவ்விதப் பெருங்குற்றங்களுக்குத்தான் விதிப்பது முறையாக இருந்தது. இதன்மேல் கைகேயி விஷயங்கள் எல்லாவற்றையும் விவர மாக சொல்லத் தைரியங்கொண்டு ஆரம்பித்தாள்.

"ராமன் எந்தத் தவறான காரியமும் செய்யவில்லை: யாருடைய பொருளையும் அபகரிக்கவில்லை. யாரையும் இம் சிக்கவில்லை; எந்த ஸ்திரீ முகத்தையும் கண்ணெடுத்துப் பார்த்ததில்லை. ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடத்துவதாக ஏற்பாடுகள் செய்வதையறிந்து, நான் உனக்காக உன் தந் தையை வரங்கேட்டுப் பெற்றேன். உனக்கு ராஜ்யாதிகாரம் தந்துவிட்டு, ராமன் ஊரைவிட்டு வெளியேறி விடவேண்டும் என்று உனக்காக நான் கேட்டேன். சத்தியத்துக்கு உட்பட்டு முன் கொடுத்த தம் வாக்கை நிறைவேற்றித் தம் தருமத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக மகாராஜா நான் சொன் னதுக்கு ஒப்புக் கொண்டார். சீதையையும், லக்ஷ்மணனையும் அழைத்துக் கொண்டு ராமன் வனம் சென்று விட்டான். அந்தப் பிரிவைப் பொறுக்க முடியாமல் தந்தை உயிர் நீத்தார். இப்பொழுது என்ன செய்யவேண்டும் என்பதை யோசிப்பாய், தருமம் தெரிந்தவனாக இருக்கிறாய். ராஜ்யபாரத்தை ஒப்புக்கொள்ள வேண்டும். உனக்காகவே இதையெல்லாம் செய்தேன். துக்கப்படாதே. மனத்தை நிலை யில் நிறுத்திக் கொள். இந்த நகரமும் ராஜ்யமும் உன் ஆதீனத்துக்குச் சுகமாக வந்திருக்கின்றன. கிரமப்படி வசி ஷ்டர் முதலிய பிராமண உத்தமர்களைக் கொண்டு,

தந்தையாரின் உத்தர கிரியைகளைத் தாமதமின்றிச் செய்து முடித்து ராஜ்யாபிஷேகம் செய்து கொள்வாய். நீ க்ஷத்திரிய வீரன். தந்தை கையிலிருந்து ராஜ்யம் பெற்ற அரசகுமாரன். உன் கடமையைச் செய்" என்றாள்.

## 34. சூழ்ச்சியும் வீணாயிற்று

பரதனுக்கு விஷயம் இப்போது தெரிந்தது. எவ்வளவு பெரிய அநியாயம் நடந்துவிட்டது என்பதை உணர்ந்து, தாங்க முடியாத கோபமும் துக்கமும் மேலிட்டுத் தன் தாயைப் பார்த்துச் சொல்லலானான்:

"என்ன காரியம் செய்துவிட்டாய்? இந்த ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளும்படி எனக்குச் சொல்லவும் உனக்குத் தோன் றிற்றே? தகப்பனையும் அண்ணனையும் இழந்துவிட்ட பிறகு, எனக்கு ராஜ்யாதிகாரம் என்ன வேண்டியிருக்கிறது? தந்தை யை உயிர் மாளவைத்து, ராமனையும் காட்டுக்கு அனுப்பி விட்டு, என்னை அரசு புரியச் சொல்லுகிறாயே! ரணகாயப் படுத்தி விட்டு அதன்மேல் உப்புபோட்டு வேதனை செய்கி றாயே! தசரத மகாராஜாவுக்குப் பத்தினியாக வந்து சேர்ந் தாயே! புத்தி கெட்டுப்போய் உன்னை அவர் அடைந்தார். நெருப்பை மடியில் கட்டிக் கொண்டார். என் தந்தையைக் கொன்று விட்டாயே! கௌசல்யையும், சுமித்திரையும் இறக்கத்தான் போகிறார்கள். உன்னிடம் அவ்வளவு அன் போடிருந்த ராமனை, ஆஹா! நீ எப்படித்தான் வனத்துக்கு அனுப்பினாயோ? பெரிய தாயார் கௌசல்யை உன்னை உடன் பிறந்த சகோதரி போல எண்ணி நடத்தி வந்தாளே. அவளுடைய வயிற்றில் பிறந்த அருமை மகனைக் காட்டுக்கு அனுப்பிவிட உனக்கு எப்படித்தான் எண்ணம் உண்டாயிற் றோ? ராமனிடத்தில் நான் வைத்திருக்கும் அன்பு உனக்குத் தெரியாமல் போய் விட்டதா? உன் துராசை உன் மூளையை நாசம் செய்து விட்டதே. என் உயிரைப் போலுள்ள

ராமனைக் காட்டுக்கு அனுப்பிவிட்டு, எனக்குச் சந்தோஷம் ஊட்டப் பார்த்தாயே! உன் மடமையை என்னென்று சொல்லுவேன்! மகா பராக்கிரமசாலியான என் தந்தை மன்னன் ராம லக்ஷ்மணர்களைத் தாம் பெற்ற பெரும் பக்கபலமாக எண்ணி வந்தாரே! அவர்களைக் காட்டுக்குத் துரத்தி விட்டு என்னை இந்த ராஜ்யப் பொறுப்பை ஏற்று நடத்தச் சொல்லுகிறாயே! இது என்னால் முடியுமா? முடிந்தாலுங்கூட நான் ஒப்புக்கொள்வேனா? ஒருநாளும் உன் ஆசை நிறைவேறாது! நான் நிறைவேற்றவும் மாட்டேன்? நீ இவ்வளவு பெரிய பாவச்செயல் புரிந்துவிட்ட பிறகு, உன்னை என் தாயாகப் பாவிக்க முடியாது. உன்னை நான் நீக்கி விட்டேன். பரம்பரையாக ராஜ குலங்களில் வழங்கி வரும் முறையைப் புறக்கணித்து, இளையவனுக்குப் பட்டம் கட்டும் எண்ணம் உனக்கு எப்படித் தொன்றிற்று என்பதை என்னால் ஊகிக்க முடியவில்லை. உலகமெல்லாம் நம்மைக் குற்றம் கூறும் என்பது உனக்குத் தெரியவில்லையே! ராஜாக்களுக்கெல்லாம் இது பொது விதி. நம்முடைய குலத்திலும் இதுவே முறை. உன் எண்ணத்தை நான் ஒரு நாளும் பூர்த்தி செய்ய மாட்டேன். வனம்போய் அண்ணனைத் திரும்ப அழைத்து வரப்போகிறேன். அவனுக்கே பட்டம் சூட்டி என் உள்ளம் மகிழ நான் அவனுக்கு அடிமை செய்து வருவேன். உன் எண்ணம் நிறைவேறாது?"

இவ்வாறு பரதன் தாயைப் பார்த்துக் கோபத்தினால் வாய் குழறப் பேசினான். வர வரத் துக்கம் அதிகரித்து விட்டது. இப்படிச் செய்து விட்டாளே. தனக்கு அழியாப் பழி உண்டாக்கி விட்டாளே என்ற பெரும் ஆத்திரத்தில் அவள் தாய், தான் அவள் மகன் என்ற உணர்ச்சியைத் தன் மனத்தி லிருந்து முற்றிலும் அகற்றி விட்டான். அதன் காரணமாகவே துக்கமும் கோபமும் பரதனுக்கு இன்னும் அதிகரித்து விட்டன. குகையில் சிங்கம் கர்ஜிப்பதுபோல் கர்ஜித்து தாயை மிக்க குரூரமான மொழிகளால் நிந்திக்கலானான்.

பரதனுடைய சுபாவமும், ராமனிடம் அவனுக்கிருந்த அளவிலாத அன்பும், தந்தையை இழந்த துக்கமும், என்றும் எதிர்பாராத பெரும்பழி தந்துவிட்ட சங்கட நிலையும் ஆகிய வற்றையெல்லாம் வைத்துப் பார்த்தால், பரதனுடைய உண ர்ச்சி வேகமும் அதனின்று பிறந்த வசைமொழிகளும் நமக்குப் பொருள்படும். ஏதோ சாஸ்திரம் படித்த கல்மனப் பண்டிதர் களைப் போல், நாம் பரதன் பேசியதை அளந்து பார்க்கக்கூடாது. இம்மாதிரியான கட்டங்களிலேதான் கவி யுள்ளம் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. இதை வால்மீகியிலும் பார்க்கலாம்; கம்பர் கவியிலும் பார்க்கலாம்.

பொறுக்க முடியாத கோபாவேசத்தில் எழுந்து, பார்த்து உரத்த குரலில் மீண்டும் பரதன் பேசலானான்:

"நீ நாட்டுக்கு உதவாதவள்; நாட்டைவிட்டு வெளியேற வேண்டியவள்; கொடியவள், கெட்ட வழியைப் பின்பற்றித் தருமத்தைக் கைவிட்டவள்! நான் உன்னைப் பொறுத்தவரை செத்தேன் என்று வைத்துக்கொள். அரசனை யமனிடமும் ராமனைக் காட்டுக்கும் அனுப்பிய உன்னை வெறுக்காதவர் யார்? கொலையாளியாய்ப் போனாய். இந்தக் குலத்தைப் பாழாக்கிவிட்டாய்; நீ நரகமே அடைவாய், எனது அன்புக்குரிய தந்தை சென்ற உலகத்துக்கு நீ போக மாட்டாய், கோரப் பாதகம் செய்த உன்னைக் காண உன் மகனான நானே நடுங்குகிறேன். தாயுருவத்தில் வந்த என் மகாசத்துருவே! புருஷனைக் கொன்ற கொலைபாதகியே! உனக்கும் எனக்கும் இனிப் பந்தம் அறுந்துவிட்டது. தர்ம ராஜாவான பாட்டனார் அசுவபதி அரசனுடைய பெண் ணல்ல; நீ ஓர் அரக்கி! குலத்தைக் கெடுக்க அவர் வயிற்றில் நீ பிறந்தாய். சத்தியமும் தருமமும் மனித தேகமாகக் கொண்ட என் அண்ணனைக் காட்டுக்குத் துரத்தி விட்டாய். என் தந்தையும் உயிர் நீத்தார். இருவிதத்தில் எனக்குத் தீங்கிழைத்தாய்.

"கௌசல்யாதேவியின் ஒரே குழந்தையான ராமனைக் காட்டுக்கு போகச் செய்த நீ' எந்த நரகத்துக்குப் போவாயோ! தாயின் உள்ளம் உனக்குத் தெரியாமற் போயிற்றே! புத்திரன் தாயின் உடலில் ஒரு பாகம் அல்லவா? தாயின் ஒவ்வோர் அங்கத்திலும் ஒரு பகுதியைக் கொண்டு உண்டான ஜீவனா யிற்றே? தாய்க்கும் மகனுக்கும் உள்ள இந்த உயிர்த் தொடர்பு உனக்குத் தெரியாதா? உயிரின் உயிராகிய மகனைக் காட்டுக்கு அனுப்பி, நீ விளைவித்த பெருந் துக்கத்துக்கு என்ன தண்டனை கொடுத்தால் தகும்.

"காமதேனுவுக்குக் கோடிக்கணக்கில் புத்திரர்கள் இருக்க ஏதோ இரண்டு மாடுகள் ஏருக்குக் கட்டப்பட்டு, ஒரு மூர்க்கக் குடியானவனால் துன்புறுத்தப்படுவதைக் கண்டு, ஐயோ! இந்தக் குழந்தைகள் வெயிலின் கொடுமை தாங்காமல் வயலில் கீழே விழுந்துவிட்ட போதிலும், இந்த மூர்க்கன் இன்னும் இம்சிக்கின்றானே' என்று காமதேனு கண்ணீர் சிந்தியது உனக்குத் தெரியாதா? தேவராஜன் மீது அந்தக் கண்ணீர்த்துளி விழுந்து அதன் சுவாசனையைக் கண்டு இது காமதேனுவின் கண்ணீராகவே இருக்கவேண்டும் என்று தெரிந்து கொண்டு வருத்தினானல்லவா? கோடிப்புத்திரர் களைப் படைத்த காமதேனுவால், இரண்டு புத்திரர்களின் கஷ்டத்தைப் பொறுக்க முடியவில்லையே! கௌசல்யைக்கு நீ செய்த கொடுமை உனக்குத் தெரியவில்லையா! ஒரு மகனைப் பெற்றாள். அந்த மகனை வனத்துக்கு அனுப்பிவிட்டு, அதனால் நீயும் நானும் சுகம் அடைவோம் என்று எண்ணினாய். அரக்கியே! நீ பெருந்துக்கம் அடைந்து சாவாய் என்பது நிச்சயம். இறந்த பின்னும் துக்கமே உன் பங்கு. தந்தைக்குச் செய்ய வேண்டிய உத்தர கிரியைகளை முடித்துவிட்டு, நான் வனம் சென்று, வீரன் ராமன் காலில் விழுந்து, இராஜ்யத்தை ஒப்பித்துவிட்டு, நீ எனக்குச் சம்பாதித்துத் தந்த பெரும்பழியைப் போக்கிக் கொள்

வதற்காக ராமனுக்குப் பதில் நான் தண்ட காரண்யத்தில் விரதம் பூண்டு வாசம் செய்வேன். நீ என்ன பிராயச்சித்தம் செய்து தப்புவாய்? கழுத்துக்கு உறிபோட்டுக் கொண்டு உயிர் துறப்பாயா? அல்லது நெருப்பில் விழுந்து உயிர்விடுவாயா? அல்லது நீயே வனவாசம் செய்து தண்டகாரண்யத்தில் ஆயுள் முழுவதும் கழிப்பாயா? எப்படியானாலும் சரி, ராமனிடம் சென்று இந்த பூமண்டலாதிபத்யத்தை அவனிடம் ஒப்புவித்து, எனக்கு ஏற்படுத்தித் தந்த தோஷத்தைத் தீர்த்துக் கொள்ளப் போகிறேன்."

இப்படித் தாயைக் கோபித்து மிகக் கொடிய முறையில் வசை மொழிகள் பொழிந்தான். காட்டில் புதிதாகப் பிடிக்கப் பட்ட யானையைப் போல் பெருமூச்செறிந்தான். அவன் கண்களினின்று ரத்தக் கண்ணீர் பெருகிற்று.

> இன்னணம், இனையன இயம்பி, யானும்இப்
> பன்னரும் கொடுவனப் பாவி மாடு இரேன்;
> துன்னரும் துயர்கெடத் 'தூய கோசலை
> பொன்னடி தொழுவன்' என்(று) எழுந்து போயினான்.

"இவள் பக்கத்தில் நிற்க முடியவில்லை. என் துக்கத் தைச் சொல்லிக்கொள்ள கோசலைத் தாயிடம் போகிறேன்" என்று பெரிய அன்னையின் இல்லம் சென்றான்.

கைகேயியினுடைய மனக்கோட்டை அழிந்தது. தன்னு டைய ஆசை ஒரு வினாடியில் புதைத்து போனதைக் கண் டாள். கீழே விழுந்து பரிதவித்தாள்.

ராமாயண பாத்திரங்களில் பரதனைப் போன்ற ஒரு பரிசுத்த விக்கிரகம் வேறு இல்லை. வடநாட்டுக் கிராமங்களில் மக்கள் மிகவும் அனுபவிப்பது சித்திரகூடத்தில் ராமபரத சந்திப்புத்தான். ராமாயண கதையில் இதுவே முக்கியமான பாகமாக அவர்கள் கருதிப் பெரிய திருவிழா கொண்டா டுகிறார்கள். யார் எத்தனை பாவச் செயல்கள் செய்யத்

துணிந்தாலும், ஒரு சிலர் தருமத்தைக் காக்க இருக்கவே செய்கிறார்கள். பேராசையும் புனைசுருட்டும் நிறைந்த உலகத்தில் பரஸ்பர நம்பிக்கையும் தைரியமும் அன்பும் உண்டாக்கித் தந்து, மக்களை அறவழியில் நிறுத்தச் சில ஆத்மாக்கள் இருந்து கொண்டே வருவார்கள். தருமத்துக்கு ஆபத்து இல்லை.

## 35. பரதனுடைய உறுதி

பரதன் வந்துவிட்டான் என்கிற சமாசாரம் அந்தப் புறமெல்லாம் பரவிவிட்டது. தன் துக்கத்தைத் தீர்த்துக் கொள்ள வழி தெரியாமல் தவித்துக் கொண்டிருந்த கௌசல்யை, இதைக் கேட்டதும், "பரதனிடம் போகலாம் வா!" என்று சுமித்திரையையும் அழைத்துக்கொண்டு புறப்பட்டாள். அவர்கள் இரண்டு அடிகூட எடுத்து வைத்திருக்கமாட்டார்கள். அதற்குள் பரதனே உன்மத்த கோலத்தில் ராமனுடைய தாயிடம் சரணம் அடைய வந்துவிட்டான்.

கௌசல்யை எண்ணினாள்: ராஜ்யம் எளிதில் தனக்குக் கிடைத்துவிட்ட களிப்பில் மூழ்கி, பட்டாபிஷேகம் செய்து கொள்ளப் பரதன் அவசரமாகக் கேகய நாட்டிலிருந்து வந்து விட்டான் என்று. எவ்வளவு பிசகு!

வசிஷ்டர் தலைமையில் மந்திரிகளும் பெரியோர்களும் சபை கூடி இறந்து போன மன்னனுக்குப் பரதனைக் கொண்டு உத்தர கிரியைகளை நடத்திவிட்டு, அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்துவிட வேண்டுமென்று முடிவு செய்திருந்தார்கள் அல்லவா? ஆகையால் பரதனைக் கண்டதும் வீர புருஷனையும் அருமை மகனையும் இழந்த கௌசல்யை தீனஸ்வரத்தில் இவ்வாறு சொன்னாள்.

"பரதனே, யாதொரு இடையூறும் பயமும் இல்லாமல் ஆக்கப்பட்டு ராஜ்ய பதவி உனக்காக இதோ காத்திருக்கிறது. கைகேயி சம்பாதித்து உனக்குத் தந்திருக்கிறாள். பெற்றுக்

கொண்டு சுகமாக ஆள்வாயாக. தந்தைக்காக நீ மூட்டும் தீயில் நானும் விழுந்து மன்னன் சென்ற உலகத்துக்குப் போய் விடுகிறேன்" என்றாள்.

கொடிய விஷம் போன்ற இந்த மொழிகளைக் கேட்ட பரதன் கீழே விழுந்து, அவள் பாதங்களைப் பிடித்துக் கொண்டு பேச முடியாதவனாகக் கிடந்தான்.

"பரதனே, நீயே என்னை அழைத்துப் போய் என் வீர குமாரன் எங்கே தவ வாழ்க்கை நடதத்கிறானோ அங்கே கொண்டு போய் விட்டுவிடு" என்றாள் கௌசல்யை.

தாய் கௌசல்யையின் கொடிய மொழிகளைக் கேட்டு, வேதனை தாங்காமல் மூர்ச்சை அடைந்த பரதன், சற்று நேரம் கழித்துக் கொஞ்சம் தெளிந்ததும் எழுந்து, "தாயே, ஒரு பாவமும் அறியாத என்னை ஏன் இப்படியெல்லாம் துன்பப் படுத்துகிறீர்? வெகு தூரத்தில் ஒரு விஷயமும் தெரியாத வனாக இருந்தேன் என்பது உமக்குத் தெரியாதா? இங்கே நடந்த சூழ்ச்சியும் பாவமும் எனக்கு ஏதும் தெரியாது. அண்ணன் ராமனிடம் நான் வைத்துள்ள அன்பு உமக்குத் தெரியாதா? இந்தக் கொடுமையை நான் அவனுக்குச் செய்தி ருப்பேனா? இது உமக்குத் தெரியாதா? நான் அடைந்த சகல அறிவும், பெற்ற ஞானசம்பத்தும் எல்லாம் நாசமாகப் போகட்டும், இந்தத் தீச்செயலில் எள்ளளவாவது எனக்குப் பங்கிருக்குமானால் உலகத்தில் யார் எந்தப் பெரும் பாவம் செய்து அதன் பயனை அனுபவிக்கிறார்களோ அந்தப் பாவ மும் கர்மபலனும் எனக்கு வந்து சேரட்டும், சத்தியம் செய்கி றேன். தாயே! ஒரு நாளும் இந்த விஷயத்தில் நான் கலந்தவன் அல்ல; ஆசைப்பட்டவன் அல்ல!" என்றான்.

இரு கைகளையும் உயரத் தூக்கி, துஷ்டமனிதன் செய்யக் கூடிய சகலவிதப் பாவங்களையும் ஒன்றின் பின் ஒன்றாகக் கூறி, அந்தப் பாவம் தன்மேல் விடியக் கடவது,

இந்தச் சூழ்ச்சிக்குத் தான் சம்மதித்திருந்தால் - என்று கோர சபதம் செய்தான பரதன்.

தன்னைப் பெற்ற தாய் செய்த சூழ்ச்சியின் பயனாகப் பெரிய பாவத்தைப் பெற்ற ஒரு மகன் தனக்கு ஒன்றுமே தெரியாது என்று நிரூபிப்பது அந்தக் காலத்திலும் கடினமாகத் தான் இருந்தது. இந்த நிலையில் அப்பாவியான பரதன் சபதங்கள் செய்து அலறி அலறி அழுதான். அரசு இழப்பதை விடவும் வனம் போவதைவிடவும் இவ்வளவு நாட்கள் பிரியமாயிருந்த தாயான கௌசல்யை சாட்டிய பழி, குற்றமற்ற பரதனுக்குப் பயங்கர நரக வேதனையைத் தந்தது. ராமனுக்குச் செய்யப்பட்ட அநீதியினால் ராமன் துக்கப் படவில்லை. பரதனுக்குச் செய்த அநீதி மிகப் பெரியது.

பரதனுடைய உள்ளத்தை இப்போதுதான் கௌசல்யை கண்டாள். தான் எண்ணியது தவறு என்று உணர்ந்தாள். தன் மடியின் மீது அவன் தலையை எடுத்து வைத்து, "அன்புக்குரிய மகனே! உன் தூய உள்ளத்தில் உண்டாகியிருக்கும் துக்கத்தைப் பார்த்து என் சோகம் இருமடங்காகப் பொங்குகிறது. நாம் என்ன செய்யமுடியும்? குழந்தாய்! விதியின் வசப்பட்டவர்களாக இருக்கிறோம். புண்ணியவான்களுக்குரிய பதவிகளெல்லாம் உனக்கு இந்த உலகத்திலும் மேலுலகத்திலும் உண்டாகக் கடவது" என்று ஆசீர்வதித்து ஆறுதல் அடைந் தாள்.

முதலில் சந்தேகப்பட்டாள், சூழ்ச்சியில் பரதனும் கலந்திருப்பான் என்று அல்ல - பரதனுடைய மனத்தில் ஆசையிருந்திருக்கும். அதை அடைந்ததில் பரதனுக்குத் திருப்தி இருக்கும் என்று. பின்னர் பரதனுடைய உள்ளத்தின் கல்மிஷமற்ற பான்மையைக் கண்டு இருமடங்கு திருப்தி அடைந்தாள். ஒரு மகன் காட்டுக்குப் போனாலும் இத்தகைய ஒரு மகன் கிடைத்தானே என்று மகிழ்ச்சியடைந்தாள். இந்த இடத்தில் கம்பர் மிக அழகாகச் சொல்லுகிறார்.

தூய வாசகம் சொன்ன தோன்றலை,
தீய கானகம் திருவின் நீங்கிமுன்
போயி னான்தன் முன்போந் துளான் என,
ஆய காதலால் அழுது புல்லினாள்.

பட்டத்திலிருந்து நீக்கப்பட்ட, காட்டுக்குப் போன ராமனே திரும்பி வந்து, அவளைத் தழுவிக் கொள்வதாகவே எண்ணிக் கோசலை, பரதனை எடுத்து ஆனந்தக் கண்ணீர் விட்டு, அணைத்துக் கொண்டாள்.

மக்களின் உள்ளத்தில் ஏற்படும் பலவித உணர்ச்சி களைக் கவிஞர்கள் காண்பார்கள். அவற்றைப் பளிச்சென்று காண்பிக்கத் தகுந்த மொழிகளையும் அவர்கள் தான் காண்பார்கள்.

"உன் முன்னோர்கள் பலர் அரசு புரிந்து பெரும் புகழ் பெற்றிருக்கிறார்கள். ஆனால், அரசு வேண்டாம் என்று சொல்லும் உனக்குச் சமமானவர் அவர்களில் ஒருவருமே இல்லை. நீதான் மன்னர்களுக்குள் மன்னன், பரதனே!" என்று சொல்லிக் கோசலை விம்மி விம்மி அழுதாள்.

'முன்னை நும்குல முதலுளோர் கள்தாம்
நின்னை யாவரே நிகர்க்கு நீர்மையார்?
மன்னர் மன்னவா!'' என்று வாழ்த்தினாள்
உன்ன உன்னநைந்(து) உருகி விம்முவாள்'

கம்பர் கண்ட கோசலையும் பரதனும் பாரத நாட்டு மக்களின் உள்ளத்தில் என்றென்றும் நிலைத்து வாழ்க! அந்தப் பண்பும் நீடுழி வாழ்க!

இறந்து போன மன்னனுக்கு வழக்கப்படி செய்ய வேண் டிய உத்தரக் கிரியைகளைக் கிரமமாகச்செய்து முடித்தார்கள். ஆறாத துக்கத்தில் மூழ்கிய பரத சத்ருக்னர்களை வசிஷ்டர்

முதலான அறிஞர்கள் சமாதானப்படுத்த முயற்சி செய்தார்கள்.

மன்னன் இறந்த பதினான்காவது நாள் மந்திரிகள் முதலானோர் சபை கூட்டிப் பரதனை வணங்கி, "நம்முடைய பெருந்தகை மன்னன் சுவர்க்கம் சென்று விட்டான். ராம லக்ஷ்மணர்கள் இல்லாத இந்தச் சந்தர்ப்பத்தில், ராஜ்யத்தின் தலைமையைத் தாங்கள் ஏற்றுக் கொள்வதில் தவறு ஒன்று மில்லை, ஆகவே ஒப்புக்கொண்டு, எங்கள் அரசனாகப் புகழ் பெற்று விளங்குவீராக. மகுடாபிஷேகத்துக்கு வேண்டிய எல்லா மங்களப் பொருள் களைச் சேர்த்து வைத்தும், மற்ற சகல ஏற்பாடுகள் செய்தும், நகரத்துப் பிரமுகர்களும் ராஜ குலத்தவர்களும் காத்திருக்கி றார்கள். ராஜ்யத்தை ஏற்றுக் கொள்வீராக. இது உம்முடைய முன்னோர்களின் ராஜ்யம். அபிஷேகம் செய்துகொண்டு எங்களைக் காப்பாற்றுவீராக" என்றார்கள்.

இதைக் கேட்ட பரதன் பட்டாபிஷேகத்துக்காக வைக் கப்பட்டிருந்த சாமக்கிரியைகளையெல்லாம் வலம் செய்து கைகூப்பி வணங்கிவிட்டு, அவ்விடம் கூடியிருந்த மகாஜனங் களுக்குச் சொன்னான்.

"மூத்த குமாரனுக்கு உரிமையான ராஜ்யத்தை என்னை ஒப்புக்கொள்ளும்படி குல வழக்கத்துக்கு விரோதமாக நீங்கள் விரும்புவது நியாயமில்லை. உங்களுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகுக. ராமச்சந்திரன் எனக்கு மூத்தவன். அவன் இருக்கும் ஆரண்யத்துக்கு நான் சென்று, அவனுக்கு அங்கேயே ராஜ்யாபிஷேகம் செய்து வைத்து, ராம லக்ஷ்மணர்களை அயோத்திக்கு அழைத்துவரத் தீர்மானித்திருக்கிறேன். இதற்கு வேண்டிய பரிவாரங்களைத் திரட்டி, எல்லா ஏற்பாடு களையும் செய்வீர்களாக. இவ்விடமிருந்து வனத்துக்குப் போகப் பாதை சீராக அமைக்க வேண்டும். எல்லாத்

தொழிலாளர்களையும் திரட்டுங்கள். நான் அபிஷேகம் செய்து கொள்ளமாட்டேன். இது என் பிரதிக்ஞை" என்றான்.

ராஜகுமாரன் சொன்னதைக் கேட்டுச்சபையில் கூடி இருந்தவர்கள் எல்லோரும் தங்களையும் அறியாமல், பெருமகிழ்ச்சியடைந்து ஆரவாரம் செய்தார்கள்.

எல்லோரும் பரதனுடைய யோசனையை ஒப்புக் கொண்டு, பெரும் படை, பரிவாரத்தோடு ராஜ குமாரன் வனம் சென்று ராமனைச் சந்திக்க எல்லா ஏற்பாடுகளும் செய்தார்கள்.

* * *

வனப் பிரதேசத்தை நன்றாய் அறிந்தவர்கள், கிணறு, வாய்க்கால் வெட்டுகிறவர்கள், சுரங்கம் போடுகிறவர்கள், தெப்பம், படகு முதலியவற்றைக் கட்டத் தெரிந்தவர்கள், கல் தச்சர்கள், யந்திரம் செய்பவர்கள், சீக்கிரமாகப் பெரு மரங்களை வெட்டத் தெரிந்தவர்கள், சுண்ணாம்பு வேலைக் காரர்கள், காட்டு வழியில் செல்லப் பயிற்சி பெற்றவர்கள். இன்னும் இத்தகையோர் பலரும் கூடிய ஒரு பெரிய தொழி லாளர் கூட்டம், அவரவர்களுக்கு வேண்டிய சாதனங்களோடு முன்னால் சென்று எல்லா வேலைகளும் துரிதமாகச் செய் தார்கள். 'ராமனை அழைத்து வருவோம்' என்று எல்லா வேலையாட்களுக்கும் உற்சாகம். வெகு வேகமாகப் பாலங்கள் கட்டப்பட்டு வந்தன. மரங்கள் வெட்டப்பட்டன. வெகு துரிதமாகச் சேனையோடு ராஜகுமாரன் போவதற்குத் தகுந்த பாதை அமைக்கப்பட்டது. அங்கங்கே மேடுபள்ளம் சமப்படுத்தி, ஈரப் பிரதேசங்களில் ஜலம் வற்ற வெட்டிவிட்டு, வழியில், பெரும்படை தங்குவதற்கு விடுதிகளும், குடி தண்ணீர் வசதிகளும் எல்லாவித சௌகரியங்களும் செய்து விட்டார்கள்.

இவ்விதம் வனம் செல்ல எல்லா ஏற்பாடுகளும் பரதன் சொல்லியபடி நடந்து கொண்டிருந்தபோது, வசிஷ்டரும்

மந்திரிகளும் முறைப்படி பெரிய மந்திரிசபை கூட்டினார்கள். கூட்டி, பரதனுடைய மாளிகைக்குத் தூதர்களை அனுப்பி அவனை அழைத்தார்கள். அழைப்புக்கு வந்த பரிவாரத்தின் நாதகோஷங்களைக் கேட்டு பரதன் மிகவும் வருந்தினான். "அதை நிறுத்துங்கள்," என்று சொல்லியனுப்பிவிட்டு, தம்பி சத்ருக்கனனைப் பார்த்து, "ராஜ்யம் வேண்டாம்" என்று சொல்லிவிட்ட என்னை இவ்விதம் துன்புறுத்துகிறார்களே! தாய் செய்த சூழ்ச்சியின் பயனைப் பார்! இந்தப் பூமியைச் சுமக்க என்னைத் தனியே விட்டுவிட்டுத் தந்தை தசரதர் சொர்க்கம் போய்விட்டாரே; இந்த ராஜ்யம் அரசனில்லாமல் தவிக்கிறது. மாலுமியில்லாத கப்பலைப் போல் அலைகிறது" என்று சொல்லித் துக்கப்பட்டான்.

களங்கமற்ற பரதன் வருகிறான் என்று மிக்க ஆவலுடனும் சந்தோஷ ஆரவாரத்துடனும் சபையில் எல்லோரும் வாயிலைப் பார்த்த வண்ணமாக இருந்தார்கள். சந்திரோதயமானாற்போல் பரதன் சபையில் பிரவேசித்தான். கூடியிருந்த பெரியோர்களை நமஸ்கரித்து, பரதன் த்னது ஆசனத்தில் போய் அமர்ந்தான்.

"மேன்மை பெற்ற மகாராஜாவான தந்தையும், உங்கள் சகோதரன் ராமச்சந்திரனும் உங்களுக்கென்று தந்திருக்கும் ராஜ்யத்தை ஒப்புக்கொண்டு முறைப்படி எங்களை ரட்சிப்பீர்களாக" என்று வசிஷ்டர் மறுபடி சொன்னதைக் கேட்டதும் பரதன் உள்ளம் ராமனிருக்குமிடம் சென்று விட்டது; அவன் கண்களினின்று கண்ணீர் பெருகிற்று.

வாலிபனான பரதன் சபை நடுவில் உரக்க அழுது விட்டு, வசிஷ்டரைப் பார்த்து நிந்தித்துப் பேசினான்.

"நான் நல்ல முறையில் வளர்க்கப்பட்டவன். குலத்துக்குரிய பண்பாட்டையும் பெற்றவன். எனக்கு உரிமையற்ற பொருளை நான் எப்படி அபகரிப்பேன்? தகாத காரியத்தைச் செய்யச் சொல்லுகிறீர்களே! இது வியப்பாக

இருக்கிறது. தசரதனுடைய புத்திரன் ஒருவன் இதைச் செய்ய ஒப்புக்கொள்வானா? இந்த ராஜ்யம் ராமனுடையது. மூத்த வன் எதிலும் மேலானவன். தர்மாத்மா, திலீபன், நகுஷன் ஆகியவர்களுக்குச் சமமானவன். அவனல்லவோ இந்த ராஜ்யத்துக்கு உரிய அரசன்; ஆரியனுக்குத் தகாத ஒரு காரியத்தை என்னைச் செய்யச் சொல்லுவது சரியல்ல. இங்கிருந்து வனத்திலிருக்கும் இராமனுக்குக் கை கூப்பி வணங்குகிறேன். அவனே அரசனாகத் தக்கவன். நானல்ல!"

இந்தப் பேச்சைக் கேட்ட சபையோர், 'இவனல்லவோ பெருந்தகை' என்று ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்கள்.

மீண்டும் பரதன் சொன்னான் "அரசனான ராமனை என் பேச்சால் சம்மதிக்கும்படி செய்ய முடியாவிட்டால், நான் அங்கேயே வனத்திலிருந்து தவமிருப்பேன்; நீங்கள் பெரியோர்கள்; எல்லோருமே எப்படியோ சகல உபாயங்களையும் உபயோகித்து பலவந்தமாகவேனும் ராமனை அயோத்திக்குக் கொண்டுவந்து பட்டம் சூட்ட வேண்டியது உங்கள் கடமை."

இப்படிச் சொல்லிவிட்டு அங்கிருந்த சுமந்திரனைப் பார்த்து வனம் போவதற்குத் துரிதமாக எல்லா ஏற்பாடுகளும் செய்யும்படி கட்டளையிட்டான். நகரமெல்லாம் ஆரவாரித்து மகிழ்ந்தது. ராமன் வந்தே விட்டான் என்கிற உணர்ச்சி பெற்று மகிழ்ந்தார்கள். பரதன் எப்படியாவது ராமனை அழைத்து வருவான் என்று நம்பினார்கள்.

## 36. குகனுடைய சந்தேகம்

நிஷாத மன்னன் குகன் பார்த்தான். கங்கை எதிர்க் கரையில் என்றும் காணாத கோலாகலம். ஒரு பெரும் படை வந்து நதிக்கரையில் தங்கியிருப்பதாகத் தெரிந்தது. பக்கத்தில் நின்று தன் குலத்தார்களுக்கும் காட்டி, "இது யார்? என்ன காரணம் பற்றி இங்கே பெருஞ்சேனை வந்து கங்கையைத் தாண்டப் பார்க்கிறது? கொடியைப் பார்த்தால், அந்தக்

கைகேயியின் மகன் பரதன் பெரும்படையைத் திரட்டிக் கொண்டு வந்திருக்கிறான் போல் தோன்றுகிறது. தேரின் மேல் காற்றில் திருவாத்தி மரக்கொடி ஆடுவது நன்றாகத் தெரிகிறது. அது அயோத்தி மன்னருடைய கொடி. இப்போது ராமனுடைய பகைவன் பரதனல்லவா? அயோத்தி அரசன் கைகேயியின் மகன் அக்கிரம வழியில் ராஜ்யத்தை அடைந்து விட்டு, இப்போது ராமனைக் கொல்லவும் வந்திருக்கிறான் போல் தோன்றுகிறது. நம்முடைய வீரர்களையும் இன்னும் கங்கைக் கரையில் நமக்குச் சேர்ந்தவர்களையும் உடனே திரட்டிக் கங்கையை ஜாக்கிரதையாகக் காத்து நிற்க ஏற்பாடு செய்யுங்கள். ஓடங்களைக் கூட்டி அதில் ஆயுதங்களோடு வீரர்களை ஏற்றி யுத்தத்துக்கு ஆயத்தமாக இருக்கவேண்டும். பார்க்கலாம்! இவர்கள் ராமனிடம் நல்ல எண்ணம் கொண்ட வர்களாக இருந்தால், நதியைக் கடக்க உதவி செய்வோம். அல்லது கெட்ட எண்ணத்தோடு வந்திருப்பவர்களாகத் தெரிந்தால், இவர்களை இங்கேயே தடுத்து விடவேண்டும். கங்கையைக் கடக்க விடக்கூடாது" என்றான்.

அவ்வாறே எல்லா ஆயத்தமும் செய்துவிட்டு, மரியா தைக்கு வேண்டிய பரிசுகளை எடுத்துக்கொண்டு, குகன் ஒரு படகிலேறிப் பரதனைச் சந்திக்கச் சென்றான்.

எதிர்க்கரையில் அதே சமயத்தில் சுமந்திரன், "அதோ! நம்முடைய நண்பன் குகன், ராமனிடம் அளவில்லாத அன்பு கொண்ட நிஷாத ராஜன். தன்னுடைய ஜனங்களோடு நம்மை மரியாதை செய்து வரவேற்க வருகிறான். இவன் இந்தப் பிராந்தியத்துக்குத் தலைவன். இவனுக்கும் இவனுடைய குலத் தார்க்கும் இந்த வனத்தின் மூலைமுடுக்கெல்லாம் நன்றாகத் தெரியும். ராமச்சந்திரன் தற்போது இருக்குமிடத்தை நமக்குச் சொல்லுவார்கள். அவ்விடத்துக்கு நம்மை க்ஷேமமாகவும் சீக்கிரமாகவும் கொண்டுபோய்ச் சேர்ப்பார்கள்" என்று பரதனுக்குச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

இதற்குள் குகன் நதியைத் தாண்டி வந்து பரதனை நமஸ்கரித்தான்.

"சொல்லாமல் வந்துவிட்டீர்களே. ஆயினும் என் பொருளெல்லாம் உமது என்று பாவித்து என்ன வேண்டுமோ அதை உத்தரவிடுங்கள். உங்களையும் உங்கள் சேனையையும் உபசரிப்பது என் பாக்கியம்" என்றான்.

"எண்ணிய எண்ணமே விருந்து" என்று உபசார மொழி சொல்லிவிட்டு, பரதன் மேலும் சொன்னான்: "நான் ராமன் இருக்கும் இடம் போக வேண்டும். பரத்துவாஜ ஆசிரமம் எங்கே இருக்கிறது? அதற்கு வழி எப்படி?"

இவ்வாறு கேட்டதற்குக் குகன் அஞ்சலி செய்து "சுவாமி, நானும் என் ஆட்களும் தங்களுடன் கூடவே வந்து, தங்களை ராமச்சந்திரனிருக்குமிடத்துக்கு அழைத்துப் போவதில் தடையொன்றுமில்லை. எந்த அபாயமும் கஷ்டமும் இல்லாமல் கொண்டு போய்ச் சேர்ந்துவிடுவோம். ஆனால், மன்னிக்க வேண்டும். ஒரு சந்தேகம். என் மனதில் எழும் ஐயத்தைத் தீர்க்கவேண்டும். அரசகுமாரரே! இவ்வளவு பெரிய சேனையுடன் வந்திருக்கிறீர்கள், இது ஏன் என்று எனக்குக் கொஞ்சம் சந்தேகமாக இருக்கிறது" என்றான்.

இந்த மொழிகளைக் கேட்டதுமே பரதன், "ஆஹா, இதைவிட என்ன அவமானம் எனக்கு வேண்டும்? ஜனங்கள் என்னைக் கண்டு ராமன் விஷயமாகப் பயப்படும் காலம் வந்துவிட்டதே! குகனே, நீ சந்தேகப்பட வேண்டாம். தகப்பனை இழந்த எனக்கு ராமனே தந்தையாவான். அவனை எப்படியாவது வேண்டிக்கொண்டு அயோத்திக்கு அழைத்துப் போக வந்திருக்கிறேன். தெய்வத்தின் மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன். என் உள்ளத்தில் வேறு எண்ணம் இல்லை" என்றான்.

பெருந் துக்கமும் ராமனிடமுள்ள அவன் அன்பும் பரதனுடைய முகத்திலும் பேச்சிலும் கண்டு, குகன் உள்ளம் பூரித்து, "ஐயனே! உம்மைப் போன்ற மகான் வேறு யார்

இருக்கிறார்கள் உலகத்தில்? தானாக வந்த பெரும் சம்பத்தை வேண்டாம் என்று துறக்க வல்லவர் தாங்களின்றி வேறு யாருளர்? தங்களுடைய புகழ் உலகத்தில் என்றென்றும் பரவி விளங்கும்" என்றான்.

இரவாயிற்று. பரதனுடைய சேனைக்கு வேண்டிய தெல்லாம் நிஷாத ராஜன் ஏற்பாடு செய்து முடித்தான். அனைவரும் படுத்தார்கள்.

குகனைச் சந்தித்த பிறகு, பரதனுக்குத் துக்கம் முன் னிருந்ததைவிட அதிகரித்தது. பரிசுத்த சுபாவத்தை ஜன்ம சம்பத்தாகப் பெற்றவன் பரதன். "இப்படியாயிற்றே!" என்று அவன், ராமனை நினைத்து பெருமூச்சுவிட்டு, உடம்பெல்லாம் வியர்த்துத் தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தான். அவனுக்கு நேர்ந்த பெரும்பழியும், தந்தை இறந்த துக்கமும், ராமனைப் பிரிந்த துயரமும் எல்லாம் சேர்ந்து நெருப்பைப் போல் அவன் உயிரை எரித்தன. குகனும் அவனுக்கு ஆறுதல் மொழிகள் சொல்லி, கூடிய அளவு அவன் துயரத்தைத் தணித்து வந்தான். பரதனும் குகனும் கங்கைக் கரையில் சந்தித்து, துயரத்தைப் பங்கிட்டுக் கொண்டது ஆழ்வார்களும் பக்தர்களும் மிகவும் அனுபவிக்கும் கட்டம்.

"ராமன் என்ன சாப்பிட்டான்? எங்கு உட்கார்ந்தான்? எங்கே படுத்தான்? என்ன சொன்னான்?" என்றெல்லாம் பரதன் விசாரிக்க, குகனும் அன்போடு எல்லாவற்றையும் சொல்லி, இடங்களைக் காட்டியும் வந்தான்.

முடிவில், "லக்ஷ்மணன் எங்கே தூங்கினான்?" என்று கேட்டபோது அந்தக் கதையைச் சொன்னான்.

"ராமனும் ஜனகன் மகளும் தரையில் அங்கே படுத்திருப் பதைப் பார்த்து 'எனக்குத் தூக்கம் வருமா?' என்று கண்ணீர் சொரிந்து அழுது, இரவு முழுவதும் வில்லும் கையுமாக என்னைப் போலவே படுக்காமல் நின்று காத்து வந்தான்

லக்ஷ்மணன்" என்று குகன் சொன்னபோது, பரதன் துயரம் தாங்க முடியாமல் வருந்தினான்.

ராமனும் சீதையும் தரையில் கிடந்த இடத்தைப் பரதன் பார்த்து மூர்ச்சையடைந்தான். தன் தாய்களுக்கு அதைக் காட்டி, "இதுவே என் பொருட்டு ராமன் தரையில் படுத்த இடம், புல்லும் அமுங்கிக் கிடக்கிறது பாருங்கள்" என்றான்.

"என்ன உண்டார்கள்" என்று கேட்டபோது குகன் சொன்னான்; "அப்பனே அன்றிரவு விரதமிருந்து, லக்ஷ்மணன் கொண்டு வந்த ஜலத்தை ராமன் அருந்தி மீதியைத் தம்பியும் அருந்தினான். நான் இட்ட ஆகாரத்தை அப்படியே திருப்பி விட்டு உபவாசமாகத் தூங்கினார்கள். மறுநாள் காலை தலைமயிரை சடையாயத் திரித்துக்கொண்டு காலால் நடந்து சென்றார்கள்" என்றான்.

ராமனை அயோத்திக்கு எப்படியாவது அழைத்துப் போய் முடிசூட்டுவது என்று தீர்மானித்திருந்ததால், ஓரளவு மகிழ்ச்சியடைந்திருந்த பரதனுடைய உள்ளம்; கங்கைக்கரை வனத்தில் குகனுடன் பேசிய பேச்சுக்களாலும், பார்த்த காட்சிகளாலும் மறுபடியும் துயரத்தில் ஆழ்ந்து விட்டது.

"என் பொருட்டு நீ புல்மேல் படுத்தாய். நான் இதைக் கண்டும் உயிருடன் இருக்கிறேன். நான் கிரீடமும் சூட்டிக் கொள்ள வேண்டுமாம்" என்றான்.

"எப்படியாவது ராமனைத் திருப்பி அழைத்துப் போய்ச் சிம்மாசனத்தில் அமரச் செய்வேன்; வேண்டுமாயின் அவன் கொண்ட பிரதிக்ஞையைப் பதினான்கு வருஷம் நான் அவனுக்குப் பதிலாகக் காட்டிலிருந்து முடிப்பேன். இதில் குற்றமில்லை. சத்தியம் குலையாது. ஒப்புக்கொள்வான்" என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டு ஆறுதல் அடைந்தான்.

மறுநாள் காலையில் சீக்கிரமாகவே பரதன் சத்துருக்கனனை எழுப்பினான். "என்ன இன்னும் தூங்குகிறாய்? விடிந்து விட்டது. பரிவாரமும் சேனையும் கங்கையைத் தாண்ட வேண்டுமல்லவா? சீக்கிரம் குகனுக்குச் சொல்லி எல்லாம் செய்து முடிக்கவேண்டும்" என்றான்.

"அண்ணனே! நான் தூங்கவில்லை. எனக்கும் உன்னைப் போலவே இரவெல்லாம் ராமனைப் பற்றிய நினைவுதான்," என்றான் சத்துருக்கனன்.

இப்படிப் பேசும்போது குகன் வந்து சேர்ந்தான். "சுகமா? இரவு சரியாகக் கழிந்ததா? உங்களுடைய பரிவாரமெல்லாம் சுகமா? என்றெல்லாம் கேட்டு, உடனே விடை பெற்றுக் கொண்டு போய்ப் பெரியதொரு படகுப்படை தயார் செய்தான். வெகு விமரிசையாக எல்லாம் நடந்தது. பார மூட்டைகளும், வண்டிகளும், பரதனுடன், வந்த பெரிய சேனையும் படகுகளில் ஏற்றப்பட்டன. கங்கா நதியில் பரதனுடைய பரிவாரம் ஏறிய படகுகளைக் கடத்தினார்கள். அப்போது எழுந்த ஆரவாரம் ஒரு பெரிய திருவிழா போலிருந்தது. பரதனுக்கிருந்த துக்கம் கூட்டத்துக்கு இல்லை. பரதன் எப்போது புறப்பட்டானோ அப்போதே அவர்கள் ராமன் திரும்பி வந்துவிடுவான் என்று நிச்சயமாகத் தீர்மானித்துக் கொண்டு விட்டார்கள். ராமன் திரும்பி வந்து பட்டாபிஷேகம் நடக்கும், தீர்ந்துபோன துயரங்களெல்லாம் கனவாக மறையும் என்று எண்ணிச் சந்தோஷமாகச் சென்றார்கள். தற்போது திருவிழாக் காலங்களில் பெரிய ரயிலடியில் நடைபெறும் கோலாகலம் போல அன்று கங்கைக் கரையில் நடந்ததை நடந்தபடி வால்மீகி சித்திரித்திருக்கிறார். சேனை முழுவதும் நதியைத் தாண்டியாயிற்று என்று கண்டபின், பரதனும் தனக்காக அமைந்திருந்த படகில் ஏறிச் சென்றான். கங்கையைக் கடந்து எல்லாரும் பரத்வாஜ முனிவருடைய ஆசிரமம் போய்ச் சேர்ந்தார்கள்.

பரதனுடைய கதை ஒன்று போதும், ராமாயணம் படித்து நாம் மேம்பட்ட நிலையடைவதற்கு. சக்கரவர்த்தித் திருமகனும் பரதனும் ஆண்டவனுடைய திரு அவதாரம் என்றாலும் சரி; இல்லை; இவர்கள் வால்மீகி முனிவருடைய கற்பனைச் சிருஷ்டியாகவே இருந்தாலும் சரி, முனிவருக்கு அதற்காகக் கோயில் கட்டித் தலைமுறை தலைமுறையாகப் பூஜிக்கத்தகும். இத்தகைய சிருஷ்டி முனிவருடைய கற்பனையில் உண்டாவதற்கு முனிவர் உள்ளத்தில் எத்தகைய ஞானமும் பக்தியும் இருந்திருக்க வேண்டும். அது மட்டுமல்ல. அதை நாம் படித்துப் பெருமகிழ்ச்சியடைகிறோமே. அதற்குக் காரணம், நம்முடைய உள்ளத்தில் மறைந்து கிடக்கும் நல்லறிவும் தெய்வ பக்தியுமே. நாமே அறியாமல் பக்தியும் ஞானமும் நாம் பிறக்கும் போதே அடைந்திருக்கிறோம். அது உள்ளே பெருஞ் செல்வமாகக் கிடக்கிறது. இல்லாவிடில் இந்த மக்கள் சமூகம் மிருகக் கூட்டமாகத்தானே இருந்து, நம்மை விடப் பெரிய மிருகங்களுக்கு இரையாகி நாம் அழிந்தும் போயிருப்போம்!

## 37. பரத்வாஜ ஆசிரமம்

பரதன் பரிவாரத்துடன் பரத்வாஜ ஆசிரமத்தை நோக்கிச் சென்றான். பிரயாகவனம் போய்ச் சேர்ந்ததும் சிறிது தூரத்தில் ரம்மியமான ஒரு சோலையும், அதன் மத்தியில் பர்ணசாலையும் இருக்கக் கண்டார்கள். அதுவே பரத்வாஜ ரிஷியின் ஆசிரமம் என்று அறிந்து, பரதன் தன் பரிவாரக் கூட்டத்தை நிற்கச் சொல்லிவிட்டு, வசிஷ்டர் முதலிய சில முக்கியமான பெரியவர்களுடன் அடக்கமாகச் சென்றான். தன்னுடைய பட்டாடை, வில், அம்பு, கத்தி முதலிய க்ஷத்திரிய வேஷங்களைக் கழற்றி வைத்துவிட்டு, வசிஷ்டமுனிவரை முன்னிட்டுக் கொண்டு காலால் நடந்து சென்றான். பிறகு மந்திரிகளையும் ஓர் இடத்தில் நிற்கச்

சொல்லிவிட்டான். வசிஷ்டரை மட்டும் கூட அழைத்துச் சென்றான். வசிஷ்டரைக் கண்டதும் பரத்வாஜர் ஆசனத்தி லிருந்து எழுந்தார். சிஷ்யர்களை ராஜகுமாரனுடைய பாதத்துக்கு ஜலம் கொண்டுவரச் சொல்லி வசிஷ்ட முனிவரை எதிர்கொண்டார்.

பரத்வாஜ முனிவரைப் பரதன் வணங்கினான். அவரும் இவன் யார் என்பதை அறிந்து கொண்டார். ராஜ குமார னுக்குச் செய்ய வேண்டிய உபசாரத்தை முறைப்படி செய் வித்து, க்ஷேம சமாசாரம் விசாரித்தார். ஏற்கனவே தெரிந்த துயரமான விஷயமானதால் தசரதனைப் பற்றிக் கேட்க வில்லை.

* * *

நான் இராமாயணம் எழுதுவது வால்மீகி ராமாய ணத்தின்படி. குகன் எப்படிப் பரதனுடைய பரிவாரத்தைக் கண்டு சந்தேகித்தானோ அப்படியே பரத்வாஜ ரிஷியும் பரதனுடைய எண்ணத்தைச் சந்தேகித்துக் கேட்டதாக வால் மீகி இந்த இடத்தில் சொல்லுகிறார். துளசி ராமா யணத்தில் இப்படி இல்லை. துளசி ராமாயணம் முற்றிலும் பக்தி மயம். ரிஷிகளுக்குத் தெரியாத ஒரு விஷயமுமில்லை. ஆனபடியால் துளசி ராமாயணத்தில் பரதனைப்பற்றிப் பரத்வாஜருக்குச் சந்தேகம் எப்படியிருக்க முடியும்? ஆனால் கம்பர் பாடி யிருப்பது வால்மீகி முனிவரைப் பின்பற்றியே இருக்கிறது. இந்தக் கட்டத்தில் மட்டுமல்ல; இன்னும் பல இடங்களில் நன்றாகக் காணப்படுகிறது. கம்பர் வால்மீகி ராமாயணத்தை மிகக் கவனமாகப் பின்பற்றியே தம்முடைய தனிச் செல்வமான கற்பனா சக்தியையும் உபயோகித்து, அபார அழகுடன் தம் ராமாயணத்தைப் பாடியிருக்கிறார், ஏதும் மாற்றாமலே. அநேக இடங்களில் சாமர்த்தியமாகச் சிக்கல் களைச் சரிப்படுத்தி விட்டிருக்கிறார். மாற்றிப் பாடி யிருப்பது வெகு சில இடங்களிலேயே.

துளசி ராமாயணம் அப்படியில்லை. ஏராளமான மாறுதல்கள் செய்திருக்கிறார். தம் சொந்தச் சொத்தாகவே பாவித்துத் துளஸிதாஸர் ராமனைப் பாடியிருக்கிறார். அது அவருடைய அபார பக்தியினால் உண்டான உரிமை.

கம்பர், பரத்வாஜ பரத சம்பாஷணையை வால்மீகி சொல்லியபடியே வைத்துக்கொண்டு, ரிஷி சொன்னதைக் கேட்ட பரதன் பெரும் சினங்கொண்டு பதில் சொன்னதாக மிக அழகாகப் பாடியிருக்கிறார்.

எப்படியாயினும் பரத்வாஜ ரிஷி பரதனைச் சந்தேகப் பட்டுக் கேட்டதும், நமக்கு ஒரு மாதிரியாகத்தான் இருக் கிறது. குகன் கேட்டதில் தனியழகு பொதிந்து கிடக்கிறது. பரத்வாஜர் சந்தேகித்தது நியாயமாகத் தோன்றவில்லை. இதற்குச் சமாதானம், "அப்பனே, உன்னை நான் அறியா தவனா? உன்னுடைய குணத்தைத் திண்ணமாக்கி விளக்கிக் காட்டி உன்னைப் புகழ் பெறச் செய்வதற்காகவே பரீட் சையாகக் கேட்டேன். பரிசுத்தமான எண்ணத்தை ஊர்ஜிதப் படுத்துவதற்காகவே கேட்டேன்" என்று ரிஷி சொன்னதாக வால்மீகி ராமாயணத்தில் சொல்லப்படுகிறது.

நம்முடைய காலத்தில் ரிஷிகளைப்பற்றி நாம் கொண் டுள்ள சித்திரம் வேறு. வால்மீகி காலத்தில் வேறு. எப்படி ஸ்ரீராமன் சாக்ஷாத் பகவானுடைய திருவவதாரமாயினும், வால்மீகி ராமாயணத்தில் ஒரு வீர புருஷனாகத்தான் சித்தி ரிக்கப்படுகிறான். அதற்கு அனுசரணையாக பரத்வாஜ ரிஷியும் அவர் ராமனிடம் வைத்த வாத்ஸல்யத்தினால் பரதனைப் பரீக்ஷார்த்தமாகச் சந்தேகித்ததாகச் சொல்லப்படுகிறது; "ராகவ ஸ்நேக பந்தத்தால்" ரிஷி இவ்வாறு கேட்டதாகவும், பிறகு பரதன் வருந்தியதைக் கண்டு சமாதானமாகச் சில மொழிகளைச் சொன்னதாகவும் வால்மீகி பாடியிருக்கிறார். வால்மீகி ராமாயணத்தில் எல் லாப் பாத்திரங்களும் அபூர்வ குணங்கொண்ட மானிடர்கள்; தெய்வீகத் தன்மை இளம் சூரியனைப் போல் லேசாக

வீசுகிறது, அவ்வளவே. மானிட இயல்பு அதிகம். பின்னால் வந்த துளஸிதாசர் காலத்தில் பக்திரசம் நடுப்பகல் போல் விளங்குகிறது. வேறு எதற்கும் இடமில்லாமல் பூரண ஒளி பெற்றுவிட்டது. கம்பருடைய சித்திரத்தில் பக்தி பிரதான மாகவே இருந்தாலும், வால்மீகி சித்திரத்தினுடைய மானிட வண்ணம் அழிந்து போகாமல் பக்தியைப் பின்னால் எழில் வீசும்படி வைத்து, மானிட சித்திரத்தை இன்னும் பேரழகு படும்படி செய்திருக்கிறார்.

* * *

பரதனைக் கண்டதும் பரத்வாஜர் க்ஷேம சமாசாரம் விசாரித்துவிட்டு, "பரதனே, நீ ஏன் ராஜகாரியத்தை விட்டு விட்டு இங்கே வந்தாய்? உன் பொறுப்பு அயோத்தியில் அல்லவா இருக்கிறது? எனக்குக் கொஞ்சம் சந்தேகம் தோன்று கிறது. இளைய மனைவியின் பேச்சைக் கேட்டுத் தசரதன் ராமனைப் பதினான்கு வருஷம் காட்டில் வசிக்கும்படி ஆணையிட்டதனால், அவன் தம்பியையும் மனைவியையும் அழைத்துச் சென்று வனத்திலிருக்கிறான். உன் ராஜ்ய பரிபாலனத்துக்கு இன்னும் கொஞ்சம் இடையூறு இருக்கிற தென்று எண்ணினாயா? அதை நீக்குவதற்காக ஏதாவது இன்னும் யோசனையா?" என்று கேட்டார்.

இந்த மொழிகள் முனிவர் வாயினின்று வர, பரதன் கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகிற்று. பேச்சுக் குழறிப் போயிற்று.

"ஐயோ, நான் செத்தேன்!" என்றான். "தாங்களே என்னைச் சந்தேகித்து விட்டீர்களா? வேண்டாம். என்னைப் பெற்றவள், நான் எங்கேயோ இருந்த சமயத்தில், எனக்குத் தெரியாமலும், என் சம்மதம் கொஞ்சமும் இல்லாமலும் செய்துவிட்டதை என்பேரில் சுமத்தலாகாது. எப்படியாவது ராமனுக்குச் சமாதானம் சொல்லி, அயோத்திக்கு அழைத்துப் போய், அவனை அரசனாக்கி அவனுக்கு நான் ஆயுள்

முழுவதும் அடிமையாக இருந்து சேவை செய்ய வேண்டு மென்றல்லவா வந்திருக்கிறேன்! ராமன் இருக்குமிடம் தங்க ளைக் கேட்டுத் தெரிந்து கொண்டு, அவனைப் பிரார்த் தித்து அழைத்துப்போக வந்திருக்கிறேன். என்னை இப்படிச் சொல்லாதீர்கள்!" என்று பரதன் அழுதான்.

அதன்மேல் பரத்வாஜர், "பரதனே, உன் உள்ளத்தின் சுத்தம்எனக்குத் தெரியும், ரகு வம்சத்தில் பிறந்த நீ வேறு எப்படியிருக்க முடியும்? ராமனிடத்தில் உனக்குள்ள பக்தி எப்போதும் உறுதியாக இருந்து, உன் கீர்த்தி வளர்ந்து ஓங்குவதற்காகவே நான் இவ்வாறு கேட்டேன். வருத்தப்படவேண்டாம். சக்கரவர்த்தித் திருமகன் சித்திரக்கூட மலையில் இருந்து வருகிறான். இன்று இங்கே தங்கி நாளை மந்திரிகளுடன் அவ்விடம் போவாயாக. இந்த ஆசிரமத்தில் இன்று தங்குவதற்கு ஒப்புக்கொண்டு என்னை மகிழச் செய்வாய்!" என்றார்.

"சுவாமி, தாங்கள் எனக்குச் செய்த அர்க்கியம், பாத்யம் இவை போதாவா? எல்லா அதிதி பூஜையும் பெற்றுப் பெரிய விருந்தும் உண்ட மாதிரி அடியேன் திருப்தியடைந்து விட் டேன்" என்றான் பரதன்.

வனத்தில் வசிக்கும் ஏழைத் தவசிக்குத் தொந்தரவு கொடுக்கக்கூடாது என்று அரசகுமாரன் எண்ணுகிறான் என் பதைப் பரத்வாஜர் தெரிந்துகொண்டு புன்சிரிப்புச் சிரித்து, "அப்படியில்லை, உன் பக்திக்கும் பதவிக்கும் தக்க உபசாரம் செய்யக் கடமைப்பட்டிருக்கிறேன்" என்று சொல்லி, "உன் சேனை பரிவாரம் எல்லாரும் ஏன் தூரத்தில் நின்று விட்டார்கள்? ஏன் நீ அவர்களை அழைத்து வரவில்லை?" என்று கேட்டார்.

"பரிவாரங்களோடு ரிஷிகளுடைய ஆசிரமத்தின் அரு கில் போகக்கூடாது என்கிற நியமப்படி அவ்வாறு செய்தேன்.

என்னுடன் வந்திருக்கும் கூட்டம் மிகப் பெரிது. அது இங்கே வந்தால் உங்களுக்குப் பெரிய தொல்லையாக இருக்கும்" என்றான் பரதன்.

"அப்படியில்லை, எல்லாரையும் வரச்சொல்லி உத்தரவிடுவாய்!" என்றார்.

அவ்வாறே பரதனும் தன் பரிவாரத்துக்குச் சொல்லியனுப்பினான்.

பரத்வாஜர் தம் ஹோமசாலைக்குச் சென்று, மூன்று தரம் மந்திரத்தோடு நீர் அருந்தி முகத்தைத் துடைத்துக் கொண்டு "ஏ விசுவசன்மாவே! ஏ மயனே!" என்று தேவாசுர சிற்பிகளைக் கூவியழைத்தார். "பரதனுக்கும் அவன் பரிவாரத்துக்கும் நான் விருந்து செய்ய விரும்புகிறேன். அதற்கு வேண்டியனவெல்லாம் நடைபெற வேண்டும்" என்றார் பரத்வாஜர்.

மயன், வருணன், குபேரன், அக்னி முதலிய தேவர்களை வரவழைத்து, "உங்கள் உதவியைக் கொண்டு பரதனுக்கு நான் அதிதி பூஜை செய்ய விரும்புகிறேன்" என்றார்.

அற்புதமான நிகழ்ச்சி நடந்தது. முன் விசுவாமித்திரருக்கு வசிஷ்டர் செய்த விருந்துபோல் பரத்வாஜரின் ஆசிரம வனத்தில் நடந்தது. ஆனால், அப்போது விசுவாமித்திரர் நடத்தியதுபோல் பரத்வாஜர் ஆசிரமத்தில் ஒரு விவகாரமும் கலகமும் நடைபெறவில்லை. எல்லாருக்கும் தகுந்த விடுதிகள் ஸ்னானாதி விஷயங்களுக்கு சௌகரியங்கள், சந்தனம், புஷ்பம், அன்னபானாதிகள், பணியார வகைகள் அப்ஸரஸுகளின் நிருத்தியம், கந்தவர் சங்கீதம் எல்லாம் நினைக்க முடியாத தெய்வீக ரீதியில் ஏற்பாடு செய்யப்பட்டு எல்லாரும் மெய்மறந்து அனுபவித்தார்கள். பரதனுடைய சேனையிலுள்ள படை வீரர்கள் மகிழ்ச்சி மயக்கத்தில் 'இனி நாம் தண்டகாரணியம் போக வேண்டியதில்லை. அயோத்திக்குத் திரும்பப் போவதில்லை. இங்கேயே இருந்து

விடுவோம்' என்று எண்ணினார்கள். பரத்வாஜருடைய விருந்து தினந்தோறும் நடக்கும் என்று எண்ணி விட்டார்கள்! கூத்தாட்டவையானது ஆட்டம் முடிந்ததும் மறைவது போல், காலையில் எல்லாம் மறைந்து போகும் என்பது அவர்களுக்குத் தெரியவில்லை.

எல்லையில்லாத சம்பத்தை யடைந்த ஒரு மகாராஜன், மற்றொரு மகாராஜாவுக்கும் அவன் பரிவாரத்துக்கும் தன் ராஜதானியில் நடத்தும் ஒரு பெரிய விருந்தைப் போல், பரத்வாஜர் வசித்த ஆசிரம வனத்தில் விடுதிகள், வாகனங்கள், பணியாட்கள் உள்பட எல்லாம் ஒரு கணத்தில் உண்டாயின. அனைவரும் எல்லைமீறி அனுபவித்தும் மெய்மறந்தும் தூங்கி விட்டார்கள்.

## 38. அதோ ராமனுடைய ஆசிரமம்!

மறுநாள் காலை முனிவர், "இவ்விடத்திலிருந்து இரண்டரை யோசனை தூரத்தில் மந்தாகினி நதி ஓடுகிறது. அதன் கரையில் ஜன சஞ்சாரமற்ற பெரிய காடு இருக்கிறது. தெற்கே சித்திரகூடமலை இருக்கிறது. மலைக்குக்கீழ் வனத்தில் ஒரு பர்ணசாலையில் ராம லக்ஷ்மணர்களும் சீதையும் வசித்து வருகிறார்கள்" என்று சொல்லி, அங்கே போகும் வழியையும் விளக்கிச் சொன்னார்.

பிறகு பரத்வாஜரைத் தாய்மார்கள் மூவரும் வலம் செய்து வணங்கினார்கள். "இவர்களை எனக்கு அறிமுகப் படுத்துவாய்" என்று கேட்டார் ரிஷி.

பரதன் அவ்வாறே கோசலை, சுமித்திரை, கைகேயி இவர்களை ஒருவர்பின் ஒருவராகப் பெயர்கள் சொல்லி, ரிஷியிடம் ஆசிபெறச் செய்தான்.

"இதோ துக்கப்பட்டு, பட்டினி கிடந்து இளைத்து நிற்கிறாள் மகாராஜாவின் பட்டமகிஷி கௌசல்யாதேவி. இந்திரனைப் பெற்ற அதிதிக்குச் சமானமான இவளே, சக்கரவர்த்தித் திருமகனைப் பெற்றவள். வலப்புறத்தில் கோசலை

*யைத் தாங்கிக்கொண்டு, வாடிய புஷ்பங்கள் நிறைந்த கொடியைப்போல் துக்கப்பட்டு நிற்பவள் அரசனுடைய இரண்டாவது பட்டமகிஷி; லக்ஷ்மண சத்ருக்கனர்களைப் பெற்ற பாக்கியவதி. இதோ நிற்கிறாள் எங்களுடைய துக்கத் துக்கெல்லாம் காரணமான என் தாய்; ஆர்யவடிவம் கொண்ட அனார்யை" என்று கைகேயியைச் சுட்டிக் காட்டினான். அவளும் மற்றவர்களைப் போலவே ரிஷியை வலம் செய்து நமஸ்கரித்துவிட்டு, வெட்கம் படர்ந்த முகத்துடன், மகன் பரதன் பக்கத்தில் வந்து நின்றாள்.*

*அப்போது பரத்வாஜ ரிஷி பரதனுக்குச் சொன்னார்.*

*"தாயை அப்படிச் சொல்லாதே! உலகத்தின் நன்மைக் காகவே அனைத்தும் நடந்தன" என்றார்.*

*தாய்மார்களை இனம் காட்டும் இந்த நிகழ்ச்சியைக் கம்பர் இடம் மாற்றி வெகு அழகாகக் குகப் படலத்தில் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டார். குகன் பணிவுடன் விசாரிக்கப் பரதன் ஒவ்வொருவராகச் சொல்லி அறிமுகப் படுத்துகிறான். பரத்வாஜ ரிஷி ஆசிரமத்தில் நடந்ததாக வால்மீகி சொல்லும் நிகழ்ச்சியைக் கவிக்கண்ணால் பார்த்து, அதன் சரியான இடம் எங்கே என்று கண்டுகொண்டு அமைத் துத் தம் அசாதாரணத் திறமையோடு கம்பர் பாடியி ருக்கிறார்.*

*இதை இந்த இடத்தில் நான் எடுத்துச் சொல்வது குற்றமாகாது.*

''சுற்றத்தார் தேவரொடும் தொழநின்ற
கோசலையைத் தொழுது நோக்கி
வெற்றித்தார்க் குரிசில்! இவர் யாரென்று
குகன் வினவ, வேந்தர் வைகும்
முற்றத்தான் முதல்தேவி மூன்றுலகும்
ஈன்றானை முன்ஈன் றானைப்
பெற்றத்தால் பெறும் செல்வம் யான்பிறத்த
லால்துறந்த பெரியாள்'' என்றான்.

*"ராமன் என்கிற செல்வத்தைப் பெற்ற கோசலை, பரதன் என்ற ஒரு மகன் நான் பிறந்ததால், அந்தச் செல்வத்தை இழந்தாள். அவளே இவள்" என்று கூறினான் பரதன்.*

''அறந்தானே என்கின்ற அயல்நின்றாள்
தனைநோக்கி 'ஐய அன்பின்
நிறைந்தாளை உரை' யென்ன ''நெறிதிறம்பாத்
தன்மெய்யை நிற்ப தாக்கி
இறந்தான்தன் இளந்தேவி யாவர்க்கும்
தொழுகுலமாம் இராமன் பின்பு
பிறந்தானும் உளன்என்னப் பிரியாதான்
தனைப்பயந்த பெரியாள்'' என்றான்.

*"நான் அடையாத பாக்கியத்தை லக்ஷ்மணன் பெற்றான். அந்த உண்மைத் தம்பியின் தாய், இவள்."*

''படர்எலாம் படைத்தாளை பழிவளர்க்கும்
செவிலியைத்தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலம் கிடந்தேற்கும்
உயிர்ப்பாரம் குறைந்து தேய
உடரெலாம் உயிரிலா எனத்தோன்றும்
உலகத்தே ஒருத்தி அன்றோ
இடரிலா முகத்தாளை அறிந்திலையேல்
இந்நின்றாள் என்னை ஈன்றாள்!''

*வால்மீகி ராமாயணத்தில் இருப்பது போலவே, கம்பருடைய சித்திரத்திலும் பரதன் கைகேயியைக் கடுமையான மொழிகளைச் சொல்லித்தான் அறிமுகப்படுத்துகிறான்.*

* * *

பரதனும் பெரும் பரிவாரமும் பரத்வாஜர் சொன்ன வழியைப் பிடித்துச் சென்றார்கள். சித்திரகூட மலையும் தெரிந்தது. ஓர் இடத்தில் இலேசாகப் புகை கிளம்புவதையும் கண்டார்கள். அதுவே சக்கரவர்த்தித் திருமகன் ஆசிரமம் என்று ஊகித்துக் கொண்டார்கள். உடனே பரிவாரத்தில் பெரிய மகிழ்ச்சி கோஷம் கிளம்பிற்று. அனைவரையும் அங்கேயே நிறுத்திவிட்டுச் சுமந்திரன், வசிஷ்டர், பரதன் மூவர் மட்டுமே புகை தெரிந்த இடம் நோக்கிச் சென்றார்கள்.

## 39. இளையவனுடைய ஆத்திரம்

நடந்துபோன அனர்த்தங்களை எப்படியாவது நல்ல முடிவுக்குக் கொண்டு வரவேண்டுமென்று பரதன் இவ்வாறு ஊரைவிட்டு வனம் நோக்கி சென்று கொண்டிருக்க, சித்திர கூடத்தில் இருந்த ராம லக்ஷ்மணர்களும் சீதையும் பர்ண சாலையில் சந்தோஷமாகவே காலங்கழித்து வந்தார்கள்.

'லக்ஷ்மணனும் சீதையும் பக்கத்திலிருக்க எனக்கு என்ன குறை' என்று எண்ணினான் ராமன்.

மலையின் கம்பீரமும், வனத்தின் அழகும், பக்ஷிகளின் மதுரமான பாட்டும் விளையாட்டும் அவன் உள்ளத்தைக் கவர்ந்தன. ஊரையும், உறவினரையும் விட்டுப் பிரிந்த துக்கத்தை ஒருவாறு மறந்தான்.

"சீதா, அதோ பறவைகள் விளையாடுவதைப் பார்! மலைப் பாறைகளைப் பார்! அவற்றில் தாதுக்கள் நீலமும், மஞ்சளும், சிவப்புமாக எப்படி மின்னுகின்றன! வனத்தில் செடிகளையும் கொடிகளையும் பார்! புஷ்பங்களைப் பார்! நாம் என்னவோ எண்ணினோம். இந்த வனவாசம் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறது! என்னைப் போன்ற பாக்கியவான் யார்? இந்த மகிழ்ச்சி ஒரு பக்கம், தந்தையின் ஆணையை நிறைவேற்றும் பெரிய லாபம் ஒரு பக்கம். தந்தைக்குச் செலுத்த வேண்டிய கடமையைச் செய்து தீர்ப்பதோடு, தம்பி

பரதனுக்கு ராஜ்யத்தைக் கொடுக்கும் மகிழ்ச்சியையும் அடைந்தேன்."

இவ்வாறு சொல்லிக்கொண்டு ராமன் தன் துக்கத்தை அகற்றியும், சீதைக்கு உற்சாகம் உண்டாக்கியும், பிரதிக் ஞையை நிறைவேற்றியும் வந்தான்.

மலையிலிருந்து சில சமயம் சீதையுடன் மந்தாகினி ஆற்றுக்குப் போவான். அங்கே இருவரும் ஸ்நானம் செய் வார்கள். நதியின் அழகை அனுபவிப்பார்கள். "மணல் குன்று களைப் பார்! அன்னங்களும் பறவைகளும் தாமரைக் கொடி களிடையில் விளையாடுவதைப் பார். ஆற்றின் அழகு உன் அழகைப் போலவே இருக்கிறது, காதலி.!" என்பான் ராமன்.

"இந்த நதிக்கரை எவ்வளவு மனோகரமாக இருக்கிறது! மிருகங்கள் இறங்கி, நீர் குடிக்கும் துறையில் ஜலம் சிவந்து எவ்வளவு அழகாக இருக்கிறது! இதற்குச் சமானம் குபேரனு டைய சௌகந்திக ஸரஸும் இல்லை. அதோ பார்! ரிஷிகள் நீராடுகிறார்கள். சிலர் சூரியனை உபாசித்து நிற்கிறார்கள். புஷ்பங்கள் மரக்கிளைகளினின்றும் நீரில் விழுவதைப் பார். அதோ முத்துக்களை வாரி எறிவதுபோல் மந்தாகினி துள்ளிக் குதித்து விளையாடி வரும் அழகைப் பார். பட்டணவாசத் தைவிட, இந்த வனவாசம் எவ்வளவோ இன்பமாக இருக் கிறது. இது நம்முடைய பாக்கியம். ரிஷிகளும் சித்தர்களும் இங்கே நதியில் தினமும் நீராடுகிறார்கள். இந்தக் காட்சி நமக்கு நகரத்தில் கிடைக்குமா? இந்த மலையே நம்முடைய அயோத்தி. கூட்டம் கூட்டமாகப் பறக்கும் இந்தப் பக்ஷிகளும், வன விலங்குகளுமே நம் பிரஜைகள். இந்த மந்தாகினியே நம் முடைய ஸரயூ நதி. லக்ஷ்மணனும் நீயும் என்னுடன் இருக்கும் போது வேறு என்ன வேண்டும்? ஆற்றில் மிருகங்கள் ஒன்றை யொன்று பார்த்து, பயமின்றி நீர் குடித்து வருவதைப் பார்த்தால் எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறது! இந்த நதியில் நீராடி இங்கே கிழங்கும், பழங்களும் புசித்து, உன்னுடன் காடும் மலையும் சுற்றி மகிழ்ச்சியடையும்போது, நான்

'அயோத்தியையாவது ராஜ பதவியையாவது ஏன் நினைக்க வேண்டும்?"

இவ்வாறு சக்கரவர்த்தித் திருமகன் ஜானகியுடனும், தம்பி லக்ஷ்மணனுடனும் ஆற்றங்கரையிலும் மலையிலும் வனத்திலும் சஞ்சரித்துக் கொண்டு சந்தோஷமாகக் காலங்கழித்து வந்தான்.

* * *

மலைச் சாரலில் ஓர் இடத்தில் நிம்மதியாக உட்கார்ந் திருந்தார்கள்.

திடீர் என்று தூரத்தில் தூசி கிளம்பி ஆகாயமளாவி நின்றது. அத்துடன் பெரிய ஜன சமுத்திரத்தின் கம்பீரப் பேரொலியும் கேட்டது. பரதனுடைய சேனை காட்டில் பிரவேசித்ததன் காரணமாகப் பிராணிகள் பயந்து, இங்கு மங்கும் கூட்டமாக அலைந்து கொண்டிருந்ததையும் ராமன் பார்த்தான்.

லக்ஷ்மணனைப் பார்த்துச் சொன்னான் ராமன்.

"தம்பி ஏதோ பெரிய கோஷம் கேட்கிறது. யானை களும், காட்டெருமைகளும், மான்களும் நாலாபக்கமும் ஓடு கின்றன. என்ன விஷயம் என்று நன்றாகப் பார்! யாராவது அரசகுலத்தார் வேட்டையாட வந்திருக்கிறார்களா? அல்லது சிங்கம், புலி இவற்றின் காரியமா என்று பார்த்துச் சொல்வாய்?" என்றான்.

உடனே லக்ஷ்மணன் மிக உயர்ந்த ஓர் ஆச்சா மரத்தின் மேல் ஏறினான். நான்கு பக்கமும் நன்றாகப் பார்த்தான். வட திசையில் பெரியதொரு சதுரங்க சேனை வந்து கொண்டிருந் ததைக் கண்டான். மரத்தின் மேலிருந்தே ராமனுக்கு எச்சரிக் கை செய்தான்.

"அண்ணா, ஒரு பெருஞ்சேனை துவஜங்களைப் பறக்க விட்டுக் கொண்டு—தேர்ப்படை, யானைப்படை, குதிரைப் படை, காலாட்படை எல்லாமாக வந்து கொண்டிருக்கின்றது. அபாயம்! உடனே நெருப்பை அணைத்துவிட்டு, சீதையை அழைத்துச் சென்று மலைக்குகையில் பத்திரமாக இருக்கச் செய்துவிட்டு, கவசம் பூண்டு, வில்லும் அம்பும் எடுத்து யுத்தத்துக்கு ஆயத்தமாவோம்!" என்றான்.

"அப்பனே, நன்றாகப் பார்த்துச் சொல். இந்தப் படை எந்த அரசனுடையது என்று தேர்க்கொடியைக் கவனித்துப் பார்!" என்றான் ராமன்.

அவ்வாறே பார்த்தான் லக்ஷ்மணன். பார்த்துவிட்டு ஒரே கோபாவேசமாகிவிட்டான்.

"அண்ணா ராஜ்யத்தை, பெற்றதோடு நிற்காமல், நம்மை எதிர்த்துக் கொல்லவும் வருகிறான் பரதன். தேரில் திருவாத்திக் கொடி காற்றில் ஆடுவது நன்றாகக் காணப் படுகிறது. இன்று கைகேயி மகன் என் கையில் அகப்பட்டு விட்டான். அவனை விடப்போவதில்லை. அறநெறியிலிருந்து விலகிய இவனைக் கொல்வதில் என்ன பாவம்? இந்தச் சேனையை இங்கிருந்து எதிர்க்கலாமா? அல்லது மலைமேல் ஏறி நின்று எதிர்ப்போமா? நமக்கு இவன் செய்த கொடு மைக்கு இன்று பழிவாங்கி விடலாம். நம்மைக் கொல்ல வரும் பகைவனைக் கொல்வதில் என்ன பாவம்? முதலில் இவனல் லவோ அதருமத்தில் இறங்குகிறான்? அவனை எதிர்த்துக் கொல்வது தருமமேயாகும். இவனை வதம் செய்து விட்டுத் துராசையில் வீழ்ந்த இவன் தாயின் எண்ணத்தை இன்று முற்றிலும் அழித்துத் தீர்ப்போம். இந்த வனத்தில் ரத்த வெள்ளம் ஓடச் செய்யப் போகிறேன். யானை ஒடித்த பெரிய மரம் போல் இன்று பரதன் வீழ்வான். இந்தச் சேனையை நிர்மூலமாக்குவோம். இந்தக் காட்டிலுள்ள பிணம் தின்னும் மிருகங்களுக்கு நிறைய உணவு கொடுப்போம்."

இவ்வாறு லக்ஷ்மணன் கோபத்தில் தன்னையும் மறந்து பேசினான்.

## 40. ராம பரத சந்திப்பு

லக்ஷ்மணன் சொன்னதைக் கேட்ட ராமன் மெதுவாகச் சொன்னான்.

''இலக்குவ! உலகம்ஓர் ஏழும் ஏழும்நீ
கலக்குவை என்பது கருதினால் அது
விலக்குவ(து) அரிது அது விளம்பல் வேண்டுமோ
புலக்குரித்(து) ஒருபொருள் புகலக் கேட்டியால்''

இது கம்பர் பாட்டு. வால்மீகியும் இப்படியே சொல்லு வார்.

" நீ வெற்றி வீரன். பரதனுடைய பெருஞ்சேனையை நிர்மூலமாக்கித் தீர்ப்பாய். அதில் சந்தேகமில்லை. ஆனால் ஒரு விஷயம் யோசிக்க வேண்டியது இருக்கிறது. அதைச் சொல்லுகிறேன் கேள்!" என்று ஆரம்பித்து, கோபத்தில் லக்ஷ் மணன் சில விஷயங்களைச் சரியாகக் காணவில்லை என்பதை விளக்கினான்:

"லக்ஷ்மணா, பரதனே நேரில் வருகிறான் என்கிறாய். அப்படியானால் நம்முடைய வில்லுக்கும் அம்புக்கும் கத்திக் கும் என்ன வேலை? தந்தையின் ஆணையை அழித்தும், பரத னைக் கொன்றும் ராஜ்யம் சம்பாதித்து நாம் என்ன பிர யோஜனத்தைப் பெறுவோம்? பந்து மித்திரர்களை அழித்து விட்டுச் சம்பாதிக்கும் சொத்தானது விஷம் கலந்த பணி யாரத்தைப் போலாகும். என்னத்துக்காக ராஜ்யம் அல்லது தனம் சம்பாதிக்க விரும்புகிறோம்? யாருக்குச் சுகமும் சந் தோஷமும் தந்து அதனால் நாமும் சந்தோஷம் அடையலாம் என்று சம்பாதிக்கிறோமோ அவர்களை அழித்துவிட்டு. அந்தப் பொருளை நாம் அடைவதில் என்ன பயன்? அதர்ம

வழியில் சம்பாதிக்கும் ராஜ்யம் நமக்கு வேண்டாம். லக்ஷ்மணா, நீயும் பரதனும் சத்துருக்னனும் என்னுடன் அனுபவிக்க முடியாத சுகம் எனக்கு வேண்டாம். இது நிச்சயம்."

மேலும் சொன்னான்: "நான் சொன்னதைக் கவனித்துக் கேள். பரதன் இப்போது இங்கே ஏன் வருகிறான் என்பதை நான் அறிவேன். அவன் எள்ளளவும் தருமம் தவறாதவன். நம்மில் யாருக்காவது அவன் எப்போதாவது தீமை செய்த துண்டா? ராஜ்யத்தை எனக்குக் கொடுத்து விடுவதற்காகவே அவன் வருகிறான். கைகேயியைக் கோபித்துத் தந்தைக்கும் ஏதோ சொல்லிச் சமாதானப்படுத்திவிட்டு என்னைத் திருப்பி அழைத்துப் போவதற்காக வந்திருக்கிறான் என்பது நிச்சயம். பரதனை நான் அறிவேன். நீ அவனைப் பற்றிக் கோபாவேசமாகப் பேசியதெல்லாம் அதருமம். அப்படிப் பேசலாகாது; ராஜ்யத்தைச் சம்பாதிக்கவா ஆசைப்படுகிறாய்? அப்படியானால் சொல். பரதன் வந்ததும் அவனுக்குச் சொல்கிறேன், 'லக்ஷ்மணனுக்கு ராஜ்யம் வேண்டுமாம். அவனுக்குக் கொடுத்து விடு' என்று. நான் இப்படிச் சொன்ன மாத்திரத்தில் பார், 'எடுத்துக் கொள்' என்று உனக்கு உடனே தந்துவிடுவான், சந்தேகமில்லை" என்று சொல்லிச் சிரித்தான் ராமன்.

லக்ஷ்மணன் வெட்கத்தால் உடல் குறுகிப் போனான்.

"ஒருவேளை நம்முடைய தந்தை சக்கரவர்த்தியே நம்மைப் பார்க்க வந்திருக்கலாம்" என்றான் லக்ஷ்மணன்.

இத்தனை சேனையும் ஆர்ப்பாட்டமும் யுத்தத்துக்குத்தான் இருக்கும் என்று முதலில் எண்ணினான். ராமன் சொன்னதைக் கேட்டதும், அது அசம்பாவிதம் என்கிற தீர்மானத்துக்கு உடனே வந்தான். மற்று என்ன காரணம் இருக்கக் கூடும் என்று யோசித்து, ஒருவேளை தசரதனே வந்திருக்கலாம். அவனுடன் இந்தச் சேனையும் பெரும் பரிவாரமும் வருவது சகஜமே என்று சமாதானம் பண்ணிக் கொண்டான்.

நான் பரதனைப் பற்றிப் பேசிய பேச்சுக்கள் தகாதவை என்று உணர்ந்து, வெட்கப்பட்டு இம்மாதிரித் தடுமாற்றமாகப் பேசினானோ என்று உரையாசிரியர்கள் அபிப்ராயப்படுகிறார்கள்.

லக்ஷ்மணன் வெட்கப்பட்டுப் போனான் என்பதையறிந்த ராமன், "அப்படியுமிருக்கலாம்! வனவாசத்தில் கஷ்டப்படுகிறோமென்று எண்ணிச் சக்கரவர்த்தி நம்மையும், முக்கியமாகச் சீதையையும் ஊருக்கு அழைத்துப்போக வந்திருக்கலாம். ஆனால் மன்னனுடைய வெண்கொற்றக் குடையைக் காணவில்லையே! தந்தை வந்திருந்தால் அது இருக்குமே! எப்படியாயினும் சரி, நீ சாந்தமடைவாய்" என்றான்.

லக்ஷ்மணன் ராமச்சந்திரன் உட்கார்ந்திருந்த இடத்திற்கு அருகே போய்க் கைகூப்பிய வண்ணம் நின்றான்.

சேனையைத் தொலைவில் நிறுத்திவிட்டு, புகை கிளம்பிய இடத்தைச் சரியாகப் பார்த்துவரப் பரதன் சில ஆட்களை அனுப்பினான். சற்று நேரம் கழித்து, அவர்கள் சமாசாரம் கொண்டு வந்தார்கள். அதுவே பரத்வாஜர் குறிப்பிட்ட இடம். அங்கே காணப்படும் பர்ணசாலை ராமனுடைய பர்ணசாலை என்பது நிச்சயம் என்று தெரிந்தவுடன் பரதன் புறப்பட்டான்.

தன் மேல் வந்த பழியை நினைத்துப் பயந்து, இன்னது செய்யவேண்டியது, இப்படிச் சொல்லவேண்டியது என்று யோசித்துக்கொண்டே போனவன், ராமன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்ததும் எல்லாம் மறந்துவிட்டான். புல்தரையில் உட்கார்ந்திருந்த ராமனைக் கண்டதும், ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அண்ணன் இருந்த இடம் நோக்கி ஓடினான்.

துக்கம் மேலிட்டுக் கண்களில் நீர் பெருக, ஒன்றுமே பேச முடியாமல் "அண்ணா", என்று கதறிக்கொண்டு ராமன் காலடியில் விழுந்தான். 'அண்ணா' என்ற வார்த்தைக்கு மேல்

பேச முடியாமல் தொண்டை அடைத்துக் கொள்ள விம்மி அழுதான்.

இதற்குள் சுமந்திரனும் குகனும் வந்து சேர்ந்தார்கள்.

ஜடையும் மரவுரியும் தரித்துத் தன்முன் கைகூப்பிய வண்ணம் தரையில் விழுந்து கிடந்த பரதனைப் பார்த்தான் ராமன். துக்கத்தாலும் உபவாசத்தாலும் தேகம் மெலிந்து, நிறம் மாறிப்போய்க் கிடந்த பரதனை வாரியணைத்து உச்சி மோந்து, மடியின்மேல் உட்கார வைத்து, "குழந்தாய்! தந்தை சக்கரவர்த்தியைத் தனியாக விட்டுவிட்டு நீ இப்படி வெகுதூரம் வனத்துக்கு வந்துவிடலாமா? ஏன் இந்த மாதிரி இளைத்துப் போயிருக்கிறாய்?" என்று ராமன் கேட்டான்.

பரதன் பேச்சிழந்து கிடந்தான். பரதனுடைய நிலையைப் பார்த்து ராமன் மெதுவாக, ராஜ்யத்தின் யோக க்ஷேமத்தைப் பற்றி வழக்கப்படி அரச குலத்தவர்கள் சந்திக்கும் சமயங்களில் கேட்பது போல் கேட்டான். கொஞ்ச நேரம் கழித்துச் சமாளித்துக் கொண்டு பரதன் பேசலானான்.

"ராஜ தர்மத்துக்கும் எனக்கும் என்ன சம்பந்தமிருக்கிறது அண்ணா? சிம்மாசனம் ஏறி, ராஜ்ய பரிபாலனம் செய்ய வேண்டியவன் நீ இருக்க, நான் எவ்வாறு அரசனாவேன்? அல்லது அரசனுக்குரிய தர்மத்தை அனுசரிப்பேன்? எனக்குரிய தருமம் உனக்கு அடிமை செய்வது. அது எனக்குப் பிராப்தமில்லை. மூத்தவன் ராஜ்யப் பொறுப்பைத் தாங்கவேண்டியவன். இது ராஜகுலப் பொது தருமம். நம்முடைய குலத்திலும் இதுவே முறை. அயோத்திக்கு என்னுடன் வந்து பட்டம் சூட்டிக்கொண்டு, குலத்துக்கும் ஜனங்களுக்கும் மங்களம் அருள்வாய். மகாராஜாவான தந்தை அவர் செய்யவேண்டிய வேள்விகளையெல்லாம் செய்து முடித்து, புகழ் பெற்ற மகாவீரர் சுவர்க்கலோகம் புகுந்தார். நான் கேகய தேசத்திலிருக்கும்போதே நீங்கள் அயோத்தி விட்டு வனம் சென்றுவிட்டீர்கள். அந்தப் பிரிவின் துக்கத்தை

தாங்கமாட்டாமல் உயிர் நீத்தார். வருந்தாதே; எழுந்து நம் தந்தைக்குச் செய்ய வேண்டிய கிரியைக் கடனைத் தீர்ப்பாயாக! நானும் சத்ருக்னனும் செய்தாயிற்று. அண்ணா! தந்தைக்கு மிகப் பிரியமாக வளர்ந்தாய். உன் ஞாபகமாகவே தந்தை உயிர் நீத்தார். நீ விடவேண்டிய எள்ளும் நீருமே அவருக்குச் சாந்தி தரும்!" என்று கம்பீரமாகச் சொன்னான்.

கௌசல்யா தேவி, குகன், பரத்வாஜர் இவர்களிடம் பரதன் சொல்ல நேரிட்ட சமாதானங்கள்-அதாவது நடந்த அனர்த்தங்களில் தனக்கு ஒரு சம்பந்தமுமில்லை என்கிற சமாதானங்கள் - ராமனிடத்தில் சொல்ல வேண்டிய அவசியமே இருக்கவில்லை. துக்கத்தால் பீடிக்கப்பட்டு, தேகம் மெலிந்து, முகம் வாடி நின்ற அந்தப் பரதனைப் பார்த்ததே போதுமல்லவா? சமாதானங்களுக்கு அவசியமே இருக்கவில்லை. ராமனை அயோத்திக்கு அழைத்துப்போகிற விஷயம் ஒன்றே பரதனுடைய காரியமாக நின்றது. அதையே பேசினான். தன்னைப்பற்றிப் பேசவில்லை.

தந்தை இறந்தார் என்ற செய்தியைக் கேட்டதும், ராமன் கோடரியால் வெட்டப்பட்ட மரம்போல் கீழே விழுந்தான்.

நந்தா விளக்கனைய நாயகனே நானிலத்தோர்
தந்தாய் தனியறத்தின் தாயே, தயாநிலையே!
எந்தாய் இகல்வேந்தர் ஏறே இறந்தனையே
அந்தோ இனிவாய்மை(க்)கு ஆருளரே மற்றென்றான்.

ராஜகுமாரர்களும் சீதையும் சுமந்திரனுடன் ஆற்றுக்குச் சென்றார்கள். அங்கே ஸ்நானம் செய்து, கை நிறைய ஜலத்தைத் தியானித்து ஆற்றில் விட்டார்கள். பிறகு வழக்கப்படி செய்யவேண்டிய சடங்குகளைச் செய்துவிட்டுப் பர்ண சாலைக்கு வந்து, ராஜகுமாரர்கள் ஒருவர் கையை ஒருவர் பிடித்து நின்று தந்தையை நினைத்துப் பெருங்குரலில் அழுது துக்கம் தீர்த்துக் கொண்டார்கள்.

இவ்விடத்தில் ஒரு விஷயம் சொல்ல வேண்டும். பரதன் வந்து ராமனைப் பார்த்த கட்டத்தில், ராமன் பரதனுக்கு உபதேசித்ததாக ஒரு நீண்ட ராஜ தரும உபதேசம் வால்மீகி எழுதியிருக்கிறார். நம்முடைய இதிகாச புராணங்களில் இவ்வாறு ராஜநீதியும், தருமோபதேசமும் அடிக்கடி வரும். தற்காலத்து நூல்களில் ஆசிரியர்கள் முக்கியமாக கருதி வருவது, நிகழ்ச்சி வேகமும் நாடகத்துக்குரிய வியப்பு, அதிர்ச்சி முதலிய லக்ஷணங்களும். பழைய நூல்களில் இந்த ரஸங்கள் வேண்டிய அளவு இருந்தாலும், கூடவே மக்களின் சீலத்தை வளர்க்கும் உபதேசங்களும் மத்தியில் தாராளமாக சேர்க்கப்பட்டிருக்கும்.

மேலும் இந்தக் கட்டத்தில், வால்மீகி ராமாயண அத்தியாயங்கள் கிரமம் தவறி முன்னும் பின்னுமாக அமைந்துவிட்டிருக்கின்றனவென்று பழைய உரை ஆசிரியர்களே கண்டிருக்கிறார்கள். கம்பர் இதையெல்லாம் கவனித்துத் தற்கால ரீதியாகவே ஒழுங்காகப் பாடிவிட்டிருக்கிறார். துளசிதாசருடைய ராமாயணமோ இந்த ராம பரத சந்திப்புக் கட்டத்தில் ஒரே பக்தி சாகரமாக அலைகள் மோதி, பருவகாலக் கடலைப்போல் பொங்குகிறது. அதில் எந்தச் சிக்கலுக்கும் இடமே இல்லை.

## 41. பரதன் திரும்பினான்

நான்கு அரசகுமாரர்களும், மூன்று பட்ட மகிஷிகளும் ஓர் இடத்தில் மறுபடியும் கூடிவிட்டார்கள் என்ற செய்தி அறிந்த உடனே, தூரத்தில் மரியாதையாக நின்று கொண்டிருந்த படையினரும் ஜனங்களும் உடனே அந்தச் சந்தோஷக் காட்சியைப் பார்க்க ஓடி வந்துவிட்டார்கள். ஒரே மகிழ்ச்சி ஆரவாரம். இனி ராமன் அயோத்திக்குத் திரும்பிவிடுவான் என்றே நிச்சயித்துக்கொண்டு குதூகலப்பட்டார்கள். ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்துகொண்டு மங்களம் கொண்டாடினார்கள்.

மகாராஜாவும் தந்தையுமான தசரதன் இவ்வுலகம் துறந்துவிட்டானே என்று, சீதையும் ராமலக்ஷ்மணர்களும் துக்கக்கடலில் மூழ்கியிருந்தார்கள். ஆனால் ஜனக்கூட்டத்தில் ராம தரிசனத்தினால் பெருத்த மகிழ்ச்சி பொங்கிற்று.

* * *

வசிஷ்ட முனிவர் தேவிமார்களைப் பர்ணசாலைக்கு அழைத்துச் சென்றார். வழியில் மந்தாகினி நதியைப் பார்த்தார்கள். "இந்தத் துறையில் இறங்கித்தான் ராஜகுமாரர்கள் தங்களுக்கு வேண்டிய தண்ணீர் எடுத்துப் போவார்கள்" என்று ஓர் இடத்தைக் காட்டியதும், கௌசல்யா தேவியும் சுமத்திரையும் 'ஐயோ' என்று அழுதார்கள்.

"சுமத்திரையே, என் மகனுக்காக இந்தத் துறையில் தினமும் உன் மகன் ஆற்றில் இறங்கிச் சுத்தமான ஜலம் ஆசிரமத்துக்கு எடுத்துப்போய் வைக்கிறான் பார்த்தாயா? அண்ணனுக்காக எந்த வேலையையும் சந்தோஷமாகச் செய்வான் உன் மகன். குடத்தில் ஜலத்தை நிரப்பித் தோளின் மேல் வைத்து எடுத்துப்போவது அவனுக்குக் கஷ்டமாகத் தோன்றாது" என்றாள்.

ஆற்றங்கரையில் ராம லக்ஷ்மணர்கள் தந்தைக்காக ஜலக் கிரியை செய்த இடத்தைப் பார்த்தார்கள். தர்ப்பைப் புல்நுனி தெற்கு நோக்கி வைத்திருப்பதையும் கண்டார்கள். பித்ருக்களுக்காக அங்கே எள்ளும் பிண்ணாக்கும் வைத்திருப்பதையும் கண்டார்கள்.

"மகாராஜாவின் பசி தீர்ப்பதற்காகப் பிண்ணாக்கு வைத்திருப்பதைப் பார்த்தாயா? ஆகா, இறந்தபின், உலகம் ஆண்ட ராஜாக்களின் போஜனம் இதுவே. என் இதயம் வெடிக்கவில்லையே!" என்று சுமித்திரையை அணைத்துக் கொண்டு அழுதாள் கௌசல்யாதேவி.

பர்ணசாலைக்குப் போய் சேர்ந்தார்கள். அங்கே முகத்தில் தெய்வ ஒளி வீசும் ராஜகுமாரர்கள் ஓலைக் குடிசையில்

உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள். அந்தக் காட்சியைப் பார்த்து நிற்கச் சக்தியிழந்து கீழே விழுந்தார்கள்.

இரு ராஜகுமாரர்களும் எழுந்து, தாய்மார்களைத் தூக்கி எடுத்தார்கள். தன்னுடைய தாமரைக் கைகளால் கோசலை ராமனைத் தடவிக் கொடுத்து, இது துக்கமோ, ஆனந்தமோ என்பதை அறியாமல் மயக்கத்தில் மூழ்கினாள். பிறகு சீதையைத் தழுவி, "மகளே, ஜனகனுக்கு மகளாய்ப் பிறந்து, அயோத்தி மன்னனுக்கு மருமகளாக என் வீட்டில் புகுந்த நீ, இந்தக் காட்டில், இந்தக் குடிசையில் வசித்து வருகிறாயா? வாடிய தாமரை மலரே! தூசி படிந்த தங்க விக்கிரகமே! உன்னைப் பார்த்து நான் படும் துக்கத்தை எப்படிச் சொல்வேன்? நெருப்பில் எரியும் விறகுபோல் என் மனம் எரிகிறது, குழந்தாய்!" என்றாள்.

மண்ணின் மேல் நின்ற பிரகஸ்பதியைப்போல் விளங்கும் வசிஷ்டருடைய பாதங்களில் சக்கரவர்த்தித் திருமகன் விழுந்து வணங்கி, அவருக்கு அருகில் அன்புடன் உட்கார்ந்தான். பரதனும் அடக்கமே வடிவமெடுத்து வந்தது போல் ராமச்சந்திரன் எதிரில் உட்கார்ந்தான். பல பெரியோர் களும் சுற்றி உட்கார்ந்திருந்தார்கள். ராமனுடைய மனம் மாறுமா? பரதன் என்ன பேசப்போகிறான் என்றெல்லாம் ஆவலோடு எதிர்பார்த்து காத்திருந்தார்கள்.

"பரதனே! எதற்காக இந்த உடை தரித்துக்கொண்டு வனத்துக்கு வந்தாய், சொல். ராஜ்ய பரிபாலன காரியங்களை விட்டுவிட்டு மான்தோலும் சடையுமாக ஏன் இங்கே வந்து சேர்ந்தாய்? இதை எனக்குச் சரியாகச் சொல் தம்பி" என்றான்.

"அண்ணா!" என்று பரதன் பல தடவை சொல்ல ஆரம்பித்து, மேலே பேச்சு வராமல் திக்கித் திணறினான். பிறகு தைரியம் செய்துகொண்டு மெள்ளப் பேச ஆரம்பித்தான்.

"உன்னைக் காட்டுக்கு அனுப்பிவிட்டு, 'யாரும் செய்யத் துணியாத காரியத்தைச் செய்துவிட்டேனே!' என்று துக்கத்தில் வெந்து, மேலுலகம் போய்விட்டார் தந்தை. என்னைப் பெற்றவளும் தான் விரும்பிய சந்தோஷத்தைப் பெற முடியாமல், மகாபாவம் செய்தவளாகி, சோகத்தில் மூழ்கி நிற்கிறாள். உலகத்தால் பழிக்கப்பட்டு, உயிருடன் நரக வேதனை அடைந்திருக்கிறாள். எங்களை நீ காப்பாற்ற வேண்டும். இன்றே நீ பட்டாபிஷேகத்துக்குச் சம்மதித்து உனக்குரிய ராஜ்யத்தை அடையவேண்டும். இதற்காகவே ராஜ்யத்துப் பொது மக்களும் சேனையும் சுவர்க்கம் எய்திய அரசனுடைய தேவிமார்களும் எல்லோரும் இங்கே வந்து காத்திருக்கிறார்கள். நீ இதை அருளவேண்டும். மறுக்கக் கூடாது. இதுவே அவருடைய துக்கத்தையும் தீர்த்து, குல தருமத்தையும் கெடாமல் காப்பாற்றும். உரிய அரசனில்லாமல் ராஜ்யம் ஒரு விதவையின் நிலையிலிருக்கிறது. அதை அகற்றி மங்களகரமாக்கக் கடவாய்! பூரண சந்திரனைப் போல் இருட்டை அகற்றி, நாட்டை ஜொலிக்கச் செய்வாய். இதோ மந்திரிகள் இருக்கிறார்கள். அவர்களும் நானும் உன் பாதங்களில் விழுந்து வணங்கிக் கேட்டுக்கொள்கிறோம். அண்ணா! இந்தப் பிரார்த்தனையை மறுத்துத் தள்ளிவிடாதே!"

இப்படிச் சொல்லி ராமச்சந்திரனுடைய காலைப் பிடித்துக் கொண்டான். தீரனான பரதன் கண்களில் நீர் ததும்பியது.

பரதனைத் தழுவியெடுத்த ராமன் சொல்கிறான்:

"அப்பனே! நாம் நற்குலத்தில் பிறந்தோம். நல்ல முறையில் வளர்க்கப்பட்டோம். நீயும் நானும் ஒருநாளும் தவறு செய்யமாட்டோம். உன்னிடத்தில் எள்ளளவேனும் நான் குற்றம் காணவில்லை. நீ துக்கப்பட வேண்டாம். பெற்ற தாயைப் பற்றியும் குற்றம் கூற வேண்டாம். நம்முடைய பண்பாட்டுக்கு இது தகாது. நம்மைப் பெற்ற தந்தை நமக்கு

எந்த ஆணையும் இடலாம். அது அவருடைய உரிமை. வனத்துக்கு அனுப்புவதும், ராஜ்யாபிஷேகம் செய்வதும் இரண்டும் அவருடைய உரிமை. தாயையும் தந்தையையும் கௌரவிப்பதும் புதல்வராகிய நம்முடைய கடமை. அவர்கள் இருவரும் எனக்கு இட்ட ஆணையை நான் ஒப்புக் கொள்ளா மலிருக்க முடியுமா? 'வனம் போ' என்று தந்தை சொன்னதை நான் மறுப்பது தகுமா? உனக்கு ராஜ்யப் பொறுப்பைத் தந்தார். எனக்கு வனவாசம் தந்தார். இப்படி நம்மிருவருக்கும் வாழ்க்கையை வகுத்துக் கொடுத்து மரணமடைந்தார். அதை நாம் புறக்கணிக்கலாகாது. நீ ராஜ்ய பரிபாலனம் செய்து அவர் ஆணையை நிறைவேற்றுவதில் ஒரு குற்றமுமில்லை. அது உன் கடமையாகும். நானும் பதினான்கு வருஷங்கள் தண்டகாரண்யத்தில் தந்தையின் அந்திமக் கட்டளையை நிறைவேற்றுவேன். அதுவே தருமம். தேவராஜனுக்குச் சமமாக இருந்த நம்முடைய தந்தை சொன்னதை நாம் பக்தியுடன் செய்து தீர்க்கவேண்டும். தகப்பனார் ஆணையை நிறைவேற்ற இயலாமல், அதற்குப் பதில் உலகமெல்லாம் எனக்குக் கிடைப்பதானாலும் அதைப் பெற்றுக் கொண்டு நான் திருப்தியடைய முடியாது" என்றான் ராமன்.

இதைக்கேட்ட பிறகும் பரதன் மீண்டும் மீண்டும் ராமனைக் கேட்டுக் கொண்டான். தன்னைக் குறித்து வந்த அனர்த்தம் திருத்தப்படாமல் போனால், தன்னுடைய பாவம் தீராமல் நின்றுபோகும் என்று பரதன் வருத்தப்படுகிறான் என்பதைக் கண்டு, ராமன்:

"நீ உன்னை நிந்தித்துக் கொள்ள வேண்டாம். உன் பொருட்டு இது நடந்து விட்டது என்று எண்ணவேண்டாம். அனைத்துக்கும் விதியே காரணம். துக்கத்தை விடு. அயோத்திக்குத் திரும்பிப்போய் ராஜ்ய பரிபாலனம் செய். நம்முடைய தந்தை சொன்னபடி நாம் இருவரும் நடக்க வேண்டும். அவருடைய கட்டளையை நாம் நிராகரித்தல்

தகாது. உன்னிடத்தில் ஒப்புவித்த ராஜ்யபாரத்தை நீ தாங்கியே தீர வேண்டும்" என்றான்.

பரதனுடன் வந்த அயோத்தி நகரத்து மக்களுக்குச் சக்கரவர்த்தித் திருமகனுடைய உறுதியைப் பார்த்து ஒரு பக்கம் மகிழ்ச்சியும், ஒரு பக்கம் துக்கமும் உண்டாயிற்று. பரதனுடைய அன்பையும் பக்தியையும் களங்கமற்ற உள்ளத்தையும் பார்த்துப் பார்த்து 'இத்தகைய ராஜ குமாரர்களைப் பெற்றோமே நாம்' என்று மகிழ்ந்தார்கள்.

* * *

"தந்தையின் சொல்லை நான் புறக்கணிக்க முடியாது. வீணாக முயற்சி செய்யாதே! உனக்கு உதவியாகச் சிறந்த தம்பி சத்துருக்கனன் இருக்கிறான். எனக்கு இங்கே ஒரு தம்பியிருக்கிறான். லஷ்மணன் இருக்க எனக்கு என்ன குறை? நான்கு புத்திரர்களாகிய நாம், நம் தந்தையின் ஆணையைச் சரிவர நிறைவேற்றுவோம்" என்று ராமன் முடிவாகப் பரதனுக்குச் சொன்னான்.

பரதனுடன் வந்த புரோகிதக் கூட்டத்தில் ஒருவராயிருந்த மகாவித்வான் ஜாபாலர் இந்தச் சமயத்தில் நடுவில் புகுந்து, ராமச்சந்திரனுக்கு நாஸ்திகம் உபதேசித்தார். "தந்தையின் ஆணை என்று திரும்பத்திரும்ப ஏதோ சொல்லுகிறாய். தசரதன் என்பது ஓர் உடல். அது பஞ்சத்துவம் அடைந்துவிட்டது. ஐம்பெரும் பூதங்களோடு கலந்து போய் விட்டது. முடிந்துபோன அந்த உருவத்துக்கும் உனக்கும் இப்போது ஏதோ சம்பந்தம் இருப்பதுபோல் பேசுகிறாய். இது அறியாமை. கண்ணெதிரிலுள்ள சுகங்களை விட்டு விட்டுத் தருமம் என்றும், பரலோகம் என்றும் மூடர்களுடைய பேச்சை நீயும் பேசுகிறாய். துயரத்தில் மூழ்கிக் கூந்தலை வாரி எடுத்துக் கட்டாமலிருக்கும் ஒரு ஸ்திரீயைப்போல, அயோத்தி நகரம் துக்கத்தில் கிடக்கிறது. உனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறது. போய்ப் பட்டாபிஷேகம்

செய்துகொண்டு சுகங்களை அனுபவித்துச் சந்தோஷமாய் இருப்பாய். பரதன் சொல்வதைக் கேள். தந்தையின் கட்டளை என்று சொல்லிக் கொண்டு செய்ய வேண்டியதை செய்யாமலிருக்கிறாய்" என்று கூறினார்.

ராமனுக்கு ஜாபாலி சொன்னது மிகுந்த அதிருப்தியை உண்டாக்கிற்று. "சத்தியத்தை நீர் பொருளாக மதிக்கவில்லை போலும், நீர் சொல்வது சரியாக இல்லை. நாஸ்திகம் பேசுகிறீர். சத்தியத்தைவிட மேலான ஒரு பொருள் உலகத்தில் இல்லை" என்றான் ராமன்.

வசிஷ்டர் அப்போது சமாதானப்படுத்தினார். "ராமா, ஜாபாலி நாஸ்திகரல்ல. உன்னை எப்படியாவது அயோத்திக்குத் திரும்பிப்போகச் செய்யவேண்டும் என்பதும், பரதனுடைய துக்கத்தை அகற்றவேண்டும் என்பதும் அவருடைய கருத்து. உனக்குரிய ராஜ்யத்தை நீ பெற்றுக் கொண்டு மக்களைப் பரிபாலிக்க வேண்டும் என்கிற பெரு நோக்குடன் அவர் அவ்வாறு பேசினார். அவர்மேல் கோபிக்கவேண்டாம். ராஜ்ய பாரத்தை ஏற்றுக்கொள்வது உன் குல தருமம். அதைப்பற்றிய சந்தேகம் இல்லை. அது ஒரு புறமிருக்க, மற்றொரு புறம் தந்தையின் ஆணை என்கிற பெரிய விஷயம் இருக்கிறது. இதைப் பெரிதாக நீ கருதுவதும் சரியே. ஆனால், பரிதாப நிலையிலுள்ள தம்பி பரதன் பழிக்கு அஞ்சி உன்னைத் தஞ்சமடைந்திருக்கிறான். அதை எப்படி நீ மறுக்கலாம்? உன் பிராணனைப் போல் அவனிடம் நீ வைத்துள்ள அன்பு எங்கள் அனைவருக்கும் தெரியும். அண்டியவர்களைக் கைவிடுவது உன் சுபாவம் அல்ல. பரதனுடைய விண்ணப்பத்தை எப்படி நீ மறுக்கலாம்? தஞ்சமடைந்தவர்களைக் கைவிடுவதில்லை என்பது உன் விரதமல்லவா?"

ராமன் இசைவதாகக் காணப்படவில்லை. அச்சமயம் பரதன் சுமந்திரனைப் பார்த்து, "அண்ணன் என் பேரில் இரக்கம் கொள்ள மறுக்கிறான். சுமந்திரரே, தர்ப்பை

கொண்டுவந்து பரப்புவீர். நான் இங்கே உபவாசம் இருந்து உயிர விடுவேன்" என்றான்.

சுமந்திரன் தயங்கி ராமச்சந்திரனைப் பார்த்தான். பரதன் தானே தர்ப்பைப் புல் எடுத்துப் பரப்பி அதன்மேல் அமர்ந்தான்.

"குழந்தாய், இது தகாது, எழுந்திரு. அயோத்திக்குப் போய் உன் கடமையைச் செய். க்ஷத்திரிய தருமத்துக்கு விரோதமான செயலைச் செய்யாதே!" என்றான் ராமன்.

பரதன் எழுந்து நின்று "அயோத்தி நகரத்து ஜனங்களே! ஏன் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்? ராமச் சந்திரன் உங்களுக்கு வேண்டாமா? ஏன் பேசாமலிருக் கிறீர்கள்?" என்றான்.

ஜனங்கள், "ராமச்சந்திரன் சத்தியம் தவறமாட்டான், பிதா வாக்கியம் ஒன்றையே பிடித்து அசையாமல் நிற்கிறான். அவன் குணம் நமக்குத் தெரியும். அவன் அயோத்திக்கு வர மாட்டான். அவனை வற்புறுத்துவதில் என்ன பயன்?" என்றார்கள்.

"தம்பி, இவர்கள் பேச்சைக் கேள். இவர்கள் நம் இருவருடைய ஹிதத்தையும் விரும்புகிறவர்கள்; தருமபுத்தி கொண்டவர்கள்" என்றான் ராமன்.

பரதன் எழுந்து நின்று, "நான் ஒரு பாவமும் அறியாத வன், மகாராஜாவினுடைய ஆணையை நடத்தியே தீர வேண்டுமென்றால், நான் வனத்தில் ராமனுக்குப் பதிலாக இருப்பேன். எனக்குப் பதிலாக அண்ணன் அயோத்தியில் ராஜ்ய பரிபாலனம் செய்யட்டும்" என்றான்.

ராமன் இதைக்கேட்டுச் சிரித்து, "இந்த 'வினிமய பரிவர்த்தன முறை' இந்த விஷயத்தில் பொருந்துமா? இது கடை வியாபாரம் அல்லவே! ஒருவன் கடமையை மற்றொருவன் ஆபத்துக் காலங்களில் செய்வதுண்டு. செய்யவேண்டிய

விரதத்துக்கு வேண்டிய தேக சக்தியில்லாத காரணத்தினால் செய்யலாம். அண்ணன் இருக்க வேண்டிய நியமத்தை தம்பி எடுத்துக் கொள்ளலாம். ஆனால், எப்போது? அண்ணனுக்கு விரதத்தை நிறைவேற்றும் சக்தியில்லாமலிருந்தால் அப்படிச் செய்யலாம். என் விஷயத்தில் அது பொருந்தாது. வன வாசத்துக்குப் போதிய சக்தி எனக்கு இல்லை என்றும், பரத னுக்கு உண்டு என்றும் நீங்கள் யாராவது சொல்லுவீர்களா?" என்று கேட்டான்.

அப்போது வசிஷ்டர் பரதனைப் பார்த்து, "ராமனு டைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு சக்கரவர்த்தித் திரு மகனுக்காக நீ இராஜ்ய பரிபாலனம் செய். அப்படிச் செய் வதால் பழியுமில்லை. சத்தியமும் காக்கப்படும்" என்றார்.

பரதனைத் தன் மடிமேல் உட்கார வைத்து ராமன், "தம்பி, நான் தந்த ராஜ்யமாகவே எண்ணி நீ அதை ஒப்புக்கொண்டு தந்தை சொற்படி நட" என்று தன் அன்பின் சக்தியெல்லாம் செலுத்திக் கேட்டுக் கொண்டான்.

அந்தச் சமயம் ராமன், பரதன் இருவர் திருமேனிகளும் இரு சூரிய பிம்பங்களைப்போல் ஒளி வீசி விளங்கின.

"அண்ணா, நீயே என் தந்தை, என் தெய்வம், நீ சொல்லுகிறபடியே செய்கிறேன். உன் மிதியடியை எனக்குத் தந்தாயானால், உனக்குப் பதிலாக அதை வைத்துக் கொண்டு, நான் பதினான்கு ஆண்டுகள் முடியும் வரையும், நகரத்துக்கு வெளியிலிருந்து கொண்டு, உனக்காக ராஜ்ய பரிபாலன காரியங்களைச் செய்து, உன் பாதுகைக்கு என் பணியைச் சமர்ப்பிப்பேன். பதினைந்தாவது வருஷம் நீ நகரத்துக்கு வந்து ராஜ்யத்தை ஒப்புக்கொள்வாயாக!" என்று கூறிப் பரதன் முடித்தான்.

"அப்படியே!" என்றான் சக்கரவர்த்தித் திருமகன். தன் கால்களை அன்புடன் பாதுகைமேல் வைத்து எடுத்துப்

பரதனிடம் தந்தான். அவனும் வணங்கிப் பெற்றுக்கொண்டு, தன் தலைமேல் வைத்துக்கொண்டான்.

பரதனும் பரிவாரமும் அயோத்தியை நோக்கிச் சென் றார்கள். வழியில் பரத்துவாஜ முனிவரைக்கண்டு, நடந்த விஷயங்களை அவரிடம் சொன்னார்கள். அவரும் பரதனு டைய குணத்தையும் முயற்சியையும் பாராட்டி, "உன் சீலமும் உன் குணமும் என்றென்றும் விளங்கும். தசரதன் மகன் அல்லவோ நீ? தண்ணீர் எப்படிப் பள்ளத்தை நோக்கி ஓடுகிறதோஅப்படி நெறிதவறாமல் உன் குலத்தின் சீலம் உன்னை அடைந்திருக்கிறது. உன்னைப் பெற்ற தசரதன் பாக்கியவான். அவன் இறக்கவில்லை. உயிருடனே உன் சொரூபத்தில், அமரனாக, வாழ்கிறான்" என்று சொல்லி ஆசீர்வதித்தார்.

அவ்விடமிருந்து குகனுடைய இருப்பிடம் சென்று, கங்கையைத் தாண்டி அயோத்தியை அடைந்தார்கள். பரத னும் பரிவாரமும் நகரத்துக்குள் நுழைந்தார்கள். தந்தையும் தமையனுமில்லாத நகரத்தை நெருங்கி வந்ததும், "சாரதியே, பாழாய்க் கிடக்கிறதே, ஊர்!" என்றான் பரதன்.

அவன் கண்ணுக்கு நகரம் அமாவாசை இருள் சூழ்ந்து துக்கத்தில் ஆழ்ந்து கிடப்பதாகத் தோன்றியது. முன்பு கேகய தேசத்திலிருந்து வேகமாக வந்து, நகரப் பிரவேசம் செய்த பொழுது 'என்ன நடந்ததோ' என்ற திகிலுடன் பிரவேசித் தான். இப்போது எல்லாம் நன்றாகத் தெரிந்த நிலையில் பிரவேசித்தான். ஒவ்வொன்றையும் எண்ணி எண்ணித் துக்கப் பட்டான்.

அரச மாளிகைக்குள் சென்றான். தந்தை இல்லாத சூனி யமான அந்த மாளிகையில், தாய்மார்களை இறக்கி விட்டு விடைபெற்றுக்கொண்டு, சபா மண்டபத்தில் வசிஷ்டர் முத லானவர்களுக்குச் சொன்னான்;

"என் துக்கம் மிகப் பெரியது. அதை நந்திக் கிராமத்திலிருந்து சகித்துக்கொண்டு, நான் ராமனிடம் வாக்குக் கொடுத்தபடி காரியங்களை அங்கிருந்துகொண்டே பார்ப்பேன். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள்" என்றான்.

அவ்வாறே செய்யப்பட்டு, சபை கூட்டி "இந்த ராஜ்யம் ராமனுடையது. தற்காலிகமாக என்னிடம் ஒப்புவித்திருக்கிறான். அண்ணனுக்குப் பதிலாக அவன் மிதியடியை ஆசனத்தில் அமர்த்தியிருக்கிறேன். அதன் அடிமையாக நான் அரசாங்கம் நடத்தி வருகிறேன்" என்று பரதன் ராஜ சபையில் பிரதிக்ஞை செய்தான்.

அப்படியே, ராஜ்ய பாரத்தை மந்திரிகளுடைய உதவியைக்கொண்டு நல்ல முறையில், நந்திக் கிராமத்திலிருந்து கொண்டு ராமனுடைய வனவாசம் முடிந்து, சீதா சமேதனாகச் சக்கரவர்த்தித் திருமகன் திரும்பி வரும் வரையில் ஒரு தவமாகக் கருதி நடத்தி வந்தான்.

தனக்கென்றில்லாமலும், வேறு எவ்விதப் பற்றும் கொள்ளாமலும், பகவானுடைய சரணங்களில் பலனைச் சமர்ப்பித்து லோகோபகாரத்தை முன்னிட்டுக் கடமைகளைச் சரிவரச் செய்வது தவமேயல்லவா? ராமன் காட்டில் தவமிருந்த பதினான்கு வருஷகாலம், பரதன் அயோத்தியில் நந்திக் கிராமவாசியாகத் தவம் செய்து வந்தான் என்பது பெரியோர்களுடைய விளக்கம்.

* * *

சித்திரகூடப் பிரதேசத்தில் கொடிய ராக்ஷசர்கள் இருக்கிறார்கள். அவர்கள் தலைவன், ராவணனுடைய தம்பி கரன். இவனுக்கு ராமன் பேரில் வெகு துவேஷம். இந்தக் காரணத்தால் கரனும் அவனைச் சேர்ந்தவர்களும் சித்திரகூட வனத்துக்குள் அடிக்கடி பிரவேசித்துத் தங்களை இம்சை செய்து வருவதால், ரிஷிகள் அவ்விடத்தைவிட்டு வேறு இடத்துக்குப் போக நிச்சயிப்பதாக ராமனிடம் தெரிவித்தார்கள். ராமன்

எவ்வளவு தைரியம் சொல்லியும் அவர்கள் கேட்காமல், அவ்வாறே அந்த இடத்தைவிட்டு வேறிடம் போய் விட்டார்கள்.

பரதன் திரும்பிப்போனது முதல் ராமனுக்குச் சித்திர கூடத்தில் மனநிம்மதியில்லை. தாய்மார்களும் தம்பியும் வந்து தன்னை அங்கே சந்தித்துப் பேசியது, அவனுக்குச் சதா நினைவிலிருந்து வந்தது. அந்த நினைவினால் துக்கம் நீடிக்கும் அந்த இடத்தைவிட்டு, வேறிடம் செல்வதும் நலம் என்று அவனுக்கும் தோன்றிற்று. ரிஷிகள் போய்விட்ட பிறகு ராம லக்ஷ்மணர்கள் சீதையுடன் சித்திரகூடத்தை விட்டுத் தண்ட காரண்யத்தில் வேறு இடம் பார்த்துக் கொள்ள நிச்ச யித்தார்கள்.

இவ்வாறு தீர்மானித்தபின், ராம லக்ஷ்மணர்கள் சீதையுடன் அத்திரி மகரிஷியின் ஆசிரமத்துக்குச் சென்று அவரை, வணங்கித் தங்கள் யோசனையைத் தெரிவித்தார்கள். அத்திரி மகரிஷியின் மனைவி மகா தபஸ்வியான அனசூயை. சீதை அவளை வணங்கி அவளுடைய ஆசியைப் பெற்றாள். "வனம் சென்ற புருஷனுடன் நீ கஷ்டங்களை அனுபவித்து எல் லோருக்கும் வழிகாட்டி வருகிறாய்" என்று சீதையை மிகவும் பாராட்டித் தன் அன்புக்கு அடையாளமாக வஸ்திரமும், மங்கள ஆபரணங்களும், மஞ்சள் குங்குமமும், பரிமளப் பொடியும் கொடுத்தாள். அனசூயை மகாபாக்கியவதி. அவள் கொடுத்த வஸ்திராபரணம் சீதைக்கு அழியாத அழகும் ஆன்மசக்தியும் தந்தன.

அவற்றைச் சீதை பெற்றுக்கொண்டு, "என் கணவர் சக்கரவர்த்தித் திருமகன் என்மேல்,பெற்ற தாயின் அன்பை யும் தந்தையின் அன்பையும் ஒன்று சேர்த்துச் செலுத்தி வருகிறார். எனக்கு என்ன குறை?" என்றாள்.

பிறகு போக வேண்டிய வழி கேட்டுத் தெரிந்து கொண்டு மூவரும் சென்றார்கள்.

## 42. விராதன் தீர்ந்தான்

மூவரும் தண்டகாரண்யப் பெருங்காட்டுக்குள் நடந்து சென்று, ரிஷிகள் பலர் வாசம் செய்து கொண்டிருந்த பிரதேசத்தையடைந்தார்கள். போகும்போதே அங்கே வேள்விக்கான பொருள்களும், முனிவர்கள் உடுத்தும் மரவுரி, ஆசனத்துக்குரிய தோல் முதலியனவும் இங்குமங்கும் இருப்பதைக் கண்டார்கள். அந்த இடமே பார்ப்பதற்கு மிக லக்ஷணமாக இருந்தது. பறவைகளும் மிருகங்களும் பயமின்றிச் சஞ்சாரம் செய்து கொண்டிருந்தன. பழங்கள் நிறைந்து தொங்கும் பல மரங்களைக் கண்டார்கள். வேத மந்திர சப்தம் காதுக்கு இனிமையாகக் கேட்டது. அருகில் சென்றதும் வயோதிக முனிவர்களுடைய ஒளிவீசும் முகங்களைக் கண்டார்கள்.

ரிஷிகள், ராமலக்ஷ்மணர்களைக் கண்டு அளவு கடந்த மகிழ்ச்சியடைந்தார்கள். "அரசனே! நீ எங்களைக் காப்பவன். வனத்திலிருந்தாலும் நகரத்திலிருந்தாலும் நீ எங்களுடைய அரசன்" என்றெல்லாம் சொல்லி உபசரித்து, அவர்களுக்கு வேண்டியதைச் செய்து தங்க இடமும் காட்டினார்கள்.

மறுநாள் காலையில் எழுந்து, ரிஷிகளிடம் விடை பெற்றுக்கொண்டு காட்டுக்குள் சென்றார்கள். பெருங்காடு; புலி, சிங்கம், ஓநாய் முதலிய மிருகங்களும் பலவிதப் பறவைகளும் நிறைந்த காடு. சுற்றும்முற்றும் பார்த்துக் கொண்டே மெதுவாகச் சென்றார்கள்.

திடீர் என்று மலைபோன்ற ஒரு பெரிய உருவம் எதிர்ப்பட்டது. நர மாமிசம் தின்னும் ராக்ஷசன், இடிபோல் கர்ஜனை செய்தான். அவன் வடிவம் சகிக்க முடியாத கோர சொரூபமாக இருந்தது. மாமிசமும் ரத்தமும் படர்ந்த புலியின் தோல் இன்னும் நன்றாக உலரவில்லை. அதைப் போர்த்தியிருந்தான். கையில் ஒரு பெரிய சூலாயுதம். அதில் அப்பொழுது குத்திக்கொன்ற மூன்று சிங்கங்கள். ஒரு யானைத்தலை முதலியவை தொங்கிக் கொண்டிருந்தன.

ராக்ஷசன் ஆயுதத்தைத் தூக்கி, பயங்கரக் கூப்பாடு போட்டுப் பாய்ந்து சீதையை அப்படியே பிடித்துத் தூக்கிக் கொண்டு, "யாரடா நீங்கள் இந்தக் காட்டுக்கு வந்திருக் கிறீர்கள்? நீங்கள் யார்? பார்ப்பதற்குப் பாலகர்கள்போல் இருக்கின்றீர்கள். வேஷமோ? ஜடையும் மரவுரியும் தரித்து முனிவர்கள் போல் நடிக்கிறீர்கள். கையில் வில்லும் அம்பும்! பக்கத்தில் ஒரு பெண்! ஏன் இப்படிப் பொய் வேஷம் போட்டுத் திரிகிறீர்கள்? வெட்கம் இல்லையா? நீங்கள் ரிஷி களின் சம்பிரதாயத்துக்கும் விரத உடைக்குமே அபகீர்த்தி கொண்டு வருகிறீர்கள். ஏமாற்றித் திரியும் வஞ்சகர்களே! நான் யார் தெரியுமா? நான்தான் விராதன். ரிஷிகளைத் தின்று வருபவன். இவ்வழகி என் பார்யையாக இருக்கட்டும். தெரிந்ததா? உங்கள் ரத்தத்தைக் குடிக்கப்போகிறேன், பாவி களே!" என்று கர்ஜனை செய்தான்.

சீதை அவன் கையில் பிடிபட்டு நடுங்கித் துடித்துக் கொண்டிருந்தாள். மனைவியை அரக்கன் பிடித்து எடுத்திருப் பதைக் கண்ட ராமன், தன் அமைதியை இழந்து, "ஐயோ லக்ஷ்மணா, பார்த்தாயா? எதையும் பொறுக்கும் என்னால் இதைப் பொறுக்க முடியவில்லையே? இதைத் தெரிந்தே பாவி கைகேயி நம்மைக் காட்டுக்கு அனுப்பினாளோ?" என்று கதறினான்.

சீதையைத் தூக்கி நின்ற அரக்கனை எந்த விதத்தில் எதிர்ப்பது என்று தோன்றாமல், இந்தச் சந்தர்ப்பத்தில் ராமன் தைரியமும் அமைதியும் இழந்து போய்ப் பேசினதைக் கேட்ட லக்ஷ்மணன், குழப்பமடையாமல் பாம்பைப்போல் சீறி, "ராமா, இந்திரனுடைய பலம் பெற்றவன் நீ. உன் பக்கத்தில் நானும் இருக்க ஏன் இப்படிப் பேசுகிறாய்? பார், இப்போது என் வில்லும் அம்பும் என்ன செய்யப் போகின்றன என்பதை! இவன் மடிந்து கீழே விழுந்து, இவன் ரத்தத்தை மண் குடிக்கப் போகிறது. அயோத்தியில் என் ரோஷத்தை நீ அடக்கினாயே, அந்த ரோஷம் இவன்மேல்

இப்போது பாயப் போகிறது? சிறகு கொண்ட மலைகளை இந்திரன் தாக்கியது போல், இவனைத் தாக்கி, இவன் உயிரை வாங்கப் போகிறேன்" என்றான்.

* * *

விராதன் அச்சமயம் மறுபடியும் கர்ஜித்து, "ஏ வாலிபர்களே! யார் நீங்கள்? உடனே சொல்லுங்கள்!" என்றான்.

ராமன் அதற்குள் தெளிந்துவிட்டான், கலவரம் தீர்ந்து முகத்தில் வீரம் ஜொலிக்க ஆரம்பித்தது.

"நாங்கள் இக்ஷ்வாகு வம்சத்து ராஜகுமாரர்கள். வன வாசம் செய்ய வந்திருக்கிறோம். நீ யார், சொல்லுவாய்?" என்றான் ராமன்.

"அப்படியா! தசரதகுமாரனே, கேள், சொல்லுகிறேன். என் தகப்பனார் பெயர் ஜயன்; தாயார் சதஹ்ரதை. விராதன் என்று என்னை ராக்ஷசர்கள் அறிவார்கள். ஆயுதம் தரித்த க்ஷத்திரியப் பயல்களே, உங்களுடைய ஆயுதங்களால் என்னை ஒன்றும் செய்ய முடியாது. பிரம்மாவிடம் வரம் பெற்றிருக்கிறேன். இந்தப் பெண்ணை விட்டுவிட்டு ஓடிப்போங்கள். உயிருடன் தப்புங்கள்!" என்றான் ராக்ஷசன்.

இதைக் கேட்டதும் இராமனுடைய கண்கள் சிவந்து, கோபம் மேலிட்டு, "யமனிடம் நீ போகும் சமயம் நெருங்கி விட்டது!" என்று சொல்லி, வில்லை வளைத்து, கூரிய அம்பொன்றை அரக்கன் மேல் விடுத்தான். அம்பு அவன் உடலைத் துளைத்துவிட்டு, ரத்தத்தோடு நெருப்பைப் போல் பிரகாசித்துக் கொண்டு பூமியை அடைந்தது. ஆனால் அரக்கன் அப்படியே நின்றான். அவன் வலியினால் கோபம் கொண்டு, சீதையைக் கீழே வைத்துவிட்டுச் சூலத்தைத் தூக்கி வாயைத் திறந்துகொண்டு ராமலக்ஷ்மணர்கள் மேல் பாய்ந்தான். உடனே ராஜகுமாரர்கள் இருவரும் அவன்மேல்

அம்புமாரி பெய்தார்கள், அம்புகள் பாய்ந்து அவன் உடலில் குத்தி நின்றன. பெரியதொரு முள்ளம் பன்றியைப் போல் காட்சி தந்தான். அரக்கன் சிரித்துவிட்டு, ஒருமுறை நெட்டி முறித்து, உடலை ஒரு சிலுப்புச் சிலுப்பினான். குத்தி நின்ற அம்புகள் எல்லாம் பலபலவென்று கீழே உதிர்ந்தன. அதன் பிறகு சூலாயுதத்தைத் தூக்கி நின்றான். ராம லக்ஷ்மணர்கள் இரண்டு அம்புகளை விட்டுச் சூலத்தைத் துண்டு படுத்தி விட்டுக் கத்திகளை எடுத்துக்கொண்டு அரக்கன் மேல் பாய்ந்தார்கள். இருவரையும் இரண்டு கைகளால் தூக்கி எடுத்துத் தோளின் மேல் வைத்துக்கொண்டு, வனத்துக்குள் குதித்துச் சென்றான். அடர்ந்த இருள் மூடிய வனத்துக்குள் ராமலக்ஷ்மணர்கள் மறைந்து போனதைக் கீழே நின்ற சீதை கண்டு உரக்கப் புலம்பினாள்.

அரக்கனுடைய தோளின் மேலிருந்த ராமனும் லக்ஷ்மணனும் அவனுடைய இரு கரங்களையும் ஒடித்துப் பிய்த்து எறிந்தார்கள். ராக்ஷசன் கீழே விழுந்தான். ஆயுதத்தால் இவனுக்குச் சாவில்லை என்பதையறிந்து, கைகளால் அவனை நொறுக்கியும், காலால் மிதித்தும் பிண்டமாக்கினார்கள். அப்படியும் அவன் சாகவில்லை. வரத்தின் பலத்தால் உயிர் போகவில்லை. ஆனால் இம்சையைப் பொறுக்க முடியாமல் கதறினான். கேட்டுப் பெற்ற வரத்தில் இது விட்டுப்போன அம்சம்! மரணம் வந்து அவனுக்குச் சாந்தி தரவில்லை. ஒரு பெருங் குழி வெட்டி அவனை அதில் போட்டு மூடிவிட நிச்சயித்தார்கள்.

அவனே ராமனை இவ்வாறு செய்யும்படி கேட்டுக் கொண்டான். அவன் கழுத்தின் மேல் கால் வைத்து மிதித்துக் கொண்டு நிற்கையில், அரக்கன் சொன்னான்:

"பகவானே! உன் பாதம் என்மேல் பட்டது. எனக்கு அறிவு வந்தது, என் சாபம் உன்னால்தான் தீரவேண்டும். நான் பிறப்பில் அரக்கன் அல்ல. நான் ஒரு கந்தர்வன். பெற்ற வரமே என் விமோசனத்துக்குத் தடையாக இருக்கிறது.

எப்படியாவது என் உயிரை மாய்த்தாயானால், நான் மறுபடி என் சொரூபத்தை அடைந்து மேலுலகம் செல்வேன்" என்றான்.

அவ்வாறே ராம லக்ஷ்மணர்கள் ஆயுதமின்றி, அவன் உடலை நொறுக்கிப் பிண்டமாக்கிப் பெருங்குழியில் போட்டுப் புதைத்து விட்டார்கள். அரக்கனும் கந்தர்வர்களுக்குரிய மேலுலகம் எய்தினான்.

பிறகு ராஜகுமாரர்கள் தனியே நின்ற சீதையை அடைந்து, அவளுக்கு விஷயத்தைச் சொல்லி, மூவரும் சரபங்க ரிஷியின் ஆசிரமத்துக்குச் சென்றார்கள்.

அப்போது அவ்விடம் இந்திரன், தன் தேவகணங்களுடன் வந்து முனிவருடன் பேசிக் கொண்டிருந்தான். ராமன் வந்ததை இந்திரன் அறிந்து, தன் பேச்சைச் சீக்கிரம் முடித்துக்கொண்டு மறைந்தான். பிறகு ராமனும் சீதையும் சரபங்க ரிஷியை வணங்கினார்கள்.

வயோதிக ரிஷியானவர், "உனக்காகத்தான் காத்திருக்கிறேன். நான் என் உடலை நீத்து மேலுலகம் செல்ப வேண்டிய காலம் வந்த போதிலும், உன்னைக் காணாமல் போக விரும்பவில்லை. அதனால் காத்திருந்தேன். இப்பொழுது என் விருப்பம் பூர்த்தியாயிற்று. என் புண்ணிய பலன்களை உனக்குத் தந்தேன்" என்றார்.

ரிஷி, சொன்னதைக் கேட்ட ராமன், "பகவானே, என் புண்ணியத்தை நானே செய்து பெறவேண்டும். எனக்குத் தாங்கள் கொடுத்து நான் பெறுவதில் என்ன இருக்கிறது? நான் எல்லாவற்றையும் விட்டுவிட்டுக் காட்டில் வசிக்க வந்திருக்கிறேன்" என்றான்.

* * *

ரிஷி, அவதார விஷயத்தை அறிந்தவரானபடியால் "சுதீக்ஷ்ண ரிஷியைக் கேட்டு, இந்த வனத்தில் நீ எங்கே வசிக்க வேண்டும் என்பதைத் தெரிந்துகொள்வாய்" என்றார்.

அதன்மேல் சரபங்க ரிஷி தீ வளர்த்து அதில் பிரவேசித்தார். நெருப்பில் உடல் எரிந்து போய், அதனின்று ஒரு திவ்விய குமார உருவத்தோடு கிளம்பி மேல் உலகம் சென்றார்.

விராதன் மாண்ட செய்தி ரிஷிக் கூட்டங்களில் பரவியதும், ராமனைப் பார்க்க அந்தப் பிரதேசத்துத் தபஸ்விகள் எல்லாரும் வந்து கூடிவிட்டார்கள். ராக்ஷசர்களால் தாங்கள் அனுபவித்துவரும் உபத்திரவங்களை எடுத்துச் சொல்லி, "அரசனே, நீ இங்கே வாசம் செய்ய வந்தது எம்முடைய பாக்கியம். இனி எம்முடைய தவங்களும் விரதங்களும் இடையூறின்றி நடைபெறும். வனத்தில் விழுந்து கிடக்கும் எலும்புகளைப் பார்! அவையெல்லாம் ராக்ஷசர்களால் கொல்லப்பட்ட தபஸ்விகளுடைய அஸ்திகள் என்று அறிவாயாக. ராக்ஷசர்களின் உபத்திரவத்தால் பம்பை நதிக்கரையிலும், மந்தாகினி நதிக்கரையிலும் உள்ள ரிஷிகள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அரசனுடைய கடமை பிரஜைகளைக் காப்பாற்றுவதாகும். இந்தக் கடமையைச் செய்யாத அரசன் அதருமம் செய்தவனாவான். குடும்பங்களுடன் இருப்பவர்கள் வரி செலுத்துவது போல், ரிஷிகளுடைய தவத்தின் பயனில் நான்கில் ஒரு பங்கு சொல்லாமலே அரசனுக்குப் போகும். தேவராஜனுடைய தேஜஸுக்குச் சமானமான தேஜஸ் பெற்றவனாய் இருக்கிறாய். எங்களைக் காப்பாற்றுவாயாக. எங்கள் கஷ்டம் மிகப் பெரியது. சொல்லுக்கு அடங்காது. நீயே சரணம்!" என்று மிகவும் வருந்திக் கேட்டுக் கொண்டார்கள்.

"பெரியோர்களே! ஏன் வருந்துகிறீர்கள்? நீங்கள் இட்ட ஆணையைச் செய்யக் கடமைப்பட்டவன் நான். அயோத்தியில் என் ஸ்தானத்தை நீத்துத் தந்தையின் ஆணையை நடத்த நான் வனம் வந்தேன். தந்தையின் ஆணைப்படி நடந்து கடன் தீர்ப்பதில், இத்தகைய நன்மையும் என்னால் உங்களுக்கு உண்டாவது என் பாக்கியமல்லவா? நான் வனத்திலிருந்து கொண்டு ராக்ஷசர்களை ஒழித்து உங்களுடைய

உபத்திரவத்தை நீக்குவேன். தைரியமாக இருங்கள்" என்று ராமன் மிகவும் விநயமாகச் சொன்னதைக் கேட்டு, ரிஷிகளுக்கு அளவு கடந்த மகிழ்ச்சியுண்டாயிற்று. ராம லக்ஷ்மணர்கள் சீதையுடன் சுதீக்ஷ்ண முனிவர் ஆசிரமத்தை நோக்கிச் சென்றார்கள்.

சமீபத்தில் ஒரு பெரிய மலையும் நல்ல அடர்த்தியான வனமும் காணப்பட்டன. அதுவே சுதீக்ஷ்ணருடைய ஆசிரமம் இருக்கும் பிரதேசம் என்று அறிந்து, அதை நோக்கி ஆசிரம வனத்துக்குள் சென்றார்கள். மரவுரியும் காயப் போட்டிருப் பதைக் கண்டார்கள். பிறகு வயோதிக ரிஷியையும் தரிசித் தார்கள். அவரை நமஸ்கரித்துச் சக்கரவர்த்தித் திருமகன், "என் பெயர் ராமன். தங்களைத் தரிசிக்க வந்தேன். அடி யேனை ஆசீர்வதிக்க வேண்டும்." என்றான்.

வீரனைப் பார்த்ததும் முனிவர் எழுந்து கட்டிய ணைத்துக் கொண்டார்.

"தருமத்தைக் காக்கும் சிரேஷ்டனே! உனக்கு நல்வரவு. நீ வந்து இந்த ஆசிரமம் ஒளிபெற்று விளங்குகிறது. நீயே இதற்கு எஜமான். நான் உன் வரவுக்காகக் காத்திருந்தேன். இல்லையேல் இதற்கு முன்னமே நான் இந்த உடலை நீத்தி ருப்பேன். நீ ராஜ்யத்திலிருந்து நீக்கப்பட்டுச் சித்திரக்கூடம் வந்திருப்பதைப் பற்றி நான் கேள்விப்பட்டேன். நான் சம்பாதித்திருக்கும் புண்யம் உனதாகும். வீரனே, நீயும் உன் பாரியையும் லக்ஷ்மணனோடு அதைக் பெற்றுக் கொண்டு அனுபவிப்பீராக" என்றார் சுதீக்ஷ்ண முனிவர்.

இவ்வாறு ஆசீர்வதிப்பது முனிவர்களுடைய வழக்கம். ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் சொல்ல வேண்டிய மறுமொழியும் ராமன் சொன்னதிலிருந்து பார்த்துக் கொள்ளலாம். இவை யெல்லாம் அந்தக் காலத்தில் வழங்கி வந்த அழகிய பண்பாடு.

உக்கிர தவம் செய்து பொலிவடைந்த முகத்தைப் பெற்ற முனிவரை வணங்கிய ராமன் சொன்னான்.

"முனிவரே! என் புண்ணியத்தை நானே செய்து அடைய வேண்டும். தங்களுடைய ஆசீர்வாதத்தால் நான் அவ்வாறே செய்வேன். காட்டிலிருந்து கொண்டு வனவாசம் செய்ய வந்த நான், அவ்வாறே விரும்புகிறேன். மகாத்மா சரபங்கர் ஆணையின் பேரில், எல்லாம் அறிந்த தங்களுடைய ஆசீர்வாதத்தைப் பெற வந்தேன்" என்றான்.

முனிவருடைய முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது. குறிப் பாகப் பேசினார்.

"இந்த ஆசிரமத்தையே நீ உன் இருப்பிடமாக வைத் துக்கொள்ளலாம். ரிஷிகள் பலர் அருகே வாசம் செய்கிறார் கள். நல்ல பழமும் கிழங்குகளும் நிறைந்த வனம். ஆனால் ரிஷிகளுடைய தவங்களைக் கெடுக்கத் துஷ்ட மிருகங்கள் அநே கம் இந்தப் பிரதேசத்தில் திரிந்து கொண்டிருக்கின்றன. அவைகளின் தொந்தரவை ரிஷிகளால் சகிக்க முடியவில்லை. இந்தத் துஷ்டமிருகங்களைத் தவிர இவ்விடம் ஒரு குறையு மில்லை" என்றார்.

ரிஷியினுடைய சொல்லின் பொருளைச் சக்கரவர்த்தித் திருமகன் தெரிந்து கொண்டான். தன்னுடைய கோதண் டத்தை வளைத்து நாண் பூட்டி,

"பகவான் முனிவரே! இந்தத் துஷ்ட மிருகங்களை அடியோடு ஒழிப்பது என் பணியாகும். என் வில்லும் கூர்மையான பாணங்களும் வீண் போகா. இந்த ஆசிரமத் திலேயே நாங்கள் இருப்பது அவ்வளவு உசிதமல்ல. தங்க ளுடைய தவத்துக்குத் தடையாகும். அருகில் ஓரிடம் பார்த்துக் கொள்ள வேண்டும். அனுகிரகிப்பீராக!" என்று சொன்னான்.

அன்றிரவு முனிவருடைய ஆசிரமத்திலேயே அதிதிகளாகத் தங்கினார்கள்.

அதிகாலையில் மூவரும் எழுந்திருந்து, கருங்குவளை வாசனையோடு சுகமாகக் குளிர்ந்திருந்த ஜலத்தில் ஸ்நானம்

செய்து, ஹோமம் செய்துவிட்டு, முனிவரை வணங்கி நின்றார்கள்.

"தங்களுடைய அருளினால் இரவு நன்றாகக் கழிந்தது. இந்தப் பிரதேசத்திலுள்ள பல ரிஷி சிரேஷ்டர்களையும் தரிசித்து ஆசி பெற விரும்புகிறோம். எங்களுடன் வந்திருக்கும் இந்த மகான்கள் அழைத்துப் போவார்கள். வெயிலுக்கு முன் புறப்பட்டுப் போவது நலமானபடியால் விடை கொடுக்க வேண்டும்" என்று ராமன் சொல்ல, மூவரும் முனிவருடைய பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்தார்கள்.

ராஜகுமாரர்களை முனிவர் அன்புடன் ஆலிங்கனம் செய்து, க்ஷேமமாகப் போய் வாருங்கள். தண்டகாரணியத்து ரிஷி சிரேஷ்டர்களைப் பார்த்து ஆசி பெறுங்கள். அனைவரும் தவம் செய்து சித்தியடைந்தவர்கள். மிக ரம்மியமான வனம்; மான்களும், பறவைகளும், புஷ்பங்கள் நிறைந்த தடாகங்களும், மலையருவிகளும், மயில்களும் எல்லாம் மிக அழகாக இருக்கும், லக்ஷ்மணா, அண்ணனும் நீயும் சீதா தேவியுடன் போய் வாருங்கள். இஷ்டமான போது ஆசிரமத்துக்குத் திரும்பி வாருங்கள்" என்றார்.

மூவரும் முனிவரை வலம் செய்துவிட்டுப் புறப்பட்டார்கள். இருவருடைய கத்தி, வில், அம்பறாத்தூணி முதலியவற்றைச் சீதை எடுத்துத்தர, அவர்களும் அவற்றைத் தரித்து ஆயுதபாணிகளாகப் புறப்பட்டார்கள். முனிவருடைய ஆசியைப் பெற்ற ராஜகுமாரர்களுடைய அழகும் காந்தியும் முன்னைவிட அதிகமாகப் பிரகாசித்தன.

## 43. பத்து ஆண்டுகள் கழிந்தன

இப்போது ஆரம்பிப்பது ஆரண்ய காண்டம். சீதைக்கு ஏற்படப்போகும் விபத்துக்கு கவி நம்மை ஆயத்தப் படுத்துகிறார். தண்டகாரண்யத்தில் சக்கவர்த்தித் திரு

மகனுக்கு ஒரு புதுக் கடமை ஏற்பட்டு விட்டது. ரிஷிகளைத் துன்புறுத்தும் அரக்கர்களைக் கொல்லும் கடமை. வரப்போகும் கஷ்டத்தின் சூசனையாகச் சீதையின் மனத்தில் ஒரு பயம் தோன்றிற்று.

"வனவாசத்தில் இந்த க்ஷத்திரிய காரியத்தைத் தவசிகளான நாம் ஏன் எடுத்துக்கொள்ள வேண்டும்? நாம் வந்தது தந்தையின் ஆணையை நிறைவேற்ற. அவர் வாக்கைச் சத்திய வாக்காகச் செய்வதற்காக வனவாசம் வந்தோம். ரிஷிகளைக் காப்பாற்றும் கடமை நாட்டையாளும் அரசனுடையது. மக்களைத் தொந்தரவு படுத்தும் ராக்ஷசர்களைத் தண்டிப்பது பொதுவாக க்ஷத்திரிய தருமமானாலும், அது சிம்மாசனம் ஏறிய அரசனுடைய சிறப்பான கடமை. நாமோ தவமிருக்க வந்திருக்கிறோம். அரக்கர்களைக் கொன்று, ரிஷிகளைக் காப்பது நம்முடைய கடமையாகாது. நம்மை எதிர்க்க வராதவர்களைக் கொல்லுவது வனவாச விரதத்துக்கும் விரோதமாகும். இங்குள்ள ரிஷிகளுக்கு நீங்கள் வாக்குறுதி கொடுத்து விட்டீர்கள். "ரிஷிகளைத் தொந்தரவு செய்யும் அரக்கர்களை நான் வதம் செய்வேன்!" என்று பிரதிக்ஞை செய்துவிட்டீர்களே! இது நம்மை எங்கே கொண்டுபோய் விடுமோ தெரியவில்லை."

இவ்வாறு சீதை ராமனுடன் பிரியமான மொழிகளில் வாதம் செய்தாள். சுதீக்ஷ்ண முனிவருடைய ஆசிரமத்திலிருந்து புறப்பட்டு, தண்டகாரண்யத்திலுள்ள மற்ற ரிஷிகளுடைய ஆசிரமங்களுக்குப் போகும் போது, இதைப் பற்றிப் பேசிக்கொண்டே சென்றார்கள்.

"என் நாதனே, எதிர்த்துப் பேசுகிறாளே என்று கோபிக்க வேண்டாம். பெண்ணாகிய எனக்குத் தோன்றுவதைச் சொல்லுகிறேன். எது தருமம், எது கடமை என்பது உங்களுக்குத் தெரியும். ஆலோசித்து முடிவு செய்ய வேண்டும். ஆசையினால் தூண்டப்பட்டு மக்கள் செய்யும் பெரும்

பாவங்கள் மூன்று என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். பொய் பேசுவது, பரஸ்திரீயைத் தீண்டுவது, நம்மை எதிர்த்துத் தீங்கு செய்யாதவர்களைத் துன்புறுத்துவது. இம் மூன்றில் பொய் என்பது உங்களிடம் அண்டாது. சத்தியத் தைக் காக்க ராஜ்யாதிகாரத்தையும் போகங்களையும் விட்டுவிட்டு வனவாசம் செய்கிறீர். என் பிரிய நாதனே! பரஸ்திரீயை மனத்தில்கூட நினைக்கமாட்டீர்கள் என்பது எனக்குத் தெரியுமல்லவா? இப்போது நான் பயப்படுவது மூன்றாவது விஷயத்தைப் பற்றித்தான். அதாவது நம்மை எதிர்க்காத ஒருவனை நாம் வதம் செய்யலாமா என்பது. ராக்ஷசர்களாயினும் யாராயினும் நம்மை எதிர்க்க வராதவர்களை நாம் ஏன் கொல்ல வேண்டும்? அவசரப்பட்டு இந்த வனத்தில் வசிக்கும் முனிவர் களுக்கு வாக்குக் கொடுத்து விட்டீர்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. தீயவர்களை அழிப்பது க்ஷத்திரிய தர்மமே. ஆனால், நாம் வனவாசத்தில் அந்த தர்மத்தை அனுசரிப்பது சரியல்ல. அரச பதவியில் இருப்பவர்களுக்கல்லவா அந்தக் கடமை சேர்ந்தது! மரவுரி உடுத்தித் தலை மயிரை ஜடை யாக்கி, விரத வேஷம் பூண்ட உங்களுக்கு, இந்தக் கடமை எப்படி ஏற்படும்? இது வேண்டாம் என்று எனக்குத் தோன்று கிறது. உங்களுக்குத் தெரியாத விஷயம் ஒன்றுமில்லை. என் அபிப்பிராயத்தைச் சொன்னேன். யோசித்துச் செய்யவும்" என்றாள் ஜானகி.

இவ்விதம் சந்தேகப்பட்டுப் பேசிய சீதையிடம், ராம னுக்குள்ள பிரியமும் மதிப்பும் முன்னைவிட அதிகரித்தது என்றே சொல்லவேண்டும்.

"காதலி, ஜனகா மகள் அல்லவா நீ. ஆனபடியால் இத்தகைய உயர்ந்த லக்ஷியம் கொண்ட பேச்சைப் பேசினாய். சீதையே, நீ சொன்னாயல்லவா, க்ஷத்திரியர்கள் தரிக்கும் ஆயுதம் பிறரை ரட்சிப்பதற்காகவென்று? கஷ்டப்பட்டு

ஜனங்கள் அழுதால் அதைப் பார்த்துக்கொண்டு சும்மா ஒரு க்ஷத்திரியன் எப்படி இருக்கலாம்? இங்கே நாம் வந்தவுடன் என்ன கேட்டோம்? இந்த முனி சிரேஷ்டர்கள் தங்களுடைய கஷ்டங்களைச் சொல்லிக் கொண்டு, 'நாதனே, நீயும் உன் தம்பியும் எங்களைக் காப்பாற்ற வேண்டும்' என்று முறை யிட்டார்கள். இந்த வனத்தில் தவம்செய்து கொண்டிருக்கிற ரிஷிகளைக் கொன்று தின்றுவரும் இந்த ராக்ஷசர்களுடைய இம்சைகளைப் பொறுக்க முடியாமல் முறையிட்டார்கள்; 'எலும்புக் குவியலைப் பார்' என்று அவர்கள் நமக்குக் காட்டினார்கள்.

'எந்தை மற்(று) யாருளர் இடுக்கண் நீக்குவார்
வந்தனை யாம்செய்த தவத்தின் மாட்சியால்'

"உருளுடை நேமியால் உலகை ஓம்பிய
பொருளுடை மன்னவன் புதல்வ! போக்கிலா
இருளிடை வைகினேம் இரவி தோன்றினாய்
அருளுடை வீரநின் அபயம் யாம்"

"ஆயுதம் தரிக்கும் ராஜகுமாரர்களாகிய நாம் இந்தப் புலம் புதலைக் கேட்டுச் சும்மா இருக்க முடியுமா? அரசனுடைய கடமையாயினும், க்ஷத்திரிய குலத்தின் பொதுக் கடமை யாகும். என்னுடைய நன்மையை உத்தேசித்து நீ சொன்னாய். நீ சொன்னது சரியே என்று வைத்துக் கொண்டாலும் நான் வாக்குக் கொடுத்துவிட்டேன். 'நீயே சரணம்' என்றார்கள். நானும் 'உங்களைக் காப்பேன்' என்று சொல்லிவிட்டேன். இவ்வாறு பிரதிக்ஞை முடிந்து போயிற்று. இனி அதைப் பொய்யாக்க முடியுமா? 'என்ன கஷ்டம் வந்தாலும் நான் காப் பாற்றுகிறேன்' என்று சொல்ல வேண்டிய சொல், சொல் லியாகிவிட்டது. அந்த வாக்குறுதியை நிறைவேற்றுவது என் கடமை. சக தருமசாரிணியான உன்னுடைய தருமமும் ஆகும். நீ வேறு நான் வேறு அல்லவே!"

இப்படியாக அவர்கள் பேசிக்கொண்டே நடந்து சென்றார்கள்.

இவையெல்லாம் மழைக்கு முன்வரும் காற்றைப்போல், நடக்கப்போகும் அனர்த்தங்களுக்குச் சூசனையாகக் கவி அமைத்திருக்கிறார். பக்கம் நிரப்புவதற்கல்ல.

தண்டகாரண்யத்தில் ரிஷிகளிடையே பத்து வருஷங்கள் ராம லக்ஷ்மணர்களும் சீதையும் யாதொரு கஷ்டமுமில்லாமல் கழித்தார்கள்.

தண்டகாரண்யப் பெருங்காட்டில் ராம லக்ஷ்மணர்கள் இருந்த இடம் ஒரு ரிஷி மண்டலம். அநேக ரிஷிகள் அங்கே ஆசிரமங்கள் அமைத்துக்கொண்டு தவ வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தார்கள். ஓர் ஆசிரமத்தில் ஒரு மாதம்; இன்னொரு ஆசிரமத்தில் மூன்று மாதம்; இப்படிப் பல ஆசிரமங்களில் மாதக் கணக்கிலும், வருஷக் கணக்கிலும் ராம லக்ஷ்மணர்களும், சீதையும், சந்தோஷமாகக் காலங் கழித்தார்கள். வனத்தின் அழகு சொல்ல வேண்டியதில்லை. மான் கூட்டங்கள், காட்டு எருமைகள், வராகங்கள், யானைகள், பறவைகள், அழகிய மரங்கள், செடிகள், கொடிகள், கண்ணைக் கவரும் நீலோற்பல-தாமரைத் தடாகங்கள், நீர்ப்பறவைகள் இவற்றையெல்லாம் கவி வர்ணித்திருக்கிறார். இப்படி இயற்கை அழகுகளை அனுபவித்துப் பாடும் கவிகளில் வால்மீகி முதலிடம் பெற்றவர். அதில் அவருக்கு அடங்காத ருசி. பாட்டின் நாதமும் அரண்யம் போலவே கம்பீரமாக இருக்கும்.

ரிஷிகளிடையில் வாசம் செய்வதில் உண்டான சத்ஸங்க மகிழ்ச்சியைப் பத்தாண்டு ராமன் அனுபவித்தான். கூட லக்ஷ்மணனும் தேவியும் இருந்ததனால், ராமனுடைய ஆனந்தம் மும்மடங்காயிற்று.

பத்து ஆண்டுகள் ஓர் அத்தியாயத்தில் முடிந்து விடுகிறதே என்று குறைபடலாகாது. சந்தோஷமாகவும் சுகமாகவும் கழியும் காலம் இலக்கியத்தில் சுருக்கமாகத்தான் முடியும்.

* * *

இப்படிப் பத்து ஆண்டுகள் கழித்து, வனவாச விரதத்தின் காலவரை அநேகமாகத் தீர்ந்துபோனதாக எண்ணும் சமயத்தில், அகஸ்திய முனிவரைத் தரிசிக்க வேண்டுமென்ற ஆசை ராமனுக்கு உண்டாயிற்று.

அகஸ்தியர் விசுவாமித்திர முனிவரைப் போலவே மூவுலகிலும் புகழ் பெற்ற முனிவர். இமயமலை முதல் விந்தியமலை வரையில் உள்ள அறிவும் தவவன்மையும் ஒரு தட்டில் வைத்து, அகஸ்திய முனிவர் ஒருவர் மட்டும் மறு தட்டில் அமர்ந்தால், அவருடைய பாரத்தினால் அத்தட்டு கீழே இறங்கிவிடும் என்று சொல்வார்கள். பார்வதி மகாதேவ விவாகத்தைப் பற்றிச் சொல்லப்படும் கதை அனைவருக்கும் தெரியும். எல்லா முனி சிரேஷ்டர்களும் கைலாசம் சென்று பூபாரம் அங்கே அதிகமாகப் போனபடியால், அகஸ்தியர் தெற்கே இருந்துகொண்டு பூமியின் நிலையைக் காத்தார் என்று சொல்லப்படுவது அகஸ்தியருடைய மகிமையைக் காட்டும்.

ஒரு காலத்தில் விந்தியமலை வளர்ந்து மிக உயர்ந்து கொண்டே போய்ச் சூரியனுடைய தக்ஷிணாயன உத்தராயணப் போக்கைத் தடுப்பதாகப் பயந்து, அகஸ்தியரைத் தேவர்கள் இறைஞ்சினார்கள் என்றும், முனிவர் விந்தியமலைக்கு எதிரில் நின்றபோது மலை தெண்டனிட்டு வணங்கிற்று என்றும், முனிவர், "நீ என்றென்றைக்கும் இவ்வாறே குறையாமல் இருப்பாய்" என்று ஆசீர்வதித்தார் என்றும் அதனால் விந்தியமலை மிக நீண்ட மலையாய்ப் படுத்துக் கிடக்கிறது என்றும் சொல்லுவார்கள்.

வாதாபி, இல்வலன் என்ற இரண்டு அரக்கர்கள், ரிஷிகளை மிகவும் தொந்தரவு செய்து கொண்டிருந்தார்கள். வாதாபி ஒரு வரம் பெற்றிருந்தான். அவன் உடல் எவ்வளவு வெட்டித் துண்டு துண்டாகச் செய்யப்பட்டாலும், பிறகு ஒன்று சேர்ந்து உயிருடன் தோன்றும் வரம் பெற்றிருந்தான். இல்வலன் ரிஷிகள் ஆசிரமத்துக்குப் பிராமண வேஷம் தரித்துப் போவான். "சுவாமி! என் இல்லத்துக்கு வந்து சிரார்த்த போஜனம் பெற்றுக்கொண்டு ஆசீர்வதிக்க வேண்டும்" என்று கேட்பான். சாஸ்திர விதிப்படி இத்தகைய விண்ணப்பத்தை எந்தக் காரணம் கொண்டும் மறுக்கக்கூடாது. ரிஷிகள் போய்ச் சிரார்த்தமும் போஜனமும் முடிந்த பிறகு "திருப்தியா?" என்று இல்வலன் சிரார்த்த விதிப்படி கேட்பான். அவர்களும் வழக்கப்படி "திருப்தி" என்பார்கள். அப்போது இல்வலன் "வாதாபி! வெளியே வருவாய்" என்பான். வாதாபி வஞ்சகமாக ஆட்டு உடல் தரித்து வெட்டிச் சமைக்கப்பட்டு, சிரார்த்த போஜனத்துடன் பித்ருக்கள் திருப்திக்காகப் போஜனம் உண்டவர்களுடைய வயிற்றிலிருப்பான். இல்வலன் 'வா' என்றதும், வயிற்றிலிருந்த வாதாபி பிராமணருடைய வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்துவிடுவான். இம்மாதிரிப் பல ரிஷிகள் மாண்டார்கள். வாதாபி தான் அடைந்த வரத்தின் நிபந்தனைப்படி, ஆயுதமின்றியும் எதிர்நின்று எதிர்க்காமலும் ரிஷிகளை இவ்விதமாகக் கொன்று வந்தான்.

ஒரு நாள் அகஸ்தியரை இந்த வஞ்சமுறையில் சிரார்த்தத்துக்கு இல்வலன் அழைத்தான். அவர்களுடைய சூழ்ச்சியின்படி வாதாபி அகஸ்தியருடைய வயிற்றுக்குள் சிரார்த்த போஜனத்துடன் மேஷ மாமிசமாகப் பிரவேசித்தான். அகஸ்தியருக்கு இது தெரியும். அவர் கணபதியை உபாசித்து அடைந்திருந்த சக்தியினால் அவனையும் ஜீரணித்து விட்டார்.

"திருப்தியா?" என்று கேட்டான் இல்வலன்.

"ஆகா! திருப்தி!" என்றார் அகஸ்தியர்.

"வாதாபி, வெளியே வா!" என்றான் இல்வலன்.

அகஸ்தியர் சிரித்தார், "வாதாபி ஜீரணமாய்ப் போனானே" என்றார்.

இதைக் கேட்ட இல்வலன், "என் சகோதரனைக் கொன்றீரா?" என்று ரோஷத்துடன் அகஸ்தியர் பேரில் பாய்ந்தான். அகஸ்தியருடைய கோபப் பார்வையினால் அந்தக் கணமே இல்வலன் எரிக்கப்பட்டான்.

அகஸ்தியர் இருந்த இடத்தில் எந்த ராக்ஷசரும் வர மாட்டார்கள். அவர் மற்ற முனிவர்களுக்குப் பெருங்காப்பாக இருந்தார்.

* * *

ராமன் அகஸ்தியருடைய தம்பியின் ஆசிரமத்துக்குச் சென்று ஆசி பெற்றுக்கொண்டு, அகஸ்தியர் இருப்பிடம் சென்றான். தெற்கே சென்று அகஸ்தியர் ஆசிரமம் இருந்த இடத்தை அடைந்து, தூரத்திலிருந்தே அந்தப் பிரதேசத்தின் காந்தியையும், மிருகங்களும் பறவைகளும் பயமின்றி விளையாடிக் கொண்டிருந்ததையும், பிராமணர்கள் பூஜைக்குப் புஷ்பம் கொய்து கொண்டிருப்பதையும் பார்த்து மகிழ்ச்சியடைந்தான்.

"லக்ஷ்மணா! நீ சென்று முனிவருக்குத் தெரியப்படுத்தி உத்தரவு பெறுவாய்" என்றான் ராமன்.

இளையவன் சென்று முனிவருடைய சீடன் ஒருவன் மூலம் "தசரத குமாரன் ராமச்சந்திரனும் தம்பியும் ஜானகியும் முனிவரின் ஆசியைப் பெற்று மேன்மையடைய வந்து காத்திருக்கிறார்கள்" என்று சொல்லி அனுப்பினான்.

அனுமதி தந்ததுடன், முனிவரே எழுந்து சக்கரவர்த்தித் திருமகனை வரவேற்றுக் கிரமப்படி உபசரித்து ஆலிங்கனம் செய்தார். "நீங்கள் சித்திரகூடம் வந்தபோதே எனக்கு

விஷயம் தெரிந்தது. எப்படியும் ஒருநாள் நீங்கள் வருவீர்கள் என்று இவ்வளவு காலம் எதிர்பார்த்துக் கொண்டேயிருந்தேன். நீங்கள் எடுத்துக் கொண்ட விரதம் பூர்த்தியாகும் காலம் சமீபித்தது. இவ்விடம் நீங்கள் சுகமாக இருக்கலாம். இங்கே ராக்ஷசர்களுடைய தொந்தரவு இல்லை" என்றார்.

"முனிவருடைய ஆசி பெற்று நான் பாக்கியவான் ஆனேன்! ஆனால் நான் தண்டகாரண்ய ரிஷிகளுக்கு வாக்குத் தந்திருக்கிறேன். முனிவருடைய ஆசி பெற்றுக்கொண்டு நான் தண்டகாரண்யம் திரும்ப வேண்டும்" என்றான் ராமன்.

"நீ சொல்வது சரியே!" என்று அகஸ்தியர் சொன்னார்.

பிறகு அகஸ்தியர் ராமச்சந்திரனுக்கு மகா விஷ்ணுவுக்காக விசுவகர்மா செய்த வில்லும், என்றும் குறையாத அம்பறாத் தூணியும் கத்தியும் தந்தார். "ராமனே, ராக்ஷசர்களை ஒழிப்பாயாக. முன் மகாவிஷ்ணுவானவர் இந்த ஆயுதங்களைத் தரித்தார். நீயும் இவற்றைத் தரித்து அவர்களை ஒழிப்பாயாக" என்று ஆசீர்வாதம் செய்தார்.

பிறகு அகஸ்தியரை யோசனை கேட்டுச் சக்கரவர்த்தித் திருமகன் பஞ்சவடியில் ஆசிரமம் அமைத்துக் கொண்டு, அங்கே மிகுதியாயிருந்த வனவாச காலத்தைக் கழிப்பது என்று தீர்மானித்தான்.

"ராஜகுமாரர்களே, போய் வாருங்கள், சீதையை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். அவள் காட்டில் வசிக்கத்தகாத ராஜகுமாரி. ராமனே, உன்னிடம் அவளுக்குள்ள பிரீதியால் கஷ்டங்களைப் பொருட்படுத்தாமல் வனவாசம் செய்து வருகிறாள். பெண்கள் சாதாரணமாகச் சுகத்தையே விரும்புவார்கள். கஷ்ட நிலையை விட்டு அகல்வார்கள். ஸ்திரீகளுடைய உள்ளம் மின்னலைப் போலச் சஞ்சல சுபாவமும், கத்தியைப் போன்ற கூர்மையும்.

கருடனையும் வாயுவையும் போன்ற விரைவும் படபடப்பும் கொண்டது. இவையெல்லாம் சாதாரணமாகப் பெண்களின் சுபாவத்திலுள்ள தோஷங்கள். இது ஈசுவர சிருஷ்டி. ஆயினும் சீதையினிடத்தில் இந்தத் தோஷங்கள் இல்லை. அருந் ததியைப் போன்றவள். ராமச்சந்திரனே! லக்ஷ்மணனுடனும் வைதேஹியுடனும் நீ எங்கேயிருந்தாலும், அந்த இடம் அழகு பெறும். பஞ்சவடி மிகச் சுந்தரமான இடம். உணவுக்கு வேண்டிய பழமும் கிழங்கும் கிடைக்கும் இடம். கோதாவரி நதிக்கரையின் அழகைச் சீதை மிக அனுபவிப்பாள். சீதையையும் ரிஷிகளையும் அவ்விடம் நீ இருந்து ஜாக்கிரதை யாகக் காப்பாற்றுவாயாக. தசரத சக்கரவர்த்தி உனக்கு விதித்த விரதகாலம் முடிந்து வருகிறது. யயாதியைப் போல் தசரதனும் மூத்தமகனான உன்னால் கடைத்தேறினான்."

இவ்வாறு மகா ஞானி அகஸ்தியர், ராம லக்ஷ்மணர் களையும் சீதையையும் மிக்க அன்புடன் திரும்பத் திரும்ப ஆசீர்வதித்துப் பஞ்சவடிக்கு அனுப்பினார்.

## 44. ஜடாயு

ராஜகுமாரர்களும் சீதையும் அகஸ்தியர் சொன்ன வழியைப் பின்பற்றிப் பஞ்சவடிக்குச் சென்றார்கள்.

''ஏகி இனிது அவ்வயின் இருந்துறையின் என்றான்
மேகநிற வண்ணனும் வணங்கி விடைகொண்டான்
பாகனைய செல்வியொடு தம்பி பரிவிலபின்
யோகமுனி சிந்தைதொடரக்கடிது போனான்.''

அகஸ்திய முனிவருடைய சிந்தையானது, மூவருடன் நான்காவது பிரயாணியாகச் சென்றது என்கிறார் கம்பர். அதிலும் லக்ஷ்மணனுடன் சென்றது என்று சித்திரிக்கிறார். வரப்போகும் விஷயங்கள் அறிந்தவரல்லவா முனிவர். கவிக் குத் தெரியும் ஞானிகளுடைய சிந்தையின் போக்கைக் கண்டு சொல்ல!

போகும் வழியில் ஒரு பெரிய கழுகைக் கண்டார்கள். கழுகின் அற்புத வடிவத்தைக் கண்டு, இது ஒரு ராக்ஷசனாகத் தான் இருக்கவேண்டும் என்று ராமன் எண்ணி, "நீ யார்?" என்றான்.

அந்தக் கழுகு மிகுந்த பிரியத்துடன், "குழந்தாய்! நான் உங்கள் தந்தையின் சினேகிதன்" என்றது.

பிறகு அந்தப் பெரும் பறவை தன் குலத்தை விவரித்துச் சொல்லிற்று. கருட பகவானுடைய தம்பியான அருணனுடைய மகன், சம்பாதியின் தம்பி, ஜடாயு என்று தெரிந்து கொண்டான் ராமன்.

"நீங்கள் இங்கே வனவாசத்தில் இருக்கும்போது, சீதையைத் தனியாய் விட்டுவிட்டு வேட்டைக்குப் போகும் காலத்தில், நான் அவளுக்குத் துணையாக இருப்பேன்" என்றான் ஜடாயு.

இப்படித் தங்கள் பிதா தசரதனுக்கு நெருங்கிய நண்பனான ஜடாயு சொன்னதைக் கேட்டு, அவனை ராம லக்ஷ்மணர்கள் மிகப் பிரியமாக ஆலிங்கனம் செய்து, "காட்டில் நாம் ஒரு பெருந்துணையைப் பெற்றோம்" என்று மகிழ்ச்சியடைந்து விடைபெற்றுக்கொண்டார்கள்.

ஜடாயுவை முதன் முதலில் பார்த்த இந்த நிகழ்ச்சியைப் பற்றி வால்மீகி சுருக்கமாக இவ்வளவுதான் சொல்லுகிறார். பிறகு ஜடாயு சீதைக்காக ராவணனுடன் சண்டையிட்டு காயமுற்று, ராம லக்ஷ்மணர்கள் வரும் வரையில் எப்படியோ, உயிரை வைத்துக் கொண்டிருந்தது. விஷயத்தை அவர்களிடம் கூறிவிட்டு இறந்துபோனது, ராமன் ஜடாயுவின் வீரத்தையும் அன்பையும் பாராட்டிப் பிரலாபித்தது. இவற்றைப் பின்னால் வால்மீகி சொல்கிறார். ஜடாயுவை முதலில் ராமன் சந்தித்த இந்த நிகழ்ச்சி வால்மீகி

ராமாயாணத்தில் இவ்வாறு மிகச் சுருக்கமாகச் சொல்லப் பட்டிருப்பதை ஒரு குறையாகக் கம்பர் நினைத்தார் என்று தெரிகிறது. அந்தக் குறையைத் தம் ராமாயணத்தில் கம்பர் மிக அழகாகப் பூர்த்தி செய்து தமிழருக்குத் தந்திருக்கின்றார். வால்மீகியில் அதாவது அக்காலத்தில் கிடைத்த வால்மீகி ஏடுகளில், ராஜகுமாரர்கள் ஜடாயுவைக் கண்ட படலம் நியூனமாக இருக்கிறதே என்று வருத்தப்பட்டு, தம்முடைய ராம கதையில் அதற்கு என்று ஒரு தனிப்படலம் கொடுத்துப் பாடி விட்டார். கம்பர் தம் கவிதா சக்தியைச் செலுத்தி நடந்ததைத் தெய்வீகக் கண்ணால் கண்டு பாடியிருக்கிறார். ஆரண்ய காண்டத்திலிருக்கும் 1,200 பாட்டுக்களில் 350 பாடல்களைத்தான் கம்பருடைய கவிதா முத்திரையிருப் பதாக டி.கே.சி. எடுத்தார்கள். இந்த ஜடாயுவைக் கண்ட படலத்திலோ 47 பாடல்களில் 37 தேர்ந்தெடுக்கிறார். தள்ளிவிட்டது மிகக் குறைவு.

ஜடாயுவைப் பார்த்ததும் இவன் ஓர் அரக்கனாக இருக்கலாம் என்று சந்தேகித்து, அருகில் போய் பார்க் கிறார்கள். அதே சமயம் வில் ஏந்தி, மரவுரி தரித்த வீரர்களை ஜடாயுவும் உற்று நோக்கிப் பார்க்கிறான். இவர்கள் யார்? இரண்டு தேவர்களோ? என்று அவர்கள் அழகையும் காந்தி யையும் பார்த்து வியப்படைகிறான். தேவர்களை நேரில் கண்டு, நன்றாகப் பழகிய ஜடாயுவே இப்படிச் சந்தேகப் படுகிறான். முடிவில் "இவர்கள் தேவர்கள் அல்ல" என்று தீர்மானித்துக் கொள்ளுகிறான். பிறகு, இவன் மன்மதனோ என்று ராமனைப் பற்றி எண்ணுகிறான். பிறகு இருவர் சாயலையும் நன்றாகக் கவனித்து, 'இவர்களைப் பார்த்தால் நண்பன் தசரதன் சாயலாகத் தோன்றுகிறது' என்று சந்தேகப்பட்டு 'நீங்கள் யார்' என்று ராஜகுமாரர்களைக் கேட்கிறான். அவர்கள், "நாங்கள் தசரத மகாராஜாவின் குமாரர்கள்" என்று சொல்லுகிறார்கள். சொன்னவுடன் ஜடாயு கீழே இறங்கி, அவர்களைத் தன் சிறகுகளைக்

கொண்டு தழுவிக் கொண்டு, "அரசன் சுகமா?" என்று கேட்கிறான்.

"என்றென்றும் உலகம் மறக்காத முறையில் வாய்மையைக் காத்த தந்தை சுவர்க்கம் சென்று விட்டார்" என்று சொல்லுகிறான் ராமன்.

ஜடாயு இந்தச் செய்தியைக் கேட்டதும் துயரப்பட்டு மூர்ச்சையடைந்து, பிறகு ராம லக்ஷ்மணர்களுடைய கண்களினின்று பெருகிய நீர் அவன் மேல் பட்டு நினைவடைந்து பேசுகிறான்.

"தசரதன் உடலாகவும் நான் உயிராகவும் இருந்தோம். யமன் ஏன் உயிரை விட்டுவிட்டு உடலைக் கொண்டு ஏகினான்? அவன் என்னையல்லவோ கொண்டு போயிருக்க வேண்டும்" என்றெல்லாம் சொல்லி, ராஜகுமாரர்கள் ஒருவாறு மறந்திருந்த துயரத்தை மறுபடி எழுப்புகிறான். இறந்த தந்தையை அடைந்து விட்டதாகவே ராம லக்ஷ்மணர்கள் ஜடாயுவைத் தழுவி ஆறுதலும் சந்தோஷமும் அடைந்தார்கள். "எங்கள் தந்தை சத்திய நெறியை விட்டுத் தவறக்கூடாது என்கிற உறுதியில் நின்று, அதனால் சகிக்க முடியாத துன்பத்தையடைந்து உயிர் நீத்தார். எங்களைப் பெற்ற அன்னைமாரையும் ஊரையும் விட்டு நீங்கி நாங்கள் வனத்திலிருக்கிறோம். உன்னைப் பார்த்து ஆறுதல் பெற்றோம்" என்கிறார்கள்.

"நீங்கள் வனவாசம் பூர்த்தி செய்யுங்கள். அதுவரையில் உங்களுக்குத் துணையாக நான் இருக்கிறேன், பிறகு நானும் தசரதன் இருக்கும் உலகத்துக்குப் போவேன்" என்றான் ஜடாயு.

பிறகு, "தந்தை இறந்தபின் நீங்கள் அயோத்தியில் இருந்து கொண்டு நாட்டை ஆள்வதற்குப் பதில், ஏன் வனத்தில் இந்தத் தவ வேஷத்துடன் இருக்கிறீர்கள்? எந்தப் பகைவன் உங்களைக் காட்டுக்குத் துரத்தினான்? இக்ஷ்வாகு

குலத்துக்குத் துரோகம் செய்த பகைவனை எனக்குச் சொல்லுங்கள். அவனை ஒழித்துத் தீருவேன்" என்று கோபமாகக் கேட்கிறான்.

நடந்ததையெல்லாம் லக்ஷ்மணன் சொன்னான். "என் னப்பனே! உனக்குச் சமானம் உலகில் யார்?" என்று ஜடாயு ராமனைத் தழுவிக் கொண்டான்.

பிறகு, சீதையைப் பார்த்து, "இந்தத் தேவி யார்?" என்று கேட்டுத் தெரிந்து கொண்டு மகிழ்ச்சியடைகிறான். மேலே கிளம்பிப் பறந்து அகஸ்தியர் குறித்த இடத்தை ராஜ குமாரர்களுடன் கூடவே சென்று காட்டுகிறான்.

இது கம்பருடைய சித்திரம், வால்மீகி ராமாயணத்தில் நாம் காணும் விஷயத்திலிருந்ததே இப்படித்தான், கம்பர் பாடியிருக்கிறபடி, நிகழ்ந்திருக்கும் என்று எண்ண வேண்டிய தாகும். விட்டுப்போனதைக் கம்பர் சொல்லி விட்டார் என்றே நாம் வைத்துக் கொள்ளலாம். கம்பர் வால்மீகியை எவ்வளவு உணர்ச்சி பாவத்துடன் எங்கெங்கே குறைகளைப் பக்தியுடன் பூர்த்தி செய்கிறார் என்பதையும், இம்மாதிரியே பல இடங்களில் நாம் காண்கிறோம். ஐயாயிரம் ஆண்டு களுக்கு மேல் ஆகிவிட்டது, வால்மீகி பாடிய ராமாயணத் துக்கு, ஏடுகளுக்கு எத்தனையோ விபத்து, விட்டுப் போனதைப் பக்தர்களும் கவிஞானிகளும்தான் காண்பார்கள். குறையாக இருப்பதோடு இரண்டாந்தரக் கவிகளும் சும்மாவிடுவதற்கு இஷ்டப்படாமல் சேர்த்தும் இருப்பார்கள். இதற்கெல்லாம் வருந்திப் பயனில்லை. இருப்பதையாவது எல்லோரும் படிக்கவேண்டும்.

## 45. சூர்ப்பணகை

பஞ்சவடியை அடைந்ததும், "பார்த்தாயா, லக்ஷ்மணா? எவ்வளவு மனோகரமான இடத்தை அகஸ்தியர் நமக்கு

அமைத்துக் கொடுத்தார்!" என்று அங்கு கண்ட அழகை மெய்மறந்து அனுபவித்து ராமன் பேசுகிறான்.

"நானும் நீயும் சீதையும் இந்த இடத்தில் ஆசிரமம் அமைத்துக்கொண்டு எவ்வளவு காலமேனும் சந்தோஷமாக இருக்கலாம். மலைகளைப் பார்! அதிக தூரத்திலுமில்லை; அதிக அண்மையிலுமில்லை. மான் கூட்டங்களைப் பார். மரங்களும் மரங்களில் விளையாடும் பறவைகளின் இனிய நாதங்களும் புஷ்பங்களும் தண்ணீரும் நீர்ப்பறவைகளும் மணலும் எல்லாம் எவ்வளவு ரமணீயமாக இருக்கின்றன. இங்கே நீ ஒரு சரியான இடத்தைப் பார்த்து ஆசிரமம் அமைப்பாய்" என்று லக்ஷ்மணனுக்குச் சொன்னான்.

ஓர் இடத்தைக் கண்டு லக்ஷ்மணன் மிகச் சாமர்த்தியமாக ஆசிரமம் கட்டி முடித்து விட்டான். இங்கே வால்மீகி முனிவர் நின்று, லக்ஷ்மணனுடைய சாமர்த்தியத்தையும் சுறு சுறுப்பையும் விளக்குகிறார். ஆசிரமம் கட்டினதையெல்லாம் நன்றாக விவரிக்கிறார். மண்சுவர் எழுப்பியது, மேலே கூரை பரப்பியது எல்லாவற்றையும் விஸ்தாரமாகச் சொல்லுகிறார். கட்டி முடிந்ததும் தம்பியை அணைத்துப் பரவசமாகி "லக்ஷ்மணா, நீயே எனக்குத் தகப்பன் ஆனாய்!" என்று சொல்லி, ராமன் உள்ளம் உருகி ஆனந்தக் கண்ணீர் விட்டான்.

அரண்மனையில் வசித்த இராஜகுமாரன் லக்ஷ்மணன் இதையெல்லாம் எங்கே, எப்படிக் கற்றான் என்று நாமும் ஆராயவேண்டும். காட்டில் சாமான்களைத் தேடியடைந்து குடிசையைக் கச்சிதமாகக் கட்டுவதற்கு வேண்டிய அறிவும் பயிற்சியும் அந்தக் காலத்தில் அரச குமாரர்கள் பெறும் கல்வியில் அடங்கியிருந்தன என்று கண்டு கொள்ளலாம்.

* * *

பஞ்சவடி ஆசிரமத்தில் ராமனும் சீதையும் லக்ஷ்மண னுடைய அன்புப் பணியைப் பெற்றுச் சுகமாகக் காலம் கழித்தார்கள்.

ஒரு நாள், முன்பனிப் பருவ ஆரம்பத்தில் மூவரும் அதி காலையில் நதிக்கரை நோக்கி வழக்கப்படி சென்றார்கள். குளித்து காலை, வந்தனம் முடித்துப் பாத்திரங்களைச் சுத்தம் செய்து, தங்களுக்கு வேண்டிய ஜலம் எடுத்துப் போவதற் காகச் சென்றார்கள். அந்தப் பருவத்தின் விசேஷங்களைப் பேசிக்கொண்டே போனார்கள்.

மாதங்களில் மார்கழி மாதமே சிறந்தது என்பது நம் முன்னோரும் பெரியோரும் கண்ட உண்மை. லக்ஷ்மணன் பரதனை நினைத்துக் கொண்டான்.

"இந்தச் சமயத்தில் அன்புக்குரிய பரதன் விரதங்களை அனுசரித்து வருவான். எவ்வளவு சுகமாயிருக்க வேண்டியவன். நாம் வனம் சென்று விட்டோம் என்று தானும் கஷ்டமான விரதங்களை மேற்கொண்டிருக்கிறான். அவனை நினைக்க நினைக்க என் உள்ளம் வருத்தம் அடைகிறது. ஐயோ! பாவம்! சாப்பாட்டைக் குறைத்துக்கொண்டு இந்தக் குளிர்காலத் திலும் தரையில் படுப்பான். குளிரில் சரயூ நதியில் குளிக்கப் போவான். அண்ணா! நாம் எவ்வளவு நல்ல சகோதரனைப் பெற்றோம். அவன் பேச்சு, அவன் நடை, அவன் உள்ளம் எல்லாம் சுத்தம். அனுபவிக்க வேண்டிய சுகங்களையெல்லாம் விட்டுவிட்டு நமக்காக விரத வாழ்க்கை நடத்துகிறான். அவனை நினைத்தால் மிகவும் துக்கமாக இருக்கிறது. நம் தந்தையை அவன் எல்லாவிதத்திலும் ஒத்திருக்கிறான். ஜனங்கள் தாயைப்போல் மகன் இருப்பான் என்று சொல்லு வார்கள். அது பரதன் விஷயத்தில் தவறாக இருக்கிறது. இவன் தந்தையின் சுபாவமே கொண்டிருக்கிறான். இந்தக் கைகேயி ஏன் இப்படிக் குரூர சுபாவம் பெற்றாள்? அவளுக்கு எப்படி இவ்வளவு நல்ல குமாரன் பிறந்தான்?" என்று

லக்ஷ்மணன் பொங்கி வந்த நினைவுகளைப் பேசிக் கொண்டே போனான்.

"தம்பி, கைகேயியைத் தூஷிக்கவேண்டாம். பரதனைப் பற்றிச் சொல். ஆனால் நம் சிறிய தாயாரைப்பற்றிக் குறை சொல்லவேண்டாம். பரதனைப் பற்றி நீ சொன்னதெல்லாம் உண்மை. நான் எவ்வளவு நிச்சய புத்தியுடன் ஊரை மறந்து வனவாசம் செய்தாலும், பரதன் ஞாபகமாகவே இருக்கிறது. அவனை இப்போதே பார்க்க வேண்டுமென்று ஆசையுண்டாகிறது. லக்ஷ்மணா! நாம் எப்போது அவனைப் பார்த்து மகிழ்வோம்? நாம் நால்வரும் மறுபடி எப்போது ஓரிடத்திலிருப்போம்? பரதனுடைய அமிருதம் போன்ற பேச்சு என் உள்ளத்தில் ஒலித்துக் கொண்டேயிருக்கிறது."

இவ்வாறு மார்கழி மாதத்தில் ஊரையும் பரதனையும் நினைத்துக்கொண்டு அதிகாலையில் கோதாவரியில் ஸ்நானம் செய்தார்கள். இந்தக் கட்டம் படிக்கும்போது நம்முடைய உள்ளம் கரைகிறது.

பித்ருக்களுக்கும் தேவர்களுக்கும் தர்ப்பணம் பண்ணிவிட்டு, சூரிய நமஸ்காரம் செய்துவிட்டு, மகாதேவனைப் போல் ஜடை தரித்த ராமன், தெய்வீக ஒளிவீச சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் ஆசிரமம் திரும்பிப்போனான்.

காலையில் செய்யவேண்டிய காரியங்களையெல்லாம் செய்துவிட்டு, விச்ராந்தியாக ஆசிரமத்தில் உட்கார்ந்து கொண்டு புராண இதிகாசக் கதைகளைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அச்சமயம் ராமனுடைய முகம் சித்திரை மாதத்துப் பூரண சந்திரனைப்போல் பொலிவு பெற்றுப் பிரகாசித்தது. பேசிக்கொண்டிருந்த கதையில் மனம் லயித்திருந்த அந்தச் சமயம், திடீர் என்று ஒரு ராக்ஷஸ ஸ்திரீ அங்கே வந்து சேர்ந்தாள். அவள்தான் சூர்ப்பணகை; ராவணனுடைய சகோதரி.

தேவலோகவாசி ஒருவனைப்போல் அழகிய வடிவம் கொண்ட ராஜகுமாரனை அவள் பார்த்தாள். அவலக்ஷணமே உருக்கொண்ட அந்த அரக்கி, மன்மதனுடைய அழகு பெற்ற ராமச்சந்திரனைப் பார்த்ததும் காமப் பரவசமாகிப் போனாள். மகா விகாரமான அவள், காமத்தால் பீடிக்கப் பட்டுப் பேச ஆரம்பித்தாள்.

"தவம் செய்பவர்களைப் போல் ஜடை தரித்துக் கொண்டு, மனைவியையும் அழைத்துக்கொண்டு, வில்லும் அம்புமாக ராக்ஷஸர்களுடைய காட்டுக்கு வந்திருக்கும் நீ யார்? எதற்கு வந்திருக்கிறாய்? உண்மையைச் சொல்லுவாய்?" என்றாள்.

இத்தகைய சந்தர்ப்பங்களில் தன் பெயர், ஊர், சரித்திரம் முழுவதும் சரியாகச் சொல்லிவிட்டு, கேட்ட வருடைய குலம், காரியம் ஆகியவற்றைக் கேட்பது அக்காலத் துப் பண்பாடு. அந்தப் பண்பாட்டில் பழகின ராமன்,

"தேவர்களுக்குச் சமமான சௌரியம் பொருந்திய தசரத மகாராஜனுடைய மூத்த குமாரன் நான். என்னை ராமன் என்று அழைப்பார்கள். இவன் என் தம்பி லக்ஷ்மணன். இவள் என் மனைவியாவாள். இவள் பெயர் சீதை. என் தாயும் அரசனான தந்தையும் சொல்லி உத்தரவிட்டபடி, தருமத் தைக் காக்க இந்தக் காட்டில் வனவாசம் செய்ய இங்கே வந்திருக்கிறேன். தயவுசெய்து சொல்வாய், நீ யார்? எந்தக் குலம்! உன் சொரூபத்தைப் பார்த்தால் ராக்ஷஸப் பெண் என்று தோன்றுகிறது. இவ்விடம் என்ன காரியம் பற்றி வந்தாய்? சரியாகச் சொல்வாய்" என்றான்.

"ராவணனைப் பற்றி நீ கேள்விப்பட்டிருக்கிறாயா? விச்ரவஸினுடைய வீரபுத்திரனும், ராக்ஷசர்களுடைய அரசனு மான அந்த ராவணனுடைய சகோதரியாவேன் நான். என் பெயர் சூர்ப்பணகை. ராவணனுடைய சகோதரர்களான கும்பகர்ணனும், விபீக்ஷணனும் மகாபலவான்கள். தவிர இக்காட்டில் அரசுபுரியும் கரனும் தூஷணனும் என் சகோத

ரர்கள். இவர்களுடைய தேக பலமும் அதிகாரமும் பெரியது. ஆனால் நான் அவர்களுக்கு உட்பட்டவள் அல்ல. என்னிஷ்டப்படி நான் எதையும் செய்வேன். இந்த வனத்தில் என்னைக் கண்டு யாரும் பயப்படுவார்கள். உன்னைக் கண்டது முதல் உன்மேல் அடங்காத காதல் கொண்டுவிட்டேன். நீதான் என் கணவன். ஏன் இந்தச் சிறு பூச்சியைப் போன்ற ஒரு பெண்ணைக் கட்டிக்கொண்டு அலைகிறாய்? காட்டில் உனக்குத் தகுந்த மனைவி நான்தான். என்கூடச் சேர்ந்து எங்கும் சஞ்சரித்து சந்தோஷமாய் இருப்பாய். நான் எந்த வடிவத்தையும் எடுப்பேன். பயப்படாதே! இந்தப் பெண்ணையும் உன் தம்பியையும் உடனே தின்று முடித்து விடுவேன். வா என் கூட! தயங்கவேண்டாம்!" என்று காமத்தால் பிடிக்கப்பட்டு ராக்ஷச ஜாதியின் பண்பாட்டின்படி பிதற்றினாள் சூர்ப்பணகை.

ராமனுக்கு இந்த அரக்கியின் காம விகாரமும், நடவடிக்கையும், பேச்சும் ஒரு விநோதமாக இருந்தது. சிரித்துவிட்டு மெதுவாகப் பேச ஆரம்பித்தான்.

"அரக்கியே, என்னைக் குறித்து நீ ஆசைப்படுவது உனக்குத் துன்பமாகும். இந்தப் பெண், என் மனைவியானவள்கூட இருக்கிறாள். இரண்டு மனைவிகள் விவகாரம் தொந்தரவுக்கு இடமாகும். இது உனக்குத் தெரியுமல்லவா? இதோ இருக்கிறான் என்னுடைய தம்பி. தனியாக இருக்கின்றான். அழகிலும் பலத்திலும் எனக்குச் சமன். இவன் உனக்குத் தகுந்த புருஷன். இவனைக் கேட்டுப் பார். என்னை விட்டு விடு" என்றான்.

மேலே நடக்க வேண்டியதை லக்ஷ்மணன் பார்த்துக் கொள்ளுவான் என்று இவ்வாறு ராமன் சொன்னான்.

அரக்கியும் ராமன் சொன்னபடி அவனை விட்டுவிட்டு, ராமனுடைய அழகுக்குக் குறையாத லக்ஷ்மணனுடன் பேச ஆரம்பித்தாள். "வீரனே! வா என்னுடன். இருவரும் இந்தத்

தண்டகாரண்யத்தில் சந்தோஷமாகக் கூடிக் குலாவித் திரியலாம்" என்றாள்.

லக்ஷ்மணனும் அண்ணன் ராமனுடைய பரிகாசத்தில் சேர்ந்துகொண்டு, "பைத்தியக்காரி, ஏமாந்து போகாதே! நீ யார்? நான் யார்? அண்ணனுக்கு அடிமையாக இங்கே இருக்கிறேன். நீயோ அரச குமாரத்தி. ஓர் அடிமையைக் கட்டிக் கொண்டு அடிமைக்கு அடிமையாக நீ வாழலாமா? ஏமாந்து போகாதே! என் அண்ணன் ராமனுக்கு இரண்டாந் தாரமாக அமைவதே மேலானது. இந்த சீதைக்காக நீ பயப்பட வேண்டியதில்லை. ராமனுடைய காதல் உன் பேரில் தான் வேகம் கொள்ளும். சீதையை அலட்சியம் செய்து விடுவான். நீ சுகமாக இருக்கலாம்" என்றான்.

ஒரு பெண்ணை, அதிலும் காதல் கொண்ட பெண்ணை இப்படியெல்லாம் வேதனை செய்யலாமா என்று சில மேதாவிகள் கேட்கலாம். எதிரில் ஒரு விகார மிருக சொரூபத்தை வைத்துக் கற்பனைச் சக்தியைப் பயன்படுத்தினால் அவ்வாறு கேட்கமாட்டார்கள்.

பிராகிருத கிராமிய வேகத்தால் பீடிக்கப்பட்ட அரக்கி, லக்ஷ்மணனுடைய பேச்சை அப்படியே எடுத்துக் கொண்டு, மறுபடியும் ராமனிடம் சென்று, பக்கத்திலிருந்த, சீதையைப் பார்த்தாள்.

"இந்தப் பூச்சியல்லவா எனக்கும் உனக்குமிடையில் தடையாக இருக்கிறாள். வயிறு ஒட்டிப்போய்க் கிடக்கும் இவள் மேல் உனக்கு ஒரு மோகமா? இதோ இவளை இந்தக் கணம் முடித்து விடுகிறேன். உன்னை அடையாமல் நான் உயிருடன் இருக்க முடியாது. இவளை இப்பொழுதே ஒழித்து விடுகிறேன். பிறகு நீ என்னுடன் சந்தோஷமாகச் சேருவாய்" என்று சொல்லி, அந்த அரக்கி சீதையின் மேல் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தாள்.

அந்தச் சமயம் ராமன் இடையில் புகுந்ததால் சீதை தப்பினாள். வேடிக்கை வலுத்துப் போயிற்று என்று எண்ணி ராமன், "லக்ஷ்மணா, இவளைப் பார்த்துக்கொள்! சீதை எப்படியோ தப்பிப் பிழைத்தாள். இந்த அரக்கிக்குப் பாடம் கற்பிக்க வேண்டும்!" என்றான்.

லக்ஷ்மணன் உடனே கத்தியை எடுத்து, சீதையைத் தாக்கிக் கொல்லப்போன அரக்கியை அங்கஹீனம் செய்துவிட்டு, "சீ!போ" என்றான்.

அவமானப்பட்டு ரத்தகாயமடைந்த அரக்கி பெருங் குரலிட்டு வீறிட்டு அழுதுகொண்டு வனத்துக்குள் மறைந்தாள்.

* * *

ரத்தம் பெருக நேராக ஓடிப்போய் சூர்ப்பணகை யானவள், கரன் இருந்த இடம் சென்று, அவன் முன்னிலையில் ஆகாயத்திலிருந்து இடி விழுவது போல் "ஐயோ!" என்று அலறி விழுந்தாள்.

அரக்கர்கள் சூழ அமர்ந்திருந்த ராக்ஷசத் தலைவனான கரன், "என்ன செய்தி?" என்று விசாரித்தான்.

"என்னைப் பார்! இந்த அநியாயத்தைச் செய்த ராமனும் லக்ஷ்மணனும் இந்தக் காட்டில் வசிக்கிறார்கள். நீயும் இருக்கிறாய்!" என்றாள்.

கரன் எழுந்து "என்ன இது? எனக்கு ஒன்றும் விளங்க வில்லை. புத்தி சுவாதீனம் செய்துகொண்டு விவரமாகச் சொல். யார் உனக்கு இந்த அங்கஹீனம் செய்யத் துணிந்தது? இந்த வனத்தில் என் கோபத்துக்கு ஆளானது யார்? எவன் காக்கைக்கும், கழுகுக்கும் இரையாக விரும்பி உன்னை இப்படி அவமதித்தான்? சும்மா இருந்த கிருஷ்ண சர்ப்பத்தை யார் கால் விரலால் குத்தினது? அந்த மடையன் யார்? எங்கே?

எல்லாம் விவரமாகச் சொல். இதோ அவன் மடியப் போகிறான். அவன் ரத்தத்தை மண் உறிஞ்சிக் குடிக்கப் போகிறது. எழுந்து நின்று நடந்ததைச் சரியாகச் சொல்" என்றான்.

சூர்ப்பணகை சொன்னாள்.

"இரண்டு அழகிய மனிதர்கள்; தசரதன் குமாரர்களாம். தவவேஷம் பூண்டு, ஒரு பெண்ணுடன் இந்தக் காட்டுக்கு வந்திருக்கிறார்கள். அவர்கள் இருவரும் ஒன்று சேர்ந்து கொண்டு, அந்தப் பெண்ணைக் காரணமாக வைத்துக் கொண்டு, என்னைத் தாக்கி, இந்த அக்கிரமம் செய்து விட்டார்கள். இந்த துஷ்டர்களின் ரத்தத்தைக் குடிக்க ஆசைப்படுகிறேன். இவர்களை நீ வதம் செய்வாய். இதை நீ முதலில் செய்ய வேண்டும் தம்பி, வேறு வேலை பிறகுதான்" என்றாள்.

கரன் உடனே தன் சேனாதிபதிகளுக்கு உத்திர விட்டான். "இந்தக் கணம் சென்று அந்த இரு துஷ்டர்களையும் கொன்று, அவர்களுடைய பிரேதங்களை இவ்விடம் கொண்டு வாருங்கள். இவள் சொல்லும் பெண்ணையும் இழுத்து வாருங்கள்; தாமதிக்க வேண்டாம்" என்றான்.

பதினான்கு சேனாதிபதிகளும் உடனே புறப்பட்டார்கள்.

கம்பருடைய ராமாயணத்தில், காதல் கொண்ட சூர்ப்பணகை ஒரு அழகிய மானிடப் பெண்ணின் வடிவம் பூண்டு ராமனை வரித்ததாக வைத்து, அதன் பேரில் நிகழ்ச்சிகள் தனிப்போக்கில் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. சூர்ப்பணகை நிகழ்ச்சியைக் கம்பர், வால்மீகியை விட்டுத் தனிப்போக்கில் கொண்டு போயிருக்கிறார். கம்பராமாயணத்தில் இது ஓர் அழகான கட்டம்.

ராமச்சந்திரனைப் பற்றி, 'இவன் பெண்ணைக் கொன்ற வீரன். காமம் மேலிட்டு அணுகிய ஒரு ஸ்திரீயை இவன் அவமதித்து ஹிம்சை செய்தான். மறைந்து நின்று வாலியைக் கொன்றான். எதிர்த்து நின்று அவனிடம் தோல்வி பெறத் துணியவில்லை. சீதையை அக்கிரமமாகக் காட்டுக்கு அனுப்பினான். அக்கிரமம் அல்ல என்றால் சீதையை அவன் சந்தேகப்பட்டான் அல்லவா? அவளுடைய சீலம் எமக்கும் ஐயமே' இவ்வாறு இன்னும் பலவிதத்திலும் அசூயையில் பிறந்த விமரிசனங்களில் இறங்கிச் சிலர் களிப்படைவதைக் காண்கிறோம். அறிவுக்கும் விமரிசன சாமர்த்தியத்துக்கும் நாட்டில் குறைவில்லை. அன்பும் ஆர்வமும் கலந்த சுத்த அறிவு காணவில்லை. ராமனுடைய குணத்தில் குற்றம் தேடுவோர்கள் தேடுக. ராமனைவிட நல்லமுறையில் தருமத்தைக் கைப்பிடித்துத் தாங்கள் காட்டும் குறைவுகளின்றித் தங்கள் வாழ்க்கையை நடத்த முயல்வார்களானால், ராமனுடைய ஆன்மாவும் ராம பக்தர்களுடைய உள்ளமும் பெருமகிழ்ச்சி அடையும். ராமனுடைய நற்குணங்களை விட்டுவிடாமல், ராமனிடம் கண்ட குறைகளைத் தாம் அகற்றினால் யார் வேண்டாமென்று கூறுவார்கள்.

## 46. கம்ப சித்திரம்

தோட்டத்தில் மேய வந்த ஒரு கழுதையைத் தடியாலடித்து ஓட்டுவது போல் சூர்ப்பணகையைத் துரத்தி விட்டார்கள். வால்மீகி இந்த நிகழ்ச்சியை வெகு சுருக்கமாகச் சிக்கல் ஒன்றுமின்றி எழுதிவிட்டார்.

கம்பர் இந்தச் சங்கதியை அவ்வளவு சுலபமாக முடித்து விடவில்லை. சூர்ப்பணகை பட்ட பாட்டை ஒரு பெரிய தனி நாடகமாக்கி எல்லாவித ரஸங்களையும் நீட்டிவிட்டிருக்கிறார். சூர்ப்பணகைப் படலம் கம்பராமாயணத் துக்குள் ஒரு தலைசிறந்த படலம். அதன் அலங்கார அழகுகளை

நண்பர்களுக்கு எடுத்துக் காட்டுவதில் டி.கே.சி. அவர்கள் தெவிட்டு அடைய மாட்டார்.

ஆற்றங்கரைப் படுகையில் ராமன் உட்கார்ந்து கொண்டு, ஓர் அன்னம் மெல்ல நடந்து கொண்டிருந்ததைப் பார்த்துவிட்டுச் சீதையைப் பார்த்தான். அவளும் நடந்து கொண்டிருந்தாள். இரண்டு நடையும் ஒன்று போலிருந்ததைக் கண்டு ஒரு மகிழ்ச்சி உண்டாகி, அந்த மகிழ்ச்சி ராமன் முகத்தில் ஒரு புன்முறுவலாயிற்று. அதற்குப் போட்டியாகத் தேவியும் அவ்விடம் கொஞ்ச தூரத்தில் ஒரு யானை வந்து தண்ணீர் குடித்துவிட்டுத் திரும்பிப் போய்க்கொண்டிருந்ததை நோக்கி, அவளும் தன் கணவன் அழகை நினைத்துப் புன்னகை பூத்தாள். இவ்வாறு பஞ்சவடி ஆற்றங்கரையில் பகவான் கண்ணன் சொன்னபடி "தருமத்துக்கு விரோதப்படாத முறையில்" காதல் உணர்ச்சி சென்று கொண்டிருந்த சமயத்தில், விதியின் சூழ்ச்சியானது. சூர்ப்பணகையை, தன் பாட்டுக்குக் காட்டில் திரிந்து கொண்டிருப்பவளை, அதைவிட்டு, ராமனண்டை போகச் செய்தது.

"வைகலும் தமியள் அவ்வனத்துள் வைகுவாள்,
நொய்தின்இவ் வுலகெலாம் நுழையும் நோன்மையள்
வெய்யதோர் காரண மேவி உண்மையின்
எய்தினள் இராகவன் இருந்த சூழல்வாய்"

அரக்கர்களைத் தீர்ப்பதற்கென்றே பாற்கடலை விட்டுத் தசரதன் மகனாக வந்த ஆண்டவனைக் கண்டவுடன், சூர்ப் பணகை "இந்த அழகிய உருவம் மன்மதனா, இந்திரனா, மகாதேவனா, மகாவிஷ்ணுவா?" என்று யோசித்தாள். "மன் மதனுக்கு உடலில்லையே! இந்திரனுக்கு ஆயிரம் கண்களா யிற்றே! மகாதேவனுக்கு நெற்றியில் ஒரு பொட்டுண்டே! இவனுக்குக் கைகள் நான்கு இல்லையே! இவன் இந்திரனுமல்ல, பரமசிவனுமல்ல, விஷ்ணுவுமல்ல, ஒரு வேளை பரமசிவனால் சாம்பலாகிய மன்மதன்தான் தவம்

செய்து, மறுபடி உடல் சம்பாதித்திருக்கிறானோ?" என்று ஆலோசித்தாள்.

''காற்றையஞ் சடையன் கண்ணிற் காய்தலால்
இற்றவன் அன்றுதொட்(டு) இன்று காறுந்தான்
நற்றவம் இயற்றிஅவ் அனங்கன் நல்உருப்
பெற்றன னாம்எனப் பெயர்த்தும் எண்ணுவாள்''

"இந்த அழகான புருஷன் ஏன் வீணாகத் தன் உடம்பை வருத்திக்கொண்டு விரதம் நோற்கிறான்? செந்தாமரை போன்ற கண்களையுடைய இவன் ஏன் தவம் செய்து கொண்டு காலத்தை வீணாக்குகிறான்?"-இப்படியெல்லாம் எண்ணிக்கொண்டு ராமனைப் பார்த்து நின்றாள். என்ன செய்வது என்று யோசித்தாள். "இவன் என் உருவத்தைக் கண்டு என்னை வெறுப்பான். நான் மாறுவேஷம் போட்டுக் கொண்டு இவனிடம் போகவேண்டும்" என்று நிச்சயித்தாள். மாயத்தால் தன்னுடைய அரக்கி உருவத்தை மறைத்துக் கொண்டு, மிகச் சுந்தர வடிவம் எடுத்துக்கொண்டாள். "குயில்தொடர் குதலை" மொழியும் "கொவ்வைச் செவ்" வாயும் உடைய "மயில் தொடர் இயலி" யாய்த் தன்னை மாற்றிக் கொண்டு,

''திங்களில் சிறந்தொளிர் முகத்தள் செவ்வியள்
பொங்கொளி விசும்பினில் பொலியத் தோன்றினாள்.''

தேவலோகத்துக் கற்பக மரத்தில் ஏறி வளர்ந்த ஒரு பொன் கொடியைப் போன்ற மேனியும், காமவெறியூட்டும் இதழ்களும், முத்துக்களைப் போன்ற பற்களும், மான்விழியும் கொண்டு, "மயில் வந்ததென" வந்தாள். நூபுரமும் மேகலையும் செய்த ஒலியானது ஒரு பெண் வருவதை ராஜகுமாரனுக்குத் தெரிவித்தது.

ராமன் பார்த்தான். எல்லை கடந்த அழகைப் பெற்ற ஒரு ஸ்திரீ வந்து நிற்பதைக் கண்டான் ராமன். அவனுடைய

பாதங்களைத் தொட்டுப் பணிந்தாள் அவள். பிறகு சிறிது நாணத்தோடு எட்டி நின்றாள்.

"உம் வரவு நல்வரவு ஆகுக. வெகு தூரத்திலிருந்து வந்திருக்க வேண்டும். உம் ஊர் எது? உம் பெயர் என்ன? உம் உறவினர் யார்?" என்று ராமன் கேட்டான்.

"நான் பிரும்மாவின் பேரனுக்குப் புதல்வி. குபேரனுடைய தங்கை. வெள்ளி மலையை எடுத்த ராவண மன்னனுக்கு உடன் பிறந்தவள். காமவல்லி என்ற கன்னி" என்று கூறினாள்.

"என்ன காரியத்தை உத்தேசித்து இங்கே வந்தாய்?" என்றான்.

"பெண்கள் தங்களுடைய கஷ்டத்தைச் சொல்லிக் கொள்வதற்கில்லை. ஆயினும் நான் சொல்கிறேன். காமதேவன் என் உள்ளத்தைத் துன்புறுத்துகிறான். நீ என்னைக் காக்கவேண்டும்" என்றாள். ராமனுக்கு ஒன்றும் பேசத் தோன்றவில்லை. அவள் மேலும் சொல்லிக் கொண்டு போனாள்.

"என்னைக் கந்தர்வ விவாக முறையில் மனைவியாக்கிக் கொள்வாய். அந்தமுறை, 'காதலில் கலந்த சிந்தை கொண்ட மாந்தர்க்கும் மடந்தைமார்க்கும் மறைகளே வகுத்துக்கூறும்' இது நடந்துவிட்டால் எனக்குச் சந்தோஷம் தருவதுடன், என் அண்ணன் ராவணனுக்கும் உனக்கும் நல்ல சிநேகிதம் ஏற்பட்டுப் போகும். இந்த வனத்தில் நீ தனியாக இருக்கிறாய்; ராக்ஷஸர்கள் உன்னைத் துன்புறுத்துவார்கள். நீ முனிவர் கூட்டத்தில் ஒருவனாக இருப்பதால், காரணமின்றியே அவர்கள் உன்னைத் தொந்தரவு செய்வார்கள். நீ என்னை உடனே மணந்துகொண்டால்அந்த அபாயம் நீங்கும். அது மாத்திரம் அல்ல, அதன் பயனாக அந்தப் பலவான்கள் உன்னுடைய வேலைகளையெல்லாம் செய்யத் தயாராக இருப்பார்கள். இதை யோசிப்பாயாக" என்று நீதி சாஸ்திரத்தை யொட்டிச் சொன்னாள் சூர்ப்பணகை.

ராமன் பெருஞ்சிரிப்புச் சிரித்தான்.

"அரக்கர்களுடைய கருணையையும் ஓர் அழகிய புது மனைவியையும் நான் பெற்று விடுவேன் அல்லவா? உன்னோடு சுகமாக எங்கு வேண்டுமானாலும் உல்லாசமாகத் திரியும் சௌகரியத்தையும் பெறுவேனல்லவா? மிகச் சரி! அயோத்தியைவிட்டு நீங்கி யான் செய்த தவம் இன்று நல்ல பயன் தந்தேவிட்டது!" என்று சொல்லித் தன் வெண்மையான பற்கள் விளங்க வாய் திறந்து சிரித்தான் ராமன்.

ஜானகி இந்தச் சமயத்தில் செடிகளுக்கிடையில் வந்துகொண்டிருந்தாள்.

லக்ஷ்மி தேவியே இந்தப் பூமியில் அவதரித்த பூங்கொடி போன்ற சீதை, ராமனிருந்த இடம் வந்துகொண்டிருந்ததைச் சூர்ப்பணகை பார்த்தாள். சீதையின் அழகைக் கண்டு வியந்தாள்.

காமத்தால் பீடிக்கப்பட்ட அரக்கிக்கு ஒரு யோசனை தோன்றிற்று.

"இதோ வருகிறாளே இந்தப் பெண், ஒரு மாயவித்தை செய்யும் ராக்ஷஸ ஸ்திரீ. இவள் உன்னை ஏமாற்றுவாள், ஜாக்கிரதை! இவள் உருவம் இதுவன்று. இவள் பச்சை மாமிசம் தின்னும் அரக்கி, இவளைத் தூரத்தள்ளு" என்றாள்.

ராமன் மறுபடி சிரித்தான், "நீ எவ்வளவு அறிவாளி! இவளை நீயல்லவா சரியாகக் கண்டு கொண்டாய்" என்றான்.

இதற்குள் சீதை ராமன் பக்கத்தில் வந்துவிட்டாள். சூர்ப்பணகைக்கு ராமனுடைய பரிகாசம் தெரியவில்லை. அவளுடைய காமவேதனை அவளுடைய மூளையை முற்றிலும் அழித்துவிட்டது. சீதையைப் பார்த்துச் சீறினாள்.

"நீ ஏன் இந்த வீரனண்டை வருகிறாய் அரக்கியே?"

''நீயிடை வந்ததென்னை, நிருதர்தம் பாவை!''

என்று கோபத்தோடு "தூரப்போ!" என்று அதட்டிச் சொன்னாள்.

சீதை இதுவென்ன விபரீதம் என்று ஒன்றும் விளங்காமல் நடுங்கி, மேகத்தை மின்னற்கொடி தழுவுவது போல் சக்கரவர்த்தித் திருமகனுடைய தோளைத் தழுவிக் கொண்டாள்.

விளையாடியது இனிப் போதும் என்று சூர்ப்பணகையைப் பார்த்து, "நங்காய் இனி நிறுத்து. என் தம்பி இருக்கிறான். உன் விஷயம் அவனுக்குத் தெரிந்துவிட்டால், அவன் கோபித்துக்கொள்வான். அவன் பெருங்கோபக்காரன். என்ன நடக்குமோ எனக்குத் தெரியாது. சீக்கிரம் நீ வந்த வழியே திரும்பிப் போய்விடு!" என்றான்.

இதைச் சொல்லி ராமனும் சீதையும் பர்ணசாலைக்குள் போய்விட்டார்கள்.

இதன்பின் அரக்கிக்குக் காதல்வெறி அதிகமாகி விட்டது. இரவு எப்படியோ எங்கோ கழிக்கிறாள். விடிந்த வுடன் யோசனை செய்கிறாள்.

"இவனை அடையாவிட்டால் உயிர்போகும் போலிருக்கிறது. இந்தப் பெண் ஒருத்தி இருக்கும் வரையில் இவன் என்னைத் தீண்டப்போவதில்லை. இவளை நான் எப்படியாவது தூக்கிக் கோண்டுபோய் ஒளித்து வைத்து, பிறகு இவனுடைய காதலைப் பெறவேண்டும்" என்று தீர்மானித்து. அதிகாலையில் ஆசிரமத்துக்குள் நுழைந்தாள். ராமன் தடாகத்தண்டை சந்தி உபாஸனையிலிருந்தான். சீதை ஆசிரமத்திலிருந்தாள். தனியாக இருந்தாள். இவளைத் தூக்கிப் போக இதுதான் சமயம் என்று எண்ணினாள். அண்டையில் சோலையில் லக்ஷ்மணன் இருந்ததைப் பார்க்கவில்லை.

வந்து நோக்கினள், வள்ளல்போய ஒருமணித் தடத்துச்
சந்தி நோக்கினன் இருந்தது கண்டனள் தம்பி
இந்து நோக்கிய நுதலியைக் காத்(து) அயல் இருண்ட
கந்தம் நோக்கிய சோலையில் இருந்தது காணாள்.

தனிஇ ருந்தெனள், சமைந்த(து)என் சிந்தனை தாழ்வுற்(று)
இனிஇ ருந்தெனக்(கு) எண்ணுவதுஇல், என எண்ணாற்
துனிஇ ருந்தவல் மனத்தினள் தோகையைத் தொடர்ந்தாள்;
கனிஇ ரும்பொழில் காத்தயல் இருந்தவன் கண்டான்.

லக்ஷ்மணனுக்குச் சீதைமேல் யாரோ ஒருத்தி பாய்ந் தாகத் தெரிந்தது. "நில்!" என்று சப்தம் போட்டுப் பாய்ந்தான். மயிரைப் பிடித்து உதைத்து வாளை உருவினான். அரக்கி தன்னுடைய பருத்த உருவத்தைக் கொண்டு லக்ஷ்மணனைத் தூக்கி ஆகாயத்தில் கிளம்பிப் போகப் பார்த்தாள். லக்ஷ்மணன் அவளை எளிதில் பிடித்துத் தள்ளி அங்கஹீனம் செய்துவிட்டு, "துஷ்டை ஜாக்கிரதை!" என்று எச்சரித்து, "போ" என்று துரத்திவிட்டான்.

சூர்ப்பணகை அப்போது தன் உண்மை உருவத்தோடு இரத்தப் பெருக்குடன் ஓடித் தன் இனத்தாரைப் பெயரிட்டுச் சொல்லிப் பலமாகப் புலம்பினாள்.

''உரம்நெரிந்து விழ, என்னைஉதைத்துருட்டி மூக்கரிந்த
நரன் இருந்து தோள்பார்க்க, நான் கிடந்து புலம்புவதோ!
கரன் இருந்த வனம் அன்றோ இவைபடவும் கடவேனோ!
அரன் இருந்த மலைஎடுத்த அண்ணாவோ! அண்ணாவோ!''

"ஓ தம்பி கரனே, ஓ அண்ணா ராவணனே! ஓ இந்திரஜித்தே!"

''தானவரைக் கருஅறுத்துச் சதமகனைத் தளையிட்டு
வானவரைப் பணிகொண்ட மருகாவோ! மருகாவோ!''

''கல்லீரும் படைத்தடக்கை அடல்கரதூ டணர்முதலா
அல்லீரும் சுடர்மணிப்பூண் அரக்கர்குலத்(து) அவதரித்தீர்
கொல்லீரும் படைக்கும்ப கருணனைப்போல் குவலயத்துள்
எல்லீரும் உறங்குதிரோ? யான் அழைத்தல் கேளீரோ!''

என்று அரக்கிக்கு உள்ள பலமான தொண்டையைச் செலுத்திப் புலம்பினாள்.

இது கம்பருடைய சித்திரம். சூர்ப்பணகை ராக்ஷஸப் பிறப்பை மறைத்துக் கொண்டு, ஓர் அழகிய பெண்ணுருவம் தரித்து, ராமனை வரித்தாள் என்பது கம்பருடைய கை வண்ணம். அதன்மேல் கவியின் சக்தி தன்பாட்டுக்கு வேலை செய்கிறது. வால்மீகி ராமாயணத்திலும், சூர்ப்பணகை, "காமரூபிணி" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது இஷ்டப்பட்ட வடிவத்தை எடுத்துக்கொள்ளும் சக்தி வாய்ந்தவள். ராமனைக் கண்டு மோகித்ததும் இந்தச் சக்தியைப் பயன்படுத்திக்கொண்டதும் இயற்கை நிகழ்ச்சி யாகும்.

## 47. கரனும் ஒழிந்தான்

ஜன ஸ்தானத்திலிருந்து கரனுடைய பதினான்கு சேனைத் தலைவர்களையும் அழைத்துக்கொண்டு, சூர்ப் பணகை ராமனுடைய ஆசிரமத்துக்கு வந்தாள். பழி வாங்கி, ராஜகுமாரர்களைக் கொன்று அவ்விடத்திலேயே அவர்கள் ரத்தத்தைக் குடிக்க வந்தாள்.

"அதோ அங்கே நிற்கிறார்களே, அந்த இரு யுவர்களே என்னை அவமதித்து அங்கஹீனம் செய்தது. அவர்களை உடனே கொல்லுங்கள்" என்றாள்.

ராமன் விஷயத்தை அறிந்தான். உடனே லக்ஷ்மண னிடம் 'லக்ஷ்மணா! கொஞ்ச நேரம் சீதையைப் பார்த்துக் கொள். நான் இவர்களைப் பார்த்துக் கொள்கிறேன்" என்று சொல்லிவிட்டு வில்லையெடுத்து நின்றான்.

யுத்த வழக்கத்தை யனுசரித்து எதிர்க்க வந்தவர்களைப் பார்த்து, தான் இன்னான் என்று சொல்லிவிட்டு, "ஏன் எங்க ளைத் தொந்தரவு செய்ய வந்தீர்கள்? ரிஷிகளின் கட்டளைப் படி அரக்கர்களைத் தொலைக்கவே நாங்கள் இந்த வனத்தில்

குடியிருக்கிறோம்! உயிர் தப்பிப் போக விரும்பி னால் சும்மா போங்கள்" என்றான்.

அரக்கர்களும் வீரமாகப் பேசினார்கள். யுத்தம் ஆரம்பமாயிற்று. ராமனுடைய பாணங்கள் அரக்கர்களைக் கொல்ல அதிக நேரம் பிடிக்கவில்லை. அனைவரும் மாண் டார்கள்.

சூர்ப்பணகை மறுபடியும் கோரமாகப் புலம்பிக் கொண்டு கரனிடம் போய் அவன் முன்னிலையில் விழுந்தாள். விழுந்து புரண்டு கொண்டிருந்த சகோதரியைச் சமாதானப் படுத்தப் பார்த்தான் கரன். அவனுக்கு நிலைமை விளங்க வில்லை.

"யமனைப் போன்ற வீரர்களை அனுப்பினேன். இதற்குள் காரியம் முடிந்திருக்கும். ஏன் அழுகிறாய்? நான் இருக்க நீ இப்படி அழலாகாது" என்றான்.

அவள் எழுந்து கண்களைத் துடைத்துக் கொண்டு சொன்னாள்:

"நீ பதினான்கு வீரர்களை அனுப்பினாய். உண்மையே, அவர்கள் பதினான்கு பேரும் பிணங்களாகக் கிடக்கிறார்கள். ராமனுடைய வீரத்தையும், அவன் அற்புத யுத்தத்தையும் உனக்கு நான் எப்படிச் சொல்ல முடியும்? உன்னுடைய சேனா பதிகள் மாண்டார்கள். உனக்கு மானமிருந்தால் உடனே புறப்படு. ராமனோடு யுத்தம் செய்து ராக்ஷஸ குலத்தைக் காப்பாற்று. இல்லாவிட்டால் அழிந்தோம் என்பது நிச்சயம். உனக்கு ரோஷம் இருக்குமேல் புறப்பட்டு வா. ராமனை எதிர்த்து யுத்தம் செய். பயமாக இருந்தால் சொல், நீ உன் னையே சூரன் என்று சொல்லிக் கொண்டிருப்பதில் பயனில்லை. சூரனாக இருந்தால் ராமனை எதிர்த்துப் போர் செய். உன்னுடைய ராஜ்யத்திற்குள் புகுந்திருக்கும் இந்த

யுவர்கள் உன் குலத்தை அழித்துத் தீர்க்க நிச்சயித்திருக்கிறார்கள்" என்றாள்.

தன் சபையிலேயே இவ்விதம் சகோதரி தன்னை அவமானப்படுத்திப் பேசிய மொழிகள், கரன் உள்ளத்தில் சூலம் போலப் பாய்ந்தன.

"இந்த அற்பனைக் கண்டு நீ இவ்வளவு பயந்து பேசுகிறாய். இன்னும் ஒரு கணம் காத்திரு. அவன் ரத்தத்தை நீ குடிப்பாய்!" என்று கரன் எழுந்தான்.

"நீ ஒருவனாகப் போகாதே! சேனையைத் திரட்டிக் கொண்டு போ!" என்றாள்.

அப்படியே கரனும் உத்தரவிட்டான். சகலவித ஆயுதங்களும் கொண்ட பெரிய சேனை, தூஷணன் தலைமையில் சென்றது. பின்னால், கரனும் மெதுவாகத் தேரில் சென்றான். போகும்போது அரக்கன் அபசகுனங்களைக் கண்டான். அவன் சிரித்துவிட்டு "துர் நிமித்தங்களைக் கவனிக்காதீர்கள். நான் இதுவரை எந்த யுத்தத்திலும் தோற்றதில்லை. துஷ்டர்களாகிய இந்த அற்ப மானிடப் பூச்சிகளை நசுக்கிவிட்டு வெகு சீக்கிரத்தில் திரும்புவோம்" என்று தன் சேனைக்குக் கர்ஜித்து சொன்னான். துர்நிமித்தங்களால் கொஞ்சம் பயமடைந்த அந்தச் சேனையும், மறுபடியும் உற்சாகமடைந்து சென்றது.

* * *

சேனை வரும் ஓசையைக் கேட்ட ராம லக்ஷ்மணர்களும் யுத்தத்துக்குத் தயாரானார்கள்.

"லக்ஷ்மணா, நிமித்தங்களைப் பார்த்தாயா? யுத்தம் வரும் என்பது நிச்சயம். ஜன ஸ்தானத்து ராக்ஷஸர்கள் அழிந்து போவது நிச்சயம். நீ ஆயுதங்களும் கவசமும் தரித்து, சீதையை அழைத்துப் போய்த் தகுந்த ஒரு மலைக் குகையில் ஜாக்கிரதையாக இருப்பாய். நான் இங்கே நின்று இந்த ராக்ஷஸ சேனையைப் பார்த்துக் கொள்ளுகிறேன். தாமதிக்க

வேண்டாம். எனக்குத் துணை வேண்டியதில்லை" என்று தம்பிக்குச் சொல்லிவிட்டு, ராமன் கவசம் பூண்டு ஆயுதபாணி யானான்.

லக்ஷ்மணன் ராமன் சொன்ன வண்ணம் சீதையை அழைத்துக் கொண்டு மலைக்குச் சென்றுவிட்டான்.

ஆகாயத்தில் தேவர்களும் கந்தர்வ சித்த சாரண கணங்களும் யுத்தத்தைப் பார்க்க வந்துவிட்டார்கள். ராமனு டைய விஜயத்தை விரும்பி அவர்களும் சுவஸ்தி சொன் னார்கள்.

ஒருவனாக நின்று எப்படி இந்தப் பெருஞ் சேனையைத் தாக்கி வெற்றியடையப் போகிறான் என்று ரிஷிகள் கவலை கொண்டார்கள். அச்சமயம் வில்லை வளைத்து நின்ற ராமச்சந்திரன் முகத்தில் ஜொலித்த தேஜஸானது, பினாகி வில்லை வளைத்த ருத்திரனுடைய தேஜஸைப் போலவே ஜொலித்தது.

அரக்கன் சேனை வேகமாக வந்துவிட்டது. சிம்ம நாதங்களும், வில்களின் டங்காரங்களும், பேரிகை நாதமும் கிளம்பி வனம் நிறைந்துவிட்டது. காட்டு மிருகங்கள் எல்லாம் பயந்து இங்கும் அங்கும் சிதறியோடின. ராமன் வில்லைப் பிடித்து நாண் ஏற்றி நின்றான். ஆகாயத்தில் மேகக் கூட் டங்கள் சூழ்வனபோல் ராக்ஷஸ சேனை ராமனைச் சூழ்ந்தது.

யுத்தம் மிகக் கோரமாக நடந்தது. ராமன் உடல் எல்லாம் அடிபட்டும் அசையாமல் நின்றான். இந்தப் பெருஞ் சேனையிடமிருந்து எப்படி ராமன் தப்புவான் என்று தேவர்களும் கவலைப்பட்டார்கள்.

ராமனுடைய பாணங்களுக்கு ஆயிரக் கணக்கான ராக்ஷஸ வீரர்கள் இரையானார்கள். தூஷணனே நேரில் ராமனுக்கு எதிரில் நின்று யுத்தம் செய்தான். ராமன் தன் வில்லை வளைத்து மண்டலமாகத் தன்னைச் சுற்றிப் பாணங் களைச் செலுத்தி வந்தான். வில்லில் அம்பும் பாணமும்

பூட்டுவதோ, அவை நாணினின்று விடுபடுவதோ கண்ணுக்குத் தெரியவில்லை. ராமச்சந்திரன் நின்ற இடத்திலிருந்து, சூரிய மண்டலத்திலிருந்து கிரணங்கள் வீசுவது போல, பாணங்கள் பூமியில் எட்டுத் திக்குகளிலும் பரவிச் சென்று, ஆயிரக்கணக்கான வீரர்கள், தேர்கள். யானைகள். குதிரை முதலிய வாகன விலங்குகள் அறுபட்டுப் பலபல வென்று பூமியில் வீழ்ந்து மாள்வதுதான் காணப்பட்டது. ஆகாயத்தில் அவன் செலுத்திய பாணங்கள் அரக்கருடைய உடல்களைத் துளைத்து, ரத்தத்துடன் வெளிப்பட்டு கொழுந்துவிட்டு எரியும் நெருப்பைப் போல் காணப்பட்டன.

அரக்கருடைய சேனை நிர்மூலமாயிற்று! ராமன் காலாந்தக ருத்திரனைப் போல் நின்றான்.

* * *

மறுபடியும் தூஷணன் ஒரு பெரும்படைப் பகுதியுடன் ராமன்மேல் பாய்ந்தான். கொஞ்ச நேரம் அவனுடைய அட்டகாசம் நடந்தது. பிறகு ராமனுடைய பாணங்களுக்கு அவன் தேர், தேர்க் குதிரைகள், சாரதிகள் எல்லாம் இரையாகின. அவனே கீழே குதித்துத் தண்டாயுதத்துடன் ராமன் மேல் பாய எத்தனித்தான். ராமனுடைய பாணங்களால் அவன் இரு கைகளும் அறுபட்டுத் தரையில் பெரிய யானையைப் போல் விழுந்து மாண்டான்.

தூஷணன் மாண்டதைப் பார்த்த மற்ற ராக்ஷஸப் படை வீரர்கள் ஒன்று சேர்ந்து ராமச்சந்திரன் மேல் பாய்ந் தார்கள். அவர்களும் கோதண்டத்திலிருந்து வெளிப்பட்ட பாணங்களுக்குப் பலியானார்கள்.

இவ்வாறு கரனுடைய சேனை முற்றிலும் மாண்டது. சமுத்திரம்போல் ஓசை கிளப்பிய பெரும்சேனை அவ்வளவும் சப்தம் அடங்கிப் போய்ப் பிரேதங்களாகவும், வெட்டித் துண் டாக்கப்பட்ட ஆயுதங்களாகவும் தேர்களாகவும் கிடந்தன!

* * *

கரன், திரிசிரஸ் இருவருமே மிஞ்சினார்கள். அடங்கா ரோஷத்துடன் கரன் முன்சென்று ராமனோடு யுத்தத்தில் கலக்கப் போனான். திரிசிரஸானவன் கரனை நிறுத்தி, "நான் முன்னால் சென்று ராமனைக் கொல்வேன், வெற்றியுடன் ஜனஸ்தானம் திரும்புவோம். அல்லது ராமனால் நான் மாண்ட பின், நீ ராமனை எதிர்ப்பாய்" என்று சொல்லி, அவனைத் தடுத்துவிட்டு, அந்த மூன்று தலை அரக்கன் தேர் ஏறி ராமனைத் தாக்கினான்.

திரிசிரஸ் ராமன்மீது பாணங்கள் விட்டான். அவற்றைப் பொறுத்து ராமன் கால சர்ப்பங்களைச் செலுத்த ஆரம்பித்தான். முடிவில் திரிசிரஸ் ரத்தம் கக்கித் தரையில் விழுந்து மாண்டான். அவனுடன் வந்த அரக்கர்கள் துஷ்டமிருகங்களைக் கண்டு மான்கள் ஓடுவதுபோல் கலைந்து ஓடினார்கள்.

இதைப் பார்த்த கரன் பயந்தோடிய அரக்கர்களை நிறுத்தி, தன் ரதத்தை ராமன்மேல் செலுத்தினான். அவனுடைய கர்வம் இதற்குள் அழிந்துவிட்டிருந்த போதிலும், பலத்த யுத்தம் செய்தான். இருவருடைய பாணங்களும் ஆகாயத்தை மறைத்தன.

கரன் யமனைப்போல் தேரில் நின்று பாணங்கள் விடுத்தான். ராமச்சந்திரன் தன் வில்லின்மேல் கொஞ்ச நேரம் சாய்ந்து நின்றான். அச்சமயம் கரன் விடுத்த அம்புகளால் ராமனுடைய கவசம் அறுபட்டுக் கீழே விழுந்தது. உடல் வெளிப்பட்டுச் சூரியனைப்போல் சக்கரவர்த்தித் திருமகன் பிரகாசித்தான்.

ராமன் வைஷ்ணவ வில்லை எடுத்தான். கரனுடைய ரதம், வில் எல்லாவற்றையும் துவம்சமாக்கினான். ரதமும் வில்லும் இழந்த கரன் கதாயுதம் எடுத்து ராமனை எதிர்க்க நின்றான். யுத்தத்தைப் பார்த்துக் கொண்டிருந்த தேவரிஷி கணங்கள் அச்சமயம் கவலையுடன் கைகூப்பி நின்றார்கள்.

"ஏ கரனே" என்று ராமன் சொன்னான். "மக்களை இம்சித்து வந்தாய். உலகத்தாருக்குத் துக்கம் விளைவித்து வருபவன் எவ்வளவு பலவானானாலும், மாள்வான். வனத்தில் தவம் செய்தும், விரதம் காத்தும் வந்த ரிஷிகளை ஏன் துன்புறுத்தியும் கொன்றும் வந்தாய்? அந்தப் பாவங்களின் பயனை இப்போது அடையப்போகிறாய். பாப காரியங் களைச் செய்து, உலகத்தின் வெறுப்பைச் சம்பாதித்தவர்கள் அழிந்து போவது நிச்சயம். ரிஷிகளைக் கொன்று தின்றீர் களே, அந்த ரிஷிகள் விமானத்தில் அமர்ந்து வானத்திலிருந்து பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். கொடிய அரக்கர் களை நிர்மூலமாக்கவே நான் தண்டகாரண்யத்துக்கு வந்திருக் கிறேன். என் பாணங்கள் உன் குலத்தார் உடல்களில் புகுந்து உயிரைக் குடிக்கும். யுத்தம் செய். உன் தலை பனங்காய்போல் கீழே உருளப் போகிறது!"

"அடே மனிதப் பூச்சியே!" என்றான் கரன். "தசரதன் மகனே! ஏன் அதிகமாகப் பேசுகிறாய்? பாமர அரக்கர்களைக் கொன்றுவிட்டாய் என்று கர்வம் கொண்டுவிட்டாயா? வீரன் தன்னைத்தானே புகழ்ந்து பேசிக்கொள்ள மாட்டான். நீ பேசுவது அற்பர்கள் பேச்சு. குலத்திலிருந்து நீக்கப்பட்ட க்ஷத்திரியர்கள்தான் இப்படி வீரம் பேசுவார்கள். பொரு ளற்ற பேச்சுப் பேசாதே! யுத்தம் செய். மரணம் அடுத்து நிற்கும்போதுதான் இத்தகைய தற்புகழ்ச்சிப் பேச்சுக் கிளம்பும். உன்னுடைய அற்ப குணம் இதனின்று வெளியா யிற்று. காட்டுப் புல் பெரிதாக எரிவதுபோல் மிகப் பிரகாச மாகப் பேசுகிறாய். அது பயனற்ற நெருப்பாகும். இதோ கதையைப் பிடித்து நிற்கிறேன். உன் உயிரைக் கொண்டு போகும் யமனாக நிற்கிறேன். மாலை ஆகப் போகிறது. யுத்தம் நிறுத்த வேண்டியதாகும். ஆனபடியால் உடனே உயிரை இழக்கத் தயாராக நில். நீ கொன்ற இவ்வளவு பேர்களின் பழியைத் தீர்க்க நான் வந்தேன்!" என்று சொல்லிக்

கையில் பிடித்த கதாயுதத்தைச் சுழற்றி ராமனை நோக்கி எறிந்தான்.

ராமனுடைய பாணங்களால் கதாயுதம் அந்த நிமிஷமே துண்டிக்கப்பட்டு வேகமற்றுத் தரையில் விழுந்தது.

"அரக்கனே! உன் வீரப்பேச்சு முடிந்ததா! இன்று நீ சாவாய். இந்த வனம் இனிச் சுகமாக இருக்கும். முனிவர்களை இம்சித்த உன் ரதத்தைப் பூமி குடிக்கப்போகிறது" என்றான் ராமன்.

இவ்வாறு ராமன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, கரன் அங்கிருந்த ஒரு பெரிய ஆச்சா மரத்தைப் பிடுங்கி உதட்டைக் கடித்துக்கொண்டு, "நீ செத்தாய்" என்று சொல்லி ராமன்மேல் வீசினான்.

இதையும் ராமன் தன் திவ்விய பாணங்களால் தடுத்து, வெட்டித் தள்ளி, இனி தாமதம் கூடாது, இவனைச் சீக்கிரம் முடித்துவிடவேண்டும் என்று, பல பாணங்களை அவன்மேல் எய்து, அவன் உடலை ரத்தப் பிரவாகத்தில் மிதக்கச் செய்தான்.

பெருங்காயங்கள் அடைந்த வெறியுடன் கரன் ராமன் மேல் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தான். வில் வளைத்துப் பாணம்விட இடமில்லாமல் நெருங்கவே, ராமன் பின்னுக்குக் குதித்து ஓர் இந்திர பாணத்தை விடுத்து அரக்கனுடைய மார்பைப் பிளந்தான். கரன் மாண்டான்.

"ஆர்த்தெ ழுந்தனர் ஆடினர் பாடினர்
தூர்த்த மைந்தனர் வானவர் தூய்மலர்
தீர்த்த னும்பொலிந் தான்கதி ரோன்திசை
போர்த்த மென்பனி போக்கிய தென்னவே."

தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள். "பாப கர்மங்கள் நிகழ்த்திய அரக்கனைக் கொன்று ஒழித்தான். தண்டக வனத்தில் இனிச் சுகமாக மக்கள் இருக்கலாம். மூன்று நாழிகைக்குள் கரதூஷணர்களையும் திரிசிரஸையும் அவர்க

ளுடைய சேனையையும் ராமச்சந்திரன் நிர்மூலம் செய்து விட்டான். இவன் அல்லவோ வீரன்" என்று சொல்லிக் கொண்டு தேவர்கள் திரும்பினார்கள்.

சீதையும் லக்ஷ்மணனும் மலையினின்று திரும்பி னார்கள். ரிஷிகளுக்குக் கொடுத்த அபய உறுதியைச் சொல் லிய வண்ணம் காத்த தனி வீரன், ராமனைத் தம்பி தழுவிக் கொண்டு அடைந்த மகிழ்ச்சி சொல்லுக்கு அடங்காது.

அரக்கர் உடல்களினின்று சிதறி விழுந்த ரத்தத்தையும், பாதங்களில் படிந்திருந்த யுத்த களத்துத் தூசியையும் தம்பியும் தேவியும் விட்ட கண்ணீர் கழுவிவிட்டது என்கிறார் கம்பநாட்டாழ்வார்.

"விண்ணில் நீங்கிய வெய்யவர் மேனியின்
புண்ணின கரும் பொடிகளும் போயுக
அண்ணல் வீரனைத் தம்பியும் அன்னமும்
கண்ணின் நீரினில் பாதம் கழுவினார்."

ஒருவன் தனியாக எவ்வாறு இவ்வளவு காரியங்களைச் செய்து தீர்த்தான்? ஒரு பசுமாடு தன் கன்றைக் காக்க மக்கள் கூட்டத்தின்மேல் பாய்ந்து, அவர்கள் அத்தனை பேரும் விழுந்து ஓடிச் சிதறிப் போவதைப் பார்த்தால், உண்மை உணர்ச்சி பாய்ந்த ஓர் உயிருக்குள் எவ்வளவு வேகமும், சௌரியமும் பலமும் வந்து சேரும் என்பதை ஒருவாறு காணலாம். தெய்வமே மனித உருவத்தில் வந்து அனாதை களுக்கு அபயம் தந்து, அந்தச் சத்தியத்தைக் காக்க முனைந்து விட்டால், அந்த மனிதன் எவ்வளவு செய்வான் என்பதைச் சிந்தனை சிறப சக்தியைக் கொண்டு காணலாம். ராமனை அவதார புருஷனாகத்தான் கம்பரும் வால்மீகியும் எடுத்துக்கொண்டு, வெவ்வேறு விதத்தில் நமக்கு நிகழ்ச்சி களைச் சித்திரிக்கிறார்கள். சில இடங்களில் தெய்வப் பிரசாதம் பெற்ற வீரனாகவும், சில இடங்களில் தெய்வமாக வேயும் எடுத்துக் காட்டுகிறார்கள். ஆனால் ராமன் தன்னைத்

தெய்வமாக எப்போதும் எண்ணவில்லை. மனிதனாகவே, க்ஷத்திரிய வீரனாகவே, சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு, தரும முயற்சிகளில் ஈடுபட்ட மானிடனாகவே, வேதாந்த ஞானம் பெற்ற தீரனாகவே, எல்லையற்ற சக்தியைப் பெறக்கூடிய ஆத்மாவாகவே தன்னை எண்ணிவந்தான்.

அரக்கருடைய பெருஞ்சேனை ராமனைத் தாக்க, திடீர் என்று நின்று, 'அதோ அவன்தான்' என்று சூர்ப்பணகை அவர்களுக்குக் காட்டிய சமயம், ராமன் என்ன செய்து கொண்டிருந்தான் என்பதைக் கம்பர் பாடுகிறார்,

''துமிலப் போர்வல் அரக்கருக்குச் சுட்டினாள்
அமிலத் தொல்பெயர் ஆயிரத்(து) ஆழியான்
நிமிலப் பாத நினைவின் இருந்த அக்
கமலக் கண்ணனைக் கையினில் காட்டினாள்.''

நாராயணனோ தானே ராமன் என்று அறிவான். ஆனால் ராமன் தானே நாராயணன் என்றெண்ணவில்லை. நாராயணனைத் தியானித்து, ஆன்ம பலமும் எல்லாப் பலமும் பெற்று வந்தான்.

## 48. லங்கேசன் மதியிழந்தான்

பஞ்சவடி யுத்தத்தில் அரக்கர் கூட்டத்தில் பிழைத்து ஓடியவர்களில் ஒருவனான அகம்பனன் இலங்கைக்குச் சென்று, ராவணன் சந்நிதியில் நின்று, "ஜன ஸ்தானத்தில் இருந்த நம்முடைய ஜனங்கள் அநேகமாக எல்லோரும் மாண்டு போனார்கள். ஜன ஸ்தானம் அழிந்தது. நான் எப்படியோ தப்பி வந்தேன்" என்றான்.

இதைக் கேட்டதும், ராவணனுக்குப் பெருங்கோபம் பற்றி எரிந்தது. "யாரது என் அழகிய ஜன ஸ்தானத்தை அழித்தது? யமனா? அக்னியா? விஷ்ணுவா? யமனையும் கொல்லுவேன். வாயுவையும் அசையாது மடக்கி நிறுத்து

வேன். நான் இருக்க யார் ஜனஸ்தானத்தை அழித்தது? என் ஆட்களைக் கொன்றது? சொல் உடனே" என்று அடங்காத கோபம் மேலிட்டு ராவணன் எழுந்தான்.

ராக்ஷஸேந்திரனுடைய கோபத்தைப் பார்த்துப் பயந்த அகம்பனன், "அபயம் தந்தால் சொல்லுகிறேன், கேட்பீர்!" என்றான்.

பிறகு அகம்பனன் நடந்த நிகழ்ச்சிகளைச் சொன்னான்: "தசரத மகாராஜாவின் குமாரன் ராமன் என்கிற வீரன், சிம்மத்தையொத்த யுவன், பெரும் புகழ்பெற்ற ராஜ குமாரன், மானிடர்களுள் அவனுக்குச் சமமான பலமும் பராக்கிரமமும் பெற்றவர் யாருமில்லை. அவன் பஞ்சவடியில் கரனையும் தூஷணனையும் யுத்தம் செய்து வதம் செய்து விட்டான்" என்றான்.

ராக்ஷசாதிபதி விஷப்பாம்பைப்போல் சீறி, "என்ன நீ சொல்லுவது? இந்திரனும் தேவகணங்களும் நீ சொன்ன ராமனுக்குச் சகாயமாக வந்து யுத்தம் செய்தார்களா?" என்றான்.

"மகாராஜாவே! அப்படியொன்றுமில்லை. ராமன் ஒருவனே நம்முடைய முழுச் சேனையையும், சேனைத் தலைவர்களையும், கரனையும், தூஷணனையும் கொன்றான். அவன் செலுத்திய பாணங்கள் ஐந்து தலைப் பாம்புகள் போல் அரக்கர்களை ஓடஓடத் துரத்திக்கொண்டு போய், எங்கிருந்தாலும் தொடர்ந்து சென்று அவர்களைக் கொன்றன." இவ்வாறு கூறி, ராமனுடைய பாணங்களின் வேகத்தையும், அவனுடைய அபார சக்தியையும் விவரித்துச் சொன்னான்.

தசரதன் மகன் ராமன், தம்பி லக்ஷ்மணனுடன் பஞ்சவடியில் இருந்துகொண்டு, வேறு உதவியின்றி இந்தக் காரியத்தைச் செய்தான். அவர்களுக்குச் சகாயமாக எந்தத்

தேவர்களும் வரவில்லையென்றும் அகம்பனன் சொன்னவுடனே, "சரி, இப்போதே நான் புறப்படுகிறேன். இந்த இரண்டு மனிதப்பூச்சிகளை நசுக்கிவிட்டுத் திரும்புகிறேன்" என்று ராவணன் எழுந்தான்.

"வேண்டாம், நில்!" என்று அகம்பனன் ராவணனை நிறுத்தி, ராமனுடைய பல பராக்கிரமத்தை நன்றாக விளக்கினான். விளக்கிவிட்டு, "நான் சொல்வதைக் கேள். இந்த ராமனை யுத்தம் செய்து வெற்றியடைய முடியாது. யாராலும் முடியாது. உன்னாலும் முடியாது. அபயம் தந்தபடியால் இப்படி உண்மையைத் தைரியமாக அரசன் முன்னிலையில் சொல்லத் துணிந்தேன். அவனைக் கொல்வதற்கு வழி ஒன்றே. அவனுடைய மனைவி அவனுடன் இருக்கிறாள். உலகத்தில் அவளுக்குச் சமமான அழகி வேறு இல்லை. அவளை எப்படியாவது நீ தூக்கி வந்துவிட்டாயானால், அவளை விட்டுப் பிரிந்து ராமன் உயிர்வைத்திருக்க மாட்டான்; இறந்து போவான். அவள்மேல் அவனுக்கு அபாரமான காதல். அவளை இழந்தானானால் உயிரை நீப்பான் என்பது நிச்சயம். இதைச் செய்ய வழி தேடுவாய். யுத்தம் வேண்டாம்" என்றான்.

சீதையின் அழகைப்பற்றிக் கேட்டதும் அரக்கனுக்கு ஆசை வளர்ந்துவிட்டது. அகம்பனன் சொன்னதை மிகவும் ரசித்தான். "நாளைக் காலையில் ரதம் ஏறிப் புறப்பட்டுப் போகிறேன். நீ சொல்லும் யோசனை மிகச் சரியானது" என்றான்.

* * *

அவ்வாறே ராவணன் கோவேறு கழுதைகள் பூட்டிய தன் ரதத்தில் ஏறி ஆகாய மார்க்கமாகச் சென்றான். மேகங்களுக்கிடையில் அந்தத் தங்கமயமான தேரானது சந்திரனைப் போல் பிரகாசித்தது. நேராக மாரீசன் ஆசிரமத்துக்குச் சென்றான்.

மாரீசன் ராக்ஷஸ அரசனுக்கு எல்லா உபசாரமும் முறைப்படி செய்துவிட்டு, "என்ன விசேஷம், இவ்வளவு அவசரமாக வந்தது?" என்று விசாரித்தான்.

"பிரிய மாரீசனே! என்னை நீதான் காப்பாற்ற வேண்டும். ஜனஸ்தானம் அழிந்துவிட்டது. நம்முடைய சேனை நிர்மூலமாய்விட்டது. இவையெல்லாம் தசரதன் மகன் ராமன் என்பவனுடைய காரியம். அற்புதமாகத்தான் இருக்கிறது. பழிவாங்க அவனுடைய மனைவியை நான் தூக்கிப்போக நிச்சயித்திருக்கிறேன். அதற்கு உன் யோசனையும் உதவியும் வேண்டும்" என்றான் ராவணன்.

"என்ன வேலையில் இறங்கினாய், ராவணா! எவனோ உன் பகைவன் உனக்குச் சர்வநாசம் உண்டாகச் சினேகிதனைப் போல் பாசாங்கு செய்து, இந்த யோசனையை உனக்குச் சொல்லியிருக்கிறான். ஏமாந்து அழிந்து போகாதே! சீதையை அபகரிக்கும் யோசனையை உனக்கு யார் சொன்னது? அரக்க சமூகத்தின் நாசத்தை விரும்பி யார் உனக்கு இந்தத் துராலோசனையைச் சொன்னது! சும்மா இருக்கும் பாம்பின் வாயில் கைவிட்டு, விஷப்பல்லைப் பிடுங்கப் போய்ச் சாகும் யோசனை. திரும்பிப் போய் உன் மனைவிகளுடன் சுகமாக இரு. பைத்தியக்காரன் மாதிரி ராமன் மனைவியை விரும்பாதே, அழிந்து போவாய்! ராமனுடைய கோபத்தைத் தூண்டிக் குலநாசம் சம்பாதித்துக் கொள்ளாதே" என்றான், அறிவாளியும் அனுபவப்பட்டவனுமான மாரீசன்.

மாரீசன் சொன்னதைக் கேட்டு இராவணன் இலங்கைக்குத் திரும்பிப் போனான். மாரீசன் சொன்ன புத்திமதி ராவணன் மூளையில் சரியாகவே புகுந்தது. அந்தச் சமயம் ராவணனுக்குத் தான் பெற்ற வரத்தில் தவறிப்போன விஷயம் தோன்றியிருக்கும். மானிட ஜாதியைப்பற்றித் தான் வரம் பெறவில்லை என்பதையும், ராமனுடைய பாணங்களினால் ஜனஸ்தானத்துச் சேனையும், கரன், திரிசிரன்,

தூஷணன் முதலிய மிகப்பெரிய வீரர்கள் அனைவரும் தோல்வியடைந்து மாண்டதையும் நினைத்து, ராவணன் மாரீசன் சொன்னதைச் சரியென்று ஒப்புக் கொண்டதாக நாம் எண்ணலாம்.

விதி இந்த முடிவோடு நிற்கவில்லை. ராவணன் தன்னுடைய சிம்மாசனத்தில் உட்கார்ந்திருந்தான். நெய் விட்டு வளர்த்த அக்கினியைப் போல் அவன் தேஜஸ் ஜொலித்துக் கொண்டிருந்தது. யாராலும் ஜெயிக்க முடியாத வீரன், தேவாசுரர்களோடும் மற்றவர்களோடும் செய்த யுத்தங்களில் சக்ராயுதத்தாலும், யானைகளின் தந்தங்களினாலும் உண்டான காயங்களின் வடுக்கள் அவன் கம்பீரத் தோற்றத்தை இன்னும் அதிக கம்பீரமாகப் பிரகாசிக்கச் செய்தன. ராவணனுடைய பல பராக்கிரமத்துக்கு எல்லையில்லை. அதருமத்துக்கும் எல்லையில்லை. தேவர்களைத் துன்புறுத்துவதிலும், யாகங்களைக் கெடுப்பதிலும், பர ஸ்திரீகளைப் பலவந்தம் செய்வதிலும், கோபாவேசமாக இன்னும் பலவித அக்கிரமங்கள் செய்வதிலும் அவனுக்குச் சமானமான துஷ்டன் யாருமே இல்லை. அவனைக் கண்டு தேவாசுர கணங்கள் அளவற்ற பயம் கொண்டிருந்தார்கள். எல்லாப் பிராணிகளையும் வாட்டிக் கதறச் செய்யும் சுபாவம் கொண்டவன். சகலவிதமான செல்வமும் யோக்கியமும் அடைந்து அசகாய சூரனாக விளங்கி, மரணபயமின்றி இலங்கையை ஆண்டு வந்தான். பத்துத்தலைகளும், விசாலமான கண்களும், இவற்றுக்கு ஈடாக மற்ற அவயவங்களும் கொண்ட பயங்கர சொரூபத்துடன் எல்லா ராஜ லக்ஷணங்களும், அவனிடம் விளங்கின.

திவ்விய ஆடையாபரணங்கள் அணிந்து, மந்திரிகள் சூழச் சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கும்போது, திடீரென்று சபையில் அதிர்ச்சி உண்டாக்கிக் கொண்டு அவனுடைய உடன் பிறந்தவளான சூர்ப்பணகை, மூக்கறுபட்ட அவலக்ஷண சொரூபத்துடன் சபைக்குள் பிரவேசித்தாள்.

"மூடனே! செல்வச் செருக்கிலும், கிராமிய போகத்திலும் மூழ்கிப் போயிருக்கிறாய். வரப்போகும் கஷ்டத்தை முன்பே தெரிந்து கொள்ள வேண்டிய ஸ்தானத்திலிருந்து கொண்டு, கெடுதி வந்த பிறகும் தெரிந்து கொள்ளாமலிருக்கிறாய். அற்ப சுகங்களில் மனதைப் பறிகொடுத்த அரசனைக் குடிகள் மதிக்க மாட்டார்கள். மரண பயமில்லாமலிருந்தால் மட்டும் போதுமா? செய்ய வேண்டிய காரியங்களைக் காலத்தில் கவனிக்காத அரசனுடைய ராஜ்யம் பாழாகிப் போகும். சாரணர்களைச் சரியாக உபயோகித்து ராஜ்யத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளை அறிந்து கொள்ளாத அரசன் அழிந்து போவான். உன்னுடைய ராஜ்யத்தில் என்ன நடந்தது? ஜன ஸ்தானத்தில் உன்னுடைய பந்துக்களுக்கு என்ன ஆயிற்று? உன்னுடைய சேனைக்கு என்ன நேரிட்டது? என்பதை நீ அறியாமல் சிங்காசனத்தில் அழகாய் உட்கார்ந்து கொண்டிருக்கிறாய். உன்னுடைய பகைவர்கள் உன்னை அழிப்பதற்குச் சமயம் எப்போது வரும் என்று காத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனபோதிலும் நீ உன் சாரணர்களைக் கேட்டு என்ன நடந்தது என்று தெரிந்து கொள்ளாமல் கிடக்கிறாய்; உன் மந்திரிகள் அறிவற்ற பாமரர்களாக இருக்கிறார்கள். ஜன ஸ்தானத்தில் உன்னைச் சேர்ந்தவர்கள்- தம்முடைய எதிரிகள் நடுங்கும்படியாக இவ்வளவு காலம் அரசு புரிந்துவந்தவர்கள் - இப்போது மாண்டு கிடக்கிறார்கள். இதை உணர்ந்தாயா? ஜன ஸ்தானத்துச் சேனையும் நிர்மூலமாயிற்று. ராமன் என்ற ஒரு மனிதப்பூச்சி தரைமேல் நின்று தேரும் யானையுமில்லாமல் அவ்வளவு பேரையும் கொன்றுவிட்டான்.'

"உனக்கு இது அவமானமாகப் படவில்லையே! உன் தங்கைக்கு என்ன ஆயிற்று என்று பார்த்தாயா? விசாரித்தாயா? இதுவரையில் உனக்கும் உன் ஆட்களுக்கும் பயந்து நடுங்கி வாழ்ந்த ரிஷிகளுக்கு இந்த ராமன் அபயம் கொடுத்துவிட்டான். உன்னுடைய ஜன ஸ்தானம் பாழாயிற்று. தண்ட

காரண்யத்தில் உன்னைப் பற்றியிருந்த பயம் முற்றிலும் தீர்ந்துபோயிற்று. தன்னைத்தானே பாராட்டிக் கொண்டிருப்பதோடு திருப்திபட்டுக் கிடக்கும் உனக்கு ஆபத்து நெருங்கிவிட்டது. உன்னை உன் குடிமக்கள் இனி மதிக்க மாட்டார்கள். ராஜ்யத்திலிருந்து துரத்தப்படுவாய் என்பது நிச்சயம். கட்டிக் கிழிந்துபோன துணியைப் போலத்தான் இனி உன்னை மக்கள் மதிப்பார்கள்.

"சாரணர்கள் வழியாக ராஜ்யத்தில் நடப்பதை அறிந்து கொண்டு வேண்டியதைச் செய்பவனே அரசன். உன் ராஜ்யத்தில் உன் ஜனங்களுக்கு உண்டான கஷ்டத்தை யாவது, அவமானத்தையாவது நீ அறியவில்லை. நீ எப்படி அரசனாக மதிக்கப்படுவாய்? உனக்குக் கோபமில்லை; கோபமில்லாத அரசன் என்னத்துக்கு உதவுவான்?

"கரனையும், திரிசிரனையும், தூஷணனையும், கரனுடைய முழுசேனா பலத்தையும் கொன்று நிர்மூலமாக்கி விட்ட ராமனுக்குச் சீதை என்ற ஒரு மனைவி இருக்கிறாள். காட்டில் அவனோடு தனியாக இருக்கிறாள். அவள் அழகை என்னவென்று சொல்வேன்! தேவ கந்தர்வ யக்ஷ கின்னர மனுஷ்யஜாதிகளில் இந்த அழகை இதுவரை நான் கண்ட தில்லை. உனக்கேற்ற பார்யை. அவளைக் கண்டதும் அவள் உன்னுடைய பொருள் என்று நிச்சயித்தேன். ராக்ஷச குலத்தைச் சேர்ந்த நான் ஓர் எண்ணம் கொண்டதும், அதை நிறைவேற்றுவதுதானே என் சுபாவம். உனக்காக நான் அவளைத் தூக்கி எடுத்துவர முயற்சி செய்தேன். பக்கத்தி லிருந்த அந்த ராமனுடைய தம்பி லக்ஷ்மணன் தடுத்து, என்மேல் பாய்ந்து, இப்படி என் அங்கங்களை அறுத்து அவமானப்படுத்தி விட்டான், உனக்காக நான் இந் நிலைமையை யடைந்தேன். இப்பழியைத் தீர்த்து உன் குலத் தின் மானத்தைக் காப்பாற்ற உனக்கு ஆசையிருந்தால் உடனே புறப்படு.

"என் பழி எப்படியாயினும், உனக்குத் தகுந்த அழகியைச் சம்பாதித்துக்கொள். சீதையைப் போன்ற அழகி யை நீயன்றி வேறொருவன் அனுபவிக்கலாமா? அவளை நீ அடைந்து ராமனை அவமானப்படுத்தினாயானால் அநியாய மாய் மாண்ட உன் வீரர்கள் திருப்தியடைவார்கள். அவர்கள் எனக்குச் செய்த அவமானத்துக்குப் பழி தீரும். உன் சக்தி உனக்குத் தெரியாமல் கிடக்கிறது. சீதையை எளிதில் அடைந்து அனுபவிப்பாய். உன் குலத்திற்கு ஏற்பட்ட அவ மானத்தைக் கவனிக்காமல் நீ இருக்கலாமா? ராமனை எதிர்த்த கரனும் தூஷணனும் ஜனஸ்தானத்தில் மடிந் தார்கள். அதையும் நினைவில் வைத்து யோசித்துச் செய்ய வேண்டியதைச் செய். உன் சகோதரி அடைந்த அவமானம் உன்னுடைய அவமானமாகும். நம்முடைய குலத்தில் உனக் குள்ள கௌரவத்தைக் காப்பாற்றிக்கொள்?" என்றாள் சூர்ப்பணகை.

* * *

உடன் பிறந்தவள் இவ்வாறு திடீர் என்று பிரவேசித்துத் தன்முன் நின்று இடித்துச் சொன்ன பேச்சுக் களையும் சீதையைப்பற்றிய ஆசை பொங்கும் பேச்சையும் கேட்டு, மந்திரிகளிடம் சபை முடிந்தது என்று சொல்லிவிட்டு ராவணன் தனியாக யோசிக்கப் போனான். மாரீசன் சொன்னது நினைவிருந்தபடியால் யோசிக்கலானான். நன்மை தீமைகளை நன்றாக மனத்தில் யோசித்து ஒரு முடிவுக்கு வந்து விட்டான். விமான சாலைக்குச் சென்று தேரோட்டியிடம் சொன்னான்; "உடனே ரதம் தயாராகலாம் யாருக்கும் தெரியவேண்டியதில்லை" என்றான்.

பிசாசு முகங்கள் கொண்ட பருத்த கோவேறு கழுதைகள் பூட்டிய அவனுடைய சுவர்ண ரதம் தயாராய் நின்றது. அதில் ஏறி ஆகாய மார்க்கமாகக் கடலும் நாடும் நகரங்களும் வனங்களும் எல்லாவற்றையுமே வெகுவேகமாகத்

தாண்டிச் சென்றான். இஷ்டப்பட்ட இடம் செல்லும் மாயரதம் போகும்போது, கீழே பார்த்த வசந்த காலக் காட்சிகளெல்லாம் அவனுடைய காமத்தை அதிகரித்தன.

மாரீசனுடைய ஆசிரமத்தை அடைந்தான்; ஜடையும் மரவுரியும் தரித்து, ஆசார நியமத்துடன் விரத வாழ்க்கை நடத்தி வந்த மாரீசனைக் கண்டான்.

ராக்ஷசேந்திரனும் தனக்குப் பந்துவுமான ராவணனைக் கண்டதும் முறைப்படி உபசாரம் செய்துவிட்டு "மறுபடியும் சொல்லாமல் இவ்வளவு தூரம் வந்த விஷயமென்ன?" என்று கேட்டான்.

பேச்சில் வல்லமை பெற்ற ராவணன் சொல்ல ஆரம்பித்தான்.

"நான் பெருந்துன்பத்தில் சிக்கித் துயரப்பட்டுக் கொண்டிருக்கிறேன். என் துயரத்தை நீதான் நீக்கமுடியும். உன்னைச் சரண் புகுந்தேன். என் ஆக்ஞையின்படி என் உடன் பிறந்தவர்கள் ஜன ஸ்தானத்திலிருந்து கொண்டு என் காரியத்தை நடத்தி வந்தது உனக்குத் தெரிந்த விஷயம். அவர்களும் அவர்களுக்குச் சகாயமாக இருந்த வீரர்களும் இவ்வளவு காலம் அங்கே அரசு புரிந்து வந்தார்கள். இப்போது ராமன் என்பவன் அத்தனை வீரர்களையும் முழுச்சேனையையும் அனாயாசமாகக் கொன்று தொலைத்து விட்டான். தேராவது வேறு வாகனமாவது இல்லாமல் தரைமேல் நின்று அந்த மனிதன் நம்மவர்கள் அனைவரையும் பாணங்களைச் செலுத்திக் கொன்றுவிட்டான். தண்டகாரண்யத்தில் இப்போது ராக்ஷசர்களைப் பற்றிய பயமேயில்லாமல், ரிஷிகளுடைய கொண்டாட்டமாக இருக்கிறது. இந்த ராமனானவன் தகப்பனால் காட்டுக்குத் துரத்தப்பட்ட வகையில்லாத நீசன். மனைவியையும் கூட்டிக்கொண்டு காட்டில் நாடோடி வாழ்க்கை நடத்துகிறான். இந்தத் துஷ்டன் தவவேஷம் போட்டுக் கொண்டு இந்திரியானுபவத்தில் ஈடுபட்டிருப்பவன். தரும மார்க்கத்தை விட்டவன்.

எந்தக் காரணமுமின்றி மிருக பலத்தின் அகங்காரத்தால் என் உடன் பிறந்தவளுடைய மூக்கையும் காதையும் அறுத்து, நம் குலத்துக்குப் பெருத்த அவமானம் இழைத்திருக்கிறான். கோரமான முறையில் துன்பமும் அவமானமும் அடைந்த என் உடன் பிறந்தவள் இதைப் பற்றி முறையிடுகிறாள். நான் இதையெல்லாம் பார்த்துக் கொண்டு, சும்மா இருந்தேனானால் நான் அரசன் ஆவேனா? இந்தப் பழியைத் தீர்க்க இந்த ராமனுடைய மனைவியைத் தண்டகாரண்யத்திலிருந்து தூக்கிப்போவதாக நிச்சயித்து விட்டேன். இந்த ராமனைத் தண்டித்து அவமானப்படுத்துவது என் குலக்கடமை. இதற்கு உன் சகாயம் வேண்டும். நீயும் என் சகோதரர்களும் இருக்க எனக்கு என்ன பயம்? உன் உதவியைக் கோருகிறேன். சௌர்யம், பலம், யுக்திமாயைகள் இவற்றில் உன்னைப்போல் உலகத்தில் வேறு யார்? உன்னிடம் நான் இதற்காகத்தான் வந்திருக்கிறேன். நீ மறுக்கக் கூடாது. நான் சொல்லுவதைக்கேள். நீ ஒரு பொன் மானாக வேண்டும். சுவர்ணமும் வெள்ளிப் புள்ளிகளும் கண்ணைக் கவரும் விசித்திர வடிவமும் பொருந்திய மானாக உருவம் கொண்டு, ராமனுடைய ஆசிரமத்தண்டை, வனத்தில் சீதைக்கெதிரில் நீ சஞ்சாரம் செய்யவேண்டும். ஸ்திரீ சுபாவத்தின்படி அவள் நிச்சயமாக ராமனையும் லக்ஷ்மணனையும் 'இந்த மானைப் பிடித்துத்தர வேண்டும் என்று வற்புறுத்துவாள். அவளை விட்டு அவர்கள் விலகி அவள் தனியாக இருக்கும் சமயத்தில் நான் சுலபமாக அவளைப் பிடித்துத் தூக்கிப் போய்விடுவேன்.

"சீதை மகா சௌந்தர்யம் கொண்ட அழகி. மனைவியையிழந்த ராமன் மனம் உடைந்து பலவீனமடைவான். அந்த நிலையில் அவனைத் தாக்கி, பழிவாங்கித் திருப்தியடைவேன்."

இதைக்கேட்ட மாரீசனின் முகம் சுண்டி வாய் உலர்ந்தது; ராவணனைக் கண்கொட்டாமல் பார்த்த வண்

ணமாக நின்றான். ராமனுடைய பராக்கிரமத்தை அறிந்த மாரீசன், ராவணனுடைய தீர்மானத்தைக் கேட்டுப் பயந்து போனான். அனுபவம் பெற்ற அறிவாளியும், தவமிருந்து ஓரளவு ஞானமும் ஈசுவர பக்தியும் அடைந்தவனும் ஆன மாரீசன் பார்த்தான். ராவணனுடைய உள்ளத்தை அறிந்து கொண்டான், 'விதி இவனைக் கயிறு போட்டு இழுத்துப் போகிறது. இதை இனித் தடுக்க முடியாது!' என்று கண்டு கொண்டான். ராவணன் குலத்தின் கவுரவம், அரசியல் நீதி, சூர்ப்பணகையின் அவமானம் இவற்றையெல்லாம் காரணம் காட்டிப் பேசினானே யொழிய, சீதையை அபகரிக்கும் துன்மார்க்க எண்ணத்திலேதான் அவன் புத்தியை இழந்து விட்டான். மாரீசன் அதை நன்றாகத் தெரிந்து கொண்டான்.

சூர்ப்பணகையின் கருத்தையும் நாம் கொஞ்சம் ஆராயவேண்டும். காம வெறியினால் அவளுக்கு அனர்த்தம் ஏற்பட்டது. மூக்கு அறுத்ததும், துன்பப்படுத்தியதும் லக்ஷ்மணன் ஆயினும் ஸ்திரீ சுபாவம், அவன்மேல் அவ்வளவு கோபம் இல்லை. தன் எண்ணம் நிறைவேறாமல் போனதற்குக் காரணம் நடுவிலிருந்த சீதைதான். அவளுடைய அழகும் குணமுமே தன்னைக் கெடுத்தன என்று அவள் பேரில் சூர்ப்பணகைக்கு அதிக ரோஷம் உண்டாகிவிட்டது. அவளை அவமானப்படுத்திப் பழிதீர்த்துக் கொள்ள வேண்டும் என்பதே சூர்ப்பணகையின் உள்ளத்தைப் பற்றிக்கொண்ட ஆசை. ராவணனை அந்தக் காரியத்தில் உபயோகிக்கவே அவள் சீதையின் உருவத்தைக் காமாதுரனான ராவணன் முன் நிறுத்தி, அவன் எண்ணத்தை அந்த வழியில் செலுத்தினாள். மற்ற விஷயங்களைப் பற்றிப் பேசியதெல்லாம் உண்மைக்கு மாறான வழியில் சந்து அடைக்கவே, குலத்தின் கவுரவம், பந்துக்கள் உயிர் இழந்தது முதலிய காரணங்களைச் சேர்த்துச் சொல்லி ராவணனுக்கு வழி காட்டினாள். முக்கிய நோக்கம் காமத்தைத் தூண்டி, ராவணனைச் சீதையண்டை

போகச் செய்வது. அவனும் இந்தச் சூழ்ச்சிக்குள் அகப்பட்டுப் போனான்.

## 49. மாரீச மான்

மாரீசன் ராவணனைப் பார்த்துச் சொன்னான்.

"ராக்ஷஸ மன்னனே! நீ சொன்னதை யெல்லாம் கேட்டேன். உன் பேச்சைக் கேட்டு எல்லையற்ற துக்கம் உண்டாகிறது. யோசனை சொல்லவேண்டிய அவசியம் ஏற்படும் போது, கேட்பதற்கு இனிமையான வார்த்தை களைப் பேசுவது சுலபம். ஆனால், பிரியப்படாத ஹிதத்தைக் கண்டிப்பாகச் சொல்லுவதற்கு யாரும் முன்வரமாட்டார்கள். சொன்னாலும் யாரும் கேட்பார் இல்லை. எப்படியாயினும் உனக்கு நன்மையைச் சொல்ல விரும்புகிறேன். தித்திப்பாகப் பேசி உன்னைத் திருப்தி செய்துவிட்டு, உன்னை அபாயத்தில் தள்ளிக் கெடுத்து விடுவதில் எனக்கு இஷ்டமில்லை.

"ராமனைப் பற்றி உனக்குச் சொல்லியிருக்கிறவர்கள் உண்மையைச் சொல்லவில்லை. அறியாதவர்களுடைய பேச்சைக்கேட்டு ஏமாந்து போகாதே! ராமன் மகாவீரன். உத்தம குணங்கள் வாய்ந்தவன். அவனுடைய கோபத்தை சம்பாதித்துக் கொண்டு, குலமும், லங்காபுரியும் அழிந்து போவதற்கு வழிதேடாதே. சீதை உன்னை நாசம் செய்வதற்காகவே அவதரித்தாளோ என்னவோ! உன்னை அரசனாகக் கொண்ட அரக்கர் குலமும் லங்காபுரியும் சீக்கிரத்தில் ராமனால் நாசம் செய்யப்படும். உலகத்திலுள்ள ராக்ஷசகுலமே நிர்மூலமாவதற்கு வழி தேடுகிறாய். யார் உனக்கு இந்த எண்ணத்தைத் தூண்டியது? பெரும் விபத்துக்கு உன்னையும், உன் ராஜ்யத்தையும், உன் குலத்தாரையும் ஆளாக்கவே இந்தக் கெட்ட உபதேசம் யாரோ செய்திருக்கிறார்கள்.

"ராமனுடைய தந்தை அவனிடம் குற்றம் கண்டு அவனைக் காட்டுக்குத் துரத்தவில்லை. அவனைப்பற்றி நீ

சொன்னதெல்லாம் தவறு. அரசன் தன் மனைவி கைகேயிக்குக் கொடுத்திருந்த வாக்கை நிறைவேற்றித் தருவதற்காக ராமன் தானாக வனம் வந்திருக்கிறான். தந்தையின் சத்தியத்தைக் காப்பதற்காக ராஜ்யம், போகம் எல்லாவற்றையும் தானாகவே விட்டுவிட்டு தண்டகாரண்யம் வந்துள்ளான். சிற்றின்பக்காரன், மோசக்காரன் என்றெல்லாம் உனக்கு யார் சொன்னது? சுத்தப்பொய். ராமன் தருமமே உருவெடுத்த புருஷன்; அறவழியில் பராக்கிரமம் செலுத்துகிறவன். தேவர்களுடைய உலகத்தில் இந்திரனைப் போல், இந்த உலகத்து மக்களில் ராமன் முதன்மையிடம் பெற்ற வீரன். அவன் மனைவியை நீ ஆசைப்படலாமா? சூரியனை ஏமாற்றிச் சூரியனுடைய ஒளியைத் திருட முடியுமா? ஜனக புத்திரி சீதையின் தேஜஸை நீ தீண்டமுடியுமா? எரிந்து போவாய்! ராமனுடைய பாணங்களுக்கு இரையாகாதே. அவனை உனக்கு ஒரு யமனாகச் செய்து கொள்ளாதே. அவனால் காக்கப்படும் இந்த நெருப்பைத் தீண்டப் போகாதே. உன் சர்வநாசத்துக்கு வழி தேடிக் கொள்ளாதே.

"பூரணமாக யோசிக்காமல் ஒரு காரியத்தில் பிரவேசிக்கலாகாது. ராமனுடன் யுத்தம் செய்து நீ வெற்றி பெறமாட்டாய். அரக்கர்களின் அரசனே! நான் சொன்னதைப் புறக்கணிக்காதே. முன்னால் நான் தேக பலங்கொண்ட செருக்கினால் ரிஷிகளைக் கொன்று தின்று, அவர்களுடைய விரதங்களையும் வேள்விகளையும் அழித்து வந்தேன் அல்லவா? அந்தக் காலத்தில் விசுவாமித்திர முனிவர் செய்த வேள்வியைக் கெடுக்கப் போனேன். இந்த ராமன், அந்த நாளில் சிறுவனாக இருந்தவனை விசுவாமித்திர முனிவர் தசரதனைக் கேட்டுத் தன் வேள்வியைக் காக்க அழைத்து வந்திருத்தார். அந்த முனிவருக்கு இவனுடைய சௌரியம் அப்போதே தெரிந்திருந்தது. நான் வேள்வித் தீயை அழிக்கச் சென்றேன். இந்த பாலன், தன் வில்லை வளைத்துச் செலுத்திய பாணமானது என்னைச் சமுத்திரக் கரையில்

கொண்டுபோய்த் தள்ள, வெகு நேரம் பிரக்ஞை இழந்து கிடந்தேன்.

"இவனுடைய கோபத்தைச் சம்பாதித்துக் கொள்ளாதே. செல்வமும் சிற்றின்பங்களும் அடைந்து சுகமாக இருக்கும் உன் அரக்கர் குலத்திற்கு நாசத்தைத் தருவித்துக் கொள்ளாதே. சீதையை அடையப்போய் அழகும் செல்வமும் நிறைந்திருக்கும் உன் நகரத்தை வீணாகப் பாழாக்கி மரணம் அடையாதே. நீ அடையப்போகும் நாசம் இப்போதே என் மனக்கண்முன் நிற்கிறது. எரியும் லங்கையைப் பார்க்கிறேன். பெரும் பாவத்தில் இறங்கப் பார்க்கிறாய். வேண்டாம். உன்னுடைய கோபத்தைப் பொறுத்துக் கொள்ள முடியாதாயின், ராமனுடன் நேராக யுத்தம் செய். அக்கிரம மோசத்தில் புகாதே. உன் மனைவிகளுடன் சுகமாக இரு. நூற்றுக்கணக்காக வைத்திருக்கிறாயே, அது போதாதா! உன் பந்துமித்திரர்கள் அனைவருக்கும் விநாசம் தருவித்துக் கொடுத்து, நீயும் அழிந்து போவதற்கு வழி தேடாதே? யமனை அழைக்காதே!"

இவ்வாறு ராவணனுடைய நன்மையைக் கருதி மாரீசன் வெகுநேரம் பேசினான். அது ராவணனுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. காமத்தால் தூண்டப்பட்டவனுக்கு நல்ல யோசனை சொல்லி என்ன பயன்? நோயாளி மருந்தை வேண்டாம் என்பதுபோல், ஒரே பிடிவாதமாக ராவணன், "நீ சொல்வது சரியல்ல. நான் ஒப்புக்கொள்ள மாட்டேன்" என்று மாரீசனுடைய புத்திமதியைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை.

"அரசன், ஒருவனிடத்தில் போய் இன்னது செய்யலாமா வேண்டாமா என்று யோசனை கேட்டால், அதைப்பற்றி அவன், லாபாலாபம் ஆராய்ந்து சொல்லலாம். ஆனால் உன்னிடம் நான் யோசனை கேட்கவரவில்லை. 'இதை செய்யத் தீர்மானித்தேன். இதற்கு நீ இந்த உதவி செய்ய

வேண்டும்' என்று அரசன் கேட்கும்போது, அரசனிடம் நடந்துகொள்ள வேண்டிய மரியாதையை மறந்து, 'நீ செய்யப்போவது தவறு' என்று சொல்லுகிறாய். நான் இந்த விஷயத்தில் முற்றிலும் ஆலோசித்து முடிவுக்கு வந்து விட்டேன். இந்த மானிடப் பதருடன் நான் யுத்தம் செய்ய லாகாது. ஊரிலிருந்து துரத்தப்பட்டவன், அதமன், ஒரு ஸ்திரீயின் சூழ்ச்சியால் ஏமாற்றப்பட்டு ராஜ்ய பதவியை இழந்த முட்டாள். இவனோடு நான் சமான எதிரியாக நின்று யுத்தம் செய்வேனோ? அது முடியாது. இத்தகைய ஆளுக்குச் சரியான தண்டனை, அவன் மனைவியைத் தூக்கிப் போய் அவனை அவமானப்படுத்துவதே. இது நான் தீர்மானித்து விட்ட சங்கதி. அதைப்பற்றி உன்னைக் கேட்கவில்லை. நான் சொல்லுவதை நீ செய்யவேண்டும். நீ ஒரு விசித்திர மாய மான் வடிவம் எடுத்துக்கொண்டு, சீதையின் கண்ணைக் கவர்ந்து இழுக்க வேண்டும். இதைத்தான் நான் கேட்கிறேன். மானைப் பிடிக்கச் சீதை ராமனை அனுப்புவாள். நீ ராமனை வெகுதூரம் இழுத்துச் சென்று 'ஹா, சீதை! ஹா லக்ஷ்மணா!" என்று ராமன் குரலில் கூப்பிடவேண்டியது. அதைக் கேட்டு ராமனுக்கு ஏதோ ஆயிற்று என்று சீதை லக்ஷ்மணனை ராமனுக்குச் சகாயமாக அனுப்பிவிடுவாள். நான் அந்தச் சமயத்தைப் பயன்படுத்திக்கொண்டு சீதையைத் தூக்கிக் கொண்டு லங்கைக்குப் போவேன். இந்தக் காரியத்தில் நீ உதவி செய்துவிட்டுப் பிறகு உன் இஷ்டப்படி போகலாம். இல்லையென்றாயாகில் இங்கேயே என்னால் வதம் செய்யப் படுவாய்" என்றான்.

எவ்வளவு சொல்லியும் ராவணன் கேளாமலிருப்பதைக் கண்டு, இவன் யமன் வீட்டுக்குப் போவதற்கு அவசரப் படுகிறான். காமத்தால் தூண்டப்பட்டு மாள்வது இவன் விதியாக இருக்கிறது. இவனால் கொல்லப்பட்டு என் உயிர் போவதைவிட, ராமனாலேயே கொல்லப்படுவது நலம். பகைவனால் கொல்லப்பட்டால் தோஷமில்லை என்று

தனக்குள் சொல்லிக்கொண்டு மாரீசன் ராவணன் சொன்னதைச் செய்ய ஒப்புக் கொண்டான்.

"ராவணா, நான் உனக்கு இதத்தைச் சொல்லிப் பார்த்தேன். நீ கேட்கவில்லை. நீ சொன்னதுபோல் நான் செய்தால் என் உயிர்போவது நிச்சயம். உன் உயிரும் அதற்குப் பின் சீக்கிரத்தில் போவது நிச்சயம். லங்கை அழிவது நிச்சயம். உன்னுடைய க்ஷேமத்தை விரும்பாத எவனோ ஒரு சத்ரு, உன்னை இந்தக் காரியத்தில் பிரவேசிக்கத் தூண்டிவிட்டிருக்கிறான். உன் பேரில் யாருக்கோ பொறாமை. அவன் உனக்குத் துராலோசனை சொல்லியிருக்கிறான். நீ பிடிவாதம் செய்கிறாய். உன்னால் மாள்வதை விடப் பகையாளிக்கு என் உயிரைக் கொடுத்துவிடுவதே மேல். தண்டகாரண்யம் போகலாம், எழு" என்றான் மாரீசன்.

ராவணன் மகிழ்ச்சியடைந்து மாரீசனைத் தழுவிக் கொண்டு "பழைய மாரீசனைக் கண்டேன்" என்றான்.

* * *

இருவரும் ரதம் ஏறித் தண்டகாரண்யம் நோக்கிச் சென்றார்கள். பல பட்டணங்களையும், காடுகளையும், மலைகளையும், ஆறுகளையும் அநேக ராஜ்யங்களையும் பார்த்துக் கொண்டே ஆகாய மார்க்கமாகச் சென்றார்கள். சீக்கிரமாகவே தண்டகாரண்யத்தில் ஒரு வாழைத் தோட்டத்தின் மத்தியில் ராமனுடைய ஆசிரமத்தைக் கண்டார்கள்.

பூமியில் இறங்கிய ராவணன் மாரீசனுடைய கையைப் பிடித்துக் கொண்டு "அதோ ராமனுடைய ஆசிரமம் இருக்குமிடம் காணப்படுகிறது! நான் தீர்மானித்துச் சொன்னபடியெல்லாம் செய்வாயாக" என்றான்.

உடனே மாரீசன் தன் சரீரத்தை மாற்றிக் கொண்டு மான் உருவம் தரித்து விட்டான்.

மானின் அழகே அழகு, அதன் உடலில் ஒவ்வோர் அங்கமும் விசித்திர அழகு. ஆகாயத்தில் மழை நின்றபோது காணப்படும் வானவில்லின் பல வர்ணங்களோடும் கண்ணைக் கவரும் விதத்தில் அந்த மான் விளங்கிற்று. தங்கமும், வெள்ளியும், வைடூரியமும் பலவித மணி ரத்தினங்களும், புஷ்பங்களும் போல் அதன் உடலில் மாறிமாறிக் காணப்பட்டது. தங்கப் பிரதிமையில் ரத்தின மணிகள் இழைத்து உயிருடன் ஓடியது போல் விளங்கிற்று. அதுவரையில் உலகத்தில் காணாத மானாக அந்த மாயமான் ஆசிரமத்துக்கு முன் இங்குமங்கும் நடந்தது, படுத்தது, எழுந்து துள்ளிக் குதித்தது. கொஞ்ச நேரம் புல் மேயும். சில சமயம் தலையைத் தூக்கிச் செடிகளிலுள்ள இளந்தளிரைத் தின்னும். சில சமயம் ஆசிரமத்தை நெருங்கிப்போய் மெள்ள நடக்கும். பிறகு திடீர் என்று துள்ளித் தூர ஓடும். மற்ற மான் கூட்டங்களோடு சில சமயம் சேர்ந்து நடக்கும். சில சமயம் அவற்றை விட்டு விலகும். மற்ற மான்கள் அதை மோந்து மோந்து பார்த்துச் சந்தேகப்பட்டு விலகும்.

சீதை அச்சமயத்தில் வனத்தில் புஷ்பம் பறித்துக் கொண்டிருந்தவள், இந்த மானைப் பார்த்து, 'ஓ என்ன அழகு!' என்று கண்கொட்டாமல் பார்த்து நின்றாள். அப்போது மானும், அவளைப் பார்த்து அவளுக்கு எதிரில் இங்குமங்கும் ஓடியதானது, வனத்துக்கே புது அழகு தந்ததைப் போலிருந்தது.

* * *

"ஓடி வாருங்கள்; ஓடி வாருங்கள்!" என்றாள் சீதை, தான் பார்த்துக் கொண்டிருந்த மானை ராமனும் லக்ஷ்மணனும் பார்க்க வேண்டுமென்று.

"சீக்கிரம் வாருங்கள், வாருங்கள்" என்றாள் மறுபடியும்.

அவர்களும் வந்து அந்த விசித்திர மானைப் பார்த்து வியந்தார்கள்.

லக்ஷ்மணனுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. 'இது மானல்ல, மாரீசன்' என்று உடனே அறிந்துகொண்டான். அதற்குமுன் மாரீசன் மானாக உருவம் தரித்துக் கொண்டு, காட்டில் வேட்டையாட வந்த பலரை ஏமாற்றிக் கொண்டிருந்தது ராம லக்ஷ்மணர்களுக்குத் தெரியும்!

லக்ஷ்மணன், "இத்தகைய மிருகம் இயற்கையில் கிடையாது. இது ராக்ஷஸனுடைய மோசம்" என்றான்.

"இந்த மானைப் பிடித்து வாருங்கள். இதை ஆசிர மத்தில் கட்டி வளர்க்கலாம். நான் காட்டில் பார்த்த அத்தனை மிருகங்களிலும் இது மிக அழகாக இருக்கிறது! ஐயோ! அதைப் பாருங்கள். என்ன நிறம்! என்ன விளை யாட்டு! இதற்குச் சமானம் ஏதுமில்லை" என்று சீதை மானைப் பார்த்துத் தாங்க முடியாத ஆசை மேலிட்டு அதைப்பற்றியே பேசிக்கொண்டிருந்தாள். "இதை எப்படியாவது பிடித்துத் தாருங்கள்" என்று மிக வேண் டினாள்.

"நாம் ஊருக்குத் திரும்பும் காலம் கிட்டி வந்து விட்டது. இதை அயோத்திக்குக் கொண்டு போவோம். காட்டிலிருந்து ஏதாவது விசித்திரப் பொருள் நம்முடைய அந்தப்புரத்துக்குக் கொண்டுபோக வேண்டுமல்லவா? பரதன் இதை மிகவும் அனு பவிப்பான். இதை நான் அவனுக்குத் தரவேண்டும். எப்படி யாவது நாதா, இதைப் பிடித்து வாருங்கள்" என்று ராமனை வருந்திக் கேட்டாள்.

லக்ஷ்மணனுக்கு விஷயம் பிடிக்கவில்லை என்று கண்டு, ராமனை இன்னும் அதிகமாக வருந்திக் கேட்டுக்கொள்ள ஆரம்பித்தாள். ஓர் ஆசை மனத்தைப் பலமாகப் பற்றிக் கொண்டுவிட்டால், அதைத் தடுக்கும் நம்முடைய பந்துமித்தி ரர்கள்மேல் எவ்வளவு பிரியமானவர்களானாலும் கோபம் உண்டாகி விடுகிறது. இதைப் பகவான் கீதையில் எவ்வளவு

பரிஷ்காரமாகச் சொல்லியிருக்கிறார்! அது அன்று சீதையின் உள்ளத்தில் நிகழ்ந்து விட்டது.

"அதோ தங்கமாகவே இருக்கிறது. பார். அதோ வெள்ளி மயமாகவே இருக்கிறது பார்! இதைப் பிடிக்க முடியாமல் போனால் அம்பு எய்து, கொன்று, அதன் தோலையாவது ஊருக்குக் கொண்டு போவோம். இதைப் போன்ற விசித்திரமான தோல் நாம் பார்க்கப் போவதில்லை. கீழே விரித்து உட்காருவதற்கு எவ்வளவு வினோதமாக இருக்கும்! போய் விடும். போய்ப் பிடித்து வாருங்கள். அல்லது தோலையாவது எனக்குத் தரவேண்டும்" என்றாள்.

"ஐயோ, அதன் தொம்பைப் பாருங்கள்! இப்படிக் கேட்கிறேனே என்று என்மேல் ஆயாசப்பட வேண்டாம்! எனக்கு இதன் பேரில் அவ்வளவு ஆசை. தருவீர்களா, இல்லையா?" என்று விடாமல் ராமனைக் கேட்டுக் கொண்டாள். 'லக்ஷ்மணன் சொன்னதில் உண்மை இருந்த போதிலும், ராக்ஷசனாயிருந்தாலென்ன? கொன்றுவிடுவது நலம்தானே. இதில் பயம் என்ன? பிடிக்க முடியாமல் போனால், அம்பு செலுத்தி மானை அடித்து, சீதைக்குத் தோலைத் தரலாம். அவள் இவ்வளவு பிரியப்படும் பொருளை நான் அவளுக்குச் சம்பாதித்துத் தரவேண்டாமா?' என்று தீர்மானித்துக் கொண்டு, லக்ஷ்மணனுக்குச் சமாதானம் சொல்லி, "வில்லும் அம்பும் கொண்டு வா" என்றான் ராமன்.

லக்ஷ்மணனுக்குச் சம்மதமில்லை. ஆயினும் ராமன் வில்லும் கையுமாக மானைத் தொடர்ந்து சென்றான்.

"லஷ்மணா, ஜாக்கிரதை! சீதையைப் பார்த்துக் கொள். மானைக் கொன்றுவிட்டுச் சீக்கிரம் கொண்டு வந்து விடுகிறேன்,கவலைப்படாதே, ராக்ஷசனாயிருந்தாலுமென்ன? வாதாபியின் கதி இந்த ராக்ஷசனுக்கும் ஆகும். மோசம் செய்ய

வந்திருந்தால், அகஸ்தியரைப்போல் நானும் மோசக்கார ராக்ஷசனை அவன் மோசத்துக்கே அவனை இரையாக்கி ஒழிப்பேன். என்னை இந்த மான் என்ன செய்யும்? மானாக இருந்தாலும் சரி, அரக்கனாக இருந்தாலும் சரி" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டான்.

"ஜாக்கிரதை! சீதையைப் பார்த்துக்கொள். எந்தச் சமயத்தில் எது நேருமோ? வெகு ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள். அலட்சியமாக இருக்காதே" என்று போகும் போது சொல்லிவிட்டுப் போனான்.

தெய்வம் எல்லா விதத்திலும் விபத்துக்கு ஏற்பாடு செய்துவிட்டது. சாதாரணமாக லக்ஷ்மணன் பரபரப்பாக இருப்பான். இந்தச் சமயம் அவனுக்குச் சந்தேகம் உண்டாகி எச்சரிக்கை செய்தான். அதற்கு எதிரிடையாக, எப்போதும் மிக ஜாக்கிரதையாக இருந்த ராமச்சந்திரன், இந்தச் சமயம் சீதையின் இஷ்டத்தைச் சிறிய விஷயத்திலும் பூர்த்திசெய்ய வேண்டும் என்று, லக்ஷ்மணன் சொன்னதைத் தட்டி, மானைத் தொடர்ந்து போய்விட்டான்.

* * *

ராவணனுக்குப் போதிய அவகாசமும் சந்தர்ப்பமும் தருவதற்காகக் கைக்குச் சிக்குவது போலவே காட்டிக் கொண்டு மானானது ராமனை வெகுதூரம்-விதி மனிதனை இழுத்துப் போவதுபோல், இழுத்துக்கொண்டு போய் விட்டது.

மெல்ல மெல்லக் கால் எடுத்து வைக்கும்; ஓடாமல் அங்கே நின்று வெறித்துப் பார்க்கும்; திடீர் என்று பாய்ந்தாற் போல் மேலே குதிக்கும். ஒரே பாய்ச்சலாகக் காட்டிற்குள் காற்றுப்போல் வேகமாக ஓடி மறையும்.

''மிதித்தது, மெல்ல மெல்ல வெறித்தது, வெருவி மீதில்
குதித்தது, செவியை நீட்டிக் குரபத உரத்தில் கூட்டி
உதித்தெழும் ஊதைஉள்ளம் என்றிவை உருவச் செல்லும்
கதிக்கொரு கதியம் வேறே காட்டிய(து) ஒத்த தன்றே''

மறைந்த மாதிரி கொஞ்சம் நேரம் இருந்து திடீர் என்று ஓர் உயர்ந்த இடத்தில் நின்று தன் அழகைத் தனியாகக் காட்டும். மேகங்கள் ஆகாயத்தில் உலாவ, அவற்றோடு கலந்து காட்சி தரும். பிடித்துவிடலாம் போல் கிட்ட நிற்கும். கிட்டப் போனால் தூரமாகப் போய்விடும். நின்றது போல் இருக்கும். அப்படியே மறைந்துவிடும்.

''குன்றிடை இவரும்; மேகக் குழுவிடைக் குதிக்கும்; கூடச்
சென்றிடின் அகலும், தாழில் தீண்டலாம் தகைமைத் தாகும்
நின்றதேபோல் நீங்கும்; நிதிவழி நேயம் நீட்டும்
மன்றலங் கோதை மாதர் மனம்எனப் போயிற் றம்மா''

4

மாரீசனுக்கும் மரணம் கிட்டியது என்று பட்டுவிட்டது. அதே கணத்தில் ராமனும், 'இனிப் போதும் தொடர்ந்தது' என்று வில்லை வளைத்து அம்பைச் செலுத்தினான். மாரீசன் "ஐயோ, சீதையே! ஐயோ, லக்ஷ்மணா!" என்று ராமன் குரலில் உரக்கக் கத்திவிட்டு மாண்டான். மானும் சமயம் நிஜ வடிவம் வந்துவிட்டது. மலைபோன்ற சரீரத்துடன் மாரீசன் ரத்தம் பெருகப் பூமியில் விழுந்து மாண்டு இறந்தான்.

"லக்ஷ்மணன் சொன்னது மெய்யாயிற்று" என்றான் ராமன். மோசத்தைக் கண்டான்.

"இந்தக் கூக்குரலைக் கேட்டுச் சீதை என்னென்னவோ எண்ணிப் பயப்படுவாளே!" என்று யோசித்தான்.

பிறகு, "ஆனால் பயம் என்ன; லக்ஷ்மணன் பக்கத்திலிருக்கிறானல்லவா?" என்று சமாதானப்படுத்திக் கொண்டான்.

''வெய்ய வன்தன் உருவொடு வீழ்தலும்
செய்ய(து) அன்றெனச் செப்பிய தம்பியை
"ஐயன் வல்லன்! என் ஆருயிர் வல்லன்; நான்
உய்ய வந்தவன் வல்லன்!'' என்றுன்னினான்.

"எத்தகைய தம்பியை நான் பெற்றேன்! வனத்தில் எனக்கு எத்தகைய துணைவனைப் பெற்றேன்!" என்று ராமன் தன் அன்புக்குரிய இளைய பெருமானை நினைத்து நினைத்து மனத்தில் பாராட்டுகிறான். அடுத்த கணம் தம்பிக்கு என்ன நேரிடுகிறது? அவன் காதில் சீதை வாயிலிருந்து வந்த நாராச மொழிகளைக் கேட்க வேண்டியதாகிறது என்பதை அறியான் ராமன். விதியோ விதி!

## 50. கழுகின் வீரம்

"ஐயோ சீதா! ஐயோ லக்ஷ்மணா!" என்று மாரீசன் கதறியதைக் கேட்ட சீதை, அது ராமன் கதறியதே என்று எண்ணிவிட்டாள். பெருஞ் சுழற்காற்றில் அகப்பட்ட மரத்தைப் போல் நடுங்கிப் பதைபதைத்து, "லக்ஷ்மணா! அதோ அண்ணன் குரல் தெரியவில்லையா? ஓடு ஓடு" என்றாள்.

தாங்க முடியாத திகிலடைந்து, லக்ஷ்மணனைப் பார்த்து, "நாயகனுடைய துயரக் குரல் கேட்கிறதே! ஐயோ என் உயிர் நிற்காது. நான் மாய்வேன்! போ! போ! நிற்காதே!" என்று பொறுக்க முடியாத துயரத்திலும் பயத்திலும் தத்தளித்துக் கதறினாள்.

"காட்டில் ஏதோ அபாயத்தில் சிக்கிவிட்டார். பெருங் கூச்சல் போட்டாரே, கேட்கவில்லையா? இன்னும் இங்கேயே நிற்கிறாயே!" என்று அழுதாள்.

"ராக்ஷசர்களிடையில் உன் அண்ணன் அகப்பட்டுக் கொண்டு கதறுகிறார். ஒரே பாய்ச்சலாக ஓடி அவரைக் காப்பாற்ற வேண்டாமா? சும்மா நிற்கிறாயே!" என்று கதறினாள்.

அரக்கர்களுடைய மோசத்தை அறிந்த லக்ஷ்மணன், ராமன் இட்ட ஆணையை நினைவில் கொண்டு அசையாமல் நின்றான்.

ஜானகிக்கு உண்டான கோபமே கோபம்! வயிற்றில் இரண்டு கைகளாலும் அடித்துக்கொண்டு "சுமத்திரையின் மகனே, சத்துருவாகிவிட்டாயே! இவ்வளவு நாளும் வேஷம் போட்டாயா?- ராமனுடைய மரணத்துக்காக இவ்வளவு நாள் காத்திருந்தாயா! அவன் இறந்தால் அவனுக்குப் பின் என்னை அடைந்து விடலாம் என்று எண்ணி இத்தனை நாள் ஏமாற்றினாயா? துஷ்டனே. ராமன் கதறிக் கூவுவதைக் கேட்டும், போகாமல் இங்கேயே நிற்கிறாயா? அண்ணனிடம் நீ காட்டிக் கொண்ட பிரியமெல்லாம் பெரும் சூழ்ச்சியா? துன்மார்க்கனே" என்றாள்.

லக்ஷ்மணன் காதுகளை மூடிக்கொண்டான்.

துயரத்தில் துடிதுடித்துக் கொண்டு, உடலெல்லாம் கண்ணீரில் தோய்ந்து புத்தி முற்றிலும் இழந்துபோய் இப்படிப் பேசிய சீதையைப் பார்த்து, லக்ஷ்மணன் மெது வாகச் சொன்னான்.

"வைதேகி! உன் புருஷன் தேவ, அசுர, மானுட ஜாதிகளில் எவன் எதிர்த்தாலும், அவனுடன் போர் செய்து கொன்று விட்டுத் திரும்பி வருவான். இது நிச்சயம். பயப் படாதே! என் அம்மையே, புத்தியைச் சுவாதீனப் படுத்திக் கொள். பயப்படவேண்டாம்! நம் ராமனை எந்த அரக்கனும், எந்த மிருகமும், எந்தப் பட்சியும், எந்தப்பேயும், எந்தக் கந்தர்வனும், எந்தத் தேவனும், எந்த அரசனும் தீண்ட முடியாது; நீ இப்படிப் பேசலாகாது. என் அருமைத் தாயே! ராமனுடைய பலம் எனக்குத் தெரியும்; மூன்று உலகத்தில் யார் வந்து அவனை எதிர்த்தாலும் ராமனுடைய வெற்றி நிச்சயம். நீ துயரப்பட வேண்டாம். கொஞ்ச நேரத்தில் உன் நாயகன் அந்த மானைக் கொன்றுவிட்டு எடுத்துக்கொண்டே வருவான். நீயே பார்ப்பாய்! இந்தக் குரல் அவனுடைய குரல்

அல்ல. இது ராக்ஷசனுடைய மாயை. அதனால் நீ ஏமாந்து துயரப்படவேண்டாம். உன்னை அண்ணன் என்னிடம் ஒப்புவித்துவிட்டுப் போயிருக்கிறான். உன்னைத் தனியாக விட்டுவிட்டு என்னைப் போகச் சொல்ல வேண்டாம். அண்ணன் ஆணையை நான் மீறலாகாது. ஜனஸ்தான ராக்ஷசர்களை நாம் கொன்றதனால் பழிவாங்க இப்படி ராக்ஷசர்கள் பலவித மோசம் செய்து வருகிறார்கள். அவர்கள் போடும் வேஷங்களையும், மாற்றுக் குரல்களையும் நம்பலாகாது. இது ராமன் போட்ட கூக்குரல் அல்ல; நீ கொஞ்சமும் பயப்படவேண்டாம்" என்றான்.

இப்படி லக்ஷ்மணன் சொன்ன போதிலும், சீதை கண்கள் சிவந்து போய்ப் பெருங் கோபமடைந்து சொல்லத் தகாத வார்த்தைகளைச் சொன்னாள்;

"அண்ணன் ஆணை என்று சமாதானம் சொல்லி, அண்ணன் கதறிக் கூவினாலும் போகாமல், அவனைச் சாக விடுகிறாயா; ஆகா உன்னை நம்பி என்ன மோசம் போனோம் ராமனும் நானும்! நீசனே! துஷ்டனே! ராமனுக்குப் பகையாய் வந்த வஞ்சகனே! ராமனுக்கு ஆபத்து வந்தது என்று மகிழ்ச்சி அடைகிறாயா? ஏமாற்றப் பார்க்கிறாயா? ராமனோடு நீ வனத்துக்கு வந்த நோக்கத்தை இப்போது நான் கண்டு கொண்டேன். அடே பாவி! பரதனுடைய தூண்டுதலா இது? எல்லாரும் என் நாயகனுடைய சத்ருக்கள் ஆகிவிட்டீர்களா? நீங்கள் எல்லோரும் சேர்ந்து என்ன செய்ய யோசிக்கிறீர்கள்? ராமனோடு வாழ்ந்த நான், உங்களைக் கண்ணெடுத்துப் பார்ப்பேனா; ராமனை இழந்த பிறகு ஒரு நிமிஷமும் உயிருடன் இருக்க மாட்டேன், அறிவாய்" என்றாள்.

மயிர் கூச்சலெடுக்கும்படியான இந்த வார்த்தைகளைக் கேட்டு லக்ஷ்மணன் இரண்டு கைகளையும் கூப்பி, "தாயே என் தெய்வமே! ஜனகருடைய புத்திரியே! இத்தகைய மொழிகள் உன் வாயிலிருந்து வரலாமா? பழுக்கக் காய்ச்சின இரும்பு

போல் காதுகளில் புகுகின்றனவே! நீ எண்ணுவது அநீதி; பொய். பார்த்துக் கொண்டிருக்கும் தேவர்கள் சாக்ஷியாகச் சொல்லுகிறேன். என்னைச் சந்தேகப்பட்டுப் பேசினாயே! ஆகா! இன்று பெண்களுடைய குணக்குறைவு உன்னிடமும் இருப்பதைக் கண்டேன். எனக்குப் பாப எண்ணம் சூட்டினாயே! அடடா! அது உன்னுடைய கெட்ட காலம் என்றே எண்ணுகிறேன். பெரிய விநாசம் உன்னைத் தாக்கி விடுவது நிச்சயம்" என்றான் அப்பாவி லக்ஷ்மணன். பயத்தால் நடுங்கினான்.

"இதோ உலர்ந்த கட்டைகள் இருக்கின்றன. தீ மூட்டி அதில் விழப்போகிறேன். கோதாவரியில் விழுந்து உயிர் நீப்பேன். அல்லது தூக்குப் போட்டுக்கொண்டு சாவேன். மலையிலிருந்து கீழே குதித்தோ அல்லது விஷம் குடித்தோ சாவேன்! என்ன நினைக்கிறாய்? ராமன் கூக்குரலிட்ட இடம் போவாயா, இல்லையா?" என்றாள் சீதை.

இவ்வாறு சொல்லிச் சீதை வயிற்றில் அடித்துக் கொண்டு கதறி அழுதாள். இதைக் கண்டு பொறுக்க முடியாமல் லக்ஷ்மணன் கைகூப்பி நமஸ்கரித்து, "சீதையே, சரி. நீ சொல்லுகிறபடி அண்ணன் ஆணையை மீறி உன்னைத் தனியாக விட்டுச் செல்கிறேன். உனக்கு மங்களம்! வனதேவதைகள் உன்னைக் காப்பார்களாக. நீ சொல்லுகிற படியே போகிறேன். ஐயோ, கெட்ட நிமித்தங்கள் காண் கிறேன்! பயமாக இருக்கிறது. நான் வந்து மறுபடி உன்னை ராமனுடன் பார்ப்பேனா! சந்தேகமாக இருக்கிறது. ஆயினும் இதோ போகிறேன்!" என்று சொல்லிவிட்டுச் சென்றான்.

போகும்போது அடிக்கடி திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே கொஞ்சங்கூட மனமில்லாமல் சென்றான்.

லக்ஷ்மணன் மனதைக் கோபமும் துயரமும் சேர்ந்து வாட்டின. சீதை சொன்ன கோரமான மொழிகளை அவன்

எப்படிச் சகிப்பான், அல்லது மறப்பான்? அனைத்தையும் விட்டுவிட்டு அண்ணனுடன் வனத்துக்கு வந்த ராஜகுமாரன் மனத்தை அந்த மொழிகள் எவ்வளவு துன்புறுத்தியிருக்கும் என்பதை எழுத முடியாது. பரதனுடைய தாயார் கைகேயி தனக்கு அநியாயம் செய்துவிட்டாள் என்று புலம்பினான். அதைவிட அநியாயம் சீதையின் பேச்சு.

ராமன் போன வழியிலே லக்ஷ்மணன் சென்றான். அந்தச் சமயத்துக்காக காத்துக்கொண்டிருந்த ராவணன், சுத்தமான காவித்துணி அணிந்து, இருப்பிடமின்றி பிக்ஷை எடுத்துத் திரியும் சந்நியாசியாகத் தன்னை மாற்றிக் கொண்டு, மனதில் நீச எண்ணமும் வாயில் வேத மந்திரங்களும் சொல்லிக்கொண்டு ராமனுடைய ஆசிரமத் தண்டை சென்றான்.

குடிசை வாயிலில் வைதேகி தனியாக நின்று கொண்டிருந்தாள். ராமன் வருவான் என்று வனத்தைப் பார்த்த வண்ணமாக நின்றாள். ராவணன் சீதையைப் பார்த்தான்.

பார்த்ததுமே சூர்ப்பணகை எழுப்பிய ஆசை அவன் உள்ளத்தில் ஊர்ஜிதப்பட்டு நன்றாக உருக்கொண்டு விட்டது. எப்படியாவது அவளை அடைய வேண்டுமென்று நீசன் தீர்மானித்து விட்டான்.

* * *

காஷாயம் தரித்துக் கமண்டலமும் திரிதண்டமுமாக வந்த பரிவ்ராஜக சந்நியாசி ஆசிரமத்தண்டை வர, ஆசார முறைப்படி சீதை அவனுக்கு உபசாரம் செய்தாள். கடமைப்படி ஆசனம் அமைத்து பழமும் கிழங்கும் அவன் முன் வைத்தாள். அந்தக் காலத்திலும் இது தவறக்கூடாத பண்பாடு.

அமைத்த ஆசனத்தில் சந்நியாசி உட்கார்ந்து சீதையைப் பார்த்தான். அவன் ஆசை அதிகரித்து முற்றிப் போயிற்று.

கேவலம், மிருகானுபவத்துக்கு மட்டும் ராக்ஷசேந்திரன் ஆசைப்படவில்லை. பாவியாயிருந்தாலும், பச்சை ஊன் தின்னும் அரக்கர் குலத்தவனாக இருந்தாலும், அவனுடைய எண்ணம் சீதையின் காதலைப் பெற்று, அவளை மனைவியாக்கிக் கொண்டு மேலான இன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்பது லங்கேசனுடைய ஆசை. அவளுடைய சம்மதத்தைப் பெறவேண்டும் என்பது. வனவாசத்தில் கஷ்டப் பட்டுக் கொண்டிருக்கும் ஏழை ராமனை விட்டு விட்டுச் சம்பத்தும் சக்தியும் வாய்ந்த தன்னிடம் சந்தோஷமாகச் சீதை வந்து விடுவாள் என்றும், அதுவே ராமனுக்குச் சரியான அவமானமாகும் என்றும் ராவணன் எண்ணினான். தான் கண்ட மற்ற ஸ்திரீகளைப் போல் சீதையும் இருப்பாள் என்று எண்ணினான்.

இலை முன் உட்கார்ந்த சந்நியாசி கூச்சமில்லாமல் சீதையின் அழகைப் புகழ்ந்து பேசினான்.

"நீ யார்? மிருகங்களும் ராக்ஷஸர்களும் நிறைந்த இந்த பயங்கரமான காட்டில் தனியாகவா இருக்கிறாய்?" என்று கேட்டான்.

ஆசார முறைப்படி செய்ய வேண்டிய உபசாரத்தைச் செய்துகொண்டும், கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லிக் கொண்டும் வந்தாள். ஆயினும் ராஜகுமாரர்கள் சீக்கிரம் வரமாட்டார்களா என்று வாயில் பக்கம் பார்த்த வண்ணமாகவே இருந்தாள்.

அரக்கன் மெள்ள மெள்ளத் தான் யார் என்பதைச் சொல்ல ஆரம்பித்தான். தன் குலத்தின் பெருமையை எடுத்துச் சொன்னான். தன் சக்தி, ஐசுவரியம் இவற்றை யெல்லாம் சொன்னான். தன்னுடைய பிரதாபத்தைச் சொல்லி ராமனை இகழ்ந்து பேசினான்.

"எனக்கு மனைவியாவாய், லங்கையில் சுகமாக இருப்போம். போவோம்! என்று முடித்தான்.

இப்படி எதிர்பாராத சங்கடநிலையடைந்ததும், சீதையானவள் கற்பின் சக்தியால் அபாரத் தைரியமடைந்து அரக்கனை லட்சியம் செய்யாமல் "நீசனே! துஷ்டனே! உன் விநாசம் நெருங்கிற்று! நீ மடிவாய், விலகிப்போ. உயிரைக் காப்பாற்றிக் கொண்டு, ஆசிரமத்தை விட்டுப்போ!" என்று சீறினாள்.

அரக்கனுக்குக் கடுங்கோபம் உண்டாகிவிட்டது. மாறு வேஷம் நீக்கிவிட்டுத் தன் சொந்த ரூபத்தைத் தரித்துக் கொண்டான். அவள் தலைமயிரை ஒரு கையில் பற்றி மற்றொரு கையால் அவளைப் பிடித்துத் தூக்கிக்கொண்டு வனத்துக்குள் வேகமாகச் சென்று, ஆயத்தமாக இருந்த தேரில் சீதையைத் தூக்கியவாறு ஏறி ஆகாயத்தில் கிளம்பி விட்டான்.

"ஹா! என் நாதனே! ராமா! எங்கே போய் விட்டாய்? லக்ஷ்மணா! தலைசிறந்த பக்தனே! பிடிவாதம் செய்து உன்னைத் துரத்தினேனே!" என்று கதறி அழுதாள். அரக்கன் அவளை அசையாமல் அழுத்திப் பிடித்துத் தேரை வேகமாகச் செலுத்தினான். கீழே காட்டிலுள்ள செடிகளையும் மரங்களையும் கூவிக்கூவி "ராமனிடம் சொல்லுங்கள்" என்று சீதை கதறினாள்.

அப்போது மரத்தின் மேல் அரைத் தூக்கமாக உட்கார்ந்திருந்த ஜடாயு, வேகமாகச் சென்று கொண்டிருந்த ரதத்தைப் பார்த்தான். சீதையின் குரலைக் கேட்டு யார் என்று தெரிந்து கொண்டான். சீதையும் ஜடாயுவைக் கண்டாள்.

"நீ என்ன செய்வாய் பறவையே? லங்கேசன் என்னைத் தூக்கிச் செல்கிறான். இந்தக் கொடிய அரக்கன் எல்லா ஆயுதங்களோடும் இருக்கிறான். நீ எதிர்த்தால் உன்னைக்

கொன்றுவிடுவான். உன்னால் என்னை மீட்க முடியாது. விஷயத்தையாவது ராமனிடம் சொல்" என்று அழுதாள்.

ஜடாயு தேரில் ராவணனைப் பார்த்து, " ஏ லங்கேசனே! நான் ஜடாயு; கழுகுராஜன். நீண்ட நாள் உன்னைப் போல் நானும் அரசனாக வாழ்ந்தவன். தம்பீ! தகாத காரியத்தைச் செய்யாதே! நில்! அரசன் என்று சொல்லிக் கொள்ளுகிற நீ இத்தகைய காரியத்தைச் செய்யலாகாது. பெண்களைக் காப்பதல்லவா அரசனுடைய கடமை! அதிலும் ராஜஸ்திரீயை இவ்விதம் செய்யலாமா? அழிந்து போவாய். ஜாக்கிரதை! உடனே அவளை விட்டுவிட்டுத் திரும்பிப்போ! அவளுடைய கோபப் பார்வையில் நீ சுட்டெரிந்து மாண்டுபோவாய்! அவள் யாரென்று எண்ணுகிறாய்! விஷப் பாம்பை மடியில் கட்டிக் கொள்ளாதே! காலனுடைய பாசம் உன் கழுத்தின் மேல் விழுந்து உன்னை இழுத்துப்போக ஆயத்தமாக இருப்பதை நீ அறியவில்லை. துஷ்டனாக நடந்து கொள்ளாதே! தாங்காத பாரத்தைச் சுமந்து போகப் பார்க்காதே! விஷத்தைத் தின்று பிழைக்கப் பார்க்காதே. நான் கிழவன், நீ யுவன். கவசம் பூண்டு தேரும் வில்லுமாக இருக்கிறாய். ஆயினும் என் கண் முன்னால் நீ வைதேகியை எடுத்துப் போக விடமாட்டேன். ராமன் இல்லாத சமயமா சீதையை எடுத்துப் போகிறாய்? ராமன் பேரில் உனக்குக் கோபம் இருந்தால் ராமனுடன் போர் செய். உனக்கு அந்தத் தைரியமில்லை என்பது எனக்குத் தெரியும். கோழையே! இதோ நான் இருக்கிறேன். இறங்கி என்னுடனாவது போர் செய். நான் உயிருடன் இங்கே இருக்க, நீ ராமன் மனைவியைத் தூக்கிப் போக முடியாது. ரதத்திலா இருக்கிறாய்? தப்பலாம் என்று எண்ணுகிறாயா? பார், உன் தலைகள் பனம்பழம் போல் கீழே உதிர்ந்து விழப்போகின்றன. ஓடாதே, நில்!" என்றான்.

இத்தப் பேச்சைக் கேட்ட ராவணன் சினம் கொண்டு, பறவையான ஜடாயுவைத் தாக்கினான்.

பெருங் காற்றுக்கும் மேகக் கூட்டத்துக்கும் நடக்கும் யுத்தத்தைப் போல் ஓர் அற்புத யுத்தம் அந்த வனத்தில் நடந்தது. சிறகு கொண்ட மலையைப் போல் ஜடாயு தாங்காத கோபத்துடன் யுத்தம் செய்தான். கொல்லும் நாராசங்களை ராவணன் விடுத்தான். அவற்றையெல்லாம் கழுகரசன் தடுத்து ராவணனுடைய உடலைக் கீறிக் கிழித்தான். அரக்கன் ரோஷம் கொண்டு சர்ப்பங்கள் போன்ற மிகவும் கூரிய அஸ்திரங்களைப் பறவையின் மேல் விடுத்தான்.

கழுகரசன் மிகவும் துன்பப்பட்டான். தேரில் இருந்த சீதையைப் பார்ப்பான். கண்ணீர் பெருகிய அவள் கண்களையும் பார்ப்பான். அந்தக் காட்சியை சகிக்காமல் ராவணனைப் பலமாகத் தாக்குவான். தன் உடலில் உண்டான காயங்களையாவது, அரக்கன் செலுத்திய அம்புகளையாவது கொஞ்சமும் கவனியாமல் தாக்கினான். தன் சிறகுகளினால் அரக்கன் தலையிலிருந்த ரத்ன கிரீடத்தையும் அவன் கையிலிருந்த வில்லையும் ஒடித்துத் தள்ளினான்.

இந்த அவமானத்தைத் தாங்காமல் பெருங் கோபம் அடைந்த ராவணன், இன்னொரு வில்லெடுத்துச் சரமாரி பொழிந்தான். பக்ஷிராஜன் தன் சிறகுகளால் அந்த அம்புகளை உதறித் தள்ளி அரக்கன் பிடித்த இரண்டாவது வில்லையும் ஒடித்துத் தள்ளினான்.

அதன் மேல் ஜடாயு தேரைத் தாக்கி, பிசாசு முகங்களைக் கொண்ட கோவேறு கழுதைகளையும் சாரதியையும் கொன்று, தேரைச் சுக்கு நூறாகப் பொடி செய்து விட்டான். சீதையைப் பிடித்துக்கொண்டே ராவணன் பூமியில் விழுந்தான். வாகனம் இழந்து சாரதியையும் இழந்து அரக்கன் பூமியில் விழுந்தபோது பூதங்கள் எல்லாம் 'நல்லது, நல்லது' என்று பக்ஷிராஜனைப் பாராட்டின.

வயோதிக நிலையும், யுத்தத்தின் சிரமமும், காயங்களும் எல்லாம் சேர்ந்து ஜடாயுவைக் களைப்படையச் செய்தன. ஒரு நிமிஷம் தள்ளாமல் நின்றான். அதைக் கண்டு ராவணன் இதுதான் சமயம் என்று சீதையைப் பிடித்திருந்த வண்ணமே தோன்றி, அப்படியே ஆகாயத்தில் கிளம்பிப் போகப் பார்த்தான். உடனே பக்ஷிராஜன் மறுபடியும் ராவணனைத் தாக்கி நிறுத்தி, "அரக்கனே! திருடனைப் போல் ஓடுகிறாயா? நீசனே! நீ நாசமாகப் போவது நிச்சயம். நின்று யுத்தம் செய்! யுத்தத்தில் உன் தம்பி கரன் அடைந்த கதியை நீயும் அடைவாய். கோழையைப் போலும் திருடனைப் போலும் ஓடித் தப்பப் பார்க்காதே!" என்று சொல்லி, அவனுடைய முதுகின் மேல் திடீரென்று மேலிருந்து இறங்கிக் கால் நகங்களாலும் கூரிய மூக்காலும் கொத்தியும் கீறியும் ரணமாக்கி ராவணனை மிகவும் துன்புறுத்தினான்.

இதைத் தாங்க முடியாமல் ஒரு பக்கம் சீதையைப் பிடித்துக் கொண்டே தன்முதுகின் மேலிருந்த ஜடாயுவைத் தன் கைத்தலங்களால் அடித்து விரட்டப் பார்த்தான். சீதையைப் பிடித்த கைகளைப் பக்ஷிராஜன் ஒன்றன்பின் ஒன்றாகக் கொத்திப் பிடுங்கி எறிந்தான். பிடுங்கி எறிய எறிய ராவணனுக்குப் புதுக் கைகள் புற்றிலிருந்து பாம்பு வருகிற மாதிரி முளைத்து வந்தன. வலி தாங்காமல் கோபம் மேலிட்டு ராவணன் சீதையைக் கீழே தள்ளிவிட்டு ஜடாயுவைக் கைகளால் அடித்தும் கால்களால் உதைத்தும் பலமாகத் தாக்கினான்.

இந்தக் கோர யுத்தம் வெகுநேரம் நடந்தது. வீரனாகிய ஜடாயு மிகவும் கஷ்டப்பட்டான். பிறகு இராவணன் தன் கத்தியை எடுத்து பக்ஷிராஜனுடைய சிறகுகளையும் கால்களையும் கருணையின்றி வெட்டினான். பக்ஷி அதற்குமேல் ஒன்றும் செய்ய முடியாமல் தரையில் குற்றுயிராக வீழ்ந்தது.

ஜானகி குதித்து ஓடித் தரையில் வீழ்த்தப்பட்ட பறவையை இறுகத் தழுவிக்கொண்டு, "என் அப்பனே!

எனக்காக உயிர் விட்டாயே! என் நாதருக்கு மற்றொரு தகப்பனாக வந்தாயே. இறந்தாயோ!" என்று புலம்பினாள்.

மகா சௌரியத்தோடு யுத்தம் செய்துவிட்டுக் காட்டுத் தீ எரித்து அணைத்துவிட்டதுபோல் தரையில் விழுந்த பறவையைப் பார்த்து திருப்தியடைந்தான் ராவணன். சீதையோ பறவையை அணைத்துக் கொண்டு, "இறந்த என் மாமனார் தசரத ராஜா உயிர் பெற்றது போல் யுத்தம் செய்தாயே!" என்று புலம்பினாள்.

பிறகு அரக்கன் அவளைத் தூக்கிப் போகச் சென்றான். "ஐயோ!" என்று கதறிக்கொண்டு அவள் இங்குமங்கும் அனாதையாக ஓடினாள். அங்கிருந்த மரங்களைப் பிடித்துக் கொண்டு "நாதா, எங்கிருக்கிறீர்கள்? லக்ஷ்மணா எங்கிருக் கிறாய்? ஓடி வாருங்கள்" என்று புலம்பினாள். ராக்ஷசன் அவளைப் பலாத்காரமாகத் தூக்கிப் பிடித்துக்கொண்டு ஆகாயத்தில் கிளம்பினான்.

மேலே கருமேகத்தை அடுத்த மின்னலைப்போல் பிரகாசித்தாள் சீதை. அரக்கன் அவளைத் தூக்கிச் செல்லும் போது காட்டுத் தீ பற்றி எரிந்து கொண்டிருக்கிற ஒரு மலைபோல் காணப்பட்டான். வைச்ரவணுடைய தம்பியாகிய ராவணனின் தேகம் ஆகாயத்தில் வேகமாகச் செல்லும்போது சீதையின் பிரகாசத்தால் ஒரு தூமகேதுவைப் போல் இருந்தது.

* * *

இப்படி ஜானகி அரக்கன் கையில் அகப்பட்டு அபகரிக்கப்பட்டாள். அச்சமயம் சூரியன் தன் பிரகாசத்தை இழந்தான். இருள் சூழ்ந்தது. சர்வ பூதங்களும் புலம்பின.

"தர்மம் அழிந்தது, சத்தியம் மறைந்தது. நீதிநெறி, கருணை எல்லாம் ஒழிந்தன" என்று பிலாபித்தன.

தரையிலிருந்து பார்த்த ஊமைப் பிராணிகளும் கண்களில் நீர் சொரிந்தன.

ராவணன் ஆகாயத்தில் கருணையின்றிப் பிராட்டியைப் பிடித்துக்கொண்டு தன் விநாசத்தை நோக்கி வேகமாகச் சென்றான். சீதை சூடியிருந்த மலர்களின் இதழ்கள் சிந்திச் சிதறியவை, ராவணனுடைய சம்பத்து சிதறி விழும் என்று சொல்லிக்கொண்டு விழுவனபோல் விழுந்தன.

## 51. சிறை வாசம்

கோபத்தாலும் துயரத்தாலும் வாட்டப்பட்ட சீதை சிவந்துபோன தன் கண்களை நன்றாகத் திறந்து, அரக்கன் முகத்தைத் தைரியமாகப் பார்த்துச் சொன்னாள்.

"நீசனே! உன் பெயரையும், குலத்தையும், வீரப் பிரதாபங்களையும் என்னிடம் மிகக் கம்பீரமாகச் சொல்லிக்கொண்டு எவ்வளவு பெரிய சூரனாக நடந்து கொண்டாய்? வெட்கமில்லையா உனக்கு? பக்கத்தில் யாருமில்லாத சமயம் பார்த்து ஸ்திரீயைத் தூக்கி ஓடும் சூரனே! எத்தனை பெரிய வீரன் நீ! ராமன் இல்லாத சமயம் பார்த்து வெட்கமில்லாமல் திருட்டு வேலை செய்தாய்!

"என்னைக் காப்பாற்றப் பார்த்த கிழப் பறவையைக் கொன்ற சூரனே! ஆசிரமத்தில் என்னென்ன வீரமும் சாமர்த்தியமும் பேசினாய்! யுத்தம் செய்யத் தைரியமில்லாமல் திருட்டு வேலை செய்வதை உலகம் என்றென்றும் இகழுமல்லவா? நீசனே! நீ பெருமையாகச் சொன்ன உன் குலத்துக்கே அவமானம் இழைத்தாய்!

"நீ என்ன சம்பாதிக்கப் போகிறாய்! என்னை இப்படி எடுத்துக் கொண்டு வேகமாக ஓடிப்போய் எத்தனை நாள் பிழைத்திருக்கப் போகிறாய்? சீக்கிரம் என் நாதனுடைய வில்லிலிருந்து பாயும் சரங்கள் உன் உடலில் புகுந்து, உன் உயிரைத் தாக்கப் போகின்றன. என் நாதன் பார்வையில் நீ சிக்கினால் போதும். அப்போதே நீ மாண்டாய்! தப்பிப் பிழைத்தாய் என்று எண்ணாதே. நிச்சயமாக மாள்வாய். உன்

அயோக்கியப் பிரயத்தனமெல்லாம் உனக்கு என்ன நன்மை தரப்போகிறது? ஒரு நாளும் என்னை நீ அடையமாட்டாய். உயிர் நீப்பேனேயொழிய உனக்கு வசப்படேன். என் நாதன் உன்னை விடமாட்டார். அவர் கோபத்தைச் சம்பாதித்த நீ பிழைக்க மாட்டாய். நிச்சயமாகக் கொல்லப்படுவாய். வெகு சீக்கிரமாக நரகத்தில் வைதரணீ நதியைப் பார்க்கப் போகிறாய். பழுக்கக் காய்ச்சிய இரும்புப் பிரதிமை உனக்காகக் காத்திருக்கிறது. அதைத் தழுவிக் கொள்ளப் போகிறாய். இரும்பு முட்கள் கொண்ட மரமும் உனக்காகவே நரகத்தில் காத்திருக்கிறது. ஒரு முகூர்த்தத்தில் ஜன ஸ்தானத்தில் உன்னுடைய பதினாலாயிரம் அரக்கர்களைத் தேரின்றி ஒருவராக நின்று அழித்த என் ராமன், உன்னை விடப்போகிறாரா? உனக்காகக் காத்திருக்கும் யமனிடம் உன்னைச் சீக்கிரம் ஒப்புவிப்பார்."

இவ்வாறு சீதை பலவிதமாக இகழ்ந்தும் தாக்கியும் எச்சரித்தும் சொன்னதை அரக்கன் காதில் போட்டுக் கொள்ளாமல், ஆகாய மார்க்கமாக லங்கையை நோக்கி வில்லினின்றும் பாயும் அம்பைப் போலப் பறந்து சென்றான்.

பல மலைகளையும் ஆறுகளையும் தாண்டிச் செல்லும்போது வழியில் ஒரு மலைமேல் யாரோ நிற்பதைக் கண்டாள் சீதை. அப்பொழுது மேலுத்தரீயத்தை எடுத்துத் தன் ஆபரணங்களை அதில் முடித்துப் போட்டாள். ராமன் தன்னைத் தேடுவார். தன்னை எடுத்துப் போன வழி அவருக்குத் தெரிய வேண்டும் என்று இவ்வாறு செய்தாள். அழுதுகொண்டிருந்த அவளைக் கீழே மலைமேலிருந்த வானரங்களும் பார்த்தன.

பம்பையைத் தாண்டிப் பிறகு, கடலையும் கடந்து ராவணன் லங்காபுரியில் பிரவேசித்தான். துயரத்தால் துடித்துக் கொண்டிருந்த சீதையுடன் தன் அந்தப்புரம் அடைந்தான். ஒரு பெண்ணுருவம் கொண்டு தன் உயிரைக் குடிக்க வந்திருந்த அந்தகனை எடுத்துக்கொண்டு, தன்

அந்தப்புரம் புகுந்தான். "சீதையை அடைந்துவிட்டேன்" என்று மூர்க்கன் எண்ணினான்.

உடனே பிசாசுகளைப் போன்ற சில கோர ராக்ஷசிகளைக் கூப்பிட்டு, "இவளை நீங்கள் வெகு ஜாக்கிரதையாகக் காவலிருந்து பார்த்துக் கொள்ள வேண்டும்" என்று ஆணையிட்டான்.

"என் உத்தரவு இன்றி ஆணாவது பெண்ணாவது எவரும் இவளிருக்குமிடம் அண்டவிடாதீர்கள்" என்று கண்டிப்பாக உத்தரவு செய்தான்.

"இவள் என்ன இச்சித்தாலும் வஸ்திரமோ, பொன்னோ, மணியோ எதுவாயினும் அவளுக்குக் கொடுத்துச் சந்தோஷப்படுத்த வேண்டும். எனக்குச் செய்யும் பணி விடையும் மரியாதையும் இவளுக்கு நடக்கவேண்டும்!" என்று உத்தரவிட்டான்.

"யாராவது இவள் மனம் துன்புறும் பேச்சுப் பேசினால் கொன்றுவிடுவேன். தெரிந்தோ தெரியாமலோ இவளுக்குக் கோபமோ கஷ்டமோ உண்டாகும் பேச்சு யாரும் பேசக் கூடாது. ஜாக்கிரதை!" என்று எச்சரித்தான்.

சீதையை அந்தப்புரத்தில் ஓர் இடத்தில் இறக்கிவிட்டு இனி செய்ய வேண்டியது என்ன என்று யோசிக்கலானான். சாமர்த்தியரான சாரணர்களை அழைத்து உத்தரவிட்டான்: "நீங்கள் உடனே கரன் இருந்த ஜனஸ்தானம் போய் அங்கே பயப்படாமல் ராமன் என்ன செய்து வருகிறான் என்பதை நன்றாகக் கவனித்து வரவேண்டும். அந்த ராமன் இருக்கும் வரையில் எனக்குத் தூக்கம் வராது! அவன் எனக்குப் பெரிய சத்துரு. அவன் எப்படியாவது சாகவேண்டும். நீங்கள் போய்த் தைரியமாக உங்கள் வேலையைச் செய்ய வேண்டியது" என்று உத்தரவிட்டான்.

கடலால் சூழப்பட்ட ஒரு கோட்டைக்கு கொண்டுவரப்பட்டு, எவ்வளவு தூரத்தில் தான் சிறையில்,

கிடக்கிறோம் என்பதைச் சீதை அறியவில்லை. தன்னுடைய நாதனான வீரன் உடனே வந்து ராவணனைக் கொன்று மீட்பான் என்றே எதிர்பார்த்தாள். ஆனபடியால் மிகவும் துன்பப்பட்டவளாயினும், தன்னுடைய சித்தத்தை திடம் பண்ணிக்கொண்டு, தன் நாதனுடைய வீரத்தையும் சாமர்த்தியத்தையும் பூரணமாக நம்பித் தைரியமாக இருந்தாள். அரக்கன் தன்னண்டை மிருகத்தனமாக நடந்து கொள்ளவில்லையென்பதையும் கண்டு ஒருவாறு ஆறுதல் அடைந்தாள்.

சாரணர்களை ஜனஸ்தானத்துக்கு அனுப்பிவிட்டு, ராவணன் சீதை இருந்த அந்தப்புரம் பிரவேசித்தான். அவள் சோகத்தில் மூழ்கிக் கண்ணீர் நிறைந்த கண்களோடு இருப்பதைக் கண்டான். ராக்ஷசிகள் தங்கள் காவல் வேலையைச் சரியாகச் செய்து வருவதையும் பார்த்தான். சரி, தன் செல்வத்தையும் அவள் பார்க்க வேண்டும். பார்த்த பின் நிச்சயமாகத் தனக்கு உடன்படுவாள் என்று எண்ணி அதற்கு ஏற்பாடு செய்தான்.

அவனுடைய பெரிய அரண்மனைக்குள் கொண்டுபோய் அங்குள்ள சிறப்பையும் செல்வத்தையும் காண்பித்தார்கள். ராவணனுடைய சம்பத்தும் ராஜபோகங்களுக்குரிய பொருள்களும் உலகத்தில் வேறு எந்த அரசனும் பெற்றதில்லை. சீதைக்கு எல்லாவற்றையும் காண்பித்தார்கள். இதைக் கண்டு தன்னை மோகிப்பாள் என்று அரக்கன் எண்ணினான்.

எங்கு பார்த்தாலும் பொன்னும் மணியும் பட்டும், எங்கு பார்த்தாலும் கண்ணைக் கவரும்படியான விசித்திர வேலைப்பாடு அமைந்த மண்டபங்கள், விதானங்கள், மேடைகள்; ஆயிரக்கணக்கான வேலைக்காரிகள்; செல்வத் தாலும் ராஜ்யாதிகாரத்தாலும் உண்டாக்கக்கூடிய எல்லா விதச் சம்பத்தையும் லங்காபுரியில் ராக்ஷசேச்வரனுடைய

அரண்மனையில் கண்டாள். ஆனால் சீதையின் மனம் வேறு எங்கேயோ இருந்தது. தன்னுடைய பெருஞ்செல்வத்தை யெல்லாம் அவளுக்குக் காட்டிவிட்டு அவளிடம் பேச ஆரம்பித்தான். தன் சேனையின் பெருங் கணக்கை சீதையிடம் சொன்னான்.

அவளோ முன்னமேயே ராவணனுடைய வீரியத்தைப் பற்றித் தன் அபிப்ராயத்தைச் சொல்லிவிட்டாளே! ஆயினும், வெட்கமில்லாமல் தன் சேனா பலத்தைப் பற்றி எடுத்துச் சொன்னான். "இதையெல்லாம் நீ உன்னுடைய பொருளா கவும் உன்னுடைய ராஜ்யமாகவும் வைத்து அனுபவிக்கலாம். என் பிராணனைவிடச் சிறந்தவளாக எனக்கு நீ ஆவாய். என்னுடைய மனைவிகள் பல பேர்; ஆயினும் அவர்கள் அனைவருக்கும் நீ எஜமானியாக, என்னுடைய அன்பு முழுவதும் பெற்று விளங்குவாய்; நான் சொல்லுவதைக் கேள். வேறு யோசனை செய்யாதே. என் இஷ்டத்தைப் பூர்த்தி செய்வாயாக. நூறு யோசனை தூரத்தில், இந்த லங்கா புரியானது சமுத்திரத்தால் சூழ்ந்து, ஆயிரக்கணக்கான மகா வீரர்களால் காக்கப்பட்டு வருகிறது. இங்கே யாரும் பிரவேசிக்க முடியாது.

"தேவாசுரர்களில் எனக்குச் சமமான சக்தி கொண்டவர்கள் யாருமேயில்லை. இது தேவாசுரர் அறிந்த விஷயம். ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்ட ஓர் அற்ப மானிடன், வனத்தில் தவமிருக்க நிச்சயித்திருக்கும் ஒரு திக்கற்றவன். அவனைக் கட்டிக்கொண்டு நீ என்ன சுகமடைவாய்? உன் அழகுக்கு தகுந்த சம்பத்துள்ள புருஷன் நான். சுகம் அனுபவிக்கும் யௌவனப் பருவத்தை வீணாக்கிக் கொள்ளாதே. ராமனை மறுபடியும் பார்க்கப்போவதில்லை. அதைப்பற்றிச் சந்தேகம் வேண்டாம். ஒரு நாளும் ராமன் இங்கே வரமுடியாது. என்னுடைய ராஜ்யம் முழுவதும் உன்னுடையதாக வைத்துக் கொண்டு என்னுடன் அனுபவிப்

பாயாக! நானும் எனக்குட்பட்டுக் கிடக்கும் தேவர்களும் உனக்கு அடிமைகளாவோம். என் முக்கிய பட்டமகிஷியாக அபிஷேகம் செய்யப்படுவாய். உனக்கு ஒரு குறைவுமிருக்காது. இது வரையில் பூர்வ கர்மவிசேஷத்தால் கஷ்டங்களை அனுபவித்தாய். இனிமேல் உன் புண்ணிய கர்மங்களின் நற்பயனை என்னுடன் அனுபவிக்கப் போகிறாய். லங்கையை ஆளப்போகிறாய், குபேரனை ஜெயித்த லங்கேசன் மனைவியாவாய். புஷ்பக விமானத்தில் ஏறி, நாம் இஷ்டப்படி சஞ்சரிப்போம். உன் அழகிய முகத்தில் துக்கம் காணப்படக் கூடாது. சந்தோஷமாக இருப்பாயாக" என்றான்.

ராவணன் இவ்வாறெல்லாம் பேசும்போது, சீதையின் கண்களில் தாரை தாரையாக நீர் பெருகிற்று. புடவையின் தலைப்பால் முகத்தை மூடிக் கொண்டாள். தன் பயத்தைக் காட்டாமலிருக்க இவ்வாறு செய்தாள்.

"நீ சங்கோசப்படாதே! என்னை ஒப்புக் கொள்வதில் பாபம் இல்லை. கூச்சம் வேண்டாம். தெய்வத்தால் ஏற்பட்ட நிலையை ஒப்புக்கொள்ளலாம் என்பது சாஸ்திரம். அழகியே! என் தலையை உன் பாதங்களில் வைத்துக் கேட்டுக் கொள்கிறேன். எனக்கு அருள்வாய், நான் உனக்கு அடிமை. என் பதவியையும் மறந்து நான் உன்னிடம் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன். என்னுடைய வாழ்நாளில் யாரையும் இப்படி நான் இறைஞ்சியது கிடையாது."

இவ்வாறு ராவணன் சீதையை மிக வருந்திக் கேட்டுக் கொண்டான். அவள் ஒப்புக்கொள்வாள் என்றும், அவளை அடைந்துவிடுவது நிச்சயம் என்றும், அரக்கன் எண்ணினான்.

மனத்தில் நிச்சய புத்தியிருந்தால், எந்தச் சங்கட நிலையிலும் தைரியம் உண்டாகும். சோகத்தால் வாட்டப்பட்ட சீதை அரக்கனைக் கண்டு பயமேயில்லாமல் பேசலானாள். ஒரு துரும்பைக் கிள்ளித் தனக்கும் ராவணனுக்கும் மத்தியில் வைத்துப் பேசினாள்.

பஞ்சவடியில் சந்நியாசி வேஷம் பூண்டு, தான் வைத்த காய் கிழங்குகளுக்கு முன் உட்கார்ந்து ராவணன் தன் குலத்தையும் வீரத்தையும் பேசினான் அல்லவா? அதற்கு ஓர் எதிரொலி போல் இப்போது சிறையில் கிடந்த சீதை பேசினாள்.

"நான் யார் என்பதை அறிந்து கொள். தசரத ராஜா மூவுலகங்களிலும் புகழ்பெற்ற அரசர். தருமத்துக்கும் ஓர் அசையா அணையாகப் பல்லாண்டு அரசுபுரிந்த மகாராஜர். சத்தியம் காத்தவர். அவருடைய குமாரர் ராமர், என் புருஷர். தேவனைப் போன்ற அந்த ராமன் என் நாதனாவார். சிம்மத்தின் பலம் பெற்ற வீரர். அவரும் அவர் தம்பி லக்ஷ்மணனும் உன்னுடைய உயிரை வாங்கக் காத்திருக் கிறார்கள். கரனும் அவன் சேனையும் ஜனஸ்தானத்தில் என் நாதனால் நிர்மூலமாக்கப்பட்டார்கள் என்பதை அறிவாய். கருடன் விஷப்பாம்பை தூக்கிக்கொண்டு போவதுபோல், அவ்வளவு சுலபமாக உன்னுடைய பெருஞ்சேனை ஜன ஸ்தானத்தில் என் ராமனால் ஒரு முகூர்த்த நேரத்தில் அழிக்கப்பட்டது. அந்த ராமனை, தேவாசுரர்களால் கொல்லப்படமாட்டாய் என்று வரம் பெற்ற நீ விரோதி யாக்கிக் கொண்டாயல்லவா? அவரால் நீ உன் மரணத்தை அடைவாய் என்பது நிச்சயம். தப்பமாட்டாய். நீ பெற்ற வரம் உன்னைக் காக்கமாட்டாது. வேள்வியில் யூபஸ்தம் பத்தில் கட்டிய ஆட்டைப்போல் நிற்கிறாய் என்பதை அறிந்துகொள். ராமனுடைய கோபப் பார்வை உன்மேல் படுவதுதான் தாமதம். கடலை உலரச் செய்தாவது, சந்திரனை ஆகாயத்திலிருந்து கீழே இறக்கியாவது என்னை என் நாதன் மீட்பார். நிச்சயம்.நீ செய்த தீவினை உன்னையும் உன் லங்கையையும் அழித்துப் பாழாக்கப் போகிறது.

"என் வீரபுருஷர் அரக்கர்களுடன் தைரியமாகத் தண்டக வனத்தில் தனியாக வசித்தார். எதிர்த்து வந்த

அரக்கர்களை வீரரைப்போல் யுத்தம் செய்து கொன்றார். அவரில்லாத சமயம் பார்த்து நீ திருடனைப் போல் என்னைத் தூக்கி வந்தாய். இந்தத் தீச்செயலின் பயனை அனுபவிப்பாய். தப்பமாட்டாய். நீயும் உன் குலமும் அழிந்து போகும் காலமானது அருகில் வந்துவிட்டபடியால், விதி உன்னை இந்தப் பாவத்தை செய்யத் தூண்டித் தள்ளிற்று. அழிந்து போகும் காலத்திலேதான் இத்தகைய துர்புத்தி உண்டா கிறது.

"உன்னை விரும்பும்படி என்னைக் கேட்கிறாய். இது ஆகாத காரியம் என்பதை நீ அறியவில்லையா? அன்னபட்சி காக்கையிடம் அணுகுமா? வேள்வி செய்யும் வேதிகையண்டை ஒழுக்கம் தவறிச் சண்டாளனான ஒருவன் போக முடியுமா? உயிரையாவது உடலையாவது காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்று எனக்குக் கொஞ்சமும் ஆசை இல்லை. உலகத்தாரால் இகழப்பட்டு உயிர் வைத்துக் கொண்டிருக்க நான் விரும்பவில்லை. நான் பயப்பட்டு உயிரைக் காப்பாற்றிக் கொள்ள உன் வசமாவேன் என்று எண்ணாதே!"

இவ்வாறு சொல்லிவிட்டு மௌனமடைந்தாள்.

"அப்படியா?" என்றான் ராவணன். "சரி பன்னிரண்டு மாதம் உனக்குக் கெடுவு தருகிறேன். நீ என்னை மணந்தால் நல்லது. இல்லையென்றால் அந்தத் தவணை முடிந்ததும், என் சமையற்காரர்கள் என்னுடைய காலை ஆகாரத்துக்கு உன் உடலைச் சமைப்பார்கள்." இவ்வாறு சீதையை எச்சரித்து விட்டு, காவற்கார ராக்ஷசிகளுக்குத் தனியாக உத்தர விட்டான்.

"இவளுடைய பிடிவாதத்தையும் கர்வத்தையும் நீங்கள் எப்படியாவது அழிக்கவேண்டும். அசோக வனத்தில் தனியாக வைத்து, பயத்தாலும் நயத்தாலும் சாமர்த்தியமாக இவளைத் திருத்துங்கள். காட்டில் பிடித்த பெண் யானையை எப்படி வசப்படுத்துகிறோமோ அதுபோல் இவளைச்

சீக்கிரம் நீங்கள் திருத்தவேண்டும்" என்று உத்தரவிட்டு கடுஞ்சினத்தோடு தன் அரண்மனைக்குச் சென்றான்.

சீதையை அழைத்துக் கொண்டு ராக்ஷசிகள் அசோக வனம் சென்றார்கள். அது ரம்யமான அந்தப்புர உத்தியான வனம். பறவைகளும் புஷ்பங்களும் காயும் பழமும் நிறைந்த மரங்கள் உள்ள தோட்டம். அங்கே சீதை கோரமான அரக்கிகளின் காவலில் சிறைப்பட்டுத் துயரக் கடலில் மூழ்கிக் கிடந்தாள். ராமனும், லக்ஷ்மணனும் எப்படியாவது விஷயம் தெரிந்து கொள்வார்கள். தன்னை மீட்பார்கள். அரக்கர்களின் மிரட்டல்களுக்குப் பயப்படாமல் உயிர் வைத்துக் கொண்டிருக்க வேண்டும். வீரனாகிய தன் நாதன் அரக்கனை அழித்துவிடுவான். மறுபடியும் ராமனுடன் சேர்ந்து வாழும் நாள் சீக்கிரத்தில் வரும் என்று நம்பி, ராக்ஷசிகளின் மிரட்டலுக்குப் பயப்படாமலும், எவ்வளவு நயமாகப் பேசினாலும் அதனால் மோசம் போகாமலும் இருந்து வந்தாள்.

சீதை அசோகவனத்தில் துன்பப்பட்டுக் கிடந்தது ஒரு நாளல்ல; இரண்டு நாளல்ல; பல மாதங்கள் இப்படி அனாதையாகத் துன்பப்பட்டாள்.

மகாவீரன் ஹனுமான் கடல் தாண்டிவந்து தேவியின் துயரத்தைப் பார்த்து, அந்தத் துயரத் தீயையே கொண்டு லங்காபுரியை எரித்துவிட்டு, "ராமன் வருவான், பயப் படாதே!" என்று சீதைக்குச் சொல்லும் நாள் பின்னால் வரும்.

நம் நாட்டில் துயரப்படும் பெண்கள் அனைவரும் சீதா தேவியின் அம்சம். ஆண்களாகப் பிறந்தவர்கள் அனைவரும் ஹனுமானைப் போன்று பெண்ணைக் காக்கும் சுத்த வீரர்கள் ஆவார்களாக.

இப்போது மறுபடியும் நாம், ராம லக்ஷ்மணர்களை விட்ட இடத்திற்குப் போவோம்.

## 52. துக்க சாகரம்

இஷ்டப்பட்ட வடிவம் எடுத்துக்கொள்ளும் சக்தியைப் பெற்றிருந்த மாரீசன், மானாக வந்து ஏமாற்றிச் சீதையின் ஆசையைக் கிளப்பி, அது காரணமாகத் தன்னை வெகுதூரம் இழுத்துக்கொண்டுபோய், அங்கே தன்னுடைய அம்புக்கு இரையாகி உயிர்விடும்போது, தன் சுய உருவத்தை வெளிப் படுத்தி, 'ஹா சீதா ! ஹா லக்ஷ்மணா !" என்று பொய்க் குரலில் பலமாகக் கத்தினதையும் எல்லாவற்றையும் நினைத்து ராமன் கவலை கொண்டான்.

"ஓகோ ! இது பெரிய மோசம். இந்த மோசத்தால் லக்ஷ்மணன் ஏமாற்றமடைந்து, சீதையைத் தனியாகக் காட்டில் விட்டுவிட்டு என்னைத் தேடிக்கொண்டு வந்திருந் தால் பெரிய அபாயமாகுமே! சீதையை அபகரித்துக் கொண்டு போகவோ, கொன்று தின்றுவிடவோ அரக்கர்கள் இந்த மோசத்தைச் செய்திருக்கிறார்கள் என்றே தோன்றுகிறது. "ஹா, சீதா !" என்று என்னுடைய குரலைக் கேட்டதாக எண்ணி, உடனே சீதை பயந்து லக்ஷ்மணனை என்னிடம் அனுப்பிவிடுவாள். நரிகள் அவலக்ஷணமாக ஊளையிடு கின்றன. பறவைகளும் மிருகங்களும் துரதிருஷ்டக் குறிகளைக் காட்டுகின்றன. உள்ளத்தில் தைரியத்திற்குப் பதில் நடுக்கமாக இருக்கிறது. நான் காண்பதெல்லாம் அப சகுனங்களாகவே இருக்கின்றன. பெரிய ஆபத்தை அடைவேன் என்றே நினைக்கிறேன்."

இவ்வாறு தனக்குள் கவலைப்பட்டுக்கொண்டு ராமன் வேகமாக ஆசிரமத்தை நோக்கிச் சென்றான். எதிரே லக்ஷ்மணன் வருவதைக் கண்டான். அவனைக் கண்டதும் "ஐயோ! நான் நினைத்தவாறே ஆயிற்று" என்று கத்தினான்.

"சீதையைக் காட்டில் தனியாக விட்டுவிட்டு வந்து விட்டாயே லக்ஷ்மணா! அவளை ராக்ஷசர்கள் கொன்று தின்றுவிடுவார்கள் என்பது நிச்சயம். தவறான காரியம்

செய்துவிட்டாயே! ஜானகி தப்பமாட்டாளே" என்று ராமன் லக்ஷ்மணனுடைய கையைப் பிடித்துக்கொண்டு, மிக வருத்தத்துடன் சொன்னான்.

"ஆசிரமத்தில் அவளைக் காணாவிடில், லக்ஷ்மணா, நான் இறப்பேன், நிச்சயம். நீதான் திரும்ப அயோத்திக்குப் போய் விஷயத்தைச் சொல்வாய். ஐயோ! கௌசல்யை தன் துக்கத்தை எப்படிப் பொறுப்பாள்? கைகேயி விரும்பியதைப் பூர்த்தி செய்துவிட்டாளே. லக்ஷ்மணா? ராக்ஷசர்களுக்கு நம் பேரில் இருந்து வந்த பகையை பேதை சீதையின் மேல் காட்டி, இதற்குள் அவளைக் கொன்று தின்றேயிருப்பார்கள்; அவளைத் தனியாய் எப்படி நீ விட்டுவிட்டு வந்தாய்? மாரீசன் போட்ட சத்தத்தைக் கேட்டு ஏமாந்து போனீர்களே! நான் இப்போது என்ன செய்வேன்? சீதையை நான் காணப்போவதில்லை. அரக்கனுடைய சதி வெற்றியடைந்து விட்டது. நான் சாவது நிச்சயம். உன்னை நம்பிச் சீதையைப் பார்த்துக் கொள் என்று அவளை உன்னிடம் ஒப்புவித்து வந்தேன். நீ ஏன் அவளை விட்டுவிட்டு வந்தாய்? இப்படிச் செய்யலாமா?" என்று பசியாலும் தாகத்தாலும் துக்கத்தாலும் கோபத்தாலும் வாட்டப்பட்ட ராமன் பலவாறு கதறினான். கோபம் மேலிட்ட அண்ணனைப் பார்த்து லக்ஷ்மணன் கண்களில் நீர் பெருகப் பேசலானான்.

"அண்ணா! நான் என்ன செய்வேன்! 'ஹா சீதா! ஹா லக்ஷ்மணா!' என்ற கூக்குரலைக் கேட்டதும் சீதைக்குப் பெரும் பயம் பிடித்துக் கொண்டுவிட்டது. அவள் துடிதுடித்து நடுங்கி, 'போ! போ! ஓடு! ஓடு! ஏன் நிற்கிறாய்' என்று என்னை விடாமல் தொந்தரவு செய்து, நான் என்ன சொல்லியும் கேட்காமல் என்னைத் துரத்தினாள். 'சீதையே! பயப்பட வேண்டாம். ராமனை இந்த உலகத்தில் எந்த ராக்ஷசனும் எந்தப் பகைவனும், எதிர்த்து வெற்றி பெற முடியாது. இது ராமன் குரல் அல்ல. இது மோசம். மூன்று உலகத்திலும் ராமனைக் கொல்லும் ஆற்றல் படைத்தவர்கள் யாரும்

இல்லை. யுத்தத்தில் அவன் இம்மாதிரி தீனசுவரத்துடன் ஒரு நாளும் மானத்தை விட்டுக் கதற மாட்டான். இதை ஒரு கணமும் நம்பவேண்டாம்' என்று நான் எவ்வளவு சொல்லியும் கேளாமல், 'ஓ பகைவனே! வேஷம் போட்டு எங்கள் கூட வந்து மோசம் செய்தாயே. ராமன் இறந்ததும் என்னை நீ அடைய லாம் என்றல்லவோ காட்டுக்கு எங்களுடன் நீ வந்தாய்! நீ ஒருநாளும் என்னை அடையமாட்டாய். மோசக் காரனே! மகாபாவி, பரதனும் நீயும் செய்த சதியா?' என்று சொல்லி, பொறுக்க முடியாத தோஷத்தை என்மேல் சாட்டி, 'நீ போனால் ஆயிற்று. இல்லாவிட்டால் உயிரை இப்போதே விட்டுவிடுவேன்' என்று கதறினாள். உன்மத்தவடைந்தளாகித் தாங்க முடியாத பேச்சுக்களைப் பேசி, என்னைத் துன்புறுத்தித் துரத்தியபடியால் , வேறு வழியில்லாமல் வந்தேன் அண்ணா!" என்றான்.

"நீ சொல்லும் சமாதானத்தை என்னால் ஒப்புக் கொள்ள முடியாது" என்றான் ராமன். "அவள் என்ன சொன்ன போதிலும், அஞ்ஞானத்தால் உண்டான பேச்சு என்று நீ பொறுத்துக்கொண்டு இருந்திருக்க வேண்டு மல்லவா? அவளைத் தனியாக விட்டு நீ எப்படி வரலாம்? பெண்ணாய்ப் பிறந்தவள் பயத்தினால் ஏதேதோ சொல்லு வாள். அதை நீ பொருட்படுத்தியிருக்கக் கூடாது. நீ செய்தது பெருந்தவறு. சீதையை நான் மறுபடி காணப்போவதில்லை" என்று சொல்லி, லக்ஷ்மணன்மேல் கோபித்துக் கொண்டு துக்கத்தில் மூழ்கினான்.

இருவரும் வெகு வேகமாக ஆசிரமத்தை நோக்கிச் சென்றார்கள்.

போகும்போது பல அசுபக் குறிகள் தோன்றின. அவை ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றியபோதெல்லாம், ராமன், "சீதையின் க்ஷேமம் சந்தேகம், சந்தேகம்" என்று லக்ஷ்மணனுக்குச் சொல்லிக் கொண்டே சென்றான்.

ஆசிரமத்தையடைந்ததும், அது சீதையின்றிச் சூன்ய மாகக் கிடப்பதைக் கண்டார்கள். ராமனுடைய இதயம் உடைந்து போயிற்று.

மான் தோலும், தர்ப்பையும், புல் பாயும் யாவும் சிதறிக் கிடந்தன. குடிசை பாழாய்க் கிடப்பதைப் பார்த்த ராமன் விம்மி விம்மி அழுதான். இங்குமங்கும் குடிசையைச் சேர்ந்த வனத்தில் ஓடியோடித் தேடிப் பார்த்தான். மரங்களி லெல்லாம் இலைகளும் புஷ்பங்களும் வாடியிருந்தன. சீதையை எங்கும் காணவில்லை.

'ஐயோ! கொன்று தின்றுவிட்டார்களோ! எங்கே தூக்கிக்கொண்டு போனார்களோ? எவ்வளவு பயந்து போயிருப்பாள்? சகிக்க முடியவில்லையே! ஒரு வேளை ஆற்றுக்குப் போயிருக்கிறாளோ? ஜலம் கொண்டுவரப் போயிருக்கிறாளோ? பார்ப்போம்!" என்று பைத்தியம் பிடித்தவனைப்போல் கண்கள் சிவந்து, இங்குமங்கும் அலைந்தான். ஒளிந்து கொண்டு வேடிக்கை செய்கிறாளோ என்று மரம் மரமாகத் தேடிப் பார்த்தான்.

ராமனுடைய துயரம் வரவரக் கடல் போலப் பொங்கிற்று. உன்மத்த நிலை அடைந்துவிட்டான். ஒவ்வொரு மரமாகச் சென்று அவற்றைக் கூவியழைத்துப் பிரலாபிக்க ஆரம்பித்தான்.

"அசோக மரமே! உனக்கு நன்றாகத் தெரியும். சீதை எங்கே என்று சொல்லுவாய்! என் சோகத்தைத் தீர்க்கமாட்டாயா?"

"ஓ, பனைமரமே! அவள் எங்கே இருக்கிறாள்? உனக்குக் கட்டாயம் தெரியும், சொல்வாய்!"

இவ்வாறு செடி கொடி, மரம் ஒவ்வொன்றையும் கேட்டுக்கொண்டே உன்மத்தனாக வனமெல்லாம் திரிந்தான்.

வனத்தில் கண்ட மிருகங்களையெல்லாம் இம்மாதிரியே கேட்டுக் கொண்டு அலைந்தான்.

"ஏ புலியே! அந்த யானையும் மானும் எனக்கு உண்மை சொல்லப் பயப்படுகின்றன. உனக்குத்தான் பயம் என்பது இல்லையே! நீயாவது சொல். உனக்குக் கட்டாயம் தெரியும்."

இப்படியெல்லாம் சொல்லிச் சொல்லி அழுதான்.

"ஒளிந்து கொண்டிருக்கிறாய். அதோ பார்த்து விட்டேன். போதும் உன் விளையாட்டு, இனி நிறுத்து. என்னால் பொறுக்க முடியவில்லையே" என்று சொல்லி அழுதான்.

இவ்வாறு பிதற்றிக் கொண்டும் அழுது கொண்டும் சுற்றிலுமுள்ள காடெல்லாம் தேடிச் சென்றான். எங்கும் காணாமல் துக்கம் மேலிட்டு, "ஹா லக்ஷ்மணா! ஹா சீதே!" என்று கதறித் தரையில் விழுந்தான்.

"லக்ஷ்மணா! எங்குமில்லை சீதை. அவளை அரக்கர்கள் பிடித்து அங்கம் அங்கமாகப் பிய்த்துத் தின்றுவிட்டார்கள். நான் இனி என்ன செய்வேன்? உயிர் தங்காது. தந்தை தசரத மகாராஜாவைப் போய்ச் சேருவேன். ஐயோ! அங்கும் 'மகனே நான் இட்ட ஆணையைத் தீர்க்காமல் என்முன் வந்து விட்டாயே!' என்று தந்தை கோபிப்பார். நான் கெட்டேன்!" என்று சேற்றில் அகப்பட்ட யானையைப்போல் வீறிட்டு அழுதான்.

இவ்வாறு ராமன் துயரப்பட்டு, நிலையிழந்து, உன்மத்தனைப் போல் கஷ்டப்படுவதைக் கண்டு சகிக்க முடியாமல் லக்ஷ்மணன் சொன்னான்.

"அண்ணா, இப்படி அழுவது தகாது. இருவரும் சேர்ந்து காடு முழுவதும் தேடிப் பார்ப்போம். உனக்குத் தெரியுமே. சீதை குகைகளிலும் வனங்களிலும் சஞ்சரிப்பதில் மிகவும் பிரியமுடையவள். ஆற்றில் குளிப்பதிலும், விளையாடுவதிலும், புஷ்பங்கள் பறிப்பதிலும் மிகவும் ஆசை கொண்டு எங்கேயோ விளையாடிக் கொண்டிருக்கிறாள். பார்ப்போம்.

நம்மை சோதிக்கவே இப்படி அவள் விளையாட்டாகச் செய்கிறாள். வா! இருவரும் தேடுவோம். பிரலாபிக்காதே!"

இருவரும் காடு, மலை, ஆறு, தடாகம் என்று ஓர் இடம் விடாமல் தேடினார்கள்.

* * *

"எங்கும் காணவில்லை, லக்ஷ்மணா! நான் என்ன செய்வேன்?" என்றான் ராமன்.

"புலம்பாதே அண்ணா; மகாவிஷ்ணு பலிச்சக்கர வர்த்தியை அடக்கி, மூவுலகையும் அடைந்ததுபோல் நீ சீதையை அடைவாய், நிச்சயம். தைரியம் இழக்காதே!" என்றான் லக்ஷ்மணன்.

"இல்லை, தம்பி! தேடிப் பார்த்தாயிற்று. சீதை எங்குமில்லை. அவளை இழந்தேன். என் உயிர் இனி எனக்கு வேண்டியதில்லை" என்றான்.

ஒரு முகூர்த்த நேரம் நினைவிழந்து கிடந்தான். பிறகு நினைவு வந்ததும், 'ஐயோ' என்று துயரம் தாங்காமல் உரத்த குரலில் அழ ஆரம்பித்தான். லக்ஷ்மணன் எவ்வளவு சமாதானம் சொல்லியும் கேட்கவில்லை.

"லக்ஷ்மணா! என்னால் இனி என்றைக்கும் அயோத்தி போக முடியாது. சீதையை அழைத்துக் கொண்டு வனம் சென்றவன்; அவளைப் பாதுகாக்க வகையில்லாதவன்; அவளை அரக்கர்களுக்குத் தின்னும்படி கொடுத்துவிட்டுத் தனியாகத் திரும்பிவந்தான் என்று உலகமெல்லாம் என்னை இகழும். ஜனகருக்கு நான் என்ன சொல்லி சமாதானப் படுத்துவேன். நீ போய் நம் தாய்மார்களைக் கவனித்துக்கொள். பரதனை ஆலிங்கனம் செய்து எனக்காக அவனுக்குச் சொல்லிவிடு. 'நீயே அரசன்; தேசத்தை நீயே அரசனாக இருந்து ஆள்வாய். ராமன் உனக்கு ஆக்ஞையிட்டு விட்டான்' என்று சொல்லி விடு" என்றான்.

லக்ஷ்மணன் எவ்வளவு தேறுதல் செய்ய முயன்றும் பயன்படவில்லை. 'சீதையை ராக்ஷசர்கள் தூக்கிச் சென்று, உடலைப் பிய்த்துத் தின்றுவிட்டார்கள்' என்று தீர்மானித்து விட்டான். நரமாமிசம் தின்னும் அரக்கர்களிடம் அவள்படும் இம்சையைக் கற்பனை செய்து, அதை விரித்துச் சொல்லிச் சொல்லி, அழுதுகொண்டே இருந்தான்.

"நான் பெரும் பாபங்களைச் செய்தவனாக இருக்க வேண்டும். இல்லாவிடில் எனக்கு இவ்வளவு கஷ்டங்கள் நேர்ந்திருக்குமா? என்னுடன் வந்த சீதை, அரக்கர்களுக்கு உணவாகப் போனதை நான் சகிக்க வேண்டியதாயிற்றே! என்னைப் போன்ற பாபி உலகத்திலே வேறு ஒருவனுமில்லை" என்றான்.

"அண்ணா, இப்படி நீ மனநிலையை இழந்து விடலாமா? தைரியத்தை இழந்தவர்கள் ஒரு முயற்சியையும் எடுக்க முடியாது. துக்கத்தை அடக்கியாண்டு, மனத்தை ஸ்திரப்படுத்திக்கொள். விதியை முயற்சியால் வெல்ல வேண்டும். அப்படி வெற்றி பெறுவதற்கு மனத்தினின்று அதைரியத்தை விலக்கித் தைரியம் உண்டாக்கிக் கொள்ள வேண்டும். இவ்வாறுதான் உலகத்தில் தைரியசாலிகள் காரிய சித்தியடைகிறார்கள். வனம் முழுவதும் தேடிப் பார்ப்போம். சோகத்தில் மூழ்கிப் போகாதே. தைரியசாலிகளுடைய வழியைப் பின்பற்றுவோம்" என்று லக்ஷ்மணன் பலவாறு சொல்லிப் பார்த்தான். ஆனால் ராமனுடைய அளவு கடந்த துயரத்தில் அது பயனில்லாமல் போயிற்று.

ராமன் தன்னை ஒரு மனிதனாகத்தான் கருதினான். தன்னை விஷ்ணுவாக அறியவில்லை என்பதற்கு இந்தக் கட்டம் சந்தேகமற்ற அத்தாட்சியாகும். சில இடங்களில் நிகழ்ச்சிகளும் பேச்சுகளும் வேறு அபிப்ராயத்துக்கு இடம் தந்தாலும், இந்தக் கட்டத்தில் வால்மீகி ராமனை மனிதனாகத்தான் வர்ணித்திருக்கிறார். உயிரைக் காட்டிலும்

பிரியமான மனைவி, அரக்கர்கள் நிறைந்த வனத்தில் காணாமற் போனால், மேம்பட்ட குணமுள்ள ஒரு புருஷன் எவ்விதம் நடந்து கொள்ளுவானோ, அந்த விதத்திலேதான் ராமனுடைய மனநிலையும் நடத்தையும் இருக்கக் காண்கிறோம். தம்பி ஆறுதல் கூறியும் பலன் ஏற்படாத நிலையிலும் ராமன் இருப்பதைக் காண்கிறோம்.

ராமாவதாரத்தில் சாதாரண தருமம் விளக்கப் படுகிறது. தருமத்தோடு வளர்ந்த காதல் எவ்வாறிருக்க வேண்டும் என்பதைப் பார்க்கிறோம். மனைவியின் காதலுக்குப் புருஷனுடைய காதல் குறைவாக இருக்கலாகாது என்பதை இந்தக் கட்டத்தில் நன்றாகப் பார்க்கலாம்.

இந்த நிகழ்ச்சிகளை ஆத்மீக முறையிலும் எடுத்துக் கொண்டு, ஒரளவு பயன்படுத்திக் கொள்ளலாம். ஒரு ஆன்மா வழிதப்பிப் போனால், பகவானுடைய திருவுள்ளம் எந்த அளவில் துன்பப்படுகிறது என்று சீதா வியோகத்தில் சித்திரிக்கப்பட்டிருக்கிறது என்று வைத்துக் கொள்ளலாம்.

பகவானுக்கு நஷ்டமேது, துக்கமேது என்று கேட்கலாம். சர்வம் பகவத்லீலை. எல்லாம் பகவானுடைய திருவிளை யாடல் என்று உணர்ந்து விட்டோமானால், ஒரு விமரிசனமும் அதற்குமேல் வேண்டியதில்லை. பாவம், புண்ணியம், பக்தி இவையெல்லாம் அந்த லீலையில் ஒரு பாகம். ஆண்டவனுக்கு நாம் ஒவ்வொருவரும் காதல் மனைவியைப் போலாவோம். நாம் எந்தக் காரணத்தினாலாவது வழி தப்பிப் போனால், ஆண்டவனுக்குக் காதல் மனைவியை இழந்த துக்கம் உண்டாகும். அந்தத் துக்கம் அவன் விளையாட்டில் ஒரு பாகம்.

## 53. மற்றொரு தகப்பன்

இரு சகோதரர்களும் மலையிலும் வனத்திலும் ஆற்றங்கரையிலும் தேடித் தேடி 'சீதா! சீதா!' என்று

கூக்குரலிட்டுப் பார்த்து ஒன்றும் பயன்படவில்லை. ஒரு துப்பும் கிடைக்கவில்லை. இன்னது செய்வது என்று ஒன்றும் தோன்றாமல், துக்கத்தின் வேகத்தில் கோதாவரியையும் தேவதைகளையும் பஞ்ச பூதங்களையும் ராமன் கூவிக் கூவிக் கதறினான். ஆறுகளுக்கும் தேவதைகளுக்கும் பஞ்ச பூதங்களுக்கும் ராக்ஷசேந்திரனிடம் உள்ள பயத்தால், எந்த மலையும் ஆறும் வாயுவும்கூடப் பதில் கூறவில்லை என்கிறார் கவி முனிவர்.

ஒரு மான் கூட்டம் மட்டும் சைகையாய் தெற்கு முகம் நோக்கிப் போய்த் தேடுங்கள் என்று குறிப்பிட்டதாக அறிந்து, ராம லஷ்மணர்கள் தெற்கு நோக்கிச் சென்றார்கள். அங்கே வழியில் ஓரிடத்தில் புஷ்பங்கள் தரையில் சிதறிக் கிடப்பதைக் கண்டார்கள்.

அதைக் கண்டதும், "இதோ, நான் கொடுத்த புஷ்பம்! சீதையின் தலையிலிருந்து உதிர்ந்த புஷ்பமே" என்று ராமன் துப்பு அறிந்து, உற்சாகமும், கூடவே பெரும் துயரமும் அடைந்தான். சீதைக்கு என்ன நேர்ந்து விட்டதோ என்கிற பயம் முன்னைவிட அதிகமாய் விட்டது. கதறிக் கதறி அழுதான்.

புஷ்பங்கள் கிடந்த இடத்தைச் சுற்றிக் காட்டில் தேடிப் பார்த்தார்கள். பூமியில் ராக்ஷசேந்திரனுடைய பெருங் காலடிச் சுவடுகளும் சீதையின் காலடி பதிந்த குறிப்புகளும் கண்டார்கள். சீதையின் ஆபரணங்களிலிருந்து சிந்திக் கிடந்த தங்க மணிகளையும் கண்டார்கள். அவற்றைப் பார்த்து ராமன், "பார்த்தாயா, அவளைப் பிடித்துத் தின்பதற்காக அரக்கன் துரத்தித் துரத்தி ஹிம்சித்திருக்கிறான்!" என்று சொல்லிப் பிரலாபிக்கலானான்.

* * *

பிறகு உடைந்து கிடந்த தேரின் பல பாகங்களைக் கண்டார்கள். ரத்தம் சிந்தியிருப்பதையும் கண்டார்கள்.

ராக்ஷசேந்திரனுடைய தலைப் பாகையும் ஆபரணங்களும் தரையில் சிதறிக் கிடப்பதைக் கண்டார்கள்.

'இது என்ன?' என்று திகைத்து யோசிக்கலானார்கள். ஒடிந்த பெரிய வில்லையும், கிழிந்துபோய்க் கிடந்த தேர்க் கொடிகளையும் கவசத்தையும் கண்டார்கள். பிறகு சாரதியும் ரதத்தை இழுத்த பூதக் கழுதைகளும் செத்துக் கிடப்பதைக் கண்டார்கள். பெரியதொரு யுத்தம் அந்த இடத்தில் நடந்திருப்பதாகப் பல சின்னங்களால் அறிந்தார்கள்.

"சீதையின் உடலைத் தின்பதற்காக இரு அரக்கர்கள் தங்களுக்குள் பெருஞ் சண்டையிட்டிருக்கிறார்கள்" என்றான் ராமன்.

இப்படி நானாவிதமாக ஊகித்துக் கொண்டு "தருமம் சீதையைக் காப்பாற்றவில்லையே! எந்தத் தெய்வமும் அவள் துணைக்கு வந்து நிற்கவில்லையே! இந்த உலகத்தை அழித்து விடுவதே சரி. நான் கற்ற அஸ்திரங்கள் பயன்படாமல் போகுமா? பார்க்கலாம்" என்றான் ராமன். மனநிலையை முற்றிலும் இழந்து இவ்வாறு பேசினான்.

ராமனுடைய மனக் குழப்பத்தையும் ஆற்றாமையையும் கண்டு தம்பி லக்ஷ்மணன் தைரியம் சொல்லிக்கொண்டே வந்தான். பெருந்துயரம் ஏற்பட்டால், எல்லாருக்குமே மனம் கலங்கிச் சுவாதீனமற்றுப் போகிறது. "சகஜமான உனக்குள்ள குணங்களை ஏன் விட்டுவிட்டாய்? உலகத்தையெல்லாம் வெறுக்கவோ, கோபிக்கவோ காரணமில்லை. ஒருவன் செய்த துஷ்டச் செயலை வைத்து நாம் உலகத்தையெல்லாம் பழிக்கலாமா? முந்தியெல்லாம் அண்ணா என்னை நீ சாந்தப் படுத்தி வந்திருக்கிறாயே! உன் மனம் பெருந்துயரத்தால் கலங்கிப் போயிருக்கிறபடியால், சிறுவனாகிய நான் உனக்குத் தைரியம் சொல்ல வேண்டியதாயிருக்கிறது. உன்னுடைய இயற்கைத் தைரியத்தை நான் தட்டி எழுப்புகிறேன். உலகத்தை வெறுப்பது நியாயமில்லை. நம்முடைய பகைவன்

யார் என்பதைக் கண்டுபிடித்துப் பிறகு செய்யவேண்டியதைச் செய்வோம்."

இவ்வாறு லக்ஷ்மணன் ஆறுதலும் தைரியமும் தரக்கூடிய மொழிகளைப் பிரியமாகச் சொல்லிக்கொண்டே சென்றான். கொஞ்சதூரம் சென்றதும், தரையில் அசையாமல் குற்றுயிராய்க் கிடந்த ஜடாயுவைக் கண்டார்கள். சிறகுகள் வெட்டப்பட்டு, உயிர்போகும் நிலையில் தரையில் கிடந்த பறவையைத் தூரத்திலிருந்து பார்த்த ராமன், அது யார் என்று தெரிந்துகொள்ளவில்லை. அது ஓர் அரக்கன். மாய வேஷம் போட்டுக்கொண்டு தங்களை ஏமாற்றுவதற்காகவே அப்படித் தரையில் கிடப்பதாக எண்ணினான். மாரீசன் செய்த மோசம் ராமன் மனத்தை இவ்வாறு எண்ணச் செய்தது. மகாகோபாவேசமாக "அதோ அரக்கன்! சீதையைத் தின்றுவிட்டுப் படுத்திருக்கிறான்" என்று சொல்லி வில்லும் அம்புமாகப் பறவையிருந்த இடம் பாய்ந்தான்.

அப்போது ஜடாயு, தீனமான சுரத்தில், "அப்பனே, ராமனே! என்னை நீ கொல்ல வேண்டாம். என் உயிர் இன்னும் ஒரு கணம்தான் இருக்கும். நீ இந்த வனத்தில் தேடித்தேடி அலைகிற உன் தேவியானவள் ராவணனால் தூக்கிப் போகப்பட்டாள். அத்துடன் என் உயிரையும் தூக்கிச் சென்றுவிட்டான். சீதாதேவியைத் தன் மாய ரதத்தில் தூக்கிச் செல்வதைப் பார்த்த நான் தடுத்து அவனுடன் போர் செய்தேன். அவன் வில்லையும் ரதத்தையும் உடைத்துப் பொடியாக்கினேன். அவனுடைய சாரதியையும் வதம் செய்தேன். தரையில் கிடக்குமெல்லாவற்றையும் பார், அந்த யுத்தத்தின் சின்னங்கள். முடிவில் ராக்ஷசன், நான் களைப்பாயிருந்த சமயம் பார்த்து என் சிறகுகளைக் கத்தியால் வெட்டி என்னை வீழ்த்திவிட்டான், சீதையைத் தூக்கிக்கொண்டு ஆகாய மார்க்கமாகச் சென்றுவிட்டான். சிறகுகளை இழந்து தரையில் கிடந்த என்னால் அதற்குமேல்

ஒன்றும் செய்யமுடியவில்லை. உயிரை இவ்வளவு நேரம் வைத்துக் கொண்டிருந்து உனக்கு விஷயம் சொன்னேன்" என்றான்.

* * *

ஜடாயுவின் சொல்லைக் கேட்டதும், ராமன் கண்களினின்று ஆறுபோலக் கண்ணீர் பெருகிற்று. வில்லை வீசி எறிந்துவிட்டு, பறவையைக் கட்டி அணைத்துக் கொண்டான். ராஜகுமாரர்களுடைய துக்கம் எல்லை கடந்து போயிற்று. கோவென்று அழுதுகொண்டு பூமியில் புரண்டார்கள்.

"லக்ஷ்மணா! என்னைப் போன்ற துர்ப்பாக்கியசாலி எவனுமில்லை. நாட்டை இழந்து காட்டுக்கு வந்து, இங்கே சீதையையும் இழந்தேன். தசரதனுக்குப் பதில் நமக்குத் தந்தையாக இருந்த இந்த ஜடாயுவையும் நான் கொன்றேன். எனக்காகத் தன் உயிரை விட்டான். சீதையை இழந்த துக்கத்தைவிட இது அதிக துக்கமாக இருக்கிறது. நான் நெருப்பில் விழுந்தாலும் என்னுடைய துர்ப்பாக்கியம் அந்த நெருப்பையும் அணைத்துவிடும். கடலில் விழுந்தேனானால், கடலில் உள்ள நீரும் என்னுடைய துர்ப்பாக்கியத்தால் வற்றிப் போகும். நான் பெரும்பாவி லக்ஷ்மணா! ஒரு நாள் உன்னையும் நான் இழந்துவிடுவேனோ?" என்று ராமன் அழுது புரண்டான்.

ஜடாயுவைக் கட்டியணைத்துக்கொண்டு, "என் அப்பனே, என் சீதையை நீ கண்டாயா?" என்றான். ஜடாயு பேச்சிழந்து தரையில் உணர்வற்று விழுந்தான்.

மரணத் தறுவாயிலிருந்த கழுகாசுரன் சரியாகப் பேசச் சக்தியின்றி மறுபடியும் தீனஸ்வரத்தில், "பயப்படாதே, ராமா! சீதையை நீ மீண்டும் அடைவாய். அவளுக்கு ஒரு சேதமும் ஏற்படாது. இழந்த செல்வத்தை மறுபடியும்

பெற்றுப் பெருமகிழ்ச்சியை அடைவாய்" என்று சொல்லி விட்டு, இரத்தமும் மாமிசமும் கக்கி உயிர் நீத்தான்.

மோகத்தாலும் மயக்கத்தாலும் தாம் செய்ய வேண்டியதைச் சமயத்தில் செய்யாமலும், செய்யக் கூடாததைச் செய்தும் சீதையை இழந்தார்கள்.

அயோத்தியில் தந்தை இறந்தான். அவனுக்கு உத்தரக்கிரியைகளைப் பரதனும் சத்துருக்கனனும் செய்தார் கள். ராமனும் லக்ஷ்மணனும் அந்த ஆறுதலைக்கூட அடையச் சந்தர்ப்பம் இல்லாமல் வனத்திலிருந்தார்கள்.

தாங்கள் அஜாக்கிரதையாக இருந்ததால், சீதைக்கு உண்டான அபாயத்தினின்று அவளைத் தப்புவிக்க, ஆயுத பாணியாயிருந்த அரக்கனோடு, சிறகுகளும் காலும் மூக்கும் தவிர வேறு ஆயுதமின்றி ஜடாயு கடும்போர் செய்து, தன் உயிரைத் தத்தம் செய்துவிட்டதைக் கண்டார்கள்! ராஜ குமாரர்கள் இருவரும் இந்த ஜடாயு தங்கள் தந்தைக்குச் சமானம் என்று பாவித்து, அந்தப் பறவைக்குத் தகப்பனாருக்குச் செய்வதுபோல் உத்தரகிரியை செய்து, ஓரளவு ஆறுதல் அடைந்தார்கள். இறந்த வீரனுக்கு வேறு என்ன அவர்களால் செய்ய முடியும்!

பாகவத பக்தர்கள் ஜடாயுவை மிகப்பெரிய பக்த சிரேஷ்டனாக வணங்குகிறார்கள். அந்த ஏழைப் பறவை ராக்ஷசேந்திரனுடன் சண்டையிட்டு, கஷ்டப்படும்போது பார்த்துக்கொண்டிருந்த சீதையின் உள்ளத்தில், எவ்வாறு அன்பும் நன்றியும் துக்கமும் பொங்கியிருக்கும் என்பதை நம் கற்பனா சக்தியைக் கொண்டு உணரவேண்டும். உணர்ந்தால் பிராட்டியின் அருளால் தூய்மையும் பக்தியும் அடைவோம். பக்தர்கள் ஜடாயுவை ஓர் ஆழ்வாராகக் கருதிப் பக்தி செய்வதில் என்ன வியப்பு? பின்னால் ராமன் இலங்கையில் யுத்தம் செய்து வெற்றி அடையப் போகிறான். ஆனால் அதைச் சீதை நேரில் காணுவதில்லை. அசோக வனத்தில்

சிறைப்பட்டுக் கிடக்கிறாள். போர்க்கள நிகழ்ச்சியையும் புருஷனுடைய புகழையும் பிறர் சொல்லித்தான் அறிந்து திருப்தி அடையப் போகிறாள். ஆனால் ஜடாயுவின் பக்தியையும் வீரத்தையும் தண்டகாரண்யத்தில் பிராட்டி தன் கண்ணாலேயே பார்த்தாள். வில்லும் வாளும் கொண்ட அரக்கனை ஆயுதமொன்றும் இல்லாமல் எதிர்த்து, அவன் கர்வத்தை அடக்கி, முடிவில் தன் உயிரைத் தத்தம் செய்த வீரன் ஜடாயு. இலங்கையில் நடந்த யுத்தத்தைக் காட்டிலும் ராவண ஜடாயு யுத்தமே மேலானது என்றுகூடச் சொல்லலாம். இதனாலேதான் பக்தர்கள் பரதனை ஆழ்வான் என்று துதிப்பது போல், ஜடாயுவையும் ஆழ்வான் என்று பெயர் சூட்டிக் கொண்டாடுகிறார்கள்.

"லக்ஷ்மணா! உலர்ந்த கட்டைகளைத் திரட்டி அடுக்குவாய்! நான் நெருப்புக் கடைகிறேன். நமக்காக உயிர்விட்ட கழுகரசனுக்கு, தந்தை தசரதனுக்குச் செய்யத் தப்பிப்போன கிரியைகளைச் செய்வோம்" என்றான் ராமன்.

"வேள்வித் தீயில் ஆகுதி விட்டு யாகம் செய்த சீலர்களுக்கு எந்தப் பதவி உரியதோ, தவம் செய்யும் வானப்பிரஸ்தர்களுக்கு எந்தக் கதி உரியதோ, பூமிதானம் செய்யும் புண்ணியவான்களுக்கு எந்தப் புண்ணியலோகம் உரியதோ, யுத்தத்தில் பின் வாங்காத வீரனுக்கு எந்த உலகம் உரியதோ, அவையெல்லாம் உனதாகுக, கழுகரசனே!" என்று சொல்லி, ராஜகுமாரர்கள் நீர்க்கடனும் செலுத்தினார்கள். அதன்மேல் ராமன் மனத்தளர்ச்சி நீங்கித் தைரியம் அடைந்தான்.

* * *

பாரத மக்களுக்கு, கோடிக்கணக்கான ஆண், பெண், குழந்தைகளுக்கு ராமாயணம் வெறும் கதையல்ல; வாழ்க்கை நிகழ்ச்சிகளைவிட உண்மை. சூரியனுடைய வெயிலினால் செடியும் கொடியும் எப்படி உண்மையில் வளர்கின்றனவோ,

அப்படியே இந்த ராம சரித்திரத்தில் காணும் நிகழ்ச்சிகளை உட்கொண்டு, பாரத தேசத்துக் கோடிக்கணக்கான மக்கள் வளர்ந்து, பண்பட்டு வாழ்க்கை நடத்தும் சக்தியை அடைந்து வருகிறார்கள். எந்த அபலையாவது அபாயத்திலோ கஷ்டத்திலோ வருந்துவதைப் பார்த்தோமானால், ஜடாயுவை நினைத்து நாம் மனோபலம் அடைந்து செய்ய வேண்டியதைச் செய்வோமாக.

* * *

அவதார புருஷனான ராமன் துக்கம் வந்தபோது மனம் தளர்ந்து புலம்புவது, உலகத்தில் மற்றொரு குலத்தார் பூஜிக்கும் அவதார புருஷனான ஏசுநாதரைப் பற்றிக் கிறிஸ்துவ புராணத்தில் சொல்லியிருப்பதோடு ஒப்பிட்டுக் கவனிக்கத் தக்கது. சிலுவையில் தூக்கி ஆணிகள் அடித்து மாட்டப்பட்டு, வெகுநேரம் அந்த நிலையில் தவித்து முடிவில் உயிர்போகும் தறுவாயில், "ஏலோய்! ஏலோய்! லாமா சபக்தாணி" இபராணி பாஷை - "என் கடவுளே! என் கடவுளே! என்னை ஏன் கைவிட்டாய்?" என்று ஏசுநாதர் உரத்த குரலில் புலம்பிக் கூவி உயிர் நீத்ததாக எழுதப்பட்டிருக்கிறது. அவதாரங்களின் இன்றியமையாத ஒரு பொது இலக்கணத்தை நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். தான் தெய்வமேயானால் அவதார உடலினுடைய தருமத்தின்படி துக்கப்படுதலும் பலவும் நடக்கும்.

## 54. இடக்கண் துடித்தது

எதிர்பாராத கஷ்டங்களும் விபத்துக்களும் ஒன்றன் பின் ஒன்றாக வந்ததைக் கண்டு, விதியின் போக்கை யாராலும் விலக்கமுடியாது என்கிற உணர்ச்சி, மனத்தைக் கவர்ந்து ராம லக்ஷ்மணர்கள் தங்களுக்குள்ள இயற்கைத்

தைரியத்தை அவ்வப்போது இழந்தார்கள். ஆனபோதிலும் ஒருவரை ஒருவர் தேற்றிக்கொண்டு சென்றார்கள்.

காட்டில் போய்க் கொண்டிருந்தபொழுது, எதிர் பாராதபடி ஒரு கோர உருவம் கொண்ட ராக்ஷசனுடைய கையில் இரு ராஜகுமாரர்களும் அகப்பட்டுக் கொண் டார்கள். அந்த ராக்ஷசனுக்குத் தலையுமில்லை, கால்களு மில்லை; பெரிய வயிறும் மிக நீண்ட இரண்டு கைகளுமே அதன் உருவம். காட்டில் ஓர் இடத்தில் அசையாமலிருந்து கொண்டு, இரண்டு கைகளையும் நீட்டி, அவற்றுள் அகப்படும் புலி, கரடி முதலிய மிருகங்களை வயிற்றுக்குள் போட்டுக் கொன்று தின்று விடுவான். வயிற்றிலேயே அவனுக்கு ஒரு பெரிய வாய். மார்பிலே ஒரு கண். பார்த்தாலும் சகிக்க முடியாத இந்தக் கோர உருவத்தோடு இருந்த அரக்கன் கையில் அகப்பட்ட இராஜகுமாரர்கள், கொஞ்ச நேரம் திகைத்தார்கள். இன்னது செய்வது என்று தெரியவில்லை. பிறகு ராமன் லக்ஷ்மணனுக்குச் சொன்னான்; "நீ ஒரு கையை வெட்டித் தள்ளு; நான் ஒரு கையை வெட்டி விடுகிறேன்."

அப்படியே செய்தார்கள். அந்த அரக்கன் பெயர் கபந்தன். கைகளை வெட்டியவுடன் ஒன்றும் செய்ய முடியாமல் அரக்கன் பேச ஆரம்பித்தான். "நான் செய்த துராக்கிரமத்தால் சாபம் பெற்று இந்த உருவத்தில் வாழ்ந்துவந்தேன். நீங்கள் ராம லக்ஷ்மணர்கள் என்று எண்ணுகிறேன். நீங்கள் வந்து என் கைகளை வெட்டிவிட்டு என் உடலைத் தகனம் செய்தீர்களானால், நான் என் சொந்த உருவம் பெறுவேன். இதுவே எனக்கு இந்திரன் சொன்ன சாப விமோசனம்" என்றான்.

ராஜகுமாரர்கள் கபந்தனை எரித்தார்கள். எரித்ததும் அவன் திவ்ய மங்கள ரூபத்துடன் நெருப்பிலிருந்து வெளிவந்து சுவர்க்கம் செல்ல விமானம் ஏறினான். "நீங்கள் சீதையை அடைவீர்கள். மிகவும் ரம்யமான பம்பா தீரத்துக்குச் சென்று,

அங்கே ரிச்யமுக மலையில் வசித்துவரும் சுக்ரீவன் என்ற வானர ராஜாவின் உதவியைப் பெறவேண்டும். அவன் தன் அண்ணனாகிய வாலியால் ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டு, கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறான். அவனுடைய நட்பை நீங்கள் சம்பாதித்தாலொழிய உங்கள் காரியம் நிறை வேறாது." என்று சொல்லி மறைந்தான்.

பிறகு ராமனும் லக்ஷ்மணனும் பம்பையை நோக்கிச் சென்றார்கள். அந்த அழகிய பிரதேசத்தில் தங்க, ரிஷியின் சிஷ்யையான சபரி என்கிற விருத்த சந்நியாசி யம்மையைக் கண்டு, அவளுடைய உபசாரத்தைப் பெற்றார்கள். சபரி யம்மை மகா ஞானி. ராமன் ஈசுவராவதாரம் என்பதை அறிந்தவள். அவன் வருவான், அவனைக் கண்டு அவன் பாதத்தில் வணங்கிப் பரமபதமடைய வேண்டும் என்றே காத்திருந்தாள். ராமனுக்காகத் தான் தேடி வைத்திருந்த மிகுந்த ருசியான பழங்களை அவனுக்கும் லக்ஷ்மணனுக்கும் தந்து உபசரித்தாள்.

பிறகு சபரி அவ்விடத்து மகிமைகளையெல்லாம் ராமனுக்குக் காட்டியும் சொல்லியும் முடித்தாள். பிறகு தீயெழுப்பி அதில் பிரவேசித்து உடலை நீத்து மேலுலகம் சென்றாள்.

சபரியைக் கண்டு, பம்பா சரஸில் ஸ்நானம் செய்தபின் ராம லக்ஷ்மணர்கள் தைரியமடைந்தார்கள். பிறகு செய்ய வேண்டியதை யோசித்தார்கள். "லக்ஷ்மணா, என் உள்ளத்தில் வெற்றியடைவோம் என்கிற உணர்ச்சி தோன்ற ஆரம்பித்திருக்கிறது. சுக்ரீவனைப் பார்க்கும் வழி தேடுவாய்" என்றான் ராமன்.

பம்பை நோக்கிச் சென்றார்கள். பம்பையாறும் தடாகமும் வனமும் வசந்த பருவத்துக்குரிய அழகோடு சோபித்தன. மிருகங்களும், பறவைகளும், மரங்களும், கொடிகளும் தம்முடைய இயற்கைச் சௌந்தர்யத்தைக்

காட்டி, ராமனுடைய துக்கத்தை முன்னைவிட அதிகமாக வளரச் செய்தன. எதைப்பார்த்தாலும் சீதை இதை எவ்வளவு அனுபவித்திருப்பாள் என்கிற எண்ணமே அவன் உள்ளத்தை வாட்டிற்று. அவதார சங்கற்பத்தின்படி அனுபவிக்க வேண்டிய மானுட துயரத்தை எவ்வளவு அடக்கியாளப் பார்த்தாலும் முடியவில்லை. எப்போதுமே தைரியம் கொண்ட ராமனுடைய மனம் தளர்ந்து போய்க் கஷ்டப்படுவதைப் பார்த்து லக்ஷ்மணன் ஆறுதல் மொழிகள் சொல்லி வந்தான். "தேவர்களின் தாயாகிய அதிதியின் கர்ப்பத்தில் மூடிவைத்தாலும்.சீதையைக் கண்டு பிடிப்போம். ராவணன் தப்பிப் போகமாட்டான். நிச்சயம் அவனை வதம் செய்து சீதையை மீட்போம். இந்த மனத் தளர்ச்சி உனக்குத் தகாது. கவலையும் அதைரியமும் உன்னை அண்டலாமா? அவற்றைத் தூர விலக்கு. ஒரு பொருளை இழந்தால், அதை மறுபடியும் பெறுவதற்கு மனிதன் இடைவிடாத முயற்சியுடன் வேலை செய்யவேண்டும். நம்முடைய அன்பே நமக்கு விரோதியாகப் போகிறது. அன்பினால் மனம் சோகத்தில் சிக்கியலைந்து, தளர்ச்சி அடைந்து முயற்சியைத் தடுக்கிறது. உனக்கு நான் சொல்ல வேண்டுமா? உற்சாகமே மனிதனுக்கு முக்கிய சாதனம். சோகத்தையும், அது உண்டாக்கும் பற்றையும் மறந்து உற்சாகம் மேற்கொண்டு முயற்சி செய்வோமாக! தைரியம் செய்துகொண்டு சோகத்தைத் தள்ளுவாய், அண்ணா!"

இவ்வாறெல்லாம் தம்பி அண்ணனுக்கு உபதேசம் செய்தான். ஆதிசேஷன் மகாவிஷ்ணுவுக்குக் காப்பு. இந்த ஆதிசேஷ அவதார அம்சமான இளையபெருமாள், சக்கரவர்த்தித் திருமகனை உற்சாகப்படுத்தி மனத்தாழ்ச்சியை விலக்கினான் என்பது, பெரியோர்களுடைய வியாக்கியானம்.

ராமன் ரிச்யமுக வனம் வந்து இங்குமங்கும் வில் பிடித்துத் திரிவதைப் பார்த்து, சுக்ரீவனுக்கும் அவன்

கூட்டத்துக்கும் பெரும் பயம் பிடித்துக்கொண்டது. வாலியால் துரத்தியடிக்கப்பட்ட சுக்ரீவன், வாலி பிரவேசிக்க முடியாத இடம் என்று கண்டு, அந்த மலைப்பிரதேசத்தில் வாசம் செய்து கொண்டிருந்தான். இங்கும் வாலி மாறுவேடம் போட்டுக் கொண்டு தன்னைக் கொல்ல வந்துவிட்டானோ என்று சுக்ரீவன் பயந்தான். அல்லது வாலியினுடைய நண்பர்கள், க்ஷத்திரிய வீரர்கள் யாரோ அவன் சார்பில் வந்து தன்னைக் கொல்லப் பார்க்கிறார்கள் என்று பயந்தான். வனத்திலுள்ள மற்ற வானரர்களும் கிலி பிடித்து இங்குமங்கும் ஓடினர்.

ஹனுமான் சுக்ரீவனுடைய முக்கிய மந்திரி. அவன் சுக்ரீவனுக்குத் தைரியம் கூறினான். "இது வாலியல்ல, இவர்கள் வாலியின் நண்பர்களாகவும் காணப்படவில்லை. பயப்பட வேண்டிய காரணமில்லை. நான் போய் பேசித் தெரிந்து கொண்டு வருகிறேன்" என்று சொன்னதன் பேரில், சுக்ரீவன் மிக மகிழ்ச்சியடைந்து, "அப்படியே செய்! ஜாக்கிரதையாகப் போய் விஷயத்தைத் தெரிந்து கொண்டு வா. மிகச் சாமர்த்தியமாக உண்மையை உணரவேண்டும். எனக்கு மிகச் சந்தேகமாக இருக்கிறது. அவர்கள் இங்குமங்கும் தேடுவதைப் பார்த்தால் என்னைக் கண்டுபிடித்துக் கொல்லவே வந்திருப்பதாகப் பயப்படுகிறேன்" என்றான்.

ஹனுமான், ராம லக்ஷ்மணர்களிருந்த இடம், ஒரு பிராமண வடிவமெடுத்துச் சென்றான். போய் நின்றதுமே ஹனுமானுடைய உள்ளத்தில் ஒரு புது உணர்ச்சி உண்டான தாகத் தெரிகிறது. உள்ளதை உள்ளதுபோல் சொல்லிப் பேசலானான். நிகழ்ச்சியை வால்மீகி வர்ணிக்கும்போது ஹனுமான் தான் யார் என்பதைக் காட்டாமல், விஷயம் கண்டுகொள்ள மாத்திரம் போனதாக முனிவர் ஆரம்பிக்கிறார். ஆனால் போகப்போக ஒன்றும் மறைக்காமல் தன்னைப் பற்றியும், வானர ராஜனைப் பற்றியும் உண்மையாகவும் விவரமாகவும் பேசுகிறான். ராம லக்ஷ்மணர்

களுடைய தோற்றத்தைக் கண்டதும் நாதனைக் கண்ட பக்தனைப் போல் பரவசப்பட்டு அனுபவித்துப் புகழ்கிறான். தான் ஒரு வானரம் என்றும், தன்னுடைய அரசன் சொல்லிய வண்ணம் வேஷம் போட்டுக்கொண்டு வந்ததாகவும் சொல்லிவிடுகிறான்.

"மனத்தைக் கவரும் ரூபம் தரித்த ராஜ ரிஷிகளே! தேவர்களைப்போல் விளங்குகிறீர்கள். விரதம் பூண்டவர் களாகக் காணப்படுகிறீர்கள். தவம் செய்ய வந்தீர்கள் என்றே எண்ணுகிறேன். இந்தக் கஷ்டமான வனத்துக்கு ஏன் வந்தீர்கள்? நீங்கள் யார் என்று சொல்ல வேண்டும். இந்த நதியும் வனமும் உங்கள் வரவால் முன்னை விட அழகாக விளங்குகின்றன. உங்களுடைய முககாந்தியும் உங்கள் சரீர சௌந்தர்யமும் ஆச்சர்யமாக விளங்குகின்றன. உங்களுடைய அபூர்வ லக்ஷணங்களைக் கண்டு இந்த வனத்திலுள்ள ஜீவன்கள் பயப்படுகின்றன. உங்கள் பராக்கிரமம் சொல்லா மலே விளங்குகிறது. நீங்கள் யார்? எந்தத் தேசத்திலிருந்து வந்திருக்கிறீர்கள்? நீங்கள் பெரிய ராஜ்யத்தை ஆட்சி புரியவே பிறந்தவர் என்பது வியக்தம். ஆயினும் தாபஸ வேஷம் தரித்திருக்கிறீர்கள். ஜடையும் மரவுரியும் தரித்து வில்லும் அம்புமாக வந்திருக்கிறீர்கள்.

"நான் இவ்வளவு சொல்லியும் ஏன் பேசாமலிருக் கிறீர்கள்? இங்கே சுக்ரீவன் என்கிற வானர ராஜன் தன் அண்ணன் வாலியால் நாட்டிலிருந்து துரத்தப்பட்டு, இங்குமங்கும் அலைந்தும் மறைந்தும் காலம் கழித்து வருகிறான். அவனுடைய மந்திரி நான். என் பெயர் ஹனுமான். நான் வாயுவின் புத்திரன். அரசன் உத்தர விட்டபடி பிராமண சந்நியாசி உருவம் தரித்து உங்களிடம் வந்திருக்கிறேன்."

இவ்வாறு ஹனுமான் மிக வணக்கமாகச் சொன்ன மொழிகளைக் கேட்டு, ராமன் லக்ஷ்மணனுக்குச் சொன்னான்.

"தம்பி, இந்த ஹனுமான் பேசியதைக் கேட்டு, இவனிடம் எனக்கு முழு நம்பிக்கை உண்டாகிவிட்டது. அவன் பேச்சின் அழகைப் பார்த்தாயா? எவ்வளவு சரியான இலக்கணமும் சுரமுமாகப் பேசுகிறான். வேதங்கள் முழுதும் அத்தியயனமும் செய்து வியாகரணம் சம்பூரணமாகக் கற்றவனைப்போல் பேசுகிறான். இவனைப்போல் அல்லவோ இருக்கவேண்டும் தூதன். இத்தகைய தூதனைக் கொண்ட அரசனுக்கு ஒரு குறையுமில்லை. நாம் யாரைத் தேடி வந்தோமோ, அவனே நம்மைத் தேடி வந்திருக்கிறான். சுக்ரீவனைக் காண நாம் வந்தோம். அவனே இந்தத் தூதனை அனுப்பியிருக்கிறான். இவனுக்கு நல்வரவு சொல்லி நம்முடைய அபிப்ராயத்தைத் தெரிவிப்பாய்!" என்றான்.

* * *

"மகா ஐசுவரியம் படைத்த என் தமையன், தசரத சக்கரவர்த்தியின் மூத்த மகன், ராஜ்யத்தை விட்டு வனவாசம் செய்கிறான். உன் அரசனான சுக்ரீவனிடம் தன் காரியம் நிறைவேறுவதற்காக உதவியை நாடி வந்திருக்கிறான். சாபத்தால் ராக்ஷஸ வடிவம் பெற்ற கபந்தன், சுக்ரீவன் என்கிற வானர ராஜனுடைய சகாயத்தைப் பெற்றீர்களானால் அரக்கன் வஞ்சித்து எடுத்துப்போன ராஜகுமாரியை மறுபடி அடைவீர்கள் என்று எமக்குச் சொன்னான். அவன் சொற்படி இங்கே வந்திருக்கிறோம். உன்னுடைய அரசனுடைய நட்பைத் தேடி வந்திருக்கிறோம்" என்றான் லக்ஷ்மணன்.

வாயு குமாரனான ஹனுமானும் "சுக்ரீவன், வாலியால் பீடிக்கப்பட்டு, ராஜ்யத்தையும் மனைவியையும் இழந்தான். இரண்டையும் மறுபடியும் அடைவான் என்பது இப்போது உறுதியாயிற்று. உங்கள் நட்பை என் அரசன் அடைந்து அவனும் பயனடைவான். உங்களுடைய காரியமும் அவன் உதவியினால் நிறைவேறும்" என்றான்.

பிறகு மிகுந்த சந்தோஷத்தோடு மூவரும் வானர ராஜனான சுக்ரீவன் இருப்பிடம் சென்றார்கள். போகும் மார்க்கம் வானரர்கள்தான் தாண்டக் கூடுமாகையால், ஹனுமான் சுய ரூபமான வானர உருவமெடுத்து, இரு ராஜ குமாரர்களையும் தன் தோளின் மீது ஏற்றிக் கொண்டு சென்றான்.

நல்லவர்களுடைய உள்ளங்கள் வெகு சீக்கிரம் சுலபமாக ஒன்றுகூடும். வெகுகாலம் ஒரே இடத்தில் கூடி வாழ வேண்டிய தில்லை. அநேக சந்தர்ப்பங்களில் ஒருவரோடு ஒருவர் கலந்து பழகவேண்டியதில்லை. இருவர் உள்ளங்களிலும் தானாக உதிக்கும் உணர்ச்சியே நட்பைத் திடீர் என்று உண்டாக்கும்.

> ''புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
> நட்பாம் கிழமை தரும்.''

என்பது திருக்குறள்.

தவிர, இந்த நட்பு பகவானுடைய சங்கற்பம். ஹனுமானுடைய பக்தியையும் சேவையையும் ராமச்சந்திரன் அடைய வேண்டும் என்று நிச்சயிக்கப்படிருந்தபடியால் ஒருவரை ஒருவர் கண்டவுடனே, பரஸ்பர பூரண நம்பிக்கை தோன்றிவிட்டது. தன் தோளின்மேல் இரு ராஜகுமாரர் களையும் தூக்கிச் செல்வது உள்ளத்தில் உண்டாகிவிட்ட இணைப்பிலிருந்து தோன்றிய மெய்ப்பாடு. நண்பர்களும் காதலர்களும் கட்டியணைத்துக் கொள்வது போல், தாசனும் பக்தனுமான அனுமான் தன் சுவாமியைத் தோளின்மேல் மகிழ்ச்சிப் பரவசமாகத் தூக்கிச் சென்றான்.

ரிச்ய முகத்திலிருந்து மலையமலை ஏறிப் போய்ச் சேர்ந்ததும், ஹனுமான் சுக்ரீவனிடம் போய் ராம லக்ஷ்ம ணர்கள் வந்து அவனைப் பார்க்கக் காத்திருப்பதாகத் தெரிவித்து "இந்த ராமன் சிறந்த அறிவும், மற்ற எல்லா நற்குணங்களும் பெற்ற ராஜகுமாரன். இக்ஷ்வாகு குலத்தைச் சேர்ந்த, புகழ்பெற்ற மகாராஜா தசரதனுடைய மூத்த

குமாரன், தகப்பன் சொல்லைச் சத்தியமாக்குவதற்காகத் தம்பியுடனும் மனைவியுடனும் அயோத்தியைவிட்டு வனம் சென்றான். தசரத மகாராஜன் தன் இளைய மனைவியினால் தூண்டப்பட்டு ராமனை ஆரண்யவாசம் செய்யச் சொன்னான். அப்படி ராமன் தம்பி லக்ஷ்மணனுடன் காட்டிலிருந்தபோது, ராஜகுமாரர்கள் பக்கத்தில் இல்லாத சமயம் பார்த்து ராமன் மனைவியை ராவணன் தூக்கிப் போய்விட்டான். அவளைத் தேடிக் கண்டுபிடித்துத்தர, ராமன் உன் உதவியை நாடி வந்திருக்கிறான். இந்த ராஜகுமாரர்கள் உம்முடைய நட்பை அடையும் தகுதி வாய்ந்தவர்கள். இவர்கள் சிநேகிதத்தை அடைந்தால் நீரும் பெரும் பயனடைவீர்" என்றான்.

சுக்ரீவன் அழகிய மானுட உருவம் தரித்து, ராஜகுமாரர்களைக் கண்டு பேசினான். ராமனை நோக்கிக் கைநீட்டி, "ராஜகுமாரனே! வானரனான என் சிநேகத்தை நீ விரும்புவாயாகில், இதோ என் கை, அங்கீகரிப்பாயாக! உன் குணங்களையும் மகிமையையும் வாயு புத்திரனால் அறிந்தேன்" என்றான்.

ராமனும் நீட்டிய கையை அங்கீகரித்துச் சுக்ரீவனை ஆலிங்கனம் செய்து கொண்டான்.

உடனே ஹனுமானும் குச்சிகளைக் கொண்டுவந்து தீ மூட்டினான். அக்னியைப் பூஜித்துப் பிரதக்ஷணம் செய்து ராமனும் சுக்ரீவனும் நட்புப் பிரதிக்ஞை செய்தார்கள். "இருவர்களுடைய சுகத்திலும் துக்கத்திலும் இருவரும் சமபங்கு கொள்வோம். நம்முடைய நட்பு என்றும் இருப்பதாக" என்று பிரமாணம் செய்தார்கள்.

இரண்டு பெரும் மரக்கிளைகளை ஆசனமாகக் கொண்டு, ராமனும் சுக்ரீவனும் ஓர் இடத்திலும் ஹனுமானும் லக்ஷ்மணனும் மற்றோர் இடத்திலும் சந்தோஷமாய்ப் பேசிக் கொண்டு இருந்தார்கள். சுக்ரீவன் தன் கஷ்டங்களைச் சொல்லிக் கொண்டான். "வாலியின் பயத்தால் வனத்தில்

இங்குமங்கும் திரிந்துகொண்டும், இந்த மலையில் மறைந் திருந்தும் காலம் கழிந்து வருகிறேன். நீ வாலியைக் கொன்று என் துக்கத்தைத் தீர்த்து ராஜ்யமும் மனைவியும் நான் மறுபடி பெற்று அனுபவிக்கும்படி செய்வாயா?" என்றான்.

"நிச்சயமாக, இதோ அந்த அம்புக்கு வாலி இரை யாவான், சந்தேகமில்லை?" என்றான் ராமன்.

இப்படிச் சுக்ரீவனும் ராமனும் பேசிக்கொண்டிருந்த காலத்தில், அசோக வனத்தில் சீதையின் இடக்கண் மங்கள சூசகமாகத் துடித்தது. அரக்கர்களின் அரசன் ராவணனு டைய இடக்கண்களும் துடித்தன. அது அவனுக்கு அமங்கலம் உண்டாகும் என்கிற சகுனம்.

## 55. ஆபரணங்களைக் கண்டான்

சீதையை இழந்ததனால் ராமன் படும் துக்கத்தைப் பார்த்துச் சுக்ரீவன் அவனுக்குப் பலவிதமாகத் தைரியம் சொன்னான்.

"லக்ஷ்மணன் சொன்னதிலிருந்து எல்லாம் அறிந்தேன். நீ சிந்திக்க வேண்டாம். எப்படியாவது சீதை இருக்கும் இடத்தைக் கண்டு பிடிப்போம். அவளை எங்கு மூடி வைத்திருந்தாலும் கண்டுபிடித்துத் தருவோம். நீ சந்தேகப் படவேண்டாம். வெகுநாள் காத்திருக்க வேண்டியதில்லை. சீக்கிரமே இந்தக் காரியத்தை முடித்துத் தருவோம்.

"ஆகாய மார்க்கமாய் ஒரு ஸ்திரீயை அரக்கன் தூக்கிப் போனதை நானும் என் கூட இருந்தவர்களும் பார்த்தோம்.

"அவள் துடிதுடித்து அழுதுகொண்டும் 'ராமா! லக்ஷ்மணா!', என்று கூக்குரலிட்டுக் கொண்டும் போனதைக் கண்டோம். எங்களை அவளும் கண்டாள். கண்டு தன் உத்தரீயத்தை எடுத்துத் தன்மேலிருந்த ஆபரணங்களைக் கழற்றி அதில் முடித்துக் கீழே போட்டாள். அதை எடுத்து

வைத்திருக்கிறோம். நீ, இது உன் மனைவி சீதையின் ஆபரணங்களா என்று பார்த்துச் சொல்" என்றான்.

இதைக் கேட்டதும், ராமன் தாங்கமுடியாத பரபரப்புடன், 'கொண்டு வா', கொண்டு வா' என்றான்.

குகையில் வைத்திருந்த அந்தத் துணி மூட்டையைக் கொண்டு வந்தார்கள். வஸ்திரத்தைப் பார்த்தவுடனே ராமனுடைய துக்கம் பொங்கிப் பொறுக்க முடியாமல் போய்விட்டது. சிறு முடிப்பாகக் கட்டியிருந்த சீதையின் உத்தரீயத்தைப் பார்த்ததும் அரக்கன் கையில் சிக்கித் தவித்த சீதையின் சங்கடநிலை ராமன் கண்முன் நின்றது. "லக்ஷ்மணா! இந்த மூட்டையை அவிழ்த்துப்பார். என்னால் பார்க்க முடியவில்லை" என்றான்.

லக்ஷ்மணன் துணி முடிப்பை அவிழ்த்து, "இவை சீதையின் ஆபரணங்களே, சந்தேகமில்லை" என்றான்.

கால்களுக்கு இட்ட ஆபரணங்களை முதலில் எடுத்து லக்ஷ்மணன் அடையாளம் கண்டதைப் பற்றி, பக்தர்கள் மிகவும் ரசித்து, அதை எடுத்துக்கொண்டு உபந்நியாசம் செய்வது வழக்கம்.

பிறகு எல்லா ஆபரணங்களையும் எடுத்த ராமன், நன்றாக அடையாளம் கண்டு கண்ணிலே ஒற்றிக் கொண்டான். "புல்லில் விழுந்தபடியால் எல்லாம் கெடாமல் இருக்கிறது பார் லக்ஷ்மணா" என்றான் ராமன்.

பிறகு துக்கத்துக்குமேல் அடங்காத கோபம் மூண்டவனாக ராமன், "சீதையைத் தூக்கிப்போன இந்த அரக்கனுக்காக யமன் வீட்டு வாயில் திறந்து கிடக்கிறது. அவனையும் அவன் குலம் முழுவதையும் இப்போதே அழிப்பேன், நிச்சயம்" என்றான்.

* * *

இப்படி ராமனுக்குத் தன் மனைவியை இழந்த துக்கமும், அரக்கன் மேல் உண்டான கோபமும் வளர்ந்து பொங்கி வந்ததைச் சுக்ரீவன் பார்த்துக் கொஞ்சம் கவலைப்பட்டான்.

பரஸ்பர சிநேகிதத்தைப் பற்றியும் சகாயத்தைப் பற்றியும் பிரதிக்ஞை,அக்கினி சாக்ஷியாக எடுக்கப்பட்டிருந்த போதிலும், எந்தக் காரியம் முன்னால் நடைபெறவேண்டும், எது பின்னால் நடைபெறவேண்டும் என்கிற பிரச்னை சுக்ரீவன் மனத்தில் தொந்தரவு கொடுத்துக் கொண்டிருந்தது. ராமனுடைய கோபாவேசத்தையும் துக்கத்தையும் சுக்ரீவன் நன்றாக உணர்ந்தான். அவனோடு வாதம் செய்வதில் பயனில்லை. அப்படிச் செய்தால் ராமன் மனத்தில் தன்னைப் பற்றிச் சந்தேகங்கூட உண்டாகலாம். புதிதாக ஏற்பட்ட நட்பு சேதப்படும் என்று எண்ணினான். உடனே சீதையைத் தேடுவதிலும், ராவணனைத் தாக்கும் வேலையிலும் புகுந்து விட்டால், வாலி என்ன செய்வானோ? அண்ணன் வாலி வானர ராஜ்யப் பதவியிலிருக்கும்போது, சுக்ரீவனுடைய பலம் எந்த மட்டுக்குச் செல்லும்! ராமனுடைய காரியம் வெற்றியடைவதுகூடச் சந்தேகமாகப் போகும் என்றெல்லாம் யோசித்தான். ஆனபடியினால் முதல் வேலையாக வானர ராஜ்யத்தை மறுபடி தான் அடைந்துவிட வேண்டும். இருவருடைய காரிய சித்திக்கும் இது அவசியம் என்ற முடிவுக்கு வந்தான். நீதி சாஸ்திரமும் ராமனுடைய மனநிலையும் உணர்ந்து சமத்காரமாக நடந்துகொள்ளத் தீர்மானித்தான்.

"இந்த மகாபாவி அரக்கனுடைய பல பராக்கிரமும் இருப்பிடமும் நான் நன்றாக அறியேன். அவன் சீதையை எங்கே கொண்டுபோய் வைத்திருக்கிறான் என்பது தெரியாது. ஆயினும் நான் உனக்குச் சத்தியம் செய்து வாக்குறுதி கொடுக்கிறேன். சீதையை எங்கே

வைத்திருந்தாலும் கண்டுபிடித்து, அவள் இருக்குமிடம் கண்டு, அரக்கனை வதம் செய்யும் மார்க்கத்தையும் தேடி முடிக்கப் போகிறேன். உனக்குச் சந்தேகம் வேண்டாம். துக்கப்படாதே. தைரியம் இன்றியமையாத மனநிலை. அரக்கனைக் கண்டு பிடித்து, அவனையும் அவன் குலத்தையும் வேரோடு அறுத்து அழிப்போம். உன் வீரம் வீண் போகாது. அரக்கனை ஹதம் செய்து, உன் பௌருஷத்தை நாட்டிப் புகழடைவாய். மனச் சோர்வு வேண்டாம்.

"என்னைப் பார். நானும் உன்னைப் போல் மனைவியை இழந்தும், ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டும், அவமானப்பட்டும் வருகிறேன். ஆயினும் துக்கத்தின் வேகத்தை அடக்கிக் கொண்டு, தைரியத்தைக் காத்து வருகிறேன். நான் ஒரு வானரன். என்னால் தைரியமாக இருக்க முடியுமானால் உனக்கு இது ஒரு கஷ்டமா? கண்ணீர் விடாதே. பொங்கும் துக்கத்தைத் தடுத்துக்கொள். உன்னைப் போன்ற ஜிதேந்திரியர்கள் பயம், துக்கம் இவற்றால் உள்ளம் தளர்ந்து போகாமல், மனத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடியும். இல்லாவிட்டால் சோகத்தில் சிக்கிக்கொண்டு சமுத்திரத்தின் நடுவில் பெருங்காற்றால் அலைக்கழிக்கப்பட்ட ஓடத்தைப் போலக் கவிழ்ந்து போவோம். சோகத்துக்கு இரையாகிப் போனோமேயானால் ஒரு காரியமும் சாதிக்க முடியாது. ஆனபடியால் நண்பனே, துக்கத்தை அடக்கிக்கொள்வாய். உன்னை நான் வருந்திக் கேட்டுக் கொள்கிறேன். துக்கம் நம்மை இழுத்துக்கொண்டே போய்த் தோல்விப் பள்ளத்தில் தள்ளிவிடும். உள்ளத்தில் தைரியத்தை நிலைநிறுத்திக் கொள். நான் உனக்கு உபதேசம் செய்யும் தன்மை பெற்றவனல்ல. நண்பன் என்கிற உரிமையில் எது உசிதம் என்று எனக்குத் தோன்றுகிறதோ அதைச் சொல்லுகிறேன். உனக்குத் தெரிந்த விஷயத்தையே ஞாபகப் படுத்துகிறேன். அவ்வளவே."

இப்படிச் சுக்ரீவன் மிகப் பிரியமாகச் சொன்னதெல்லாம் ராமன் உள்ளத்தில் பதிந்தது. கண்ணீர் நிறைந்து பெருகியதும் கண்களைத் துடைத்துக்கொண்டு சுக்ரீவனை ஆலிங்கனம் செய்து கொண்டான். சீதையின் மேல்வஸ்திரத்தையும் ஆபரணங்களையும் கண்டதினால் உண்டான மனக் கலக்கத்தை நிறுத்திக் கொண்டு, தனக்குரிய மனோதிடத்தைத் திரும்ப அடைந்தான்.

"உன்னுடைய சிறந்த நட்பை அடைந்தேன். சுக்ரீவனே! உன் யோசனைப்படி நடப்பேன். சீதையைத் தேடும் காரியத்தைப்பற்றி நன்றாக யோசிப்பாய். உன் காரியத்தை என் காரியமாகவே நான் எண்ணி எல்லாம் செய்வேன். இது உறுதியென்று நம்புவாய். இதுவரையில் நான் எப்போதும் பொய் சொன்னதில்லை. இனியும் சொல்லப் போவதில்லை. நம்முடைய நட்பு எஃறைக்கும் பொய்யாகாது, சத்தியம் செய்கிறேன். உன் கஷ்டத்தைத் தீர்க்கும் வழியைக் கூசாமல் சொல். நான் செய்து முடிப்பேன்" என்றான் ராமன்.

ராமனுடைய சொற்களைக் கேட்ட சுக்ரீவனும், அவனுடைய மந்திரிகளும் எல்லை கடந்த மகிழ்ச்சியடைந்தார்கள். தங்களுடைய கஷ்டங்கள் முடிந்தது. சுக்ரீவன் மீண்டும் வானர ராஜ்யம் பெறுவது நிச்சயம் என்று தீர்மானித்துக் கொண்டார்கள்.

## 56. சுக்ரீவன் கதை

சுக்ரீவன், தன் சகோதரன் வாலிக்கும் தனக்கும் உண்டான விரோதத்தின் கதையை ராமனிடம் விவரமாகச் சொன்னான்:

"என் அண்ணன் வாலி வானர ராஜ்யப் பட்டாபிஷேகம் பெற்று கிஷ்கிந்தையில் அரசு புரிந்து வந்தான். மகா பராக்கிரமசாலி. அவனிடம் அன்பும் பக்தியும் குறைவின்றிச் செலுத்திக் கொண்டு, நான் யுவராஜனாக இருந்து வந்தேன்.

வாலிக்கும் மாயாவி என்கிற அசுரனுக்கும் பழைய விரோதம். ஒரு நாள் ராத்திரி அந்த அசுரன் கிஷ்கிந்தைக்கு வந்து வாலியைப் போருக்கு அழைத்தான்.

"அவன் இரவில் போட்ட கர்ஜனையைக் கேட்டுக் கோபங்கொண்டு தூங்கிக் கொண்டிருந்த வாலி எழுந்து, அவனை உடனே எதிர்க்க வெளியேறினான். நானும் அவனுக்கு உதவியாகக் கூடவே சென்றேன். நிலா வெளிச்சத்தில் நாங்களிருவரும் வருவதைப் பார்த்து மாயாவியானவன் ஓடி ஒரு குகைக்குள் புகுந்தான். நானும் உள்ளே புகப்போனேன். வாலி, என்னை வேண்டாம் என்று தடுத்து விட்டான். தான் ஒருவனாகவே அந்த துஷ்டனைக் கொல்ல வேண்டும் என்று சொல்லி, என்னை அந்தக் குகையின் வாயிலில் வெளியே நிற்கச் சொன்னான். சொல்லிவிட்டு அவன் உள்ளே புகுந்து சென்றான்.

"உள்ளே சென்றவன், பல நாட்களாகியும் திரும்பி வரவில்லை. அண்ணனுக்கு என்ன நேர்ந்ததோ என்று நான் கவலைப்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில், குகைக்குள் அசுரர்களுடைய பெருங்கூக்குரல் கேட்டது. அதன்கூடவே குகையிலிருந்து ரத்த வெள்ளம் பெருகி வந்தது. இதைக் கண்டதும் வாலியை மாயாவியும் பல அசுரர்களும் சூழ்ந்து கொன்று விட்டார்கள் என்று தீர்மானித்துக் கொண்டேன். அசுரர்கள் வந்து என்னையும் தாக்குவார்கள் என்று எண்ணி, ஒரு பெரும் பாறாங்கல்லைக் குகை வாயிலில் வைத்து மூடிவிட்டேன்.

"கிஷ்கிந்தைக்கு வருத்தத்தோடு திரும்பினேன். வாலி இறந்தான் என்று யாருக்கும் சொல்லாமலே, ராஜ காரியங்களைப் பார்த்து வந்தேன். பிறகு வானர பிரஜைகள் நிர்ப்பந்தித்தார்கள். 'அரசனில்லாமல் போனால் ராஜ்யம் பாழாகப் போகும். வெகு நாளாகியும் வாலி திரும்பவில்லை.

நீயே பட்டாபிஷேகம் செய்துகொண்டு அரசு புரிவாய்' என்று வற்புறுத்தினார்கள். நானும் அதற்கு இணங்கினேன்.

"சில காலம் கழித்து மாயாவியையும், அவனுடைய துணையாட்களாகவிருந்த அசுரர்களையும் கொன்று ஒழித்து விட்டு வாலி திரும்பினான். குகை அடைபட்டிருப்பதைப் பார்த்து 'சுக்ரீவா! சுக்ரீவா!' என்று உள்ளேயிருந்து கத்திப் பார்த்தான். நான் அவ்விடமில்லை யானபடியால் எனக்கு இது ஒன்றும் தெரியாது. அவன் என்மேல் மகா கோபங்கொண்டு கற்பாறையை உதைத்துத் தள்ளிவிட்டுக் கிஷ்கிந்தைக்குள் பிரவேசித்தான்.

"நான் ராஜ்ய பட்டாபிஷேகம் செய்துகொண்டு அரசு புரிவதைப் பார்த்ததும், அடங்காச் சினம் மேலிட்டு என்னைப் பலவாறாகத் திட்டினான். நான் நடந்ததை நடந்தது போலச் சொன்னேன். 'அரக்கன் உன்னைக் கொன்று விட்டான் என்று எண்ணி இவ்விதம் செய்தேன். பிரஜைகளுடைய நிர்ப்பந்தத்துக்காக அபிஷேகம் பெற்றேன். இந்த ராஜ்யம் உன்னுடையது. திரும்பப் பெற்றுக்கொள். உன் அடிமையாக நான் முன்போல் இருப்பேன் என்று சொல்லி, அவன் காலில் விழுந்தேன். அவனோ நான் சொன்னதை லட்சியமே செய்யவில்லை. நான் துராசைப்பட்டுக் குகை வாயிலை அடைத்துவிட்டு அக்கிரமமாகப் பட்டாபிஷேகம் செய்துகொண்டேன் என்றே அவன் நினைத்து, என்னை நகரத்திலிருந்து வெளியே துரத்திவிட்டான். 'திரும்பி இந்தப் பக்கம் வந்தால் உன்னைக் கொல்வேன்' என்று சொல்லி, என்னைத் துரத்திவிட்டான். அப்போது நான் உடுத்தியிருந்த வஸ்திரத்துடன் வெளியே ஓடினேன். அது முதல் காடும் மலையுமாக மறைந்து, திரிந்து உயிரைக் காப்பாற்றிக் கொண்டு வருகிறேன். எல்லாம் இழந்து இந்நிலையிலிருக் கிறேன். இந்த நான்கு வானரர்களே எனக்குத் துணையாக இருந்து வருகிறார்கள். கோபத்தால் உண்மையை

அறியமாட்டாமல் என் அண்ணன் இம்மாதிரி அக்கிரமம் செய்து வருகிறான். மகா பராக்கிரமசாலியான அந்த வாலியை வதம் செய்து என்னைக் காப்பாற்றுவாய்" என்றான் சுக்ரீவன்.

சுக்ரீவனுடைய பரிதாப நிலையை ராமன் கண்டு கருணை மேலிட்டு, "உனக்கு நான் தந்த சபதம் உறுதி. பயப்படாதே. என் அம்பு வாலியின் உடலைத் துளைக்கும். உனக்குப் பகையாகிவிட்ட சகோதரனைக் கொன்று உன் கவலையை நீக்குவேன்" என்று மறுபடியும் பிரதிக்ஞை செய்தான்!

* * *

இந்த வாலி சுக்ரீவ நிகழ்ச்சியானது புராணங்களில் சொல்லப்படும் உபதேசத்துக்கு நல்ல உதாரணம்.

வாலியின் நடவடிக்கையிலும் பெருங் குற்றமில்லை. சுக்ரீவனுடைய காரியங்களிலும் பெருங்குற்றம் சொல்வதற்கில்லை. கோபத்தால் புத்தி மழுங்கிப் போகும். கோபத்துக்கு வசப்பட்டுவிட்டால் உண்மையைக் காணும் சக்தியை இழந்துவிடுகிறோம். அதனின்று பிறகு நாசம் அடைவோம் என்பது சாஸ்திரம். இது கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கு வாலியின் கோபாவேசமும் முடிவும் உதாரணம் ஆகின்றன. சுக்ரீவன் தான் செய்த காரியங்களை வணக்கமாகவும் உண்மையாகவும் சொல்லிப் பார்த்தான். ஆனாலும் அது வாலியின் புத்தியில் ஏறவில்லை. காரணம், வாலியின் அடங்காக் கோபம்.

சுக்ரீவனும் அவசரப்பட்டுத் தன் தமையன் மாண்டான் என்று தீர்மானித்து விட்டான். அசுரர்கள் வந்து தன்னையும் கொன்றுவிடுவார்கள் என்று பயந்து, குகை வாயிலை அடைத்து விட்டு ஊர் திரும்பிவிட்டான். ராஜ்யாதிகாரம் பெறவேண்டும் என்று முதலில் ஆசைப்படவில்லை. ஆயினும் பிரஜைகள் நிர்ப்பந்தத்தால் பிறகு உடன்பட்டு விட்டான்.

ஆசை வலையில் சிக்கினான். தீர ஆலோசியாமல் நடந்து கொண்டான். அதனால் கஷ்டத்தில் அகப்பட்டுக் கொண்டான். தீர ஆலோசிக்காமல் செய்யும் காரியங்கள் அனர்த்தத்தில் முடியும் என்பது சுக்ரீவனுடைய கதையி னின்று அடையவேண்டிய உபதேசம்.

பிறர் சொத்துக்கு ஆசைப்படலாகாது. ஆசையை அடக்கியாள்வது மிகக் கடினம். இதில் முழு வெற்றியடை வதற்கு வெகு ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். பரதனையும் பட்டம் கட்டிக்கொள் என்று மந்திரிகளும் பிரஜைகளும் அயோத்தியில் வற்புறுத்தினார்கள். ஆயினும் அவன் ஒப்புக் கொள்ளவில்லை. இது பரதனுடைய சிறப்பு. சுக்ரீவனோ ஒப்புக்கொண்டு விட்டான். அதனால் துன்பம் அடைந்தான். பரதன் வேண்டாம் என்று மறுத்துப் பெருங்கீர்த்தி அடைந்தான்.

இராமாயணத்தில் ஒவ்வொரு கட்டத்திலும், நாம் சாதாரண வாழ்க்கையில் பின்பற்ற வேண்டிய தருமம் விளக்கப்பட்டிருக்கிறது. விளக்கம் சில இடங்களில் நேர்முகமான விளக்கமாக இருக்கும். சில இடங்களில் நேராக எடுத்துக் காட்டாமல் குறிப்பாகக் கிடைக்கும். பக்தியோடு சிந்தனை செய்தால் விளங்கும்.

## 57. சுக்ரீவன் சந்தேகம்

மனைவியையும் ராஜ்ய பதவியையும் மறுபடியும் அடைய வேண்டும் என்கிற ஆசை சுக்ரீவனை விட்டுப் போகவில்லை. ஆனால் அதற்கு அவன் ஒரு வழியும் காணவில்லை. வாலியின் பராக்கிரமம் தாண்டக் கூடாத ஒரு மலையாக நின்றது.

ராமனுடைய சகாயத்தைக் கொண்டு காரியம் சாதிக்கலாம் என்று மந்திரி ஹனுமான் தைரியம் சொல்லி

வந்தபோதிலும், சுக்ரீவன் மனத்தில் சந்தேகம் இருந்து கொண்டேயிருந்தது. இந்த ராமனுடைய பராக்கிரமத்தைக் கொண்டு வாலியை வெல்ல முடியுமா? இது ஆகாத காரியமாகத் தோன்றுகிறது என்று ஐயப்பட்டுக் கொண்டேயிருந்தான். வாலியினுடைய தேகம் இரும்பைப் போன்றது. அவனை எப்படி ராமன் கொல்லப் போகிறான் என்பது சுக்ரீவனுடைய சந்தேகம்.

ஆயினும் இதைவிட்டால் வேறு வழி ஒன்றுமே இல்லை. நிராசையாகப் போவதற்கும் மனம் இணங்கவில்லை. ராமனுடைய பலத்தைப் பரீட்சை செய்யவேண்டும் என்று தீர்மானித்தார்கள்.

நண்பனுடைய பலத்தை எவ்வாறு சந்தேகித்துப் பரீட்சை செய்வது? நான் செய்து முடிக்கிறேன் என்று ராமன் பிரதிக்ஞை செய்துவிட்ட பிறகும், எப்படி அவனுடைய பராக்கிரமத்தைச் சோதித்துப் பார்க்கும் சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொள்வது என்றெல்லாம் சுக்ரீவன் யோசித்தான். சுக்ரீவன் மிகச் சமத்காரம் பெற்றவன். மெள்ளப் பேசலானான்.

"ராமச்சந்திரப் பிரபுவே! நீ சொன்ன சொல் இதுவரையில் என் உள்ளத்தில் இருந்து வந்த துக்கத்தைப் போக்கிவிட்டது. உன்னுடைய பராக்கிரமத்தை அறிவேன். உன்னால் விடப்படும் சரம் மூன்று லோகங்களையும் அழிக்கும். அப்படியிருக்க வாலியின் தேகக்கட்டு அதைத் தாங்குமா? ஆயினும் இந்த வாலியின் பராக்கிரமத்தைப் பற்றி உனக்குத் தெரிவிக்க வேண்டியது என் கடமை. வாலியானவன் அதிகாலையில் எழுந்து, ஒரே முகூர்த்தத்தில் நான்கு சமுத்திரங்களுக்கும் போய்ச் சந்தியாவந்தனம் செய்து முடிப்பான். மலைப்பாறைகளைப் பந்துபோல் மேலே எறிந்து விளையாடுவான். காட்டிலுள்ள பெரிய பெரிய மரங்களைப்

புல்லைப் பிடுங்குவதுபோல் வேரொடு விளையாட்டாகப் பிடுங்கித் தள்ளுவான்.

ஒரு காலத்தில் எருமை வடிவம் பெற்ற துந்துபி என்கிற அசுரன், தான் பெற்ற வரத்தில் ஆயிரம் யானையின் பலம் அடைந்து, அந்தப் பலத்தை இன்ன விதத்தில் உபயோகிப்பது என்று தெரியாமல், சமுத்திர ராஜனைச் சண்டைக்கு இழுத்தான். சமுத்திரராஜன், 'உனக்குச் சமானமான எதிரியோடு அல்லவோ நீ யுத்தம் செய்யவேண்டும்? வடக்கே ஹிமவான் இருக்கிறான். அவனண்டை போய் யுத்தம் கேள். நான் உனக்குச் சமமான எதிரியல்ல' என்றான். இது நியாயமே என்று துந்துபி ஒப்புக்கொண்டு மிக வேகமாக வடக்கே சென்றான். போய் ஹிமவானை, 'வா! என்னோடு யுத்தம் செய். நீ மகா பலவான் என்று எண்ணிக் கொண்டிருக்கிறாயாம். உன் பலத்தைப் பரிட்சை செய்ய வந்திருக்கிறேன்' என்று இமயமலையிலுள்ள பாறைகளைக் கொம்பால் இடித்துத் தள்ளி அட்டகாசம் செய்து. கர்ஜித்தான். ஹிமவான் தனக்குண்டான கோபத்தை அடக்கிக்கொண்டு, 'அப்பா, நீ என்மேல் ஏன் பாய்கிறாய்? எனக்கு யுத்தப் பயிற்சியே கிடையாது. நான் சாதுக்களாகிய முனிவர்களுக்கு இருக்க இடம் தந்து, அவர்களோடு காலங்கழித்து வருகிறேன்' என்றான். 'அப்படியானால் எனக்குச் சமானமான பலவான் யார் என்று சொல்லு, அவனோடு இன்றே நான் யுத்தம் செய்யவேண்டும்' என்று மஹிஷாசுரன் மூர்க்கமாகச் சொன்னான்.

இதைக் கேட்ட ஹிமவான், 'தெற்கே உனக்குச் சமமான ஒரு பலவான் இருக்கிறான். வாலி என்ற வானரராஜன். இந்திரனைப் போன்ற பராக்கிரமசாலி. அவன்தான் நீ யுத்தத்துக்கு அழைக்கத்தக்க சமமான வீரன். உனக்கு இஷ்டமிருப்பின் உடனே அவனிடம் போய் யுத்தம் கேள்' என்றான்.

இதைக் கேட்டதும் துந்துபி வாலியின் நகரத்துக்குச் சென்றான். கிஷ்கிந்தை வாயிலில் பெரிய அட்டகாசம் செய்தான். மரங்களைத் தள்ளிக் கோட்டை வாயிலைத் தன் கொம்புகளால் இடித்துப் பெருங் கர்ஜனை செய்து வாலியை 'வா! வெளியே! உனக்குப் பலம் இருப்பது உண்மையானால் என்னுடன் போர் செய்' என்றான்.

அந்தப்புரத்தில் சுகமாகப் படுத்திருந்த வாலி இந்தச் சப்தத்தைக் கேட்டான். உடனே எழுந்து வந்தான். அவனுடன் ஸ்திரீகளும் அச்சமயம் சென்றார்கள். வெளியே வந்து 'துந்துபி, ஏன் இம்மாதிரி என் நகரத்து வாயிலில் கோஷமிடுகின்றாய்; உயிரோடு இருக்க உனக்கு ஆசை இருந்தால் இவ்விடத்தை விட்டுச் செல்' என்றான்.

இப்படி வாலி தன்னை அலட்சியமாகப் பேசியதைக் கேட்ட துந்துபி மிக்க கோபங்கொண்டு "உன்னுடைய மனைவிகளுக்கு எதிரில் ஜம்பமாகப் பேசாதே! போருக்கு வந்திருக்கிறேன். உனக்கு வீரியமிருக்குமாயின் என்னுடன் யுத்தம் செய், வீண்பேச்சு வேண்டாம். இப்போது நீ படுக்கையிலிருந்து மயக்கமாக வந்திருக்கிறாய். காலை வரையில் நான் காத்திருக்கச் சம்மதிக்கிறேன். கள்ளைக் குடித்துப் பலம் இழந்தவனைத் தாக்குவது பாவமாகும். இந்த ராத்திரி நீ எல்லாச் சுகங்களையும் அனுபவித்துவிடு. எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு சரியான நிலையில் வா. உன்னை வதம் செய்கிறேன்" என்றான்.

"துந்துபியின் வார்த்தைகளைக் கேட்ட வாலி சிரித்து விட்டுச் சொன்னான். "பெண்களே, நீங்கள் போங்கள். அசுரனே! நான் மயக்கத்தில் இல்லை. யுத்தத்துக்கு முன் அருந்தும் உற்சாக பானம்தான் குடித்து வந்திருக்கிறேன் என்று வைத்துக்கொள். போர் செய்ய விரும்புகிறாயானால் இப்போதே போர் செய்யலாம்" என்று சொல்லி மகிஷா சுரனுடைய வாலைப் பிடித்துக் கரகரவென்று அவனைச்

சுற்றி வீசி எறிந்தான். ரத்தம் கக்கிக்கொண்டு அசுரன் கீழே விழுந்தான்.

"பிறகு சமாளித்துக்கொண்டு அசுரன் எழுந்தான். இருவருக்கும் பெரும் போர் நடந்தது. இந்திரனுடைய புத்திரனான வாலி, மகிஷாசுரனை இடித்து இடித்துக் கொன்றான். செத்து விழுந்த அசுரனை வாலி எடுத்துத் தூக்கி எறிந்தான். அது ஒரு யோசனை தூரம் போய் விழுந்தது.

"எறியப்பட்ட அசுரனுடைய தேகத்திலிருந்து ரத்தத் துளிகள் காற்றால் வீசப்பட்டு, மதங்க முனிவர் ஆசிரமத்தின் மேல் விழுந்தன. முனிவர் யார் இதைச் செய்தது என்று கோபங்கொண்டு பார்த்தார். நடந்ததை உடனே அறிந்து கொண்டார்.

"கர்வம் கொண்டு இம்மாதிரி ஒரு சவத்தை விட்டெறிந்து ஆசிரமத்தின்பேரில் அசுத்தமான ரத்தத் துளிகள் விழச் செய்தானே" என்று வாலியை முனிவர் சபித்துவிட்டார். 'இந்த ஆசிரமத்துப் பூமியில் அவன் பிரவேசித்தானானால் உயிர் நீப்பான்' என்று சாபமிட்டார்; இதனால்தான் ராமனே! நானும் என் மந்திரிகளும் இவ்விடம் வந்து க்ஷேமமாக இருக்கிறோம். வாலி இவ்விடம் வருவதற்கில்லை. மற்ற இடம் எங்கு சென்றாலும் அவனுடைய தொந்தரவு உண்டாகும்.

"ரிஷியின் சாபத்தால் இந்த எல்லைக்குள் பிரவேசிப்பதற்குப் பயப்படுகிறான். இந்த ஆச்சா மரங்களைப் பார். வாலி இந்த மரங்களில் ஒன்றைத் தன் கையால் பிடுங்கி ஓர் அசைப்பு அசைத்தால், மரத்தில் உள்ள அவ்வளவு இலைகளும் உதிர்ந்து போகும். அவனுடைய பராக்கிரமம் இவ்வாறு இருக்க, அவனுடைய விரோதத்தைச் சம்பாதித்து நான் எப்படித் தைரியமாக இருக்க முடியும்?" என்றான் சுக்ரீவன்.

லக்ஷ்மணன் சுக்ரீவனுடைய பயத்தையும், அவன் இம்மாதிரி வாலியின் பலத்தைக் குறித்துப் பேசி வந்ததன் நோக்கத்தையும், நன்றாக உணர்ந்து கொண்டான்.

"சுக்ரீவனே! உன் சந்தேகம் தீர ராமனுடைய பலத்தையும் நீ பார்க்கலாம்" என்றான்.

"சந்தேகம் எனக்கில்லை; சாம்பல் பூத்த நெருப்பைப் போன்ற ராமனுடைய பலத்தை நான் அறிந்தவனேயாவேன். ராமனை நான் சரணடைந்தேன். ஆனாலும் வாலியின் பல பராக்கிரமத்தைப் பிரத்யட்சமாகப் பார்த்த நான், அவனை நினைக்கும் போதெல்லாம் நடுங்குகிறேன். அவ்வளவே" என்றான் சுக்ரீவன்.

இப்படிச் சுக்ரீவனுடைய பக்தியையும், சரணடைந்து விட்ட நிலைமையையும், வாலியை நினைத்துப் பயப் படுவதையும் பார்த்த ராமன், அவனுடைய சந்தேகத்தை நிவர்த்தி செய்வதே சரி என்று எண்ணினான். துந்துபியின் பிரேதம் ஒரு மலைபோல் கிடந்ததைத் தன் கால்கட்டை விரலால் நெம்பி, விளையாட்டாகத் தூக்கி எறிந்தான். பிரேதம் பத்து யோஜனை தூரம் சென்று விழுந்தது.

பிறகு அதுவும் போதாதென்று ராமன் தன் வில்லைக் காதுவரை இழுத்து வளைத்து ஒரு சரத்தை விட்டான். சுக்ரீவன் காட்டிய ஆச்சா மரத்தையும் அதன்பின் நின்ற ஆறு ஆச்சா மரங்களையும் சேர்த்துத் துளைத்துவிட்டது. ஏழு மரங்களையும் துளைத்து அந்தத் தங்கக் கட்டுச்சரம் பூமியில் புகுந்தது. பிறகு திரும்பி ராமச்சந்திரனுடைய தூணியில் வந்து சேர்ந்தது.

இதையெல்லாம் கண்ட சுக்ரீவன் பரவசமாய்ப் போனான். வாலியின் வஜ்ஜிர தேகம் ராமனுடைய கரத்தால் பிளக்கப்படும் என்று நிச்சயமடைந்தான். சுக்ரீவன் அப்படியே சாஷ்டாங்கமாகத் தரையில் வீழ்ந்து ராமனை நமஸ்கரித்தான்.

"உன் பராக்கிரமத்தைக் கண்ணாரக் கண்டேன். தேவகணங்கள் அவ்வளவு பேரும் இந்திரனைத் தலைமை கொண்டு வந்து நின்று உன்னை எதிர்த்தாலும் உன் வெற்றி நிச்சயம். இனி வாலியைப் பற்றி என்ன பேச்சு? உன்னுடைய நட்பை அடைந்த என் துயரம் இன்றே தீர்ந்துவிட்டது. உடனே வாலியை அழித்து என்னைக் காப்பாற்றுவாய்; இன்றே கிஷ்கிந்தை செல்வோம்" என்றான். லக்ஷ்மணனும் சம்மதித்தான். "அப்படியே ஆகட்டும்" என்றான் ராமன். கிஷ்கிந்தைக்குச் சென்றார்கள்; சுக்ரீவன் முந்திச் சென்றான். ராமன் பின்னால் சென்று, அடர்ந்த காட்டில் ஒரு மரத்துக்குப் பின் நின்றான்.

சுக்ரீவன் ஒரு பெருங் கர்ஜனை செய்தான். அதைக் கேட்ட வாலி பெருங்கோபத்துடன் மலைக்கோட்டையிலிருந்து உதயசூரியனைப்போல தேஜஸுடன் வெளியே வந்தான். இருவரும் கச்சை இழுத்துக் கட்டிக்கொண்டு கை கலந்தார்கள். உக்கிரமான முஷ்டி யுத்தம் நடந்தது.

இப்படிக் கோர யுத்தம் நடந்துகொண்டிருக்கையில் வில்லைப் பிடித்து மறைந்து நின்ற ராமன் திகைத்தான். இருவரும் ஒருவரோடு ஒருவர் கலந்து யுத்தம் செய்ய ஆரம்பித்ததும் யார் சுக்ரீவன், யார் வாலி என்று ராமனால் உணர முடியவில்லை. இருவரும் ஒரே வடிவம். ஒரே விதமான ஆபரணங்கள் பூண்டு, ஒரே விதமான பராக்கிரமத்துடன் மல்யுத்தம் நடத்திக் கொண்டிருந்தார்கள். ஆனபடியால் யார் வாலி என்று தெரிந்துகொள்ள முடியாமல் போயிற்று. கொல்லும் சரத்தைப் பிரயோகிக்க இடமில்லாமல் போயிற்று.

இதற்கிடையில் சுக்ரீவன் அடிபட்டு, ராமன் ஒன்றும் செய்யவில்லையே என்று ஏமாற்றமடைந்து, தன் உயிர் போகும் என்று பயந்து, ரிச்யமுக வனத்துக்கு ஒரே ஓட்டமாக ஓடினான்.

"இன்று பிழைத்தாய், போ" என்று வாலி, தம்பி சுக்ரீவனை நோக்கிச் சொல்லிவிட்டுத் தன் கோட்டைக்குள் சென்றான்.

ராம லக்ஷ்மணர்கள் அடிபட்டும் துக்கப்பட்டும் நின்ற சுக்ரீவனிடம் சென்றார்கள். சுக்ரீவன் ராமனை நேரில் பார்க்காமல் தரையைப் பார்த்துப் பேசினான். சொன்ன சொல்லைத் தவறினான் என்பது சுக்ரீவனுடைய கோபம்.

"வாலியைக் கொல்ல நான் பிரியப்படவில்லை என்று முந்தியே என்னிடம் சொல்லிவிட்டிருந்தாயானால், நன்றாக இருந்திருக்கும் அல்லவா? என்னை ஏன் வாலியைப் போருக்கு அழைக்கச் சொன்னாய்?" என்றான் சுக்ரீவன்.

"சுக்ரீவனே! கோபிக்க வேண்டாம். நான் சொல்லுவதைச் சாவதானமாகக் கேட்க வேண்டும்" என்றான் ராமன். "நான் பாணம் விடாததற்குக் காரணம் சொல்லுகிறேன். நீயும் வாலியும், அலங்காரம் வேஷம், உயரம், பருமன், நடை எல்லாவற்றிலும் ஒரே மாதிரி இருந்தீர்கள். போர் ஆரம்பித்துவிட்ட பிறகு உங்களில் யார் வாலி, யார் சுக்ரீவன் என்று தெரிந்து கொள்ள முடியாத நிலையில் நான் திகைத்து நின்றேன். பாணத்தை விட்டு வாலிக்குப் பதில் உன்னைக் கொன்று விட்டேனானால் என்னவாகும்? சகோதரர்களாகிய நீங்கள் போட்ட கர்ஜனைகள், முகத்தின் காந்தி, யுத்தம் செய்த முறை எல்லாவற்றிலும் ஒருவனைப் போலவே மற்றொருவனுமாகக் கொஞ்சங்கூட வித்தியாசமின்றி இருந்தீர்கள். இந்த நிலையில் நான் ஏதும் செய்ய முடியாமல் நிற்க வேண்டியதாயிற்று. வாலி என்று எண்ணி உன்னைக் கொன்று விட்டேனானால் அப்புறம் என் கதி என்ன? பிழைப்பிக்க வந்து கொன்றுவிட்ட மூடனும் பாவியும் ஆவேனல்லவா? கோபிக்காதே சுக்ரீவா! மறுபடியும் வாலியை அறைகூவி அழைப்பாய். வாலியை நிச்சயமாகக் கொல்வேன்.

லக்ஷ்மணா! அதோ அந்த அழகிய பூப்பூத்த கொடியைக் கொண்டுவா. சுக்ரீவன் கழுத்தில் அதை மாலையாய் அமைத்துக் கட்டுவாய். யுத்தத்தில் யார் வாலி; யார் நம்முடைய நண்பன் என்று அதனால் நான் நன்றாகக் காண்பேன். நாம் எண்ணிய காரியத்தை நிறைவேற்றுவோம். இன்றே வாலி பூமியில் விழுந்து புரள்வதைப் பார்ப்பாய், சுக்ரீவனே!" என்றான்.

சுக்ரீவன் சமாதானமடைந்து, மறுபடியும் உற்சாகம் அடைந்தான். லக்ஷ்மணன் பூங்கொடியைச் சுக்ரீவன் கழுத்தில் மாலையாக அமைத்துப் போட்டான். மாலையை அணிந்த சுக்ரீவன் முன்னைவிட அழகாகத் தோன்றினான். உடனே கிஷ்கிந்தை வாயிலுக்கு மறுபடியும் போனான். கூடவே ராம லக்ஷ்மணரும் பின்னால் சென்றார்கள்.

## 58. வாலி வதம்

மாலை நெருங்கி வந்த வேளை, மறுபடியும் சுக்ரீவன் பெருங் கர்ஜனை செய்து, வாலியை யுத்தத்துக்கு அறைகூவி அழைத்தான்.

சந்தோஷமாகப் படுத்திருந்த வாலி திடுக்கிட்டான். இதென்னவென்று அவனுக்கு விளங்கவில்லை. பயம் என்று சொல்வதற்கில்லை. ஆயினும் கொஞ்சம் நிறம் மாறினான். பிறகு ரோஷம் கொண்டான்.

தோல்வியடைந்து அடிபட்டுப் பயந்தோடின தம்பி, மறுபடியும் இம்மாதிரி வந்து கர்ஜிக்கிறானே என்று, பொறுக்க முடியாத கோபத்தோடு எழுந்து, உடனே அவனை ஹதம் செய்துவிடத் தீர்மானித்துப் புறப்பட்டான். தரையை அவன் காலால் மிதித்தது பூமியைப் பிளப்பதுபோல இருந்தது.

"வேண்டாம்! இன்று வேண்டாம்! நாளை பார்த்துக் கொள்ளலாம்" என்றாள் தாரை, அவனைப் பிரியமாகத் தடுத்து.

வாலியின் பட்டமகிஷி மகா புத்திசாலியான தாரை. ஆலிங்கனம் செய்து "வேண்டாம், யுத்தத்திற்கு அவசரமில்லை. நாளைக் காலையில் சென்று சத்ருவை அழித்துவிடலாம். நன்றாக யோசிக்காமல் இப்போது வெளியேறித் தம்பியுடன் யுத்தம் செய்வது சரியென்று எனக்குத் தோன்றவில்லை. ஏதோ எனக்குப் பயமாக இருக்கிறது. அடிபட்டு, அவமானப்பட்டு, உயிர் தப்பினால் போதும் என்று ஓடி ஒளிந்து கொண்ட தம்பி, என்ன காரணத்தினால் தைரியம் கொண்டு இன்றே மறுபடியும் வந்து, இவ்வளவு அட்டகாசம் செய்கிறான்? இதைப்பற்றித் தீர ஆலோசிக்க வேண்டும். பிரியநாதா! இப்போது போக வேண்டாம். ஏதோ மோசமும் அபாயமும் நான் இதில் காண்கிறேன். என் பேச்சைப் புறக்கணிக்க வேண்டாம். அவனுடைய பேச்சையும் கர்ஜனையையும் கவனித்தால், ஏதோ பெருஞ் சகாயம் சேர்த்துக்கொண்டு நிற்கிறான் என்பது நிச்சயமாகிறது. இல்லாவிடில் இவ்வளவு கர்வம், பிடிவாதம் ஏன்? பலமான சகாயத்தைச் சம்பாதித்திருக்கிறான் என்பது உறுதி. அந்தச் சகாயத்தின் பலத்தை நன்றாய்ப் பரீட்சை செய்து தைரியமடைந்தே வந்திருக்கிறான் உங்கள் தம்பி. இதில் சந்தேகமில்லை. நம்முடைய பிரிய குமாரன் அங்கதனுடைய நலனைக் கருதுவீர்களாக. நான் சொல்லும் பேச்சைத் தட்டாதீர்கள். ஏதோ பிதற்றுகிறேன் என்று எண்ண வேண்டாம்! சாரணர்களால் அங்கதன் அறிந்து என்னிடம் சொன்னதைச் சொல்லுகிறேன். அயோத்தியிலிருந்து மகா வீரனான ஒரு ராஜகுமாரன் நம் பிரதேசத்துக்கு வந்திருக்கிறானாம். அவனை எல்லாரும் உத்தம தர்மவானாகவும் வீரனாகவும் மதிக்கிறார்களாம். அவனுடைய சிநேகிதத்தை உங்கள் தம்பி

அடைந்து விட்டானாம். இதனால் அவனுடைய பலமும் தைரியமும் வளர்ந்திருக்கிறது. உங்கள் தம்பியும் நல்லவன், வீரன். அவனை ஏன் விரோதிக்க வேண்டும்? அவனைவிட நமக்கு யார் நெருங்கிய பந்து? அவன் உங்களுக்குப் பக்தியோடு பணி செய்து, பராக்கிரமமான துணையாவான். சுக்ரீவனை நாம் மறுபடி அழைத்து, விரோதத்தை மறந்து விட்டு ஒன்றாகப் போவதே நலம். அருமை நாதனே, என் பேச்சைப் புறக்கணிக்க வேண்டாம்" என்றாள்.

வாலிக்கு இந்தப் பேச்சுப் பிடிக்கவேயில்லை. கடல் பொங்குவதுபோல் எழுந்த கோபத்தால், அவன் தன் மனைவியின் பேச்சில் நியாயம் காணவில்லை. கால பாசத்தால் இழுக்கப்பட்டுச் செல்பவன் எப்படி மனைவியின் பேச்சில் நியாயம் காண்பான்? தாரை என்றால் நட்சத்திரம். பெயருக்குத் தகுந்த முகலக்ஷணம் கொண்ட மனைவி சொன்ன புத்திமதி வாலிக்குச் சம்மதப்படவில்லை.

"என்ன சொல்லுகிறாய்! சத்துருவான தம்பி செய்யும் கர்ஜனையை நான் எப்படிப் பொறுப்பேன்? ஏன் பொறுப்பேன்? அழகியே! எதிரி யுத்தத்துக்கு அழைக்கும் போது வீரன் பேசாமலிருக்க முடியுமா? அதை விட உயிரை விடுவதே மேலாகும். இந்த அற்பன் போடும் கர்ஜனையைக் காதில் கேட்டுக்கொண்டு என்னால் சும்மா இருக்க சாத்திய மில்லை. நீ ராமனைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். அவன் தர்மத்தை அறிந்தவன்; பாபத்துக்குப் பயந்தவன். அவன் அநியாய காரியத்தில் இறங்கமாட்டான். நீ என்னைத் தடுக்காதே. திரும்பிப்போ! சுக்ரீவனை நான் கொல்ல மாட்டேன். அவன் கர்வத்தை அடக்கிவிடுவேன். அவ்வளவே. அந்தத் துராத்மாவின் அட்டகாசத்தைப் பார்த்துச் சகிக்க முடியவில்லை. உனக்கு என் மேலிருக்கும் பிரியத்தால் சொல்ல வேண்டியதைச் சொன்னாய். தம்பியின் கொழுப்பை அடக்கி, அவனை ஓட்டிவிட்டு வெற்றியுடன் திரும்பி வருவேன்.

பயப்படவேண்டாம். மங்களமொழி சொல்லி என்னை அனுப்பு. தடுக்கவேண்டாம்" என்றான்.

கவி வால்மீகி வாலியை எவ்வளவு உயர்த்தி வைத்துச் சித்திரிக்கிறார்.

தாரையும் கண்ணில் நீர் ததும்பிய வண்ணம், வாலியை வலம் செய்து மங்களம் சொல்லிவிட்டு, நல்லதாக முடியவேண்டும் என்று வேண்டிக்கொண்டு, கவலையுடன் அந்தப்புரம் திரும்பிப் போனாள். தாரையையும் அவளுடைய தோழிகளையும் அனுப்பிவிட்டு, வாலி புற்றிலிருந்து பாம்பு சீறிக்கொண்டு வெளிவருவது போல் சுக்ரீவனைத் தேடிச் சென்றான்.

மகா ரோஷத்துடன் போன வாலி, தம்பி தைரியமாக தேஜஸோடு நிற்பதைப் பார்த்தான். பார்த்ததும் கச்சையை இழுத்துக் கட்டிப் பாய்ந்தான். சுக்ரீவனும் வாலியை நோக்கி வேகமாக வந்தான்.

"உயிரில் ஆசை வைத்திருப்பதாயின் ஓடிப்போ. இந்த முஷ்டிக்கு உன் உயிரைத் தத்தம் செய்யாதே" என்று கர்ஜித்தான்.

சுக்ரீவனும் கோபமாக மறுமொழி சொன்னான். பிறகு யுத்தம் ஆரம்பித்தது. இருவரும் அடிமேல் அடி அடித்து ரத்தப் பிரவாகம் ஓடிற்று. மிகவும் அடிபட்ட சுக்ரீவன் ஓர் ஆச்சா மரத்தைப் பிடுங்கி அதனால் வாலியைப் பலமாக அடித்தான். வாலி அந்த அடியின் வேகத்தால் கொஞ்சம் அசைந்து கோபம் கொண்டு, தானும் மரங்களை வேரோடு பிடுங்கிச் சுக்ரீவனை அடித்தான். இருவரும் சம வீரர்கள். வெகுநேரம் கோரமான யுத்தம் நடந்தது. வரவர வாலியின் பலம் அதிகரித்தது. சுக்ரீவனுடைய பலம் குறைய ஆரம்பித்தது.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த ராமன் இனிச் சுக்ரீவன் தாங்க மாட்டான். உயிர் நீப்பான் என்று கண்டு,

வில்லை வளைத்துக் கொல்லும் பாணத்தை விட்டான். அது நேராகச் சென்று வாலியின் வைரமான மார்பை ஆச்சா மரத்தைத் துளைத்தபடியே துளைத்து விட்டது. வாலியின் ஆயுள் முடிந்தது. விழா முடிந்ததும் அதற்காக அலங்கரிக்கப்பட்ட துவஜஸ்தம்பம் கீழே தரையில் விழுந்து கிடப்பது போல், ரத்தம் பெருகத் தரையில் வாலியின் உடல் கிடந்தது.

இப்படி ராமனுடைய பாணத்தால் மரண காய மடைந்த மகாசூரனான வாலி, கோடரியால் வெட்டி வீழ்த்தப்பட்ட பெரிய ஆயுள் விருக்ஷத்தைப்போல், கையும் காலும் விரித்துக் கீழே கிடந்தான்.

மரண காயமடைந்து கீழே கிடந்தாலும், வாலியின் அழகும் காந்தியும் குறையவில்லை. ஆபரணங்கள் பூண்டிருந்த அவன் தேகம், சூரியன் அஸ்தமிக்கும் போது சிவந்து பிரகாசிக்கும் மேகக் கூட்டத்தைப்போல் பிரகாசித்தது. இந்திரனால் கொடுக்கப்பட்ட தங்க மாலை அவன் மார்பில் பிரகாசித்துக் கொண்டு, அவன் உயிரையும் அவன் திருவையும் தாங்கிப் பொலியச் செய்தது. அந்த மாலையின் ஜோதியும், வீரனுடைய மார்பில் குத்தி நின்ற கொல்லும் பாணமும், ரத்தம் பெருகும் காயமும் எல்லாம் சேர்ந்து, அந்த மகாவீரனுடைய தேகத்தை மும்மடங்கு பொலிவுடன் விளங்கச் செய்தன. வீழ்ந்து கிடந்த அந்த மகாவீரனுடைய கம்பீரத் தோற்றத்தை வால்மீகி மிக அழகாக வர்ணிக்கிறார். உயிர் நீங்குவதற்கு முன் இறக்கும் தறுவாயில் சூரர்களுடைய காந்தி மிகப்பொங்கி வளர்ந்து, எப்போதும்விட அதிகமாக ஜொலிப்பது இயற்கை.

எதிர்பாராத வகையில் வீழ்த்தப்பட்ட வாலி, நான்கு பக்கமும் தன் பார்வையைச் செலுத்திப் பார்த்தான். எங்கிருந்து தன் உயிரைக் கொண்டு ஏக இந்தப் பாணம் வந்தது என்று சுற்றிலும் பார்த்தான். அச்சமயம் ராமலக்ஷ்மணர்கள் அவன் பக்கத்தில் வந்தார்கள். வில்லேந்தி

வந்த அவர்களைப் பார்த்ததும் வாலியின், கண்களில், சூரர்கள் கண்களில் வடியும் கண்ணீர் வடிந்தது. மெதுவான குரலில் தருமத்துக்கு இசைந்ததும், மேம்பட்ட பண்பாடு நிறைந்ததுமான தரும மொழிகளைச் சொல்லி, ராமனுடைய குற்றத்தை எடுத்துக் காட்டிக் கண்டித்துப் பேசினான்.

உயிர் தேகத்தை விட்டுப் போகும் தறுவாயானபடியால் பேச்சுத் தடைபட்டது. தாழ்ந்த சுரத்தில் கஷ்டப்பட்டுப் பேசினான்.

"ராமனே! தசரத சக்கரவர்த்தியின் புத்திரனாகிய உத்தம குலத்தில் பிறந்த நீ, பெரும் புகழும் அடைந்த நீ, ஏன் இப்படிச் செய்தாய்? உன் நற்குணங்களும் ஒழுக்கமும் உலகம் அறிந்த விஷயம். அப்படியிருக்க நான் வேறொருவனிடம் யுத்தம் செய்து கொண்டு, அதில் மனம் முற்றிலும் செலுத்தி வந்த சமயத்தில், என் கண்களுக்குத் தென்படாமல் மறைந்து நின்று, என்மேல் பாணம் விட்டு என்னைக் கொன்றாய். உன்னைப் பற்றி ஜனங்கள் சொல்லும் புகழ் மொழிகளுக்கு இது முற்றிலும் விரோதமாயிருக்கிறதே! எல்லாப் பிராணிகளிடமும் கருணை கொண்டவன். தோஷ எண்ணங் களுக்கு இடம் கொடுக்காமல் புலன்களையும் உள்ளத்தையும் அடக்கியாள்பவன். அறவழியில் நிற்பவன். பொறுமை, சாந்தி, தருமம், சத்தியம், பராக்கிரமம் முதலிய உத்தம குணங்களை எல்லாம் பெற்றவன் என்று கீர்த்தி பெற்றாயே. இப்போது அவையெல்லாம் என்னவாயின? என்னைக் கொன்று நீ என்ன லாபம் பெறுவாய்? யோசிக்காமல் இந்த அதருமக் காரியம் செய்தாய். என் மனைவி உன்னைப் பற்றி என்னை எச்சரித்தாள். அவள் பேச்சைத் தட்டிவிட்டு வந்தேன். நீ வேஷதாரியென்றும், துன்மார்க்கன் என்றும், புல்லால் மூடப்பட்ட பாழுங்கிணறு போன்ற பாவி என்றும் தெரியாமல், மனைவியின் பேச்சைக் கேளாமல், நான் என் தம்பியுடன் யுத்தத்துக்கு வந்தேன். உனக்கு நான் என்ன தீமை

செய்தேன்? உன்னுடன் யுத்தம் செய்யவா நான் வந்தேன்? அதருமத்தில் இறங்கி, என்னை மறைந்து நின்று கொன்றாய். நல்ல அரச குலத்தில் பிறந்து பெரும் பாவத்தைச் செய்தாய். நீ அரச பதவிக்குத் தகுந்தவனல்ல. மோசக்காரனான உன்னைப் பூதேவி மணக்க விரும்பமாட்டாள். நீ எப்படித் தசரதனுக்கு மகனாகப் பிறந்தாய்? தருமத்தைவிட்டு நீங்கின நீசனால் கொல்லப்பட்டேன். என் கண்ணுக்கு முன் நின்று நீ யுத்தம் செய்திருந்தாயேல் இன்றே நீ செத்திருப்பாய். என்னை நீ வேண்டிக்கொண்டிருந்தால், ஒரே நாளில் சீதையை அழைத்து வந்துவிட்டிருப்பேனே! சுக்ரீவனுக்காக என்னைக் கொன்றாயே! ராவணனைக் கொன்று, பிரேதத்தைக் கழுத்தில் கயிறுபோட்டுக் கட்டி உன்னிடம் இழுத்துக் கொண்டு வந்து விட்டிருப்பேனே! மைதிலியை எவ்விடம் மறைத்து வைத்திருந்தாலும் கண்டுபிடித்து உன்னிடம் ஒப்புவித்திருப்பேனே! பிறந்தவர்கள் இறப்பது விதி. ஆயினும், நீ முறை தவறி என்னைக் கொன்றாய். உன் குற்றம் பெருங்குற்றம்."

இவ்வாறு தேவேந்திர குமாரனான வாலி, மரணாவஸ்தையில் ராமனைக் கண்டித்தான்.

வாலியின் இந்தக் குற்றச்சாட்டுக்கு ராமன் என்ன பதில் சொல்ல முடியும்! ஏதோ சொன்னதாகவும், அதைக் கேட்டு வாலி சமாதானப்பட்டதாகவும், நாம் இப்போது படிக்கும் இராமாயணத்தில் சொல்லப்படுகிறது. அதில் சாரம் இல்லை என்று விட்டுவிட்டேன். பெரியோர்கள் மன்னிப்பார்கள்.

கபந்தன் சொன்னபடி, தசரத குமாரர்கள் மறு பேச்சின்றி சுக்ரீவனுடைய நட்பை நாடினார்கள். கபந்தன் சுக்ரீவனைவிட மிகப் பராக்கிரமசாலியான வாலியின் உதவியை அடையச் சொல்லவில்லை. ஒருவனுக்குப் பெரிய நன்மை செய்து, அதற்கு அவனைக் கடன்படச் செய்து

அவனிடம் பிறகு உதவி பெற்றால், அந்தஸ்து குறையாமல் விரும்பியதை அடைவது வெற்றிக்கு வழியாகும். வாலியின் உதவியால் வெற்றி அடைந்தால், ராமனுடைய அந்தஸ்து வாலிக்கு கீழ்பட்டுப் போயிருக்கும் அல்லவா! கபந்தன் யோசனை, ராமன் புகழைக் காப்பாற்றிற்று. ராமா வதாரத்தில் ஆண்டவனும் தேவியும் சகிக்க வேண்டிய துக்கங்களில் இந்தத் தவறும் பழியும் ஒன்று.

சுக்ரீவனால் அடிபட்டு உடம்பெல்லாம் ரண காயங்கள், அதன்மேல் ராம பாணத்தினால் உண்டான மரணாவஸ்தை, இவற்றையெல்லாம் பொறுத்துக்கொண்டு கடைசியாக, வாலி ராமனுக்கு ஒரு வார்த்தை சொன்னான்.

"ஏதாயினும் சரி, நான் இனி அதைப்பற்றி தோஷம் சொல்லவில்லை. எனக்கு மிகப் பிரியமான குமாரன் அங்கதன் மிகவும் துக்கப்படுவான். சுக்ரீவனும் நீயும் அவனைச் சரியாகப் பார்த்துக்கொள்ள வேண்டும். அவனை உன் வசம் ஒப்புவித்தேன். அவனைக் காப்பாற்றுவதை உன் கடமையாகப் பாவிக்க வேண்டும். ஜலம் வற்றிப்போன குளத்திலுள்ள தாமரைக் கொடிபோல் துக்கப்படுவான். நான் சுக்ரீவனுக்குச் செய்த கொடுமை, தாரையின் தூண்டுதலால் என்று அவன் எண்ணாமலிருக்க வேண்டும். அங்கதனை அவன் கவுரவமாகவும் அன்புடனும் நடத்த வேண்டும். இதை நீ செய்தால் போதும், நான் வேறொன்றும் விரும்பவில்லை. வீரர்களுக்குரிய உலகம் எனக்குக் காத்திருக்கிறது" என்று சொல்லிவிட்டு நினைவு இழந்தான்.

* * *

ஒன்று நிச்சயம், வாலியை ராமன் எதிர்த்து ஜெயித்திருக்கமுடியாது. ராவணனைத் தேவர்கள் எதிர்க்க முடியாதிருந்தது போலவே இது வாலி பெற்ற வரத்தின் பயனாகும். மறைந்து நின்றேதான் ராமன் வாலியைக்

கொல்ல முடியும். ஆயினும் ஏன் வாலியைக் கொல்ல வேண்டும் என்கிற கேள்வி நிற்கிறது.

கபந்தனுடைய சாபவிமோசன காலத்தில் அவன், "நீ சுக்ரீவனுடைய நட்பைச் சம்பாதித்துச் சீதையை அடைவாய்" என்று சொன்னபடி ராமன் சுக்ரீவனைத் தேடிச் சென்றான். அவனை அடைந்து அக்கினி சாட்சியாக நட்புப் பிரதிக்ஞையையும் செய்துவிட்டான்.

மன்னிக்கத் தகாத அபராதம் ஏதும் சுக்ரீவன் வாலிக்குச் செய்யவில்லை. அப்படியிருக்க, வாலி தான் பெற்றிருந்த பலத்தைக் கொண்டு தம்பியைப் படாத பாடுபடுத்திக் கொடுமை செய்து வந்தான். இதைச் சொல்லி முறையிட்ட சுக்ரீவனுக்கு, "உன் பகைவனை ஒழித்து மனைவியையும் ராஜ்யத்தையும் நீ மறுபடி அடையச் செய்வேன். இது சத்தியம்" என்று உறுதியான பிரதிக்ஞை செய்துவிட்டான் ராமன். இதன் மேல் வேறு வழியில்லை. வாலியை மறைந்து நின்று கொல்வது அவசியமாக ஏற்பட்டுவிட்டது. காதல் மனைவியைத் திருப்தி செய்ய மாய மானைத் தேடிப்போனதன் பயனாக, ஒன்றன்பின் ஒன்றாகச் சிக்கலும், துக்கமும், தரும சங்கடங்களும் ராமனைத் தொடர்ந்து வந்தன. இவ்வளவே என் சிற்றறிவிற்குக் காணப்படுவது.

வினயத்துடன் நான் எழுதுவதைப் பண்டிதர்கள் மன்னிப்பார்களாக! வால்மீகி முனிவரே தன் ஞானத்தில் கண்டதாக "இது ராவண சம்ஹாரத்துடன் தேவர் நியமித்துவிட்ட திட்டம்" என்று சொல்லிவிட்டு, ராமச்சந்திரன் வாலியின் மன்னிப்பைக் கேட்டதாகவும் சொல்லியிருந்தால் அழகாக அமைந்திருக்கும். "அவசரத்தில் உன்னைக் கேட்காமல் சுக்ரீவனுக்கு பிரமாணம் செய்து உறுதிமொழி கொடுத்துவிட்டேன். அது என் குற்றம்" என்று ராமன் சொல்லிவிட்டு முடித்திருக்கலாம். தற்போது நாம்

படிக்கும் வால்மீகி ராமாயணத்தில், கிஷ்கிந்தா காண்டம் 18-வது அத்தியாயம் வால்மீகியின் விமரிசனம் என்று நான் ஏற்றுக்கொள்ள இயலாது. ராமன் பேரில் எந்தக் குற்றமும் இருக்கலாகாது என்கிற நோக்கத்தில், பிறகு யாரோ எழுதிப் புகுத்தி விட்டிருக்கிறார்கள் என்றே நான் எண்ணுகிறேன்.

அந்த அத்தியாயத்தில் ராமன் தான் நிரபராதி என்று வாலியுடன் வாதித்துப் பேசியதாக எழுதியிருப்பதால், ஓர் அழகும் நியாயமும் இல்லை.

சரியான யோசனை செய்யாமல், அவசரமாகப் பிரதிக்ஞை செய்துவிட்டபடியால் தவறுவதற்கில்லை என்கிற ஒரு வாதம்தான் ராமனுடைய குணங்களுக்கு இசைந்த பேச்சு. மற்றவையெல்லாம் பொருளற்ற வாதம். அது ராமனுடைய பெருமையைக் குறைக்கிறதே யொழிய, குற்றத்துக்குச் சமாதானம் ஆகாது.

## 59. தாரையின் துயரம்

வில்லேந்திய ஒருவனால் வாலி கொன்று வீழ்த்தப் பட்டான் என்கிற சமாசாரம் கிஷ்கிந்தையிலுள்ள வானரர்களுக்குத் தெரிந்ததும், அவர்கள் இங்குமங்கும் பயந்து ஓடினதைப் பார்த்தாள் தாரை.

"யுத்தம் என்றால் எப்போதும் அரசன் வாலிக்கு முன்னதாக இது வரை போய் வந்தீர்களே! ஏன் இப்போது இப்படிப் பயந்து ஓடுகிறீர்கள்? உங்களுக்கு ஒன்றும் ஆபத்து இல்லை. சுக்ரீவனை அரசனாக்குவதற்காக வாலியைக் கொன்றான் ராமன். அவ்வளவே. நீங்கள் அனாவசியமாகப் பயந்து ஓடாதீர்கள்! உங்களுக்கு ஒரு ஆபத்தும் இல்லை" என்று அரசி பேசவேண்டிய முறையில், தன் துக்கத்தைத் தள்ளிவிட்டு, வானரர்களுக்குத் தைரியம் ஊட்டினாள்.

* * *

பிறகு தன் புருஷன் இறந்து கிடக்கும் இடத்துக்குப் போகப் புறப்பட்டாள். வானரர்கள் தடுத்தார்கள்.

"அங்கதனுக்குப் பட்டாபிஷேகம் செய்வோம். கோட்டையைப் பத்திரப்படுத்துவோம். நம்முடைய பகைவன் சுக்ரீவனும் அவனுடைய துணைவர்களும் வராமல் ஊரைக் காப்போம்!" என்று தாரையைப் போகவிடாமல் தடுக்கப் பார்த்தார்கள்.

அவளோ, "வீர புருஷன் இறந்த பிறகு எனக்கு ஒன்றும் வேண்டியிருக்கவில்லை!" என்று சொல்லி, நிர்ப்பயமாக ராம லக்ஷ்மணர்கள் இருந்த இடத்துக்கு நேராகச் சென்றாள்.

தரையில் விழுந்து கிடந்த தன் புருஷனைக் கண்டதும், துக்கத்தை அடக்கிக் கொள்ள முடியவில்லை. கதறி அழுதாள்.

"ஹா என் வீரனே! எத்தனை சூரர்களை வீழ்த்தினாய்! இப்போது மாண்டு கிடக்கிறாயே! என்னை விட்டுப் போய்விட்டாயே!" என்று குத்தப்பட்டுக் கிடந்த வாலியை ஆலிங்கனம் செய்து கொண்டு அழுதாள்.

வாலியின் குமாரன் அங்கதனும் அங்கே வந்து சேர்ந்தான். அந்தக் காட்சியைக் கண்டதும், தன் பொருட்டு இவ்வளவு துயரம் ஏற்பட்டதே என்று சுக்ரீவனுடைய உள்ளத்தில் துயர உணர்ச்சி புகுந்தது.

இது வேஷமல்ல. இவ்வாறே உலகத்தில் துவேஷமும், பழி தீர்க்கும் காரியங்களும், ஆசைகளும் முடிவில் ஒரு நற்பயனும் சந்தோஷமுமின்றித் துக்கத்தில் முடிகின்றன. நேரில் கண்டு அனுபவித்த பின்னரே துவேஷத்தின் அற்பமும், பயனற்ற தன்மையும் விளக்கமாகிறது. அறிவு அடைகிறோம். அதுவரையில் மோகத்தில் மூழ்கி உண்மையைக் காண்பதில்லை.

* * *

"அன்புக்குரிய அங்கதனை அநாதையாக விட்டுவிட்டு, என்னையும் திக்கின்றி விட்டுவிட்டுத் திரும்பி வாராத நீண்ட பிரயாணத்தில் போய்விட்டாயே, என் வீரனே!" என்று தாரை அழுது புரண்டு, அங்கேயே உயிர் நீப்பேன் என்றாள்.

ஹனுமான் ஆறுதல் சொல்லிப் பார்த்தான். "இறந்தவர்கள் தங்களுக்குரிய மேல் உலகங்களை அடைவார்கள். வாலியைப் பற்றித் துக்கப்படவேண்டாம். அங்கதனுக்குப் பட்டாபிஷேகம் ஆகும். அதைக் கண்டு மகிழ்வோம். இப்போது வாலிக்குச் செய்யவேண்டிய உத்தரகிரியைகளை நடத்துவதில் புத்தி சேலுத்துவோம். அங்கதனைச் சரியாகப் பாதுகாப்பது நம்முடைய கடமையாகும்" என்றெல்லாம் சொல்லிப் பார்த்தான்.

"எனக்கு ஒன்றும் வேண்டியிருக்கவில்லை. உத்தரகிரியை செய்வதும், அங்கதனை ரட்சிப்பதும் எல்லாம் சுக்ரீவன் பார்த்துக் கொள்வான். என்னால் என்ன செய்ய முடியும்? ஆயிரம் அங்கதர்கள் இருந்தாலும், அது என் புருஷனுக்குச் சமானம் ஆகுமா? என் வீரனுடன் நானும் யமாலயம் செல்வேன். அதுதான் எனக்கு சந்தோஷம்" என்றாள் தாரை.

நினைவிழந்து மரணத் தறுவாயிலிருந்த வாலி, அச்சமயம் கண்ணைத் திறந்து, சுக்ரீவனைப் பார்த்து மெதுவாகச் சில வார்த்தைகள் பேசினான்.

"தம்பீ! நாம் இருவரும் ஒன்றாக இருந்து, சந்தோஷமாக ராஜ்யத்தை ஆண்டு அனுபவித்திருக்கலாம். அதற்குக் கொடுத்து வைத்திருக்கவில்லை. என்னுடைய தவறே அதிகம். அதைப்பற்றி இப்போது பேசிப் பயனில்லை. நீ இனி இந்த ராஜ்யத்தை ஆள்வாயாக. எனக்கும் தாரைக்கும் உயிரைவிடப் பிரியமான குமாரன் அங்கதனை உன்னிடம் ஒப்புவித்தேன். அவன் உன்னைப் போன்ற வீரன். எனக்குப் பதிலாக நீயே அவனுக்குத் தந்தையாக இருந்து, அவனை அன்புடன் பார்த்து வா. இதுதான் உன்னை நான் கேட்டுக் கொள்வது.

"என் மனைவி தாரை மிகுந்த அறிவாளி. சூக்ஷுமமான விஷயங்களை அறியும் சக்தி பெற்றவள். இவ்விதம் நடக்கும் என்று அவள் ஒன்றைக் கூறினாளானால் அது அப்படியே நிகழும். சந்தேகமில்லை. அவள் யோசனையை எந்த விஷயத்திலும் தட்டாதே.

"இதோ இந்திரன் எனக்குத் தந்த தங்கமாலையை என் கையிலிருந்து பெற்றுக்கொண்டு, அதன் சக்தியை நீ பெற்று விளங்குவாயாக. என் வாழ்க்கை முடிந்தது. உன்மேல் எனக்குக் கோபம் தணிந்து விட்டது. உனக்கு மங்களம் ஆகுக!" என்று தம்பி சுக்ரீவனை ஆசீர்வதித்தான்.

"அங்கதா, அரசனாகிய சுக்ரீவனிடத்தில் சரியாக நடந்துகொள். பொறுமையுடன் நடந்துகொள். உள்ளன்போடு நடந்துகொள்" என்று குமாரனுக்குச் சொல்ல வேண்டியதையும் சொன்னான்.

காட்டு விருக்ஷம் வெட்டப்பட்டுக் கீழே விழுந்தால், அதைத் தழுவி ஏறிய இளங்கொடியும் அதை ஒட்டிக் கிடப்பது போல், வாலியைக் கட்டித் தழுவிக் கொண்டு கிடந்தாள், மலர் பூத்த கொடியைப் போன்ற தாரை.

நீலன், வாலியின் மார்பில் குத்தி நின்ற பாணத்தை மெள்ள எடுத்து அகற்றினான். உடனே, காயத்திலிருந்து மலையருவிபோல் ரத்தம் பொங்கி எங்கும் பரவிற்று. வாலியின் உயிர் உடலைவிட்டுப் பிரிந்தது. "ஐயோ!" என்று தாரை அழுதாள்.

"அங்கதா, உன் தகப்பனைக் கடைசியாக வணங்குவாய்!" என்றாள்.

"உங்களுடைய பிரிய மகன் வணங்கி நிற்கிறானே! அவனுக்கு ஒன்றும் சொல்லமாட்டீர்களா? நான் விதவையானேன். மகனும் திக்கற்றுப் போனான்!" என்று இதயம் உடைந்த தாரை பிரலாபித்தாள்.

* * *

இதையெல்லாம் கண்டு சுக்ரீவனுடைய உள்ளம் பதைத்துத் தன் குற்றத்தை அப்போது நன்றாக உணர்ந்தான். "எனக்குள் மறைந்து நின்று உள்ளே வேலை செய்து வந்த ஆசை என் புத்தியைக் கெடுத்து விட்டபடியால் அல்லவோ, நன்றாக ஆலோசிக்காமல் வாலி புகுந்த குகையின் வாயிலை மூடிவிட்டு, அண்ணனுடைய சம்பத்தை அபகரித்துக் கொண்டு ஆனந்தமாக அனுபவித்தேன்!" என்று தனக்குள் சிந்திக்கலானான்.

நம்மையும் அறியாமல் உள்ளே இருந்துவரும் ஆசை விவேகத்தைக் கெடுத்து விடுகிறது. தவறான முடிவுகளுக்கு வந்துவிடுகிறோம். பாவங்களில் சிக்கிக் கொள்கிறோம். சுக்ரீவன் தன் விவேகத்தை கெடுத்து, உள்ளே மறைந்து நின்று வேலை செய்தது தன்னுடைய ஆசை என்பதை இப்போது கண்டான்.

காமம் என்கிற பொதுப் பெயர் வடமொழியில் எல்லா வகை ஆசைகளையும் குறிக்கும். காமமே மனிதனுக்கு உட்பகை. அந்தச் சத்துருவை ஜயிக்கவேண்டும். இதுவே கீதையில் மூன்றாவது அத்தியாயம் கடைசி ஏழு சுலோகத்தில் செய்யப்படும் உபதேசம். ஜஹி சத்ரும் காமரூபம் துராஸதம். "தேகத்தோடு வந்து உள்ளே இருந்துகொண்டு பல ரூபம் எடுத்துப் புத்தியையும் குழப்பி ஏமாற்றும் இந்தப் பெரும் சத்துருவை ஆன்மசக்தியால் சுருக்கி வெற்றி பெறுவாயாக!" என்று முடிக்கிறான் கண்ணபிரான்.

சுக்ரீவனைக் கெடுத்தது ஆசை. வாலியின் விவேகத்தைக் கெடுத்தது கோபம்! சுக்ரீவன் குகையின் வாயிலை மூடிவிட்டதைக் கண்டதும், ராஜ்யத்தை அபகரிப்பதற்காகவே சுக்ரீவன் தன் கூட வந்து இப்படிச் செய்தான் என்று வாலி எண்ணிவிட்டான். அரக்கனுக்குத் தன்னைப் பலிகொடுத்து விட்டு, தன்னுடைய பதவியை அபகரித்துக் கொள்ளப் பார்த்தானே என்று மனதில்

சுக்ரீவனைப் பற்றி முடிவுசெய்து கொண்டு, பொங்கிய கடுங்கோபத்துக்கு இரையானான். உடன்பிறந்த தம்பியை அவமானப்படுத்தி, ஊரைவிட்டுத் துரத்திவிட்டுச் சினத்தை வளர்த்துக்கொண்டே போனான். கோபம்-'மன்யு' என்று கோபத்தின் மூலத்திற்கு வட மொழியில் பெயர்-இது வாலியை ஏமாற்றி அவனைப் பாவத்தில் தள்ளிற்று.

'காமம்', 'மன்யு' இவை இரண்டும்தான் எல்லாக் குற்றங்களுக்கும் காரணம். இவற்றை உள்ளம் என்கிற கோட்டைக்குள் விடாமல் மனத்தைக் காப்பாற்றினால்தான் தப்புவோம்.

* * *

சுக்ரீவன் பிரலாபிக்கிறான். 'நான் எவ்வளவு பெரிய குற்றம் செய்தாலும், என்னைக் கொல்லாமல் 'ஓடிப்போ' 'உயிர் தப்பிப் பிழை!' என்று சொல்லி அண்ணன் என்னைத் துரத்தினான், அவ்வளவே! நானோ அவனைக் கொல்லச் சதி செய்து, அவனைக் கொன்று விட்டேனே! என்னைப் போன்ற பாதகன் உலகத்தில் இல்லை. சாகும் தருவாயில் 'ராஜ்யத்தை நீ எடுத்துக்கொள்' என்று என்னிடம் சொல்லித் தன்னுடைய ராஜ்யத்தையும், இந்திரன் தந்த மாலையையும் தன் கையால் எனக்குத் தந்தானே! இவனல்லவோ மகான். நீசனாகிய நான் உயிர் வைத்துக்கொண்டு பிழைப்பதில் என்ன பயன்? உலகத்துக்கு ஒரு சூரனாக இருந்த என் அண்ணனைக் கொன்றேனே!" என்ற, தன் பெருங்குற்றத்தை எண்ணி அழுதான்.

* * *

வருஷத்துக்கு ஒரு முறையாவது, 'காமோ கார்ஷீத்' 'மன்யு கார்ஷீத்'-சந்தியை பிரித்தால்-காம அகார்ஷீத் மன்யு அகார்ஷீத் அதாவது 'ஆசை என்னை ஏமாற்றிப் பாபம் செய்தது' 'கோபம் என்னை ஏமாற்றிப் பாபம் செய்யச்

செய்தது' என்று வருந்தி, அடக்கத்துடன் பல தடவை சொல்லி, உள்ளத்தைச் சுத்தப்படுத்தி கொள்வது வைதிகர்களின் ஜபமுறை. இதை யாருமே அனுசரித்தல் வேண்டும். ஜபம் செய்து உள்ளத்தை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்துவிட வேண்டும்.

* * *

பிரலாபித்துக் கொண்டிருந்த தாரையினிடம் ராமன் மெல்லச் சென்றான்; பயந்தே சென்றான்.

தாரையானவள் தன் முகத்தில் கோபக்குறிகள் ஏதும் காட்டாமல் "வீரனே, எந்தப் பாணத்தால் என் புருஷனைக் கொன்றாயோ. அதே பாணத்தைக் கொண்டு என்னையும் கொன்று, என் பர்த்தாவை நான் சேரும்படி செய்வாயாக. என்னைவிட்டு அவர் சுவர்க்கத்திலும் சந்தோஷப்பட மாட்டார். பெண்ணைக் கொன்ற பாவம் உனக்கு உண்டாகும் என்று பயப்படாதே! புருஷனையும் மனைவியையும் ஒன்று சேர்த்த புண்ணியமே உனதாகும். என் புருஷனை அதர்ம முறையில் கொன்றதற்கு இதுவே உனக்குப் பிராயச்சித்த மாகும். வாலி இறந்த பிறகு நான் பிழைத்திருக்க முடியாது!" என்று மகா வீரனுடைய பட்டமகிஷிக்கு உரித்தான மொழிகளைச் சொல்லிப் புலம்பினாள்.

* * *

இவ்விடத்தில் தாரை ராமனுடைய அவதார உண்மையை அறிந்து, ராமனை மகாவிஷ்ணுவாகவே கண்டாள் என்று, நாம் படிக்கும் வால்மீகி இராமாயணத்தில் சொல்லப்படுகிறது.

லக்ஷ்மணன் தாயாகிய சுமத்திரையை பற்றி வழங்கி வருவது போலவே, வாலியின் மனைவி தாரையும் மகா அறிவாளி, ஞானி என்பது பரம்பரையாக வந்த அபிப்ராயம்.

ஆனபடியால் அவள் தன் புருஷனை அதர்ம முறையில் கொன்றவன் மேல் கோபமும் வெறுப்பும் முதலில் கொண்டிருந்தாலும், நேரில் தரிசனம் அடைந்ததும் ராமனுடைய உண்மைச் சொரூபத்தைக் கண்டாள் என்று சொல்லப்படுகிறது.

வெறுங் கதையாகப் படித்தால் இது ரஸமாகத் தோன்றாது. பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு இது அசம்பாவிதமாகத் தோன்றாது. துளசிதாஸருடைய ராமாயணத்தில் இந்தச் சந்தர்ப்பத்தில் பரமசிவன் பார்வதிக்குச் சொல்வதாகப் பாடுகிறார்.

"ஊமையே பார்த்தாயா? ஈஸ்வரனாகிய ராமன் எல்லோரையும் எப்படிப் பொம்மையாக ஆட்சி செய்கிறான்" என்று.

பக்திக் கண்களால் பார்த்தால் தான் பழைய புராணங்களின் சாரத்தை நன்றாகக் காண முடியும்.

சாதாரணமாக விமரிசனம் செய்தாலும், தாரை மிகச் சாமர்த்தியசாலி. ராஜநீதியில் தேர்ச்சி பெற்றவள் பின்னால் நடக்கப்போவதை ஊகித்து அறியும் சக்தி அவளுக்கு இருந்ததை வாலியே சொல்லியிருக்கிறான். நடந்தது நடந்து விட்டது. சுக்ரீவன் தன்னுடைய சாமர்த்தியத்தாலும் தெய்வச் செயலாலும் ராமனுடைய துணையைச் சம்பாதித்து விட்டான். வாலி இறந்து விட்டான். இனி அங்கதனுடைய க்ஷேமத்தைத் தானே பார்த்துக் கொள்ளவேண்டும். அங்கதன் சுக்ரீவனோடு விரோதம் செய்துகொண்டு சண்டை பிடிக்க முடியுமா? சுக்ரீவனுக்கு வில்லேந்திய ராமலக்ஷ்மணர்கள் சகாயமாக ஏற்பட்டு விட்டார்கள். ஆனபடியால் நீதி சாஸ்திரப்படி இந்தச் சமயத்தில் சாமோபாயமே மேல் என்பதை தாரை கண்டாள். ராமனிடம் தன் கோபத்தை மறைத்துப் பொறுமையுடன் நடந்து கொண்டாள். அங்கதனுடைய வாழ்க்கை பாழாகப் போகாமற்படி காக்கும் வழியைத் தேடினாள்.

வாலிக்கு உத்தரகிரியை விமரிசையாக நடத்தப்பட்டு முடிந்தது. மங்கள ஸ்நானம் செய்வித்து. சுக்ரீவனுக்கும் அங்கதனுக்கும் முறையே ராஜ்யாபிஷேகமும் யுவராஜ்ய பட்டாபிஷேகமும் செய்யப்பட்டன.

* * *

மழைக்காலம் ஆரம்பித்தது. சுக்ரீவன் முதலியவர் கிஷ்கிந்தாபுரத்தில் சுகமாகக் காலம் கழித்தார்கள். ராம லக்ஷ்மணர்கள் பக்கத்தில் இருந்த ஒரு மலைக்குகையில் காலம் கழித்தார்கள். மழையால் வெள்ளம் பெருக்கெடுத்து, காட்டுப் பாதைகள் எல்லாம் நீரோட்டமாக ஓடி. போக்குவரத்துத் தடைப்பட்டுக் கிடந்தது. சீதையைத் தேடும் காரியம் அதனால் தடைப்பட்டது. சீதையின் நிலையை எண்ணி எண்ணி ராமன் மிகவும் துக்கப்பட்டான். மாரிக்காலம் முடிவாகும் வரையில் பொறுமையோடு இருக்கவேண்டும் என்று லக்ஷ்மணன் ராமனுக்குச் சொல்லிச் சமாதானப்படுத்தி வந்தான். ராமனும் அப்படியே பொறுத்திருந்தான்.

எத்தனை பெரிய துக்கம் நேர்ந்தாலும் காலக்கிர மத்தில் உள்ளத்தில் நாம் பெற்றிருக்கும் மறதி என்ற சக்தியினால், துக்கம் வரவர மறைந்துபோய், வாழ்க்கையில் கவனம் செலுத்தி அமைதி அடைகிறோம். ஈசுவரன் அமைத்திருக்கும் இந்த மறதி என்னும் சக்தி நமக்கு மிகப் பெருஞ் செல்வமாகும். இது இல்லையேல் இந்த உலகம் துயரத்துக்குமேல் துயரமாகக் குவிந்து நரகமேயாகிவிடும். இந்த நியதியின்படி சுக்ரீவனும் அவன் பந்துக்களும் தாரையும் உள்பட எல்லாரும், வாலியை இழந்த துக்கத்தை மறந்து சீரும் சிறப்பும் நிறைந்த கிஷ்கிந்தையில் சந்தோஷமாக இருந்தார்கள்.

ஹனுமான் மட்டும் கவலைப்பட்டான். அவன் ராமனுடைய காரியத்தை மறக்கவில்லை. பிரதிக்ஞை செய்து

கொடுத்ததைப்பற்றி அரசனிடம் மெதுவாகப் பேசுவதற்குத் தக்க சமயத்துக்காகக் காத்துக் கொண்டிருந்தான்.

மழைக்காலம் முடிந்தது. ஆகாயம் மேகமும் மின்னலும் இல்லாமல் வெண்மையாகிவிட்டது. பறவைகளும் பறந்து விளையாட ஆரம்பித்து விட்டன. மகா புத்திசாலியும், தர்மத்தினின்று என்றும் பிறழாத உள்ளத்தைப் பெற்றவனுமான அனுமான் தன் அரசனிடம் சென்றான்.

ராஜ காரியங்களையெல்லாம் மந்திரிகளிடத்தில் ஒப்புவித்துவிட்டு அந்தப்புர போகத்தில் மூழ்கிக் கிடந்த சுக்ரீவனிடம் சென்று வினயமாகப் பேசலானான். எத்தனை அறிவாளிகளானாலும் மல்லர்களுமானாலும் சுகபோகத்தில் மூழ்கிவிட்டால் கடமைகளை மறந்து விடுவது இயற்கை என்பது ஹனுமான் அறிந்த விஷயம்.

கிஷ்கிந்தா காண்டத்தில் நாம் காணும் ராமச்சந்திரன், சீதையை இழந்த துக்கத்தின் பயனாக மிகவும் கஷ்டப் படுகிறான். வனவாசத்தில் சீதையுடன் இருந்த போதிலும் தாமஸ ஒழுக்கத்தைத்தான் நடத்தி வந்தான். ஆயினும் செல்வத்தை இழந்தவனுக்குப் பணத்தின்மேல் ஆசை அதிகரிப்பது போல், சீதையின் மேல் ராமனுக்கு உள்ள அன்பு பல மடங்கு அதிகரித்துவிட்டது. துக்கப்படலாகாது, தைரியம் இழக்கலாகாது. அது காரியசித்திக்குத் தடையாகும் என்று அடிக்கடி தம்பி அண்ணனுக்கு உபதேசம் செய்து வந்தான். அண்ணனும் இளையோன் உபதேசத்தை ஒப்புக்கொண்டு, துக்கத்தைச் சகித்து வந்தான். கிஷ்கிந்தா காண்டத்தில் அண்ணனுக்குத் தம்பி ஆசாரியன் ஆனான் என்று கூடச் சொல்லலாம்.

## 60. கோபம் தணிந்தது

"முன்னோர்கள் அனுபவித்த ராஜ்யத்தை அடைந்து விட்டீர். புகழும் பெற்று விட்டீர். உம்முடைய அதிகாரம் ஸ்திரமாகிவிட்டது. ஆனால், மித்திரர்களுக்குச் செய்ய

வேண்டியதைச் செய்து, அவர்களுடைய சிநேகிதத்தைப் பலப்படுத்திக் கொள்ளவேண்டியது எஞ்சி நிற்கிறது. அதைச் செய்தால் அல்லவோ உம்முடைய புகழ் இன்னும் பெருகும். ராஜ்யமும் பலப்படும். தன் காரியங்களையும் சுகங்களையும் புறக்கணித்துக்கூடத் தன்னுடைய நண்பர்களின் காரியத்தை வாக்களித்தபடி செய்யவேண்டும். அப்படிச் செய்து தீர்த்தால் அரசனுடைய பலமும் கீர்த்தியும் விருத்தியடையும். பிரதிக்ஞை செய்து கொடுத்த வாக்குறுதிப்படி சொன்ன காலத்துக்கு முன்னாலேயே அதைச் செய்து தருவது விசேஷம். காலதாமதம் கூடாது. செய்யவேண்டியதை காலதாமதம் செய்துவிட்டு, பின்னால் செய்தாலும்கூட அது பயன் தராது. மித்திரர்களுக்குச் செய்ய வேண்டியதை அவர்கள் அதைப்பற்றி ஞாபகப்படுத்துவதற்கு முன்பே செய்வது புத்திசாலித்தனம். தாமதப்பட்டுச் செய்வது குணக்குறைவு. இது உமக்குத் தெரிந்த விஷயமே. ராமன் நமக்குச் செய்த உதவியை நாம் நினைவில் வைத்து, அவனுக்காக நாம் செய்ய வேண்டியதை அவன் நமக்கு நினைவூட்டுவதற்கு முன்னதாகவே நாம் ஆரம்பிக்க வேண்டும். மாரிக்காலம் முடிந்துவிட்டது. இனி தாமதிக்கக் காரணமில்லை. சீதையைத் தேட வேண்டிய பெருங்காரியத்தை இனி ஒத்திவைப்பது தகாது. ராமன் அதைப்பற்றி மிகப் பொறுமையாகவே இருந்து வருகின்றான். ஆனாலும் இனிக் கொஞ்சமேனும் தாமதிக்கலாகாது. ராமன் உம்முடைய சத்ருவைக் கொன்றதை யோசித்துப் பார்க்கவேண்டும். அதிலுள்ள பெரிய அபாயத்தையும் பழியையும் கருதாமல் எவ்வளவு துரிதமாகச் சொன்னபடியே செய்துவிட்டான். நாமும் அவ்வாறே வாக்குறுதியைச் சீக்கிரமாக நிறைவேற்ற வேண்டும். காலதாமதம் செய்வது கூடாது."

இவ்வாறு மிக வினயமாக நீதிமுறையை எடுத்துக் காட்டி ஹனுமான் சுக்ரீவனுக்கு யோசனை சொன்னான்; சுக்ரீவனும் அது சரி என்று ஒப்புக்கொண்டு, சரியான

காலத்தில் யோசனைகள் சொன்னதற்காக ஹனுமானுக்கு நன்றி செலுத்தி, வானர சேனையைத் திரட்டச் சொல்லி உத்தரவிட்டான்.

"பூமி முழுவதும் சுற்றித் தேடிப் பார்த்துச் சீதையைக் கண்டுபிடிக்க வேண்டும். திறமை வாய்ந்த வானரர்களை உடனே வந்துசேரக் கண்டிப்பாக உத்தரவிடுவாய். வந்து சேராதவர்களுக்கு மறுவிசாரணையின்றித் தண்டனை விதிக்கப்படும்" என்று சொல்லிவிட்டுச் சுக்ரீவன் தன் அந்தப்புரத்துக்குள் சென்றான்.

ராமனும் லக்ஷ்மணனும் குகையில் காலம் கழித்து வந்தார்கள். எப்போது மாரிக்காலம் முடிந்து, வானர ராஜன் தன்னுடைய பணியைச் செய்வான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மழைக்காலம் முடிந்து வனமும், வனத்தில் வசிக்கும் பிராணிகளும் மிகுந்த அழகுடன் பிரகாசித்து வருவதை ராமன் பார்த்து, அரக்கன் கையில் அகப்பட்டுத் தவிக்கும் சீதையைப் பற்றி எண்ணியெண்ணித் துயரத்தில் மூழ்கினான்.

"உலகமெல்லாம் சௌந்தர்யமும் மகிழ்ச்சியுமாக இருக்கிறது. சீதை எங்கேயோ தவித்துக் கொண்டிருக்கிறாள். நானோ இங்கே நன்றி மறந்த வானர ராஜனுடைய தயவை எதிர்பார்த்துக் கொண்டு, சும்மா கிடக்கிறேன். ஆஹா! நான் சென்ற தண்டகாரண்யத்தை ஒரு உத்யானவனமாகக் கருதி, என்னுடன் முள்மேலும் கல்மேலும் துள்ளிக் குதித்துச் சந்தோஷமாக நடந்து வந்தாளே! அவள் இந்தச் சமயத்தில் என்ன கஷ்டப்படுகிறாளோ? இந்த வானர ராஜனோ மதுபானத்தில் மூழ்கி, பெண்களோடு கூடி, கிராம்ய சுகத்தில் ஈடுபட்டு எனக்குத் தந்த வாக்கை முற்றிலும் மறந்து விட்டான். இந்த வானர ராஜன் ஒரு கயவனாகத் தெரிகிறது. லக்ஷ்மணா! நீ உடனே கிஷ்கிந்தைக்குப்போய் வானர ராஜனைக் கண்டு சொல்; 'உன் அண்ணனை அனுப்பிய

யமாலயத்தின் வாயில் திறந்து உனக்காகவும் காத்திருக்கிறது. தெரிந்துகொள். வாலி சென்ற வழி நீயும் போக விரும்புகிறாயா?' என்று நான் கேட்டதாக அவனுக்குப் பளிச்சென்று சொல்லிப் புத்தி புகட்டுவாய்.

"செய்த உபகாரத்தை மறந்தவன் அழிந்து போவான். மித்திரனை ஏமாற்றப் பார்ப்பவன் கதி அதோ கதியாகும். ராமனுடைய வில்லும் அம்பும் தயாராக இருக்கின்றன" என்று அவனுக்குச் சொல்.

"மாரி மாதங்கள் நான்கும் முடிந்துவிட்டன. நான்கு மாதங்களும் ராமனுக்கு நான்கு யுகங்களாகக் கழிந்தன. நீயும் உனக்கு அடங்கியவர்களுமோ சந்தோஷமாகப் போகங்களை அனுபவித்து வருகிறீர்கள். ராமனுடைய கோபத்தை வளர்த்து வருகிறீர்கள். நாசமடைவதற்கு வழி தேடுகிறீர்கள் என்று சொல்லுவாய்."

இப்படி ராமன் கோபத்தையும் ஆத்திரத்தையும் சுக்ரீவனுக்குத் தெரியப்படுத்தச் சொல்லித் தம்பி லக்ஷ்மணனை அனுப்பினான்.

லக்ஷ்மணன் புறப்பட்டான். அண்ணனுடைய துயரத்தையும் நெருப்பைப் போன்ற கோபத்தையும் அப்படியே ஏற்று வாங்கிக் கொண்டு புறப்பட்டுப் போனான்.

உடனே ராமன் யோசிக்கலானான். லக்ஷ்மணனுடைய சுபாவமறிந்தபடியால், அது அபாயத்தில் முடியும் என்று எண்ணித் தம்பியைக் கூப்பிட்டு மறுபடியும் ராமன் பேசலானான்.

"சுக்ரீவனிடம் என் கோபத்தைச் சொல்லும்போது, கடுஞ்சொற்கள் உபயோகிக்க வேண்டாம். என்னவாயினும் அவனை நாம் சிநேகிதனாகக் கொண்டு விட்டோம். அவனுடைய தவறை மட்டும் எடுத்துக்காட்டு" என்று எச்சரித்து அனுப்பினான்.

லக்ஷ்மணன், "அப்படியே!" என்று சொல்லிச் சென்றான். ஆயினும் மகா கோபத்தோடு கிஷ்கிந்தை வாயிலை அணுகினான்.

லக்ஷ்மணனுடைய கோபத் தோற்றத்தையும், கையிலிருந்த ஆயுதங்களையும் பார்த்து, வானரக் காவலாளிகள் ஏதோ விபரீதம் நடக்கும் போலிருக்கிறது. கோட்டையை ஜாக்கிரதையாகக் காக்க வேண்டும் என்று ஆயத்தமானார்கள்.

அவர்களுடைய இந்த நடவடிக்கையைப் பார்த்த லக்ஷ்மணனுக்கு இன்னும் கோபம் அதிகரித்தது.

சில வானரர்கள் ஒரே ஓட்டமாக ஓடி அந்தப்புரத்திலிருந்த சுக்ரீவனுக்கு விஷயத்தைச் சொன்னார்கள். "லக்ஷ்மணன் பெருங்கோபமாய் வில்லும் பாணமுமாக வந்து கொண்டிருக்கிறான். தடுத்தாலும் நிற்கவில்லை" என்றார்கள்.

வானர ராஜனோ கள்ளும் ஸ்திரீகளுமாக அந்தப்புரத்தில் மயக்கத்தில் கிடந்தான். வானரர்கள் சொன்னது அவன் காதில் விழவில்லை.

ராஜ சேவகர்களுடைய உத்தரவின் பேரில், குகை வாயிலைச் சேனையாட்கள் பலமாக நின்று யாரும் உள்ளே பிரவேசிக்காமல் காவல் இருந்தார்கள். இப்படி நிகழ்ச்சிகள் மேன்மேலும் இளைய பெருமாளுக்குக் கோபம் மூட்டும் முறையில் வளர்ந்து கொண்டு போயின.

தடையை மீறி லக்ஷ்மணன் உள்ளே பிரவேசித்தான். முதலில் அங்கதனைக் கண்டான். வாலியின் குமாரன் அங்கதனைக் கண்டதும் லக்ஷ்மணனின் கோபம் ஓரளவு தணிந்தது.

"குழந்தாய்! போய் வானர ராஜனிடம் தெரியப் படுத்துவாய்! ராமச்சந்திரனுடைய துயரத்தால் தம்பி லக்ஷ்மணன் மிக வருத்தத்துடன் அரண்மனை வாயிலில் அரசனைப் பார்க்கக் காத்திருக்கிறான் என்று சொல்வாய்!" என்றான்.

அங்கதன் அந்தப்புரம் போய் சுக்ரீவனி .ம் விஷயத்தை மிக வினயமாய்த் தெரிவித்தான்.

ஆனால், கிராம்மிய போகத்தில் மூழ்கியிருந்த சுக்ரீவனுக்கு இன்னும் மயக்கம் தெளியவில்லை. இதைக் கண்டு அங்கதன் மிகவும் வருத்தப்பட்டான். அந்தரங்க மந்திரிகளுடன் என்ன செய்வது என்று ஆலோசித்தான்.

ஹனுமான் உள்பட சில மந்திரிகள் உள்ளே சென்று, சுக்ரீவனுக்கு விஷயங்களை நன்றாக எடுத்துக்காட்டி, அவன் புத்தி தெளிவடையச் செய்தார்கள்.

"நான் ஒரு குற்றமும் செய்யவில்லையே! என் நண்பர்களாகிய ராம லக்ஷ்மணர்களுக்கு என்மேல் என்ன கோபம்? யாரோ விரோதிகள் கோள் சொல்லி அவர்களுடைய மனத்தைக் கெடுத்திருக்கவேண்டும்" என்றான் சுக்ரீவன்.

ஹனுமான், "அரசனே, நான் சொல்லக் கடமைப் பட்டவன். சொல்லுகிறேன். கோபித்துக் கொள்ளக் கூடாது. ராமனுக்கு நாம் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றாமல் தாமதம் செய்துவிட்டோம். ராமச்சத்திரனுடைய துயரத்தை நாம் மறந்துவிட்டோம். இது நமக்கு அபாயமாக முடியும். ஆனபடியால் செய்ய வேண்டியதைச் செய்வீர். லக்ஷ்மணனிடம் மன்னிப்புக் கேட்டு, இனி தாமதப் படுத்தாமல் ராமனுக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுவீர்" என்றான்.

இதன் மேல் சுக்ரீவன் லட்சுமணனை அழைத்து வரச் சொன்னான்.

லட்சுமணன் சென்றான். கிஷ்கிந்தையின் அழகையும் உன்னத நாகரிக நிலையையும் பார்த்து வியந்தான். அழகிய தெருக்களின் வழி சென்று, சுக்ரீவனுடைய அந்தப்புரத்துக்கு வெளியே நின்றான். உள்ளிருந்து மகிழ்ச்சி ஓசைகளும் ஆட்டமும் பாட்டும் கேட்டு, இவர்கள் தங்கள் கடமையை

முற்றிலும் மறந்து விட்டு, இப்படிப் போகத்தில் மூழ்கியிருக்கிறார்களே என்று அவன் கோபம் அதிகமாயிற்று. ஆயினும் ஸ்திரீகள் நிறைந்து கிடக்கும் அந்த இடத்துக்குள் போகக் கூச்சப்பட்டுத் தூர ஒரு மூலையில் நின்று, வில்லின் நாணை இழுத்து ஒலியெழுப்பினான்.

அந்த ஒலி கிஷ்கிந்தா நகரத்தை நடுங்கச் செய்தது. நாண் ஓசையைக் கேட்டதும் சுக்ரீவன் பயந்து எழுந்து 'இளைய ராஜகுமாரன் உண்மையில் ஏதோ கோபமாக வந்திருக்கிறான்' என்று அபாயத்தை உணர்ந்துகொண்டு, தாரையைக் கேட்டுக் கொண்டான், அவளை முன்னதாகச் சென்று லட்சுமணனைச் சமாதானப்படுத்தும்படி.

* * *

தாரை லக்ஷ்மணனிடம் சென்றாள். அழகிலும், உலக விஷயங்களைப் பற்றிய சாமர்த்தியத்திலும், பேச்சு நயத்திலும் அவளுக்குச் சமானம் யாருமில்லை. அவள் லட்சுமணனுக்குச் சொன்னாள்.

"வெகு நாட்கள் தரித்திரத்தையும் பகைவன் தொந்தரவையும் பொறுத்துக் கஷ்டப்பட்ட சுக்ரீவன், நீங்கள் சம்பாதித்துக் கொடுத்த ராஜ்ய சுகங்களை அனுபவித்து வருகிறான். போகத்தில் புத்தி மயங்கி விட்டான். அவன்மேல் கோபம் கொள்ளலாகாது. எல்லாம் தெரிந்த நீங்கள் பொறுமை யிழக்கலாகாது. மதுபானத்திலும் பிராக்ருத போக மயக்கத்திலும் மூழ்கிய சுக்ரீவனைப் பூரண அறிவைப் பெற்ற நீங்கள் மன்னிக்க வேண்டும். அவன் உங்களுக்குச் செய்ய வேண்டியதை மறந்துவிடவில்லை. பல இடங்களிலுள்ள நம்முடைய வீரர்களையெல்லாம் வந்து சேர உத்தரவு பிறப்பித்திருக்கிறான். அவர்கள் இன்றோ நாளையோ வந்து விடுவார்கள். பிறகு சீதையைத் தேடும் வேலையும் ராவணனை எதிர்த்து வெற்றி பெறும் வேலையும்

நடைபெறும். சந்தேகப்பட வேண்டாம். அரசனைப் பார்க்க உள்ளே வரலாம்" என்று அழைத்துச் சென்றாள்.

லக்ஷ்மணன் கோபம் தணிந்து உள்ளே சென்றான்.

கோபம் தணிந்த நிலையில் வந்த லக்ஷ்மணனைப் பார்த்து, சுக்ரீவன் மிகச் சந்தோஷப்பட்டு ஆசனத்திலிருந்து இறங்கி வணங்கினான்.

"நான் எந்தக் குற்றம் செய்திருந்தாலும் மன்னிக்க வேண்டும். ராமனுடைய சினேகத்தாலும், வீரத்தாலும் அல்லவா நான் ராஜ்ய பதவியை அடைந்தேன். ராமன் செய்த உபகாரத்தை நான் மறப்பேனா? ராமனுடைய பராக்கிரமத்தை நான் அறிந்தவன் அல்லவா! என் துணையே இல்லாமல் பகைவர்களை நாசம் செய்யும் பலம் அவருக்கு உண்டு என்பது எனக்குத் தெரியும். நான் சேனைகளுடன் அவரைப் பின்பற்றிச் செல்வேன். அவ்வளவே. நிச்சயமாக ராவணன் அழிவான். சீதையைத் தேடுவதற்கு ஏற்பாடுகள் உடனே செய்யப்படும். நான் செய்த தாமதத்தை மன்னிப்பீர்களாக!" என்று சுக்ரீவன் லக்ஷ்மணனிடம் சொன்னான்.

இதைக் கேட்ட லக்ஷ்மணன் மகிழ்ச்சி அடைந்தான்.

"உன்னைப் போன்ற தீரன், ராமனைத் தவிர வேறு யாருமில்லை. ரிச்யமுகம் வந்து ராமனைக் கண்டு அவன் துயரத்தைத் தணிக்கும் வார்த்தைகளைச் சொல்வாயாக" என்று லக்ஷ்மணன் சுக்ரீவனுக்குச் சொன்னான்.

ஒரே சிவிகையில் சுக்ரீவனும் லக்ஷ்மணனும் ஏறிச் சென்றார்கள். ஏற்கனவே செய்யப்பட்ட ஏற்பாடுகளையெல்லாம் ராமனுக்குச் சொல்லி அவனைத் திருப்திப்படுத்தினார்கள்.

ராமன் சந்தோஷமாகப் பேசினான்:

"உன்னைப் போன்ற நண்பன் உலகத்தில் வேறொருவனில்லை. மேகங்கள் மழை பெய்வதைப் போலும், சூரியன் இருட்டை நீக்குவதைப்போலும், சந்திரன் மக்கள் உள்ளத்தைக் குளிரச் செய்வதைப் போலும், யாருடைய ஏவுதலுமில்லாமல் உதவுவது உண்மைநண்பனுடையசுபாவம். உன் நட்பை நான் சம்பாதித்தது என் பாக்கியம். இனி ராவணன் அவன் குலத்துடன் நிர்மூலமாவது நிச்சயம்."

இவ்வாறு ராமன் தன் நன்றியையும் மகிழ்ச்சியையும் சுக்ரீவனிடம் சொல்லிக்கொண்டிருக்கும் போதே, பெருங்கூட்டமாக வானர வீரர்கள் தத்தம் சேனைகளுடன் சுக்ரீவன் அனுப்பியிருந்த உத்தரவின்படி பல்வேறு காடுகள், மலைகள், சமுத்திரக் கரைகளிலிருந்து வந்து சேர்ந்துவிட்டார்கள். அவர்கள் கிளப்பிய தூசியால் ஆகாயம் மறைந்து இருள் மூடிவிட்டது.

பல்வேறு வடிவமும் நிறமும் கொண்ட வானரர்களும், கரடிகளும் கோடிக்கணக்கில் குழுமி விட்டார்கள். இந்த மாபெரும் சேனைக்குச் சொல்ல வேண்டியதைத் தகுந்தபடி சொல்லி, அவரவர்களுக்குத் தற்காலிகமாக இருக்குமிடங் களை சுக்ரீவன் நியமித்தான்.

பிறகு யோசித்துச் சேனாதிபதிகளை அவரவர்களுக்குச் சேர்ந்த வானரக் கூட்டங்களோடு எட்டுத் திக்குகளுக்கும் சென்று சீதையைத் தேட உத்தரவிட்டான்.

இவ்விடத்தில் ஒரு விஷயத்தை எடுத்துக் காட்டலாம். கம்பராமாயணத்தில் தாரையின் குணத்துக்குக் களங்கமோ குறையோ ஏதுமில்லாமல், வாலி இறந்தபின் அவளை விரதம் காத்த கற்பரசியாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. வால்மீகி ராமாயணத்தில் அப்படியில்லை. வாலி இறந்தபின் சுக்ரீவன் வசத்தில் ராஜ்யாதிகாரத்துடன், தாரை உள்பட, அந்தப் புரம் முழுவதும் சேர்ந்துவிட்டதாக வைத்துக்கொண்டு விஷயங்கள் சொல்லப்படுகின்றன. சுக்ரீவன் கிராம்மிய சுக

பரவசனாகிப் போய், மதுபானத்திலும் மூழ்கி ராமகாரியத்தை மறந்து கிடந்தபோது, தாராதேவியையும் அதில் சேர்த்தே குறிப்பிடப்பட்டிருக்கிறது.

பழைய ராஜகுலச் சம்பிரதாயத்திலும் வேறு குலங்களிலும், அண்ணன் இறந்தபின் புருஷனையிழந்த அண்ணன் மனைவியைக் குலத்துக்கு எஜமானனான தம்பி, தன் மனைவியாகச் சேர்த்துக் கொள்ளும் வழக்கம் இருந்து வந்தது. அது அந்தக் காலத்து ஆசாரம். ஒரு காலத்து வழக்கத்தின் நன்மை தீமைகளை இன்னொரு யுகத்தில் ஆராய்ந்து உணர்வது கடினம். அதற்கு விசால கற்பனா சக்தி வேண்டும்.

இந்தக் காலத்து சூழ்நிலைகளைக் கொண்டு ஆராய்ந்தாலும் ஒன்று வெளிப்படை. புருஷனில்லாத ஸ்திரீ ஒரு எஜமானனிடம் நெருங்கிப் பழகும் அவசியம் ஏற்பட்டால், அந்த ஸ்திரீயைப் பற்றி மக்களின் வாயை அடக்குவது கஷ்டம். விவாகம் செய்துகொண்டுவிட்டால் இந்த அபாயமில்லை.

தவிர வால்மீகி முனிவருடைய சித்திரத்தை வைத்துக் கொண்டாலும் நாம் தாரை பேரில் குற்றம் சாட்டமுடியுமா? அவள் மகா சாமர்த்தியசாலி; ராஜநீதியும் உலகப் போக்கும் நன்றாக அறிந்தவள்; வரப்போகும் சுகதுக்கங்களை முந்தியே தெரிந்து கொள்ளும் சக்தியைப் பெற்றவள். வாலி இறந்தபின் அங்கதனைப் பற்றியே அவளுடைய பெருங்கவலை. இந்தக் காரணத்தினாலேதான் அவள் சுக்ரீவனுக்கு அடங்கிப் போனாள் என்று வைத்துக் கொள்ளவேண்டும்.

நம்முடைய இக்காலத்து நடவடிக்கைகளைத்தான் பார்ப்போம். மனைவியை இழந்து, அழுதுபுரண்டு அந்தரங்க சுத்தியுடன் துக்கப்பட்ட ஆண் மக்கள் எத்தனையோ பேர் மறுபடி விவாகம் செய்து கொள்வதைப் பார்க்கிறோமே! முன் காதலித்த மனைவியின் நினைவை நன்றாகக் குறைவின்றிக்

கவுரவித்தே இப்படிச் செய்கிறதையும் பார்க்கிறோம். யோக்கியமாக இருப்பதையும் பார்க்கிறோம். அதில் யாதொரு தவறும் காண்பதில்லை. ஆண்மக்களின் நடவடிக்கைக்கு ஒரு தருமம். ஸ்திரீகளுக்கு வேறு தருமமா? தாரையை ஏன் குற்றம் சொல்லவேண்டும்? கற்பு என்பது இரு பாலருக்கும் ஒன்றே.

வாலி இறந்த பின் தாரை அந்தப்புரத்துக்கு எஜமானித் தாயாக விளங்கி, சுக்ரீவனையும் அங்கதனையும் தன்னுடைய நுட்பமான புத்தியும் அறிவும் கொண்டு நன்றாகக் காப்பாற்றி வந்தாள். இது வால்மீகி ராமாயணத்தில் காணும் தாரை. கம்பருடைய தாரையோ விரதம் காத்துவரும் களங்கமற்ற விதவையாகவும், ராஜ மாதாவாகவும் விளங்குகிறாள். இது நம்முடைய மனத்துக்கு மிகப் பிடித்தமான புனித சித்திரமாக இருக்கிறது. ஆனால் மற்றொன்றும் உலகானுபவத்துக்குப் பொருந்தியதாகத்தான் இருக்கிறது.

வால்மீகி ராமாயணத்திலும் பின்னால் ஓர் இடத்தில் கம்பருடைய சித்திரத்துக்கு நிரம்ப இடம் தரும் வழியில் சொல்லப்பட்டிருக்கிறது. (சுந்தரகாண்டம் 13:28) லங்கையில் கூர்ந்து தேடிச் சீதையைக் காணவில்லை என்று துக்கத்தில் மூழ்கி, இனி என்ன செய்யலாம்? கிஷ்கிந்தைக்குத் திரும்பிப் போய் முயற்சி எல்லாம் வீணாயிற்று என்று தெரியப்படுத்தினால், என்னவெல்லாம் நேரிடுமோ என்று ஹனுமான் ஆராய்கிறான். அங்கே சொல்லப்படுகிறது வால்மீகி ராமாயணத்திலேயே, "சீதையைக் காணாமல் திரும்பினேனானால் சுக்ரீவன் இறப்பான்; புருஷன் இறந்த பின் ருமை உயிர் வைத்திருக்க மாட்டாள். வாலி கொல்லப்பட்ட காலத்திலிருந்து துக்கத்தில் மூழ்கித் துரும்பாக இளைத்துப் போய் உயிரைத் துறக்கவே விரும்பிவரும் வானர அரசி தாரையும் உயிரை நீப்பாள்."

இவ்வாறு வால்மீகி இராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது, கம்பருடைய சித்திரத்துக்கு ஒத்து வருகிறது. இதை வைத்தே கம்பர் தம் ஒப்பற்ற கற்பனா சக்தியைச் செலுத்தி, முழுச்சித்திரத்தையும் அதற்குத் தகுந்தவாறு உண்டாக்கிக் கொண்டு சில விஷயங்களை மாற்றிச் சரிப் படுத்திப் பாடியிருக்கிறார்.

## 61. வானரர்கள் தேடிச் சென்றார்கள்.

"இதோ பார்! ராமனே, இந்தக் கோடிக்கணக்கான வானரர்களடங்கிய சேனை முழுவதும் உன்னுடைய சேனை. இந்த அபூர்வ பலம் கொண்ட வானரர்கள் அனைவரும் உன்னுடைய ஆட்கள். உன் பணியைக் குறைவறச் செய்யும் ஆசையும் பலமும் பெற்றவர்கள். நீ இடும் ஆணையைச் செய்து முடிப்பார்கள். இந்தப் பெருஞ்சேனையை உன்னுடைய பொருளாகவே கருதி, என்ன வேண்டுமோ அதைச் செய்ய உத்தரவிடுவாய்" என்றான் சுக்ரீவன்.

இதைக் கேட்ட ராமன் மகிழ்ச்சிப் பரவசனாகிச் சுக்ரீவனை அணைத்துக் கட்டிக் கொண்டான்.

"முதலில் கண்டறிய வேண்டியது சீதை உயிரோடிருக்கிறாளா, எங்கே இருக்கிறாள், ராவணன் எங்கே இருக்கிறான் என்பதே. பிறகு செய்ய வேண்டியதைச் செய்வோம். இந்தச் சேனைக்கு உத்தரவு இட வேண்டியவன் நீதான். நானாவது லக்ஷ்மணனாவது அல்ல. அரசன் நீ. தவிர நீதான் எல்லாம் அறிந்து செய்ய வேண்டியதைச் செய்யத் தெரிந்தவன். உன்னைப் போன்ற ஒரு நண்பன், தம்பி லக்ஷ்மணனோடு எனக்குக் கிடைத்த பாக்கியத்தை நான் என்னவென்று சொல்வேன்" என்றான்.

பிறகு சுக்ரீவன் தன் சேனாதிபதிகளுக்குக் கண்டிப்பாக ஆணையிட்டான். நான்கு திக்குகளுக்கும் தன் பெருஞ் சேனையையும் தலைவர்களையும் பிரித்து, ஓர் இடம்

விடாமல் நன்றாகப் பார்த்துச் சீதையைத் தேடும்படி கடுமையாக உத்தரவிட்டு அனுப்பினான்.

வானரத் தலைவர்கள் அனைவரையும் பல திசைகளுக்கு அனுப்பித் தேடச் சொன்னபின், ஹனுமானைத் தனியாகக் கூப்பிட்டுச் சுக்ரீவன் சொன்னான்.

"வாயு குமாரனே! நீயே இந்தக் காரியத்தை முடித்துக் கொடுக்க கூடியவன். உன் தந்தையின் வேகமும் தேஜஸும் நீ பெற்றிருக்கிறாய். உனக்குச் சமமாக வேறு யாரும் உலகில் இல்லை. உன்னைத்தான் நான் இந்தப் பெருங்காரியத்தில் நம்பியிருக்கிறேன். பலம், புத்தி, பராக்கிரமம், உபாயம், அறிவு-அனைத்தும் உன்னிடமிருக்கிறது. உனதே இந்தப் பொறுப்பு" என்றான்.

ஹனுமானால் காரியம் சித்தியாகும் என்று ராமச்சந்திரனும் உணர்ந்தான். எந்த இடையூறு நேர்ந்தாலும் இவன் அதற்குப் பரிகாரம் கண்டு, செய்ய வேண்டியதைச் செய்து முடிப்பான் என்று உணர்ந்தான். "இதை வைத்துக்கொள்வாய். உன்னால் சீதை கண்டுபிடிக்கப்படுவாள். அவளுக்கு இதைக் காட்டினாயானால் நீ என் தூதன் என்று அவளுக்கு உறுதியாகும். சீதையை நான் மறுபடி அடையும்படி செய்வாயாக!" என்று அன்போடும் பூரண நம்பிக்கையுடனும் சொல்லி, ராமன் தன் சொந்த மோதிரத்தை ஹனுமானிடம் தந்தான். சீதைக்காக வாடித் துயருற்ற ராமன் ஆஞ்சநேயனுக்கு மோதிரத்தைத் தந்த காட்சியை யார் எழுதிக் காட்ட முடியும்? பூரண நம்பிக்கையுடன் தந்தான். வாயு புத்திரனும் மோதிரத்தைப் பக்தியுடன் வாங்கிக் கொண்டு, ராமச்சந்திரனை வணங்கி விடைபெற்றுக் கொண்டு சென்றான்.

சுக்ரீவன் தன் வானரப்படைக்கு மிகக் கண்டிப்பான ஆணையிட்டான். "எப்படியாவது சீதையைக் கண்டுபிடிக்க

வேண்டும். எங்கே ஒளித்து வைக்கப்பட்டிருந்தாலும் உங்களால் கண்டுபிடிக்க முடியும். ஒரு மாதத்துக்குள் கட்டாயம் திரும்பி வந்து என்னிடம் செய்தி சொல்ல வேண்டும்" என்று ஆணையிட்டு அனுப்பினான். அவர்களும் புற்றிலிருந்து ஈசல் கிளம்புவதுபோல் கிளம்பி, நான்கு திக்கிலும் சென்றார்கள்.

சதபலி என்கிற வானர வீரன் தன் சேனையுடன் வடக்கே சென்றான். வினதன் அவ்வாறே கிழக்கு நோக்கிச் சென்றான். சுஷேணன் மேற்கே தேடப் போனான். ஆஞ்சநேயன், அங்கதன், தாரன் தெற்கு நோக்கிச் சென்றார்கள்.

எல்லாரும் மிக உற்சாகமாகச் சென்றார்கள். எங்கிருந்தாலும் இந்தத் திருடன் ராவணனைக் கொன்று, சீதையை மீட்டுக்கொண்டு வருவோம் என்று ஒருவரை ஒருவர் முந்திக் கொண்டு உற்சாகமாகக் கோஷம் செய்து கொண்டு சென்றார்கள்.

"இந்தப் பூமி முழுவதும் நேரில் கண்டபடி ஒவ்வொரு திக்கிலிருக்கும் பிரதேசத்தையும் நீ உன் படை வீரர்களுக்கு விளக்கிச் சொன்னாயே, இவ்வளவையும் நீ எப்படிக் கண்டாய்? எப்போது கண்டாய்?" என்று ராமன் சுக்ரீவனைக் கேட்டான்.

"ஐயனே! நான் வாலியால் திரும்பத் திரும்பத் துரத்தியடிக்கப்பட்டேனல்லவா? நான் எங்கே சென்றாலும் அவன் என்னைத் துரத்திக்கொண்டு வருவான். உலகம் முழுவதும் நான் இப்படி அலைந்தேனல்லவா? அந்தக் காரணத்தால் எனக்கு இந்தப் பூமண்டலத்தில் ஒவ்வொரு பாகமும் நேரில் காணச் சந்தர்ப்பம் ஏற்பட்டது. பிறகு இந்த மதங்கரிஷி ஆசிரம பூமியைப் பற்றி அறிந்தேன். இந்தப் பிரதேசத்தில் வாலி நுழைந்தானானால் ரிஷியின் சாபத்தால் அவன் தலை வெடித்துப் போகும். அந்தக் காரணத்தால்

அவன் இந்த இடம் வரமாட்டான். வந்தாலும் எனக்கு அபாயமில்லையென்றறிந்ததும், இவ்விடம் ஒளிந்து பிழைத்தேன்" என்றான்.

வானரப் படைகளில் வடக்கும் கிழக்கும் மேற்கும் போனவர்கள் ஒரு மாதம் தேடிப் பார்த்துவிட்டு, சீதையைக் காணாமல் திரும்பி வந்து வானர ராஜனிடம் விஷயத்தைச் சொல்லி வணங்கினார்கள்.

"காடுகள், மலைகள், ஆறுகள், நகரங்கள் எல்லாம் ஜாக்கிரதையாகத் தேடிப் பார்த்து விட்டோம். எங்கும் காணவில்லை. ஜானகியின் இருப்பிடத்தைக் கண்டுபிடித்துத் திரும்பிவர எங்களுக்குப் பாக்கியமில்லாமல், தெற்கே போயிருக்கும் ஹனுமானுக்கே அந்த அதிர்ஷ்டம் போலிருக்கிறது. அரக்கன் சீதையைத் தூக்கிப் போனதும் தென்திசை நோக்கியே அல்லவா? ஹனுமான் இன்னும் திரும்பி வரவில்லை!" என்றார்கள்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த ராமன், வானரர்கள் செய்து வந்த முயற்சிகளைப் பற்றித் திருப்தியடைந்தான்.

* * *

ஹனுமானும் அங்கதனும் தெற்கே தேடிக் கொண்டு சென்றார்கள். விந்திய மலைக் குகைகளிலும் வனங்களிலும் புகுந்து எல்லா இடங்களையும் தேடிப் பார்த்தார்கள். பிறகு ஒரு பெரும் பாலைவனத்தைக் கண்டார்கள். அவ்விடம் ஒரு ரிஷி தவம் செய்து கொண்டிருந்தார். அவருடைய சாபத்தால் அவ்விடம் ஒரு மரமும் செடியும் மிருகங்களும் பக்ஷிகளுமில்லாமல் சூன்யமாக இருந்தது. அங்கேயும் தேடிப் பார்த்துவிட்டுப் பிறகு தென்பிரதேசம் சென்றார்கள். அங்கே ஒரு பெரிய அசுரனைக் கண்டார்கள். மகா கொடியவனான அந்த அசுரன் வானரர்கள் கூட்டமாக வருவதைக் கண்டு, நல்ல போஜனம் கிடைத்தது என்று சந்தோஷமாக அவர்களைப் பிடிக்கத் தாவினான்.

தங்களை எதிர்த்த அரக்கன் ராவணனாகத்தான் இருக்க வேண்டும் என்று எண்ணினார்கள். அங்கதன் அவன்மேல் பாய்ந்து ஓர் அறை அறைந்தான். அந்த அடியைத் தாங்க மாட்டாமல் அரக்கன் ரத்தம் கக்கிக்கொண்டு கீழே ஒரு மலைபோல் விழுந்தான். வானரர்கள் ராவணன் செத்தான் என்று மகிழ்ச்சி அடைந்து, பிறகு காடு முழுவதும் சீதையைத் தேடிப் பார்த்தார்கள். சீதையைப்பற்றிய ஒரு அறிகுறியும் காணவில்லை. பிறகு வேறு இடங்களைத் தேடிச் சென்றார்கள்.

பல சமயங்களில் எவ்வளவு தேடியும் பயன் காணவில்லையே என்று உற்சாகம் இழந்து வருத்தப்பட்டு உட்காருவார்கள். பிறகு அங்கதன் சுத்தமானன் முதலியோர் தைரியம் சொல்லி மறுபடியும் தேடிச் செல்வார்கள். இப்படி பல நாட்கள் கழிந்துவிட்டன. சீதையைக் காணவில்லையே! சுக்ரீவனோ கடுமையான தண்டனை விதித்து விடுவானே! என்ன செய்வது என்று தெற்கு நோக்கிப் போன வானரர்கள் வெகுதூரம் தேடிக்கொண்டே சென்றார்கள்.

பசியாலும் தாகத்தாலும் வாட்டப்பட்ட இந்த வானரப் படையினர் ஒரு பெரிய குகையைக் கண்டார்கள். அந்தக் குகையிலிருந்து அநேக வகைப் பறவைகள் சந்தோஷமாக வெளிவந்து கொண்டிருந்தன. உடல் முழுவதும் தாமரைப் புஷ்பத்து மகரந்தப்பொடி பூசிய நீர்ப்பறவைகளைக் கண்டு, நல்ல வாசனையோடு காற்று வீசுவதைப் பார்த்து, "இந்த குகைக்குள் தண்ணீர் இருக்கும். உள்ளே புகுவோம்" என்று தாகத்தால் மிக வருந்திய வானரர்கள் புகுந்தார்கள்.

இருள் மூடியிருந்த அந்த குகைக்குள் வானரர்கள் ஒருவர் கையை ஒருவர் பிடித்துக்கொண்டு மெள்ள வெகு தூரம் சென்றார்கள். வானரர்களில் சிலர் மிகக் களைத்துப் போய், "ஐயோ! தாகம், தாகம்" என்று கூவிக் கொண்டே

சென்றார்கள். வெகுதூரம் இப்படி இருட்டிலேயே சென்ற பிறகு, திடீர் என்று வெளிச்சம் தோன்றி மிக ரம்மியமான வனத்தைக் கண்டார்கள். போகப் போக மிக அதிசயமான மாளிகைகளும் எல்லாவிதச் செல்வமும் நிறைந்த நகரத்தைக் கண்டார்கள். தங்க மயமாக அற்புத அழகோடு தெருக்களும் மாளிகைகளும் சொல்ல முடியாத சௌந்தர்யம் கொண்டு பிரகாசித்தன.

அங்கே ஓரிடத்தில் மரவுரி தரித்து, மான்தோல் விரிப்பு மேல் உட்கார்ந்திருந்த ஒரு வயோதிக ஸ்திரீ தபஸ்வினியைக் கண்டார்கள். அவள் முகத்தில் திவ்விய தேஜஸைப் பார்த்து வானரர்கள் நடுங்கினார்கள்.

ஹனுமான் தன்னைத் தைரியப்படுத்திக் கொண்டு, தபஸ்வினியை வணங்கிப் பேசலானான்: "தாயே, நமஸ்காரம், தாங்கள் யார்? இந்த விசித்திர குகையைப் பற்றியும், தங்களைப் பற்றியும் சொல்லவேண்டும்! நாங்கள் மிகப் பசியும் தாகமும் களைப்புமாக இந்த இருள் மூடிய குகைக்குள் புகுந்தோம். தண்ணீர் கிடைக்கும் என்று ஆசைப்பட்டு உள்ளே நுழைந்தோம். இங்கே தங்கமயமான விசித்திர மாடமாளிகைகளும், மரங்களும், குளங்களும் பார்த்து எங்களுக்குப் பயம் உண்டாகிறது. விஷயத்தைச் சொல்லி எங்கள் பயத்தைப் போக்க வேண்டுகிறேன்" என்றான்.

"வானரர்களே, நீங்கள் இந்த இருள் மூடிய குகை வாயிலை எப்படிக் கண்டு, எவ்வாறு உள்ளே பிரவேசித்தீர்கள்? இங்கே உங்களுக்கு வேண்டிய தண்ணீரும் ஆகாரமும் இருக்கின்றன. பசியும் களைப்பும் தீர்த்துக் கொள்ளுங்கள். இந்த அழகிய அரண்மனை வானவர்களுடைய விசுவகர்மாவான மயன் நிர்மாணித்தது. அவன் சுக்ராச்சாரியாரிடம் நிர்மாண வேலையை நன்றாகக் கற்றவன். அவன் இங்கே வெகு காலமிருந்தான். பிறகு அவன்மேல் இந்திரன் பகை கொண்டு அவனை வதம் செய்துவிட்டான். அதன்பின் இந்தப் பொன்மயமான

அரண்மனையை இந்திரன், ஹேமை என்கிற என் தோழி அப்சரஸுக்குக் கொடுத்தான். இந்த மாளிகைகள், உத்யான வனங்கள் முதலியவற்றுக்கு அவளே உரியவள். அவள் இப்போது தேவலோகம் சென்றிருக்கிறாள். உங்கள் காரியம் என்ன? ஏன் இந்த மாதிரி காடுகளில் திரிந்து களைப் படைந்தீர்கள்? பசியும் தாகமும் களைப்பும் தீர்த்துக் கொண்டு விவரமாகச் சொல்லுங்கள்" என்று அவர்களுக்கு ஆகாரமும் பானமும் வேண்டிய அளவு அமைத்துக் கொடுத்தாள்.

எல்லாரும் நீர் அருந்தி, நன்றாகப் புசித்து மகிழ்ச்சியடைந்தார்கள். பிறகு ஹனுமான் வணக்கத்துடன் துபஸ்வினியம்மைக்குக் காரியத்தை எடுத்துச் சொன்னான்.

தசரத குமாரன் ராமன் பூமண்டலத்துக்கு அதிபதியானவன். அவன் தன் தம்பியுடனும் மனைவியுடனும் ஒரு காரணமாக ராஜ்ய பதவியைவிட்டு வனவாசம் செய்து கொண்டிருந்தான். அப்போது அரக்கன் ஒருவன் ராமனு டைய மனைவி சீதையைத் தூக்கிக் கொண்டு போய் விட்டான். அவளைத் தேடிக் கொண்டு ராமனும் லக்ஷ்மணனும் வந்தார்கள். வானர ராஜன் சுக்ரீவன் அவர்களுக்கு நண்பனாகி விட்டான். ராமனுக்காகச் சீதையைத் தேடும்படி எங்களை வானர ராஜன் ஆணையிட் டனுப்பினான். அவன் இட்ட காலவரை, இந்த குகையில் நாங்கள் வழி தெரியாமல் அலைந்து கொண்டிருந்த காலத்தில் தாண்டி விட்டது. இப்போது எங்களுக்கு ஒன்றும் தோன்றவில்லை. எங்களுடைய அரசன் சுக்ரீவன் கண்டிப்புக் காரன். அவன் இட்ட வேலையைக் குறித்த காலத்தில் செய்யவில்லையென்கிற காரணத்தால் எங்களைக் கொன்று விடுவான்" என்று ஹனுமான் சொன்னான்.

துபஸ்வினியம்மை இதைக் கேட்டு, "நீங்கள் இப்போது வெளியில் போக முடியாதே. இந்தக் குகையின் சக்தி

உங்களுக்குத் தெரியவில்லை! இதில் பிரவேசித்த அன்னியர்கள் மறுபடி வெளியில் உயிருடன் செல்ல முடியாது, மாண்டு போவார்கள். உங்கள் காரியமோ பெருங்காரியம். ஆனபடியால் கண்களை மூடிக் கொள்ளுங்கள்; நான் என்னுடைய தவ வலிமையால் உங்களை வெளியேற்றுகிறேன்" என்றாள்.

அவர்கள் அவ்வாறே கண்களை மூடிக் கொண்டார்கள். உடனே தபஸ்வினியம்மையின் தபோ பலத்தினால் கடற்கரையில் போய்ச் சேர்ந்து விட்டார்கள்.

## 62. சம்பாதி

கடற்கரையைச் சேர்ந்ததும் வானரர்கள் வசந்த காலம் ஆரம்பித்து விட்டது என்பதைக் கண்டார்கள். அங்கதன் பேசலானான்.

"ஐயோ! காலவரை தாண்டிப் போயிற்று. சீதையைக் காணாமல், ஏதொரு துப்பும் அறிந்து கொள்ளாமல் கிஷ்கிந்தைக்குத் திரும்பினோமானால், அரசன் எனக்கு மரண தண்டனை விதிப்பான் என்பது நிச்சயம். என்மேல் சுக்ரீவனுக்கு அன்பு கிடையாது. ராமனுடைய ஆணைக்குப் பயந்தேதான் எனக்கு யுவராஜ்ய பட்டம் தரச் சுக்ரீவன் ஒப்புக் கொண்டானேயொழிய, என்மேல் சிற்றப்பனுக்கு அன்பு கிடையாது. அங்கே போய் உயிர் விடுவதைவிட, இங்கேயே பிராயோபவேசம் செய்து இறப்போம்" என்றான் அங்கதன்.

அங்கதன் சொன்னதே சரி என்றார்கள் பல வானரர்கள். தாரன், "அது சரியல்ல, நாம் ஏன் உயிர் நீக்க வேண்டும்? தபஸ்வி சுயம்பிரபையினுடைய குகைக்குள் மறுபடியும் சென்று அங்கேயே சுகமாக வாழ்வோம். அவ்விடம் நமக்கு வேண்டியதெல்லாம் இருக்கிறது. அங்கே சுக்ரீவனாவது வேறு யாராவது பிரவேசிக்க முடியாது. நாம் சந்தோஷமாக ஆயுள் முழுவதும் காலம் கழிக்கலாம்" என்றான்.

ஹனுமானுக்கு இந்த யோசனை சரியென்று தோன்ற வில்லை.

"இதுவென்ன தகாத பேச்சுப் பேசுகிறாய்? நம்முடைய குடும்பங்களைக் கிஷ்கிந்தையில் விட்டுவிட்டுக் குகைக்குள் உண்டு குடித்துத் தூங்கி உயிர் வைத்துக் கொள்வதில் என்ன சந்தோஷம்? சுக்ரீவனுக்கு அங்கதன் பேரில் துவேஷமில்லை. சுக்ரீவன் மிக நல்லவன். நாம் அவனைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை. உண்மையில் சுக்ரீவனுக்கு நம்பேரில் கோபம் உண்டாகி, நம்மைத் தண்டிக்க எண்ணம் கொண்டா னானால், அந்தக் குகையில் நாம் எப்படி க்ஷேமமாக இருக்க முடியும்? லக்ஷ்மணனுடைய கோபத்தை அந்தக் குகை தாங்குமா? அதைப் பொடிப் பொடியாக்கி நிர்மூலம் செய்து விடுவான். ஆனபடியால் இந்த யோசனையில் நான் ஒன்றும் காணவில்லை. நாம் திரும்பிப்போய், சுக்ரீவனிடம் உள்ள தைச் சொல்லி, அவன் தயவைக் கேட்டு க்ஷேமம் அடையலாம்" என்றான் ஹனுமான்.

"ஹனுமான் சொல்வது சரியல்ல" என்றான் அங்கதன். "சுக்ரீவனுக்கு என்பேரில் கொஞ்சமும் இரக்கம் கிடையாது. என்னை அவன் கொல்வது நிச்சயம். அவன் மகா குரூர சுபா வம் கொண்டவன். வாலியை எப்படிக் கொன்றான், யோசித் துப் பாருங்கள். நான் உயிருடன் இருப்பது அவனுக்குப் பிடிக்கவில்லை. எப்படியாவது ஏதோ காரணம் வைத்து என்னை ஒழிப்பதே அவன் எண்ணம். அவனும் அவன் மக்கள் மாரும் வானர ராஜ்யத்தை அடைந்து இடையூறின்றி வைத்துக் கொண்டு ஆளுவதற்கு, நான் ஒரு தடை என்றே எண்ணுவான். செய்த பிரதிக்ஞையை மறப்பதே அவன் சுபாவம். சீதையைத் தேடித் தருவேன் என்று ராமனுக்குச் சொல்லிவிட்டு, அந்த வாக்குறுதியை மறந்தவன் அல்லவா? பிறகு லக்ஷ்மணனுடைய வில்லுக்குப் பயந்தல்லவா எங்களை அனுப்பினான்? என் தாயோ தன் பர்த்தாவை இழந்து

துக்கப்பட்டும் கஷ்டப்பட்டும் சுக்ரீவனைக் கண்டு பயந்து, அவனுடைய வசத்தில் அடங்கிப் போயிருக்கிறாள். என்மேல் உள்ள பிரியத்தினால் அவள் பிராணனை வைத்திருக்கிறாள். நான் இறந்தேன் என்று அவள் அறிந்தால் உயிரை நீப்பாள். எனக்காகத்தான் அவள் உயிரை வைத்திருக்கிறாள். ஐயோ, நான் என்ன செய்வேன்?"

மறுபடியும், "கிஷ்கிந்தை திரும்பினாலும் என் மரணம் நிச்சயம். இங்கே உயிர் நீப்பதே மேல், பிராயோபவேசம் செய்து உயிர் நீப்பதே நலம்" என்று தீர்மானமாகச் சொல்லித் தரையில் முறைப்படி தருப்பைப் புல் பரப்பி, தெய்வங்களையும் பெரியோர்களையும் வணங்கிவிட்டு, உயிர் நீக்கும் சங்கற்பம் செய்து, கிழக்கு முகம் பார்த்து உட்கார்ந்தான்.

யுவராஜனான அங்கதன் இவ்வாறு பிராயோபவேச விரதம் பூண்டதும் மற்ற வானரர்கள் எல்லாம் "ஓ" என்று கதறியழுது, அவர்களும் அப்படியே உயிர் நீத்துவிட நிச்சயித்து, உபவாச சங்கற்பம் செய்து கிழக்கு நோக்கி உட்கார்ந்தார்கள்.

* * *

'இப்படி நம் கதியாயிற்றே' என்று உட்கார்ந்த வானரர் கூட்டத்தை, கழுகரசனான சம்பாதி, பக்கத்தில் ஒரு மலை மேலிருந்து பார்த்துக் கொண்டிருந்தான். இறகுகள் இழந்து பறக்க முடியாமல் வெகு காலம் பட்டினியால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த சம்பாதி, 'இத்தனை வானரர்கள் ஒரே இடத்தில் இறந்து போகப் போகின்றனர். எனக்கு உணவு சுலபமாகக் கிடைத்து விட்டது' என்று எண்ணிச் சந்தோஷமடைந்தான்.

அப்பொழுது வானரர்கள் மரணத்தை எதிர்பார்த்துத் தங்கள் துக்கத்தை ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டிருந்தார்கள். "கைகேயியினால் அல்லவோ தசரதன் இறந்தான். தசரதன் இறந்து விட்டதால் அல்லவோ ராமன் காட்டில்

இருக்க வேண்டியதாயிற்று. ராமன் காட்டில் இருந்ததா லன்றோ சீதையை ராவணன் தூக்கிப் போனது! வீரனான ஜடாயு சீதைக்காக உயிர் நீத்தான். இன்னும் கொஞ்ச நேரம் ஜடாயு பறவைக்குச் சக்தி இருந்து யுத்தத்தை நடத்தி யிருந்தால், ராம லக்ஷ்மணர்கள் வந்துவிட்டிருப்பார்கள், சீதையை மீட்டிருப்பார்கள். ஆனால், விதி இப்படியெல்லாம் செய்து விட்டது. முடிவில் நாம் மரணமடைய வேண்டிய தாயிற்று." இப்படித் தங்களுடைய துக்கத்தை ஒருவரோ டொருவர் பேசிக் கொண்டும் பிரலாபித்துக் கொண்டும் இருந்தார்கள்.

இதையெல்லாம் கேட்ட சம்பாதி, "என்ன! என் அருமைத் தம்பி ஜடாயு இறந்தானா?" என்று விஷயத்தைச் சரியாகத் தெரிந்து கொள்ள ஆசைப்பட்டான்.

சம்பாதி மிகக் கிழப்பறவை. கருடனும், அருணனும் அண்ணன் தம்பிகள், அண்ணனுக்கு இரண்டு குமாரர்கள் ஜடாயுவும், சம்பாதியும். சிறுவயதில் தாங்கள் பெற்ற அபார சக்தியை அனுபவித்துக்கொண்டு ஒருநாள் ஆகாயத்தில் போட்டி போட்டுக்கொண்டு உயரக் கிளம்பினார்கள். சூரிய னை நெருங்க நெருங்க, வர வர வெப்பம் அதிகரித்து, ஜடாயுவைக் கொளுத்திவிடும் போலிருந்தது. சம்பாதி தன் சிறகுகளை விரித்து ஜடாயுவைக் காப்பாற்றினான். இதனால் ஜடாயு பிழைத்தான். ஆனால் சம்பாதியின் சிறகு எரிந்து போயிற்று. சம்பாதி பறக்க முடியாமல் கீழே மலைமேல் விழுந்தான். அது முதற்கொண்டு பறக்க முடியாததினால் ஒரே பசியினால் வாட்டப்பட்டான். ஆயினும் உயிரிழக்காமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தான்.

"அன்புக்குரிய என் தம்பி ஜடாயுவைப் பற்றித் துக்க சமாசாரம் யார், இங்கே பேசுவது? வானரர்களே! ஜடாயு இறந்தானா? சக்கரவர்த்தி தசரதனுடைய குமாரன் ராமன் ஏன் காட்டுக்குப் போனான்? எப்படி மனைவியை இழந்தான்?

ஜடாயு ராவணனால் கொல்லப்பட்டானா? எனக்கு விவரம் சொல்லுங்கள்!" என்று வருந்திக் கூக்குரலிட்டான்.

வானரர்கள் பிராணனை நீப்பதற்கு உபவாசம் இருக்கவும், அந்த வானரப் பிணங்களைக் கஷ்டமில்லாமல் உணவாக அடைவேன் என்று சிறகு இழந்த கிழக் கழுகு ஆசைப்படவும் ஆரம்பித்த இந்த நிகழ்ச்சியானது, முடிவில் வேறு விதமாக வடிவம் எடுத்தது.

வானரர்கள் எழுந்து சம்பாதியை அணுகி, மெதுவாக அந்தக் கிழப் பறவையைக் கீழே நடத்தி வந்தார்கள். பிறகு விஷயங்களை ஒருவருக்கு ஒருவர் சொல்லி அறிந்தார்கள்.

சம்பாதி தன் கதையைச் சொன்னான். அங்கதன் கிஷ்கிந்தை வரலாற்றைப் பூரணமாகச் சொல்லி, எப்படி ராமனுக்கு உதவலாம் என்று கேட்டான். சம்பாதிக்குத் தன் கண்களின் துரதிருஷ்டிச் சக்தி குறையவில்லை. இலங்கையில் சீதை சிறையிருப்பதைத் தான் இங்கிருந்தே பார்ப்பதாகக் கூறித் தான் காணும் காட்சியை யெல்லாம் விவரமாகச் சொன்னான்.

இலங்கையைப் பற்றியும், ராவணனுடைய ஐசுவரி யத்தைப் பற்றியும், ஜானகி ராக்ஷசிகளின் காவலிலிருப் பதைப் பற்றியும் எல்லாம் கண்டு சொன்னான்.

வானரர்களுக்கு உற்சாகம் உண்டாகி, "சீதையைப் பற்றி அறிந்துவிட்டோம். இனி நமக்குப் பிராண பயமில்லை. ராம காரியம் வெற்றி பெறும்" என்று மகிழ்ச்சிப் பரவசமாகத் துள்ளிக் குதித்தார்கள்.

சம்பாதிக்கு ஏற்பட்ட கஷ்டமும் நீங்கிற்று. "ராம காரியத்தில் நீ உதவுவாய். அப்படி உதவியபோது உன் சிறகுகள் மறுபடி முளைக்கும்" என்று தான் பெற்ற வரம் அப்போது பலிக்கலாயிற்று. பேச்சு நடக்கும்போதே இளஞ் சிறகுகள் அதன் உடலில் முளைக்க ஆரம்பித்து, சம்பாதி மிக அழகுடன் பிரகாசித்தான்.

சிறகுகளை மறுபடி அடைந்த சம்பாதி, ஜடாயுவுக்குச் சமுத்திரத்தில் ஜலக் கிரியையும் செய்து திருப்தியடைந்தான்.

## 63. வாயு புத்திரன்

சீதை சிறையில் கிடக்கும் இடமும், அரக்கன் இருக்கும் தேசமும் சம்பாதி சொல்ல, வானரர்கள் தெரிந்து கொண்டார்கள். ஆயினும் சுக்ரீவனிடம் போய்ச் சொல்லுவதற்கு இது போதாதல்லவா? தாங்களே பார்த்தறியாமல் பிறர் சொன்னதை எடுத்துக் கொண்டு, தேடும் காரியத்தை நிறுத்தி விடுவது சரியல்ல. நேரில் கண்டு சம்பாதி சொன்னதெல்லாம் உண்மையென்று காணவேண்டும். இதன் பின்னால்தானே ராம காரியத்தைச் செய்து முடிக்க முடியும்? கடலைத் தாண்டினால் அல்லவா நேரில் பார்க்க முடியும்? இதற்கென்ன செய்வது என்று தெரியாமல் அங்கதன் திகைத்தான்.

கடலோரம் சென்ற வானரர்கள், "இந்தக் கடலை நாம் எவ்வாறு தாண்டி, லங்கைக்குள் பிரவேசித்துச் சீதையைக் கண்டு திரும்புவது?" என்று மறுபடியும் கவலையிலும் பயத்திலும் மூழ்கினார்கள்.

அங்கதன் சொன்னான்: "எந்தக் காரியம் எப்படிச் சாதிக்க வேண்டியதானாலும் தைரியத்தை இழக்கலாகாது. தைரியமே முயற்சிக்கு அடிப்படை. அதைரியம் எவ்வித முயற்சிக்கும் சத்ருவாகும்."

பிறகு தன் படையிலுள்ள வீரர்களையெல்லாம் அவரவர்களுடைய தாவும் சக்தியைப்பற்றி உண்மையைச் சொல்லும்படி வேண்டினான்.

"வானர வீரர்களே! உங்களுடைய சாமர்த்தியத்தைப் பற்றிச் சுக்ரீவன் சொல்லக் கேட்டிருக்கிறேன். நீங்கள் ஒவ்வொருவரும் தேஜஸும் வீரியமும் நிறைந்தவர்கள் என்பதில் சந்தேகமில்லை. இந்தக் காரியத்தை நாம் முடித்தே தீரவேண்டும். சீதையைக் காணாமல் நாம் ஒரு நாளும்

கிஷ்கிந்தைக்குத் திரும்ப முடியாது. அரசனால் அவமானத்தோடு கொல்லப்படுவதைவிட, இவ்விடமே நாம் உயிர் நீப்பது நலம். ஆனபடியால், சொல்லுங்கள், ஒவ்வொருவராக. எவ்வளவு தூரம் தாண்டும் உறுதியும் நம்பிக்கையும் உங்களுக்கு இருக்கிறது?"

* * *

கஜன், "நான் பத்து யோசனை தாண்டுவேன்" என்று அடக்கத்துடன் சொன்னான். கவாக்ஷன் "நான் இருபது யோசனை தாண்டுவேன்" என்றான்.

"நான் முப்பது யோசனை தாண்டுவேன்" என்றான் மற்றொரு வானரத் தலைவன்.

இவ்வாறே பலர் முன் வந்தார்கள். ஒருவர்மேல் ஒருவர் உயர்ந்து கொண்டே போனார்கள். கடைசியாக எல்லாரையும்விட முதிய வீரனான ஜாம்பவான் பேசலானான்:

"நான் விருத்தாப்பிய தசை அடைந்திருக்கிறேன். ஒரு காலத்தில் கொஞ்சம் பலம் எனக்கு இருந்தது. இப்போது அசக்தனாக இருக்கிறேன். ஆயினும், இது அரசன் கட்டளையிட்ட வேலை. ராம காரியமாகவும் இருக்கிறது. கிழ வயதிலும் ஏதாவது செய்யலாம் என்று ஆசைப்படுகிறேன். தொண்ணூறு யோசனை தாண்டுவேன். அதற்குமேல் முடியாது. லங்கை போய்ச் சேர இது போதாது போலிருக்கிறதே! என் வாலிபப் பருவத்தை நினைத்து, இப்போது கிழவனாகி விட்டேனே என்று வருத்தமாக இருக்கிறது" என்றான்.

இதைக்கேட்ட அங்கதன், "நான் நூறு யோசனையும் தாண்டி லங்கை போய்ச் சேருவேன். சந்தேகமில்லை. ஆனால், அவ்விடத்திலிருந்து திரும்பி வர அவ்வளவு தூரம் மறுபடி தாண்டும் சக்தி எனக்கு இருக்குமோ இருக்காதோ சொல்ல முடியாது" என்றான்.

ஜாம்பவான் சொன்னான். "அரச குமாரா! அதைப் பற்றி நீ சந்தேகப்பட வேண்டியதில்லை. வாலிக்கு இருந்தது போலவே உனக்கு அளவற்ற சக்தி உண்டு. ஆயினும் இந்தக் காரியத்தை யுவராஜனாகிய நீ வகித்தல் சரியாகாது. மற்றவர்களைக் கொண்டு வேலை வாங்க வேண்டும். தானே நேரில் காரியங்களைச் செய்யப்போவது ராஜ நீதியாகாது. அபாயமாகும். பிரஜைகளைக் காத்து ஆள வேண்டியவன் பின்னால் நிற்க வேண்டும். அபாயக் காரியங்களில் தானே நேரில் பிரவேசிக்கக் கூடாது. நான் சொல்லும் யோசனை என்னவென்றால், அதோ தூரத்தில் மௌனமாக உட்கார்ந் திருக்கிறானே வாயு குமாரன், அவன்தான் இக்காரியத்தைச் செய்து முடிக்கும் திறமையும் சக்தியும் பெற்றவன்." இவ்வாறு சொல்லிவிட்டு, ஜாம்பவான் அனுமானிடம் சென்று அவனை அழைத்து வந்தான்.

துயரத்தில் மூழ்கி நின்ற லக்ஷக்கணக்கான வானரர்களுக்கெதிரில் ஜாம்பவான் அனுமானைப் பார்த்துச் சொன்னான்.

"வீரனே, எல்லா சாஸ்திரங்களையும் அறிந்த சிரேஷ் டனே! தனியாக ஏன் பேசாமல் உட்கார்ந்திருக்கிறாய்? அரசனான சுக்ரீவனுக்குச் சமமல்லவா நீ! தேஜஸிலும் பலத் திலும் நீ நம் அனைவரையும் தோற்கடிப்பாயல்லவோ? ராம லக்ஷ்மணர்களுக்குக்கூடச் சமானமானவன் அல்லவோ? பக்ஷி சிரேஷ்டனான கருடன் கடலைத் தாண்டிப் பறப்பதை நான் பார்த்திருக்கிறேன். வினதையின் குமாரன் கருடனுடைய சிறகுகளின் பெரும் பலம் உன் தோள்களுக்கும் உண்டு. பராக்கிரமத்திலும் வேகத்திலும் கருடனுக்கு நீ குறைந் தவனல்ல; உன்னுடைய பலமும் புத்தியும் உனக்குத் தெரிய வில்லை. உலகத்தில் உனக்குச் சமம் யாரும் இல்லை. உன் தாயார் அஞ்சனை தேவலோகத்து அப்ஸரஸ்: ரிஷியின் சாபத்தால் வானரமாகப் பிறந்தாள். அவள் மலைச்சாரலில்

உல்லாசமாகத் திரிந்து கொண்டிருந்தபோது, ஒரு நாள் வாயுதேவன் அவள் அழகைக் கண்டு காம பரவசமாகிப் போய், அடக்கம் இழந்து அவளைத் தழுவினான். தருமத் திற்குப் பயந்து, அவள், "பதிவிரதையாகிய என்னை அவமானப்படுத்துவதுயார்? துஷ்டனே!" என்று கோபங்கொண்டு கேட்க வாயுதேவன் சொன்னான்: "கோபிக்க வேண்டாம்! உன் தேகம் மாசுபடவில்லை. ஆசையால் தூண்டப்பட்டு நான் இந்தக் காரியம் செய்துவிட்டேன். தூர நிற்கிறேன். மனத்தாலேதான் நான் உன்னை ஆலிங்கனம் செய்தது. உன் உடல் என்னால் தீண்டப்படவில்லை. ஆயினும் என் மானஸ ஸ்பரிசத்தால் உனக்கு உண்டாகும் மகன், எனக்குச் சமமான வீர்யமும் பலமும் பெற்றவனாயிருப்பான். நிகரற்ற பராக்கிரமமும் புத்தியும் கொண்ட வானரன் ஆவான்." இவ்வாறு வாயு பகவான் வினயமாகச் சொல்லி அஞ்சனையைச் சமாதானப்படுத்தினான்.

"ஹனுமானே! நீ சிறு குழந்தையாக இருக்கும்போதே ஆகாயத்தில் கிளம்பிக் கிழக்கில் உதித்த சூரியனை ஒரு பழம் என்று எண்ணி, அதைப் பிடிக்கச் சென்றாய். நீ கிளம்பித் தடையின்றிப் பயமின்றிச் செல்வதைப் பார்த்துத் தேவராஜன் கவலை கொண்டவனாய், 'இவன் யார்? சூரியனையே பிடிக்கப் போகிறான்?' என்று வஜ்ராயுதத்தை உன் பேரில் வீசினான். இடியால் அடிபட்டு நீ விழுந்தாய். மலையின் மேல் விழுந்தபடியால் உன் வலது கன்னம் உடைந்தது. உன் தந்தை வாயு பகவான் உனக்கு நேரிட்டதைக் கண்டு பெருங்கோபம் கொண்டு, தன் சலனத்தை நிறுத்தி விட்டான். அதன் பயனாக ஜீவகோடிகளைத்தும் பிராண ஸ்தம்பம் அடைந்து வருத்தப் பட்டுத் தத்தளித்தன. தேவர்கள் வாயு பகவானைக் கோபம் தணிய வேண்டிக்கொண்டு இறைஞ்சினார்கள். பிரம்மனும் இந்திரனும் அச்சமயம் வரம் தந்தார்கள். 'உனக்கு எந்த ஆயுதத்தாலும் அழிவில்லை. நீ இஷ்டப்பட்டபோது மரணம் வரும். அதுவரையில் இல்லை' என்று வரம் பெற்றுச்

சிரஞ்சீவியானாய். அஞ்சனை வயிற்றில் நீ வாயுபகவானு டைய மானஸ புத்திரனாகப் பிறந்தவன். வாயுபகவானுக்குச் சமமான தேஜஸும் புத்தியும் பராக்கிரமமும் பலமும் பெற் றிருக்கிறாய். இந்தப் பலத்தை நீ மற்ற துஷ்டர்களைப் போல் துர்விநியோகம் செய்யாமல் அடக்கமாக இருக்கிறாய். ராம காரியத்தை முடித்துத் தரக்கூடியவன் நீயே. சமுத்திரத்தைத் தாண்டுவது உனக்கு ஒரு கஷ்டமல்ல. பெருந்துயரக் கடலில் தத்தளித்துக் கொண்டிருக்கும் இந்த வானரப் படையை நீ காப்பாற்ற வேண்டும். கடலைத் தாண்டும் சக்தியைப் பெற்றிருக்கும் நீ சும்மா இருக்கலாகாது. உன் வடிவம் பெருகுக. கருடனுக்கு நிகரானவன் நீ. நானும் ஒரு காலத்தில் பலம் பெற்றிருந்தேன். இந்தப் பூமண்டலத்தை இருபத்தொரு தடவை சுற்றி வந்திருக்கிறேன். பாற்கடலைக் கடைந்த காலத்தில், தேவர்கள் சொன்னபடி, நான் நான்கு திசை களிலிருந்தும் ஔஷதாதிகளைக் கொண்டுவந்து கடலில் சேர்த்தேன். ஆனால் இப்போது நான் விருத்தாப்பியம் அடைந்து விட்டேன். நீதான் வானரர்களுக்கு இப்போது கதி. ஆஞ்சநேயா, உன்னைச் சரணம் அடைந்தோம். தெய்வீக சக்தியைப் பிதுரார்ஜிதமாகப் பெற்றிருக்கும் உத்தமனே! இனித் தாமதம் வேண்டாம். உன்னுடைய உண்மைப் பலத்தை அறிந்து கொண்டு கிளம்புவாய். திரிவிக்கிரமனைப் போல் ஒரே தாவு தாவி, இந்தச் சமுத்திரத்தைத் தாண்டுவாய். நம்முடைய துயரத்தைத் தீர்ப்பாய்."

இவ்வாறு விருத்தனான ஜாம்பவான் ஹனுமானைத் துதித்து, அவனுக்குள்ள பலத்தை அவனுக்கு எடுத்துக்காட்டி, தூங்கிக் கிடந்த பராக்கிரமத்தை எழுப்பினான்.

உடனே பருவகாலத்துச் சமுத்திரம்போல் ஹனுமானு டைய வடிவம் வளர ஆரம்பித்தது. வானரர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே வாயுபுத்திரன் வளர்ந்து வளர்ந்து, தேகமும் தேஜஸும் விருத்தியாகத் திரிவிக்கிரமனைப் போல்

நின்றான். அவன் உடலினின்று வீசிய சுடரொளியைக் கண்டு அங்கதனும் மற்ற வானரர்களும் வியந்து ஆனந்த பரவசமானார்கள்.

இனி, ராமாயணத்தில் ஹனுமானே, கதாநாயகன். விஷ்ணு பக்தர்கள் அவனை 'சிறிய திருவடி' என்று பெயரிட்டு அன்போடு சொல்லுவார்கள். பெரிய திருவடி கருடன். எப்போதும் பெருமாளிடமே இருப்பதால் அவனுக்கு அந்தப் பெயர். இளைய திருவடி பிராட்டியின் துக்கத்தைத் தீர்த்து, ராவணனுடைய நகரத்தைக் கொளுத்தி அழித்து ராமனிடம் சென்று 'கண்டேன் சீதையை' என்று தெரிவித்த வரலாறு இனிச் சொல்லப்படும்.

## 64. கடலைத் தாண்டினான்

மறைந்து கிடக்கும் தன் சக்தியை ஜாம்புவான் சொல்லத் தெரிந்துகொண்டு ஹனுமான் ராம காரியத்தைச் செய்து முடிக்கச் சங்கற்பம் செய்து விட்டான். உடனே ஆவேசமாகத் தன் திட நிச்சயத்தையும் நம்பிக்கையையும் எடுத்துச் சொன்னான். "நீர் சொன்னபடியே ஆகுக.. நான் குதித்துக் கிளம்பி, ஆகாய மார்க்கமாகச் சென்று, லங்கையில் இறங்கி 'ஜானகியைக் காண்பேன். நீங்கள் சந்தேகப்பட வேண்டாம். நான் திரும்பும் வரையில் இவ்விடமிருங்கள். கடலைத் தாண்டுவதற்குப் பூமியை மிதித்துத் தாவவேண்டும். அந்த மிதியைத் தாங்குவதற்குத் தகுந்த இடம் இந்த மலை" என்று கூறி மகேந்திர மலையின் மீது ஏறினான்.

அங்கே தன் முழுப் பலமும் செலுத்திக் கொஞ்ச நேரம் காலால் தரையை மிதித்து நடந்து உலாவினான். அதுவே அந்த மலையிலிருந்த அனைத்துப் பிராணிகளுக்கும் சக்கடமாகிவிட்டது. மலையைவிட்டு வெளியேறி விட்டன. மலை மேலிருந்து ஹனுமான் கடலைப் பார்த்தான். மனத்தை ஒரு நிலைப்படுத்தி லங்கைக்குச் செலுத்தினான்.

"ராவணன் எடுத்துப்போன சீதாதேவியைத் தேடிக் காண்பேன். ஆகாய மார்க்கம் சென்று இந்தக் கடலைத் தாண்டுவேன்' என்று மனத்தில் சங்கற்பம் செய்து, சூரியனையும், இந்திரனையும், வாயுவையும், பிரம்மாவையும், பூத கணங்களையும் தியானித்து நமஸ்கரித்தான். பிறகு கிழக்கு முகமாக நின்று, தன் அபுஸர பிதாவாகிய வாயு பகவானை மறுபடி தியானித்து, அஞ்சலி செய்து விட்டுத் தன் உடலை இன்னும் பெருக்கிக்கொண்டு, தெற்கு முகம் நோக்கினான்.

மலையைத் தன் கால்களால் மிதித்துக் கைகளால் அடித்தான். அப்படி அடித்ததால் மலையிலிருந்த மரங்களிலிருந்தெல்லாம் புஷ்பங்கள் உதிர்ந்து மலையெல்லாம் மலர் மயமாகிவிட்டது. அவன் மலைமேல் நடந்ததால், அந்த அழுத்தத்தைத் தாங்க மாட்டாமல், யானையின் கன்னத்திலிருந்து மதம் பெருகுவதுபோல் மலையிலிருந்து நீர் ஊற்றெடுத்துப் பெருகிற்று. பல நிறத் தாதுக்கள் மலை யினின்று கிளம்பித் தெறித்து விழுந்தன. குகையினின்று மிருகங்கள் கத்திக் கொண்டு வெளியே ஓடின. பாம்புகள் படமெடுத்துக் கொண்டும் விஷம் கக்கிக் கொண்டும் பற்களைக் கடித்தன. அதனின்று நெருப்புப் பொறிகள் பறந்தன.

மயிர் சிலிர்த்து நின்ற ஹனுமான் பெரும் கர்ஜனை செய்தான். கைகளைத் தூக்கித் தரையையடித்து, உடலின் பின்பாகத்தைச் சுருக்கி, மூச்சையடக்கிக் கால்களை நன்றாக ஊன்றிக் காதுகளை மடக்கித் தன் பலத்தை விருத்தி செய்து கொண்டு, வெற்றிக் கர்ஜனை செய்து கிளம்பி கருடனைப் போல் ஆகாயமார்க்கமாக, ராமபாணத்தின் வேகத்தோடு சென்றான்.

அவன் தாவிச் சென்ற வேகத்தால் பல மரங்கள் வேரோடு பறிக்கப்பட்டு அவன் கூடவே சென்றன. பிரயா

ணம் போகும்போது பந்துக்கள் கொஞ்ச தூரம் கூடச் செல்வதுபோல், அந்த மரங்கள் புஷ்பங்களை உதிர்த்துக் கொண்டே, ஆஞ்சநேயன்கூட ஆகாயத்தில் சென்றன.

முன் காலத்தில் இந்திரனால் துரத்தித் தாக்கப்பட்ட மலைகள், பிறகு வெட்டப்பட்டுக் கடலில் விழுந்ததுபோல் வானர வீரனைத் தொடர்ந்து சென்ற மரங்கள் கடலில் ஒன்றன்பின் ஒன்றாக வீழ்ந்தன. பல நிறப் புஷ்பங்கள் சிதறி விழுந்த கடலானது ஆகாயம் நட்சத்திரங்களுடன் ஜொலிப்பது போல் பொலிவடைந்து பிரகாசித்தது.

வான வீதியில் வேகமாகச் சென்ற ஹனுமானுடைய கைகள் ஐந்து தலை நாகம்போல் விளங்கின. ஆகாயத்தை விழுங்கிக்கொண்டே போவது போல் சென்றான். அவனது கண்கள், மலையில் காடு பற்றி எரிவனபோல் ஜொலித்தன. சிவந்த மூக்கு சந்தியா சூரியனைப்போல் பிரகாசித்தது. நீண்ட தூமகேதுவைப்போல் ஆகாயத்தில் விளங்கிற்று ஹனுமானுடைய பெருந்தோற்றம்.

செல்லும் வேகத்தால் காற்று கர்ஜித்தது. ஆஞ்சனேயனுடைய நிழலானது ஒரு கப்பல்போல் ஜலத்தின் மேல் அவன்கூடச் சென்றது. ஆகாயத்தில் ஒரு பெரிய மலை, சிறகுகள் கொண்டு பறப்பதுபோல் காணப்பட்டது. மேகங்களிடையில் மறைந்தும் தோன்றியும் சந்திரனைப் போல் பிரகாசித்தான். கந்தர்வர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள். தேவ ரிஷிகள் ஆசீர்வதித்தார்கள். வால்மீகி பகவான் சித்திரித்திருக்கிற இந்தச் சமுத்திரம் தாண்டும் காட்சியைத் தற்கால ரீதியில் சொல்ல வேண்டுமானால், ஆகாயத்தில் கிளம்பி, மேகக் கூட்டத்தைக் கீழாக்கி மேலே பறந்து மிக வேகமாகக் கர்ஜித்துக் கொண்டு செல்லும் ஆகாய விமானத்தைப்போல் பறந்து சென்றான் என்று சொல்லலாம்.

சந்தர்ப்பத்துக்கேற்ற தைரியமும் அறிவும் ஆலோசனைச் சக்தியும், சிந்தனை வேகமும், நிகரற்ற சாமர்த்தியமும்,

வினைத் திட்பமும் கொண்ட ஹனுமானுக்கு, வழியில் சில சோதனைகள் ஏற்பட்டன. அவற்றையெல்லாம் மிகத் திறமையாகச் சமாளித்துச் சென்றான்.

ஆகாயத்தில் சென்று கொண்டிருந்த சமயம், கடலில் மூழ்கி நின்ற ஒரு பெரிய பர்வதம் திடீரென்று மேலே வானளாவிக் கிளம்பிற்று. இதுவென்ன நடுவே வழியடைக்கிறது என்று அதைத் தன் மார்பால் தாக்கினான். காற்றால் அடிக்கப்பட்ட மேகம்போல் அந்த மைனாக மலை அசைந்தது.

"அப்பனே! நான் மைனாக பர்வதம். சமுத்திரராஜன் சகரர்களுடைய குலத்தில் உதித்த ராமச்சந்திரனுக்கு உதவ வேண்டுமென்று என்னை ஏவியிருக்கிறான்; சாகர குலத்தாராலல்லவோ சமுத்திரம் விருத்தியடைந்தது? அந்தத் தொடர்பைக் கவுரவித்து நீ என்மேல் கொஞ்சநேரம் இறங்கி நின்று தங்கிப் போவாய். இளைப்பாறிச் சென்றாயானால் ராம காரியத்தை நன்கு முடிப்பாய். இந்திரன் மலைகளையெல்லாம் வஜ்ஜிராயுதத்தால் அடித்துத் துன்புறுத்திய காலத்தில், நான் பறந்து சமுத்திரத்தில் மூழ்கி மறைந்து இன்னும் உயிரோடு இருக்கிறேன். எனக்குச் சரணம் தந்த சமுத்திரம் உனக்கு உதவும்படி ஏவியதனால் நான் வந்தேன். சமுத்திரத்துக்கும் சகரன் குலத்துக்கும் தொடர்பு உண்டல்லவா? உன் தந்தை வாயுவால் அல்லவோ நான் இந்திரனுடைய வஜ்ஜிராயுதத்தினின்று தப்பிப் பறந்து கடலில் ஒளிந்துகொள்ள முடிந்தது. விருந்தினனாகக் கொஞ்ச நேரம் இளைப்பாறிச் சென்றாயானால், எனக்கும் சமுத்திர ராஜனுக்கும் சந்தோஷமாக இருக்கும்" என்று மைனாக மலை கேட்டுக் கொண்டது.

ஹனுமான், "அப்பனே! நான் நிற்க முடியாது. கால தாமதம் ஆகும். ராம காரியத்தில் நான் செய்திருக்கும் சங்கற்பம் இதற்கு இடம் தரவில்லை. நீ உபசரித்துச் சொன்ன

மொழிகளே போதும். நான் மகிழ்ச்சியடைந்தேன்" என்று வினயமாகச் சொல்லி மலையைக் கையால் பிரியமாகத் தடவிக் கொடுத்து விடைபெற்று, அங்கே நிற்காமல் சென்றான்.

பிறகு வழியில் பெரிய ராக்ஷஸ வடிவம், "நீ என் வாய்க்குள் பிரவேசிப்பாய்! வெகு காலமாக ஆகாரமின்றி உனக்காகவே காத்திருக்கிறேன்" என்று பெரும் குகையைப் போல் தன் வாயைத் திறந்தது.

"ராம காரியமாகப் போய்க்கொண்டிருக்கிறேன். தடுக்காதே" என்றான் ஹனுமான்.

"முடியாது, என் வாய்க்குள் புகுந்தே தீருவாய்" என்றது ராக்ஷஸ உருவம்.

உடனே ஹனுமான் இன்னது செய்யவேண்டுமென்று தீர்மானித்து, வர வரத் தன் தேகத்தை வளரச் செய்து கொண்டான். சரஸை என்கிற நாகமாதாவானவள் பூண்ட அந்த அரக்க வடிவமும் வாயை அதற்குத் தகுந்தபடி பெரிதாகச் செய்துகொண்டே போயிற்று. இப்படி மிகப் பெரிதாக வாய் திறந்ததும் ஹனுமான் தன் தேகத்தை சட்டென்று அணுவளவாகச் சிறிதாக்கிக்கொண்டு அந்தப் பெரும் வாய்க்குள் புகுந்து, அவள் காதினின்று வெளிப்பட்டு, மறுபடியும், தன் பெரிய உருவம் தரித்துக்கொண்டான்.

"உன் தீர்மானம் நிறைவேறிவிட்டது தாயே! உன் வாய்க்குள் நான் பிரவேசித்து ஆகிவிட்டது. இனி உனக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை" என்று ஹனுமான் சிரித்துக் கொண்டு சொன்னான்.

அதைக் கேட்ட நாகமாதாவும் "உன் காரியம் வெற்றியுடன் முடியும். தேவர்கள் உன்னைச் சோதிக்கவே இந்த வடிவத்தை எடுத்து, இதைச் செய்யச் சொல்லி நானும் செய்தேன். நீ போகும் ராம காரியம் நிச்சயமாக வெற்றி பெறும்" என்று ஆசீர்வதித்து அனுப்பினாள்.

இந்தச் சோதனையுடன் ஹனுமானுடைய கஷ்டம் தீரவில்லை. ஆகாய மார்க்கமாக மிக வேகமாகச் சென்று கொண்டிருந்தபோது காரணம் ஏதும் தெரியாமல் தன் வேகம் தடைப்பட்டு, எதிர்க்காற்றில்சிக்கிய கப்பல்போல் செல்ல முடியாமல் கஷ்டப்பட்டான். ஏதோ பெரும் சக்தி தன்னைப் பிடித்துக் கொண்டிருப்பதாக உணர்ந்தான்.

நான்கு பக்கமும் மேலும் கீழும் பார்த்தான். அப்போது காரணத்தைக் கண்டான். கடலில் ஒரு பெரும் பூதத்தைக் கண்டான். அது வானர வீரனுடைய நிழலைப் பிடித்து, அதன் மூலம் அவனுடைய வேகத்தைக் தடுத்து, அவனை இழுத்துக் கொண்டு இருந்ததைக் கண்டான்.

"உனக்காகவே காத்திருக்கிறேன் வா! எனக்குப் பொறுக்க முடியாத பசி" என்று சொல்லி அந்த நிழல்பிடி பூதம் தன் வாயைப் பெருங்குகைபோல் திறந்தது.

உடனே ஹனுமான் அந்த அரக்கியின் வாய்க்குள் புகுந்து, உள்ளே தன் நகங்களால் அவளுடைய உயிர் நிலைகளைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்துவிட்டான். பூதம் உயிரிழந்து கடலில் மூழ்கிற்று. கிரகணம் தீர்ந்த சந்திரன்போல் ஹனுமான் கிளம்பிச் சென்றான்.

இப்படிப் பல சோதனைகளைத் தாண்டி, தன் நுட்பமான அறிவு, தைரியம், பலம், திறமை இவற்றைக் கொண்டு வெற்றியுடன் கடலைத் தாண்டிப் பறந்து, வாழையும் தென்னையும் நிறைந்து விளங்கிய லங்கைக் கரைக்கு அருகே வந்துவிட்டான். லங்கைத் தீவின் கடற்கரைச் சோலைகளையும் மலைகளையும் ஆறுகள் கடலில் சேரும் இடங்களையும் வனங்களையும் கண்டான்.

ராவணனுடைய தேசத்தின் வளத்தையும் அமராவதி நகரத்துக்குச் சமமான அழகையும் ஹனுமான் கண்டான்.

"போகவேண்டிய இடம் வந்து சேர்ந்துவிட்டேன். இனி அரக்கர்களுக்கு நான் யார்? எத்தகையவன் என்பது தெரியாதபடி சீதை இருக்குமிடத்தைத் தேடவேண்டும்" என்று யோசித்துத் தன் விசுவரூபத்தைச் சுருக்கிக்கொண்டு, சாதாரண வடிவத்தோடு ஹனுமான் லங்கையில் ஒரு மலைமேல் இறங்கினான்.

## 65. எங்கும் தேடினான்

லங்கையில் ஹனுமான் இறங்கினான். மிக உற்சாகமாகவும், மகிழ்ச்சி கொண்டவனாகவும் இறங்கினான். பிறகு நிதானமாக யோசிக்கலானான்.

"கடலைத் தாண்டிவிட்டேன். உண்மைதான். ஆயினும் அதனால் வேலை முடிந்து போகவில்லை. திரிகூட மலைமேல் ராவணனுடைய பெரிய நகரம் ஆகாயத்தில் தொங்குவது போல் காணப்படுகிறது. ஆஹா! எவ்வளவு அழகு! எவ்வளவு செல்வம்! எவ்வளவு ஆயுதக் காப்பு! அமராவதி, போகவதி நகரங்களுக்குச் சமமான நகரமும் கோட்டையுமாக இருக்கிறது. வனங்களின் வனப்பு, மாளிகைகளின் அழகு, மதிற்சுவர்கள், கால யந்திரங்கள், அகழிகள் இவற்றையெல்லாம் பார்க்கும்போது கவலையாக இருக்கிறது. இந்த ராவணனை எவ்வாறு எதிர்த்து ஜெயிப்போம்? நான் தாண்டிய கடலை நம்முடைய சேனை எவ்வாறு தாண்டி வர முடியும்? தாண்டி வந்தாலும் இந்தக் கோட்டையை எப்படித் தாக்கி வெற்றியடைவோம்? ஆயுதபாணிகளாக நிற்கும் அரக்கர்களால் காக்கப்படும் இந்த நகரத்தை சாமம், பேதம், தானம், யுத்தம் எதனாலும் தகர்க்க முடியாது போலிருக்கிறதே. ஆயினும் சீதை உயிரோடு இருக்கிறாளா இல்லையா என்பதை முதலில் காண வேண்டும். பிறகே மற்ற யோசனை எல்லாம். ராவணனால் காக்கப்படும் இந்த நகரத்தினுள் நான் எவ்வாறு எப்போது பிரவேசித்தல் நலம்? ஓரிடம் விடாமல் தேடினால் அல்லவோ சீதையை மறைத்து வைத்திருக்கும் இடத்தைக்

காண முடியும்? யோசனை செய்யாமல் தவறான முறையில் நான் ஏதேனும் இப்போது செய்துவிட்டேனானால், முதல் பிழை முற்றும் பிழையாகிப் போய், ராமகாரியம் என்னால் கெட்டுப் போவதாகும்.

"பகலில் பிரவேசித்தால், இந்த அரக்கர்கள் எளிதில் என்னைக் கண்டு கொள்வார்கள். இரவிலேதான் நகரத்துக் குள் புகவேண்டும். எந்த உருவத்தை எடுத்து நான் பிரவேசிக் கலாம்? அரக்கர்கள் என்னைக் கண்டு சந்தேகப் படாத மிகச் சிறிய உருவம் எடுத்துச் செல்லவேண்டும்."

இவ்வாறு யோசித்து ஒரு பூனையளவான சிறு குரங்கு உருவம் எடுத்துக் கொண்டான். நகரத்துக்குள்ளும் மாட மாளிகை உபவனம் முதலிய எல்லா இடங்களிலும் பிரவேசித்துத் தேடுவதற்கு அதுதான் சவுகரியம் என்று தீர்மானித்தான். தீர்மானித்த உடனே வாயு புத்திரன், தன் இயற்கை உருவத்தைச் சுருக்கிக்கொண்டான். பிரம்மாண்ட பெரிய வடிவமாகிக் கடலைத் தாண்டிய ஹனுமான் ஒரு சிறு குரங்கானதை யாராவது கண்டிருந்தால் மிக வியந்திருப் பார்கள்.

* * *

இப்படி ஆஞ்சநேயன் சிறு குரங்கு உருவம் எடுத்த சமயம், சூரியன் அஸ்தமித்து விட்டான். ஹனுமான் கோட்டை வாயில் நோக்கிச் சென்றான். அச்சமயத்தில் சந்திரன் தோன்றி எங்கும் நிலா நிறைந்தது. தேடும் வேலைக்குச் சகாயமாகவே சந்திரன் தோன்றியிருக்கிறான் என்று எண்ணி, ஹனுமான் உற்சாகத்தோடு சென்றான்.

மதிலால் காக்கப்பட்ட ராவணனுடைய நகரத்தின் அழகும் செல்வமும் போகமும் தூரத்திலிருந்து பார்க்கும் போதே ஹனுமான் மிகவும் வியந்தான். வீதிகள், மாளிகைகள், தோரணங்கள், அலங்காரங்கள், கொடிகள் எல்லாம், பொன் வெள்ளி, ரத்தின மயமாக ஜொலித்தன. சமுத்திரக் காற்று

சுகமாக வீசிக் கொண்டிருந்தது. இந்திரனுடைய அமரா வதியும், குபேரனுடைய அளகாபுரியும் போல் ராவணனுடைய நகரம் ஐசுவரியத்தின் உச்சியை அடைந் திருந்ததைக் கண்டான். வியப்பு ஒரு பக்கம். மற்றொரு பக்கம் இவ்வளவு பலமாகக் காக்கப்பட்டு ஐசுவரியம் நிறைந்த இந்தக் கோட்டையையும் நகரத்தையும் இதைப் பரிபாலித்து வரும் அரக்கனையும் எவ்வாறு வெல்வது என்கிற கவலை மறுபக்கம் ராம தூதனுக்கு ஏற்பட்டது.

இப்படி வியந்தும் கவலைகொண்டும் பார்த்துக் கொண்டே சென்றபோது, அந்த நகரத்து அதிதேவதை பயங்கர வடிவத்துடன் ஹனுமானுக்கு எதிரில் நின்று "யார் நீ குரங்கே? இங்கே எவ்வாறு வந்தாய்? ஏன் வந்தாய்? உண்மையைச் சொல்" என்று அதட்டிக் கேட்டாள்.

"நான் குரங்குதான். இந்த அழகிய நகரத்தைப் பார்த்துப் போக வந்திருக்கிறேன். எல்லாம் சுற்றிப்பார்த்து என் ஆசையைத் தீர்த்துக் கொண்டு திரும்பிப் போவேன்!" என்றான் ஹனுமான்.

லங்கா தேவதை கோபங்கொண்டு "குரங்கே!" என்று ஹனுமானை ஓர் அறை அறைந்தாள்.

ஹனுமானும் தனது இடக்கையால் லங்கா தேவியை ஒரு குத்து குத்தினான். கோர வடிவம் கொண்ட தேவதை, அந்தக் குத்தைத் தாங்கமுடியாமல் கீழே சுருண்டு விழுந்தாள்.

விழுந்த லங்கா தேவதை எழுந்து, "ஒரு வானரத்தால் அடிபட்டு எந்த நாளில் தோற்றுக் கீழே விழுவாயோ, அன்று உன் நகரத்துக்கு முடிவு என்கிற வாக்கு உண்மையாகும் போலிருக்கிறது. ராவணனுடைய பிழைகள் முற்றிப் போயிற்று. இனி லங்கை அழிய வேண்டிய காலம் வந்துவிட்டது. தேவர்கள் சொன்னது நிறைவேறப் போகி றது" என்று சொல்லிவிட்டு ஒதுங்கி நின்றாள்.

லங்கா தேவதை ராவணனுக்குக் கீழ்ப்படிந்த ஆள் அல்ல. அந்த நகரத்தின் விதியே அந்தச் சொரூபம்.

குரங்காகிய ஹனுமான் மதில் ஏறி உள்ளே குதித்துப் பிரவேசித்தான். விரோதிகளுடைய கோட்டைக்குள் சாதாரண வாயில் வழியாகச் செல்லல் ஆகாது. வழியில்லாத வழியில் செல்லவேண்டும் என்பது யுத்த நீதி, சாஸ்திரம். அரக்கர்கள் அழியவேண்டும் என்று சங்கற்பம் செய்து கொண்டு ஹனுமான் லங்கா நகரத்துக்குள் இடதுகாலை முன் வைத்துப் பிரவேசித்தான்.

* * *

அழகிய புஷ்பங்கள் உதிர்ந்து, மிகப் பொலிவடைந்திருந்த ராஜவீதியில் சென்றான். மேகங்களுக்கு இடையில் மின்னல் வீசிப் பிரகாசித்துக் கொண்டிருந்தன, மாடமாளிகைகளெல்லாம். அவற்றின் மேல் ஏறிச் சென்றான். மாளிகைகளின் சௌந்தர்யத்தை அனுபவித்துக் கொண்டே சென்றான்.

சொல்லுக்கு அடங்காத அழகுடன் அரக்கனின் மாளிகைகளும், அலங்காரங்களும், தெருக்களும் பிரகாசித்தன. சங்கீத சாஸ்திரோக்தமாகப் பாடிய பாட்டுக்கள் கேட்டன. அழகிய பெண்களும் அவர்கள் கால்களின் ஆபரணங்களுடைய சப்தமும் நிறைந்த மாளிகைகளைக் கண்டான். எங்கும் குதூகல ஆரவாரங்கள். சில வீடுகளில் மந்திரங்கள் ஜபித்துக் கொண்டிருப்பதைக் கேட்டான். சில வீடுகளில் அரக்கர்கள் வேதம் ஓதிக் கொண்டிருப்பதைக் கேட்டான். சில வீடுகளில் ராவணனை ஸ்துதி செய்து கொண்டிருக்கும் சப்தத்தைக் கேட்டான். யுத்த வீரர்களும் சாரணர்களும் நிறைந்திருந்த வீதியைப் பார்த்தான். வைதிக முறையில் விரதம் பூண்டிருந்த பலரையும் இன்னும் அநேக காட்சிகளையும் கண்டான். கோரமான வடிவங்களையும் குரூர வடிவங்களையும் கண்டான. வில்லும், கத்தியும்,

பெருந்தடிகளும், கல் வீசும் கவண்டையுறிகளும், சூலாயுதங் களும், எறியும் வேல்களும் இன்னும் பல யுத்தப் படைகளும் வைத்துக்கொண்டு நிற்பவர்களைக் கண்டான். வீரர்கள் எல்லாரும் கவசங்களும் பூண்டிருந்தார்கள்.

சிலர் மிக அழகாக இருந்தார்கள். சிலர் மிகக் கோரமாக இருந்தார்கள். சிலர் வெளுப்பு, சிலர் மிகக் கருப்பு, சிலர் சிவப்பு, சிலர் சாதாரண வடிவம், சிலர் மிகக் குள்ளம், சிலர் மிக உயரம், இவ்வாறு நானாவித வடிவங்கொண்ட ஜனங்களைக் கண்டான்.

மாளிகை மாளிகையாகப் பார்த்துக் கொண்டே ஹனுமான் சென்றான். மகோன்னத அழகைக் கொண்ட பல ஸ்திரீகளைக் கண்டான். நாயகர்களுடன் சந்தோஷமாக இருப்பவர்களைக் கண்டான். உருக்கிவிட்ட தங்கம் போன்ற நிறம் கொண்ட யௌவனப் பெண்மணிகள் பலரைக் கண்டான். சிலர் உப்பரிகையில் உட்கார்ந்திருந்தார்கள். சிலர் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். சிலர் விளையாடிக் கொண்டும் பாடிக்கொண்டும் இருந்தார்கள். இவ்வாறு கணக்கற்ற ஸ்திரீகளைக் கண்டான். ஆனால் துக்கப்பட்டு இளைத்துப்போய் ராமனையே தியானம் செய்து கொண்டிருக்கும் சீதையைக் காணவில்லை. சௌந்தர்ய வடி வங்களையெல்லாம் கண்ட ஹனுமானுடைய உள்ளத்திலே துக்கமே நிறைந்தது.

பல அரக்க வீரர்களுடைய மாளிகையில் ஒவ்வொன் றாகப் பிரவேசித்துப் பார்த்தான். யுத்த யானைகளும், ஜாதிக் குதிரைகளும், தேர்களும், ஆயுத சாலைகளும் எங்கும் நிறைந்திருந்தன. எங்கும் வீரர்கள் ஆயுதபாணிகளாய் நின்றார்கள். விளையாட்டுக்களும் பாட்டும் சங்கீத வாத்திய முழக்கமுமாக ஸ்திரீகள் ஆனந்த மயமாயிருந்த மாளிகை வரிசைகளையும் தோட்டங்களையும் பார்த்து விட்டுப் பிறகு மலைபோல் உயர்ந்து நின்ற மிகப் பெரிய அரண்மனையைக் கண்டான். அதன் முன் நின்ற யானை, குதிரை,

காலாட்படைகளையும், அதைச் சுற்றியிருந்த மதிலையும், மாளிகையின் அபார அழகையும், ஆபரணத் தோரணங் களையும் பார்த்து, இதுவே: ராவணனுடைய அரண்மனை என்று தெரிந்து கொண்டு, தெய்வ மயமான லங்கா நகரத்துக்கே ஒரு சுடர் விட்டுக்கொண்டு ஆபரணம் போலிருந்த அந்த அரண்மனைக்குள் பிரவேசித்தான்.

பூவுலகத்தில் ஒரு சுவர்க்கம்போல் அந்த அரண்மனை விளங்கிற்று. ராவணனுடைய நிகற்ற பராக்கிரமத்துக்கும் பலத்துக்கும் தகுந்த அரண்மனையாகவே இருந்தது. தோட்டமும், தோட்டத்தில் சந்தோஷமாக விளையாடிக் கொண்டிருந்த பறவைகளும், அங்கங்கே மனத்தைக் கவரும் சித்திரங்களால் சித்திரிக்கப்பட்ட விஹார ஸ்தலங்களும் கண்டு, ஹனுமான் ஆச்சரியத்தில் மூழ்கினான்.

"ஆகா! என்ன செல்வம்! என்ன அற்புத சுகம்!" என்று வியந்தான். உடனே வியப்புக் களைந்தது. "ஜானகியைக் காணவில்லையே! வந்த காரியம் முடியவில்லையே! அற்புதங்களைக் கண்டு ஆச்சர்யப்பட்டுப் போவதில் என்ன பயன்?" என்று ராம காரியக் கவலையில் மூழ்கினான்.

அந்த மாளிகைகளுக்கிடையில், ராவணனுடைய பிரத்தியேக அரண்மனைக்குள் சென்று, அங்கே எல்லாப் பாகங்களிலும் நுழைந்து பார்த்தான். இது சுவர்க்கமோ? இது தேவலோகமோ? என்று ஆச்சரியமடையும்படியான அலங்காரங்களும் தங்கமும் வெள்ளியும் தந்தமும் ரத்தினங்களும் முத்தும் மிக நுண்ணிய சிற்ப வேலை செய்த கம்பளங்களும் சித்திர வேலைப் பண்டங்களும் கண்டான். மத்தியில் புஷ்பக விமானத்தைப் பார்த்தான்.

அது பிரம்மாவிடம் குபேரன் அடைந்த அற்புத விமானம். குபேரனை ஜெயித்து ராவணன் அதை லங்கைக்குக் கொண்டுவந்து வைத்திருந்தான். வசிஷ்டருடைய பசுவைப் போல் எதை வேண்டினாலும் தரும் அந்த அற்புத விமானத்தைப் பார்த்தான்.

ராவணனுடைய அந்தப்புரத்தில் நுழைந்தான். அது ஒரு போக சமுத்திரமாகவே இருந்தது. எண்ணற்ற அழகிய ஸ்திரீகள் தூங்கிக்கொண்டிருந்த அந்த விஸ்தாரமான இடம் பல நிறப் பூங்கொடிகள் நிறைந்த வனம்போல் பிரகாசித்தது. வந்த காரியத்தை அனுசரித்த ஹனுமான், படுத்திருந்த ஸ்திரீகளையெல்லாம் பார்த்தான். தூங்கிக் கொண்டிருந்த அவர்கள் ஒருவரைக் காட்டிலும் ஒருவர் ஸௌந்தர்யமாகவும், காம மயக்கத்தில் ஈடுபட்டவர்களாகவும் காணப்பட்டார்கள். எல்லோருமே சந்தோஷமாகவும் சம்மதமாகவும் இருந்த காட்சியை மாருதி அங்கே பார்த்தான். ராவணனுடைய காமரூப சக்தியும் பௌருஷமும் அந்த திவ்விய சௌந்தர்ய ஸ்திரீகளை முற்றிலும் வசப்படுத்தியிருப்பதைக் கண்டான்.

"இந்த மாதர் கூட்டத்திலே சீதை இல்லையென்பது நிச்சயம். அவள் ஒரு நாளும் அரக்கனுக்கு வசப்பட்டிருக்க மாட்டாள் அல்லவோ? அவளை இங்கே நான் தேடுகிறேனே! நான் எவ்வளவு பெரிய பைத்தியக்காரன்! சீதை இவர்களுக்குள் ஒருத்தியாக இருக்கமுடியாது" என்று தீர்மானித்தான்.

பிறகு பார்த்துக்கொண்டே சென்றான். ஓர் அறையில் அநேக சிறந்த சயன ஆசனங்களைக் கண்டான். தந்தமும் தங்கமும் வைடூரியங்களும் இழைத்த பல அழகிய மஞ்சங்களுக்கிடையில் ஒரு மிகச் சிறந்த கட்டிலைக் கண்டான். அதன் மேல் மேரு மலை படுத்துத் தூங்குவதைப் போல் படுத்திருந்தான் ராவணன். அந்த அரக்கனுடைய வடிவத்தின் கம்பீர அழகும் பொலிவும் ஹனுமானை ஒருகணம் நடுங்கச் செய்தன.

ஒதுங்கி நின்று பார்த்தான். யானைத் துதிக்கைகளைப் போன்ற கைகளும், மார்பில் ஐராவத யானையின் தந்தத்தால் குத்தப்பட்ட காயக்குறியும், உடம்பில் இந்திரனுடைய வஜ்ராயுதத்தாலும் விஷ்ணு சக்கரத்தாலும் உண்டான வடுக்

களும் பார்க்க பார்க்க அரக்கனுடைய அழகு மாருதியின் மனதைக் கவர்ந்தது.

அதன்மேல் அவனைச் சுற்றிலும் படுத்துத் தூங்கும் பல ஸ்திரீகளைப் பார்த்தான். கீதம் பாடிக்கொண்டே தூங்கிப் போன ஸ்திரீகள், தங்களுடைய வாத்தியங்களைக் கட்டிக் கொண்டு அப்படியே மயங்கிக் கிடந்தார்கள்.

அப்பால் ஒரு திவ்விய மஞ்சத்தின்மேல் ஒரு ஸ்திரீ படுத்திருந்ததைக் கண்டான். அந்தப்புரத்துத் தலைவியாக விளங்கிய அவளுடைய அவயவ அழகும் முக லக்ஷணமும் கண்டு இவளே சீதை என்று அனுமான் ஒரு கணம் சந்தேகித்தான். முகத்தில் உத்தம குணங்களைக் கண்டான். 'கண்டு விட்டேன் சீதையை' என்று குதித்தான். அடுத்த கணம், 'சீ! இது என்ன மடமை! சீதை இப்படிச் சுகமாகத் தூங்குவாளா? இப்படி ஆபரணங்கள் பூண்டு அன்னிய புருஷனுடைய அறையில் படுப்பாளா? இப்படித் தான் எண்ணியது பெருங்குற்றம்' என்று தனக்குள் சொல்லித் துயரத்தில் மூழ்கினான்.

பிறகு, "தனக்கு சம்மதிக்காதபடியால் சீதையை இந்த அரக்கன் கொன்றுவிட்டிருப்பான். நான் தேடிச் செல்வதில் என்ன பயன்?" என்று எண்ணினான்.

ராவணனுடைய அந்தப்புரம் முழுதும் பார்த்து விட்டான். படுக்கும் இடம், சாப்பாட்டுச் சாலை, பர்ண சாலை, சங்கீதசாலை இன்னும் பல இடங்களுக்கும் சென்று நன்றாகத் தேடிப் பார்த்தாயிற்று. எங்கும் சீதையைக் காணவில்லை.

"சீதையைத் தேடிக் காண்பதற்காக, நுழையக் கூடாத இடமெல்லாம் நுழைந்து பார்த்தேன். ஸ்திரீகள் படுத்தி ருக்கும் இடம் புகுந்து, தருமத்தைக்கூட ஓரளவு புறக்கணித்து விட்டேன். காரியம் சித்தியாகவில்லை" என்று துயரப்பட்டுப் பர்ணசாலையை விட்டு வெளியே தோட்டத்துக்குச் சென்று,

அங்கே பற்பலகொடிகளால் பின்னப்பட்ட பந்தல்களிலும் கொட்டகைகளிலும் விஹார ஸத்லங்களிலும் தேடினான். எங்கும் காணவில்லை.

"லங்கா நகரம் முழுவதும் பார்த்தாகிவிட்டது. ராவணன் அரண்மனை முழுவதும் தேடியாய்விட்டது. இனி என்ன இருக்கிறது? சீதையைக் காணாமல் திரும்புவதா? இங்கேயே என் உயிரை விடவேண்டும். அதுவே நான் செய்யக் கூடியது" என்று தீராத துக்கத்தில் மூழ்கினான்.

மறுபடியும். "சீ!சீ! இப்படி மனத்தளர்ச்சி அடைய லாகாது. தீரனுக்கு இது தகுந்த லக்ஷணமல்ல" என்று கிளம்பி, மறுபடியும் ஓர் அங்குலமும் மிச்சமின்றி எல்லா இடங் களையும் நன்றாகக் கவனித்துத் தேடிப்பார்த்தான். கோர ரூபமான ராக்ஷஸப் பெண்களையும், மிகச் சவுந்தர்யமான பல மானுடப் பெண்களையும், நாக கன்னிகைகளையும், அரக்கன் அபகரித்து வந்த பல அழகிகளையும் கண்டான். சீதையைக் காணவில்லை.

இன்னது செய்வது என்று தோன்றாமல் ஹனுமான் மனம் மிகத் தத்தளித்தது. "காரியம் கைகூடவில்லையென்று கிஷ்கிந்தைக்குத் திரும்பினால், கேட்போருக்கு நான் என்ன சொல்வேன்? சீதையைப் பற்றி இனி ஆசையில்லையென்றால் ராமன் கதி என்னவாகும்? உயிரை விடுவான். அதற்குப் பிறகு மற்றவர் கதியென்ன? என் முயற்சி வீணாயிற்று என்று சுக்ரீவனிடம் சொல்வதைவிட, இங்கேயே நான் காட்டிலும் சமுத்திரக் கரையிலும் வாழ்நாளைக் கழித்து விடுவது மேலாகும். அதுதான் ஏன்? தற்கொலை செய்துகொள்வதே நலம். சீதை லங்கையில் இருக்கிறாள் என்று சம்பாதி சொன்ன சொல் பொய்யா? அல்லது அவ்விடத்தில் இருந்தவள் துஷ்ட ராக்ஷஸனால் கொல்லப்பட்டாளா? அவளை அரக்கிகள் தின்றுவிட்டுமிருக்கலாம். ஒன்றும் தோன்றவில்லையே! என்ன செய்வேன்!" என்று இப்படி ஹனுமான் பலவாறு சிந்தித்துக் கவலைக் கடலினின்று கரையேற வழி தெரியாமலிருந்தான்.

அச்சமயம் உயர்ந்த மதிலால் சூழப்பட்ட ஒரு விஹார வனத்தைக் கண்டான்.

"ஆஹா! இந்த இடம்தான் நான் தேடவில்லை. இங்கே கட்டாயம் சீதையைக் காண்பேன்!" என்று வாயு புத்திரன் ராமன், லக்ஷ்மணன், சீதை, சுக்ரீவன் இவர்களைத் தியானித்தான். ருத்ரன். இந்திரன், யமன், வாயு, சந்திரன், சூரியன், மருத்கணங்கள் இவர்களை மனத்தால் வணங்கிப் பிரார்த்தனை செய்தான்.

"இதுவே ஒரு தனி நந்தவனமாக இருக்கிறது. நன்றாகக் காக்கப்பட்டு வருகிறது. இவ்விடத்தில் சீதை வைக்கப்பட்டிருக்கிறாள் என்பது நிச்சயம்!" என்று ஹனுமானுடைய உள்ளத்தில் ஒரு நம்பிக்கை தோன்றிற்று.

மறுபடியும் தேவர்களையெல்லாம் நமஸ்கரித்துவிட்டு அந்த அசோக வனத்துச் சுவர் மேல் குதித்து ஏறி நின்றான். மிக அழகிய ஓர் உத்தியான வனம் கண்டான்.

## 66. அசோக வனத்தில் சீதை

அந்த வனத்தில் மதில் சுவரின்மேல் நின்றதும், ஹனுமானுடைய உள்ளத்திலும், சரீர அவயவங்கள் முற்றிலுமே ஒருவித ஆனந்த உணர்ச்சி ஊடுருவிப் பாய்ந்தது. சீதை இருக்கும் இடத்துக்கு வந்து சேர்ந்து விட்டபடியால், தன்னையும் அறியாமல் ஹனுமானுடைய உள்ளத்தில் இந்த மகிழ்ச்சி தோன்றலாயிற்று.

வசந்த காலத்துத் துவக்கத்தில் மலரும் புஷ்பங்கள் எல்லாம் பூத்து, மரங்களும் கொடிகளும் மிக ரம்மியமாகக் காட்சி தந்தன. அடர்த்தியாக மரங்கள் இருந்த ஓர் இடத்தைப் பார்த்து அங்கே ஹனுமான் தாவிச் சென்றான். அந்த அதிர்ச்சியினால் எழுப்பப்பட்ட குயில்களும் மயில்களும் ரம்மியமாகச் சப்தித்தன. மான்களும் வேறு மிருகங்களும் நடமாடிக் கொண்டிருந்தன. மரங்களினின்றும் மலர்கள் உதிர்ந்து ஹனுமானுடைய உடல் முழுதும் புஷ்பமாயிற்று.

நந்தவனத்திலிருந்த பிராணிகள் மலர் மயமான ஹனுமானுடைய அழகிய சிறு குரங்கு உருவத்தைப் பார்த்து, வசந்த தேவதையே வனத்துக்கு அதிகாலையில் வந்துவிட்டது என்று எண்ணின.

அந்தத் தோட்டத்தின் ரமணீயம் யார் மனத்தையும கவரத் தக்கதாக இருந்தது. அழகிய வாவிகள், தங்கம், வெள்ளி, தந்தம், முத்து, பவழம் இவற்றால் அலங்கரிக்கப்பட்ட தளங்கள், படித்தள வரிசைகள், செய் குன்றுகள், ஆறுகள், பூங்கொடிகள், அருவிகள், அவற்றில் விளையாடிக் கொண்டிருந்த அழகிய பறவைகள், இந்தக் காட்சி ஹனுமானுடைய உள்ளத்தில் ஆனந்தம் உண்டாக்கிற்று. சில மரங்களைச் சுற்றி அழகிய தங்கமேடைகளும் வெள்ளி மேடைகளும் கட்டப்பட்டிருந்தன. மரங்களில் கட்டித் தொங்கிய சிறு மணிகள் காற்றால் அசைக்கப்பட்டு மெதுவாகத் தொனித்துக் கொண்டிருந்தன. தங்க மேடையால் அலங்கரிக்கப்பட்டு உயர்ந்து பரவி நின்ற ஒரு மரத்தின் மேல் ஏறி இலை மறைவில் ஹனுமான் உட்கார்ந்தான்.

"உயிரோடிருப்பாளானால் சீதை நிச்சயம் நந்தவனத்துக்கு வருவாள். ராமனைத் தனியாக இருந்து தியானிக்க இந்த ரமணீயமான இடத்தையே அவள் விரும்புவாள். மரங்களும் கொடிகளும் நிறைந்த வனத்தில் நடமாடுவதில் ஜானகிக்கு மிகப் பிரியம் என்று சொன்னார்கள் அல்லவா? காலைச் சந்தியாகாலத்தில் தேவியை உபாசித்துப் பிரார்த்தனை செலுத்த இங்கே நிச்சயமாக வருவாள்."

இவ்வாறு யோசித்துக் கொண்டும் சுற்றிப் பார்த்துக் கொண்டும் இலைகளின் மறைவில், அந்த மரத்தின்மேல் ஹனுமான் உட்கார்ந்து கீழே பார்த்தான். கண்ணைக் கூசும்படி பிரகாசித்துக் கொண்டிருந்த, அழகான, நிர்மல மான அந்த மரத்தடி மேடையின் பேரில், ஒரு மானுட ஸ்திரீ இருப்பதைக் கண்டான்.

கசங்கிப் போய்த் தூசி படிந்த ஒரு மஞ்சள் வஸ்திரம் உடுத்தியிருந்த அந்த ஸ்திரீயின் முகத்தில், புகையால் மூடப் பட்ட சுடரைப்போல் அழகும் துக்கமும் கலந்து நின்றதைக் கண்டான். அடிக்கடி பெருமூச்செறிந்து, உபவாசத்தால் நலிந்து, முதல் நாள் பாலசந்திரனைப் போல், கண்டும் காணாமலுமாக இருந்தாள். அவளைச் சுற்றிச் சில அரக்கிகள் உட்கார்ந்திருந்தார்கள். பெரும் துக்கத்தால் பீடிக்கப்பட்ட அந்தப் பெண்ணுருவத்தைக் கண்டதும், இவளே சீதை என்று ஹனுமான் நிச்சயித்தான்.

தெய்வீக காந்தி வீசிய முகத்தில் தீராத துயரத்தைக் கண்டான். கொடிய அரக்கிகளால் சூழப்பட்டு, வேட்டையா டப்பட்டுத் தன் கூட்டத்திலிருந்து பிரிந்துபோய், பயந்து நாலா பக்கமும் விழித்துத் தவிக்கும் ஒரு மானைப்போல் காணப்பட்டாள். கறுத்து நீண்ட தலைமயிர் பின்னப் படாமல் தொங்கிற்று. துக்கம் என்பதே அறியாத ஒருத்தி, பெருந்துயரத்தில் சிக்கிப்போய் இன்னது செய்வது என்று தெரியாமல் அலைந்தவளாகக் காணப்பட்டாள். துக்கத் தாலும் உணவின்றியும் இளைத்துப்போய், அழுக்குப் படிந்த ஆடை உடுத்தி ராக்ஷஸிகளுக்கிடையில் உட்கார்ந்திருக்கும் இவள், சீதையே என்று ஹனுமான் நிச்சயித்துவிட்டான்.

ஆபரணங்கள் அணிய வேண்டிய அழகிய தேகமாக இருந்தது. ஆனால் ஆபரணமின்றியிருந்தது. மேகம் மூடிய சந்திரனைப் போலிருந்தது அவள் முகம். பார்க்கப் பார்க்க, அந்தத் தங்க மேடையின்மேல் ஆபரணங்களின்றிக் கவலையும் பயமும் நிரம்பிய முகத்தோடு உட்கார்ந்திருந்த அந்த ஸ்திரீயின் தோற்றம், மெய்ப்பாடுகள் எல்லாம் கவனித்து, அவளே சீதை என்பதாக உறுதி கொண்டான்.

ராமனுக்காகப் பூமண்டலம் முழுவதும் வானரர்களால் தேடப்பட்ட சீதையைக் கண்டுவிட்ட மகிழ்ச்சி பெரிதா யினும், கண்ட உருவத்தின் துயரமானது, அந்த மகிழ்ச்சியைக் கரைத்து இல்லாமற் செய்துவிட்டது.

பார்க்கப் பார்க்க ஹனுமானுடைய கண்களுக்கு அந்த ஸ்திரீயின் தெய்வீகத் தோற்றத்தின் அழகும் தேஜஸும் வளர்ந்தன. "ராமனுடைய பெருந்துக்கத்தின் காரணத்தை இப்போது கண்டேன். இவளை இழந்த எவன்தான் துயரப்படமாட்டான்? ராமன் தன் உயிரை வைத்திருப்பதே அற்புதம்! எத்தகைய தேவி! எத்தகைய புருஷன்!" என்று எண்ணி எண்ணி ஹனுமானுடைய உள்ளம் அந்தச் சமயம் சமுத்திரத்துக்கு வடக்கேயிருந்த ராமனிடம் சென்றது.

அப்போது நீலவானத்தில், நிர்மலமான நீர் நிறைந்த ஏரியில் அழகிய அன்னம் மெதுவாகச் செல்வதைப்போல், சந்திரன் வாயு புத்திரனுக்கு உதவி செய்வதற்காகவே வந்தது போல், உயரக் கிளம்பிப் பிரகாசித்தான்.

ஹனுமான் இலைகளிடையில் மறைந்து பார்த்துக் கொண்டும், இன்னது செய்வது என்று யோசித்துக் கொண்டும் கடல் மத்தியில் ஒரு பெருங் காற்றடித்து ஆடி அலையும் ஒரு பாரம் ஏற்றிய கப்பலைப்போல், கவலைக் கடலில் தத்தளித்துக் கொண்டிருந்த சீதையின் முகத்தை நன்றாகப் பார்த்தான். சுற்றிக் காவலிருந்த ராக்ஷஸிகளின் வடிவங்களோ பார்த்துப் பொறுக்கமுடியாத கோர அவலக்ஷண வடிவங்கள். ஒருத்திக்கு ஒரே கண், ஒருத்திக்கு ஒரே காது. சிலருக்கு காதுகளே கிடையாது. சிலருக்கு மூக்கு இல்லை. சிலருக்கு மூக்கு ஊர்த்துவம் நோக்கிச் சென்றது. சிலருக்குத் தலையில் மயிரே கிடையாது. சிலருக்கோ விபரீதமான ஜடை. சிலருக்குக் கீழே தொங்கும் பெரிய வயிறு. சிலருக்கு ஒட்டகம் போன்ற உதடுகள், சிலர் கூனிகள். சிலர் குள்ளமானவர்கள். சிலர் பனைமரம் போல் நீண்டு உயர்ந்து வளர்ந்தவர்கள். சிலருக்குப் பன்றி முகம், சிலருக்குப் புலி முகம். சிலருக்கு எருமை முகம். சிலருக்கு நரி முகம். சிலருக்கு ஆட்டு முகம். இப்படி இன்னும் பல பயங்கர அவலக்ஷண சொரூபங்களாகச் சூலங்கள் முதலிய ஆயுதங்களோடு

அரக்கிகள் இருக்க, அவர்களுக்கு இடையில் தன் சீலம் ஒன்றாலேயே ரக்ஷிக்கப்பட்டவளாகத் தரையில் ஆதர வற்றுப் படர்ந்து கிடக்கும் பூங்கொடிபோல் ஜானகி வாடிய முகத்துடன் நடுங்கிக் கொண்டிருந்தாள்.

இப்படிக் காட்சி தந்த சீதாதேவியைப் பார்த்து "காணாமற் போனவளைக் கண்டுவிட்டேன்" என்று ஹனுமான் மகிழ்ச்சியடைந்தான். கூடவே, அவள் நிலையைப் பார்த்துத் துக்கப்பட்டான். அவளுக்காக வெகுதூரத்தில் அலைந்து துயரப்பட்டுக் கொண்டிருக்கும் ராம லக்ஷ்மணர் களை நினைத்தான். அவர்களைத் தியானித்து நமஸ் கரித்தான்.

* * *

அச்சமயம் இன்னும் இருள் தீர்ந்து நன்றாக விடியவில்லை. வேதகோஷங்களாலும் இனிய சுப்பிரபாத கீதங்களாலும் ராவணன் படுக்கையிலிருந்து எழுப்பப் பட்டான். எழுந்தவுடன் சீதையை நினைத்துக் கொண்டு, அவளை வைத்திருந்த நந்தவனத்துக்குக் கிளம்பினான். பரிவாரம் சூழ அந்தப்புரத்து நந்தவனத்துக்கு வந்தான். வாசனை வீசும் தீபங்களும், சாமரங்களும், குடையும் பிடித்துச் சென்ற பெண்கள் கூட்டத்துக்கிடையில், தானும் ஆப்ரணங்கள் பூண்டு பரிசுத்தமான வெள்ளை உத்தரீயம் ஒன்று தரித்துக் கண்ணைக் கவரும் இரண்டாவது மன் மதனைப்போல் ராவணன் வந்தான். வாயிலண்டை வந்த பரிவாரத்தின் கோஷமும், கூட்டமாக வந்த பெண்களின் பாத நூபுர ஓசையும், ஹனுமானின் காதில் விழுந்தன.

கொஞ்ச நேரத்தில் ராக்ஷச மன்னன் வருவதைக் கண்டான். உடனே ஹனுமான் அடர்ந்த இலைகளுக்குள்ளே முன்னைவிட நன்றாக மறைந்து கொண்டான். ராவணன் சீதையிருக்குமிடம் வந்தான். ராவணனுடைய பலமும் பராக் கிரமும் வீரியமும் தேஜஸும் அற்புதக் காட்சியாக இருந்தன.

அவன் வருவதைக் கண்டவுடனே சீதையின் தேகம் சுருங்கிப் போய்விட்டது. பெருங்காற்றில் வாழைமரம் நடுங்குவது போல் நடுங்கினாள்.

## 67. ராவணன் பிரார்த்தனையும் சீதையின் பதிலும்

தருமம், புருஷனுடைய நினைவு இவை இரண்டையும் பற்றிக்கொண்டு, துக்கப் பெருங்கடலில் மிதந்து கொண்டு உயிரை வைத்திருந்த சீதையைப் பார்த்து ராவணன் சொன்னான்;

"அழகியே! ஏன் கூச்சப்பட்டுத் தேகத்தை மறைத்துக் கொள்கிறாய்! உன்மேல் எனக்கு உண்டாகியிருக்கும் அன்பை நீ அறியாயோ? உன் அன்பை நான் பிச்சை கேட்கிறேன். நீ பயப்பட வேண்டியதில்லை. என்னிடத்தில் உனக்கு உள்ளூரப் பிரியம் உண்டாகும் வரையில் உன்னை நான் தொடமாட்டேன். நீ பயப்படவேண்டாம். என் விருப்பத்துக்குச் சமமாக உனக்கும் என்பேரில் விருப்பம் உண்டாக வேண்டும் என்பதே என்னுடைய ஆசை. உண்மை யான அன்போடு நீ என்னை ஒப்புக் கொள்ளவேண்டும். வீணாகத் துக்கத்துக்கு ஏன் உன் உடலை இரையாக்கி வருகிறாய்! அழகியே! உனக்குச் சமமான சௌந்தரிய ஸ்திரீ உலகத்தில் இல்லை. நீ இப்படி ஆபரணமின்றி, நல்ல வஸ்திரமின்றித் தரையில் படுப்பதும், தலைமயிரை வாரிப் பின்னாமல் இருப்பதும் வேண்டாம். பெண் ரத்தினமே! இப்படி உன் அழகையும் வயதையும் வீணாக்காதே. என்னிடம் வந்து சேர்ந்துவிட்டாய். இனி நீ கஷ்டப்படலாகாது. சகல போகங்களையும் அனுபவிக்கலாம். பூரண சந்திரனைப் போன்ற உன் முகத்தைப் பார்த்தால், என் கண்களை வேறு திக்கில் செலுத்த முடியவில்லை. உன் உடலில் எந்த அங்கத்தைப் பார்த்தாலும் என் திருஷ்டி அங்கேயே நிற்கிறது. இந்த அழகைப் பெற்ற நீ இப்படி துக்கப்படுவது தகாது. என்னைப் புருஷனாக அடைந்து சகல

போகங்களையும் அடைந்து, அநுபவித்து மகிழ்ச்சி அடைவாய். பயப்படாதே! யோசிக்காதே! நீயே பட்டமகிஷியாக இருப்பாய்; என் அந்தப்புர முழுவதும் உனக்கு அடங்க, நீ ஆள்வாய். என் செல்வம், ராஜ்யம் அனைத்தும் பெற்றுக் கொண்டு, அனுபவிப்பாய். இந்த லங்கையும் நானும் உன் சொத்தாவோம். இந்தப் பூமண்டலம் முழுவதும் உனதாகும். என் பலம், வீரம் இவற்றைத் தேவாசுரர்கள் அறிவார்கள். அவர்கள் என்னால் அடிபட்டுத் தோற்றுத் தலைவணங்கி நிற்கிறார்கள்.

"உன் அழகுக்குத் தகுந்த ஆபரணங்களும் வஸ்திரங்களும் கொண்டு உன்னை அந்தப்புர ஸ்திரீகள் அலங்கரிப்பார்கள். அலங்கரிக்கப்பட்ட உன்னைப் பார்த்து நான் மகிழ்வேன். உன் இஷ்டப்படி நீ தான தருமம் செய்யலாம். அனைவர் பேரிலும் அதிகாரம் செலுத்துவாய். என் பிரஜைகளும் பந்துக்களும் உன்னை அண்டிச் சந்தோஷமாக இருப்பார்கள். காட்டில் அலைந்து திரியும் ராமனை ஏன் நினைத்துக்கொண்டிருக்கிறாய்? ஊரை விட்டுப் பதவியை விட்டு, மரவுரி தரித்து அலையும் ஒருவனையா நீ விரும்புவது? நம்புவது? அவனால் என்ன செய்ய முடியும்? ராஜ்ய லக்ஷ்மியும் ஜயலக்ஷ்மியும் அவனை விட்டு விலகினது உனக்குத் தெரியுமே. அவன் இப்போது பிழைத்திருப்பதே சந்தேகம். உன்னை ராமன் இனிக் கண்ணால் பார்க்கவுங்கூட முடியாது.

"கருடன் சர்ப்பத்தைப் பிடிப்பதுபோல், நீ என் உள்ளத்தை அபகரித்து விட்டாய். நான் தப்ப முடியாது அலைகிறேன். ஆபரணமும் நல்ல வஸ்திரமுமின்றி நீ இப்போது இருக்கும் நிலையிலும்கூட உன்னைப் பார்த்த பிறகு, சுந்தரியே! என் மனைவிகளுடன் கலந்திருக்கவே எனக்குப் பிடிக்கவில்லை. நான் என்ன செய்வேன்? அந்தப் புரத்தில் கணக்கில்லாத அழகிகள் இருக்கிறார்கள். உன்னைப் பார்த்தபின் அவர்கள் எனக்கு வேண்டியிருக்கவில்லை. அவர்களுக்கெல்லாம் நீயே அரசியாக இருந்து,

அவர்களுடைய சேவையைப் பெற்றுச் சுகமாக இருப்பாய். எந்த விதத்தில் ராமன் எனக்குச் சமம் ஆவான்? தவத்திலும் பலத்திலும் புகழிலும் செல்வத்திலும் எல்லாவற்றிலும் நான் அவனுக்கு மேம்பட்டவன் என்பது உனக்குத் தெரியவில் லையா? பயத்தை அகற்றிக் கொள்வாய். உலகம் முழுவதும் நாம் இருவரும் சமமாகத் திரிவோம். சகல ஐசுவர்யமும் என்னுடன் அனுபவிப்பாய். ஆனந்தமாகக் காலம் கழிப்பாய் சுந்தரியே! மனம் இரங்கு! கடற்கரை வனங்களில் சந்தோஷமாக விளையாடுவோம். ஒப்புக்கொள்."

இவ்வாறு ராவணன் தன் அடங்கா ஆசையை வெளியிட்டுச் சீதையை இறைஞ்சினான்.

ராவணன் பேசி நிறுத்தினதும், ஒரு துரும்பைக் கிள்ளித் தனக்கும் அவனுக்கும் இடையில் வைத்து, களங்கமற்ற நகை நகைத்து மெதுவாகப் பேச ஆரம்பித்தாள்.

"என்னைப் பற்றிய எண்ணத்தை உடனே விலக்குவாய். என்னை நீ விரும்புவது தகாத காரியம். உன் மனைவிகளை விரும்பி, அவர்கள்பால் மனத்தைச் செலுத்து. நீ சொல்வதை என்னால் ஒரு நாளும் செய்ய முடியாது. நான் பிறந்த குலத்தையும் நான் புகுந்த குலத்தையும் தெரிந்து கொள்ளுவாய். இத்தகைய யோசனை என்னிடம் செல்லுமா? தகாத எண்ணத்தை வைத்து, வளர்த்துக் கொண்டு துயரப்படாதே."

இப்படி அவனைப் பார்த்துச் சொல்லிவிட்டு, வேறு திசையில் முகத்தைக் திருப்பி மேலும் பேசலானாள்:

"வேறொருவன் மனைவியாகிய நான் உனக்கு மனைவியாக முடியாது. தருமத்தைப் புறக்கணிக்காதே. அயோக்கிய மார்க்கத்தில் செல்லாதே. நல்லவர்கள் போகும் வழியில் செல்வாய். நான் சொல்வதைக் கேள். உன் மனைவி களை நீ எவ்வாறு காத்து வருகிறாய். யோசித்துப் பார். அப்படியேயல்லவா மற்றவர்களும் தங்கள் மனைவிகளைக்

காக்கப் பார்ப்பார்கள்? மற்றவர்களும் உன்னைப் போலவே என்பதை நினைவில் வை. பிறருடைய ஸ்திரீகளை விரும்பாதே. உன் மனைவிகளுடன் சுகம் பெற்றுத் திருப்தியடை. இது உனக்கு நன்மையாகும். உனக்கு உரிமையான ஸ்திரீகளுடன் திருப்தியடையாமல், மற்றவர்கள் பேரில் மனத்தைச் செலுத்தினாயானால் அவமானமும் துக்கமும் அடைவாய். இது நிச்சயம்.

"உனக்கு நல்ல புத்தி சொல்லுகிறவர்கள் யாரும் இல்லையா? ஏன் இவ்வாறு கெட்ட காரியங்களில் புகுந்து நீயும் கெட்டுப் போகிறாய்? உன் ஜனங்களுக்கும் நாசம் தருவித்துக் கொடுக்கிறாய்? அரசன் தன் மனத்தைக் கட்டுப் படுத்தி நிறுத்திக் கொள்ளாமற் போனால், அவனுடைய நாடும் நகரமும் செல்வமும் எல்லாம் அழிந்து போகும். இந்த லங்கையும் அதனுடைய பெருஞ்செல்வமும் உன் ஒருவனுடைய குற்றத்தால் முற்றிலும் நாசமாகப் போகிறது. உன்னுடைய பொறுப்பைத் தெரிந்துகொண்டு, உன் துஷ்ட எண்ணத்தை விட்டுவிட்டு, உன்னுடைய நாட்டையும் ஜனங்களையும் ராஜதானியையும் காப்பாற்றுவாய். இல்லையேல் நீ அழிவாய். உன்னால் வருத்தப்பட்டவர்கள் 'கொடியவன் போனானே!' என்று சந்தோஷமடைவார்கள். எனக்கு நீ சொல்லும் ஐசுவரியங்களும் போகங்களும் ஒன்றும் வேண்டியதில்லை. அவற்றை வைத்து எனக்கு நீ ஆசை காட்டவேண்டாம். பயனில்லை. ராகவனை மணந்த நான் அவனை விட்டு விலகமாட்டேன். அவன் கையைப் பிடித்த நான் வேறு ஒருவன் கையைத் தீண்ட மாட்டேன்; முடியாது. சக்கரவர்த்தித் திருமகனுக்கு நான் உரியவள். வேதம் படித்து விரதம் தீர்த்த பிரம்மசாரிக்கு வேதம் எப்படி உரிமையோ, அவ்விதம் நான் ராமனுக்கு உரியவள். என்னை வேறொருவன் கண் எடுத்துப் பார்த்தல் தகாது.

"உனக்கு நான் நல்லுபதேசம் சொல்லுகிறேன் கேள். ராமனிடம் மன்னிப்புக் கேட்டு, அவன் கோபத்தினின்று

தப்பித்துக் கொள். வீணாக உன் நாசத்தைத் தேடிக் கொள்ளாதே. ராமன் நிச்சயமாக மன்னிப்பான். சரணடைந் தவர்களைக் கைவிடமாட்டான். அவனுடைய மன்னிப்பைச் சம்பாதித்துக் கொள். அதற்கு வழி தேடு. உன்னுடைய நாசத்துக்கு வழி தேட வேண்டாம். அதோ ராமனுடைய வில்லின் ஓசை கேட்கிறது. அதனின்று தப்பமாட்டாய். யமன் பக்கத்தில் நிற்கிறான். உன்னைத் தூக்கிப் போக வந்து விட்டான். தெரிந்துகொள். ராமலக்ஷ்மணர்களுடைய பெயர் எழுதிய பாணங்கள் சீக்கிரமே வந்து இந்த லங்கையை எரித்து அழிக்கப் போகின்றன. ஜனஸ்தானத்தில் இருந்த ராக்ஷசர்களை அடையாளத்துக்கு ஒருவனில்லாமல் என் வீர ராமன் ஒழித்துவிட்டதைக் கண்டு பயந்து, நீ திருடனைப் போல வந்து ரால லக்ஷ்மணர்கள் ஆசிரமத்தில் இல்லாத காலம் பார்த்துப் புகுந்து என்னைக் கொண்டு வந்தா யல்லவா? நீ அவர்கள் எதிரில் ஒரு கணம் நிற்கமுடியுமா? புலியிருக்குமிடம் சிறுநாய் போகமுடியுமா? அந்த வாசனை யைக் கண்டே அஞ்சித் தூர விலகும். ஈரத் தரையிலிருந்து நீரைச் சூரியன் உறிஞ்சிவிடுவது போல், உன் உயிரை ராமனும் லக்ஷ்மணனும் உறிஞ்சிவிடப் போகிறார்கள். ஓடி மலையில் ஒளிந்து கொள்வாயா? அல்லது கடலில் மறைந்து கொண்டு தப்பித்துக்கொள்ளப் பார்ப்பாயா? அதுவும் முடியாது. அழிய வேண்டிய முகூர்த்தத்தில் மரம் இடி விழுந்து அழிவதுபோல் நீ அவர்களால் கொல்லப்படுவாய். தப்ப மாட்டாய்." இவ்வாறு சீதை கடினமான மொழிகளோடு முடித்தாள்.

ராவணன் தன் கோபத்தை அடக்கிக்கொண்டு சொன்னான்: "சீதையே, தாபச வேஷம் பூண்ட ஒரு பொய் யனைக் கட்டிக்கொண்டு நீ என்னவோ பேசுகிறாய். உன் பேரில் எனக்குள்ள பிரியத்தை நான் விட்டுவிட முடியவில்லை. உன் பேச்சுக்களைக் கேட்டு எனக்கு வந்த கோபத்தை அடக்கிக் கொண்டேன். உன் பேரில் எனக்கு ஏற்பட்டிருக்கும்

பிரியமே உன்னைக் காத்தது. இல்லையேல் நீ இப்போதே மாண்டிருப்பாய். நான் உனக்கிட்ட தவணையில் இன்னும் இரண்டு மாத காலமே இருக்கிறது. அதற்குள் உன் மனத்தைத் திருத்திக்கொள். என் மனைவியாகி என் படுக்கையறைக்கு வருவாய். அதற்கு இஷ்டமில்லாவிடில் என் சமையல் சாலைக்கு அனுப்பபடுவாய். அங்கே என் வேலைக்காரிகள் உன் உடலை வெட்டித் திருத்திப் பலகாரமாகச் செய்வார்கள். அறிவாய்" என்றான்.

அரக்கன் உணவில் மானிட மாமிசம் சேரும் என்பது பிரசித்தம். ஆனபடியால் ராவணனுடைய இந்த மிரட்டல் வெறும் முரட்டு பாஷையல்ல. நிஜமாகவே நடக்கக்கூடிய நிகழ்ச்சிகளைப் பற்றிய எச்சரிக்கை.

ஆயினும், சீதை மிகத் தைரியமாக அவனுக்குச் சொன்னாள்.

"ஐயோ! யாரும் இல்லையா உனக்கு நல்ல உபதேசம் சொல்ல? இந்தப் பாவத்திலிருந்து உன்னைத் தப்புவித்து நல் வழியில் உன்னைச் செலுத்தும் நண்பர்கள் யாரையுமே நீ பெறவில்லையா? நீ ராமனுடைய தண்டனையிலிருந்து தப்பப் போவதில்லை. என்ன எண்ணி இந்தப் பாவத்தில் புகுந்து வருகிறாய்? காட்டு யானையைப் போன்ற ராமனு டைய விரோதத்தை, முயலைப் போன்ற நீ சம்பாதித் தாய். அவன் பக்கத்தில் இல்லாத சமயம் பார்த்து என்னைத் திருடி வந்த அற்பனே! உனக்கு வெட்கம் இல்லையா? உன்னுடைய விநாசம் நிச்சயம். விதியே உன்னை இவ்வாறு செய்யச் செய்திருக்கிறது. குபேரனுக்குத் தம்பியாகிய நீ, சூரன் என்று பெயர் பெற்றவனாகிய நீ, சதுரங்க சேனையுடைய நீ, ஏன் இந்த நீசக் காரியத்தை நீச வழியில் செய்தாய்?"

இவ்வாறு சீதை சொன்னதைக் கேட்ட ராவணன், கண்களை உருட்டிப் பயங்கரப் பார்வையோடு சீதையைப் பார்த்துப் பாம்பைப் போல் சீறினான்.

ராவணனுடைய கோபம் வரவர அதிகரிப்பதைப் பார்த்து, அங்கிருந்த அவனுடைய இளைய மனைவி தான்ய மாலி என்பவள் பக்கத்தில் வந்து அரக்கனைத் தழுவி "அரசனே! உம்மை விரும்பாத இந்த அற்ப மானுட ஸ்திரீயைப் பற்றி ஏன் கஷ்டப்படுகிறீர். அவளுக்கு உம்மை அடையும் பாக்கியமில்லை. அவ்வளவே! இவளுக்கு என்ன அழகு இருக்கிறது? இந்த அவலக்ஷண பூச்சியைப் பார்த்து ஏன் மோகித்து அலைகிறீர்? போகலாம் வாரும். நாம் சந்தோஷமாக விளையாடலாம்" என்று அவனை மிகப் பிரியமாக இழுத்துக் கொண்டு போய்விட்டாள். அரக்கனும் சிரித்துக்கொண்டு அவளுடன் சென்றான்.

* * *

காவல் அரக்கிகளுக்கு, "இவளை எப்படியாவது நீங்கள் வழிக்குக் கொண்டுவர வேண்டும்!" என்று உத்தரவிட்டு, பூமி அதிரத் தன் பரிவாரத்துடன் ராவணன் அசோக வனத்தைவிட்டுப் போய்விட்டான். அவன் போனவுடன் ராக்ஷசிகள் சீதையைச் சுற்றிக் கொண்டார்கள். ராவணன் முன் தைரியமாக இருந்த ஜானகி, தன்னைச் சுற்றிக் கொண்டு நின்ற அரக்கிகளைக் கண்டு பயந்து நடுங்கினாள்.

"உயர்ந்த குலத்தில் பிறந்த உலகம் புகழும் வீரனான ராவணன், உன்னை இவ்வளவு விரும்பும்போது நீ இல்லையென்றா சொல்வது? மூடப் பெண்ணே! ராவணனை யார் என்று எண்ணுகிறாய்! பிரம்மாவினுடைய வமிசத்தில் நேராகப் பிறந்தவன் என்று தெரிந்துகொள். பிரம்மாவின் புத்திரனான புலஸ்த்திய பிரஜாபதியினுடைய சொந்தப் பேரன் ராவணேசுவரன். அநேக யுத்தங்களில் சத்துருக் களையெல்லாம் வென்று புகழ்பெற்ற வீரன். இவனையா நீ புத்தியில்லாமல் அலட்சியம் செய்கிறாய?"என்றாள் ஒருத்தி.

"கர்வப்பட்டுக் கெட்டுப்போகாதே! விச்ரவஸ் ரிஷியின் குமாரன் ராவணன், யாரோ என்று எண்ணவேண்டாம்

அவனை நீ விரும்பிச் சந்தோஷமாயிரு. அவன் இவ்வளவு வேண்டிக்கொள்ள நீ மாட்டேன் என்பதா?" என்றாள் மற்றொருத்தி.

"தேவர்களையெல்லாம் யுத்தம் செய்து துரத்தியடித்து ஜயமடைந்த நம்முடைய ராக்ஷசேசுவரன் உன்னை வா என்கிறான். அவனுக்கு நீ மனைவியாகத்தான் போக வேண்டும். ஏழைப் பெண்ணே! இல்லாவிட்டால் நீ பிழைக்கமாட்டாய்!" என்றாள் இன்னொருத்தி.

"தன் மற்ற மனைவிகளையெல்லாம் உதாசீனம் செய்து, அவர்களை விட நீ மேலானவள் என்று உன்னை ராவணன் விரும்புகிறான். மிக உத்தம ஸ்திரீகளையெல்லாம் விட்டு நீதான் அழகி என்று உன்னிடம் அரசன் வந்து பிரார்த்திக்கிறான். நீயே பட்டமகிஷியாய் இரு என்று உனக்கு வாக்கு அளிக்கிறான். நீ ஏன் மூர்க்கத்தனம் செய்கிறாய்?" என்றாள் மற்றொருத்தி.

"ராவணேசுவரனுக்குச் சமம் உலகத்தில் வேறொருவர் உண்டா? இது உனக்குத் தெரியவில்லையே! தானாக நல்ல பாக்கியம் வந்து உன்னை வேண்டுகிறது. நீ வேண்டாம் என்கிறாய். உன் மடத்தனத்தை என்னவென்று சொல்வது!" என்றாள் வேறொருத்தி.

"தேவர்களுள் சூரியனும் வாயுவுங்கூடப் பயப்படும் ராக்ஷசேந்திரன் வந்து உன்னை வரிக்கிறான். அவனுக்குப் பிரிய பாரியையாக இருக்கும் அதிர்ஷ்டம் உனக்கு வந்திருக்கிறது. கர்வம் கொண்டு ஏமாந்து போகாதே! வந்த பாக்கியத்தை வேண்டாம் என்று தள்ளாதே!" என்றாள் இன்னொருத்தி.

"நாங்கள் சொல்ல வேண்டியதைச் சொன்னோம். இனி உன் இஷ்டம். நீ ஒப்புக்கொள்ளாவிட்டால், நீ சாக வேண்டியதுதான்" என்றாள் மற்றொருத்தி.

# 68. புத்திமதாம் வரிஷ்டம்

தனியாகச் சிறை வைக்கப்பட்ட ஒரு ஸ்திரீ எவ்வளவு தைரியசாலியாக இருந்தாலும், எவ்வளவு திடமான உறுதி கொண்டவளாக இருந்தாலும், பலநாள் சிறையில் வைக்கப் பட்டு வாடி வதங்கிப் போனால், மனத்தாழ்ச்சியடைந்து போவதில் ஏதொரு வியப்புமில்லை.

தன்னைக் காக்க வேண்டியவர்கள் வருவார்கள், வருவார்கள் என்று பல மாதங்கள் எதிர்பார்த்தாள். ராமனும் வரவில்லை; லக்ஷ்மணனும் வரவில்லை மனமுடைந்து நின்ற அவளுக்குத் தைரியம் சொல்வதற்காகவும் எவரும் வரவில்லை. ஏங்கி ஏங்கி மிகக் கஷ்டத்துடன் உயிரை வைத்துக் கொண்டிருந்தாள் சீதை.

ராக்ஷஸிகள் பேச ஆரம்பித்தார்கள்.

"நாங்கள் சொல்வதைக் கேட்கமாட்டாயா? உன் ஜாதி மனுஷ்ய ஜாதி, உனக்குப் புத்தியில்லை. ஓர் அற்ப மனிதனைக் கட்டிக் கொண்டு அழுகிறாய். உனக்குத் தகுந்த அந்தப்புரம் ராவணேசுவரனுடைய அந்தப்புரம். எல்லாச் சுகங்களையும் அடையக்கூடிய இடம். அதை வேண்டாம் என்று தள்ளிவிட்டு உபயோகமற்ற புருஷனைப் பற்றியே தியானித்துக் கொண்டிருக்கிறாய். ஊரிலிருந்து துரத்தப்பட்ட துரதிர்ஷ்ட மனிதன் ஒருவனிடம் உனக்கு ஏன் இவ்வளவு பிரியம்? அவனை ஒருநாளும் நீ அடையமாட்டாய். ராவணன் சொல்வதைக் கேட்டுச் சுகத்தை அடை" என்றார்கள்.

இதைக் கேட்ட சீதை கண்ணீர்விட்டு அழுதாள். "மகா பாபமான வார்த்தைகளைச் சொல்லுகிறீர்கள். நான் ஒரு நாளும் நீங்கள் சொல்வதைச் செய்ய முடியாது. ராமன் ஏழை என்றும் ஊரிலிருந்து துரத்தப்பட்டவன் என்றும் சொல்கிறீர்கள். அதுவெல்லாம் எனக்குத் தெரியும். இந்தக் காரணங்களைக் கொண்டு புருஷனை மனைவி விட்டுவிடுவது மானிட வழக்கமல்ல. ராக்ஷசேசுரன் ஒரு மானுடப் பெண்ணை

விரும்பலாகாது. மானுட ஸ்திரீ எப்படி ராக்ஷசனுக்கு மனைவியாக முடியும்? சூரியனைச் சூரியனுடைய பிரகாசம் தொடர்ந்து நிற்பதுபோல், நான், மணந்த ராமனைப் பற்றி நிற்கிறேன் நான். சசிதேவி இந்திரனைப் பற்றி நிற்பது போல், வசிஷ்ட முனிவரை அருந்ததி பற்றி நிற்பது போல், நான் ராகவனைப் பற்றி நிற்கிறேன்" என்றாள்.

இதைக் கேட்ட ராக்ஷசிகள் இனி இவளிடம் சாந்தமாகப் பேசிப் பயனில்லை என்று, "இவளைத் தின்று விடுவதே நலம்" என்றார்கள்.

ஒருத்தி "எனக்கு மசக்கை. இவள் மார்பை கிழித்து, இவளுடைய இதயத்தை நாளத்துடன் இழுத்தெடுத்துத் தின்னவேண்டும் என்றிருக்கிறது" என்றாள்.

மற்றொருத்தி, "இவளைக் கழுத்தைப் பிசைந்து கொன்றுவிட்டு, துக்கத்தால் செத்துப்போனாள் என்று ராவணனுக்குச் சொல்லிவிடுவோம். வீணாக அரசன் இவளை விரும்பித் துயரப்பட்டுக் கொண்டிருக்கிறான். 'செத்துப் போனாள்' என்று தெரிந்தால், பிறகு நம்முடைய அரசன் சுகமாக இவளை நினைக்காமல் தூங்குவான்" என்றாள்.

"இவளுடைய கல்லீரலும் பிலீகமும் மிக ருசியாயிருக்கும்" என்றாள் இன்னொருத்தி.

இன்னொருத்தி, "இவளைக் கொன்று, எல்லோரும் உட்கார்ந்து சந்தோஷமாகப் பங்கிட்டுக் கொண்டு சாப்பிட்டுத் தீர்ப்போம். வியஞ்சனைகளைக் கொண்டு வாருங்கள். கள்ளைக் கொண்டு வாருங்கள். இவளைத் தின்று விட்டுக் கள்ளும் குடித்துவிட்டு நிகும்பலாதேவி கோவிலில் கூத்தாடுவோம்" என்றாள்.

இப்படியெல்லாம் மிகக் குரூரப் பேச்சுக்களைக் கேட்டும், பயங்கர சொருபங்களைப் பார்த்தும், சீதை 'ஓ!' என்று வாய்விட்டு அழுதாள். எவ்வளவு தைரியமாக இருந்தாலும், இயற்கை வேகத்தை வழியடைப்பது கஷ்டம்

ஆனபடியால் குழந்தைபோல் அழுதாள். அழுதபோதிலும் சித்தம் கலங்காமல் ராமனைத் தியானித்துக் கொண்டே யிருந்தாள்.

'பதினாலாயிரம் ராக்ஷசர்களை ஜனஸ்தானத்தில் நிர்மூலம் செய்த என் ராமன், ஏன் என்னை மீட்டுக்கொண்டு போக இன்னும் வரவில்லை? தண்டகாரண்யத்தில் விராதனை வதம் செய்த வீரர்கள் ஏன் என்னைப்பற்றி இன்னும் சும்மா இருக்கிறார்கள்? நான் இவ்விடம் இருப்பது அவர்களுக்கு இன்னும் தெரியவில்லையென்றே எண்ணுகிறேன். தெரிந்தால் சும்மா இருப்பார்களா?

"கழுகரசன் ஜடாயுவும் அரக்கனால் கொல்லப் பட்டான். அவன் உயிர் வைத்திருந்தால் விஷயத்தைச் சொல்லியிருப்பான். ஆனால் என்னை அரக்கன் தூக்கிப் போவதைப் பார்த்துப் பொறுக்க முடியாமல் கோர யுத்தம் செய்து அவன் உயிர் நீத்து விட்டான். ராமனுக்கு நான் இருக்குமிடம் இன்னும் தெரியவில்லையென்றே எண்ணுகிறேன்.

"ஆனால் தெரியாமலா போகப்போகிறது? இந்த லங்கையும் ராக்ஷசர்களும் அழியாமலா போகப் போகிறார் கள்! கட்டாயம் இந்த நகரத்தில் ஒவ்வொரு வீட்டிலும் அரக்கர் குலத்துப் பெண்கள் விதவைகளாகி, அழுதுபுரண்டு அலையப் போகிறார்கள். இந்த நகரமும் ராவணனும் அரக்கர் குலமும் அழிந்து போவது நிச்சயம்."

இவ்வாறு தனக்குள் யோசித்துக் கொண்டிருந்தாள். யோசித்துத் தைரியம் அடைந்தாள். மறுபடியும் வேறு ஊகங்களை ஊகித்துத் துக்கத்தில் மூழ்கினாள்.

"என்னை இழந்த துக்கத்தினால் ஒருவேளை ராமன் உயிரை விட்டுவிட்டானோ? அப்படியே நடந்திருக்கலாம். இல்லாவிட்டால் இப்படி என்னை விட்டுவிட்டு இவ்வளவு நாட்கள் சும்மா இருந்திருக்க முடியாதே! ஆஹா!

அவனல்லவோ பாக்கியவான். தேவர்களோடு சேர்ந்து விட்டான். நானல்லவோ பாபம் செய்தவள்-இந்த நிலையிலிருக்கிறேன். என் இதயம் கல்லாகவே இருக்கவேண்டும். இவ்வளவு நேர்ந்தும் உயிருடன் இருக்கிறேனே!"

மறுபடி வேறு பயம் தோன்றிற்று. "ஒரு வேளை தவம் செய்தே ஆயுளைக் கழிக்கத் தீர்மானித்துவிட்டு, என்னைப் பற்றிய எண்ணத்தை விட்டுவிட்டார்களோ? இல்லை. இல்லை! அப்படி ஒருநாளும் செய்யமாட்டார்கள். வீரன் தன் கடமையை விட்டுவிட்டுச் சந்நியாச வாழ்க்கையில் புகுவானா? இதை நான் எண்ணியது அறியாமை. நான் இருக்குமிடம் அவர்களுக்குத் தெரியவில்லை என்பதே காரணம்.

"ஒருவேளை என்மேல் ராமனுக்கு இருந்த அன்பு ஓய்ந்துபோய்விட்டதோ? உருவம் மறைந்தால் அன்பும் மறையும் என்கிறார்களே! ஒரு வேளை அப்படியிருக்குமோ? மறைந்தது மறந்து போகும் என்கிறார்களல்லவோ!

"சீ சீ, இந்த எண்ணம் பாபமாகும். என் ராமன் என்னை மறப்பானா? ஒரு நாளும் இல்லை. ராமன் என்னை மறந்து விடும்படியான குற்றம் நான் ஏதும் செய்யவில்லையே! அதுவல்ல காரணம். ஒருவேளை ராவணன் ஏதோ திருட்டும் மோசமும் செய்து வஞ்சித்து ராஜகுமாரர்களைக் கொன்று விட்டானோ?"

இவ்வாறு மாறிமாறிப் பல ஊகங்களை ஊகித்துக் கொண்டு துயரக் கடலில் மூழ்கினாள். உயிரை விடுவதே நலம் என்கிற முடிவுக்கு வந்தாள். சிசும்பா மரத்துக்கிளை ஒன்றில் தன் தலைமயிரைக் கொண்டு சுருக்குப் போட்டுக் கொண்டு துக்கத்திலிருந்து விடுதலை பெறலாம் என்று எண்ணினாள்.

* * *

அரக்கிகள் சீதையைத் தங்கள் எண்ணத்துக்குத் திருப்ப முடியவில்லையே என்று, இன்னது செய்வது என்பது அறியா

மலிருந்தார்கள். அவர்களில் சிலர் காரியம் முடியவில்லை என்று ராவணனுக்குச் செய்தி சொல்லப் போனார்கள். சிலர் அங்கேயே இருந்தார்கள். சீதையைப் பயமுறுத்திக் கொண் டிருந்தார்கள்.

அவர்களிடத்தில் திரிஜடை என்கிற ராக்ஷஸி வந்து அவர்களைக் கண்டித்து, "மூர்க்கிகளே, என்ன உளறுகிறீர்கள்! நான் கண்ட கனவைக் கேளுங்கள். இந்த லங்கை அழிந்து போகும் காலம் நெருங்கிற்று" என்றாள்.

பிறகு தான் கண்ட கோர சுவப்பனத்தை விவரித்துச் சென்னாள்:

"சீதையை அழைத்துப்போக ராமன் சூரியனைப்போல் திவ்யப் பிரகாசம் வீசிக்கொண்டு, லங்கைக்கு வந்துவிட் டதாகக் கனவு கண்டேன். ராவணன் அழிந்து யமனுடைய வீட்டுக்குப் போவதைக் கண்டேன்.

"சீதையை எடுத்து யானையின் மேல் ஏற்றிக்கொண்டு ராமன் செல்வதைக் கண்டேன். ராவணனும் ராக்ஷஸ சமூகம் முழுவதும் அவலக்ஷண வஸ்திரங்கள் உடுத்திக் கொண்டு அவலக்ஷண நிலையில் யமனால் இழுத்துப் போகப்படுவதைக் கண்டேன்."

இப்படித் திரிஜடை ராக்ஷசிகளுக்குத் தான் கண்ட கெட்ட கனவைச் சொல்லி, "இந்தப் புண்ணியவதியை இம்சிக்காதீர்கள். அழிந்து போவோம். இவளுடைய அருளைக் கேட்டுப் பெறுங்கள்" என்று போதித்தாள்.

இப்படித் திரிஜடை சொல்லிக் கொண்டிருந்த சமயத்தில் உயிரை மாய்த்துக் கொள்வதென்று நிச்சயித்த சீதைக்குப் பல நற்குணங்கள் திடீரென்று உண்டாயின. கண்களும் கை கால்களும் மங்களகரமாகத் துடித்தன. மனதில் எதிர்பாராத தைரியமும் தானாக உண்டாயிற்று. உயிரை நீக்கும் யோசனை மறந்து போயிற்று

* * *

வனத்தில் நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் மேலே மறைந்திருந்து பார்த்துக் கொண்டிருந்த ஹனுமான், இனி என்ன செய்யலாம் என்று யோசித்தான்.

லங்கைக்கு வந்து அங்கே சீதையைக் கண்டபின், வேறு என்ன இருக்கிறது என்று வாசகர்கள் எண்ணலாம். ஆனால் காரியம் அவ்வளவு எளிதாக இல்லை. ஹனுமான் யோசித்த விஷயங்களைக் கேளுங்கள்:

"மற்றவர்கள் செய்ய முடியாத காரியத்தைச் செய்து விட்டேன். கடலைத் தாண்டி சீதையிருக்குமிடம் கண்டாயிற்று. ராக்ஷஸர்களுடைய நகரம், அதன் காப்பு முதலிய எல்லா விஷயங்களையும் பார்த்து அறிந்து கொண்டேன். பகைவனுக்குத் தெரியாமல் தூதனாகிய நான் செய்ய வேண்டியது செய்தாயிற்று. ஆனால் நிலைமை அபாயமாக இருக்கிறது. கண்ட விஷயங்களை ராமனிடமும் அரசனிடமும் சொல்ல நான் இப்போது திரும்பிப் போய்விட்டேனானால், இங்கே நடக்கப் போகும் சம்பவங்கள் என்ன? ராம லக்ஷ்மணர்களும் வானர சேனையும் இவ்விடம் வருவதற்குள் சீதை துக்கத்தைப் பொறுக்கமுடியாமல் உயிரை விடுவாள். அப்போது எல்லாக் காரியமும் அழிந்ததாகவேயாகும். சீதையைக் கண்டது மட்டிலும் போதாது. அவளுக்கு ஆறுதல் மொழிகள் சொல்லி, ராமனுடைய செய்தியை அவளுக்குச் சொல்லித் தைரியப்படுத்திவிட்டே செல்லவேண்டும். சீதையிடம் பேசாமல் திரும்பினால், ராமனுக்கு என்ன திருப்தியாகும்? ஆனபடியால் எப்படியாவது வழிதேடிச் சீதையுடன் பேசியே தீரவேண்டும்"

ஆஞ்சனேய ஸ்தோத்திர மாலையில், "புத்திமதாம் வரிஷ்டம்" என்று ஒரு பெயர் வரும்; அதாவது "புத்திமான்களில் சிறந்தவன்" என்று; அது உண்மைதானே!

"சீதையுடன் எந்த பாஷையில் எந்த உருவத்தில் நின்று நான் பேசுவது நலம்? இந்த அசோகவனத்தில் திடீர் என்று

ஒரு குரங்கு வந்து ஏதேனும் பேசவந்தால் நிச்சயமாகச் சீதை, 'இது ஒரு மோசம்; ராவணனுடைய வஞ்சக வேலை' என்று எண்ணுவாள். பயப்படுவாள்; கூக்குரலும் இடுவாள். அவள் இப்போது இருக்கும் மனநிலையில் இவ்வாறுதான் நடக்கும். காவலிருக்கும் ராக்ஷசிகள் – இப்போது தூங்கிப் போயிருப்பவர்களும் எழுந்திருந்து என்னைக் கண்டு கொள் வார்கள். 'இவன் பகைவனுடைய தூதன்; மோச வேஷக்காரன்' என்று ராக்ஷசர்களை அழைத்து வருவார்கள். இவ்விடம் பெரிய யுத்தம் நடைபெறும். நானும் சும்மா இருக்கமுடியாது. எதிர்ப்பேன். அவர்களை வதம் செய்வேன்' உண்மை. ஆனால் சீதையை மீட்கும் காரியம் கெட்டுப் போகும். என்னைப் பிடித்துச் சிறையில் வைப்பார்கள். பிறகு ராமனுக்கு விஷயம் சொல்லக்கூடியவர்கள் யாருமே இல்லை. அப்படி ஆகாமல், நான் பிடிபடாமல் யுத்தம் வெற்றிகரமாகச் செய்வேன் என்றாலும், சங்கடமும் காயங்களும் பட்டு, பிறகு கடல் தாண்டும் சக்தியை இழந்தாலும் இழப்பேன். நான் வந்து சீதையைப் பார்த்தது பயனற்றுப் போகும். வழியில் பரபரப்பாக எந்தக் காரியமும் செய்யலாகாது. என்னை நம்பியல்லவா அரசனும் ராமனும் காத்திருக்கிறார்கள்? என்னுடைய சிறிய தவறு பெரும் நஷ்டத்தில் முடியும். எப்படியும் சீதையுடன் பேசிவிட்டே திரும்பவேண்டும். அப்படிப் பேசுவதில் அவளுக்குப் பயம் உண்டாகாதபடி முதலில் அவள் உள்ளத்தில் நம்பிக்கையும் தைரியமும் உண்டாக்க வேண்டும். என்னை ராவணன் என்றாவது, அவனுடைய ஆள் என்றாவது சந்தேகப்படாமல் இருப்பதற்கு என்ன செய்யலாம்?

'சரி ராமனுடைய குணங்களையும் சரித்திரத்தையும் மதுரமான முறையில் அவள் மட்டும் கேட்கும்படி சொல்லு வேன். அப்போது சீதையின் உள்ளத்தில் சந்தோஷமும் நம்பிக்கையும் உண்டாகும். பயப்பட மாட்டாள்; பிறகு காரியம் நிறைவேறும்.

இவ்வாறு யோசித்து மரத்தில் மறைந்திருந்தே மெது வான குரலில் 'ராம ராம' என்று ஜபம் செய்ய ஆரம்பித்தான்

## 69. ஜானகி ஆறுதல் அடைந்தாள்

*மரத்தில் மறைந்திருந்த அனுமான் மிருதுவான குரலில் சீதையின் காதில் விழும்படி ராமனைப்பற்றி மதுரமாகப் பேசலானான்.*

* * *

"ராஜா தசரதன் கோசல தேசத்தை ஆண்டான். அவனுடைய சேனை ரதங்களும், யானைகளும், குதிரைகளும் அடங்கிய பெரும் சேனை. புண்ணியசீலன், மிகப்பெரும் காரியங்களைச் சாதித்தவன். சத்தியத்தைக் காத்தவன். பெரும் புகழ்பெற்ற அரசர்களுக்குள் முதன்மைப் பதவி அடைந்தவன். ரிஷிகளுக்குச் சமமான குணமும் சீலமும் பெற்ற சக்கரவர்த்தி. தேவேந்திரனைப்போல் சாமர்த்தியம் அடைந் தவன். யாரையும் துன்பப்படுத்தமாட்டான். யாரையும் வெறுக்காதவன். யாருக்கும் தீமை செய்யாதவன். அவன் முயற்சிகள் எதுவும் வீணாவதில்லை. ஆனபடியால் 'சத்திய பராக்கிரமன்' என்கிற பெயரை அடைந்த அரசன், இக்ஷுவாகு குலத்து ஸ்ரீமான், அரசர்களுக்குள் ஏழு பூ மண்டல அதிபதி, சுகம் தருபவன், சுகமாக இருப்பவன். அவனுடைய நான்கு குமாரர்களில் மூத்தவன் ராமச்சந்திரன். பூரண சந்திரனைப் போன்ற முகத்துடையவன். மிகுந்த அறிவாளி. ராமன் சிரேஷ்டமான பண்பு அடைந்து, தனுர் வேதம் நன்றாகக் கற்று எல்லோராலும் விரும்பப்பட்டவன். ராஜ்யத்திலுள்ள மக்களிடம் மிகுந்த அன்பு கொண்டவன். தருமத்தில் தளராத பற்றுடையவன். வீரன், பட்டத்துக்கு உரியவன். ஆயினும் முதுமையடைந்த தன் தகப்பனாரின் புகழும் பெயரும் சத்தியமும் மாசு அடையாதிருப்பதற்காகத் தன் மனைவி சீதையுடனும் தம்பியுடனும் ராஜ்யத்தைவிட்டு

வனம் சென்று அங்கே வசித்து வந்தான். அரண்யவாசம் செய்யும்போது அநேக கொடிய ராக்ஷசர்களை எதிர்த்து ரிஷிகளைக் காப்பாற்றினான். கரன், தூஷணன் என்ற ராக்ஷஸத் தலைவர் களையும் அவர்களுடைய பெரும் சேனையையும் வதம் செய்து அழித்தான். இதை அறிந்த ராவணன் பழி வாங்குவதற்காக மாய மான் வடிவத்தில் ஒரு ராக்ஷஸனை ஏவி, ராமனை ஏமாற்றி, ராஜகுமாரர்கள் பக்கத்தில் இல்லாத சமயம் பார்த்து சீதையைப் பலாத்காரமாகத் தூக்கி எடுத்துக் கொண்டு போய் விட்டான். துயரம் அடைந்த ராமன் மனைவியைத் தேடிக்கொண்டு சென்றான். சுக்ரீவன் என்கிற வானரனை அடைந்து, அவனுடன் நட்புக் கொண்டான். வாலி என்கிற வானர ராஜனைக் கொன்று, தம்பி சுக்ரீவனுக்கு வானர ராஜ்யம் சம்பாதித்துத் தந்தான். அந்த சுக்ரீவன் தன்னுடைய வானர வீரர்களைப் பூமண்டலம் முழுவதும் சீதையைத் தேடும்படி அனுப்பினான். விரும்பிய வடிவம் எடுக்கும் வானர வீரர்கள், எல்லாத் திசைகளிலும், காணாமற் போன சீதையைத் தேடினார்கள். அவர்களில் நானும் ஒருவன். சம்பாதியிடம் பெற்ற துப்பைக்கொண்டு, நூறு யோசனை கடலைத் தாண்டி இவ்விடம் வந்தேன். ராகவன் எனக்குத் தன் தேவியைப் பற்றிச் சொன்ன ரூபம், நிறம், லக்ஷணம் இவற்றுக்கெல்லாம் ஒத்த உருவத்தை இப்போது நான் காண்கிறேன்."

இவ்வாறு மெதுவாகச் சொல்லி ஹனுமான் நிறுத்திக் கொண்டான்.

இந்த மதுரமான சொற்கள்-யாராலோ எங்கிருந்தோ சொல்லப்பட்டதைக் கேட்ட ஜானகி வியப்படைந்தாள். மகிழ்ந்தாள். நான்கு பக்கமும் பார்த்தாள். 'யார் இப்படி மிக இனிய விஷயங்களைப் பண்படுத் தெளிந்த பாஷையில் பேசினது?' என்று நான்கு பக்கமும் மேலும் கீழும் பார்த்தாள்.

பேச்சுக்கு ஒத்த மனித உருவம் எங்கும் காணவில்லை. மேலே மரத்தில் ஓர் அழகிய வானரத்தைக் கண்டாள்.

நிகரற்ற புத்திமானும் வானர ராஜனுக்கு மந்திரியு மான வாயு புத்திரன் பால சூரிய தேஜஸ் கொண்ட சிறு வானர வடிவமாயிருப்பதனைப் பார்த்தாள் ஜானகி. வாசகர் களே! ஜானகியின் பார்வை ராம தூதன்மேல் பட்டதும், அவனுடைய மகிழ்ச்சியை நீங்கள் கற்பனா சக்தியைக் கொண்டு உணர்வீர்களாக! உணர்ந்தால் உங்கள் உள்ளம் நிர்மலமான கோயிலாகும். உங்கள் எல்லாத் துக்கமும் தீரும். உங்கள் உள்ளத்தில் இடம் கிடைக்குமோ என்று சமயம் பார்த்துக் கொண்டிருக்கும் நாராயணன், தன் பாற்கடலை யும் விட்டு வந்து உங்கள் உள்ளத்தில் புகுவான். நம்முடைய உள்ளங்களே அவனுக்குப் பள்ளியாகும்.

''அங்கு அனந்தன் அணைக்கிடக்கும் அம்மான்
அடியேன் மன்மதன் அணைகிடக்கும் வந்து''

என்று முதலாழ்வார் பாடியபடி.

ஹனுமானைப் பார்த்த ஜானகி, "இதென்ன நான் கேட்ட சொற்களும், காணப்படும் உருவமும் எல்லாம் கனவாகத்தான் இருக்கவேண்டும். எப்போதும் தியானித்துக் கொண்டிருக்கும் எண்ணங்கள் கனவில் காணப்படுமல்லவா? நான் தியானித்துத் தியானித்து வந்த என் பிராணநாதனுடைய கதையை, யாரோ சொல்லுவது போல் காதில் படுகிறது. இது உண்மையாக இருக்காது. கனவே. கனவில் குரங்கின் உருவம் பார்த்தால் பந்துக்களுக்குக் கெடுதிநேரும் என்கிறார்களே! ராமனுக்கு மங்களம் ஆகுக! லக்ஷ்மணனுக்கு மங்களம் ஆகுக! மிதிலையில் எல்லோரும் க்ஷேமமாக இருக்கவேண்டும்-இல்லை, இல்லை! இது கனவல்ல. இன்னும் அதே உருவம் ஸ்திரமாகத் தெரிகிறது; காணும் காட்சி திடமாகவும் இருக்கிறது; கனவல்ல. தவிர, நான் எங்கே தூங்கினேன்? தூங்கினால் அல்லவோ கனவு

காணுவேன். இது கனவல்ல, உண்மையே. ஓ. தேவர்காள்! உண்மையில் இந்த வானரம் என் பிராணநாதனிடமிருந்து வந்த தூதனா? அப்படியே ஆகுக. வாக்கினுக்குத் தேவனான வாசஸ்பதியே. உன்னை வணங்குகிறேன். சுயம்புவே, உன்னை வணங்குகிறேன், தேவர்களே! என்னைக் காப்பாற்றுவீர் களாக. இவன் ராமதூதனே ஆகுக" என்று எல்லாத் தேவர் களுக்கும் பிரார்த்தனை செலுத்தினாள்.

ஜானகியைக் கண்ட மகிழ்ச்சியால் ஹனுமான் திவ்விய மங்கள தேஜஸுடன் பொலிந்தான். கீழே இறங்கிச் சீதைமுன் கை கூப்பி வணங்கி நின்றான்.

"தாயே, தாமரையிதழ்களைப் போன்ற உம்முடைய கண்ணிதழ்களினின்று கண்ணீர்த்துளிகள் விழுகின்றனவே! யார் நீர்! கண்ணீர் விட்டு மரக்கிளைமேல் சாய்ந்து துயரம் படர்ந்த முகத்தோடு நிற்கிறீர். நீர் தேவகன்னியா? நாககன் னியா? உம்முடைய தேக காந்தியைப் பார்த்து இப்படிக் கேட்கிறேன். சந்திரனிடமிருந்து பிரிந்து வந்த மோஹினி தேவியா? வசிஷ்ட பகவானோடு ஏதேனும் வித்தியாசப்பட்டு இறங்கி வந்த அருந்ததியா? கவனித்துப் பார்த்தால் மானுட ஸ்திரீயாகவே காணப்படுகிறீர். தயவு செய்து நீங்கள் யார் என்று சொல்லுவீர். மங்களம்! மங்களம்! ராவணனால் ஜன ஸ்தானத்திலிருந்து பலாத்காரமாகத் தூக்கிக்கொண்டு வரப் பட்ட சீதாதேவியா நீர்! ராமச்சந்திரனின் மனைவி சீதையைப் பார்க்கும் பாக்கியம் பெற்றேனா?" என்று ஹனு மான் தன்னுடைய மதுரஸ்வரத்தில் வணங்கிக் கேட்டான்.

சீதா பரவசமானாள், "அப்பனே! நான்தான் சீதா. விதேஹ ராஜனுடைய புத்திரி. ராமச்சந்திரனுடைய பாரியை. பன்னிரண்டு வருஷம் சகல சுகங்களையும் அவனுடன் அயோத்தியில் அனுபவித்தேன். பதின்மூன்றாம் வருஷம் சக்கரவர்த்தியானவர், அவருடைய மூத்த குமாரனாகிய என் ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய எல்லா ஏற்பாடுகளை

யும் செய்தார். அப்போது மகாராஜனுடைய இளைய தேவி கைகேயி தன் மகனுக்குப் பட்டம் கொடுக்க வேண்டும்; ராமனைக் காட்டுக்கு அனுப்பிவிட வேண்டும்; இல்லாவிடில் உணவு உண்ணமாட்டேன்; தண்ணீர் அருந்தமாட்டேன்; உயிரை விடுவேன் என்று அடம் செய்து வற்புறுத்தினாள். முந்தி, கைகேயிக்குக் கொடுத்திருந்த வாக்குப்படி, அரசன் அவள் பிடிவாதம் பண்ணிக் கேட்டதற்கு ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. மகாராஜன் ராஜ்யத்தை பரதனுக்குக் கொடுத்துவிடு என்று ராமனைக் கேட்டுக் கொண்டார். ராமன் ஒரு க்ஷணமும் தாமதிக்கவில்லை. 'தகப்பனார் தந்த வார்த்தையை சத்தியமாக்குவதே என் பாக்கியம். ராஜ்ய போகத்தைவிடத் தந்தையைச் சத்தியவந்தனாக்குவதே என் ஆசை. என் சந்தோஷம்' என்று ராஜ்யத்தைப் பற்றிய எண்ணத்தை உடனே முற்றிலும் துறந்துவிட்டு வனம் சென்றார். புருஷன் வனம் சென்றால் நான் பிரிந்திருக்க முடியாது. நானும் கூடவே வனம் செல்வேன் என்று வற்புறுத்தினேன். முந்தியே தம்பி லக்ஷ்மணன் மரவுரி தரித்து, அண்ணனுக்குத் துணையாக வனம்போக நிச்சயித்து விட்டிருந்தான். மூவரும் வனம் சென்றோம். தண்டகாரண்யத்தில் வசித்து வந்தோம். ஒரு நாள் துராத்மாவான ராவணன் வந்து என்னைப் பலாத்காரமாகத் தூக்கி, இவ்விடம் இந்த அசோக வனத்தில் சிறை வைத்திருக்கிறான். பன்னிரண்டுமாத காலமாக வரையறை வைத்திருக்கிறான். இன்னும் இரண்டு மாதம் மீதியிருக்கிறது. இது முடிந்தவுடன், என் உயிரை நீப்பேன்" என்றாள். துக்கத்துக்கு மேல் துக்கமாக வந்தது, திக்கற்று நின்ற பிராட்டிக்கு.

* * *

இவ்வாறு ஹனுமான் சொன்னதும், ஜானகி சொன்னதும் இரண்டு சிறிய அத்தியாயங்களில் வால்மீகி ராமாயணத்தில் பாடப்பட்டிருக்கிறது. பெரிய கதையை

ஆஞ்சேனயனுடைய வாயாலும், ஜானகியின் வாய் மொழியாலும் வால்மீகி முனிவர் தந்திருக்கிறார். உலகத்தை அளந்த திரிவிக்கிரமன் பலியினிடம் வாமன வடிவம் எடுத்துச் சென்றதுபோல் அழகிய சிறிய உருவத்தில் தந்திருக்கிறார். ஆஞ்சனேயனும் பிராட்டியுமே நமக்கு ராமாயணம் சொல்லுகிறார்கள். நமக்கு வேறு என்ன பாக்கியம் வேண்டும்? ஹனுமான் சொன்ன இந்த ராம கதையை ஜானகி சொன்ன இந்த ராம கதையை பக்தியோடு படித்து, வாமனன் மகா பலிச் சக்கரவர்த்தியை வசப்படுத்தி, அவன் அகங்காரத்தினின்று அவனைக் காத்தது போல், நம்முடைய அகங்கார மமகாரங்களினின்று நாமும் காக்கப்படுவோமாக.

* * *

"பன்னிரண்டு மாதத் தவணையில் இரண்டு மாத காலம் மிஞ்சியிருக்கிறது. அது முடிந்ததும் என் உயிரும் முடிவு அடையும்" என்று சீதை தன் கதையைச் சொல்லி முடித்தாள்.

துக்கத்தில் மூழ்கி இப்படிப் பேசிய சீதைக்கு, ஹனுமான் ஆறுதல் தரும்படியான வார்த்தைகள் சொன்னான்:

"வைதேஹி! உத்தமர்களுக்குள் உத்தமன், வீரர்களுக்குள் வீரனான ராமன், சக்கரவர்த்தித் திருமகன், உமக்கு க்ஷேமத்தைச் சொல்லியனுப்பியிருக்கிறான். அவன் அன்புக்குப் பாத்திரமான தம்பி, உம்முடைய நிலையை நினைந்து நினைந்து இடைவிடாது துயரப்பட்டுக் கொண்டிருக்கும் லக்ஷ்மணனும் தன்னுடைய வணக்கத்தைச் சொல்லச் சொல்லி என்னை அனுப்பியிருக்கிறான்" என்றான்.

ராம லக்ஷ்மணர்களுடைய பெயர்களையும், அவர்கள் சொல்லியனுப்பிய நற்செய்தியையும் கேட்ட சீதையினுடைய உள்ளம், மகிழ்ச்சியால் பொங்கிற்று.

"ஆகா! என்ன சந்தோஷம் அடைந்தேன்! உயிரை வைத்திருந்தால் என்றைக்காவது நன்மையை அடையலாம்.

விட்டுவிட்டால் அது இல்லை என்று பாமர ஜனங்கள் சொல்வதன் உண்மையை இப்போது உணர்ந்தேன்" என்றாள்.

திடீர் என்று முன்பின் அறியாத இருவருக்கும் அற்புத மான நம்பிக்கையும் பிரீதியும் உண்டாயின. ஹனுமான் தன்னுடைய ஆனந்த பரவசத்தாலும், அவளுடைய துக்கத்தை எப்படியாவது தீர்த்துத் தைரியம் உண்டாக்க வேண்டுமென்கிற கருத்தைக் கொண்டும் சீதைக்குப் பக்கமாக அணுகி நின்றான்.

திடீர் என்று சீதை மறுபடியும் பயந்து போனாள். ஹனுமானுடைய சொற்களைக் கேட்டு உண்டான நம்பிக் கையை இழந்து, சந்தேகத்தால் மறுபடியும் பீடிக்கப்பட்டாள். மரத்தின்மேல் சாய்ந்திருந்தவள் அதை விட்டுவிட்டுக் கண்ணை மூடிக்கொண்டு விலகி உட்கார்ந்தாள். ஹனுமான் இதைக் கண்டு, மிக வினயமாகக் கைகூப்பிய வண்ணம் நின்றான்.

"நான் ஏமாந்தேன். நீ ராவணனே! முன் சந்நியாசி வேஷம் பூண்டு வந்து வஞ்சித்தாய். இப்போது மற்றொரு வேஷம் பூண்டு வந்து ஏதோ பேசுகிறாய். இதுவெல்லாம் உனக்கு நன்மையல்ல. இப்படி என்னை வருத்தாதே ராவணா. துக்கத்தில் மூழ்கி அன்ன ஆகாரமின்றியிருக்கும் என்னை மாயங்கள் செய்து தொந்தரவு செய்யாதே! உனக்கு இது நல்லதல்ல. விலகிப்போ!" என்றாள் ஜானகி.

பிறகு மறுபடியும் யோசிக்கலானாள்; 'இல்லை. இல்லை. இவனைப் பார்த்தால், எனக்கு அடக்கமுடியாத பிரீதியும் நம்பிக்கையும் உள்ளத்தில் உண்டாகின்றன. இவன் பகைவ னாக இருக்க முடியாது. இவனை நான் சந்தேகித்தல் தகாது.' இவ்வாறு யோசித்து,

"வானரமே! உண்மையில் நீ ராமனிடமிருந்து வந்த தூதனா? உனக்கு மங்களம் ஆகுக! ராமனைப்பற்றிச் சொல்லுவாய். நான் உள்ளம் குளிரக் கேட்கிறேன்!" என்றாள்.

உடனே மீண்டும் சந்தேகத்தில் மூழ்கினாள். பிரமை பிடித்து இப்படி நற்செய்தி வந்ததாக எண்ணுகிறேனா? கனவா? மகிழ்ச்சி தரும் இந்தக் கனவைக் காண்கிறேன். இந்தக் கனவு தீர்ந்து போகுமா? எனக்கு ஆசை காட்டித் துயரம் உண்டாக்குவதற்கே இப்படிக் கனவு வந்திருக்கிறதா? சித்தப் பிரமையால் இப்படியெல்லாம் காண்கிறேனோ? இல்லை, சரியாகத்தானே எல்லாம் எண்ணி யோசித்து உணர்ந்து பேசி வருகிறேன்! பிரமை பிடித்த நிலையில் இல்லை. நல்ல நிலையில்தான் இருக்கிறேன். ஆனால் நூறு யோசனை கடலைத் தாண்டிவிட்டு இங்கே வந்தேன் என்கிறான் இவன். இது உண்மையாயிருக்க முடியாது. இவன் ராவணனே!' என்று மனத்தில் தீர்மானித்துக் கொண்டு, ஹனுமானைக் கண்ணெடுத்தும் பார்க்காமல் மௌனமாக உட்கார்ந்திருந்தாள்.

ஹனுமான் சீதையின் பயத்தையும் சந்தேகத்தையும் உணர்ந்தான். அரக்கனால் வஞ்சிக்கப்பட்டவள் இப்படிப் பயப்படுவதும் இயற்கையே என்று கண்டான். என்ன செய்வது என்று யோசித்து உடனே தீர்மானித்தான். 'இவளுடைய உள்ளத்தில் மகிழ்ச்சியும் நம்பிக்கையும் உண்டாக்க வேண்டும். ராமனுடைய நற்குணங்களை எடுத்து இவள் காதில் படும்படியாகத் துதிப்பேன். அந்த இனிய மொழிகள் தாமாகவே இவளுடைய பயத்தையும் சந்தேகத்தையும் போக்கும்' என்று எண்ணிப் பேசலானான்.

"சூரியனுடைய தேஜஸ் பெற்ற ராமன், குளிர்ந்த சந்திரதரிசன இன்பத்தை மக்களுக்குத் தன் தரிசனத்தால் கொடுக்கும் ராமன், பூமியை ஆளும் அரசர்கள் அனைவரும் குபேரனைப்போல் மதிக்கும் ராமன், மகாவிஷ்ணுவைப்போல் பராக்கிரமம் பெற்ற ராமன், பிருகஸ்பதிக்குச் சமமான அறிவும், மன்மதனுக்கு ஒரு மன்மதனைப் போன்ற அழகும் கொண்ட ராமன், உண்மையும், மதுரமும் கலந்த பேச்சை

எப்போதும் பேசும் ராமன், நியாயமும் இடமும் பார்த்தே கோபம் கொள்ளும் நிகரற்ற வீரன் ராமன் அனுப்பிய தூதன் நான். அரக்கனை மானாகக் காட்டி வஞ்சித்து உம்மைத் தனிமைப்படுத்திவிட்டு, அந்தச் சமயத்தில் பலாத்காரமாக உம்மை ராவணன் பிடித்து எடுத்து வந்து விட்டான். இந்த அக்கிரமத்தின் பயனை ராவணன் சீக்கிரம் அடைவான். அதை உம் கண்ணால் பார்ப்பீர். சீக்கிரத்தில் ராம லக்ஷ்மணர் களுடைய பாணங்கள் பாய்ந்து வந்து லங்கையை எரிக்கப் போகின்றன. அரக்கர்கள் கூட்டத்தையும் ராவணனையும் அழித்து நிர்மூலம் செய்வதைக் காண்பீர். ராமனால் அனுப்பப்பட்டு உம்மிடம் வந்திருக்கிறேன். உம்முடைய க்ஷேமத்தைத் தெரிந்து கொண்டுபோக வந்திருக்கிறேன். உம்முடைய க்ஷேமத்தை ராமச்சந்திரனுக்காக நான் வணக் கமாக விசாரிக்கிறேன். லக்ஷ்மணனுக்காக அவன் வணக்கத்தை உமக்குச் செலுத்துகிறேன். ராம லக்ஷ்மண சுக்ரீவர்கள் இடைவிடாமல் உம்முடைய நினைவாக இருக்கி றார்கள். உயிருடன் நீர் இருப்பதைப் பார்த்தது என்னுடைய பாக்கியம். இனித் தாமதமில்லை. சீக்கிரத்தில் ராமனும் லக்ஷ்மணனும் சுக்ரீவனும் வானரசேனையும் லங்கையில் வந்து இறங்குவார்கள். சுக்ரீவனுடைய அமைச்சன் நான். ஹனு மான் என்பது என் பெயர். கடலைத் தாண்டிக் குதித்து லங்காபுரியில் இறங்கியிருக்கிறேன். துராத்மாவான ராவணனுடைய தலைமேல் என் காலை வைத்தேன் என்று எண்ணுவீராக. என் பராக்கிரமத்தால் கடலைத் தாண்டி உம்மைப் பார்க்க வந்த ராமதூதன் நான். என்னைச் சந்தேகிக்க வேண்டாம் தேவி, என் வார்த்தையை நம்புவீராக" என்று ஹனுமான் கண்களில் நீர் ததும்பச் சொன்னான்.

இப்படி ஹனுமான் பேசிய இனிய மொழிகள் சீதையின் பயத்தைக் கரைத்து விட்டன. தைரியமும் நம்பிக் கையும் கொண்டாள்.

"வானரனே! நான் சந்தேகித்ததைக் கண்டு நீ வருத்தமடையக்கூடாது. வஞ்சக அரக்கர்களால் மோசம் செய்யப்பட்ட நான் இப்படிப் பயப்படுகிறேன். ராமனிடமிருந்து வந்த நண்பனே, நீ எப்படி ராமனைச் சந்தித்தாய்? ராஜகுமாரனான ராமன் வானரர்களை எப்படி நட்பு கொண்டான்? இந்த சரித்திரத்தை விவரமாகச் சொல்லுவாய்" என்றாள்.

மறுபடியும் ஹனுமான் அவளுடைய நம்பிக்கையை ஊர்ஜிதம் செய்ய, ராம லக்ஷ்மணர்களுடைய குணவிசேஷங் களையும் சீலத்தையும் ரூப லக்ஷண சம்பத்தையும் வர் ணித்தான்.

"உலகத்தையெல்லாம் தன் அன்பினால் ஆட்கொள்ளும் ராமன், என்னையும் என்னுடைய அரசன் முதலான வானரர் களையும் வசீகரித்ததில் என்ன வியப்பு?"

பிறகு விஸ்தாரமாக நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் அவளுக்கு எடுத்துச் சொன்னான். வாலிக்கும் சுக்ரீவனுக்கும் இருந்த பகை, எவ்வாறு ராம லக்ஷ்மணர்களை முதலில் சுக்ரீவன் சந்தித்தான், அவர்கள் எப்படி நண்பர்களானார் கள், வாலியை வதம் செய்து, அவனுக்கு வானர ராஜ்யம் சம்பாதித்துத் தருவதாக ராமன் வாக்களித்தது, சீதை கீழே போட்ட ஆபரணங்களை வானரர்கள் எடுத்து வைத்தி ருந்தது, ராமனுக்கு அவற்றைக் காட்டியது, அவற்றைக் கண்டதும் அவனுடைய துக்கம் இருமடங்கானது, சுக்ரீவனு டைய பட்டாபிஷேகம், மழைக்காலம் முடிந்ததும் வானரப் படை பூமண்டலம் முழுவதும் தேடிப்போனது, தெற்கே சென்ற அங்கதன் முதலானோர் சீதையைக் காணாமல் பிராயோபவேசம் செய்யத் தீர்மானித்தது, சம்பாதியைக் கண்டு அவனிடம் உறுதியான துப்பு அடைந்தது, அதன் பின் தான் கடலைத் தாண்டிவந்தது, தான் ராவணனுடைய அந்தப்புரம் எல்லாம் தேடியது- இவை எல்லாவற்றையும்

சொன்னான். எல்லா நிகழ்ச்சிகளையும் சொல்லிவிட்டு, தான் கொண்டுவந்திருந்த கணையாழியையும் அவளுக்குத் தந்தான்.

சீதை மோதிரத்தை வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டு ஆனந்தப் பரவசமானாள். இது ஒரு ராவணன் மோசமோ, அரக்கர் மாயமோ என்கிற பீதி முற்றிலும் ஒழிந்து, ஹனுமானிடம் பரிபூரண நம்பிக்கையும் அளவு கடந்த பிரியமும் அடைந்தாள்.

"அப்பனே, நான் எப்படிப்பட்ட தவறு செய்தேன்; உன்னையா சந்தேகித்தேன்!" என்று தன்னை நொந்து கொண்டாள்.

வாயு புத்திரனான ஹனுமான், தன்னை யார் என்பதையும் தன் பிறப்பைப் பற்றியும் எடுத்துச் சொன்னான். "வாயு பகவானுடைய அனுக்கிரகம் பெற்றவன் நான். சொல்லிக் கொள்ளக் கூடாதாயினும் உம்முடைய துக்கத்தைத் தீர்ப்பது அவசியம், அதற்காகச் சொன்னேன். வானர வீரர்களும் படையும் வந்து அரக்கனையும் அவன் ராஜ்யத்தையும் வெகு சீக்கிரத்தில் நிர்மூலம் செய்துவிடப் போகிறார்கள். நான் திரும்பிப் போய் விஷயத்தைச் சொல்ல வேண்டியதுதான் தாமதம்" என்று சொல்லி, தேவியின் பிரிவால் ராமன் படும் துக்கத்தையும், அவன் விரத வாழ்க்கையைப் பற்றியும் ஜானகியின் மனம் உருகும்படி எடுத்துச் சொன்னான்.

சீதை தன் துக்கத்தையும் மறந்து ராமனுடைய துயரத்தைப் பற்றி வருந்தலானாள்.

## 70. பிராட்டியும் மாருதியும்

"அன்புக்குரிய வானர சிரேஷ்டனே! நீ கொண்டு வந்த செய்தியைக் கேட்டு நான் மகிழ்வதா, துக்கப்படுவதா என்பது தெரியவில்லை, உன் மொழியெல்லாம் அமிருதம் கலந்த விஷம்போல் என் உள்ளத்தில் பாய்கிறது. அவர் என்னை

மறந்து விடவில்லை, என்னைத் தேடுகிறார் என்பது ஆனந்தம் தருகிறது. துக்கப்படுகிறார், என்னையே நினைத்து நினைத்து துயரப்படுகிறார் என்பது என்னுடைய துக்கத்தை அதிகப்படுத்துகிறது."

இவ்வாறு ஜானகி உள்ளதை உள்ளதுபோல் சொல்லி ஆறுதல் அடைந்தாள். மனித வாழ்க்கையில் சுகமும் துக்கமும், சந்தோஷமும் துயரமும் ஒன்றோடு ஒன்று கலந்து மக்களை இயக்குகின்றன. ராமன் தன்னை மறக்கவில்லை. தன்னையே நினைத்து நினைத்து வாடித் துயரப்பட்டு வருகிறார், தேடித்தேடி அலைந்து துக்கப்பட்டு வருகிறார் என்கிற செய்தி, சீதைக்கு மிக்க ஆறுதலும் சந்தோஷமும் தந்தன. ஆனால், கூடவே துயரமும் தந்தது.

சீதை சொன்னாள்: "மனித ஜன்மத்தில் சந்தோஷம் விசனம் என்கிற இரண்டு கயிறுகளினால் உயிரானது கட்டி இழுக்கப்படுகிறது. இதில் யாரும் தப்ப முடியாது. ராமனும், லக்ஷ்மணனும், நானும் இந்த இயற்கை விதிக்கு உட்பட்டிருக்கிறோம். பெரும் சுழிக்காற்றில் அகப்பட்டுக் கடலில் தள்ளாடும் படகைப்போல் என் பிராண நாதன் துக்கப் படுகிறார். அவர் எப்போது வருவார்? அன்புக்குரிய வானர சிரேஷ்டனே! இந்த இலங்கையையும், ராவணனையும் மற்ற அரக்கர்களையும் எப்போது வந்து வதம் செய்வார்? இந்த ராக்ஷசன் எனக்கு வைத்திருக்கும் காலவரைக்குள் இது நடக்க வேண்டுமே! இதை என் நாதனிடம் சொல்லுவாய். இரண்டு மாதங்கள்தான் மிஞ்சி நிற்கின்றன. ராவணனை நல்ல வழியில் செலுத்த அவன் தம்பி விபீஷணன் எவ்வளவோ முயன்றான். "சீதையைக் கொண்டுபோய்த் திருப்பி ஒப் படைத்துவிடு: லங்கையும் ராக்ஷச குலமும் தப்பிப் பிழைக்கும்" என்று விபீஷணன் எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். எல்லாம் பயனில்லாமல் போயிற்று. என் உள்ளத்தில் அந்தராத்மா தைரியமாக இருக்கிறது. ராவணன் அழியுங் காலம் நெருங்கி வருகிறது. யமனை அவனே தேடுகிறான்.

அவன் அழிவது நிச்சயம். நாதன் வந்து என்னைச் சீக்கிரமே வெற்றியுடன் அடையப் போகிறார். இதைப்பற்றி எனக்குச் சந்தேகமில்லை. பாவத்தையறியாத என் உள்ளத்தில் காணும் நிகழ்ச்சி ஒருநாளும் பொய்யாகாது."

இவ்வாறு சீதை கண்களில் நீர் ததும்பப் பேசிக் கொண்டே போனாள். சீதையின் துக்கத்தைப் பார்த்து ஹனுமானுக்குப் பொறுக்க முடியவில்லை.

"ஜானகி, தாயே! உடனே போய்ச் சொல்லி ராகவனை அழைத்து வருவேன், பெருஞ்சேனையுடன் வந்து லங்கையில் இறங்குவான். கவலைப்படாதீர். உமக்கு இஷ்டமாயின் சொல்வீர். இப்போதே என் முதுகில் ஏறி உட்காருவீர். நானே உம்மைத் தூக்கிக் கடலைத் தாண்டிப் போய் ராமனிடம் சேர்த்து விடுவேன். இதைச் செய்வதற்குப் போதிய பலம் எனக்கு இருக்கிறது. சந்தேகமில்லை. அக்கினிதேவன் இந்திரனிடம் அவியைக் கொண்டுபோய்ச் சேர்ப்பதைப் போல் ராமச்சந்திரனிடம் உம்மைக் கொண்டுபோய்ச் சேர்ப்பேன். புண்ணியவதியே! உத்திரவிடுவீர். இன்றே ராகவனை நீர் பார்க்கலாம். தம்பியுடன் உட்கார்ந்திருக்கும் ராமச் சந்திரனிடம் இன்றே நீர் போய்ச் சேருவீர். சந்தேகம் வேண்டாம். ராவணனோடு லங்கை முழுவதையும் தூக்கி ராமன் காலடியில் கொண்டுபோய்ச் சேர்ப்பேன். இதுவும் என்னால் முடியும். என்னை யாரும் தடுக்க முடியாது. என் முதுகின்மேல் ஏறி உட்கார்ந்தீரானால், நீரே பார்ப்பீர், ரோஹிணி நட்சத்திரம் சந்திரனிடம் சேருவதுபோல், ராமச்சந்திரனைச் சந்தோஷமாக அடைவீர். இவ்விடம் எப்படி வந்தேனோ, அப்படியே இங்கிருந்து அவரிடம் உம்மை எடுத்துப் போய்ச் சேர்ப்பேன். நீரே பார்ப்பீர்."

இப்படி அன்பும் உற்சாகமும் பொங்கிவர, ஹனுமான் சொல்லிக்கொண்டே போனான். சீதை ஆச்சரியப்பட்டாள். இந்தச் சிறிய வானரம் எப்படி என்னைத் தூக்கிக்கொண்டு

கடலைத் தாண்ட முடியும் என்று சந்தேகித்தாள். இதை உணர்ந்து கொண்ட ஹனுமான். தன் சக்தியைப் பிராட்டிக்குக் காண்பிப்பதற்காகமேடையிலிருந்து கீழே குதித்துத் தன் வடிவத்தைப் பெருக்கிக் கொண்டான். பருவதாகாரமாக வளர்ந்தான். சீதை அதைப் பார்த்துப் பெருமகிழ்ச்சியடைந்தாள்.

"மாருதியே! உன் சக்தியை நான் உணர்ந்தேன். ஆயினும், நீ என்னை எடுத்துப் போவது உசிதமல்ல. வழியில் அரக்கர்கள் உன்னைத் தடுத்து யுத்தத்துக்கு இழுப்பார்கள். உன்மேல் பாய்வார்கள். ஆயுதங்களை வீசி எறிவார்கள். நீ என்னைக் காக்க வேண்டிவரும். கவலைப்படுவாய். யுத்தத்தில் உன் புத்தியைச் செலுத்துவது கஷ்டமாகும். எவ்வளவு பலவானாயினும் யுத்தத்தில் வெற்றி என்பது நிச்சயமான விஷயம் அல்ல. உனக்கு அபாயம் நேர்ந்தால் என் கதி என்ன? உன்மேல் அரக்கர்கள் பாய்ந்தும் ஆயுதங்கள் வீசியும் போர் நடந்து கொண்டிருக்கும் போது, நான் தைரியமாய் உன் முதுகின்மேல் உட்கார்ந்து கொண்டிருக்க முடியுமா? நழுவிக் கடலில் விழுவேன். இவற்றையெல்லாம் யோசித்தால், என்னை எடுத்துக்கொண்டு நீ கடலைத் தாண்டுவது சரியல்ல என்பது வியக்தம். தவிர ஹனுமானே! நீ வந்து என்னை அரக்கர்களுக்குத் தெரியாமல் எடுத்துப் போய் விட்டால், அது என் நாதனுடைய வீரத்துக்குக் குறைவாகுமே! ராவணனை எதிர்த்துப் போர் செய்து என்னை மீட்டால் அல்லவோ க்ஷத்திரிய குலத்துக்குக் கவுரவமாக இருக்கும்! ராவணன் என்னைத் திருட்டுத்தனமாக எடுத்து வந்த மாதிரி அவரும், போர் செய்யாமல் என்னை அடைவது சரியாகுமா? அப்பனே! நீ திரும்பிப் போய் ராமனையும் லக்ஷ்மணனையும் வானர சேனையையும் அழைத்து வா! நாதனுடைய பாணங் களால் லங்கை அழிந்து, ராவணன் யமாலயம் அனுப்பப்பட வேண்டும். வெற்றி நமதே

என்பதில் சந்தேகமில்லை. என் நாதனுடைய பாணங்கள் பிரளயகால சூரியனைப் போல் ராவண சமூகத்தை எரித்து நாசமாக்கும்" என்றாள்.

"நான் திரும்பிப்போய் ராமனிடம் என்ன சொல்ல வேண்டும் என்று விரும்புகிறீர்? உம்மைக் கண்டு பேசியதற்கு என்ன அடையாளம் சொல்வேன்?" என்று ஹனுமான் கேட்டான்.

இதைக்கேட்டதும் சீதைக்குப் பழைய நினைவுகள் வந்துவிட்டன. கண்களில் நீர் பெருகிற்று.

தனக்கும் ராமனுக்கும் மட்டுமே தெரிந்த அந்தரங்க நிகழ்ச்சிகளை ஹனுமான் தன் நாதனிடம் சொன்னால், தன்னைக் கண்டதற்கு அடையாளம் ஆகும், தன் ஆற்றாமை நிலையையும் காட்டும் என்று, இயற்கை வேகத்துக்கு இசையச் சில விஷயங்களைச் சொன்னாள்.

"என்னுடைய ராமன், தண்டக வனத்தில் ஒருவராக நின்று அசுரர்களை நிர்மூலம் செய்த வீரர்! இந்த லங்கையை ஏன் இன்னும் அழிக்காமலிருக்கிறார்? அவரால் ஆகாதது ஒன்று உண்டா? ஒருநாள் நானும் ராமனும் சித்திர கூடத்தில் ஆற்றங்கரையிலிருந்த வனத்தில் விளையாட்டாக அலைந்து ஓய்ந்துபோய், ஓர் இடத்தில் உட்கார்ந்தோம். என் மடியில் அவர் சாய்ந்து அப்படியே தூங்கினார். அப்போது ஒரு காக்கை வந்து என்னை மார்பில் கொத்தித் தொந்தரவு பண்ணிற்று. அதை நான் ஓட்டினேன். திரும்பத் திரும்ப வந்து தொந்தரவு செய்தது. நான் ஒரு சிறு கல்லை எடுத்து அதன் மேல் வீசினேன். அப்போதும் அது கேட்கவில்லை. ராமன் எழுந்து, நான் கஷ்டப்பட்டுக் கண்களில் நீர் ததும்பியிருந்த நிலையைக் கண்டு முதலில் சிரித்தார். பிறகு என் உடல் காக்கையால் கொத்தப்பட்டுக் காயமாகி இருந்ததைக் கண்டு, இந்தக் காக்கையானது காக்கை அல்ல, அசுரன் என்பதைக் கண்டு, அஸ்திரம் ஒன்று எறிந்தார். அது அவனைத் துரத்தித்

துரத்திச் சென்றது. அசுரன் தப்பிப் பிழைக்க முடியாமல் கடைசியாக வந்து, என் நாதன் காலில் விழுந்து சரணடைந்து பிழைத்தான். இதைச் சொல்லுவாய். நான் இன்னும் பலநாள் காத்திருக்க முடியாது. சீக்கிரம் வந்து என் உயிரைக் காப்பாற்ற வேண்டும் என்று சொல்."

இவ்வாறு சொல்லிவிட்டு அழுதாள். மறுபடியும், "இன்னொரு நாள் நாங்கள் இருவரும் தனியாக வனத்தில் நடந்து சென்று கொண்டிருந்தோம். நடந்து நடந்து களைத்துப்போய் வியர்வை வழிந்து நெற்றியிலிருந்த திலகம் கரைந்து போயிற்று. நாதன் வேடிக்கையாக ஒரு மலைப் பாறையிலிருந்த செந்தாதுவைத் தேய்த்துத் தானே என் முகத்திலிட்டார். இது அவருக்கு நினைவிருக்கிறதா என்று கேட்டுப்பார்" என்றாள்.

இப்படி பழைய நிகழ்ச்சிகளைச் சொல்லச் சொல்லத் தன் தற்கால நிலையை நினைத்து மறுபடியும் துயரத்தில் மூழ்கினாள்.

'ராமனுக்கு நான் ஏதேனும் சொல்ல வேண்டுமா? அவர் அறியாதது என்ன இருக்கிறது? நான் சொல்லியா அவருடைய தருமத்தைத் தட்டி எழுப்ப வேண்டும்? நாதனை நான் நமஸ்கரித்தேன் என்று மட்டும் சொல்லுவாய், போதும். அவர் பக்கத்தில் லக்ஷ்மணனும் இருக்கிறான். அவனுக்குச் சமானமான ஒரு தம்பி உண்டா? ராமனுக்குத் துணையாக இருக்கவே பிறந்தவன். நிகரற்ற சாமர்த்தியம் பெற்றவன். என் நாதன் முகத்தைப் பார்த்துத் தந்தையை இழந்த துயரத்தை மறந்தான், ஒரு களங்கமற்ற பரிசுத்த இதயம். பயம் என்பது தெரியாத வீரன், வனத்தில் , தன் தாயை மறந்துவிட்டு என்னைத் தாயாகப் பாவித்து வந்தவன், என் துயரத்தை அகற்றவேண்டும் என்று அவனுக்குச் சொல்லுவாய்" என்றாள்.

ஜானகியின் கண்களில் கண்ணீர் பெருகிப் பேச்சு தடுமாறிற்று. ராமன் மானைத் தேடி வெகுதூரம்

சென்றுவிட்ட சமயத்தில் இளைய பெருமாளைத் தான் கோபித்து மிக அநியாயமாகக் குற்றம் சாட்டினாள் அல்லவா? இது சீதையின் உள்ளத்தை வருத்திக் கொண்டிருக்க வேண்டும்.

உயிரை நீக்க நிச்சயித்த சமயத்தில் வந்து தனக்கு ஆறுதல் தந்த ஹனுமானை விட்டுப் பிரியவும் மனமில்லை. சீக்கிரம் அவன் க்ஷேமமாக ராமனிடம் சேர்ந்து, செய்தி சொல்ல வேண்டும் என்றும் ஆசை. இரண்டும் சேர்ந்து சீதையை இவ்வாறு ஒவ்வொரு விதமாகப் பேசச் செய்தது.

முடிவில் "அப்பனே இதோ என் விவாக காலத்தில் என் தாய் கொடுத்து, தசரத மகாராஜன் என் தலையில் சூட்டிய சூடாமணி. இதை என் நாதனிடம் அடையாளமாகத் தருவாய்" என்று தன் ஆடைத் தலைப்பில் முடிந்திருந்த அந்தத் தெய்வீக ஆபரணத்தை அவிழ்த்தெடுத்து மாருதியினிடம் தந்தாள்.

விவாக காலத்தில் தாயிடம் பெற்றதும், மாமனார் தசரத மகாராஜன் கையால் சூட்டப்பட்டதுமான அந்த ஆபரணத்தைச் சீதை எவ்வளவு மதித்திருக்க வேண்டும்! மிக வினயமாக மாருதி அதைப் பெற்றுக் கொண்டான்.

பெற்றுக் கொண்டதும், "கண்டேன் சீதையை" என்று அதை ராமனிடம் கொடுக்கப்போகும் பெருமையையும் மகிழ்ச்சியையும் எண்ணி, ஹனுமானுடைய உள்ளம் அப்போதே ராமனிருந்த இடத்துக்குப் பறந்து சென்றுவிட்டது. உடல்தான் லங்கையில் நின்றது.

"பிரியமுள்ள வானரமே! என்னுடைய துக்கத்தைத் தீர்ப்பதற்கு வேண்டிய யோசனைகளையெல்லாம் நீதான் ராமனுக்குச் சரியாகச் சொல்லி வெற்றி சம்பாதித்துத் தர வேண்டும்" என்றாள். சொல்லியதும் ஹனுமான் புறப்படப் போனான். மறுபடியும் சீதை,

"ஹனுமானே, ராஜகுமாரர்கள் இருவருக்கும் என் அன்பைச் சொல்லுவாய், சுக்ரீவனுக்கும் வானரப் பெரியோர் களுக்கும் என் அன்பைச் சொல்லுவாய், துயரக் கடலை நான் தாண்டுவதற்கு ராமனுக்கு எல்லாச் சகாயமும் அவர்களைச் செய்யச் சொல்லுவாய். நீதான் ராமனுக்கு உற்சாகம் தளராமல், சொல்ல வேண்டிய யோசனைகளையெல்லாம் சொல்ல வேண்டும்" என்றாள்.

"துக்கத்தை அகற்றிக் கொள்வீர். நிச்சயம் ராம லக்ஷ்மணர்கள் வானரப் படையுடன் லங்கைத் தீவில் இறங்கி, அரக்கர்களை அழித்து உம்மை வெற்றியுடன் திருப்பிக் கொண்டு போவார்கள். ஒரு சந்தேகமும் படாமல் இருப்பீராக" என்றான் மாருதி.

"இங்கே எங்காவது நீ ஒருநாள் இருந்து தங்கி இளைப் பாறித் திரும்புவது நல்லதல்லவா?" என்றாள். மறுபடியும் சீதை, "உன்னைப் பார்த்துக் கொஞ்சம் ஆறுதல் அடைந்தேன். என் துக்கத்தை மறந்தேன். மறுபடி நீ மறைந்ததும் நான் துக்கத்தில் மூழ்குவேன். நீ இந்தப் பெருங்கடலைத் தாண்டி வந்தாய். ராமனும் அவருடைய சேனையும் எப்படி இந்தக் கடலைத் தாண்டப் போகிறார்கள்? இதைப்பற்றி உன் யோசனை என்னவோ?" என்று மறுபடியும் சந்தேகப்பட ஆரம்பித்தாள்.

"தேவி! நீர் ஒன்றும் ஐயப்பட வேண்டாம். நான் ஒருவன்தான் கடலைத் தாண்டக்கூடியவன் என்று எண்ணி னீரோ? அங்கிருக்கும் வானரர்கள் எல்லாரும் என்னைவிடச் சாமர்த்தியசாலிகள். சுக்ரீவன் மட்டுமல்ல, அவன் படையி லுள்ளவர்களில் பலர் பூமண்டலம் முழுவதும் பறந்து திரியக் கூடிய சக்தி கொண்டவர்கள். இந்தக் கடல் ஒரு பெரிதல்ல, என்னைவிடப் பலசாலிகளும் சாமர்த்தியசாலிகளும் ஆகாய மார்க்கம் செல்லுபவர்களும் ஆயிரக்கணக்கானவர்கள் எங்க ளில் இருக்கிறார்கள். ஒரு சந்தேகமும் படவேண்டாம். உண்மையில் எல்லோருமே என்னைத் தோற்கடிப்பார்கள்.

எல்லாரையும்விடப் பலசாலியையா தூதனாக அனுப்பு வார்கள்? குறைந்தவனாகத் தேடி முதலில் அனுப்பினார்கள். அங்கே இருக்கும் வானரர்களில் பலர் என்னை மிஞ்சி யவர்கள். தேவி துக்கத்தைவிட்டுச் சந்தோஷமாக இருப்பீ ராக! என் முதுகின் பேரில் இருராஜசிம்மங்களையும் ஏற்றிக் கொண்டு வரப் போகிறேன். வந்து இந்த நகரத்தைப் பாணங் களால் பாழாக்குவார்கள்; ராவணனைக் குலத்தோடு அழிப்பார்கள். உமக்கு மங்களம்! எதிர்பார்த்த வண்ணமாக இருப்பீராக. துயரக் கடலைத் தாண்டி அக்கரை ஏறுவீர். துக்கமெல்லாம் ஒரு கனவாகும். வெகு நாட்களில்லை. இரு ராஜகுமாரர்களும் வில் பிடித்து லங்கை வாயிலில் நிற்பதைப் பார்ப்பீர். இந்த அரக்கர் கூட்டம் அழிவதைப் பார்ப்பீர். வானரசேனை வந்து குதித்துக் கூத்தாடி லங்கையைப் பாழாக் குவதைப் பார்ப்பீர். செய்தி தெரிந்தபின் ஒரு கணமும் சும்மா இருக்க மாட்டார்கள்; நான் போய்ச் சொல்லுவது தான் தடை, உடனே கிளம்பி வருவார்கள். தைரியமாக இருப்பீராக." இவ்வாறு சொல்லித் தேவியைத் தலைவணங்கி நமஸ்கரித்துப் புறப்பட்டான்.

"நான் உயிருடன் இருக்கிறேன் என்று ராம லக்ஷ்மணர் களுக்குச் சொல்லுவாயாக. காரியங்களைத் துரிதப்படுத்து வாயாக! மங்களம்!" என்றாள் சீதை.

அஞ்சநா தேவியின் வீரகுமாரன், ஜானகியின் சோகத் தைத் தீர்த்த மகானுடைய அடிபணிவோமாக!

## 71. சண்டைக்கு இழுக்கிறான்

சீதையிடம் விடை பெற்றுக் கொண்டுபோன ஹனுமான், வடக்கே சென்று மதில்மேல் உட்கார்ந்து யோசித்தான்.

சீதைக்குத் தைரியம் ஊட்டவும், ராவணனுக்கும் அவன் அரக்கர் கூட்டத்துக்கும் சரியான பயம் உண்டாக்கி, சீதையை எந்த விதத்திலும் துன்பப்படுத்தாமலிருக்கும்படி செய்யவும்

என்ன செய்யலாம்? சும்மா நான் திரும்பிவிட்டால் ராவணனுக்கு நான் வந்ததுகூடத் தெரியாது. அவன் பாட்டுக்கு முன்போல் கர்வம் கொண்டவனாகவே இருப்பான். நான் ராமனுக்குச் செய்தியைச் சொல்லி சேனையுடன் லங்கைக்குத் திரும்பிவரும் வரையில் சீதை க்ஷேமமாக இருக்க வேண்டுமல்லவா? சீதையை ராவணன் துன்புறுத்தாமலிருப்பதற்காக, அவன் உள்ளத்தில் போதிய பயத்தை உண்டாக்க வேண்டும். அதைச் செய்துவிட்டுத்தான் நான் திரும்பவேண்டும். அரக்கர்களைச் சமாதான முறையில் நல்வழியில் நிற்கச் செய்ய முடியாது. இந்த மூர்க்கனிடம் அளவற்ற செல்வம் இருக்கிறது. இவர்களுள் பேதம் உண்டாக்குவதும் ஆகாத காரியம். சாமதான பேதம் இவை பயனில்லை. மேல் நடக்க வேண்டிய காரியம் கெட்டுப் போகாத அளவில் இவர்கள் உள்ளத்தில் போதிய பயத்தை உண்டாக்கிவிட்டு நான் போக வேண்டும்; அப்படிச் செய்தால் சீதையின் க்ஷேமம் காக்கப்படும். இந்தக் காரியத்தையும் முடித்துவிட்டு வேகமாகத் திரும்புவேன்" என்று நிச்சயித்தான்.

உடனே பெரிய வடிவம் கொண்டு, அந்த அழகிய அந்தப்புரப் பூந்தோட்டத்தை நாசம் செய்ய ஆரம்பித்தான். மரங்களைப் படபடவென்று வீழ்த்தித் தள்ளி, கொடிப் பந்தல்களை நாசம் செய்து, வாவிகளையும் செய்குன்றுகளையும் அலங்காரங்கள் எல்லாவற்றையும் பாழாக்கினான். மிக அழகுடன் விளங்கிய அசோகவனம் தன் அழகை முற்றிலும் இழந்தது. அங்கிருந்த மான்களும் பறவைகளும் பயந்து கூவிக்கொண்டு வெளியேறிவிட்டன. தூங்கிக்கொண்டிருந்த ராக்ஷஸிகள் எழுந்து, இதென்ன வென்று காரணம் தெரியாமல் திகைத்தார்கள்.

ஹனுமான் நந்தவனத்தை அழித்துவிட்டு, மதில் சுவரின் மேல் ஏறி உட்கார்ந்தான். ராக்ஷஸிகள் வானரத்தைட்

பார்த்தார்கள். ஹனுமான் வரவரத் தன் உடலைப் பெருக்கிக் கொண்டு பயங்கரமாக வளர்ந்து அவர்கள் இதயம் நடுங்கச் செய்தான். ராவணனிடம் சொல்லச் சிலர் ஓடினார்கள். சீதையிடம் போய், "இந்தப் பெருங்குரங்கு எப்படி வந்தது? இது உனக்குத் தெரிந்தே இருக்கவேண்டும். உன்னிடம் இது ஏதாவது பேசிற்றா? உள்ளபடி சொல். பயப்படாதே!" என்றார்கள்.

சீதை, "இந்த அரக்கர் உலகத்தில் எதுவெல்லாம் நடக்குமோ எனக்கு என்ன தெரியும்? மாயம் கற்ற ராக்ஷசர்களைப் பற்றி நான் ஒன்றும் அறியேன். அந்த வானரம் உங்களில் ஒருவனாகத்தான் இருக்கவேண்டும். அவனைப் பற்றி உங்களுக்குத்தான் தெரியலாம்" என்று சொல்லிச் சமாளித்துக் கொண்டாள்.

"ஐயோ! சீதை பொய் சொல்லி விட்டாளே! இதற்கு என்ன சமாதானம்?" என்று சில பண்டிதர்கள் சமீபத்தில் தர்க்கம் செய்து கொண்டிருப்பது வாசகர்களுக்கு இந்தச் சந்தர்ப்பத்தில் ஞாபகம் வரலாம்.

இந்த விவாதத்தைப் போன்ற ஒரு பயனற்ற விவாதம் வேறு இல்லை. "ராம காரியம் உடனே அழிந்துபோக வேண்டும் என்று ஆசைப்படுகிறார்களா? ராமாயணத்தையெல்லாம் வேறு விதமாக நீங்கள் நடத்தப்போகிறீர்களா? இந்தக் கேள்விகளையெல்லாம் நிறுத்துங்கள்" என்று இந்தப் பண்டித சிகாமணிகளுக்குச் சொல்வேன்.

"சீதை செய்த மற்ற காரியங்களைச் செய்யத் துணிந்து செய்வீர்களானால் — சிறைப்பட்டுக் கிடந்து, துக்கத்தில் கரைகாணாமல் ஏங்கி நின்றீர்களானால், இத்தகைய 'பொய்யை' உங்களைக் கேட்கும் ராக்ஷஸிகளிடம் நீங்களும் சொல்லலாம், குற்றமில்லை. அதனால் உங்கள் வாய்மை பங்கம் அடையாது" என்று சொல்வேன்.

"யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற.

வாய்மை எனப்படுவது யாதுஎனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்.

பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்."

என்றார் பொய்யாமொழிக் குறளாசிரியர்.

அசோக வனத்திலிருந்து பயந்து ஓடிய ராக்ஷஸிகள் ராவணனிடம் நடந்ததைத் தெரிவித்தார்கள்.

"மன்னனே! ஒரு பயங்கர வடிவங்கொண்ட குரங்கு அசோக வனத்தில் வந்து உங்கள் அரண்மனைப் பெண்க ளுடைய நந்தவனத்தையெல்லாம் பாழாக்கிக் கொண்டிருக் கிறது. அந்தக் குரங்கைப் பார்த்தால் எங்களுக்குப் பயமாக இருக்கிறது. சீதையிடம் அது ஏதோ ரகசியமாகப் பேசிற்று."

இவ்வாறு ராக்ஷஸிகள் சொன்னார்கள். ஆனால் தாங்கள் தூங்கிப் போனதை ராக்ஷசேசுவரனிடம் சொல்லவில்லை.

"நாங்கள் சீதையை எவ்வளவோ கேட்டுப் பார்த்தோம். 'இது யார்? இந்த வானரன் ஏன் இங்கே வந்தான்? உன்னிடம் என்ன பேசினான்?' என்று பலவாறாகக் கேட்டோம். அவள் ஒன்றும் சொல்லமாட்டேன் என்கிறாள். நீங்கள் இந்தக் குரங்கைப் பிடித்து ஒழித்துவிடவேண்டும். தகுந்த ஆட்களை அனுப்புவீர்களாக. மகா பயங்கரமான குரங்கு. அதைப் பிடிக்கும் வல்லமை கொண்ட வீரர்களை உடனே அனுப்பு வீர்களாக. இந்தக் குரங்கு அழகிய வனம் முழுவதையும் பாழாகச் செய்துவிட்டது. ஆனால் சீதையிருக்கும் சும்சுபா விருட்சத்தை மட்டிலும் தொடவில்லை. வளர்ந்து படர்ந்திருக்கும் அந்த மரம் கொஞ்சமும் சேதப்படவில்லை. இதற்குக் காரணம் இருக்கவேண்டும். மற்ற மரங்களையும், கொடிகளையும், குளங்கள், பந்தல் எல்லாவற்றையும்

பாழாக்கிய இந்த வானரம், சீதை இருக்கும் இடத்தை மட்டும் விடுவானேன்? இதில் மோசம் இருக்கிறது! இது சாதாரணக் காட்டு மிருகமல்ல. உங்கள் பகைவர்களான தேவேந்திரனோ, குபேரனோ அனுப்பிய வானரமாகத்தான் இருக்கவேண்டும். அல்லது அந்த ராமனுடைய வேலையாக இருக்கவேண்டும். சீதையோடு பேச இந்த வானரத்துக்கு எப்படித் தைரியம் வந்தது? இவன் ராமனுடைய தூதனாக இருக்கவேண்டும். உடனே வீரர்களை அனுப்பி இந்தப் பயங்கர வானரத்தைப் பிடிக்கச் செய்வீர்களாக!" என்றார்கள்.

தன் மனைவிகளுக்காக நிருமாணித்திருந்த மிகச் சௌந்தர்யமான பூந்தோட்டம் அழிந்துபோன செய்தியைக் கேட்ட ராவணன் மிகுந்த கோபங்கொண்டான். இரண்டு கண்களும் இரண்டு தீவட்டிகளைப்போல் சிவந்து, அவற்றி லிருந்து சுடச்சுட எண்ணெய்த் துளிகள் கொட்டுவனபோல் கண்ணீர் வடிந்தது.

உடனே தனக்குப் பக்கத்தில் 'உத்தரவென்ன' என்று எப்போதும் மிகக் கவனமாக இருந்துகொண்டு வந்த வீரர்களை அனுப்பினான். கதாயுதங்களும், இரும்பு உலக்கைகளும் கத்திகளும் சூலங்களும் எடுத்துக் கொண்டு அவர்கள் போனார்கள்.

## 72. ராம தூதன்

நந்தவனத்துத் தோரண வாயில்மேல் உட்கார்ந்திருந்த ஹனுமானைப் பார்த்தார்கள். இவர்களைக் கண்டதும் ஹனுமானுடைய காந்தியும் வடிவமும் பலமும் இன்னும் அதிகரித்தன. "வந்தார்கள்!" என்று கீழே குதித்து வாலைத் தூக்கிப் பூமியில் ஓர் அடி அடித்துத் திக்குகள் நடுங்கும்படி கர்ஜித்தான். வாயிற் கதவில் வைத்திருந்த பெரிய இரும்புத் தாழ்ப்பாள் கட்டையைப் பிடுங்கி, அதைக் கொண்டு அவர்களைத் தாக்கி அவ்வளவு பேர்களையும் எதிர்த்தான்.

குதித்துக் கிளம்பி இரும்புக் கட்டையைச் சுழற்றிச் சுழற்றி, அத்தனை பேர்களையும் ஒருவர் பின் ஒருவராக வதம் செய்துவிட்டு, மறுபடியும் அசோக வனத்துக் கல் கம்ப வாயிலின் மேல் உட்கார்ந்து கர்ஜித்தான்.

"வாழ்க ராமன்! வாழ்க லக்ஷ்மணன்! வாழ்க ராஜா சுக்ரீவன்! அரக்கர்களே! உங்களுக்கு அழிவு வந்துவிட்டது. வீரன் ராமனும், வீரன் லக்ஷ்மணனும், ராஜா சுக்ரீவனும் என்னை அனுப்பியிருக்கிறார்கள். பகைவர்களை நாசம் செய்ய நான் வந்திருக்கிறேன். ராக்ஷசர்களே வாருங்கள்! ஆயிரம் ராவணர்களும் வரலாம். வதம் செய்ய நிற்கிறேன். சீதையைத் தலைவணங்கிப் பணிந்து ஆசிப் பெற்றேன். உங்கள் நகரத்தை இப்போது அழிக்கப் போகிறேன்!" என்று லங்கை நடுங்கும்படி கர்ஜித்தான்.

வந்து தாக்கின அத்தனை கிங்கரர்களும் மாண்டார்கள். ராவணனுக்குச் செய்தி எட்டியதும், அவனுடைய கண்கள் பயங்கரமாக விரிந்தன.

"என்ன சொல்கிறீர்கள்?" என்று கூறிவிட்டு உடனே நிகரற்ற வீரனான பிரகஸ்தனுடைய மகனைக் கூப்பிட்டு, "போய் இந்த வானரத்தின் கொட்டத்தை அடக்கிவிட்டு வா!" என்று உத்தரவிட்டான்.

பிரஹஸ்தனுடைய குமாரன் ஜம்புமாலி என்னும் வீரராக்ஷசன் கவசம் பூண்டு, ஆயுதங்கள் எடுத்துக்கொண்டு அலங்காரம் செய்துகொண்டு வந்து சேருவதற்குக் கொஞ்சம் தாமதமாயிற்று. அதுவரையில் ஹனுமான் சும்மா இருக்க வில்லை. பக்கத்தில் ஒரு பெரிய மண்டபத்தைக் கண்டு அதன் மேல் ஏறி நின்றான். மேலே வானத்தில் இரண்டாவது சூரியன் உதித்தாற்போல் பிரகாசித்தான். தன் உடலை இன்னும் பெருக்கிக்கொண்டு ஆகாயத்தில் ஒரு பொன் மயமான மலைத்தொடரைப்போல் விளங்கினான். அவன் போட்ட கர்ஜனை லங்கா நகரத்தில் எட்டுத் திசைகளிலும்

எதிரொலி செய்து எங்கும் நிரம்பிற்று. அரக்கர்களின் உள்ளம் நடுங்கிற்று.

அவன் ஏறிய அந்த மண்டபத்துக் காவலாளிகள் "இதுவென்ன பெருங் குரங்கு ஒன்று வந்து நம் தோட்டத்தை நாசமாக்குகிறதே!" என்று வெளியேறி, ஹனுமானை எதிர்க்கப் பார்த்தார்கள்.

"ராமன் வாழ்க! வாழ்க லக்ஷ்மணன்! ராஜா சுக்ரீவன் வாழ்க! கோசலேந்திரனுடைய தூதன் நான். லங்கையை அழிக்க வந்திருக்கிறேன். ஹனுமான் என்கிற வாயுபுத்திரன். பகைவர்கள் கூட்டத்தை நிர்மூலம் செய்ய வந்திருக்கிறேன். ஜானகியை வணங்கி ஆசிபெற்று, நான் லங்கையை அழச் செய்ய வந்திருக்கிறேன். ஆயிரம் ராவணர்களை வெல்லும் பலம் பெற்றவன். மலைப் பாறைகளும் மரங்களும் பற்றி எறிந்து அரக்கர் கூட்டத்தை அழிப்பவன் வந்திருக்கிறேன்."

இவ்வாறு லங்கையிலுள்ள அரக்கிகளின் ஈரல்கள் துடிக்கும்படி கர்ஜித்தான்.

உடனே அந்தக் கோயில் காவலாளிகள் பற்பல ஆயுதங்களைக் கொண்டு அவனைப் பலமாகத் தாக்கினார்கள். ஹனுமான் குதித்து அந்தக் கோயிலின் பெருங் கம்பம் ஒன்றைப் பிடுங்கி எடுத்து எமனைப்போல் நின்றான். தங்கப் பூண்களால் அலங்கரிக்கப்பட்ட அந்தப் பெருந் தூணைச் சுழற்றிச் சுழற்றி ஹனுமான் அவர்களுடைய பாய்ச்சலைத் தடுத்து அவர்களையும் வதம் செய்தான். அந்தக் கல்தூணை எடுத்ததும் மண்டபம் கீழே விழுந்தது. ஹனுமான் தூணைச் சுழற்றிச் சுழற்றி அடித்த வேகத்தினால், அது இங்கும் அங்கும் தாக்கி நெருப்புக் கிளம்பிற்று.

"என்னைக் காட்டிலும் பலமுள்ள வானரர்கள் சுக்ரீவன் தலைமையில் வரப்போகிறார்கள். உங்களையும் உங்கள் மன்னனையும் உங்கள் நகரத்தையும் அழித்து

நிர்மூலமாக்குவதற்கு வரப்போகிறார்கள். இக்ஷ்வாகு நாதனுடைய பகையை உங்கள் அரசன் சம்பாதித்துக் கொண்டான் அல்லவா? ஒழிந்தது லங்கை! ஒழிந்தீர்கள் அரக்கர்கள்! அழிந்தான் ராவணன்" என்று கர்ஜித்தான்.

பிரஹஸ்தன் மகன் ஜம்புமாலியும் வந்து சேர்ந்தான். விரிந்த பெருங்கண்களும், பயங்கரமான பற்களும், ரத்தம் போல் சிவந்த ஆடையும், காதில் குண்டலங்களும், கையில் வில்லும், கழுத்தில் மாலையும், இடுப்பில் கத்தியுமாக இடியோசை செய்யும் தேரில் ஏறி வந்தான்.

பெருங்கோவேறு கழுதைகள் பூட்டிய தேரைக் கண்டான் ஹனுமான். அவனும் ஆயத்தமானான்.

தேரினின்று ஜம்புமாலி வில்லை வளைத்து மாருதி பேரில் அம்புகள் எய்தான். அம்பு மாருதியின் முகத்தில் தைத்து ரத்தம் வழிந்தது. அது ஹனுமானுடைய முகத்தை இருமடங்கு அழகுறச் செய்தது. ஒரு செந்தாமரைப் பூ, திடீர் என்று ஆகாயத்தில் மலர்ந்து விரிந்ததுபோல் காணப்பட்டது. அடிபட்ட மாருதிக்கும் கோபம் வளர்ந்து பெருகிற்று. அருகில் இருந்த ஒரு பெரிய பாறாங்கல்லை எடுத்து தேரின் மேல் வீசினான். பிறகு ஓர் ஆச்சாமரத்தைப் பிடுங்கி எடுத்து, அதைச் சுழற்றி ஜம்புமாலியின் மேல் எறிந்தான். பிறகு மண்டபத்திலிருந்து பிடுங்கி எடுத்த ஓர் இரும்புத் தடியை வேகமாகச் சுழற்றித் தேரின்மேல் எறிந்தான். தேர் இருந்த இடம் தெரியாமல் பொடியாய்ப் போயிற்று. ஜம்புமாலியின் பெருந்தேகம் நசுக்கப்பட்டு, கை, தலை ஏதும் உருப்படி தெரியாமல், எல்லாம் பிண்டமாய்ப் போயிற்று.

* * *

யுத்தத்தின் முடிவை ராவணனுக்குத் தெரியப் படுத்தினார்கள். அவன் வியப்படைந்து, "இது என்ன புதிதாக இருக்கிறது? இது மிருகமல்ல, வானரமுமல்ல. இது என்

பழைய பகைவர்களாகிய தேவர்களின் வேலை. ஒரு புதுப் பிராணியை உண்டாக்கி அனுப்பியிருக்கிறார்கள். இதைக் கட்டாயம் பிடித்து என் முன் கொண்டுவர வேண்டும்" என்று வீரர்களையும் அவர்களுக்குத் துணையாகப் பெரும் சேனையையும் அனுப்பினான்.

ராக்ஷஸ வீரர்கள் தேரும் படைகளுமாகச் சென்றார்கள். மதில் வாயிலின் மேல் நின்று அட்டகாசம் பண்ணிக் கொண்டிருந்த ஹனுமானைப் பலமாகத் தாக்கினார்கள். அவனோ வஜ்ரதேகம் பெற்ற வாயுபுத்திரன். எதையும் பொருட்படுத்தவில்லை. உடம்பில் காயம்பட்டு ரத்தம் பெருகப் பெருக. அவன் கோபமும் அதனுடன் அவன் உடலும் வளர்ந்து வளர்ந்து அனைவரும் நடுங்கும்படியாக ஆகாயத்தில் கிளம்பி வந்த வீரர்களையெல்லாம் முழுக் குன்றுகளும் முழுமரங்களும் எடுத்து வீசிக் கொலை செய்தான்.

திடீர் என்று தேர்களின் மேல் குதித்து அவற்றைப் பொடியாக்கினான். வந்த பெரும் வீரர்களையெல்லாம் வதம் செய்தான். படையாட்கள் பயந்து ஓடினார்கள். வந்தவர்கள் அனைவரையும் கொன்றும், துரத்தியடித்தும், லங்கா நகரத்து அரக்கர்கள் நடுங்கக் கர்ஜித்துவிட்டு, மறுபடியும் மதில் வாயிலின் கூண்டின் மேல் உட்கார்ந்தான்.

தன் பெரும் படைகளின் தோல்வியையும், தேர்ந்தெடுத்து அனுப்பிய ஐந்து சேனாதிபதிகளின் வதத்தையும் அறிந்து ராவணன் இப்போது உண்மையில் பயந்தான்.

"இந்தத் தனி வானரம் இவ்வளவு பலமும் பராக்கிரமமும் கொண்டு என் வீரர்களை அழித்தது சாதாரண நிகழ்ச்சியல்ல. ஏதோ தேவர்களின் சூழ்ச்சியாகக் காணப்படுகிறது" என்று கவலைப்பட்டான். ஆயினும், தன் கவலையைக் காட்டாமல் சிரித்துப் பரிகாசமும் செய்தான்.

தன் சபையிலிருந்தவர்களைச் சுற்றிப் பார்த்தான். தன் மகன் அக்ஷன் மிக உற்சாகமாக முன் நின்றான். யுத்தத்தில் மனம்கொண்டு நின்ற தன் வீர மகனைப் பார்த்து, அவனை உடனே ஹனுமானிடம் போகச் சொன்னான்.

இளஞ்சூரிய பிம்பத்தைப்போல் ஜொலித்து, தங்கமயத் தேரில்மேல் எல்லா ஆயுதங்களையும் எடுத்துக் கொண்டு அக்ஷன் சென்றான்.

## 73. கட்டுண்டான்

தேவர்களுக்குச் சமமான வாலிப வீரனான அக்ஷன், எட்டு குதிரைகள் பூட்டிய ரதத்தில் ஏறிப் போவதை வால்மீகி முனிவர் வெகு அழகாகச் சித்திரிக்கிறார் ராமாயணத்தில். காடுகளின் அழகையும், வீரர்கள் யுத்தம் செய்யும் அற்புதச் செயல்களையும், போரின் வேகத்தையும் முனிவர் சித்திரித்திருப்பதை நான் மொழி பெயர்த்துக் காட்ட இயலாது. காடு மிக அழகாக இருந்தது; அல்லது யுத்தம் மிகக் கோரமாக நடந்தது என்று இவ்வளவுதான் சொல்ல முடியும். முனிவருடைய சித்திரமோ பொருள்களின் அழகுக்குத் தகுந்த சுந்தரமான தொனிகொண்ட மொழிகளும், யுத்தத்தைத் தொனித்துக் காட்டும் கம்பீர ஒலி நிறைந்த மொழித் தொடர்களும், காட்டைப் போலவே, யுத்தத்தைப் போலவே ஒன்றின்மேல் ஒன்றாகக் குவிந்து மனதைக் கொள்ளை கொண்டு போகும் நடை. யுத்தங்களில் இருதரத்தாருடைய செயல்களையும் அற்புத கம்பீரத்துடன் வர்ணிப்பது முனிவருடைய தனிசக்தி. ராவணனுடைய அருமைக் குமாரன் அக்ஷனுக்கும் ஹனுமானுக்கும் நடந்த யுத்தத்தைச் சொல்லும் விஸ்தார வர்ணனையை நான் தமிழ்ப்படுத்தி சொல்லப் போவது முடியாத காரியம்.

தவத்தால் பெற்ற தங்கமய ரதத்தில் ராவண குமாரன் ஏறிச் சென்றான். கல் தோரண வாயிலின்மேல் பயமின்றிக்

கம்பீரமாக உட்கார்ந்திருந்த ஹனுமானைக் கண்டான். காலாக்கினிபோல் சுடர் விட்டு எரிந்து நின்ற அந்த உருவத்தைக் கண்ட அக்ஷனுடைய உள்ளத்தில், 'இவன் எனக்குத் தகுந்த பகைவன்' என்ற எண்ணம் உண்டாகி, தன் வீரத்தைப் பெருக்கிக் கொண்டான்.

இளம் வீரன் மூன்று கூரிய பாணங்களை எய்தான். அவை ஹனுமானுடைய உடலில் பட்டு ரத்தம் பெருகிற்று. ரத்தம் பெருகப் பெருக மாருதியின் வீரம் வளர்ந்தது. முகத்தின் பொலிவு கொழுந்துவிட்டு எரிந்தது. வாலிப அரக்கனுடைய வீரத்தைக் கண்டு ஹனுமனும் மிக மகிழ்ச்சியடைந்தான்

போர் முற்றி இருவருக்குமிடையில் கடும் யுத்தம் நடந்தது. அம்புக் கூட்டம் மேகங்கள்போல் ஆகாயத்தில் கிளம்பி, மாருதியை மூடின. மலைமேல் மாரி பெய்வது போல் அம்பு மழை ஹனுமானுடைய கல்போன்ற தேகத்தின் பேரில் பொழிந்தது. ஆகாயத்தில் கிளம்பி ஹனுமான் அற்புத முறையில் பாணங்களுக்கிடையில் சஞ்சரித்து அக்ஷனைத் தாக்கினான். வானத்தில் மேகங்களைக் காற்றானது சிதறியடிப்பது போல் அம்புக் கூட்டங்களை ஹனுமான் லட்சியம் செய்யாமல் தன் அற்புத சஞ்சாரங்களால் சிதறடித்தான். ராக்ஷச குமாரனுடைய சாமர்த்தியம், வீரம், பொறுமை, சாவதானம் இவற்றைப் பார்த்து 'ஐயோ, இவனைக் கொல்ல வேண்டுமே' என்று துயரப்பட்டு, ஹனுமான் வெகு நேரம் யுத்தத்தை நீடித்து நடத்தினான். அரக்கனுடைய பலம் பெருகிக்கொண்டே போயிற்று. முடிவில் ஹனுமான் மனத்தை உறுதி செய்துகொண்டு அரக்கனை வதம் செய்யத் தீர்மானித்தான்.

முதலில் அக்ஷனுடைய தேரை ஒடித்துத் தீர்க்க வேண்டும் என்று ஹனுமான் நிச்சயித்து, அதன்மேல் திடீரென்று முழு வேகத்துடன் பாய்ந்தான். தேர் பொடியாகி விழுந்தது. ஏர்க்கால் முறிந்து, கூடு கவிழ்ந்து நாசமாகிக்

குதிரைகள் மாண்டு, தேரின்றித் தரையில் நின்றான் அரக்க ராஜகுமாரன்.

இதன் பின்னும் அவன் தயங்காமல் வில்லும் கத்தியுமாக ஆகாயத்தில் கிளம்பினான். கிளம்பி மாருதியைத் தாக்கினான். இருவருக்கும் பெரும் போர் ஆகாயத்தில் நடந்தது. முடிவில் அக்ஷன் எலும்பெல்லாம் ஒடிந்து நசுக்கப்பட்டு கீழே விழுந்து மாண்டான்

* * *

குமாரன் வானரத்தால் கொல்லப்பட்டான் என்று அறிந்ததும், ராவணன் இதயம் துடித்தது. கிளம்பிய ரோஷத்தை அடக்கிக் கொண்டு, தன் உள்ளத்தை ஒரு நிலையில் வைத்துக்கொண்டு, இந்திரனுக்கு சமமான வீரனான இந்திரஜித்தை அழைத்தான்.

"எல்லா அஸ்திரங்களையும் நன்றாகப் பயின்று அடைந்திருக்கிறாய். தேவாசுரர்களையும் யுத்தத்தில் வென்றிருக்கிறாய். பிதாமகனைப் பூஜித்து அவரிடமிருந்து பிரம்மாஸ்திரம் பெற்றிருக்கிறாய். உன்னை எதிர்த்து நிற்கக் கூடியவர்கள் உலகத்தில் யாரும் இல்லை. சோர்வு என்பதை அறியாதவன் நீ. அறிவில் சிறந்தவன் நீ. தவத்தால் சக்தியடைந்திருக்கிறாய். நீ செய்ய முடியாதது ஒன்றுமில்லை. காரியங்களைச் சரியாக யோசித்துச் செய்வதில் உனக்கு நிகர் யாருமில்லை. நான் அனுப்பிய கிங்கரர்கள், ஜம்புமாலி, நம்முடைய மந்திரிகளின் வீரபுத்திரர்கள், சேனாதிபதிகள் ஐவர், உன் அருமைத் தம்பி அக்ஷன் இவ்வளவு பேர்களும் மாண்டார்கள். நீதான் இந்தச் சத்துருவை வென்று சிறைப்படுத்தும் வல்லமை கொண்டவன். சேனா பலத்தால் இதனை வெல்ல முடியாது. கிட்ட நெருங்கிக் கைகலந்து யுத்தம் செய்வது இவனிடம் செல்லாது. நன்றாய் யோசித்துச் செய்ய வேண்டியதைச் செய்து, நீ இவனை எதிர்த்து வெற்றியுடன் திரும்பி வா, தவத்தால் நீ பெற்றிருக்கும்

அஸ்திரமே இந்தச் சமயத்தில் பயன்படும். உன் புத்தியைச் சிதறவிடாமல் யுத்தம் செய், வெற்றியுடன் திரும்பி வருவாய்" என்றான்.

தந்தையின் சொல்லை ஏற்றுக் கொண்டு தேவப் பிரபாவம் பெற்ற இந்திரஜித்து, தந்தையை வலம் செய்து வணங்கி ஆசி பெற்றுக் கொண்டு, தைரியமாகவும் உற்சாகமாகவும் அசோக வனத்தை நோக்கிச் சென்றான்.

கோரப் பற்களோடு விளங்கும் நான்கு சிம்மங்கள் பூட்டிய தேரில் ஏறி நின்று, வில்லின் நாணை இழுத்துச் சப்தம் செய்து கொண்டு அனுமான் இருந்த இடம் சென்றான். பருவகால ஓசை ஒலிக்கச் செய்தது அவன் தேர். தாமரை இலையைப் போன்ற அவனுடைய கண்களில் வெற்றி எழில் தெரிந்தது.

ராக்ஷசேந்திர குமாரன் இந்திரஜித்தினுடைய தேர், தான் இருக்குமிடத்தை நோக்கி வேகமாக வருவதைப் பார்த்த ஹனுமான் பெருமகிழ்ச்சியடைந்தான். யுத்தத்தில் நிபுணனான இந்திரஜித்தும் ஹனுமானை உத்தேசித்து வில்லை வளைத்துக் கூர்மையான பாணங்களை ஆயத்த மாக வைத்துக் கொண்டான்.

பெரும் யுத்தம் நடக்கும் என்று அறிந்த நாக, யக்ஷ, சித்தர்கள் ஆகாயத்தில் வந்து சேர்ந்தார்கள்.

இந்திரஜித்தைக் கண்டதும் ஹனுமான் கர்ஜனை செய்து தன் பெரும் சரீரத்தை இன்னும் பெருக்கிக் கொண்டான். ராக்ஷச வீரன் பேசாமல் அம்புகளைத் தொடுத்து எய்தான். தேவாசுர யுத்தத்தைப்போல் அம்பு மாரி பொழிய ஆரம்பித்தது.

ஹனுமான ஆகாயத்தில் கிளம்பி, அற்புத வேகத்துடன் சஞ்சரித்து மின்னலைப் போல வந்த கூரிய அம்புகளை வீணாக்கினான். அரக்கனுடைய பட்சத்திலிருந்து கிளம்பிய பேரிகை, நாணோசை முதலிய கோஷங்களுக்குச் சமமாக

வானரவீரன் தன் கர்ஜனைகளால் திக்குகள் எதிரொலிக்கச் செய்தான். இப்படி இரு வீரர்களிடையே நடந்த யுத்தம் வளர்ந்து கொண்டே போயிற்று. இருவருடைய சாமர்த்தியமும் சமமாகவே இருந்தது.

எத்தனை பாணங்கள் பட்டும் ஹனுமானுடைய சக்தி குறையவில்லை. அதைப் பார்த்து, 'இந்த வானரம் என் அம்புகளால் தோல்வியடையப் போவதில்லை. என் பாணங்கள் இவனைக் காயப்படுத்துவதாகக் காணவில்லை. தந்தை சொன்னது உண்மையே, பிரம்மாஸ்திரம் பிரயோகித்தே இவனைக் கட்டிவிட வேண்டியது' என்று ராக்ஷசன் தீர்மானித்தான்.

ராக்ஷச குமாரன் பிரம்மாஸ்திரத்தை எய்தான். அது வானர வீரனைத் தாக்கியதும் அவன் கட்டுண்டு செயலற்றுப் போனான்.

'ஓகோ! பிதாமகருடைய அஸ்திரத்தால் கட்டுண்டேன்' என்று மாருதி உடனே தெரிந்து கொண்டான்.

பிரம்மாவிடம் மாருதியும் வரம் பெற்றிருந்தான். அப்போது அதை நினைவுபடுத்திக் கொண்டான். 'ஒரு முகூர்த்த நேரமே இது என்னைக் கட்டி நிற்கும். இதனால் எனக்கு யாதோர் ஆபத்துமில்லை. கட்டுப்பட்டு நிற்கும் காலத்தில் அரக்கர்கள் என்ன செய்வார்கள் பார்க்கலாம்! தூதனாக வந்த என் வேலை ஒருவேளை இதனாலேயே பூர்த்தியாகும்' என்று யோசித்து, பிதாமகர் தனக்குச் சிரஞ்சீவி வரம் தந்த போது, அவர் இட்ட ஆக்ஞையின்படி பிரம்மாஸ்திரத்துக்கு அடங்கித் தைரியமாகத் தரையில் விழுந்தபடி கிடந்தான்.

ஹனுமான் கீழே விழுந்து செயலற்றுக் கிடக்கிறான் என்பதைக் கண்டதும், அதுவரையில் பயந்து தூர நின்ற அரக்கர்கள் எல்லோரும் அவனைச் சுற்றிக் கொண்டார்கள்.

மாருதியைத் தாறுமாறாகத் திட்டிப் பேரிரைச்சலிட்டுக் கொண்டும் தங்களுடைய ராஜகுமாரனைப் புகழ்ந்தும் கூத்தாடினார்கள்.

"துண்டு துண்டாக வெட்டுவோம்! தின்றுவிடுவோம்! ராவணனிடம் இழுத்துப் போவோம்!" என்று பலவாறாகக் கூச்சலிட்டார்கள்.

பிறகு சிலர், "இவன் பாசாங்கு செய்வான், திடீர் என்று கிளம்பி நம்மைத் தாக்குவான்" என்று பயந்து சணல் கயிறும் தென்னங் கயிறும் கொண்டுவந்து ஹனுமானை நன்றாகக் கட்டிவிட்டு "கட்டிவிட்டோம். இழுத்துப் போகலாம் ராவணேசுவரனண்டை!" என்று அவர்கள் மிக மகிழ்ந்து கூக்குரலிட்டார்கள்.

ராக்ஷச கூட்டம் இப்படிச் செய்வதைத் தடுக்க அவகாசம் பெறாத இந்திரஜித்து மிக வருத்தப்பட்டான்.

"ஐயோ! நான் செய்தது வீணாகப் போயிற்றே! இந்தப் மூடர்களுக்கு மந்திர ரகசியங்கள் தெரியவில்லை. இப்படி இவர்கள் கயிறும் சாக்குப் பைகளும் போட்டுக் கட்டிய பின், பிரம்மாஸ்திரத்தின் சக்தி ஒழிந்து போயிற்று. ஸ்தூலப் பொருள்களால் கட்டயபின் மந்திரக்கட்டு தானாக அவிழ்ந்து போயிற்று. ஹனுமான் நாரும் கயிறும் போட்டுக் கட்டிய கட்டுக்களை ஒரு கணத்தில் அறுத்து எறிந்து எழுந்து விடுவான். மறுபடி பிரம்மாஸ்திரம் பிரயோகிக்க முடியாது" என்று எண்ணி வருத்தப்பட்டான்.

மாருதியும் நிலைமையை அறிந்து கொண்டான். பிரம்மாஸ்திரத்தின் கட்டு நீங்கிப் போயிற்று என்றும், கயிறுகளால் கட்டப்பட்டதுதான் மிச்சம் என்றும், அதைத் தன் தேகபலத்தால் ஒரு நொடியில் விலக்கிக் கொள்ளலாம் என்பதையும் உணர்ந்தான். ஆனபோதிலும் தன்னைக்

கட்டியிழுத்துச் செல்லட்டும்; ராவணனைக் கண்டு பேச அவகாசம் ஏற்பட்டது என்று உணர்ந்து, வேண்டுமென்றே பேசாமல் அவர்கள் செய்த கொடுமைகளையெல்லாம் பொறுத்துக் கொண்டு செயலற்றே இருந்தான். அடித்தார்கள்; திட்டினார்கள். ராக்ஷச ஸ்திரீகளும் பாமரர் களும் பரிகாசம் செய்யத் தெருவழியாக இழுத்துச் சென்றார்கள்.

## 74. லங்கா தகனம்

பிரம்மாஸ்திரத்தால் கட்டுண்ட ஹனுமான், தான் பெற்ற வரத்தால் அந்த அஸ்திரத்தினின்று விடுதலையடையும் வரையில் ஒன்றும் செய்யாமலிருக்க வேண்டும் என்று தீர்மானித்து, அரக்கப் பாமரர்கள் திட்டுவதையும் அவமானப்படுத்துவதையும் இம்சிப்பதையும் பொறுமையுடன் தாங்கிக்கொண்டே சென்றான்.

ராவணனுடைய சபையில், அரசன் முன் அவனைக் கொண்டுபோய் நிறுத்தினார்கள். தான் பட்ட துன்பமும் அவமானமும் போக ராவணனைக் கண்டதும், சீதைக்கு ராவணன் செய்த தீமையை நினைத்துப் பெருங்கோபம் மேலிட்டது. திவ்விய ஆபரணங்களும் பட்டுப் பீதாம்பரமும் கிரீடமும் பூண்டு கண்கூசும் எழிலுடன் ராவணன் அமர்ந்திருந்தான். தங்கம், ரத்தினம், வைடூரியம், முத்து, பட்டு இவற்றின் பிரகாசம் சபை முழுவதும் நிறைந்தது. ராஜ லக்ஷணங்களுடன் விளங்கிய அவன் கறுத்த மேனி ஒரு மலை போல் காணப்பட்டது.

'ஆஹா! இந்த மகான் தருமத்திலிருந்து பிறழாமல் சன்மார்க்கத்தில் நின்றிருந்தானாகில், இவன் ஐசுவரியமும் எவ்வாறு இருந்திருக்கும். இந்திரன் முதலியவர்கள் அனைவரும் இவனுக்கு ஈடாகமாட்டார்கள்! என்ன வடிவம்! என்ன எழில், என்ன பலம்! தான் பெற்ற வரங்களை [illegible], துஷ்ட காரியங்களில் இறங்கியதால் அல்லவோ இவன் தன்

பராக்கிரமத்தையும் மேன்மையையும் இழந்தான்!' இவ்வாறு கோபமும் வியப்பும் இரக்கமும் கொண்டு ஹனுமான் யோசித்துக் கொண்டிருக்கையில், ராவணன் மந்திரிகளைப் பார்த்து உத்தரவிட்டான்.

"இந்தத் துஷ்டன் யார்? எங்கிருந்து வந்தான்? யார் இவனை அனுப்பியது? இந்த லங்கைக்குள் ஏன் பிரவேசித்தான்? உண்மையைச் சொல்லும்படி கேளுங்கள்!" என்றான்.

மன்னன் உத்தரவிட்டபடி மந்திரி பிரஹஸ்தன் ஹனுமானைப் பார்த்து, "குரங்கே பயப்பட வேண்டாம்! உண்மையைச் சொன்னால் தப்பிப் போவாய். இந்திரன் உன்னை அனுப்பினானா? அல்லது நீ குபேரனுடைய ஆளா? அல்லது வேறு யார் உன்னை ஏவியது? உண்மையைச் சொல்லிவிட்டுத் தப்பித்துக்கொள். நீ ஏன் இந்த வேஷம் போட்டுக் கொண்டு இங்கு வந்திருக்கிறாய்? மறைக்காமல் சொல்" என்றான்.

இவ்வாறு பிரஹஸ்தன் நல்ல வார்த்தைகள் சொல்லிக் கேட்டான். ஹனுமான் மறுமொழியாக ராவணனைப் பார்த்துச் சொன்னான்.

"இந்திரனாவது குபேரனாவது என்னை அனுப்பவில்லை. நான் வானரன். ராக்ஷச ராஜனைப் பார்க்க விரும்பி வந்தேன். அதற்காக வனத்தை அழித்தேன். என்னைக் கொல்லப் பிறர் தாக்கினபடியால் அவர்களை நான் வதம் செய்தேன். வானர ராஜன் சுக்ரீவனுடைய தூதனாக நான் இங்கே வந்திருக்கிறேன். அரக்கர் மன்னனே! என் அரசன் தங்களைச் சகோதரனாகப் பாவித்துக் க்ஷேமம் விசாரிக்கிறார். அயோத்தி மன்னன் தசரதனுடைய புகழ்பெற்ற குமாரன் ராமச்சந்திரனும், வானர ராஜனும் நட்புச் செய்து கொண்டிருக்கிறார்கள். சுக்ரீவனுடைய பகைவனான வாலி, ராமச்சந்திரனால் வதம் செய்யப்

பட்டான். வானர ராஜ்யப் பதவியை சுக்ரீவன் அடைந்திருக் கிறான். அயோத்தியாதிபதியாக வேண்டிய ராமச்சந்திரன், தந்தை வாக்கை மேற்கொண்டு தண்டகாரண்யத்தில் வனவாசம் செய்து கொண்டிருந்த காலத்தில், அங்கே தனியாக இருந்த அவருடைய தேவியைக் காணாமல், ராம லட்சுமணர்கள் அவளைத் தேடி வந்தார்கள். சுக்ரீவ ராஜாவின் நட்பை அடைந்து அவன் சகாயத்தைக் கோரினார்கள். வானர ராஜன் தன் ஆட்களைப் பூவுலகம் முழுவதும் தேடிப் பார்க்க அனுப்பினான். லங்கையில் தேட நான் வந்தேன். புண்ணியவதி ஜானகியை இவ்விடம் நான் கண்டேன். ராக்ஷசேசுவரனாகிய தங்களுக்குச் சகோதர அரசனுடைய தூதனாகிய நான் வணக்கமாகச் சொல்லு கிறேன். சக்கரவர்த்தித் திருமகனுக்காகவும் சொல்லுகிறேன்.

"சீதா தேவியை அபகரித்துத் தூக்கி வந்தது. தருமத்துக்கு விரோதம் என்பது தங்களுக்குத் தெரியும். உம்முடைய குல நாசத்துக்கு இது காரணமாகும். ரகுவீரனையும் வானரர்களையும் பகை செய்துகொண்டு அழிந்து போக வேண்டாம். சீதையை மரியாதையாக ரகுவீரனிடம் ஒப்புவித்துச் சரணமடைவீராக! சீதையை உம்முடைய அழிவுக்காக வந்த காலனாக அறிவீராக! விஷத்தை உணவாக எண்ணவேண்டாம். புத்திமான்கள் தருமத்துக்கு விரோதமான காரியங்களில் அகப்பட்டுக் கொண்டு பெரிய அபாயத்துக்கு ஆளாக மாட்டார்கள். பிறர் மனைவியை விரும்பும் பாபம் ஒருவனை வேரோடு அழித்துவிடும் என்பதைத் தாங்கள் அறிவீர்கள். பாப காரியத்தால், தாங்கள் முன் செய்த தவமெல்லாம் அழிந்து போகும். இப்போது உமக்குள்ள வழி ராமனிடம் சரண் புகுவது ஒன்றே. ராமனைப் பகைத்துக் கொண்டு உம்முடைய நாசத்தைத் தேடிக்கொள்ளவேண்டாம். நீர் பெற்ற வரங்கள் ரகுவீரனுக்கு எதிரில் ஒன்றும் பயன்படாது. யோசித்துப் பார்த்து உண்மை ஆபத்தை அறிந்து கொள்வீராக. வானர

ராஜனுடைய தூதனாகிய நான் சொன்னதை மதித்து நல்வழியில் சென்று பிழைப்பீராக. நான் சொன்ன வார்த்தைகள் உம்முடைய சகோதரன் சுக்ரீவனுடைய தூதனால் உம்முடைய நன்மைக்காகச் சொன்ன உண்மை வார்த்தைகள்."

தைரியமே உருவெடுத்தவனான ஹனுமான் அரக்கனுக்கு விஷம்போல் தோன்றும் இந்த உபதேசத்தை, மிகத் தெளிவான மொழிகளில் சொன்னான். அதைக் கேட்ட அரக்கனுக்குக் கோபம் பொங்கிக் கண்கள் சிவந்தன.

கோபாவேசத்தில், "இவனைக் கொன்று மறுவேலை பார்ப்பீராக" என்றான்.

தூதனைக் கொல்வது தவறாகும் என்று சபையிலிருந்த விபீஷணன் சொன்னான். "தூதனைக் கொல்லுவது கூடாது என்று ராஜநீதி அறிந்தவர்கள் அனைவரும் சொல்லி வருவதால், இதைச் செய்யவேண்டாம். அங்கஹீனம் செய்யலாம். கசையடி கொடுக்கலாம். சூடு போட்டு விடலாம். மரண தண்டனை மட்டும் வேண்டாம்" என்று விபீஷணன் யோசனை சொன்னான்.

"பாப காரியம் செய்தவனைக் கொல்வதில் என்ன தவறு" என்று கேட்டான் ராவணன்.

"அப்படியல்ல, இவன் என்ன குற்றம் செய்தவனாக இருந்தாலும், அது பிறருடைய ஏவலினால் செய்யப்பட்டது. அவர்களை விட்டுவிட்டு வெறும் கருவியாக வந்த ஒரு சாரணனையோ, தூதனையோ பிடித்துக் கொல்வதில் ஒரு பயனுமில்லை. இவனை யார் அனுப்பினார்களோ அவர்களைத் தண்டிப்பதற்கு வழி தேடுவீராக. அவர்களைத் தண்டிக்க வேண்டுமானால் அவர்கள் இவ்விடம் வருவார்கள். அப்போது அவர்களைச் சரியான முறையில் தண்டிக்கலாம். இவனைக் கொன்று விட்டால் நம் எதிரிகள் இங்கே வருவதற்கு இடமே இராது. இவன் உயிருடன் திரும்பிப்

போய்ச் சொன்னால், அவர்கள் வந்து நம்மைத் தாக்கு வார்கள். அப்போது அவர்கள் சரியான தண்டனையை நம்முடைய பலத்தால் அடைவார்கள். அற்பமான ஒரு சாரணனைக் கொல்வதில் என்ன புகழ்? என்ன பிரயோஜனம்? ராஜ தருமத்திலிருந்து தவறினது ஒன்றே நிற்கும்" என்றான் விபீஷணன் வினயமாக.

இந்த யோசனையை ராவணன் ஒப்புக்கொண்டான். "சரி, வானரத்துக்கு முக்கியமான லட்சணம் அதன் வால், இவன் வாலைக் கொளுத்தி, அடித்துத் துரத்தி விடுங்கள்" என்றான் ராவணேசுவரன்.

இப்படி அரக்கர் மன்னன் சொன்னதும், வேலைக் காரர்கள் ஹனுமானைக் கொண்டு போனார்கள். வாலுக்குப் பழந்துணிகளைக்கொண்டு நன்றாகச் சுற்றி, எண்ணெய் விட்டு, நெருப்பு வைத்து விட்டார்கள். தீப்பற்றி எரிய ஆரம்பித்தது. கயிற்றால் கட்டப்பட்ட ஹனுமானை லங்கா நகரத் தெருக்கள் தோறும் இழுத்துச் சென்றார்கள்.

"இதோ நம் நகரத்துக்கு வந்த திருடன்!" என்று பெண்கள், குழந்தைகள் எல்லோரும் பார்த்து பரிகசித்துச் சந்தோஷப்படும்படியாக, ராக்ஷஸர்கள் ஹனுமானை ஊரில் எல்லாத் தெருக்கள் வழியாகவும், பெரும் வாத்திய கோஷங்களுடனும் கொண்டுபோய்ப் பெருமகிழ்ச்சி அடைந் தார்கள்.

அசோக வனத்தில் சீதைக்கு ராக்ஷசிகள் சொன் னார்கள். "உன்னோடு பேசிற்றே அந்தத் திருட்டுக் குரங்கு. அதற்கு என்னவாயிற்று தெரியுமா? வாலுக்கு எண்ணெய்த் துணி சுற்றி, நெருப்பு வைத்துவிட்டார்கள். வால் எரிந்து கொண்டிருக்கிறது. அவனை இழுத்துக்கொண்டு ஊர்வலம் செல்கிறார்கள்" என்று சொல்லிச் சீதையைப் பரிகசித்தார்கள்.

சீதை அக்கினி மூட்டி, "ஹே அக்கினியே, நான் செய்த புண்ணியம் ஏதேனும் இருந்தால், நான் உண்மைப் பதி விரதையானால் நீ ஹனுமானுக்கு குளிர்ந்து போவாயாக" என்று பிரார்த்தித்தாள்.

ஹனுமானும் எல்லா அவமானத்தையும் அடிகளையும் அக்கிரமங்களையும் பொறுத்துக்கொண்டு, தெருத்தெருவாக எல்லா இடங்களையும் பார்த்துக்கொண்டு சென்றான். நகரத்தில் எல்லாத் தெருக்கள் சந்துகளிலிருக்கும் பெண்களும் குழந்தைகளும் வேடிக்கை பார்க்கட்டும் என்று மாருதியை எல்லா இடங்களுக்கும் கொண்டு போனார்கள். அவனும் பேசாமல் நகரத்தின் கோட்டை முதலிய ரகசியங்களை முற்றிலும் நன்றாகப் பார்த்துக் கொண்டே போனான். "என் எஜமானனுக்கு இது உதவும்" என்று பொறுமையாகப் பார்த்துக் கொண்டே சென்றான்.

"இதுவென்ன ஆச்சரியம்! நெருப்பு வைத்திருக்கும் எண்ணெய்த்துணி பற்றி எரிகிறது! என் வாலுக்கோ அந்தத் தீ குளிர்ந்தே இருக்கிறது. ராம காரியத்தில் பஞ்ச பூதங்கள் உதவுகின்றன என்பதற்கு இது அடையாளம்! கடலில், மலை கிளம்பி எனக்கு உபசாரம் செய்யவில்லையா? அப்படி அக்கினிதேவனும் இப்போது என்னை வருத்தாமல் குளிர்ந்தி ருக்கிறான் போலிருக்கிறது. அல்லது என் தந்தை வாயு தேவனுடைய நட்பை மதித்து அக்கினி என்னை எரிக்காமல் தணித்திருக்கிறான் போலிருக்கிறது. ஆயினும் இந்தச் சமயத்தை விட்டுவிடலாகாது. இந்த துஷ்டர்களுக்குச் சரியான பயம் உண்டாக்கிப் போவதற்குச் தகுந்த சந்தர்ப்பம் தானாக வந்திருக்கிறது" என்று யோசிக்கலானான்.

திடீர் என்று தன் உருவத்தைச் சுருக்கிக் கொண்டு கட்டியிருந்த கட்டுக்களையெல்லாம் உதறித் தள்ளிவிட்டு மறுபடியும் பெரும் வடிவத்துடன், எரியும் வாலுடன் கிளம்பிப் பெரியதொரு மாளிகைமேல் குதித்து ஏறி நின்றான்.

கையில் ஒரு கம்பத்தைப் பிடுங்கிக் கொண்டு அதை அனைவரும் நடுங்கச் சுழற்றினான்.

பிறகு அங்கிருந்து மாளிகை மாளிகையாக தாவி குதித்து, ஒவ்வொரு வீடும் பற்றியெரிய நெருப்பு வைத்து விட்டுச் சென்றான். சிறிது நேரத்திற்குள் காற்றும் வீசிற்று. நகரமெல்லாம் தீப்பற்றி ஆகாயமளாவ எரிந்தது. அரக்கர்களும், பெண்களும், குழந்தைகளும் குய்யோ முறையோ என்று கதறிக்கொண்டு இங்குமங்கும் அலைந் தார்கள்.

"இந்தக் குரங்கு, யமனே!"என்று சிலரும், "இவன் அக்கினி தேவனே!" என்று சிலரும், இன்னும் இப்படிப் பல விதமாக ராக்ஷசர்கள் கத்திக்கொண்டு, பயந்து எரியும் வீடுகளிலிருந்து தப்பியோடினார்கள்.

தான் பட்ட இம்சையை நினைத்து , எரியும் லங்கையைப் பார்த்து, ஹனுமான் மிக மகிழ்ச்சியடைந்தான். திரிகூட மலையில் ஓர் உயர்ந்த இடத்திலிருந்து இதைப் பார்த்துத் திருப்தியடைந்து, பிறகு கடலில் போய் மூழ்கி வாலில் இருந்த நெருப்பை அணைத்துவிட்டு நின்றான்.

"ஐயோ, என்ன செய்தேன்! கோபத்தினால் மதியிழந்தேன்! எவ்வளவு பலம் இருந்து என்ன பயன்? எவ்வளவு சாமர்த்தியமும் ஐசுவரியமும் இருந்தாலும் கோபத்தை அடக்கத் தெரிந்தாலல்லவோ எல்லாம் பயன் படும்! சீதையும் அந்தப் பெருந்தீயில் மாண்டல்லவா போயிருக்க வேண்டும்! சர்வநாசமாக அல்லவா முடிந்தது, நான் கோபத்தில் செய்த காரியம்! ஐயோ! என்னைப் போன்ற மூடன் இல்லை; பாவி இல்லை! அரக்கர்கள் பேரில் கொண்ட கோபம் சீதையைக் கொன்றது. இனி நான் இங்கேயே உயிர் நீத்து, என் வாழ்க்கையையும் வெட்கத் தையும் தீர்த்துக்கொள்ள வேண்டும்" என்று தாங்க முடியாத துக்கத்தில் மூழ்கினான்.

அப்போது ஆகாயத்தில் யாரோ பேசுவது கேட்டது. லங்கா நகர் தீப்பற்றியெரிந்ததைக் கண்ட சாரண யக்ஷர்கள், ஆகாயத்தில் "ஆஹா! என்ன அற்புதச் செயல்! ஹனுமானுடைய பராக்கிரமம் வாழ்க! சீதை இருக்கும் இடம் தவிர, மிகுதி லங்கை முழுவதும் தீப்பற்றியெரிகிறது" என்று பேசி மகிழ்ந்தார்கள்.

இது ஹனுமான் காதில் பட்டது. 'ஓ பிழைத்தேன்! சீதையல்லவோ என் உயிரைக் காப்பாற்றி இருக்கிறாள்! அவள் புண்ணியம் அல்லவோ நெருப்பு என்னைத் தீண்டாமல் வாலில் குளிர்ந்து நின்றது. நெருப்பு அந்தக் கற்பு தேவியை எப்படித் தீண்டும்? அக்கினியை அக்கினி என்ன செய்யும்? நான் வைத்த நெருப்பு சீதையிடம் செல்லவில்லை. அக்கினி தேவனே உதவியிருக்கிறான். ராம காரியமல்லவா? சமுத்திர ராஜனும் மைனாகமும் உதவவில்லையா?" என்று இவ்வாறு எண்ணி, உடனே அசோக வனம் சென்றான்.

சிம்சுபா மரத்தடியில் உயிருடன் உட்கார்ந்திருந்த சீதையைக் கண்ணால் கண்டு மிக மகிழ்ந்து நமஸ்கரித்து, "தாயே! தாங்கள் க்ஷேமமாய் இருப்பதைக் கண்டேன். இது தங்கள் சக்தி, என் பாக்கியம். நான் போய் வருகிறேன்" என்றான் ஹனுமான்.

ஜானகியும், "நீயல்லவோ வீரன்! உன்னால் ஆகாத காரியமில்லை, சீக்கிரம் என் நாதன் வந்து அரக்கர்களை வீழ்த்தி, என்னை அடையச் செய்வாய். இது நீ ஒருவனே செய்யமுடியும்" என்றாள்.

"கோடிக்கணக்கான வானர சைன்யத்துடன் சுக்ரீவன் ராம லக்ஷ்மண வீரர்களுடன் இங்கு வந்து சேருவான். ராவணனும் அவன் துஷ்டக் கூட்டமும் மடிவார்கள். ரகுநந்தனன் உம்முடன் அயோத்திக்குத் திரும்பிப் போவான்.

துக்கப்படாதீர். மங்களம். சீக்கிரம் அவர்கள் வருவார்கள் என்று நிச்சயமாக இருப்பீராக."

இவ்வாறு சமாதானப்படுத்தி விடைபெற்றுக் கொண்டு சென்றான். கடற்கரையில் அரிஷ்ட மலைபோன்ற அழகிய மலையின் பேரில் ஏறி ஆகாயத்தில் கிளம்பினான்.

வழியில் மைனாக மலை தன்னை எதிர்பார்த்து நின்றதைக் கண்டு, அதைக் கையால் அன்போடு தடவிக் கொடுத்து விட்டு, நிற்காமல் வில்லினின்று செல்லும் அம்பின் வேகத்தோடு நேராகச் சென்றான். மகேந்தர மலையின் சிகரம் தெரிந்ததும் அக்கரை வந்தது என்று அறிந்து ஒரு பெரும் கர்ஜனை செய்தான். ஆகாயத்தில் கருடனைப்போல் வரும் ஹனுமானைப் பார்த்துக் கொண்டிருந்த வானரர்கள், "வந்து விட்டான்! வந்து விட்டான்!" என்று ஆரவாரம் செய்தார்கள். அதுவரையில் கவலையும் கண்ணீருமாக இருந்த வானரர்கள் அடங்காத மகிழ்ச்சியடைந்து குதித்தார்கள்.

ஜாம்பவான், "நிச்சயம் வெற்றியுடன் திரும்பி வருகிறான். இல்லாவிடில் இப்படிக் கர்ஜிக்க மாட்டான்" என்றான். எல்லோரும் மரங்களிலும் குன்றுகளிலும் ஏறி, ஹனுமான் ஆகாயத்தில் பறந்து வருவதைப் பார்த்துக் கொண்டே மகிழ்ச்சியோடு நின்றார்கள்.

மலைகளும் மரங்களும் எல்லாம் வானரர்களால் நிறைந்து விளங்கும் காட்சியை ஆகாயத்திலிருந்து பார்த்து ஹனுமான் மகிழ்ச்சியடைந்தான். ஆரவாரத்துக்கிடையில் மகேந்திர மலைமேல் இறங்கினான்.

## 75. வானரங்களின் களியாட்டம்

ஹனுமானைப் பார்த்து மகிழ்ச்சி மேலிட்ட வானரர்கள், மகேந்திர மலைமேல் கூடினார்கள். விருத்தனான ஜாம்பவான், வாயு புத்திரனை அன்புடன் வரவேற்று, "நடந்த

தையெல்லாம் எமக்குச் சொல். எல்லோரும் அனுபவிக்கலாம். எப்படி தேவியைக் கண்டாய்? அப்போது என்னவெல்லாம் நடந்தது? அவள் எப்படியிருக்கிறாள்? உடல் நிலை, மனநிலை எல்லாவற்றையும் பற்றிச் சொல். ராவணன் எப்படி நடந்து கொள்கிறான்? அருமை ஆஞ்சநேயனே! எல்லாம் உள்ளபடி நமக்குச் சொல்வாய். அதன்மேல் இனி என்ன செய்ய வேண்டியது என்பதை யோசித்துத் தீர்மானிக்க அனுகூலமாக இருக்கும்" என்றான்.

ஹனுமான் மனத்தால் சீதையை தியானித்து நமஸ்கரித்துவிட்டு, அவர்களுக்கு விஷயம் சொல்ல ஆரம்பித்தான்.

"மகேந்திர மலையிலிருந்து நான் ஆகாயத்தில் கிளம்பியது உங்களுக்கு தெரியுமே. கிளம்பிச் சமுத்திரத்தைத் தாண்டி ஆகாயத்தில் சென்று கொண்டிருந்தபோது, திடீரென்று கடலிலிருந்து, அங்கே முன் இல்லாத ஒரு மலை கிளம்பிற்று. 'ஓகோ என்னைத் தடுப்பதற்கு இது ஒன்று ஏதோ நிமிர்ந்து என் வழியை அடைக்கிறது. இதை நான் உடைத்து எறியவேண்டும்' என்று நிச்சயித்தேன். நிச்சயித்துப் பொன் மயமான அந்த மலையை என் வாலால் அடித்தேன்! மலை அந்த அடியை வாங்கிக்கொண்டு, மிக இனிய குரலில், "மகனே! நான் பகைவனல்ல; நான் உன் தந்தையால் காப்பாற்றப்பட்ட நன்றி மறவாதவன். என்னைக் கொல்ல வந்த இந்திரனுடைய வஜ்ராயுதத்தினின்று தப்பி, உன் தகப்பனார் வாயுவினுடைய உதவியால் பறந்து கடலில் மூழ்கி மறைந்து பிழைத் திருக்கிறேன். முன் நாட்களில் மலைகளெல்லாம் சிறகு பெற்று, உலகம் பயந்து நடுங்கும்படி இங்குமங்கும் ஆகாயத்தில் பறந்து கொண்டிருந்தன. அந்தக் காலத்தில் இந்திரன் உலகத்தின் பெரும் பயத்தைத் தீர்க்க, மலைகளைத் துரத்தித் துரத்தி அவற்றின் சிறகுகளை வெட்டித் தள்ளினான். அப்போது வாயு பகவான் செய்த உதவியால் அல்லவா நான் சிறகுடன் கடலில் மூழ்கித்

தப்பினேன்! அந்த உதவியை நான் மறக்கவில்லை. நீ ஆகாயத்தில் தாவி, யாரும் செய்யாத கஷ்டமான காரியத்தைச் செய்கிறாய். உனக்குச் சிரமம் தீர்க்க வந்து நிற்கிறேன். என்மேல் கொஞ்ச நேரம் தங்கி இளைப்பாறிப் பிறகு ராமகாரியத்தைப் பூர்த்தி செய்யச் செல்வாய்" என்றது. நான் அந்த உபசாரத்தைப் பெற அவகாசமில்லை என்று சமாதானம் சொல்லி மலையிடம் விடைபெற்றுக் கொண்டு தங்காமல் சென்றேன்.

இவ்வாறே பிறகு ஒன்றன் பின் ஒன்றாக சமுத்திரம் தாண்டும்போது நடந்த நிகழ்ச்சிகள், லங்கா நகரம் பிரவேசித்தபோது நடந்த நிகழ்ச்சிகள், நகரத்திலும் ராவணனுடைய அரண்மனையிலும் சீதையைத் தேடிக் காணாமல் போனது, பிறகு அசோக வனத்தில் போய்ச் சீதையைக் கண்டது, ராவணன் வந்து சீதையை வருந்திக் கேட்டுக் கொண்டது, சீதை அவனைத் துச்சமாக எண்ணிப் பேசியது, ராக்ஷசன் சீதையைப் பயமுறுத்தியது, ராக்ஷசிகள் சீதையைப் பலவாறு தொந்தரவு செய்து பயமுறுத்தியது, சீதை உயிர் நீக்க நிச்சயித்தது, பிறகு சீதையுடன் தான் பேசி ராமனைப் பற்றிச் செய்தி சொன்னது-எல்லாம் ஒன்றுவிடாமல் ஹனுமான் வானர வீரர்களுக்குச் சொன்னான்.

சீதை தனக்குச் சொன்னதையெல்லாம் கண்களில் நீர் ததும்பச் சொன்னான். பிறகு வனத்தை அழித்ததையும், ராக்ஷச வீரர்களைக் கொன்றதையும், இந்திரஜித்தால் கட்டப்பட்டு ராவணன் முன் கொண்டு போகப்பட்டதையும், வாலுக்குத் தீ வைக்கப்பட்டதையும், நகரத்தைத் தான் கொளுத்தியதையும் எல்லாம் நடந்தவாறு முழுக்கதையையும் வானரர்களுக்கு ஹனுமான் சொன்னான்.

இம்மாதிரிக் கட்டங்கள் வரும்போது வால்மீகி ராமாயணத்தில் ஒன்று நாம் காண்கிறோம். முன் நடந்த நிகழ்ச்சிகளை ஏதேனும் ஒரு பாத்திரம் வழியாகத் திரும்பச்

சொல்ல நேரும் இடங்களில் தயங்காமலும், ஏதும் விடாமலும் எல்லா நிகழ்ச்சிகளையும் மிக அழகாக மறுபடியும் கவி பாடுகிறார். பாராயணமாகப் படிப்போர்க்கு இது ஒரு தனி அழகு. இங்கே நான் அந்த மாதிரி நடந்ததையெல்லாம் மறுபடியும் ஹனுமான் வாயில் வைத்துத் தமிழில் சொல்வது சரியாக இராது. அதிகம் நீண்டு போகும், படித்ததையே படிக்கவேண்டியதாகும். இது இந்தக் காலத்தோருக்குப் பிடிக்காது!

ஏதேனும் அபாயம் தீரவேண்டும்; அல்லது எடுத்த காரியம் ஏதேனும் வெற்றிகரமாக நடைபெறவேண்டும் என்று விரும்புகிறவர்கள், சுந்தர காண்டத்தைப் பாராயணம் பண்ணுவது நம்முடைய வழக்கம். கடலைத் தாண்டும்போதும், பிறகு நடந்த வரலாற்றை ஹனுமான் எடுத்துச் சொல்லும் இந்த அத்தியாயத்தைப் பாராயணம் செய்தால், சுந்தர காண்டம் முழுதும் பாராயணம் செய்த பலனை அடையலாம்.

நடந்த நிகழ்ச்சிகளை ஒன்று விடாமல் விஸ்தாரமாகச் சொல்லி முடித்து, ஹனுமான் சொன்னான்.

"நம்முடைய முயற்சி இவ்வாறு சுபமாக முடிந்தது. ஆனால், அதற்கெலல்ம் மூலபலம் சீதையின் சீலமே. அவள் சக்தியே என்பதை நாம் உணரவேண்டும். என் மனதில் அந்தப் புனித தேவியின் காலடியில் இன்னும் நான் பணிந்தே நிற்கிறேன். சீதையை நினைக்கும்போது அவளை இந்த ராக்ஷசன் எவ்வாறு பிடித்துத் தூக்கிச் செல்ல முடிந்தது? அந்தக் கணமே எரிந்து சாம்பலாய்ப் போயிருக்க வேண்டுமல்லவா என்று வியக்க வேண்டி இருக்கிறது. ஆனால், ராவணனுடைய தபோ பலமும் பெரிது. அது அவனை ஓரளவு இன்னும் காத்து வருகிறது. ஆயினும் இஷ்டப்பட்டால் சீதை அவனை எரித்தேயிருப்பாள். தன் கணவன் ராமச்சந்திரனால் இவன் தண்டனை அடைய வேண்டும் என்று சகித்துக்

கொண்டிருக்கிறாள். இப்போது உங்கள் யோசனை என்ன? இப்போதே லங்கை சென்று ராவணனை வதம் செய்து லங்கையையும் அரக்கர் கூட்டத்தையும் நாமே அழித்து விட்டுச் சீதையையும் அழைத்துக் கொண்டு ராமனிடம் தேவியைச் சமர்ப்பித்துச் சந்தோஷிக்கச் செய்யலாம்? இதைப்பற்றி நீங்கள் யோசிக்க வேண்டும்.

"நமக்கு இதைச் செய்யும் சக்தி இல்லாமல் இல்லை. நான் ஒருவனாகவே அந்தக் கூட்டத்தை அடையாளமின்றி அழித்துவிடுவேன்; ஜாம்பவான், ஒருவரே போதும் அந்த அரக்கர் சேனை முழுவதையும் அழிக்க. வாலி புத்திரன் யுவராஜா ஒருவன் போதாதா? அவர்களைச் சம்பூரணமாக வதம் செய்வதற்கு? பனஸன், நீலன் இவர்களுடைய பராக்கிரமம் போதும் – லங்கையையும் ராவணனையும் சேர்த்து அழித்து வெற்றியுடன் திரும்பி வர. மயிந்தன், த்விவிதன் இந்த அசுவினி புத்திரர்கள் இருவருமே சென்று இந்தக் காரியத்தை எளிதில் முடித்துவிட்டுத் திரும்புவார்கள். பிதாமகருடைய வரங்களைப் பெற்றிருக்கிற இவர்கள் வெகு எளிதில் ராவணனைக் கொன்று வெற்றி முழக்கத்துடன் திரும்புவார்கள்.

"இப்படி நமக்குள் பலர் இருக்கிறார்கள். ராவணனையும் அவன் அரக்கர் கூட்டத்தையும் அழிக்க வல்லவர்கள். லங்கையில் நான் முழக்கம் செய்துமிருக்கிறேன். 'ராம தூதன் நான். சுக்ரீவனுடைய மந்திரி, உங்களை வதம் செய்ய வந்திருக்கிறேன்' என்று கர்ஜித்திருக்கிறேன். துஷ்டன் ராவணனுடைய நந்தவனத்தில் சிம்சுபா மரத்தடியில் ராக்ஷசிகளால் சூழப்பட்டுச் சிறைப்பட்டுக் கிடக்கிறாள். வைதேஹி என்கிற அந்தப் பதிவிரதா தேவி. மேகங்களால் மூடப்பட்டுத் தெரிந்தும் தெரியாமலும் இருக்கிற சந்திரனைப்போல், அசோக வனத்தில் சிறைபட்டுக் கிடக்கிறாள். எப்போது ராமன் வருவான் என்று, அவன்

தியானமாகவே வேறு எதையும் சிந்திக்காமல் வாடி வதங்கித் தவமிருந்து வருகிறாள். கொடிய ராக்ஷசிகள் அவளைத் துன்புறுத்திக் கொண்டிருப்பதை இந்தக் கண்களால் பார்த்தேன். காட்டில் துன்புறுத்தப்பட்ட மானைப்போல், அந்த வனத்தின் அவலக்ஷண சொரூபங்களான அரக்கிகளின் மத்தியில் , அகப்பட்டுக் கொண்டு வருந்தி வருகிறாள். அவளுடன் நேரில் பேசிச் சமாதானப்படுத்தினேன். 'ராம லக்ஷ்மணர்கள் வருவார்கள், ராமனால் ராவணன் சீக்கிரமாகவே வதம் செய்யப்படுவான்' என்று சொல்லியிருக்கிறேன், இனிச் செய்யவேண்டியது என்ன வென்று தீர்மானியுங்கள்" என்றான்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த அங்கதன் கோபக் கொதிப்புடன் குதித்தெழுந்து, "நான் ஒருவனே போதும், அப்படியிருக்க நாம் இத்தனை வீரர்களுடன் இருக்கிறோம். இவ்வளவு நாட்களான பின் நாம் சீதையை அழைத்துப் போகாமல் ராமனிடம் வெறுங்கையாகத் திரும்பிச் செல்வது சரியல்ல; லங்கை சென்று அரக்கர் சேனையையும் ராவணனையும் வதம் செய்து, சீதையுடன் கிஷ்கிந்தை திரும்புவோம்" என்றான்.

யுவராஜன் சொன்னதைக் கேட்ட ஜாம்பவான் மெதுவாகப் பேசினான்.

"அப்படியல்ல என் அன்புக்குரிய ராஜகுமாரனே! நாம் ராம லக்ஷ்மணர்களிடம் விஷயத்தை எல்லாம் சொல்லி, அதன்மேல் அவர்கள் சொல்வதுபோல் செய்யவேண்டும். ராகவனுடைய காரியத்தை அவர் எண்ணத்தின்படி முடிவு செய்யவேண்டும். அதுவே முறை" என்று மிக முதிர்ந்த அறிவுள்ள ஜாம்பவான் சொன்னான்.

இதுவே சரியென்று வானரக் கூட்டம், ஹனுமான் அங்கதன் உள்பட எல்லாரும் ஒப்புக்கொண்டார்கள். அங்கிருந்து ஆகாயத்தில் கிளம்பி கிஷ்கிந்தை நோக்கி மிக வேகமாகச் சென்றார்கள்.

வானர ராஜனுடைய நந்தவனத்துக்கு அருகில் வந்து இறங்கினார்கள். அந்த வனத்தில் புகுந்து தேன் குடித்துப் பழங்கள் உண்டு, காவற்காரர்கள் என்ன சொன்னாலும் கேட்காமல் அவர்களையும் அடித்து மிரட்டி எதேச்சையாக நடந்து கொண்டு, தோட்டத்தையும் நாசம் செய்தார்கள். அவர்கள் செய்த களியாட்ட அட்டகாசத்தைப் பொறுக்காத ததிமுகன்-அவன் நந்தவனத்துக்குக் காவலதிகாரியும், சுக்ரீவனுடைய மாமனும் ஆவான்- வேகமாகச் சென்று அரசனிடன் போய் "நந்தவனம் பாழாய்ப் போயிற்று; தெற்கே சென்ற வானரர்கள் திரும்பி வந்தவர்கள், அங்கே இறங்கி வெகு அக்ரமமாக நடந்து கொள்ளுகிறார்கள். நான் என்ன சொல்லியும் கேட்கவில்லை; என்னையே அடித்தும் குத்தியும் புறக்கணித்து அவமானப்படுத்தி, இஷ்டப்படி தேன் குடித்து, பழங்கள் பறித்துத் தின்றுவிட்டுப் போதை மேலேறிக் கிடக்கிறார்கள். செடிகளையும் கொடிகளையும் நாசமாக்கி விட்டார்கள். அவர்களை உடனே அரசன் தண்டிக்க வேண்டும்" என்றான்.

சுக்ரீவன் விஷயத்தைத் தெரிந்து கொண்டான். "ஹனுமானும் ஜாம்பவானும் அங்கதனும் காரியசித்தி யடைந்து வந்து விட்டார்கள். வெற்றி வெறியில் இவ்வாறு செய்திருக்கிறார்கள்!" என்று உணர்ந்துகொண்டு லக்ஷ்மணனுக்கு விஷயத்தைச் சொன்னான்.

"ததிமுகனே, உடனே அவர்கள் அனைவரையும் இவ்விடம் வரச்சொல்" என்று சுக்ரீவன் உத்தரவிட்டதும் ததிமுகனும் நிலைமையை உணர்ந்து, மிக வேகமாகவே சென்று அவர்களுக்கு அரசன் உத்தரவைத் தெரியப் படுத்தினான்.

## 76. கண்டேன் சீதையை

சுக்ரீவன் ஊகித்துப் பேசிய பேச்சு ராமனுடைய காதில் அமிர்தம் போல் சுவைத்தது. வானரர்கள் வருவதை

அவர்கள் ஆர்வத்தோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் போது, மேலே ஆகாயத்தில் பெரும் சலசலப்புக் கேட்டது. வானரர் கூட்டமாகக் கோஷஞ் செய்து கொண்டு வந்து இறங்கினார்கள்

* * *

ஹனுமானை முன்னிட்டுக்கொண்டு, அங்கதனும் வானரர்களும் வேகமாகக் கிளம்பி ராம லக்ஷ்மணர்களுடன் அரசன் சுக்ரீவன் இருந்த இடம் சென்றார்கள்.

ஹனுமான் ராமச்சந்திரனை வணங்கி, "கண்டேன் புனித தேவியை! க்ஷேமமாக இருக்கிறாள்! அவள் திக்கு நோக்கி வணங்குகிறேன்" என்று தெற்கே திரும்பி வணங்கினான்.

இப்படிச் சீதையின் உயிருக்கும் சீலத்துக்கும் ஏதொரு தீங்குமின்றி அவள் க்ஷேமமாக இருப்பதை, ஹனுமான் சக்கரவர்த்தித் திருமகனுக்கு முதலில் உணர்த்தினான்.

சுக்ரீவனும் லக்ஷ்மணனும் ராமனைக் கட்டியணைத்து ஆனந்தப் பரவசமானார்கள்.

"வானரர்காள்! சீதை எங்கே இருக்கிறாள்? எப்படி இருக்கிறாள்? எப்படிக் கண்டீர்கள்? எல்லாம் விவரமாகச் சொல்லுங்கள்.எனக்குப் பொறுக்க முடியவில்லை" என்றான் ராமன்.

"கண்டதையும் நடந்ததையும் எல்லாம் ராமச்சந்திரனுக்கு நீரே சொல்லவேண்டும்" என்று வானரர்கள் கேட்டுக்கொள்ள, ஹனுமான் சீதையைத் தியானித்து, திசைநோக்கித் தலை வணங்கி நமஸ்கரித்துவிட்டு, நடந்த விஷயங்களைச் சொல்ல ஆரம்பித்தான்.

* * *

செய்யவேண்டியதையெல்லாம் தைரியமாகவும் உற்சாகமாகவும் ஒருவனாகவே செய்து முடித்துவிட்டு, ராமச்

சந்திரன் முன்னிலையிலும் தன்னுடைய அரசன் முன்னிலையிலும் நிற்கும்போது ஹனுமான் மேற்கொண்ட அடக்கத்தைக் கவனிக்க வேண்டும். தான் செய்துவிட்ட பெருங் காரியத்தைப் பற்றிக் கர்வப்படாமல், யுவராஜனான அங்கதன், அறிவிலும் வயதிலும் பெரியோனாகிய ஜாம்பவான், இன்னும் மற்ற வீரர்களுக்கும் மரியாதை காட்டி, அவர்கள் ஏவலிடுவதற்குமுன் தான் பேசாமலிருந்தது, வாயுபுத்திரன் பண்பாட்டின் மகிமை.

தவிர, இயற்கையிலேயே எவனாயினும் அத்தனை கஷ்டமான காரியங்களை நிறைவேற்றிய ஒரு மகான், அதைப் பற்றித் தானே அவசரப்பட்டுப் பேசமாட்டான்; இதை முனிவர் நினைவில் வைத்து இந்தப்படிச் சித்திரித்திருக்கிறார்.

இன்னொரு விஷயமும் இவ்விடத்தில் கவனித்தல் தகும். ஜானகியை லங்கையில் நேரில் கண்டு பணிந்தது முதற்கொண்டு, பிராட்டியைத் தியானிப்பதிலும் பக்தி செலுத்துவதிலும் ஹனுமான் மிகவும் ஈடுபட்டுவிட்டான். ராமபக்தியைக் காட்டிலுங்கூட, பிராட்டியினிடம் அவனுக்கு உண்டாகிய பக்தி அதிகமாகி விட்டது. பரம்பொருளைத் தாயாகப் பாவித்து மகிழ்ந்த எல்லாப் பெரிய பக்தர்களுடைய அனுபவமும் இதுவே.

"நூறு யோசனை அகலமுள்ள கடலைத் தாண்டித் தென்கரையிலுள்ள துஷ்டன் ராவணனுடைய லங்கா நகரத்தை யடைந்தேன். அங்கே அந்தப்புர வனத்தில் சிறை வைக்கப்பட்டிருந்த சீதையைக் கண்டேன். 'ராம ராம' என்று ஒரே சிந்தையாக உயிரை வைத்துக்கொண்டிருந்த அந்த ஜானகியைக் கண்டேன். அவலக்ஷண வடிவங்களைக் கொண்ட கொடிய ராக்ஷசப் பெண்களின் காவலில் மிகவும் துயரப்பட்டுக் கொண்டிருந்தாள். தலைமயிர் பின்னப் படாமலும், தரையில் படுத்தும் துக்கமும் கவலையும்

நிறைந்த முகத்தினளாக உடம்பெல்லாம் நிறம் மாறிப் பனிக் காலத்துத் தாமரைக் குளம்போல் ஒளி இழந்திருந்த வளைக் கண்டேன். அரக்கனிடமிருந்து தப்புவதற்காக உயிர் நீக்க எண்ணினாள். தங்களுடைய கீர்த்தியை மெதுவாக எடுத்துச் சொல்லி, அதற்குமுன் என்னை அறியாத அவளுக்குக் குரங்கான என்னிடம் நம்பிக்கை உண்டாகச் செய்தேன். பிறகு பேசினேன். உமக்கும் அரசன் சுக்ரீவனுக்கும் ஏற்பட்ட நட்பைப்பற்றி அறிவித்தேன். நீர் துயரப்பட்டுக் கொண் டிருப்பதையும் சொன்னேன். உம்முடைய குறையாத அன்பைப் பற்றிச் சொல்லி அவளை மகிழ்வித்தேன். புனிததேவி உமக்குக் கொடுக்கும்படியாக இந்த ஆபரணத் தைத் தந்தாள். ஒரு காக்கை தாங்கள் தூங்கும் போது, தன்னைத் தொந்தரவு செய்ததைப் பற்றித் தாங்கள் வருத்தமுற்றதை எனக்குச் சொல்லி, தங்களுக்கு அதை நினைவூட்டச் சொன்னாள். அவளுடைய திலகம் அழிந்த ஒரு சமயம் தாங்கள் மலைக்கல்லை அரைத்து திலகமிட்டதை நினைவூட்டச் சொன்னாள். 'ஒருமாதம் உயிர்வைத்துக் கொண்டிருப்பேன். அதற்குமேல் முடியாது' என்று தங்களிடம் என்னைச் சொல்லச் சொன்னாள். வானரர்களுடைய அரசனுக்கும் இது தெரியும்படியாகச் சொல்வாய் என்று எனக்கு ஆணை யிட்டாள். இனி உடனே நாம் லங்கா நகரம் படையெடுத்துச் சென்று தேவியை மீட்டுக் கொண்டு வருவதைப் பற்றிச் சிந்திப்போம்" என்று சொல்லிச் சீதை. கொடுத்த சிகாமணியைச் சக்கரவர்த்தித் திருமகனிடம் கொடுத்தான்.

* * *

அதை வாங்கி உற்று நோக்கி ராமச்சந்திரன் விஸ்மயமாகிப் போனான். பிறகு ஆனந்தமோ துயரமோ உணராத நிலை அடைந்தான்.

சிகாமணியை மார்பில் வைத்து ஒற்றிக்கொண்டு "லக்ஷ்மணா" என்று அழுதான். "வீர வாயுவின் புத்திரனே!

சீதையைக் கண்ட வீரனே! உன்னைப்போல் நானும் இப்போது அவளைக் கண்டேன்" என்று ஹனுமானைக் கட்டி அணைத்துக் கொணடு, "எல்லா நிகழ்ச்சிகளையும் விஸ்தார மாக மறுபடியும் சொல், என் அன்புக்குரிய வீரனே! சீதை என்ன சொன்னாள்? அதைத் திரும்பத் திரும்பச் சொல். ஹனுமானே! அந்த மொழிகள் தாகத்தைத் தணிக்கும் தண்ணீர்போலச் சுவைக்கின்றன" என்றான்.

* * *

அப்படியே மாருதி எல்லா நிகழ்ச்சிகளையும் அனைவரும் கேட்க விஸ்தாரமாகச் சொல்லி, சீதை, ராமனிடம் சொல்லச் சொன்ன வார்த்தைகளை, அப்படியே அவளுடைய இனிய மொழிகளாகவே சொல்லி, ராமன் உள்ளத்தை நீராகப் பெருகச் செய்தான்.

"எத்தனையோ ராக்ஷசர்களைக் கொன்ற என் ராமன், ஏன் இப்படி நான் இங்கே தவித்துக் கொண்டிருக்க இன்னும் வரவில்லை? அரக்கனை சம்ஹாரம் செய்ய இன்னும் ஏன் வராமலிருக்கிறார்? ஏன் ராவணனை வதம் செய்ய லக்ஷ்ம ணனை அனுப்பாமலிருக்கிறார்? ஏன் வீரனானவர் என்னை உபேக்ஷித்து வருகிறார்? நான் என்ன பிழை செய்தேன்? ஒன்றும் இல்லையே!" இப்படிச் சீதை சொன்னாள். நான் அவளுக்குச் சமாதான வார்த்தைகள் சொன்னேன். "உம்மை நினைந்து நினைந்து ராமச்சந்திரன் துக்கக்கடலில் மூழ்கி நிற்கிறான். கணமும் அவனுக்கு நிம்மதியில்லை. ராமனும் லக்ஷ்மணனும் உம்மை மறந்துவிட்டதாக எண்ண வேண்டாம். அவர்கள் படும் துக்கத்தை விளக்கக்கூடிய மொழிகள் எனக்கில்லை. நான் போய் நீர் இவ்விடம் இருப்பதைச் சொல்ல வேண்டியதுதான் தாமதம், உடனே அவர்கள் வருவார்கள். அதிக காலம் காத்திருக்க வேண்டியதில்லை. வந்து விடுவார்கள். லங்கையைச் சாம்பலாக எரிக்கப் போகி றார்கள். ராவணனை அவன் கூட்டத்தோடு வதம்செய்து, அயோத்தியா நகரத்துக்குத் திரும்பிப் போவார்கள். எனக்கு

நிறைந்த முகத்தினளாக உடம்பெல்லாம் நிறம் மாறிப் பனிக் காலத்துத் தாமரைக் குளம்போல் ஒளி இழந்திருந்த வளைக் கண்டேன். அரக்கனிடமிருந்து தப்புவதற்காக உயிர் நீக்க எண்ணினாள். தங்களுடைய கீர்த்தியை மெதுவாக எடுத்துச் சொல்லி, அதற்குமுன் என்னை அறியாத அவளுக்குக் குரங்கான என்னிடம் நம்பிக்கை உண்டாகச் செய்தேன். பிறகு பேசினேன். உமக்கும் அரசன் சுக்ரீவனுக்கும் ஏற்பட்ட நட்பைப்பற்றி அறிவித்தேன். நீர் துயரப்பட்டுக் கொண்டிருப்பதையும் சொன்னேன். உம்முடைய குறையாத அன்பைப் பற்றிச் சொல்லி அவளை மகிழ்வித்தேன். புனிததேவி உமக்குக் கொடுக்கும்படியாக இந்த ஆபரணத்தைத் தந்தாள். ஒரு காக்கை தாங்கள் தூங்கும் போது, தன்னைத் தொந்தரவு செய்ததைப் பற்றித் தாங்கள் வருத்தமுற்றதை எனக்குச் சொல்லி, தங்களுக்கு அதை நினைவூட்டச் சொன்னாள். அவளுடைய திலகம் அழிந்த ஒரு சமயம் தாங்கள் மலைக்கல்லை அரைத்து திலகமிட்டதை நினைவூட்டச் சொன்னாள். 'ஒருமாதம் உயிர்வைத்துக் கொண்டிருப்பேன். அதற்குமேல் முடியாது' என்று தங்களிடம் என்னைச் சொல்லச் சொன்னாள். வானரர்களுடைய அரசனுக்கும் இது தெரியும்படியாகச் சொல்வாய் என்று எனக்கு ஆணை யிட்டாள். இனி உடனே நாம் லங்கா நகரம் படையெடுத்துச் சென்று தேவியை மீட்டுக் கொண்டு வருவதைப் பற்றிச் சிந்திப்போம்" என்று சொல்லிச் சீதை. கொடுத்த சிகாமணியைச் சக்கரவர்த்தித் திருமகனிடம் கொடுத்தான்.

* * *

அதை வாங்கி உற்று நோக்கி ராமச்சந்திரன் விஸ்மயமாகிப் போனான். பிறகு ஆனந்தமோ துயரமோ உணராத நிலை அடைந்தான்.

சிகாமணியை மார்பில் வைத்து ஒற்றிக்கொண்டு "லக்ஷ்மணா" என்று அழுதான். "வீர வாயுவின் புத்திரனே!

சீதையைக் கண்ட வீரனே! உன்னைப்போல் நானும் இப்போது அவளைக் கண்டேன்" என்று ஹனுமானைக் கட்டி அணைத்துக் கொண்டு, "எல்லா நிகழ்ச்சிகளையும் விஸ்தாரமாக மறுபடியும் சொல், என் அன்புக்குரிய வீரனே! சீதை என்ன சொன்னாள்? அதைத் திரும்பத் திரும்பச் சொல். ஹனுமானே! அந்த மொழிகள் தாகத்தைத் தணிக்கும் தண்ணீர்போலச் சுவைக்கின்றன" என்றான்.

* * *

அப்படியே மாருதி எல்லா நிகழ்ச்சிகளையும் அனைவரும் கேட்க விஸ்தாரமாகச் சொல்லி, சீதை, ராமனிடம் சொல்லச் சொன்ன வார்த்தைகளை, அப்படியே அவளுடைய இனிய மொழிகளாகவே சொல்லி, ராமன் உள்ளத்தை நீராகப் பெருகச் செய்தான்.

"எத்தனையோ ராக்ஷசர்களைக் கொன்ற என் ராமன், ஏன் இப்படி நான் இங்கே தவித்துக் கொண்டிருக்க இன்னும் வரவில்லை? அரக்கனை சம்ஹாரம் செய்ய இன்னும் ஏன் வராமலிருக்கிறார்? ஏன் ராவணனை வதம் செய்ய லக்ஷ்மணனை அனுப்பாமலிருக்கிறார்? ஏன் வீரனானவர் என்னை உபேக்ஷித்து வருகிறார்? நான் என்ன பிழை செய்தேன்? ஒன்றும் இல்லையே!" இப்படிச் சீதை சொன்னாள். நான் அவளுக்குச் சமாதான வார்த்தைகள் சொன்னேன். "உம்மை நினைந்து நினைந்து ராமச்சந்திரன் துக்கக்கடலில் மூழ்கி நிற்கிறான். கணமும் அவனுக்கு நிம்மதியில்லை. ராமனும் லக்ஷ்மணனும் உம்மை மறந்துவிட்டதாக எண்ண வேண்டாம். அவர்கள் படும் துக்கத்தை விளக்கக்கூடிய மொழிகள் எனக்கில்லை. நான் போய் நீர் இவ்விடம் இருப்பதைச் சொல்ல வேண்டியதுதான் தாமதம், உடனே அவர்கள் வருவார்கள். அதிக காலம் காத்திருக்க வேண்டியதில்லை. வந்து விடுவார்கள். லங்கையைச் சாம்பலாக எரிக்கப் போகிறார்கள். ராவணனை அவன் கூட்டத்தோடு வதம்செய்து, அயோத்தியா நகரத்துக்குத் திரும்பிப் போவார்கள். எனக்கு

அடையாளம் ஒன்றைத் தருவீராக. நான் உடனே போகிறேன்" என்று நான் சொன்னேன். அப்படிச் சொன்ன போது, இந்தச் சூடாமணி ஆபரணம் துணியில் முடிந்திருந் ததை அவிழ்த்து என்னிடம் தேவி தந்தாள். தந்ததும் நான் அதை என் தலையில் வைத்துப் பூஜித்துப் பத்திரம் செய்துகொண்டு திரும்பிச் செல்லப் புறப்பட்டேன். அப்போது அவள், 'ஹனுமானே! ராம லக்ஷ்மண சிம்மங் களுக்கும் அரசன் சுக்ரீவனுக்கும் அவர் மந்திரிகளுக்கும் என் க்ஷேம சமாசாரத்தைச் சொல்லுவாய். என்னை ராமன் அடைவதற்குத் தகுந்த வழியை அவருக்குச் சொல்லுவாய். உன்னை நம்பினேன்! நீ க்ஷேமமாய்ப் போய்ச் சேருவாயாக. மங்களம்' என்று சொல்லி ஆசீர்வதித்து அனுப்பினாள். பிரபுவே துக்கப்படவேண்டாம். காரியத்தில் மனம் செலுத்துவீராக. பிறகு, 'எப்படி இந்தக் கடலை ராம லட்சுமணர்கள் தாண்டி வருவார்கள்? வானரசேனை எப்படி லங்கை வந்து சேரும்?' என்று சீதை சந்தேகப்பட்டுத் துயரப்பட்டாள். 'சந்தேகப்பட வேண்டாம். தூதனாக வந்த நான், சுக்ரீவனுடைய வானரர்களில் ஒரு சிறியவன். சிறந்த வீரனையா அரசர்கள் தூதனாக அனுப்புவார்கள்? அங்கிருக்கும் வீரர்களில் பலர் என்னைவிடப் பலசாலிகள். வானரர்களுக்குள் பூமண்டலம் முழுதும் தரையில் கால் வைக்காமல் தாவிச் சுற்றும் சக்தி கொண்டவர்கள் இருக்கிறார்கள். ராம லட்சுமணர்களை நானே தூக்கிக் கடலைத் தாண்டி வரமுடியும். இவ்விடம் வில்லும் கையுமாக அவர்கள் இறங்குவார்கள். நீர் நிச்சயமாக இருக்கலாம்' என்று நான் தேவியைத் தேற்றினேன். அவளும் மனச் சாந்தியடைந்தாள்" என்றான்.

## 77. படை புறப்பட்டது

"யாராலும் செய்ய முடியாத ஒரு காரியத்தை, ஏன் யாராலும் நினைக்கக்கூட முடியாத ஒரு காரியத்தை

ஹனுமான் செய்து முடித்தான். இவனுக்கு நான் என்ன பிரதியுபகாரம் செய்து திருப்தியடைய முடியும்" என்று ராமச்சந்திரன் ஹனுமானைக் கட்டியணைத்துக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் விட்டான். பிறகு மேல் நடக்க வேண்டிய காரியத்தைப் பற்றி யோசித்தான்.

"சுக்ரீவ! ஹனுமான் அற்புதமான காரியம் செய்தான். ராக்ஷசர்களால் காக்கப்பட்ட லங்கா நகரத்தில் புகுந்து சீதையைக் கண்டு, அவளுக்குத் தைரியம் சொல்லி அவளுடைய உயிரைக் காப்பாற்றினான். அவளைப் பற்றி க்ஷேம சமாசாரம் கொண்டு வந்து என்னையும் காப்பாற்றினான். ஆனால், இப்போது சமுத்திரத்தை எப்படித் தாண்டப் போகிறோம்? உன்னுடைய சேனை எவ்வாறு அக்கரை போய்ச் சேருவது? ராவணனுடைய நகரத்தையும் ராக்ஷச சேனையையும் தாக்க வேண்டுமானால், முதலில் நாம் இந்தக் கடலைத் தாண்ட வேண்டுமல்லவா? இதற்கு வழி தோன்றவில்லை. ஹனுமான் செய்த பெருங்காரியமும் அதனால் உண்டான மகிழ்ச்சியும் இந்தக் கவலையில் கரைந்து போவதாக இருக்கிறது" என்று சொல்லிக் கவலையில் மூழ்கினான்.

ராமனுடைய கவலையைக் கண்டு வானர ராஜன், "இதுவென்ன ராமனே! நீரும் இப்படி மனத்தளர்ச்சி அடையாலாமா? உமக்கு என்ன பயம்? இதோ என் வீரர்கள் இருக்கிறார்கள். இவர்கள் உமக்காக உயிரைக் கொடுக்கக் காத்திருக்கிறார்கள். சந்தோஷமாகவே உயிரைக் கொடுப்பார்கள் என்பது எனக்குத் தெரியும். கவலைப் படலாகாது. கவலை அதைரியத்தை உண்டாக்கும். மனத்தைக் கவலையில் செலுத்தாதீர். உம்மையும் தம்பியையும் லங்கைக்குக் கொண்டுப்போய்ச் சேர்ப்பது எங்கள் காரியம். அதைப்பற்றி சந்தேகப்படவேண்டாம். நீர் பகைவனைக் கொன்று சீதையை மீட்டுக் கொண்டு வராமற் போவதில்லை. இதை உறுதியாக நம்புவீர். லங்கையை எப்போது ஹனுமான்

கண்டானோ அப்போதே அந்தக் கோட்டை அழிந்தது என்று வைத்துக் கொள்வீர். சோகத்தில் பயனில்லை. அது தைரியத்தை அழிக்கும். அதை உடனே விலக்குவீர். எல்லாம் தெரிந்த உமக்கு நான் ஏன் சொல்லவேண்டும்? உமக்குத் துணை நான் இருக்க, நீர் ஏன் கவலைப்பட வேண்டும்? நானும் என்னுடைய வானரர்களும் உமக்குத் துணையாக இருக்க, வில் பிடித்து நீர் நின்றால் உம்மைத் தடுப்பவர் யார்? நீர் இனிச் சோகத்தை நீக்கி, க்ஷத்திரியனுக்குரிய ரோஷத்தை மேற்கொள்வீர். கடலை எவ்வாறு தாண்டுவது என்பதை உம்முடைய நுண்ணறிவைப் பயன்படுத்தி ஆராய்வீர். என்னுடைய வானர வீரர்களுடைய சக்தியை அறிந்து கொண்டு அவர்களைப் பயன்படுத்திக் கொள்வீர்! நமக்கு வெற்றி நிச்சயம். என் உள்ளத்தில் எழும் உணர்ச்சியே அதற்குச் சாக்ஷியாகும் ஒரு நிமித்தம்!" என்றான்.

இவ்வாறு தேற்றி, வானர ராஜன் ராமனை உற்சாகப்படுத்தினான். ராமனும் ஹனுமானும் பிறகு லங்கையைப் பற்றிப் பேசினர். நகரம், கோட்டை, அரண் முதலியவைகளின் பலத்தைச் சக்கரவர்த்தித் திருமகன் கேட்டு அறிந்து கொண்டான்.

லங்கையின் ஐசுவரியம், சுபிட்சம், ராக்ஷசர்களின் சந்தோஷம், ராவணனிடம் அவர்கள் வைத்திருக்கும் நம்பிக்கை, அன்பு இவற்றையெல்லாம் ஹனுமான் ஒன்று மறைக்காமல் சொன்னான். ராவணனுடைய சேனா பலம், கோட்டையின் பலம், அதன் அரண்களின் அமைப்பு, மிகக் கவனமாகக் காவல் காக்கும் படைகள், கல்லெறி யந்திரங்கள், மதில்சுவர்கள், வாயில்கள், அகழிகள், அகழிகளின் மேல் வேண்டியபோதே இறங்குவதும் மேலே தூக்கிவிடுவதுமான மரப்பாலங்கள்-இவையெல்லாம் எவ்வளவு ஜாக்கிரதையா கவும் பலமாகவும் அமைக்கப்பட்டிருக்கின்றன என்பதை ஹனுமான் ராமனுக்கு எடுத்துச் சொன்னான். கடற்கரை யைப் பற்றியும் சொன்னான். "கப்பல்கள் இங்கே

அண்டமுடியாது. திரிகூடமலையும் லங்கா நகரமும் கோட்டையும் எந்தச் சத்துருவும் பக்கத்தில் நெருங்க முடியாத முறையில் ராவணனால் காக்கப்பட்டு வருகின்றன. ராவணனுடைய பலமும், செல்வமும், சேனாபலமும் சொல்லுக்கு அடங்காதவை. ஆயினும் நம் வானரசேனைக்கு இவையெல்லாவற்றையும் அழிக்கும் சக்தி உண்டு என்று உறுதியாக இருப்பீராக. அங்கதன், த்விவிதன், மயிந்தன், ஜாம்பவான், பனஸன், நளன், நீலன் போன்ற நிகரற்ற வீரர்கள் இருக்கிறார்கள். பெரும் படையும் இருக்கிறது. தரையைத் தீண்டாமல் மேலே கிளம்பிச் சென்று லங்கையை அழிப்போம். அதன் மலையரண், காட்டரண் இவற்றை நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை. உடைத்து நாசம் செய்வோம். நல்ல முகூர்த்தம் பார்த்துப் புறப்பட உத்தரவு கொடுங்கள்" என்று ஹனுமான் சொன்னான்.

உத்தர பங்குனி நட்சத்திரத்தன்று, வெற்றி தரும் முகூர்த்தமான மத்தியான காலத்தில், வானரப்படை தெற்குக் கடலை நோக்கிப் புறப்பட்டது. புறப்படும்போது நல்ல சகுனங்கள் கண்டார்கள். ராமனும் சுக்ரீவனும், லக்ஷ்மணனும், பேசிக்கொண்டு சென்றார்கள்.

"நாம் புறப்பட்டோம் என்பதைச் சீதை அறிந்தால், தைரியமடைந்து உயிரை வைத்துக் கொண்டிருப்பாள் அல்லவா?" என்றான் ராமன்.

மார்க்கமறிந்த படைவீரர்கள் சிலர் முன்னால் சென்று போகும் வழியில் பகைவர்கள் மறைந்திருக்கிறார்களா என்று பார்த்துக் கொண்டு சென்றார்கள். பெருஞ்சேனைக்கு உணவும், தாகத்துக்குத் தண்ணீரும் கிடைக்கும் பிரதேசமாகப் பார்த்துக்கொண்டு சென்றார்கள். வானரப்படை வெகு வேகமாக மலைகளையும் காடுகளையும் தாண்டிச் சென்றது. ராமனையும் லக்ஷ்மணனையும் வானரர்கள் தூக்கிச் சென்றார்கள்.

சேனையில் உற்சாகம் பெருகி வளர்ந்தது. குதித்துக் கொண்டும், கர்ஜித்துக் கொண்டும் விளையாடிக் கொண்டும் வானரர்கள் சென்றார்கள். 'ராவணனை நான் கொல்லுவேன்; நான் கொல்லுவேன்' என்று போட்டி போட்டுப் பேசிக் கொண்டு சென்றதை ராமன் கேட்டு உற்சாகம் அடைந்தான். நீலனும் குமுதனும் சேனைக்கு முன்புறமாக, மார்க்கத்தைச் சோதித்துக்கொண்டு சென்றார்கள். பின்னாலும் சிறந்த வீரர்கள் சேனையைக் காத்து வந்தார்கள். ராஜா சுக்ரீவனும் ராம லக்ஷ்மணர்களும் சேனையின் மத்திய பாகத்தில் சென்றார்கள்.

வழியில் வந்த நகரங்களுக்காவது, கிராமங்களுக்காவது எவ்விதச் சேதமும் செய்யாமல் செல்ல வேண்டுமென்பது ராமனுடைய கண்டிப்பான உத்தரவு.

படையின் கோஷம் சமுத்திரத்தின் சப்தம்போல் எட்டுத் திசைகளிலும் நிறைந்தது. தூசி ஆகாயம் அளாவிக் கிளம்பிற்று.

மகேந்திர மலையருகே வந்ததும் ராமன் மலைமேல் ஏறிக் கடலைப் பார்த்தான்.

"இனி இந்தச் சமுத்திரத்தை எப்படி நம்முடைய சேனை கடப்பது என்பதைப் பற்றித் தீர்மானிக்க வேண்டும். அதுவரையில் இவ்விடம் வனத்தில் சேனை தங்கலாம்" என்றான் ராமன். அவ்வாறே சுக்ரீவன், படை வீரர்களுக்கு ஆணையிட்டான்.

சமுத்திரக்கரை வனத்தில் வானர சேனை தங்கிற்று. பகைவர்களுடைய சூழ்ச்சியால் யாதொரு தீங்கும் ஏற்படாமல், வீரர்கள் நான்கு பக்கமும் ஜாக்கிரதையாகப் பார்த்து வந்தார்கள். எல்லோருக்கும் சௌகரியமாகத் தங்குமிடம் அமைந்ததா என்று சுக்ரீவனும் ராம

லக்ஷ்மணர்களும் பார்த்துத் திருப்தியடைந்தபின், ராமன் லக்ஷ்மணனுடன் தனியாக உட்கார்ந்து பேசினான்.

"பிரியமான ஒரு பொருளை இழந்து விட்டதால், நாளடைவில் அதன் நினைவும் அதைவிட்டுப் பிரிந்த துயரமும் குறைந்து போகும் என்று சொல்கிறார்களே, ஆனால் லக்ஷ்மணா, சீதையின் பிரிவில் நான் இதைக் காணவில்லை!" என்றான்.

"ராவணன் சீதையைப் பிடித்து தூக்கிப்போகும் போது, 'ஹா நாதா! ஹா ராமா! ஹா லக்ஷ்மணா!' என்று சீதை கத்தினாளே! நாம் உதவாமல் போனோமே! அப்போது அவள் பட்ட துயரத்தை எண்ண எண்ண என் துக்கம் கடல் போலப் பெருகுகிறதே! நான் என்ன செய்வேன்? விஷத்தைக் குடித்துவிட்டு ஒவ்வொரு அவயவமும் எரிகிறது போல் என் அவயவங்கள் எரிகின்றன. தேகம் முழுவதும் தீக்கொளுத்தி னாற்போல் எரிகிறதே. கொடிய ராக்ஷசர்களிடையில் அகப் பட்டுத் தவித்துக் கொண்டிருக்கிறாளே! ஜனகன் மகள், தசரத சக்ரவர்த்தி வீட்டில் புகுந்த மருமகள் தரையில் அரக்கிகளால் சூழப்பட்டுச் சிறையில் கிடக்கிறாளே!" என்று ராமன் துக்கப்பட்டுப் பிரலாபித்தான்.

"ராமா! துக்கப்படாதே! ராவணனை வதம் செய்து சீதையை வெற்றியுடன் அயோத்திக்கு அழைத்துச் செல்லும் நாள் கிட்டி விட்டது! தேவ கன்னியைப் போல் அயோத்தியில் பிரவேசிப்பாள். துக்கத்தை ஒழித்து தைரியத்தை மேற்கொள்வீர்" என்றான் தம்பி லஷ்மணன்.

## 78. இலங்கையில் கவலை

இனி ராவணனிடம் போவோம். மகா கவிகளின் போக்கில் ஒரு தனிச் சிறப்பு உண்டு. தங்களுடைய கற்பனா சக்தியைச் செலுத்தி வெறுக்க வேண்டிய பாத்திரங்களையும் இயற்கை நியதிகளைப் புறக்கணிக்காமல் உணர்ச்சியுடன்

சித்திரிப்பார்கள். குணங்களையும் சாமர்த்தியத்தையும் தாழ்த்திவிட்டுச் சித்திரிக்க மாட்டார்கள்.

மக்களின் மனப்பான்மையைச் சாத்வீக மார்க்கத்தில் செலுத்துவதே கவிகளின் கருத்து. இதற்காகவேதான் ராஜஸ தாமஸ குணங்கள் பொதிந்து கிடக்கும் சாதாரண மக்களுக்குக் காவியம் படிக்கும்போது ராஜஸ தாமஸ பாத்திரங்களிடம் அனுதாபமே ஏற்படும். கீழ்த்தர மக்களைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. சாத்வீகப் பாத்திரங்களின் செயல்களை வெறும் கதையாகவும் பூஜை விஷயமாகவும் வைத்துவிட்டு, ராஜஸ தாமஸ பாத்திரங்களைத் தங்கள் உறவினர்களாகவே பாவித்து, அனுதாபத்தோடும் அக்கறையோடும் படித்து அனுபவிப்பார்கள்.

மில்டன் என்ற ஆங்கில மகாகவி "சுவர்க்கம் இழந்த" கிறிஸ்துவப் புராணத்தை ஒரு பெருங் காவியமாகப் பாடியிருக்கிறார். அந்தக் காவியத்தின் புகழ் உலகம் அளாவிப் பரந்தது. அதில் ஆண்டவன், ஆண்டவனுடைய மானஸ புத்திரனும் மக்களுக்குப் புருஷகாரனுமான கடவுள் திருமகன்* நித்திய சூரிகள் எல்லாரும் பாத்திரங்களாக வருகிறார்கள். கடவுளை முதன் முதலில் எதிர்த்துப் பாபத்தையும் மரணத்தையும் பிரபஞ்சத்தில் உற்பவம் செய்த சைத்தான் அந்தப் பெருங்காவியத்தில் முக்கியமான பாத்திரம். இந்தச் சைத்தானை மில்டன் அற்புத அழகுடன் சித்திரிப்பதாக ஆங்கிலக் காவிய ரசிகர்கள் புகழ்வார்கள். அப்படியே உலகப் பிரசித்தரான நாடகக் கவிஞன் ஷேக்ஸ்பியரும் ஷைலாக் என்கிற லோபி, அதிக வட்டிக்குக் கடன் கொடுத்து மக்கள் ரத்தத்தை உறிஞ்சும் பாத்திரத்தை மிக அழகாக சித்திரித்திருக்கிறார். பெரும் துர்க்குணங்களை வைத்துக் கற்பித்த பாத்திரங்களானாலும், கெட்ட

---

*நம்முடைய சமயங்களில் எப்படி தேவி புருஷ காரமோ அதாவது கருணைக்கென்று மூர்த்தியோ அப்படியே கிறிஸ்து மதத்தில் புருஷகாரம் கடவுள் திருமகனான ஏசுநாதர்.

குணங்களுடன், தைரியம், உறுதி, சாமர்த்தியம் இத்தகைய உயர்ந்த குணங்களையும், அழுக்குக்குப் பின்னிருந்து மிளிரும்படி மனதைக் கவரும் வகையில் சேர்த்தே கவிகள் நமக்குச் சித்திரித்துக் காட்டுவார்கள். பாமர மக்களாகிய நமக்கு அந்தப் பாத்திரங்களின்றும் அடையவேண்டிய அறிவு ரொம்பவும் இருக்கிறபடியால், நம்முடைய கவனத்தை இழுக்கும்படி அந்தப் பாத்திரங்களின் சித்திரத்தில் மிகுந்த ஒளி புகுத்தியே அமைப்பார்கள். வால்மீகி மகா காவியத்தில் ராவண கும்பகர்ண சித்திரங்களில் இதைப் பார்க்கலாம். உணவுப் பண்டங்களில் கசப்பிலும் மிக ருசி உண்டல்லவா? அத்தகைய பண்டங்களை நன்றாகச் சமைப்பதே சாமர்த்தியம். அதைப் போலவே காவியத்திலும்.

ஹனுமான் லங்கையில் செய்த வீரச் செயல்களும், நாசகாரியங்களும் ராக்ஷச ராஜனுக்கு ஓரளவு வெட்கம் உண்டாக்கின. பயமும் ஏற்பட்டது. ஆனபடியால் சபை கூட்டி மந்திராலோசனை செய்தான்.

ஹனுமான் செய்த காரியங்களைப் பற்றிக் கொஞ்சம் அவமானப்பட்டுத் தலைகுனிந்தே பேசினான்.

"இதுவரையில் பகைவர் யாரும் நம்முடைய நகரத்துக்குள்ளே புகுந்து பார்த்ததில்லை. ராமனிடமிருந்து வந்த இந்த வானரன் லங்கைக்குள் பிரவேசித்து சிறையி லிருக்கும் ஜானகியையும் பார்த்துவிட்டுப் போய்விட்டான். மாடமாளிகைகளை அழித்தான். சிறந்த வீரர்களைக் கொன்றான். நம்முடைய பிரஜைகளைப் பயத்தால் நடுங்கவும் செய்து விட்டான். இந்த விஷயம் இத்துடன் நிற்காது. ஆகையால் மேல் நடத்தவேண்டிய காரியங்களைப் பற்றி நாம் ஆலோசிக்க வேண்டும்.

"மங்களம்! அரசனுடைய நன்மையைக் கோரும் மந்திரிகளுடன் ஆலோசித்தே எல்லாக் காரியங்களையும் அரசன் செய்ய வேண்டுமல்லவா? ஆதலால் இந்தச் சபை

கூட்டினேன். நமக்கு ராமன் பகைவனாகி விட்டான். அவனைப்பற்றி என்ன செய்யலாம் என்பதை நன்றாக யோசிக்க வேண்டும். அரசன் தன் சாமர்த்தியம், தன் புத்தி இவற்றையே நம்பிக் காரியங்களைச் சாதித்துக் கொண்டு போவதைக் காட்டிலும், தன்னுடைய நன்மையில் பங்கும் பற்றும் கொண்ட புத்திமான்களுடன் யோசித்துக் காரியங்களைச் செய்வதே நன்மை தரும். மந்திரிகளுடைய யோசனையையும் இயற்கை விதிகளையும் புறக்கணித்து விட்டுக் காரியங்களைச் செய்து கொண்டு போகும் அரசன் கெட்டுப் போவான். மந்திரிகளிலும் நீதி சாஸ்திரத்தை கவனித்து, உறுதியான கொள்கைகளை அனுசரித்துத் தைரியமாக யோசனை சொல்லுகிறவர்கள் உத்தமமான மந்திரிகள் ஆவார்கள். தங்கள் புத்தியை நேர்வழியில் செலுத் தாமலும் உறுதியான முடிவுகளுக்கு வராமலும் இப்படியும் அப்படியும் பேசுபவர்கள் உதவாத மந்திரிகளாவார்கள்.

"இப்போது நம்முன் நிற்கும் விஷயம் மிகவும் முக்கியமானது. ராமனும் பலவான்; அவன் படையும் பலங்கொண்டது. இவர்கள் லங்கையைத் தாக்குவது நிச்சயம். சமுத்திரத்தை ஏதோ யுக்தி செய்து கடந்து வருவார்கள் என்பது நிச்சயம். அந்த அரண் ஒன்றையே நாம் நம்பிச் சும்மா இருந்தால் சரியாகாது. நம்முடைய நகரத்தையும், சேனையையும் எப்படி பலப்படுத்திக் காப்பது என்பதையும், நம்முடைய க்ஷேமத்துக்காக என்னவெல்லாம் செய்யவேண்டு மென்பதையும் நன்றாக யோசனை செய்து சொல்லு வீர்களாக" என்றான் ராக்ஷஸ மன்னன்.

*     *     *

அரசன் சொன்னதைக் கேட்ட சபையோர் அனைவரும் ஒரே அபிப்ராயமாகப் பேச ஆரம்பித்தார்கள்.

"மகாராஜா, நம்முடைய சேனாபலமும் ஆயுத பலமும் பிரபஞ்சத்தில் நிகரற்றதாக இருக்கத் தாங்கள் ஏன் கவலைப்

படுகிறீர்கள்? எந்தப் பகைவனால் இந்தக் கோட்டையையாவது, தங்களுடைய சேனையையாவது எதிர்த்து வெற்றி பெற முடியும்? தங்களுடைய பலம் பகைவர்களுக்குத் தெரியாதா?

"போகவதி நகரம் சென்று, நாகராஜனை எதிர்த்துத் தாங்கள் வெற்றி பெறவில்லையா? மகாபலவானான குபேரனையும், அவனுடைய யக்ஷர்களையும் தாக்கித் தோற்கடித்துப் புஷ்பக விமானத்தையும் தாங்கள் வெற்றியுடன் அடையவில்லையா?

"மயன் தங்களுக்குப் பயந்து நட்பு செய்து கொண்டு தன் மகளையே தங்களுக்குத் தந்து விவாகம் செய்து கொடுத்தான் அல்லவா! பாதாளத்தில் எத்தனையோ நகரங்களைத் தாங்கள் தாக்கி வெற்றி பெற்றிருக்கிறீர்கள். காலகேயர்களோடு யுத்தம் செய்து வெற்றி பெற்றீர்கள். தங்களுடைய பல பராக்கிரமத்திற்கு எல்லையேயில்லை. வருணனுடைய புத்திரர்களையும், யமனையும்கூட அபயம் கேட்கச் செய்தீர்கள். இந்த ராமன் எம்மாத்திரம்? வீரன் இந்திரஜித்து ஒருவன் போதாதா, இந்த ராமனையும் அவன் வானர சேனையையும் அழிக்க? இந்திரனையே பிடித்து வந்து சிறையில் வைத்து அடக்கி, "ஓடிப்போ" என்று சொல்லித் திருப்பி அனுப்பவில்லையா? இந்த ராமனும் அவனுடைய வானரர்களும் எம்மாத்திரம்? இந்திரஜித்தை அனுப்பி இந்த வானரர் சேனையை அழித்து விட்டுவரும்படி உத்தரவு கொடுத்தீர்களானால் காரியம் முடிந்தது. ஏன் கவலைப்படுகிறீர்கள்?"

இவ்வாறு சொல்லித் தங்களுடைய அரசனைப் புகழ்ந்தார்கள்.

மகாசூரன், பெரிய கருத்த மேகம் போன்ற சேனாதிபதி, பிரஹஸ்தன் எழுந்தான்.

"தேவ தானவ கந்தர்வர்களையெல்லாம் யுத்தம் செய்து அடக்கின மன்னனாகிய தாங்கள், இந்த அற்ப மனிதனைப்பற்றி ஏன் கவலைப்படுகிறீர்கள்?

"வானரம் ஒன்று வந்தபோது நாம் அஜாக்கிரதையாக இருந்து ஏமாந்தோம். நம்முடைய அஜாக்கிரதையை உபயோகித்துக்கொண்டு ஹனுமான் துஷ்டத்தனம் செய்தான். அது மறுபடியும் நடக்கவிடுவோமோ? இங்கே அவன் மறுபடியும் வந்தால் அவனை நான் பார்த்துக் கொள்கிறேன். இந்த வானர ஜாதியையே நிர்மூலம் செய்துவிடுவேன். உத்தரவு கொடுங்கள். தாங்கள் செய்துவிட்ட ஒரு தவறின் பயனாக அபாயம் வந்துவிட்டது என்று கவலைப்பட வேண்டியதில்லை' என்றான்.

அடுத்தாற்போல் துர்முகன் மிகக் கோபத்தோடு எழுந்தான. "நம்மையெல்லாம் அவமதித்த அந்த வானரனை நாம் இனி விடமுடியாது. நான் இந்தக் கணமே சென்று வானர சேனையை அடியோடு அழித்துவிட்டுத் திரும்பி வருகிறேன்" என்று கர்ஜித்தான்.

வஜ்ர தம்ரஷ்டிரன் என்கிற சூரன் பயங்கரமான உலக்கையை எடுத்துக்கொண்டு நின்றான். "இதோ இந்த உலக்கை, பகைவர்களுடைய ரத்தமும் மாமிசமும் கழுவாமல் பூசிக் கிடக்கிறது. குரங்கைப்பற்றி ஏன் பேசிக்கொண்டிருக்கிறீர்கள்? ராமனும் லக்ஷ்மணனும் அல்லவா நம்முடைய பகைவர்கள்? அவர்களை நான் வதம் செய்து அந்த வானர சேனையையும் அழித்துவிட்டுத் திரும்புகிறேன். என்னை அனுப்புவீர்களாக!"

"நான் ஒரு யோசனை சொல்லுகிறேன் கேட்பீர்களாக. சில ராக்ஷச சூரர்களை மானிட வேஷம் தரித்து, ராமனிடம் போகச் சொல்வோம். போய் 'பரதன் நம்மை உம்மிடம் அனுப்பினான். பெருஞ்சேனை பின்னால் வருகிறது' என்று சொல்லி ஏமாற்றி, அவனையும் அவனுடைய சேனையையும்

அஜாக்கிரதையாக இருக்கச் செய்து, ராக்ஷசசேனை ஆகாயமார்க்கமாகச் சென்றால், அவர்கள் அனைவரையும் அக்கரையிலேயே வதம் செய்துவிடலாம். இது என்னுடைய யோசனை" என்றான் ஒரு வீரன்.

கும்பகர்ணனுடைய குமாரன் நிகும்பன் எழுந்து "நீங்கள் அனைவரும் இவ்விடமே அரசனுடன் இருங்கள். நான் போய் இந்த சத்துருக் கூட்டத்தைக் கொன்று விட்டுத் திரும்பி வந்து உங்களுக்குச் சமாசாரம் சொல்லுகிறேன்" என்றான்.

* * *

இப்படி ஒருவர்பின் ஒருவராக எழுந்து ராவணனைத் திருப்தி செய்ய, வீரமாகப் பேசினார்கள். எல்லோரும் கூட்டமாக எழுந்து ஆயுதங்களைத் தூக்கிக் கர்ஜித்தார்கள். எல்லாரையும் உட்காரச் சொல்லி, ராவணனுடைய தம்பி விபீஷணன் எழுந்து கைகூப்பிப் பேசலானான்.

"அண்ணா! இவர்கள் சொல்லும் யோசனைகள் காதுக்கு இனிமையாக இருந்தாலும், சரியானதல்ல. உமக்கு நன்மை தராது. நீதி சாஸ்திரத்துக்கு விரோதமாக ஒரு காரியம் செய்தால் அதனால் கஷ்டம் நேரிடும். சாமதான பேத உபாயங்களைப் பிரயோகிக்க முடியுமா என்று முதலில் பார்த்து, அவை முடியாவிட்டால்தான் தண்டோபாயத்தைப் பகைவன் பேரில் எடுத்துக்கொள்ள வேண்டும். இவர்கள் சொல்லுவது போல் உடனே யுத்தம் ஆரம்பித்துவிட்டால் லங்கை நாசமாகும். நாமும் அழிந்துபோவோம்.

"தருமத்தையும் யோசிக்க வேண்டும். ராமனுடைய மனைவியைத் தாங்கள் எடுத்து வந்தது கொஞ்சமும் நியாயமாகாது. மகா பாபமான காரியம். அந்தப் பாவத்தை முதலில் துடைத்துத் தீர்த்துக்கொள்ள வேண்டும். ராமன் நமக்கு என்ன தீங்கு செய்தான்? தண்டகாரண்யத்தில்

ராமனால் செய்யப்பட்ட காரியங்களெல்லாம் தன்னையும் தன்னைச் சேர்ந்தவர்களையும் ரக்ஷித்துக் கொள்ளத்தானே நடந்தன? அவனைக் கொல்ல வந்தவர்கள் பேரில்தான் அவன் யுத்தம் செய்து அவர்களைக் கொன்றான். அவன் மனைவியை அபகரித்து வர இவை எப்படிக் காரணமாகும்? அவன்மேல் நமக்குக் கோபமிருந்தால் அவனை நாம் எதிர்த்து யுத்தம் செய்திருக்க வேண்டும். அதை விட்டுவிட்டு அவனும் அவன் தம்பியும் இல்லாத சமயம் பார்த்துச் சீதையைத் தூக்கி வந்தது பாபமாகும்.

'நம் பேரில் குற்றமிருக்க, நாம் முதலில் தண்டோபாயம் கையாளுவது சரியல்ல. ராமனுடைய பலத்தையும் சரியாகத் தெரிந்து கொள்ளவேண்டும். ஹனுமானுடைய பலத்தையும் சாமர்த்தியத்தையும் கண்டோம். அவனைப் பற்றி அலட்சியமாகப் பேசுவதில் பயனில்லை. அவன் செயலைக் கண்டு யாரே அதிசயப்படாதிருப்பார்? நம்முடைய பலம் பெரிதாயினும், எதிரியின் பலத்தோடு ஒத்துப் பார்த்தே யுத்தம் செய்யலாமா அல்லது யுத்தமில்லாமல் தீர்த்துக் கொள்வது நலமா என்பதைத் தீர்மானிக்க வேண்டும். சீதையை முதலில் திருப்பித் தந்துவிட வேண்டியது அவசியம். இதுவே என்னுடைய யோசனை. லங்கையை ராமனும் வானரர்களும் தாக்குவதற்கு முன் சீதையைத் திருப்பித் தந்துவிடுவீர் அண்ணா! உமக்கு நான் ஹிதத்தைச் சொல்லுகிறேன். கோபித்துக் கொள்ள வேண்டாம். செய்த தவற்றை முதலில் திருத்திக் கொண்டு பிறகு மற்ற யோசனை செய்யலாம்" எனக் கை கூப்பி வணங்கி, விபீஷணன் தன் தமையனான அரசனைப் பணிவுடன் வேண்டிக் கொண்டான்.

முதலில் தன்னுடைய மந்திரிகளும் சேனாதிபதிகளும் பேசிய வீரப் பேச்சுக்களைக் கேட்டு மகிழ்ச்சியடைந்த போதிலும், ராவணனுடைய மனத்தில் சந்தேகம் இருந்து கொண்டேயிருந்தது. உடனே விபீஷணன் பேசியதை கேட்ட

பிறகு, "மறுநாள் திரும்பக் கூடி யோசிக்கலாம்" என்று சபையை ஒத்திப் போட்டு அந்தப்புரம் சென்றான்.

## 79. மந்திராலோசனை

மறுநாட் காலையில் எழுந்ததும் விபீஷணன் அரசனிடம் போனான். தனக்குள் விஷயத்தை மறுபடியும் நன்றாக யோசித்து முடிவு செய்துகொண்டு சென்றான். அண்ணனுடைய நன்மையைக் கருதி, அவனை எப்படியாவது திருத்திக் காப்பாற்ற வேண்டும் என்று எண்ணிச் சென்றான்.

எப்போதும்போல் ராஜமாளிகை எல்லாவிதச் செல்வமும் லக்ஷணமும் பூசைகளும் நிறைந்து விளங்கிற்று. ஆயுதங்களும் கவசங்களும் பூண்ட பணிவிடை ஆட்கள் எங்கே பார்த்தாலும் நின்றார்கள். பிராமணர்கள் வேத கோஷம் செய்து கொண்டிருந்தார்கள். வாத்தியக்காரர்கள் சுப்ரபாதம் வாசித்துக் கொண்டிருந்தார்கள். இப்படி மங்கள நாதம் நிறைந்த ராட்சத வேந்தனுடைய அரண்மனைக்குள் மிக்க ஆவேசத்துடன் பிரவேசித்தான்.

அரசன் முன் கைகூப்பிய வண்ணம் நின்றான். முக்கிய மந்திரிகளைத் தவிர, மற்றவர்களை வெளியே போகச் சொல்லி, ராவணன் தன் தம்பியைப் பேசச் சொன்னான்.

"அண்ணனே! நான் சொல்லுவதில் பிசகு இருந்தால் மன்னிக்க வேண்டும். என்னுடைய லாபத்துக்காக நான் ஏதும் பேசவில்லை. உம்முடைய நன்மை ஒன்றையே கருதிப் பேசுகிறேன். நான் சொல்வதைக் கேட்டு ஆலோசித்துக் காரியங்களைச் செய்யக் கோருகிறேன்" என்று ஆரம்பித்தான்.

"சீதையை நீர் கொண்டு வந்தது முதற்கொண்டு, லங்கா நகரத்தில் நானும் மற்றவர்களும் அபசகுனங்களையே காண்கிறோம். ஹோமாக்கினி வளர்க்கும்போது எரிய வேண்டிய முறையில் எரியவில்லை. சரியான மந்திரங்களுடன் அவிசொரிந்தாலும் அக்கினி மூள்வதில்லை. பூஜை

ஸ்தலங்களில் பாம்புகள் காணப்படுகின்றன. நைவேத்திய சாமான்களில் எறும்பு மொய்க்கிறது. பசுக்கள் பால் சரியாகக் கறப்பதில்லை. யானைகள், குதிரைகள், ஒட்டகங்கள் கோவேறு கழுதைகள் இவைகள் ஆரோக்கியமிழந்து, சரியாக உண்ணாமலும் விபரீதமாகவும் நடந்து கொள்ளுகின்றன. வைத்தியம் பலிக்கவில்லை. காக்கைகள் நகரத்து விமானங்கள் மேல் கூட்டம் கூட்டமாக உட்கார்ந்து அவலட்சணமாகக் கத்துகின்றன. கழுகுகளும் வட்டமிட்டுக் கொண்டு சகுனக் குறிகள் அறிந்தவர்களுக்குக் கவலை உண்டாக்கி வருகின்றன. நரிகள் ஊருக்குள் பிரவேசித்து அகாலங்களில் ஊளையிடுகின்றன. காட்டு மிருகங்கள் நகரத்துக்குள் நடமாடுகின்றன. இவையெல்லாம் நமக்கு மிகப்பெரும் அபாயமும் நஷ்டமும் குறிக்கின்றன. இதை நாம் அலட்சியம் செய்யக் கூடாது. சீதையைத் திருப்பி அனுப்பிவிடுவீர். அவளைக் கொண்டு வந்தது முதல் இந்தக் கெட்ட குறிகள் காணப்படுகின்றன. மற்றவர்களையும் விசாரித்துப் பார்ப்பீர், நான் சொல்லும் அவலட்சணக் குறிகள் நிகழ்ந்தது உண்மையா இல்லையா என்று. நான் சொல்லுவதை ஏற்றுக்கொள்ள முடியாது என்று தீர்மானித்தாலும் என் பேரில் கோபித்துக்கொள்ள வேண்டாம்.

"வீணாக விரோதத்தைச் சம்பாதிப்பதில் பயனில்லை. சீதையைத் திருப்பித் தந்துவிட்டுச் சுகமாக இருப்போம்" என்று மிகப் பணிவுடன் சொன்னான்.

"ஒரு நாளும் முடியாது! சீதையைத் திருப்பித் தரும் பேச்சுப் பேசவேண்டாம். இந்த எதிரியை நான் பெரிதாகப் பொருட்படுத்தவில்லை. நமக்கு ஒரு பயத்தையும் நான் காணவில்லை. நீ போகலாம்" என்றான் ராவணன்.

* * *

இவ்வாறு பிடிவாதமாக இருந்த போதிலும், சீதையைப் பற்றித் தன்னுடைய ஆசை நிறைவேறவில்லையே

என்றும், நெருங்கிய உறவினர்களும் தன் காரியங்களைக் குற்றமாகக் கருதுகிறார்களேயென்றும் கண்ட ராவணன் சாந்தியை இழந்தான். ஆனால் அதைக் காட்டிக் கொள்ளமால் மறுபடியும் சபை கூட்டினான். காமமும் கோபமும் அவனுடைய புத்தியை நேர்வழியில் செலுத்தாமல் போனாலும் தான் செய்வதில் தவறு இருப்பதை உணர்ந்து மற்றவர்களோடு ஆலோசனை செய்வதில் ஓர் ஆறுதல் கண்டான்.

தங்கமயமான தேரில் ஏறிக்கொண்டு சென்றான். மிக உயர்ந்த ஜாதிக்குதிரைகள் பூட்டிய தேர், கத்தியும் கேடயமும் தரித்த வீரர்கள் கண்ணைக் கவரும் உடுப்புக்கள் அணிந்து, முன்னும் பின்னும் இரு பக்கங்களிலும் சென்றார்கள். சிலர் தேர், யானை, குதிரை முதலிய வாகனங்களில் ஏறிப் பயங்கரமான தோமரம், கோடரி, சூலம் முதலிய ஆயுதங்களைத் தரித்து, ராவணனுடைய தேருக்குப் பின்னால் சென்றார்கள். சங்கம், பேரி முதலிய யுத்த வாத்தியங்கள் முழங்கின. ராஜவீதியில் லங்கேசன் பரிவாரத்துடன் இப்படி வெகு கம்பீரமாகச் சென்றபோது, வழியில் நின்றவர்கள் எல்லோரும் கைகூப்பித் தலைவணங்கி நமஸ்கரித்து, வெற்றிக் கோஷங்கள் செய்தார்கள். திக்குகள் நடுங்கும்படி சங்கங்களும் பேரிகைகளும் கோஷிக்க ராக்ஷசேந்திரன் சபைக்குள் பிரவேசித்தான்.

தங்கத்தாலும், வெள்ளியாலும் செய்யப்பட்ட தூண்களும், சிறந்த விரிப்புகளும், மயனுடைய சிற்பமும் சாமர்த்தியமும் விளங்கிய அந்த மண்டபத்தில், வைடூரிய சிம்மாசனத்தின் மேல் ராவணன் அமர்ந்தான். நூற்றுக்கணக்கான பிசாசுகள் சபைக்குக் காவலாட்களாக நின்றன. ராக்ஷசேந்திரன் உத்தரவின்படி ராக்ஷச வீரர்கள் ஆயிரக் கணக்காக வந்து குழுமியிருந்தார்கள். அவர்கள் வந்த வாகனங்கள் வெளியில் பெருங் கணக்காக நின்றன. அவர்கள்

பதவிக்குத் தக்கவாறு ஆசனங்களில் உட்கார்ந்தார்கள். புரோகிதர்கள், வேதம் ஓதுபவர்கள் நூற்றுக்கணக்காக வந்து வெகுமானிக்கப்பட்டு அமர்ந்தார்கள்.

விபீஷணன், விகன், பிரகஸ்தன் முதலியவர்கள் ராவணேசுவரனை வணங்கிவிட்டுத் தங்கள் தங்களுடைய ஆசனங்களில் அமர்ந்தார்கள். ஆலோசனை சபையில் நிர்வாகிகள், உத்தியோகஸ்தர்கள் எல்லாம் வந்து கூடியிருந் தார்கள். அவர்கள் அனைவரும் மகாநிபுணர்கள், சூரர்கள், ராவண பக்தர்கள்.

பரிமளப் பொருள்களின் சுவாசனை மண்டபத்தில் வீசிற்று. ஒருவருடன் ஒருவர் பேசாமல் சப்தம் அடங்கிச் சபை கம்பீரமாக, அறிவாளிகளும், மகாபலசாலிகளும் உக்ர வீரர்களும் நிறைந்து தேவேந்திரனுடைய சபைக்கு நிகராக விளங்கிற்று.

* * *

தன் ராஜ்யத்தின் க்ஷேமத்தைக் கோரியவனும், இயற்கையில் சிறந்த அறிவாளியுமான ராவணன், காமத்தின் வேகத்தில் மதியை இழந்தான். பெருங் கவலையிலிருந் தானாகிலும், காமத்தாலும், அகங்காரத்தாலும் சரியான யோசனை செய்யமுடியாத நிலையிலிருந்தான். சபையில் கூடிய தன் பந்துக்களும் தன் நன்மையை விரும்புகிறவர் களுமான ராக்ஷஸ கூட்டத்தைப் பார்த்துச் சொன்னான்.

"எல்லா விதத்திலும் நீங்கள் திறமைசாலிகள். எந்தச் சிக்கலான விஷயத்திலும் சரியான யோசனை சொல்லும் சக்தி வாய்ந்தவர்கள். இதுவரை நீங்கள் ஆலோசித்துச் சொன்ன எந்த விஷயமும் பயன் பெறாமல் போனதேயில்லை. ஆனபடியால் உங்களை இப்போது கேட்கிறேன். நான் செய்த காரியம் உங்களுக்குத் தெரிந்ததே. தண்ட காரண்யத்தில் வசித்துக் கொண்டிருந்த ஜானகியைக் கொண்டு வந்துவிட்டேன். அவள் பேரில் எனக்கு உண்டாகியிருக்கும்

ஆசையை நான் அடக்க முடியவில்லை. அவளை நான் திருப்பியனுப்ப முடியவே முடியாது. இப்போதும் அவள் பேரில் எனக்குள்ள விருப்பத்தை நீக்கிக் கொள்ள என்னால் முடியவில்லை. இதை நான் உங்கள் முன்னிலையில் ஒப்புக் கொள்கிறேன்.

"என் விருப்பத்துக்கு அவள் சம்மதிக்கவில்லை. ராமன் வருவான், தன்னை மீட்பான் என்று நம்பி வருகிறாள். அவன் வரமுடியாது. உன்னை அவன் அடைய முடியாது. என்னை ஒப்புக்கொண்டு சுகமாக இரு' என்று எவ்வளவோ நான் சொன்னேன்- ஒரு வருஷ காலம் கெடு கேட்டாள். நானும் அதற்கு ஒப்புக் கொண்டேன். இப்போது உங்கள் யோசனையைக் கேட்கிறேன். என் இஷ்டம் பூர்த்தியாக வில்லை. சீதையைத் திருப்பி அனுப்பிவிட்டு ராமனிடம் மன்னிப்புக் கேட்க, என் மனம் ஒரு நாளும் இசையாது. இதுவரையில் நானும் வீரர்களாகிய நீங்களும் எந்த யுத்தத்திலும் தோல்வியைக் கண்டதில்லை. இந்த சமுத்திரத்தைத் தாண்டி ஒரு வானரன் எப்படியோ வந்து இந்த நகரத்தைச் சேதம் செய்து விட்டுத் திரும்பினான். ராமனும் வானர சேனையும் கடலைத் தாண்டி வருவது கஷ்டம்; வந்தாலும் எனக்குப் பயமில்லை. நன்றாக யோசித்துச் சொல்லுங்கள். கடல் எதிர்க்கரையில் ராம லக்ஷ்மணர்களும் சுக்ரீவனும் அவனுடைய வானரர்களும் வந்திருக்கிறார்கள். ராம லஷ்மணர்களைக் கொல்லும் உபாயம் சொல்லுங்கள்.

"நான் முந்தியே சபை கூட்டியிருப்பேன்; கும்பகர்ணன் தூக்கம் விட்டு எழுந்திருக்கவில்லை. அதற்காகக் காத்திருந்தேன்" என்றான்.

இவ்வாறு காமத்தால் புத்தியிழந்து, தன் கவலையை மறைத்துக் கொஞ்சம் பொய்யும் கலந்து பேசினான். சீதை ஒரு வருஷ காலம் கெடு கேட்கவில்லை. தன் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள அவ்வாறு மாற்றிச் சொன்னான்.

## 80. விபீஷணன்

சபையில் ராவணனுடைய தம்பி கும்பகர்ணன் எழுந்து பேசினான்.

"மகாராஜனே! நீதி சாஸ்திரம் அறியாதவனைப்போல் நடந்து கொண்டபடியால், பெரும் அபாயத்தைத் தருவித்துக் கொண்டிருக்கிறீர். ராம லக்ஷ்மணர்கள் பேரில் உமக்கு விரோதம் இருந்தால், முந்தி அவர்களை எதிர்த்து அவர்களைத் தோற்கடித்து வதம் செய்துவிட்டுப் பிறகு அல்லவோ சீதையைக் கொண்டு வந்திருக்க வேண்டும்? அவ்வாறு செய்தீர்களானால் சீதையும் உம்மை விரும்பியே ஒப்புக் கொண்டிருப்பாள். மலையைத் தொடர்ந்து தழுவி நதி ஓடுவது போல், வெற்றி பெற்ற வீரனை அவள் தொடர்ந்திருப்பாள். அப்படி நீர் செய்யவில்லை. யாரையும் ஆலோசனை கேட்காமல் படுகாரியம் செய்துவிட்டு விரோதம் சம்பாதித்துக் கொண்டு, இப்போது காலம் தாண்டிப்போன பின் ஆலோசனை சொல்லும்படி கேட்கிறீர். இது அரசனுக்குரிய உத்தம வழியல்ல; ஏன் மத்திம வழியுமல்ல."

இவ்வளவும் தைரியமாகச் சொல்லிவிட்டுக் கும்பகர்ணன், அண்ணன் முகத்தைப் பார்த்தான். தான் சொன்ன கடினமான மொழிகளைக் கேட்ட ராவணன் முகம் வாடியதைப் பார்த்து அவனால் பொறுக்க முடியவில்லை. சூரனான கும்பகர்ணனுக்கும் ராவணனுக்கும் அளவு கடந்த அன்பு. நடந்தது நடந்து போயிற்று; இனி அதைப் பற்றிப் பேசிப் பயனில்லை. அண்ணனை விட்டு விடுவதற்கில்லை என்று மனத்தில் தீர்மானித்துக் கொண்டான்.

ராமன் நிகரற்ற வில்லாளி என்பது கும்பகர்ணனுக்குத் தெரியும். ராவணன் பெற்றிருக்கும் வரங்களின் வரம்பும், அதிலுள்ள குறையும் கும்பகர்ணன் அறிவான். இப்போது

ராவணனைக் கைவிடுவதற்கு இல்லை; அதைரியப்படுத்து வதில் பயனில்லை என்று எண்ணிக் கும்பகர்ணனும் மந்திராலோசனை சபையில் மற்றவர்கள் பேசியது போலவே தைரியம் பேச ஆரம்பித்தான்

"நீர் செய்வது தவறு, கையாள்கிற முறையும் தவறு. முன்னால் செய்ய வேண்டியதைப் பின்னால் செய்கிறீர். பின்னால் செய்யவேண்டியதை முன்னால் செய்துவிட்டீர். ஆயினும் இந்த ராமனை நான் வதம் செய்வேன், பயப்பட வேண்டாம். அவன் பாணங்கள், ஒன்றிரண்டு என்மேல் படும், ஆயினும் அவனைக் கொன்று அவன் ரத்தத்தைக் குடித்து விட்டு, உமக்கு நான் வெற்றி சம்பாதித்துத் தருவேன். அண்ணா! கவலையற்றுச் செய்ய வேண்டியதைச் செய்வீர்!" என்றான்.

* * *

கும்பகர்ணன் ஏதோ முன்னுக்குப் பின் முரணாகப் பேசினான் என்றும், அதற்குக் காரணம் அவனுடைய மந்தபுத்தி என்றும் சிலர் வியாக்யானம் செய்வது உண்டு. சாபத்தால் ஆறுமாதம் தூங்கினாலும், விழித்தபோதும் அவன் அறிவுக்குக் குறைவல்ல. முதலில் உண்மையை பயப்படாமல் பேசினான். குடும்ப கௌரவத்தின் காப்புக்கு வேண்டிய நற்குணங்களை நன்றாகப் பெற்ற வீரன்.

ராவணனுடைய பிரதான ஆலோசனைக்காரன் பிரஹஸ்தன். இவன் ராவணனுடைய பலத்தை எடுத்துக் காட்டி, அவனை யாராலும் வெல்ல முடியாது என்றும் கவலைப்பட வேண்டியதில்லை என்றும் சொல்லி, ராவணனைச் சந்தோஷப்படுத்தினான்.

ராவணனும் உற்சாகமடைந்து பேசினான். "குபேரனை ஜெயித்தவன் நான் அல்லவா? அவனை விரட்டியடித்து இந்த

லங்கையைப் பற்றிக் கொண்ட என்னை யார் இங்கே வந்து எதிர்ப்பார்கள் பார்க்கலாம்!" என்றான். சபை ஆரவாரித்தது.

* * *

அந்த ஆரவாரத்தில் சபையிலிருந்த விபீஷணன் சேரவில்லை. அரசனும் தமையனுமான ராவணன் எவ்வளவு கோபமாக இருந்தாலும், அபாயத்தை எடுத்துக்காட்டி, அவன் போகும் தவறான வழியிலிருந்து அவனை மீட்டு, ராஜ்யத்தையும் ராக்ஷஸ குலத்தையும் காப்பாற்ற வேண்டியது தன்னுடைய கடமை என்று உணர்ந்து, மற்றவர்கள் பேசியதை ஒப்புக் கொள்ளாமல் எழுந்து நின்று பேசினான்.

"சீதை ஒரு கொல்லும் விஷப்பாம்பு. அவளை ஏன் எடுத்து வந்தீர்? இப்போது உம்முடைய முதல் கடமை அவளைத் திருப்பி ராமனிடம் சமர்ப்பித்து விடுவதுதான். இதைச் செய்யாவிட்டால், அழிந்து நாசமாகப் போவோம். இது நிச்சயம்!" என்றான்.

ராமனுடைய சாமர்த்தியம், பலம், ஆயுதப் பயிற்சி எல்லாவற்றையும் எடுத்து மறைக்காமல் தைரியமாகச் சொன்னான்.

"ராமனை எதிர்த்தால் தோல்வி நிச்சயம், நம்முடைய அதிர்ஷ்டம் க்ஷீணித்து வருகிறது. சீதையைத் திருப்பிக் கொடுத்து ராமனிடம் சரணம் புகுந்து, சுகமாக ராஜ்யம், சம்பத்து, மானம் எல்லாம் காப்பாற்றிக் கொள்வோம்" என்றான்.

இப்படி விபீஷணன் விடாமல் மன்றாடிக் கொண்டிருந்ததைப் பார்த்துக் கொண்டிருந்த இந்திரஜித்து பொறுமையிழந்தான்.

"சிற்றப்பா பேசும் பேச்சுக்களைக் கேட்க எனக்கு வெட்கமாக இருக்கிறது. நம்முடைய குலம் என்ன? நம்முடைய

சக்தி என்ன? புலஸ்திய குலத்தில் பிறந்த ஒருவர் இப்படிப் பேசுவதும், சபையோர் அதைச் சமாதானமாகக் கேட்டுக் கொண்டிருப்பதும், எனக்கு வியப்பாக இருக்கிறது. சிறுமைக் குணத்தைக் காட்டிவிட்டார் சிற்றப்பனார். அவருடைய பேச்சை ஒருநாளும் நாம் அங்கீகரிக்க முடியாது. இரண்டு மானிடர்களைக் கண்டு யாராவது இப்படி பயப் படுவார்களா? இந்திரனையும் அவன் தேவ கணங்களையும் அடித்துத் தள்ளி நான் வெற்றி பெற வில்லையா? நம்மைக் கண்டு உலகம் இப்போதும் நடுங்கிக் கொண்டிருக்க வில்லையா? விபீஷணர் இந்த யோசனை சொல்லுகிறார். இது நமக்கு அவமானமாக இருக்கிறது" என்றான்.

இதைக் கேட்ட விபீஷணன், "பாலகனே! உனக்கு அனுபவம் போதாது. இப்படித்தான் பேசுவாய். நீ அரசனுக்கு மகனாகவிருந்தாலும், அவனைக் கெடுக்க வந்த சத்துரு என்றே நான் நினைக்கிறேன். அரசனுக்கு ஒரு ஹிதம் சொல்லுவதற்கென்று இருக்கும் மந்திரிகளே! அரசனுக்கு அழிவைத் தரும் யோசனை சொல்லுகிறீர்கள். லங்கேசனே! நான் சொல்வதைப் புறக்கணிக்க வேண்டாம். ஜானகியைக் கவுரவமாகத் திருப்பி ராமனிடம் கொண்டு சேர்த்து விட்டு, நடந்துபோன குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளும்படி பிரார்த்தித்துக் கொள்வீர். இதுவே வழி. இல்லாவிட்டால் அனைவரும் அழிந்து போவோம்" என்றான்.

* * *

ராவணனுடைய கோபம் கரைபுரண்டு போயிற்று.

"தம்பியாயிற்றே என்று நீ சொன்னதையெல்லாம் இது வரையில் பொறுத்து வந்தேன். இல்லாவிடில் இங்கேயே உன் உயிர் மாய்ந்திருக்கும். ஒருவனைக் கெடுப்பதற்கு உடன் பிறந்த சத்துருவைப் போல் வேறொருவருமில்லை. பொறாமைப்பட்ட தம்பிகளும் தாயாதிகளுமே சூரர்களுக்கு அவமானமும் தோல்வியும் தருவார்கள் என்பது உலகறிந்த

உண்மை. அவர்கள் தங்களுடைய எண்ணத்தை மறைத்து வைத்துக்கொண்டு சமயத்தில் துரோகம் செய்வார்கள். கதையில் காட்டு யானைகள் சொல்லவில்லையா? 'நெருப்பையும் நாம் கண்டு பயப்படவில்லை. வேடர்களுடைய ஈட்டியையும் நாம் பொருட்படுத்தவில்லை. சுருக்குப் போட்டு இழுக்கும் கயிறும் சங்கிலியும் நம்மை ஒன்றும் செய்ய இயலாது. இந்தப் பாவி தாயாதி யானைகள் வேடர்களோடு சேர்ந்து கொண்டு நம்மைத் துன்புறுத்துகின்றனவே. அவைதாம் நம்முடைய பெரும் விரோதிகள்!" யானைகள் கதையில் சொன்னது எவ்வளவு உண்மை! சுகமாக இருக்கும் வரையில் தம்பி சிரித்து சந்தோஷமாக இருப்பான். அபாயம் வந்தபோது கைவிடுவான். பூவிலிருக்கும் தேனைக் குடித்துவிட்ட பிறகு தேனீ அந்தப் பூவில் தங்காது. வேறு பூவைத் தேடிப் போய்விடும். அவ்வளவுதான் தாயாதிகள் சங்கதியும், எனக்குக் கஷ்டம் வந்த காலத்தில் நீ உதவவில்லை. வேறு யாராவது உன்னைப்போல் பேசியிருந்தால் இங்கேயே வதம் செய்து விட்டிருப்பேன். நீசனே! குலத்தை அவமானப்படுத்தப் பிறந்தவனே" என்று ராவணன் சீறி அதட்டித் திட்டினான்.

* * *

இப்படி அவமானப்படுத்தியதைப் பொறுக்க முடியாமல் விபீஷணன் எழுந்து, "அண்ணா, நீர் எதை வேண்டுமானாலும் சொல்லலாம். எனக்கு அண்ணனாகிய நீர் தருமத்தினின்று தவறினீர். சபையில் எனக்கு நீர் செய்த அவமானத்தை என்னால் பொறுக்க முடியவில்லை. கால பாசத்தால் தூண்டப்பட்டு, நாசம் தரும் வழியில் போகிறீர். நான் சொன்ன விதம் உமக்குப் பிடிக்கவில்லை. காதுக்கு இனிமையாகப் பேசுவது சுலபம். உம்முடைய மந்திரிகள் அதைச் செய்து வருகிறார்கள். உம்முடைய க்ஷேமத்தைக் கோரியே நான் சொன்னேன். அது உமக்குப் பிடிக்கவில்லை.

உமக்குக் கோபத்தை உண்டாக்குகிற்று. ராமனுடைய பாணங்கள் உம்மை எரிப்பதை நான் விரும்பவில்லை. அதனால் அல்லவோ நான் சொன்னது.

"என்னை நீர் பகைவன் என்றீர். நீர் க்ஷேமமாக இருப்பீராக! நகரத்தையும் உயிரையும் காப்பாற்றிக் கொள்வீராக. மங்களம்! நான் போகிறேன். சுகமாக இருப்பீராக! ஆபத்துக்கு உதவலாம் என்று பார்த்தேன். முடியவில்லை. உம்முடைய பெருமையைக் கண்டு பொறாமைப்படுகிறேன் என்று எண்ணுகிறீர். அழிந்து போக வேண்டிய காலத்தில் நல்ல யோசனை விஷமாகத் தோன்றும்."

இவ்வாறு சொல்லிவிட்டு ராவணனுடைய தம்பி விபீஷணன் இனி லங்கையில் தனக்கு இடமில்லை என்று தீர்மானித்து, எல்லாவற்றையும் துறந்து, அங்கிருந்து அப்போதே ஆகாயத்தில் கிளம்பி ராம லக்ஷ்மணர்கள் இருந்த இடம் நோக்கிச் சென்றான். "இராவணனோடு பொருந்தாமை பிறந்த அன்பு நெருப்புப்பட்ட தரையில் கால் பாவாதாப்போல் அவ்விடம் அடிகொதித்துப் போந்தானாயிற்று" என்றார் வடக்கு வீதியார், தம் ஈடு வியாக்கியானத்தில். விபீஷணனுடன் நான்கு ராக்ஷச நண்பர்களும் கூடச் சென்றார்கள்.

## 81. வானரர்களின் சந்தேகம்

பாபம் செய்துவிட்டு, அதன் பயனாக வந்த அபாயத்தினின்று எப்படித் தப்புவது என்று ராவணன் கஷ்டப்பட்டான். அரசர்களின் வழக்கம்போல் மந்திராலோசனை சபை கூட்டினான். சபையில் சர்க்கரைப் பேச்சுப் பேசுபவர்கள் பலர் பேசினார்கள். ஆனால் இருவர் ராவணனுக்குக் கோபம் வரும்படி கடினமாகப் பேசினார்கள்.

"தவறு செய்தாய், ஆயினும் நான் உனக்காக உயிரைக் கொடுப்பேன்" என்றான் ஒருவன்.

"பாபத்தைச் செய்தாய், ஆயினும் இப்போதும் தப்புவதற்கு வழியுண்டு. அந்த வழியைப் பிடித்துச் செல்வாயானால் நாம் எல்லோரும் அழியாமல் சுகமாக இருக்கலாம். சீதையைத் திருப்பித் தந்துவிட்டு ராமனிடம் சரணடைவாய்" என்றான் விபீஷணன்.

"மாட்டேன்" என்றான் ராவணன். "அப்படியானால் உன்னை விட்டேன்" என்றான் விபீஷணன்.

தரும சங்கடம் ஒன்று வந்து எதிரில் நிற்கும் போது, தம் தம் சுபாவத்தை அனுசரித்து அவரவர்கள், நடந்து கொள்வார்கள். எல்லாரும் ஒன்றுபோல் நடந்து கொள்ள மாட்டார்கள்.

கர்வபங்கத்துக்கு ராவணன் மனம் ஒப்பவில்லை. பாப காரியம் செய்வது கஷ்டமானால், பிழையை ஒப்புக்கொண்டு 'நான் தோற்றேன்' என்று ஒப்புக் கொள்வது அதைவிடக் கஷ்டமான காரியம். பாபம் செய்வதற்குத் தைரியம் வேண்டும். பாபம் செய்தேன் என்று ஒப்புக்கொள்வதற்கு இரு மடங்கு தைரியம் வேண்டும். அந்தத் தைரியம் ராவணனுக்கு இருக்கவில்லை. அவனுடைய சுபாவத்தில் அதற்கு இடமே இல்லை.

அதருமம் ஒன்று நடக்கும்போது, பாபம் செய்தவனைச் சேர்ந்து நிற்பவர்களுக்கு ஒரு பெரிய பிரச்னை ஏற்படுகிறது. "இந்த வீட்டில் நான் சோறு உண்டவன்; இவனை நான் எப்படிக் கைவிடலாம்?" "கூடப் பிறந்தவன் அறியாமையால் பிழை செய்தான்; அவனை நான் கைவிடுவது பயங்காளித்தனமாகும்." இவ்வாறான சிக்கல்கள் கிளம்பும். செய்யப்பட்ட அதருமத்தில் தாமும் பங்கு எடுத்துக் கொண்டுவிடுவதே வீரர்களுடைய கடமை என்று முடிப்பார்கள் சிலர். ஆனால் வேறு விதமாக நினைப்பவர்களும் உண்டு. பிழை செய்தவர்களைத் திருத்துவதற்கு வேண்டியதெல்லாம் செய்து பார்ப்பார்கள். அதனால் உண்டாகும் கோபம், வெறுப்பு, நஷ்டம் இவற்றைப்

பொருட்படுத்தாமல் செய்யக்கூடியதையெல்லாம் செய்து பார்ப்பார்கள். அந்த முயற்சியெல்லாம் வீணான பின், பாபம் செய்தவனை துறப்பார்கள். தருமத்தைத் துறக்கமாட்டார்கள். அதருமத்தில் சேருவது ஒரு நாளும் கடமையாகாது என்பது அவர்களுடைய கருத்து. செய்யவேண்டிய முயற்சியைச் செய்யாமலிருப்பது அதருமமாகும். அதையெல்லாம் செய்துவிட்ட பின், தம் கடமை முன் போலவே நிற்கும். தருமத்தைப் புறக்கணித்துவிட்டு அண்ணனுக்காகத் தம்பியோ, தம்பிக்காக அண்ணனோ அதருமத்தில் பங்கு எடுப்பது சரியாகாது என்பது அவர்களுடைய முடிவாகும்.

ராமாயணத்தில் கும்பகர்ணனும், விபீஷணனும் இந்த இரண்டு பட்சத்திற்கும் சிறந்த விளக்கங்களாக அமைந்து நிற்கிறார்கள்.

"சீதையை அபகரிக்கலாம், வா தண்டகாரண்யம் போவோம்" என்று அண்ணன் எவ்வளவு வேண்டிக் கொண்டிருந்தாலும், விபீஷணன் போயிருப்பானோ? போயிருக்க முடியுமா? போயிருந்தால் யாராவது விபீஷணனைப் புகழ்ந்திருப்பார்களா ?

"இப்போதாவது சீதையைத் திருப்பிக் கொடு. க்ஷேமமாக இருப்பாய். ராமன் மன்னிப்பான். அதுவே தருமம்" என்று சொல்லிப் பார்த்தான். கேட்கவில்லை. உண்மையில் பாபத்தை வெறுக்கும் ஓர் ஆத்மாவுக்குப் பிடிக்காத மூர்க்கத்தில் நின்ற ராவணனைவிட்டு விலகுவதை விட வேறு வழியிருக்கவில்லை.

ஆகையால் விபீஷணனைச் சிலர் குற்றம் சொல்லுவது தவறு. நமக்குள் தரும உணர்ச்சி ஓரளவு குறைவாக இருப்பதாலேதான் குற்றம் சொல்லுவோம்.

ஆயினும் கும்பகர்ணனைக் குற்றம் சொல்லலாமா? அதுவும் முடியாது. ரத்த பாசத்தால் இழுக்கப்பட்டுத் தன்

உயிரைத் தியாகம் செய்தான். அவ்வாறே மாரீசனும் செய்தான். கும்பகர்ணனைப் பழிக்க முடியாது என்பது உண்மையாயின், விபீஷணன் செய்தது குற்றமாகாது. தருமத்துக்கு விரோதமாகவே போவதில் சிலருக்கு இந்தக் காலத்தில் அதிக ருசியானபடியால், இந்த விஷயத்தை இங்கே இவ்வளவு நீட்டி எழுத வேண்டியதாயிற்று.

பாபம் செய்தால் நண்பர்களுடைய நட்பையும், சுற்றத்தாருடைய துணையையும் கட்டாயமாக இழப்போம் என்கிற பயம் மக்களுக்கு இருக்கவேண்டும். எப்படியாயினும் இவர்கள் நமக்குத் துணையாகவே இருப்பார்கள். கைவிடமாட்டார்கள் என்கிற தைரியத்தைக் கொடுத்துவிட்டோமானால், உலகத்தில் பாவத்தைத் தடுப்பது மிகக் கஷ்டமாகும். சாதாரணமாகவே மக்களைப் பாபத்தில் இழுக்கும் வேகங்களுக்குப் பலம் அதிகம். அதற்கு இந்தத் துணையும் சேர்ந்து விட்டால் வெகு சுலபமாகும். இதை நினைவில் வைத்துக் கொள்ளாமல் சிலர் வாதாடுகிறார்கள். "குலத் துரோகி" என்று ராவணன் மட்டும் சொல்லவில்லை. ராவணனுக்குப் பின் நம்மில் பலரும் விபீஷணனைக் குறித்து அவ்வாறே குறை சொல்லுகிறார்கள். முக்கியமாகத் தங்களுடைய தவறான முயற்சிகளுக்கு, தங்களுக்குச் சம்பந்தப்பட்டவர்களுடைய துணையை எப்படியாவது அடைய வேண்டும் அதற்கு இடைஞ்சல் ஏற்படக் கூடாது என்று விரும்புகிறவர்கள் எல்லாம், விபீஷணனைப் பாவி என்றும் துரோகி என்றும் சொல்வது வழக்கம். 'குலத் துரோகி' என்று சொல்வது வழக்கம். 'குலத் துரோகி' என்கிற பழிச்சொல்லுக்கு பயப்படாமல் விபீஷணன் அதருமத்திலிருந்து விலகினான். விலகிய பிறகும் விபீஷணன் கஷ்டமாகத்தான் இருந்தான். நடந்ததைக் கேளுங்கள்!

* * *

கடலில் வடக்குக் கரையில் நின்ற வானரத் தலைவர்கள், திடீர் என்று ஆகாயத்தில் ஒரு பிரகாசத்தைக் கண்டார்கள். பொன்முடி கொண்ட மேருமலைபோல் ஆகாய வீதியில் ஒரு ஜோதி ஜொலிப்பதைக் கண்டார்கள். மேகங்களிடையில் மின்னும் மின்னலைப் போல் மறைந்து போகாமல், அப்படியே ஆகாயத்தில் நின்ற மாதிரி ஜொலித்தது. பார்த்ததில் பெரு வடிவங்கள் கொண்ட ஐந்து ராக்ஷஸர்கள் நிற்பதைக் கண்டார்கள். வானரப் படைத்தலைவனும் அரசனுமான சுக்ரீவன் இதைப் பார்த்துவிட்டு, "சந்தேகமேயில்லை. இந்த ராக்ஷஸர்கள் எங்களைக் கொல்ல லங்கையிலிருந்து வந்திருக்கிறார்கள்" என்றான்.

அரசன் இவ்வாறு சொன்னதுமே வானர வீரர்கள் மரங்களும் பாறைகளும் எடுத்துக்கொண்டு யுத்தத்துக்கு ஆயத்தமாகி, "உத்தரவு கொடுங்கள். இவர்களை இப்போதே மடக்கி, வதம் செய்து பூமியில் தள்ளுவோம்" என்று கர்ஜித்தார்கள்.

இப்படி வானரர்கள் தங்களுக்குள் பேசியும் கர்ஜித்துக் கொண்டும் வந்ததைக் கேட்ட விபீஷணன் பயக்குறி ஒன்று காட்டாமல் வஞ்சனையற்ற உள்ளத்தோடு மேலே அனைவருக்கும் தெரியும்படியாக நிலைகுலையாமல் நின்று கம்பீரக் குரலில் பேசலானான்.

"ராக்ஷஸ ராஜன் ராவணன் என்கிற துஷ்டனுடைய தம்பியாகிய விபீஷணன் நான் நிற்கிறேன். தடுக்க வந்த ஜடாயுவையும் கொன்று, சீதையைப் பலாத்காரமாகக் கொண்டு வந்து ராக்ஷஸிகளின் காவலில் வைத்திருக்கும் ராவணனுடைய தம்பி நான். 'இந்தக் காரியம் தகாது. இவளை ராமனிடம் மறுபடியும் மரியாதையாக ஒப்புவித்துவிட்டு மன்னிப்பு கேட்பாயாக' என்று நான் பலமுறை வற்புறுத்தியும், அவனுடைய அழியும் காலம்

நெருங்கிவிட்டபடியால், நான் சொன்னதை அவன் ஒப்புக்கொள்ளவில்லை, அதற்குப் பதிலாக சபை நடுவில் என்னை ஒரு வேலைக்கார அடிமையைக் காட்டிலும் மட்டமாகக் கருதித் திட்டு அவமானப்படுத்தினான். ஆனபடியால் இதோ வந்து நிற்கிறேன். நாடு, நகரம், மனைவி, மக்கள் அனைத்தையும் துறந்துவிட்டு, ராகவனைச் சரண அடைய வந்து நிற்கிறேன். இதைச் சீக்கிரம் திருமகள் கேள்வனுக்குத் தெரியப்படுத்தி என்னை அனுக்கிரகிப்பீர்களாக" என்றான்.

உடனே சுக்ரீவன் ராமனிடம் சென்று சொன்னான் :

ராவணனுடைய தம்பி விபீஷணன், மற்றும் நான்கு ராக்ஷசர்களுடன் வந்து தங்களைச் சரணடைய விரும்புகிறான். ஆகாயத்தில் நிற்கிறார்கள். இதைப்பற்றி நீதி சாஸ்திரமறிந்த தாங்கள் நன்றாக ஆராயவேண்டும். இந்த அரக்கர்கள் பல வேஷங்கள் போடுவார்கள். கண்ணுக்குத் தெரியாமல் மறைந்தும் வேலை செய்வார்கள். துஷ்டர்களுக்குரிய எல்லா சாமர்த்தியமும் தைரியமும் பெற்றவர்கள். இவர்களை நம்பவே கூடாது. இவர்களை ராக்ஷசராஜனான ராவணன் அனுப்பியிருக்கிறான் என்றே நான் எண்ணுகிறேன். நமக்குள் புகுந்து நம் ஒற்றுமையைக் கலைத்து விடுவதற்காக வந்திருக்கிறார்கள். அல்லது சமயம் பார்த்து நமக்குள் முக்கியஸ்தர்களைக் கொன்றுவிட்டுத் திரும்புவார்கள். இந்த விபீஷணன் என்ன பேசினாலும் இவன் நம்முடைய பரம சத்துருவின் சொந்தத் தம்பி என்பதை நாம் மறக்கக்கூடாது. பிறப்பில் துஷ்டப் பிறப்பான ராக்ஷச ஜென்மம். இவனை எப்படி நம்பலாம்! இது ராவணனுடைய சூழ்ச்சியே. சந்தேகமில்லை. இவனையும் இவன் துணைவர்களையும் வதம் செய்வதே நலம். இவனை நமக்குள் சேர்த்துக் கொண்டோமானால். சமயம் பார்த்து நம்மை வஞ்சிப்பான். நம்மை அழித்துவிட்டுத் திரும்புவான்.

துஷ்டனும் தயையில்லாதவனுமான ராவணனுடைய தம்பியாகிய இந்த அரக்கனையும், இவன் கூட வந்திருக்கும் துணையாட்களையும் உடனே வதம் செய்ய உத்தரவு தாருங்கள்."

அரக்கனைக் கண்டு ரோஷம் மேலிடச் சுக்ரீவன் இப்படித் தன் அபிப்ராயத்தை மறைக்காமல் தெரியப்படுத்திவிட்டு, ராமனுடைய உத்தரவை எதிர்பார்த்து நின்றான்.

வானரராஜன் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட ராமச்சந்திரன், பக்கத்தில் ஹனுமான் முதலிய வானர சிரேஷ்டர்களைப் பார்த்து, "நீதி சாஸ்திரம் அறிந்த அரசன் சொன்னதையெல்லாம் கேட்டீர்கள். ராவணனுடைய தம்பி வந்து நிற்கிறான். அவனைப்பற்றி உங்களுடைய அபிப்ராயத்தைப் பற்றிக் கேட்க விரும்புகிறேன். நெருக்கடியான சமயங்களில் நண்பர்கள் சுற்றத்தார், இவர்களுடைய யோசனை முக்கியம். உள்ளத்தில் தோன்றுவதுபோல் கூச்சமின்றிச் சொல்லுங்கள்" என்றான்.

அவ்வாறே ஒவ்வொருவரும் தத்தம் அபிப்ராயத்தைச் சொல்லத் தொடங்கினார்கள்.

வானர யுவராஜனான அங்கதன் சொன்னான்; "இவன் நம் பகைவர் கூட்டத்திலிருந்து வந்திருக்கிறான். தானாக வந்தானோ, பகைவனால் அனுப்பப்பட்டு வந்தானோ நமக்குத் தெரியாது. இவனைத் தள்ளிவிடுவதும் நியாயமாகாது. பரீட்சை செய்யாமல் சேர்த்துக்கொள்வதும் நம்முடைய க்ஷேமத்துக்கு அபாயம் உண்டாகலாம். ஆனபடியால் இவனைப் பற்றித் தீர்மானமான முடிவுக்கு உடனே வரமுடியாது. வரவேண்டியதுமில்லை. எப்படி நடந்துகொள்கிறானோ பார்க்கலாம். இவன் காரியங்கள் நமக்குச் சந்தேகம் உண்டாக்கினால் பிறகு தள்ளிவிடலாம். நல்ல எண்ணமே அதிகமாகக் காணப்பட்டால் சேர்த்துக் கொள்ளலாம்."

இவ்வாறு வாலிபுத்திரன் அங்கதன் சொன்னான்.

சபரன் சொன்னான்: "இவனை நமக்குள்ளே உடனே சேர்த்துக் கொண்டுவிட்டுப் பிறகு தீர்மானிப்பது அவ்வளவு க்ஷேமம் என்று நான் அபிப்ராயப்படவில்லை. முதலிலேயே நமக்குள் சாமர்த்தியசாலிகளான சாரணர்களை விட்டு இவனைப் பரீக்ஷை செய்துவிட்டு ஒரு முடிவுக்கு வந்து விடுவது நல்லது" என்றான்.

ஜாம்பவான் சொன்னான் : "இத்தகையவர்களைப் பரீக்ஷை செய்வதால் ஒன்றும் வெளிப்படாது. மனத்தில் உள்ள கருத்தை மறைத்துக்கொண்டு வஞ்சக எண்ணத்தோடு இவன் வந்திருந்தால் பரீக்ஷை செய்து அதைக் கண்டு பிடிப்பது முடியாத காரியம். ராவணன் நமக்குத் தீராத பகைவன். அவனை விட்டுவிட்டுத் திடீர் என்று வந்துவிட்டதாக இவன் சொல்லுகிறான். இதை நாம் எப்படி ஒப்புக்கொள்ள முடியும்? நாம் இன்னும் சமுத்திரம் தாண்டவில்லை. இக்கரையிலிருக்கும் போதே இவன் நம்மிடம் வந்து சரண் புகுவதற்கு என்ன காரணம்? இது ரொம்பவும் சந்தேகத்துக்கு இடம் தருகிறது. ராவணனுடைய கூட்டம் வஞ்சகக் கூட்டம். இவனைச் சேர்த்துக்கொள்ளக் கூடாது என்பது என் அபிப்ராயம்."

மயிந்தன் சொன்னான் : "சந்தேகத்தின் பேரிலேயே ஒருவனைத் தள்ளிவிடலாமா? இவனைப் புத்தியாகப் பரீக்ஷை செய்தே இவனைப் பற்றித் தீர்மானிக்க வேண்டும். ராவணனைத் துறந்துவிட்டு வந்திருப்பதாகச் சொல்கிறான். இதன் உண்மையை நாம் காணமுடியும். இவனுடன் சிலர் பேசிப் பார்த்து முடிவு செய்யலாம். இதற்கு வேண்டிய சாமர்த்தியம் நம்முள் சிலருக்கு இல்லாமற் போகவில்லை."

பிறகு ராமன் அறிவுச் செல்வமாகிய ஹனுமானை நோக்கினான்.

# 82. சரணாகதி

தன்னுடைய அபிப்ராயத்தை அறிய ராமன் விரும்புவதைக் கண்டு, பொருள் செறிந்த இன்சொற்களைப் பேசும் வல்லமை உடைய வாயுபுத்திரன் சொன்னான் :

"நீர் நம்மை கேட்பது என்னத்திற்கு? பிரஹஸ்பதியே வந்தாலும் உமக்கு மேல் என்ன யோசனை சொல்வான்? எனக்கு முன் பேசியவர்கள் சொன்ன புத்திமதிகளில் நான் நன்மைக் காணவில்லை. சேர்த்துக் கொள்ளுவதில் அபாயமிருந்தால் அந்த அபாயம் உடனே நேரிடும். பரீக்ஷை செய்வதற்கு இடம் ஏது? தவிர இந்த விபீஷணன் மறைந்து கொண்டுவரவில்லை. நம்முன் நேராகத்தானே வந்து பகிரங்கமாக அனைவருக்கும் எதிரில் நிற்கிறான். சாரணர்கள் இவனிடம் போய் ரகசியம் தேட என்ன இருக்கிறது?

"திடீர் என்று அகாரணமாகவும் அவசரமாகவும் சத்துருக் கூட்டத்திலிருந்து ஒருவன் வந்து நின்றால், அவனை எப்படி நம்பலாம் என்று சிலர் சந்தேகம் சொன்னார்கள். தன் தலைவன் ராவணனுடைய துர்க்குணங்களை விபீஷணன் கண்டு அவனை வெறுத்தான் என்பதில் என்ன வியப்பு? உம்மிடம் வீரத்தையும் தர்மத்தையும் பெருந்தன்மையையும் இவன் கண்டான் என்பதில் என்ன வியப்பு? ஆனபடியால் இவன் வந்த சமயமும் சந்தர்ப்பமும் என் அபிப்ராயப்படி சந்தேகத்துக்கு இடம் கொடுக்கவில்லை.

இவனைச் சேர்த்துக்கொள்வதற்கு முன், தூதர்கள் இவனிடம் கலந்து கேள்வி மறுமொழிகள் மூலம் இவன் குணத்தை அறிந்துகொள்ளலாம் என்று சிலர் சொன்னார்கள். ஒருவனைப் பற்றி நாம் சந்தேகிக்கின்றோம் என்பது அவனுக்குத் தெரிந்துவிட்டால், அவன் இயற்கைக்கு மாறாகத்தான் நடந்துகொள்வான். சுபாவப்படி பேசவோ நடந்து கொள்ளவோ அவனால் முடியாது. நாம் அவனிடம்

குற்றத்தைத் தேடுகிறோம் என்கிற பயம் இருந்து கொண்டேயிருக்கும். அது இயற்கைப் போக்கைத் தடுத்துவிடும். வந்திருக்கும் ராக்ஷசனுடைய முகம் பேச்சு இவற்றில் எனக்கு ஒரு சந்தேகமும் தோன்றவில்லை. கவலையற்ற இவன் முகமே இவன் உள்ளத்தில் வஞ்சனை இல்லையென்பதற்கு அத்தாட்சி. நெஞ்சத்துள் இருப்பதை ஒருவன் எவ்வளவு மறைத்தாலும் அதை அவன் முகம் காட்டி விடும். இது நீதி சாஸ்திரத்தில் கண்ட உண்மை*. விபீஷணன் தங்களிடம் உண்மையாகவே சரண் புக வந்திருக்கிறான் என்பது என் அபிப்ராயம். இப்படி அவன் வருவதில் வியப்பு ஒன்றுமில்லை. ராவணனுடைய தோஷங்களை உணர்ந்தவன். லங்கேசன் தோல்வியடைவான் என்பதைக் கண்டு கொண்டவன். தாங்கள் வாலியை வதம் செய்து சுக்ரீவனுக்கு வானர ராஜ்யம் தந்திருக்கிறீர்கள் என்பதும் அவனுக்குத் தெரியும். அப்படியே இவனும் லங்காதிபத்தியத்தை அடையலாம் என்று வந்திருக்கிறான் என்று வைத்துக் கொள்வோம். இதில் குற்றம் ஒன்றுமில்லை. சந்தேகப்படுவதற்கு இடமில்லை.

"ஆனபடியால் இவனை நாம் சேர்த்துக் கொள்ளலாம் என்பது என் அபிப்ராயம்.

"என் புத்திக்கு எட்டிய வரையில் நான் சொன்னேன். முடிவில் தாங்கள் எப்படி நிச்சயிக்கிறீர்களோ அப்படிச் செய்வீர்களாக. தங்களுடைய யோசனைக்கு மேல் எங்களுடைய யோசனை என்ன இருக்கிறது?" இவ்வாறு ஹனுமான் சொல்லி முடித்தான்.

இப்படி வானரத் தலைவர்கள் விபீஷணனைப் பற்றிப் பலவிதமான யோசனைகள் சொன்னார்கள்.

---

* அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம் - குறள் 706

சாமான்ய தருமத்தின்படி கும்பகர்ணன் நடந்துகொண்டான். அது எல்லோருக்கும் விளங்கும் விஷயம். அதில் சிக்கல் ஒன்றும் இல்லை.

சாமான்ய தருமத்திற்கும் மேம்பட்டதான விசேஷ தருமத்தைத் தழுவி நடந்து கொண்டதே விபீஷணனுடைய குற்றம். தருமத்திற்கு விருத்தமாக அண்ணனுடைய காரியங்கள் விபீஷணனுடைய அந்தராத்மாவுக்குத் தந்த வேதனையை அவன்தான் உணர்வான். மற்ற சாமான்யர்களுக்கு அது விளங்காது. அதனால் அவனுடைய நடத்தையை ராமனிடமிருந்த வானரர்களும் சரியாக உணரவில்லை. தற்காலத்திலும் விபீஷணனுடைய காலத்திலும் குற்றமில்லையென்பதை மக்கள் உணர்வது கஷ்டம். காரணங்களை எடுத்துச் சொல்ல வேண்டியதாகிறது.

வானரத் தலைவர்கள் சொன்னதையெல்லாம் ராமன் சாவதானமாகக் கேட்டான். கடைசியில் வாயுபுத்திரன் சொன்னதைக் கேட்டு மிகவும் சந்தோஷமடைந்தான். தன்னுடைய தருமத்தைத் தான் காப்பாற்றுவதில் எப்போதும் உறுதியுள்ள ராமனுக்கு, ஹனுமானுடைய பேச்சு மிக்க சாந்தி தந்தது. நல்லவன் ஒருவன், தான் நடத்த வேண்டிய தருமத்துக்குப் பிறர் யோசனையும் பக்கபலமாக வந்து சேர்வதைக் கண்டால் அவன் மனத்துக்கு ஆறுதல் ஏற்படுகிறது.

"சிநேகிதன் என்று சொல்லிக்கொண்டு ஒருவன் என்னிடம் வந்தால் அவனை நான் எப்படித் தள்ளமுடியும்? இது என்னுடைய தருமம். எனக்கு நண்பர்களாக அமைந்து, எனக்காகப் பாடுபடும் நீங்கள் அனைவரும் இதை அறிய வேண்டும். 'சரணம்' என்று சொல்லிக்கொண்டு ஒருவன் வந்தால், அவனிடத்தில் காணப்படும் குற்றங்களைப் பொருட்படுத்தக்கூடாது."

இப்படி ராமன் சொல்வதைக் கேட்ட சுக்ரீவன் சமாதானப்படவில்லை.

"இந்த ராக்ஷசன் நல்லவனாகவே இருக்கலாம். ஆனால் தன் சொந்த அண்ணன், ஒரு பெரிய ஆபத்தில் சிக்கிய சமயத்தில் அவனைக் கைவிட்டு இங்கே வந்திருக்கிறான். இத்தகைய ஒருவனுக்குச் சமயத்தில் நம்மையும் கைவிடுவதில் ஒரு கஷ்டமுமிராது. தன் தமையனுக்குச் செய்ததை நமக்கு ஏன் செய்யமாட்டான்" என்று கேட்டான்.

சுக்ரீவன் இதைச் சொன்னபோது ராமன் லக்ஷ்மணனைப் பார்த்து, தெரிந்தும் தெரியாததுமான ஒரு சிறிய புன்சிரிப்புச் சிரித்தான் என்கிறார் முனிவர் வால்மீகி. தன்னுடைய கதையையே மறந்துவிட்டுச் சுக்ரீவன் பேசியதை முனிவர் இப்படி ராமச்சந்திரனுடைய சிரிப்பில் காட்டுகிறார்.

சக்கரவர்த்தித் திருமகன், "நீர் சொல்வதை நான் உணர்வேன். ஆயினும் நான் சொல்வதைக் கேட்பீர்; அரச பதவியிலிருப்பவர்கள், அண்ணன், தம்பி, தாயாதிகள் அடுத்த தேசத்து ராஜாக்கள் இவர்களை எப்போதுமே சந்தேக்கப்படுவது சகஜம். சந்தேகப்படாத நல்லவர்களும் உண்டு. ஆனால், பெரும்பாலோர் தங்களைக் கண்டு மற்றவர்கள் பொறாமைப்படுகிறார்கள் என்றே எண்ணு வார்கள். ராவணன் விபீஷணனை இப்படிச் சந்தேகித்து நிந்தித்ததில் என்ன ஆச்சர்யம்?

"இனி லங்கையிலிருந்தால் தனக்கு அபாயம் என்று விபீஷணன் பயப்படுவதும் சகஜமே. ஆனபடியால் அவன் நம்மிடம் சரண்புக வந்ததில் வஞ்சனை ஒன்றுமில்லை என்பது என் அபிப்ராயம்! தவிர ராஜ்யத்தில் ஆசை வைத்தே வந்ததாகவும் இருக்கலாம். ராவணன் அழிவான். நாம் வெற்றி பெறுவோம். அதனால் அண்ணனுடைய ராஜ்யத்தைத் தான்

அடையலாம் என்றே நம்மிடம் வந்திருக்கிறான் என்று வைத்துக் கொள்வோம், இதிலும் என்ன பெரிய குற்றம்? லக்ஷ்மணா! எல்லோரும் நம்முடைய பரதனைப்போல் இருப்பார்களா?" என்றான்.

இப்படிச் சொல்லிவிட்டு, ஒருகணம் ராமன் பரதனை நினைத்துத் தியானத்தில் மூழ்கினான். "என்னைப் போன்ற பாக்கியவான் யார் உண்டு உலகத்தில்? பரதனைப் போன்ற ஒரு சகோதரனைப் பெற்றேன். நான் காடு சென்ற துக்கத்தினால் தகப்பனார் உயிரையே துறந்துவிட்டார். இத்தகைய பிரியமான தகப்பனை நானும் லக்ஷ்மணனும் பெற்றோம். உங்களைப் போன்ற நண்பர்களையும் என்னைத் தவிர வேறு யார் பெறுவார்?"

கண்களில் நீர் கலங்க இவ்வாறு சொல்லிவிட்டு, மறுபடியும் விஷயத்தைப் பற்றிப் பேசினான். "ராவணனைக் கைவிட்டது போலவே, விபீஷணன் நம்மையும் கைவிடுவான் என்கிற வாதத்தில் நான் நியாயம் காணவில்லை. நம்மைக் கைவிடுவதற்கு என்ன காரணம் விபீஷணனுக்கு உண்டாகும்? அந்த ராஜ்யத்தில் நாம் ஆசை வைக்கிறோமா? இல்லை நாம் வெற்றி அடைந்தால்தானே இவனுடைய ஆசை நிறைவேறும்? இந்தக் காரணங்களால் நாம் இந்த விபீஷணனைச் சேர்த்துக் கொள்ள மறுத்துவிடுவது தவறாகும். நான் சொன்ன இவையெல்லாம் நீதி சாஸ்திர விஷயம்.

"உண்மை,நல்லவனோகெட்டவனோ, ஒருவன் 'சரணம்' என்று என்னிடம் வந்தால் அவனைத் தள்ளிவிட என்னால் இயலாது. இது என் பிறவித் தருமம்; அதனால் நான் நஷ்டமடைந்தாலும் அதை நான் பொருட்படுத்தமாட்டேன். என் உயிருக்கு அதனால் அபாயமாயிருப்பினும் இந்தத் தருமத்தை நான் காப்பாற்றித்தான் ஆகவேண்டும்.

விட்டுவிடமாட்டேன். இவனால் என்ன அபாயம் எனக்கு உண்டாக முடியும்? இதற்கு நான் பயப்படவில்லை. ராவணனே வந்து சரணம் என்றாலும் பரீட்சை செய்யாமல் ஒப்புக்கொள்வேன். அப்படியிருக்க அவன் தம்பியை நான் எப்படித் தள்ளுவேன். போய் விபீஷணனை அழைத்து வாருங்கள்" என்றான் ராமன்.

"ராமச்சந்திரனே! நான் தெளிவு அடைந்தேன். அழைத்து வருகிறேன். விபீஷணனும் எங்களைப்போல் உமக்குப் பிரிய நட்புக் கொண்டவன் ஆகுக!" என்று சொல்லி சுக்ரீவன் விபீஷணனிடம் சென்றான்.

ராவணனைத் துறந்து வந்த விபீஷணனை , சக்கரவர்த்தித் திருமகன் தன் படைக்குள் சேர்த்துக்கொண்ட கட்டமானது, வைஷ்ணவ சம்பிரதாயத் தலைவர்களுக்குப் பாரதத்தில் கீதையைப் போலவே ஒரு சிறந்த சாஸ்திரமாய் வழங்கி வருகிறது. 'எம்பெருமானை சுத்த உள்ளத்துடன் யார் சரண் புகுந்தாலும், தோஷங்களைப் பாராமல், சந்தேகம் கிளப்பாமல், எம்பெருமான் ஒப்புக் கொள்வான். சகல தோஷங்களும், அந்தக் சரணாகதி முயற்சியிலேயே வெந்து சாம்பலாகிப் போம்' என்கிற தத்துவத்துக்கு விபீஷண கட்டம் சாஸ்திரமாக அமைந்துவிட்டது. பெரும் பாவமோ வேறு குற்றமோ செய்தவர்கள், அபவாதத்துக்கு ஆளாகித் தவிக்கிறவர்கள் எல்லாரும் இந்தச் சரணாகதிக் கொள்கையை அமிருதமாகக் காண்பார்கள். சரணாகதி செய்தவனுக்கு உய்வு உண்டாகும். எத்தகையவனுக்கும் உய்வு உண்டு என்பது வைஷ்ணவ சம்பிரதாயத்துக்கும் உயிர் நாடி.

'வைஷ்ணவ சம்பிரதாயத்துக்கு' என்று சொன்னேன் தவறு. நம்முடைய நாட்டில் மக்கள் அனுசரித்து வரும் எல்லாச் சம்பிரதாயத்துக்குமே இது உயிர் நாடி. ஏன்? உலகத்தில் மக்கள் அனுசரித்து வரும் சகல மதச்

சம்பிரதாயங்களுக்குமே இது உயிர் நாடி என்றும் சொல்லலாகும். ஒவ்வொறு மார்க்கத்திலும் இதுவே அதிகமாக வற்புறுத்திச் சொல்லப்படுகிறது. 'பயப்படாதே, கவலைப்படாதே, எல்லாப் பாபங்களினின்றும் உன்னை விடுவிப்பேன். இது சத்தியம்' என்று அருச்சுனனுக்கு மட்டும் அல்ல பகவான் கண்ணன் சொன்னது. உலகத்தில் எந்தப் பிரதேசத்தில் அந்தக் கண்ணன் அவதரித்து இறங்கி நின்ற போதிலும், இதையே சொல்லி வந்திருக்கின்றான்.

ராமாயணத்தில் ராவணன் தம்பியைச் சக்கரவர்த்தித் திருமகன் சேர்த்துக்கொண்ட வால்மீகி சித்திரத்தை இரண்டு கூறாகப் பிரித்துக் கொள்ளலாம். நீதி சாஸ்திரப்படி பகைவருடைய கூட்டத்திலிருந்து வந்த ஒருவனைச் சேர்த்துக் கொள்வதற்கு முன் என்ன ஆராய வேண்டுமோ, எப்படி ஆராய வேண்டுமோ அதை எடுத்து முனிவர் பல வானரர் பேச்சின் வழியில் காட்டியிருக்கிறார். வானர ராஜன் வாய் வழியும், சம்ஸ்கார ஸ்ம்பன்னனான, நல்ல பண்பாட்டுக்குச் சிகரமான ஹனுமான் வாய்மொழியாகவும், தருமத்தில் ஸ்திரமாக நிற்கும் ஸ்ரீராமன் வார்த்தையாகவும், சுருக்கமாகவும் தெளிவாகவும் காட்டியிருக்கிறார்.

நீதி சாஸ்திர விளக்கத்துடன், ராமன் பயிற்சியாலும் சகஜமாகவும், பெற்ற சம்ஸ்காரம், அதாவது நற்குணத்தைக் காண்கிறோம். "என்னுடைய தருமம்-யார் சரண் புகுந்தாலும், 'இல்லை போ' என்று என்னால் சொல்லமுடியாது!" என்று ராமன் சொன்னான். இதுவே ராமச்சந்திரனுடைய தருமம். 'ராவணனே வந்து சரண் என்றால் தள்ளுவேனா?" என்று ராமச்சந்திரன் கேட்கிறான் சுக்ரீவனை.

ராமச்சந்திரனை ஈசுவர அவதாரமாக வைத்துக்கொண்டிருப்பவர்களுக்கு, இந்த வாக்கியம் ஒரு தனி சாஸ்திரமாகிவிட்டது. பின்னால் குருக்ஷேத்திர யுத்தத்தில் "கவலைப்படாதே, மாசுச" என்று கண்ணன் சொல்லி முடித்த

கீதா சாஸ்திரத்தையே, சக்கரவர்த்தித் திருமகனும் விபீஷண கட்டத்தில் சுக்ரீவனுக்குச் சொன்னான். பாவம் நிறைந்த உலகத்தில் மக்களுக்கு நல்வழி காட்டும் பகவான் உறுதி மொழி இது.

## 83. சேது பந்தனம்

இதன் மத்தியில் ராவணன் ஒரு பைத்தியக்காரப் பிரயத்தனம் செய்தான். ஒரு சாரணனை அனுப்பிச் சுக்ரீவனைக் கலைக்கப் பார்த்தான். சுகன் என்ற அந்த அரக்கன் ஆகாய மார்க்கமாக வந்து சுக்ரீவனைத் தனியாகக் கண்டு அவனுக்குச் சொன்னான்:

"லங்கேசனான ராவணன் உம்மிடம் அன்பு கூர்ந்து என்னை அனுப்பியிருக்கிறான். நீரும் அரசன்; ராவணனும் அரசன், ஊரிலிருந்து துரத்தப்பட்ட இந்த ராமனுடன் நீர் சேர வேண்டிய அவசியம் ஒன்றுமில்லை. ராமனுடன் சேர்ந்து ராவணனுடைய தீராப் பகையை ஓர் அரசனாகிய நீர் ஏன் சம்பாதித்துக் கொள்ள வேண்டும்? நீர் ராவணனுக்குத் தம்பியை போன்றவர். ராமனுடைய மனைவியை ராவணன் விரும்பி, அவன் ஏதேனும் செய்தால் அதில் உமக்கு என்ன சம்பந்தம்? உமக்கு அதனால் என்ன நஷ்டம்? நீர் சரியாக யோசித்து விவேகமாக நடந்து கொள்வீராக. நீரும் உம்முடைய படையும் கிஷ்கிந்தைக்குத் திரும்பிப் போவதே விவேகம்."

இவ்வாறு சுக்ரீவனைக் கலைக்கப் பார்த்தான் ராவணன்.

சுக்ரீவன் சாரணனுக்குச் சொன்னான்: "ஹே நீசனே! போய் அரசனுக்குச் சொல்லு. நீ எனக்கு அண்ணனுமல்ல, நான் உனக்கு தம்பியுமல்ல, நீ துஷ்டன், ராமன் என் நண்பன், அவனுக்கு நீ சத்துருவானாய், ஆனபடியால் எனக்கு நீ சத்துருவானாய். நீயும் உன் கூட்டமும் அழியப் போகிறீர்கள்.

மூடனே! ராமனை விரோதம் செய்துகொண்டு எதிர்த்து நீ பிழைக்கப் போவதில்லை. இதைத் தெரிந்துகொள். நீ எங்கே ஓடிமறைந் தாலும் பிழைக்கமாட்டாய்! இவ்வாறு நான் சொன்னேன் என்று உன் அரசனுக்குச் சொல்."

இவ்வாறு சுக்ரீவன் அந்தச் சாரணனுக்குச் சொல்லியதும், வானரர்கள் அவனைப் பிடித்து இம்சை செய்தார்கள். ராமன் உத்தரவால் அவனைக் கொல்லாமல் விட்டு விட்டார்கள். அவனும் லங்கைக்கு வேகமாய்த் திரும்பிப் போய்விட்டான்.

விபீஷணன் சரண் புகுந்தவுடன் ராமனுடைய உத்தரவின் பேரில் லக்ஷ்மணனும் சுக்ரீவனும் அங்கேயே விபீஷணனுக்கு லங்கா ராஜ்ய பட்டம் தந்து, சமுத்திர ஜலத்தைக் கொண்டு பட்டாபிஷேகமும் செய்துவிட்டார்கள். விபீஷணன் ராமனுடன் நட்புக் பிரதிக்ஞை செய்து கொண்டான். ராவணனைக் கொல்லாமல் தான் அயோத்திக்குத் திரும்புவது இல்லை என்று ராமன் சபதம் செய்தான்.

பிறகு விபீஷணனும் வானர ராஜனும் லக்ஷ்மணனும் சமுத்திரத்தைத் தாண்டுவதைப் பற்றி யோசித்தார்கள். முதலில் சமுத்திரராஜனை வேண்டிக் கொள்வதே மேல் என்று எல்லோரும் தீர்மானித்து ராமனிடம் சொன்னார்கள். 'அது தான் என் எண்ணமும்' என்று ராமன் சொன்னான். கடற்கரையில் தர்ப்பைப் புல் பரப்பி சாஸ்திர முறைப்படி ராமச்சந்திரன் சமுத்திரராஜனை உத்தேசித்து உபவாசம் துவக்கினான்.

மூன்று நாட்கள் அன்ன ஆகாரமின்றி மௌன விரதமிருந்து ராமன் சமுத்திர ராஜனைப் பூஜித்தான். சமுத்திரம் கேட்கவில்லை. பிறகு ராமன் எழுந்து, இனித் தன்னுடைய சக்தியைப் பிரயோகித்தே இந்தக் காரியத்தை முடிக்கவேண்டும் என்று தீர்மானித்து, வில்லும் மந்திர

பூர்வமாக எறியவேண்டிய பாணங்களும் கொண்டு வரும்படியாக லக்ஷ்மணனுக்குச் சொன்னான்.

சமுத்திரத்தின்மேல் பாணப் பிரயோகம் செய்ய ஆரம்பித்தான். பூமி அதிர்ந்தது. கடலில் கலக்கம் ஏற்பட்டது. சமுத்திரராஜனால் அதைத் தாங்க முடியவில்லை. மேருமலை மேல் உதயசூரியன் ஜொலிப்பது போல் சமுத்திர ராஜன் பிரசன்னமாகி நின்றான்.

ராமனுக்குக் கைகூப்பி, "ராமச்சந்திரனே! இயற்கை விதிப்படி நான் நடந்துகொள்ள வேண்டுமல்லவா! தாண்ட முடியாத ஆழமும் நீர் வடிவமும் கொண்டு ஜலத்தில் வசிக்கும் பெரும் பிராணிகளுக்கும், சிறு பிராணிகளுக்கும் வாழுமிட மாக நான் இருக்கவேண்டிய நியமத்தை நான் எவ்வாறு புறக்கணிக்க முடியும்? கடந்து செல்ல முடியாதபடி அலைகளுடன் வழியடைத்து நிற்பது என் தருமம். அதை நான் விட்டுவிட இயலாது. வானரங்களைக் கொண்டு கற்பாறை களும் காட்டு மரங்களும் போட்டு அணைகட்டச் சொல்வீர். அதற்கு இடம் தருவேன். வேலைக்குக் குந்தகமின்றியும் போட்ட கல்லும் மரமும் நீரில் தங்கும் படியும் நான் உதவுவேன். இவ்வளவே நான் செய்ய முடியும். வானரர்களில் நளன் இருக்கிறான். விசுவகர்மாவின் புத்திரனான அவன், இந்த அணையைத் திறமையாக நிர்மாணிப்பான். உமக்கு வெற்றி ஆகுக!" என்றான்.

ராமச்சந்திரன் உத்தரவின் பேரில் சேதுபந்தன காரியம் துவக்கினார்கள். லக்ஷக்கணக்கான வானரர்கள் பெரிய ஆரவாரத்துடன் வேலை செய்து ஐந்து நாட்களில் அணைகட்டி முடிந்தது. இந்த இடத்தில் வால்மீகி முனிவர் அணைக்கட்டு வேலையை விஸ்தாரமாகச் சித்திரித்து விளக்குகிறார். தற்காலத்தில் பெரும் அணைகள் கட்டும் அமர்க்களமாகவே, முனிவரும் சேதுபந்தனத்தைப் பாடியிருக் கிறார். வானரர்கள் காடுகளிலும் மலைகளிலும் சென்று

ஆயிரக்கணக்கான மரங்களைப் பிடுங்கிப் பெயர்த்துச் சமுத்திரக் கரைக்கு இழுத்து வந்து போட்டார்கள். வேறு பெரிய வானரர்கள் மலைகளையும் பாறைகளையும் பெயர்த்துத் தூக்கி வந்து போட்டார்கள். மரங்களும் மலைகளும் கடலில் விழும்போது அலைகள் மேலே கிளம்பி ஆகாயத்தை எட்டிக் குதித்தன. நளன் எல்லா வேலைகளையும் பார்த்து வந்தான். கூட்டங்கூட்டமாக வந்து நின்ற வானரர்களிடமிருந்து வானரத் தலைவர்கள் வேலை வாங்கினார்கள். மலை போன்ற கற்களையும் மகா விருக்ஷங்களையும் போட்டு மேலே கட்டைகளும் புல்லும் பரப்பிச் சமன்படுத்தினார்கள். அணை வேலையின் சப்தம் சமுத்திர ஓசையைச் சிறிதாக்கி விட்டது.

அணை கட்டி முடிந்தது. ஆகாயத்தில் ஸ்வாதி நட்சத்திர ஜோதி வீதியைப்போல் கடலின் மத்தியில் இந்தப் புது சேதுவானது பிரகாசித்தது. மேலே தேவகணங்களும் பூமியில் வானரர்களும் வெற்றிக் கோஷம் செய்தார்கள். "சத்துருவை ஜெயித்துப் பல்லாண்டு பல்லாண்டு வாழ் வாயாக" என்று ராமனைத் தேவர்களும் ரிஷிகளும் ஆசீர்வாதம் செய்தார்கள்.

ஆஞ்சனேயன் ராமனைத் தன் தோள்மேல் தூக்கிச் சென்றான். அப்படியே அங்கதன் லக்ஷ்மணனை எடுத்துச் சென்றான். வானரப்படை கடலைக் கடந்து விட்டது.

இவ்விடத்தில் எடுத்துச் சொல்ல வேண்டிய ஒரு விஷயம் உண்டு. வில் பிடித்து நின்ற ராமனைக் கைகுவித்து வணங்கிச் சமுத்திரராஜன் சொன்னான்.

"அன்புக்குரிய ராமச்சந்திரனே! பூமியும் வாயுவும் ஆகாசமும் நீரும் நெருப்புமாகிய ஐம்பூதங்களும் தத்தம் சுபாவ நியதியில் நிற்கின்றன. அவைகளுக்கு இடப்பட்ட மாறாத அநாதி நெறியில் அவை செல்கின்றன. தண்டனைக்

குப் பயந்து நான் எப்படி என் சுபாவத்தை மாற்றிக்கொள்ள முடியும்? ஜலமானது திணிந்து கல்லாக முடியுமா? அல்லது என் ஆழத்தை நான் மாற்றிவிட்டு நடந்து தாண்டும் ஒரு நீர் நிலையாக நிற்கமுடியுமா?"

இவ்வாறு சமுத்திரராஜன் ராமச்சந்திரனிடம் மிக வினயமாகச் சொல்லிக்கொண்டான்.

முனிவர் சமுத்திரராஜன் வாய் வழி, நம்முடைய சாஸ்திரங்களின் அடிப்படையான தத்துவத்தை விளக்கு கிறார். பிரகிருதிக்கும் ஈஸ்வரனுக்குமுள்ள அநாதி சம்பந் தத்தை விளக்குகிறார். ஆண்டவனுடைய நியதியே பிரகிருதி. பிரபஞ்சம் தானாக நடப்பதற்காக இயற்கை நியதிகளை ஆண்டவன் அமைத்து விட்டான். அப்படியே கர்மவிதியும், பஞ்ச பூதங்களும் உயிரற்ற பொருள்களும் ஜீவன்களும் இந்தச் சாசுவத நியதியின்படியே நடந்து கொள்ளும்.

மற்ற மதங்களில் ஆண்டவனுடைய உண்மையையும் பிரபாவத்தையும் நிரூபிப்பதற்காக பிரகிருதி விதிகளை மக்கள் காணும்படி திடீர் என்று எதிர்பாராதபடி மாற்றி வியக்கச் செய்ததாகச் சொல்லுவார்கள். சுபாவத்துக்கு மாறாக நிகழ்ச்சிகளை வைத்து ஈசுவர நிரூபணம் செய் வார்கள். நம்முடைய சாஸ்திரம் அப்படிச் செய்வதில்லை.

ஒரு மலையைக் கண்ணன் தூக்கினான். அந்த நிகழ்ச்சி நடந்தது, கண்ணனை பகவான் என்று நிரூபிப்பதற்காக அல்ல. ராவணனும் கைலாசத்தைத் தூக்கினான்; அதனால் ராவணன் ஆண்டவன் ஆகிவிடவில்லை.

ஹிந்து சாஸ்திரப்படி ஈசுவரனுடைய சங்கற்பமே இயற்கையும், காரண காரிய விதியும்; பஞ்ச பூதங்களின் மாறாத நியதிகளும் கர்ம விதியும். இது பகவத்கீதை 9 ஆவது அத்தியாயத்தில் விளக்கப்பட்டிருக்கிறது; வால்மீகி முனிவர்

இதைச் சமுத்திரராஜன் பேச்சில் சுருக்கமாக வைத்து முடித்தார்.

## 84. யுத்தம் ஆரம்பித்தது

மால்யவான் என்ற விருத்தனான ராக்ஷஸன் ராவணனுக்கு எவ்வளவோ சொல்லிப் பார்த்தான்.

"உன்னுடைய நல்லகாலம் முடிந்தது! நீ செய்து வந்த பாப காரியங்களால் உன் தேஜஸ் குறைந்து போயிற்று. நீ பெற்றிருக்கும் வரங்களை இனி நம்பாதே! சமாதானம் செய்துகொள். இப்போது வந்திருக்கும் சேனையைப் பார். மானிடர்களும், வானரர்களும், கரடிகளுமான சேனை பயங்கரமாக வந்து நிற்கிறது. சேது பந்தன அற்புதத்தைப் பார். மகாவிஷ்ணுவே மனித சரீரத்தில் வந்துவிட்டார் என்று எண்ணுகிறேன்" என்று கிழவன் சொன்னான்.

இதையெல்லாம் கேட்க ராவணன் விரும்பவில்லை. "நீர் சொல்லும் சொற்கள் எனக்குக் கர்ண கடூரமாக இருக்கின்றன. நீர் சத்துருவோடு சேர்ந்துவிட்டீர் போலிருக்கிறது. மனித ஜாதிக்கு பலம் ஏது; தகப்பனால் காட்டுக்குத் துரத்தப்பட்ட அற்ப மனிதனைக் கண்டு எல்லோரும் பயப்படுகிறீர்கள். குரங்குகளையும் கரடிகளையும் நம்பி ஒரு மனிதன் வந்திருக்கிறான்; இவன் உங்களுக்குப் பெரும் பயத்தைத் தருகிறான். உங்களைப் பார்த்து எனக்கு வெட்கமாக இருக்கிறது.

"என்மேல் உங்களுக்குப் பொறாமையா? ஏன் இப்படிப் பேசுகிறீர்கள்? நான் ராமனை வணங்க முடியாது. நீதி சாஸ்திரத்தில் இது குற்றமாயிருந்தால் அது என் சுபாவத்தில் ஏற்பட்ட குற்றம். அதை என்னால் மாற்ற முடியாது என்று வைத்துக்கொள்ளும். யுத்தம் செய்து மடிந்தாலும் மடிவேன். ராமனிடம் சமாதானம் கேட்கமாட்டேன்" என்றான்.

"யோசித்துச் செய்ய வேண்டியதைச் செய். லங்கேசன் வெல்க! ராவணன் வெல்க!" என்று சொல்லிவிட்டு மால்யவான்

வருத்தத்தோடு தன் வீடு திரும்பினான். இவன் ராவணனுக்குத் தாய்வழியில் பாட்டன்.

ராவணன் தன்னுடைய வீரர்களை அந்த அந்த இடத்துக்கு, இவர் இவர் பொறுப்பு என்று அமைத்து விட்டான். பிரஹஸ்தனைக் கிழக்கு வாயிலுக்கும், மகாபாரிசுவனையும், மகோதரனையும் தெற்கு வாயிலுக்கும், தன் மகனும் மாயங்கள் கற்ற மகா வீரனுமான இந்திரஜித்தை மேற்கு வாயிலுக்கும் காப்புப் பொறுப்பாக அமைத்துவிட்டு, வடக்கு வாயிலைத் தானே காப்பது என்று முடிவு செய்தான். மகா வீர பராக்கிரமனான விரூபாக்ஷனை நகரத்துக் குள்ளிருக்கும் சேனைக்குத் தலைவனாக நியமித்தான்.

இவ்வாறு தன் சேனைகளையும் வீரர்களையும் விதானப்படுத்திவிட்டுக் காரியங்கள் வெற்றிகரமாக முடியும் என்று திருப்தி அடைந்தான். விநாச காலம் நெருங்கியபடியால், யார் சொல்லியும் கேட்காமல் இவ்வாறு செய்தான்; மந்திரிகள் ஸ்துதியும் ஜெய கோஷமும் செய்து அரசனைச் சந்தோஷப்படுத்திவிட்டுக் கலைந்தார்கள்.

ராமனும், சுக்ரீவனும், விபீஷணனும் மற்றவர்களும் யுத்தக் கிரமத்தைப் பற்றி யோசிக்கக் கூடினார்கள். விபீஷணன் ராவணனுடைய ஏற்பாடுகைளப் பற்றிச் சாரணர்கள் போய்ப் பார்த்துவிட்டு வந்ததை யெல்லாம் எடுத்துச் சொன்னான்.

"இப்போது ராவணன் திரட்டியிருக்கும் சேனையானது கணக்கிலும் பலத்திலும் வீரத்திலும் குபேரனை எதிர்த்த சேனையைவிடப் பெரிது என்பதை அறிவீர்களாக. ஆயினும் எனக்குச் சந்தேகமில்லை. ராமச்சந்திரனுடைய வெற்றி நிச்சயம்" என்றான் விபீஷணன்.

ராமனும் வீரர்களை ராக்ஷஸச் சேனையை எதிர்ப் பதற்குப் பிரித்து விட்டான். "நீலன் கிழக்குக் கோட்டை வாயிலில் பிரஹஸ்தனை எதிர்க்க வேண்டியது. தெற்கே

மகோதரனையும் மகாபாரிசுவனையும் அங்கதன் எதிர்க்க வேண்டியது. மேற்கு வாயிலைக் காத்து வரும் மாயாவியான இந்திரஜித்தை ஹனுமானே எதிர்க்க வேண்டியது. உலகத்தை உபத்திரவம் செய்யும் ராவணனை நானும் லக்ஷ்மணனும் எதிர்த்து லங்கையில் பிரவேசிப்போம். சுக்ரீவனும் ஜாம்பவானும், விபீஷணனும் நம்முடைய சேனையுடன் இருக்கலாம்!" என்று அணிவகுத்தான்.

ராமன் அன்று ராத்திரி சுவேலை மலைமேல் சேனையுடன் தங்கினான். மறுநாள் காலை எழுந்து அங்கிருந்து பார்த்தார்கள். திரிகூட மலைமேல் மனத்தைக் கவரும் அழகுடன் ஜொலிக்கும் லங்கா நகரம் ஆகாயத்தி லிருந்து தொங்குவதுபோல் காட்சி தந்தது. கோட்டை மதிலைக் காத்து நின்ற ராக்ஷஸ சேனையின் வரிசை மற்றொரு மதிலைப்போல் காணப்பட்டது.

லங்கா நகரத்தின் மாடமாளிகைகளின் அழகையும், ஐசுவரியத்தையும் ராமன் பார்த்து, "ஐயோ, கால பாசத்தால் தூண்டப்பட்ட ஒருவனுடைய மகா பாப காரியததின் பயனாக, இவ்வளவு ஐசுவரியமும் இந்த ராக்ஷஸ குலமும் அழிய வேண்டியதாயிற்று. நற்குலத்தில் பிறந்த இவன், தன் ஜன்மத்தின் பெருமையை அறிந்தும், இப்படி மூர்க்கனாகப் போய்த் தன் மரணத்தைக் கூப்பிட்டழைத்துத் தன்னைச் சேர்ந்தவர்களையும் அழிக்கிறானே!" என்று இரங்கினான்.

"நடத்த வேண்டிய யுத்தத்தைச் சரியாக நடத்தி, இந்தத் துஷ்டனை அழிப்பதில் மனத்தைச் செலுத்துவோம். போரில் பெரும் குழப்பமுண்டாகும். ராக்ஷஸர்கள் பல மாயவேஷங்கள் போடுவார்கள். நம்முடைய சேனையிலுள்ள வானரர்களும் கரடிகளும் தம் சொந்த வடிவத்திலேயே நின்று யுத்தம் செய்யட்டும். ராக்ஷஸ ராஜன் தம்பியும் அவன் நண்பர்களும் மட்டும் என்னோடும் லக்ஷ்மணனோடும் இருக்கட்டும். ராக்ஷஸர்களின் மானிட உருவத்தையாவது

வானர உருவத்தையாவது எடுக்க மாட்டார்கள். அவர் களுடைய கர்வம் அதற்கு இடந்தராது. ஒழுங்காக எதிர்த்து நின்றோமானால் வதம் செய்ய வேண்டியவர்களை வதம் செய்யலாம். துணைசெய்ய வேண்டியவர்களுக்குத் துணை செய்யலாம்" என்று ராமன் சொல்லி முடித்தான்.

சேனையுடன் சுவேலை மலையிலிருந்து இறங்கி, லங்கா நகரத்தை அடுத்த வனத்தில் பிரவேசித்தார்கள். கடலைப் போன்ற வானர சேனை வனத்தில் இறங்கியதும், அவ்விடம் வசித்து வந்த நானாவித மிருகங்களும் பட்சிகளும் பயந்து இங்குமங்குமாய்ச் சென்றன. வனத்தின் அழகை முனிவர் தன் தனிப்பாணியில் வர்ணிக்கிறார். மேலே மலைச்சிகரத்தில் மிகப் பத்திரமாகக் காக்கப்பட்டு வந்த லங்கா நரத்தையும் வர்ணிக்கிறார். மலைக்கோட்டையையும் விசுவகர்மாவினால் நிர்மாணிக்கப்பட்ட திவ்விய சௌந்தர்யமான நகரத்தையும் கீழிருந்து பார்த்து ராமன் "என்ன அழகு! என்ன செல்வம்!" என்று வியப்பில் மூழ்கினான். ராக்ஷச வீரர்களின் பலத்தை யும், யுத்தப் பசியையும் கோட்டை வாயிலையும் மதிலையும் யந்திரங்களையும் பார்க்கப் பார்க்க வானரர்களின் உற்சாக வேகம் மேலும் மேலும் பொங்கிற்று.

யாரும் எதிர்பார்க்காத சமயத்தில் சுக்ரீவன் திடீர் என்று ஒரு பாய்ச்சல் பாய்ந்து லங்கா நகரத்தின் ஒரு கோபுர மேடையில் இறங்கினான். அங்கே ராவணன் தன் பரிவாரத் துடன் திவ்விய ஆசனத்தில் உட்கார்ந்திருந்ததைக் கண்டு இவ்வாறு குதித்துப் பாய்ந்தான். கருத்த மேகக் கூட்டத்தைப் போலவும், சந்தியா காலச் செவ்வானம் போலவும் ராவணன் சிவந்த வஸ்திரம் போர்த்துக்கொண்டு அமர்ந்திருந்தான். ஐராவதத்தின் தந்தங்களால் குத்திகாயப்படுத்தப்பட்ட வடு, அவனுடைய அகன்ற மார்பில் சந்திர பிம்பத்தைப் போல் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

"ராவணா! சிக்கினாய்! ராமனுடைய தோழனும் அடிமையுமான சுக்ரீவன் நான். இன்று நீ முடிந்தாய்!" என்று

அவன் மேல் பாய்ந்து அவன் கிரீடத்தைக் கீழே தள்ளி, ஓர் அறை அறைந்தான். பிறகு இருவருக்கும் பெரும் மல்யுத்தம் நடந்தது.

இருவரும் மல்யுத்தத்தில் நிபுணர்கள். அந்தச் சாஸ்திரத்தில் கண்ட எல்லா வித்தைகளையும் ஒருவர் மேல் ஒருவர் காட்டினார்கள். ராவணன் வெகு கஷ்டப்பட்டுப் போனான். அதனால் அவன் மாயவித்தையில் இறங்கினான். அப்போது சுக்ரீவன் அவனை விட்டுவிட்டு ஒரு பாய்ச்சலாக ராமன் இருந்த இடம் மறுபடி வந்து குதித்தான்.

இவ்வாறு சூரிய புத்திரன் அற்புதக் காரியம் செய்து விட்டு வந்ததைக் கண்ட வானரத் தலைவர்கள், தங்கள் அரசனைப் புகழ்ந்து பெரும் ஆரவாரம் செய்தார்கள்.

சுக்ரீவன் க்ஷேமமாகத் திரும்பி வந்ததைப் பார்த்த ராமன் சந்தோஷமடைந்தான். வானர ராஜாவின் உடம்பின் பேரில் காயங்களையும் ரத்தத்தையும் பார்த்து ராமன் சொன்னான்.

"சுக்ரீவனே! உன் வீரத்தைப் பார்த்து வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தோம் என்பது உண்மை. ஆயினும் இது சரியான காரியமல்ல. அரசனானவர் இப்படிச் சாகசம் செய்யக்கூடாது. யாருடனும் யோசிக்காமல் இப்படிப்பட்ட அபாய காரியத்தில் திடீர் என்று புகுந்துவிட்டது சரியல்ல."

இவ்வாறு கண்டித்ததைச் சுக்ரீவன் கேட்டு, "உண்மை, உங்களைக் கேட்காமல் நான் பாய்ந்து யுத்தம் செய்த முறை தவறே. சீதைக்கும் தங்களுக்கும் அபராதம் செய்த அந்தப் பாவியைப் பார்த்ததும் எனக்குப் பொங்கிய கோபத்தால் மெய்மறந்து போனேன். அதனால் இப்படிச் செய்தேன்!" என்றான்.

பிறகு வானரசேனை, ராமன் கட்டளையிட்ட முறையில் லங்கையை நான்கு பக்கங்களிலும் சூழ்ந்து கொண்டது.

அங்கதனை அழைத்து, ராமன், "ராவணனிடம் தூது போய் அவனுக்குச் சொல்லுவாய். 'மகா பாபியே! உன் காலம் நெருங்கிவிட்டது. கோட்டை வாயிலில் ராமன் யுத்தத்துக்குக் காத்திருக்கிறான். தேவர்களிடம் பெற்ற வரத்தைக் கொண்டு கர்வங்கொண்டு துஷ்டனாகிப் போனாய். உலகத்தை ஹிம்சை செய்து வந்தாய். உலகம் க்ஷேமமடையும் காலம் இப் போது வந்திருக்கிறது. வெளியில் வந்து யுத்தம் செய்து கொல்லப்பட்டாயானால் பாபங்களினின்று பிராயசித்தம் அடைந்து வீரர்களுக்குரிய சுவர்க்கம் அடைவாய். உயிரின் மேல் ஆசையிருந்தால் அக்கிரமமாகத் தூக்கிப்போன சீதை யைத் திருப்பி ராமனிடம் சமர்ப்பித்துவிட்டுச் சரண் அடை வாய். உயிருடன் பிழைத்துப் போகலாம். எவ்வாறாயினும், பாவியான நீ இனி அரசனாக இருக்கத் தகுந்தவனல்ல. லங்கா ராஜ்யமும் இனி விபீஷணனுடையதாகும். அரசனாக இருப் பதற்கும் ஜனங்களை ரக்ஷிப்பதற்கும் அவன் தகுதி பெற்ற வன். சரணமடைந்து உயிர் தப்பும் எண்ணமில்லாவிட்டால், உடனே உத்தரகிரியைகளை முன்னதாகச் செய்வித்துக் கொண்டு, உன் அருமைச் சொத்தாயிருந்த லங்கையைக் கடைசித் தடவையாக நன்றாகப் பார்த்துவிட்டு விடை பெற்றுக் கொண்டு, மரணத்துக்குத் தயாராக வெளியே வந்து ராமனோடு யுத்தம் செய்வாயாக!' இவ்வாறு அரக்கனுக்குச் சொல்வாய் அங்கதனே!" என்றான்.

உடனே அங்கதன், "அப்படியே!" என்று குதித்துக் கிளம்பி, மந்திரிகளால் சூழப்பட்டு உட்கார்ந்திருந்த ராவணன் முன்னிலையில் இறங்கினான்.

* * *

ராமன் சொன்ன வண்ணம் கம்பீரமாக, "வாலி யார் என்பது உமக்குத் தெரிந்திருக்கலாம். நான் வாலியின் புத்திரன். ராமனுடைய தூதனாக வந்திருக்கிறேன். உம் முடைய பாபங்களுக்கு விமோசன காலம் நெருங்கிவிட்டது.

யுத்தம் செய்து வீர சுவர்க்கம் அடைவீர். ராமனும் வானர சேனையும் கோட்டை வாயிலில் காத்திருக்கிறார்கள். செய்த பாபங்களையெல்லாம் தீர்த்துக் கழுவிக் கொள்ளலாம். அப்படியில்லை. உயிரின் மேல் ஆசையிருந்தால் ராமனிடம் சரணாகதி அடைவீர். இல்லையேல் யுத்தத்துக்கு எழுந்து செல்வீர். யமனிடம் போய்ச் சேரத் தயாராகப் புறப்படுவீராக. குலத்தோடு அழிந்துபோகும் காலம் நெருங்கி விட்டது. லங்கையைக் கண்ணால் பார்த்து அனுபவித்துத் திருப்தியடைவீர்!" என்றான்.

ராவணனுக்கு நெருப்பைப்போல் பொங்கியது கோபம் "பிடி! கொல் துஷ்டனை" என்றான்.

உடனே இரண்டு ராக்ஷஸர்கள் அங்கதனை இரு பக்கத்திலும் பிடித்துக் கொண்டார்கள். அவன் இந்த இரண்டு பெரும் பூதாகாரமான அரக்கர்களுடன் உயரக் கிளம்பி, இருவரையும் உதறித் தள்ளி, அதற்கும் மேலே கிளம்பி, மாளிகையின் விதானத்தை ஓர் உதை உதைத்துவிட்டு, ராமன் இருந்த இடத்துக்கு ஒரே தாவாகத் தாவி வந்தடைந்தான்.

அங்கதனுடைய காரியத்தைக் கண்டு ராக்ஷசக் கூட்டத்துக்குப் பெரும் திகில் உண்டாயிற்று. ஆனால் தங்களுடைய பயத்தை மறைத்துக் கொண்டார்கள். விதானம் உடைந்ததைக் கண்டு ராவணன் பெருமூச்சு விட்டான். அதை ஒரு துர்நிமித்தமாகக் கருதினான்.

அங்கதன் திரும்பி வந்ததும், ராமச்சந்திரன் சேனைக்கு உத்தரவு கொடுத்துவிட்டான். யுத்தம் ஆரம்பித்தது.

## 85. சீதை மகிழ்ந்தாள்

பயங்கர வானர சேனை லங்கைக் கரையில் பூமி அதிர இறங்கி விட்டது. ஒரு பெரிய வனத்தில் சுகமாகத் தங்கிற்று.

யுத்த ஆயத்தமாக லங்கா நகரத்திலிருக்கும் ராக்ஷசர் களுடைய கோஷம் கிளம்பிற்று. சங்கம் பேரிகை தந்துபி முதலிய யுத்த வாத்யங்களின் நாதம் கேட்டதும் வானரர் களுடைய உற்சாகம் இன்னும் அதிகமாயிற்று. ராமச்சந்திரன் சேனையை அணிவகுத்து யார் யார், எந்த எந்த ஸ்தானத்தில் இருக்கவேண்டும் என்று நிர்ணயித்துச் சொன்னபடி சேனை அணிவகுக்கப்பட்டு நின்றது.

லங்கையைப் பார்த்து, "ஆஹா! லக்ஷ்மணா! இந்த நகரத்தின் அழகைப் பார்த்தாயா!" என்றான் ராமன்.

லங்கையைக் கண்டதும் ராமனுடைய உள்ளம் சீதையிருந்த இடம் சென்றது. தானும் படையும் வந்தது இப்போது அவளுக்குத் தெரிந்திருக்குமல்லவா, தைரியம் அடைந்திருப்பாளல்லவா, என்றெல்லாம் எண்ணினான். ஆயினும் அதைப்பற்றி ஒன்றும் பேசாமல் சேனையை அணிவகுக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தான்.

* * *

சுகன் என்ற ராக்ஷச சாரணன் ராவணனிடம் திரும்பிச் சென்று, "தாங்கள் சொல்லியனுப்பியபடி என் காரியத்தைச் செய்தேன். ஆனால் ஒன்றும் பயனில்லாமல் போய்விட்டது. என்னைத் துன்பப்படுத்தித் திருப்பி அனுப்பிவிட்டார்கள். விராதன், கபந்தன், கரன் முதலியவர்களை விளையாட்டாகக் கொன்ற ராமன், சுக்ரீவனுடைய சேனையுடன் சீதையைச் சிறை வைத்திருக்கும் இடத்தை அறிந்து கொண்டு லங்கையை அடைந்துவிட்டான். கரடிகளும் வானரர்களும் கடலைத் தாண்டி வந்து யுத்தத்துக்குத் தயாராய் லங்கைக்கு முன் நிற்கிறார்கள். தரை காணாமல் சேனை நின்றுவிட்டது. இனி பேச்சில் உண்டாகியிருக்கும் துவேஷம் யுத்தத்தினால் தான் தீரவேண்டும். வேறு வழியில்லை. மன்னனே! யோசனை செய்து என்ன செய்யவேண்டியதோ அதைச் செய்வீராக."

இவ்வாறு சொல்லிவிட்டு, முடிவில் மெதுவாக, "சீதையைத் திருப்பி தந்துவிட்டால் பிழைக்கலாம்" என்று சொன்னான்.

ராவணனுக்குக் கோபம் பொங்கிற்று. "என்ன சொன்னாய்? சீதையைத் திருப்பித் தருவது என்கிற பேச்சை யாரும் என்னிடம் பேச வேண்டாம். என்னுடைய சக்தியை அறியாமல் இந்தப் பேச்சு பேசுகிறீர்கள். தேவ தானவ கந்தர்வ யக்ஷர்கள் யார் வந்தாலும் என்னால் வதம் செய்யப்படுவார்கள். இந்திரனே வந்தாலும் சரி, யமனே வந்தாலும் சரி, என் பாணங்களால் எரிக்கப்படுவார்கள். பார், இந்த அற்ப ராமனும் அவனுடைய சேனையும் எப்படித் துவம்சம் ஆகப்போகிறார்கள்!" என்றான்.

ராவணன் உண்மையில் அவ்வாறே நம்பினான். தன்னுடைய பூர்வ சரித்திரத்தை எண்ணி எண்ணி அடைந்திருந்த கர்வத்தினால் புத்தியழந்து, மூர்க்கனாகிப் போய் விட்டான்.

பிறகு இரண்டு அமைச்சர்களை அழைத்து வரச் சொல்லி அவர்களுக்கு உத்தரவிட்டான். "லங்கைக்கு சேது கட்டிவிட்டு பெருஞ்சேனை வந்து இறங்கியதாகச் சாரணர் கள் சொல்லுகிறார்கள். இது ஆச்சரியமாக இருக்கிறது. ஆயினும் காரியம் ஒன்றும் கெட்டுப்போகவில்லை. நீங்கள் சென்று சத்துரு சைன்யத்தை நன்றாகப் பார்த்து, எனக்கு அவர்கள் பலத்தின் விவரத்தைச் சொல்ல வேண்டும்!" என்று சொல்லி அனுப்பினான்.

அப்படியே அவர்களும் வானர வடிவம் தரித்து, வானர சைன்யத்துக்குள்ளும் பிரவேசித்துச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். விபீஷணன் அவர்களுடைய மாறு வேஷத்தைக் கண்டு கொண்டு, அவர்களைப் பிடித்து ராமன் முன், கொண்டு போய் நிறுத்தினான்.

"சுவாமி, நாங்கள் தூதர்கள்; எங்களுடைய அரசனால் அனுப்பப்பட்டோம், எங்களை விட்டுவிடுங்கள்" என்றார்கள்.

ராமன் சொன்னான்: "இவர்களுக்கு நம்முடைய சேனையைக் காட்டி எல்லாம் பார்த்து போகச் சொல்லுங்கள். இவர்களை விட்டுவிடுங்கள். ஏ ராக்ஷஸ தூதர்களே! நீங்கள் திரும்பிச் சென்று ராவணனுக்குச் சொல்லுங்கள். எந்தப் பலத்தை நம்பி நீ சீதையைத் தூக்கி வந்தாயோ அந்தப் பலம் இன்று சோதனைக்கு உள்ளாகும். உன்னுடைய கோட்டையும் நகரமும் சேனையும் நாளையே அழிவதைப் பார்ப்பாய்! நாளைக் காலையில் ராமனுடைய பாணங்கள் உன் மேல் பாயும்!" இப்படி உங்கள் அரசனுக்குச் சொல்லுவீர்களாக!"

ராமன் சொன்னதைக் கேட்ட ராக்ஷசத்தூதர்களும் "அப்படியே" என்றார்கள். "உமக்குச் ஜெயமாகுக" என்று தங்களையும் அறியாமல் அவர்கள் வாயினின்று எப்படியோ வழக்கத்தின் வசமாக வெளிவந்தது. இது ஒரு நல்ல நிமித்தமாக எல்லோரும் கருதினார்கள்.

ராவணனிடம் அவர்கள் சென்று, "சுவாமி விபீஷணனால் நாங்கள் கண்டுபிடிக்கப்பட்டோம். ஆனால் ராமன் எங்களைக் கொல்லாமல் விட்டுவிட்டான். அரசனே! நம்முடைய பகைவர்கள் ஒரே உறுதியாக இருக்கிறார்கள். ராமனும் லக்ஷ்மணனும், வாலி தம்பியாகிய வானர ராஜனும், விபீஷணனும் ஒரே மனமாக இருக்கிறார்கள். இவர்களால் நடத்தப்பட்ட இந்தச் சேனையை நாம் ஜெயிப்பது கஷ்டம். தசரதன் மகன் ராமனைப் பார்த்தோம், அவன் ஒருவனே போதும், நம்முடைய நகரத்தையும், சேனையையும் அழிக்க! இவ்வாறு எங்களுக்குத் தோன்றுகிறது. வானர சேனையின் வீரத்தையும், யுத்தத்திற்கு அவர்கள் ஆத்திரம் கொண்டிருப்பதையும் கண்டோம். அவர்களை விரோதிப்பது நல்லதல்ல. உடனே சீதையை ராமனிடம் ஒப்புவித்துவிடுவது நல்லதாகும். யோசியுங்கள்!" என்றார்கள்.

தங்களுடைய அரசனின் க்ஷேமநலத்தை உத்தேசித்துத் தூது சென்று மந்திரிகள் அப்படிச் சொன்னார்கள். ராவணனுக்கோ இப்போது கோபம் தாங்க முடியாமற் போயிற்று.

"உலகமெல்லாம் எனக்கு விரோதமாக நின்றாலும், அதற்காக பயப்படமாட்டேன். தேவ கந்தர்வ தானவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து வந்து என்னை எதிர்த்தாலும் நான் சீதையைத் திருப்பித் தரமாட்டேன். தூது சென்ற நீங்கள் பகைவர்களால் அடிபட்டுப் பயந்து போய் இப்படிச் சொல்லுகிறீர்கள். கோழைகளே, யார் வந்து என்னை எதிர்த்து நிற்க முடியும்? எந்தப் பகைவன் என்னை ஜெயிக்க முடியும்?"

இப்படிச் சொல்லிவிட்டுத் தானே அரண்மனை மாளிகையின்மேல் ஏறிச் சென்று, சத்துரு தலத்தை நேரில் பார்த்தான். பிறகு மந்திரிகளோடு நீண்ட நேரம் பேசினான். சத்துரு சைன்யத்திலுள்ள வீரர்கள் யார் யார் என்பதை யெல்லாம் தூது சென்று திரும்பியவர்களை விசாரித்தான்.

அவர்களும் ஒவ்வொரு வானர வீரனைப் பற்றியும் அவன் கொண்டு வந்திருக்கும் படையைப் பற்றியும் எடுத்துச் சொன்னார்கள். பூமண்டலத்தில் பல்வேறு வனங்கள், மலைகள், நதிப் பிரதேசங்களிலிருந்து வந்து கூடியிருக்கும் அந்தப் பெரிய வானர, கரடிச் சேனையின் பலத்தை எடுத்துச் சொன்னார்கள். அவர்களுக்குள்ள தேகபலமும், வீரியமும், அவர்கள் ராமனிடத்தில் வைத்திருக்கும் அசையாத பக்தியும், அவர்கள் அனைவருக்குள்ளும் இருக்கும் ஒற்றுமையும், ராக்ஷஸர்களை வதம் செய்யவேண்டும் என்கிற ஆத்திரமும் எல்லாம் மந்திரி சாரணனால் சொல்லப்பட்டது. வானர சேனைக்குள் புகுந்தபோது சாரணன் கூடச் சென்ற மற்றொரு மந்திரியும் ராவணனுக்கு வானர வீரர்களைப் பற்றி விசேஷமாகச் சொன்னான்.

"அதோ பார்! அவன்தான் ராமச்சந்திரன்! அதோ பார்! அவன் பக்கத்தில் லக்ஷ்மணன். நீதி சாஸ்திரம், யுத்த சாஸ்திரம் அனைத்தும் அறிந்தவன். இவன் ராமனுக்கு நட மாடும் இரண்டாவது உயிரும் வலது கையுமானவன். அதோ பார்! அவன் பக்கத்தில் வாலியினுடைய மாலையை அணிந்து கொண்டிருக்கிற சுக்ரீவன்; வாலிக்குச் சமவீரன், அதோ பார்! அவன் பக்கத்தில் உங்கள் தம்பி விபீஷணன், இவர்களை வெல்வது சுலபமல்ல. வெற்றிக்கு வேண்டிய முயற்சிகளை யெல்லாம் யோசித்துச் சரியாகச் செய்வீராக!" என்றான்.

பகைவனுடைய பலத்தைப் புகழ்ந்து பேசிய மந்திரி களின் பேரில் ராவணனுக்கு மேலும் மேலும் கோபம் பொங் கிற்று. மூர்க்கனுடைய குணம் இது. உண்மையைச் சொல்லும் தூதர்கள் பேரிலும், க்ஷேமத்தைக் கோரிப் பேசும் மந்திரி களின் பேரிலும், புத்திசாலியான அரசன் கோபிக்க மாட் டான். ஆனால், ராவணனுடைய மதி இப்போது கலங்கிப் போயிருந்தது! அவனுக்கு இப்போது உண்மையும் பிடிக்க வில்லை. ஹிதமான உபதேசமும் பிடிக்கவில்லை.

ஏதோ யோசனை செய்தான். தன்னுடைய மனப் போக்கையே வைத்து ராமனுடைய குணத்தை அளந்தான். இதுதானே மக்கள் இயற்கை! சீதை தனக்கு எப்படியாவது உடன்பட்டுவிட்டால், ராமன் அவமானமடைந்து மன முடைந்து திரும்பிவிடுவான் என்பது அவன் எண்ணம். ஆனபடியால் இப்போது இன்னொரு முயற்சி செய்து அவளை எப்படியாவது உடன்படச் செய்யவேண்டும் என்று, தான் அறிந்த யுக்தி முறையில் தீர்மானித்தான். இதற்காக ஒரு மாயக்கார அரக்கனுடைய உதவியை நாடினான்.

"மின்னல் நாயகனே! உனக்கு எல்லா மாய வித்தையும் தெரியுமல்லவா! நான் உனக்குச் சொல்லி அனுப்புவேன். அப்போது நீ வந்து சீதையின் முன் அவளுடைய புருஷன் ராமனுடைய தலையைப் போல் ஒன்று செய்து, அதைக்

கொண்டு வந்து வைக்க வேண்டும்"என்று சொன்னான். அந்த மாய வித்தைக்காரனும் அப்படியே செய்வதாக ஒப்புக் கொண்டு தயாரானான்.

அதன்மேல் ராவணன் அசோகவனம் சென்று மறு படியும் ஜானகியைக் கண்டு பலவாறு சொல்லி ஏமாற்றி "உன் புருஷனும் அவன் சேனையும் ஹதம் செய்யப்பட்டார்கள். என் வீரர்கள் கடல் தாண்டிச் சென்று, ராமனும் அவன் வானர சேனையும் களைப்படைந்து தூங்கிக் கொண்டிருந்த சமயத்தில், திடீர் என்று தாக்கி ராமன் உள்பட எல்லோரையும் கொன்று விட்டார்கள். சேனை சிதறி ஓடிப் போயிற்று. உன் புருஷன் ராமனுடைய தலையை என்னுடைய வீரன் எனக்குக் காண்பிக்கக் கொண்டு வந்திருக்கிறான். இன்னும் ஏன் பிடிவாதம் செய்கிறாய்? என் அந்தப் புரத்துக்குத் தலைவியாகிச் சுகமாக இருப்பாயாக. மூர்க்கம் செய்யாதே, லங்கைக்கு அரசி ஆவாய், நான் சொல்வதைக் கேள்!" என்று சொல்லி, ஒரு அரக்கியை அழைத்து "போய் வித்யுபுஜ்ஜிவனை வரச்சொல்" என்றான்.

அந்த மந்திரவாதி அரக்கனும், ராமனுடைய தலையைப் போலவே இருந்த ஒரு மாயத் தலையைச் சீதை யின் முன்னிலையில் வைத்தான். சீதை பார்த்துத் திடுக்கிட் டாள். தன் கதி இப்படியாகிவிட்டதே என்று பிரலாபிக் கலானாள்.

இதற்கிடையில் ராமனுடைய சேனை லங்கையை நெருங்கிவிட்டபடியால் மந்திரிகளும் சேனாதிபதிகளும் அவசரமாக ராவணனைப் பார்க்க அனுமதி கேட்டுச் சொல்லி யனுப்பியிருந்தார்கள். ராவணன் உடனே சீதையை விட்டு விட்டு சபைக்கு போக வேண்டியதாயிற்று. ராவணனுடைய இருப்பு, அந்த மாயத்தில் இன்றியமையாத ஓர் அம்சம், அவன் இடம்விட்டுப் போனதும் மாயா உருவம் தானாகவே கரைந்து போயிற்று! ராமனுடைய தலை என்று காட்டப் பட்ட பொய்த்தலை புகைபோல் மறைந்து போய்விட்டது.

விபீஷணனுடைய மனைவியான ஸரமை, சீதைக்குத் தோழியாக இருந்து வந்தாள். ராவணன் செய்த மாய வித்தையைச் சீதைக்கு விளக்கி ஆறுதல் தந்தாள்.

"ராமனை யாரும் கொல்லவில்லை. அவனும் அவனுடைய பெரும் படையினரும் லங்கை வந்து சேர்ந்து விட்டனர். கடலைத் தாண்ட அற்புதமான ஒரு சேது கட்டி விட்டு, அதன் மேல் மற்றொரு கடலைப் போன்ற பெரும் வானர சேனை வந்து இறங்கிவிட்டது. ராக்ஷஸர்கள் எல்லோரும் திகிலடைந்திருக்கிறார்கள். ராவணன் உன்னை மாய வித்தையால் ஏமாற்றப் பார்க்கிறான்" என்று சீதைக்கு உண்மையைச் சொன்னாள்.

ஸரமை, சீதைக்கு இன்னும் சில விஷயங்களைச் சொன்னாள்.

"ராவணனுடைய மந்திரிகள் பலர் அவனுடைய க்ஷேமத்தை விரும்பி, 'சீதையை ராமனிடம் ஒப்புவித்துவிடு. அழியாமல் தப்பலாம்' என்று சொன்னார்கள். எவ்வளவு சொல்லியும் அவன் கேட்கவில்லை. 'யுத்தத்திலாவது உயிரை விடுவேன். ராமனிடம் நான் வணங்கி நிற்க மாட்டேன்' என்று ராவணன் தீர்மானமாகச் சொல்லிவிட்டான். அம்மையே! உனக்கு ஓர் அபாயமுமில்லை. ராமன் வெல்வான். இந்தக் கொடியவன் மாய்வான்" என்றாள்.

இப்படி ஸரமை சொன்ன சமயத்தில் திடீர் என்று வானர சேனையின் பேரிகைகளும் சங்கங்களும் ஒலிக்கும் சத்தம் கிளம்பிற்று.

ராவணன் அழிந்தான் என்று சீதை நிச்சயம் செய்து மகிழ்ந்தாள். லங்கையில் அதே சமயம் அந்தப் பெருஞ்சத் தத்தைக் கேட்ட அரக்கர்கள் பயத்தால் நடுங்கினார்கள்.

## 86. நாக பாணங்கள்

கடல் போன்ற பெரும் வானர சேனையைக் கொண்டு ராமன், லங்கையை நான்கு பங்கங்களிலும் சூழ்ந்து

முற்றுகையிட்டிருப்பதை ராவணனுக்கு அவனுடைய ஆட்கள் சொன்னார்கள். அவனுக்குக் கோபம் மேலிட்டு மாளிகை ஏறிப் பார்த்தான். அவர்கள் சொன்ன வண்ணம் நான்கு பக்கங்களிலும் மரங்களையும் கற்பாறைகளையும் எடுத்துக் கொண்டு சூழ்ந்து நிற்கும் வானரர்களைப் பார்த்தான். இவர்களை எப்படி அழிப்பது என்று ஆலோசித்தான்.

ராமனும் அச்சமயம் ராக்ஷஸப் படையால் காக்கப்பட்ட லங்கா நகரத்தைப் பார்த்தான். "இந்த மதிலுக்குள்ளே அல்லவா சீதை சிறைப்பட்டு வாடி வருகிறாள்!" என்று எண்ணிக் கோபம் மேலிட்டு வானரர் படைக்கு உத்தரவிட்டான். "கோட்டையைத் தாக்குங்கள்! அரக்கர்களைக் கொல்லுங்கள்! தயங்க வேண்டாம்!" என்றான். அவர்களும் உற்சாகமாக போரிட ஆரம்பித்தார்கள்.

"வானர ராஜனுக்கு ஜெயமங்களம்! ராம லக்ஷ்மணர்களுக்கு வெற்றி! வீழ்க அரக்கர்கள்!" என்று பெருங்கோஷம் செய்து, சிலர் மலைகளை உடைத்து, பெரும் பெரும் பாறைகளை எடுத்து வீசி மதிலைத் தாக்கினார்கள். சிலர் பெரிய மரங்களை வேரோடு பிடுங்கி எடுத்து அரக்கர்களைத் தாக்கினார்கள். மதிலையும் மதில் வாயிலையும் தாக்கித் தகர்க்க ஆரம்பித்தார்கள்.

இதைக் கண்டு ராவணன் ஒரு பெரும் படையை ஏவினான். "உடனே வெளியில் சென்று இந்த வானரர்களை வதம் செய்யுங்கள்" என்று அவன் உத்தரவிட்டதும், பேரிகை ஓசையும், சங்கநாதங்களும், ராக்ஷச வீரர்களுடைய கோஷங்களும் சமுத்திரத்தைப் போலக் கிளம்பின. அரக்கப் படையாளர்கள் சகல ஆயுதங்களுடன் நகரத்திலிருந்து வெளியே சென்று, வானரர்களுடன் கோர யுத்தம் நடத்தினார்கள்.

வானரர்களும் தங்கள் ஆயுதங்களாகிய பாறாங் கற்களும் மரங்களும் நகங்களும் முஷ்டிகளும் உபயோகித்து ராக்ஷசர்களை எதிர்த்தார்கள். இரு பக்கத்திலும் ஆயிரக்

கணக்கான பிரேதங்கள் விழுந்தன. பூமி முழுவதும் ரத்தச் சேறும், வெட்டப்பட்ட அவயவங்களும். மாமிசத் துண்டங் களுமாகக் கோர யுத்தம் நடந்தது.

இதைத் தவிர வீரர்களோடு வீரர்கள் கை கலந்து துவந்த யுத்தங்களும் நடைபெற்றன. அங்கதனும் இந்திரஜித் தும், ருத்திரனையும் யமனையும் போல் தனியே சண்டையிட் டார்கள். ப்ரஜங்கன் என்ற ராக்ஷசனுக்கும் விபீஷணனுடைய மந்திரியான சம்பாதிக்கும் யுத்தம் நடந்தது. ஜம்புமாலியும் ஹனுமானும் ஒருவரையொருவர் எதிர்த்தார்கள். அப்படியே நீலனும் திகும்பனும், லக்ஷ்மணனும் விருபாக்ஷனும், இன்னும் பலர் இம்மாதிரித் தனிச் சண்டை செய்தார்கள்.

இந்திரஜித்தினுடைய தேரும் குதிரைகளும் நாச மாயின. அங்கதனும் இந்திரஜித்தின் கதாயுதத்தால் அடிபட் டான். ஜம்புமாலி ஹனுமானை சக்தியால் அடித்தான். ஹனு மான் ஜம்புமாலியின் ரதத்தைப் பொடியாக்கினான். அரக்கர் கள் அம்புகள் எய்து ராமனை எதிர்த்தார்கள். ராமனும் பல அரக்கர்களைத் தன் பாணங்களால் கொன்றான்.

வித்யுன்மாலி, சுஷேணன் பேரில் பாணங்கள் விட்டான். சுஷேணன் ஒரு பெரிய பாறையை எடுத்து அரக்கனுடைய ரதத்தைத் தாக்கினான். வித்யுன்மாலி கதாயுதமெடுத்துக் கொண்டு பூமியில் குதித்து சுஷேணனைத் தாக்கினான். சுஷேணன் ஒரு பெரிய கல்லை எடுத்து அரக்கனையடித்து நசுக்கிக் கொன்றான். இப்படியே இன்னும் பல வீரர்கள் யுத்தம் செய்து பலர் மாண்டார்கள். பகல் முழுவதும் சண்டை நடந்தது. ராத்திரியாயினும் நிறுத்தாமல், அரக்கர்கள் போர் நடத்தினார்கள்.

ராத்திரி யுத்தம் வெகு கோரமாக நடந்தது. ரத்தம் ஆறாகப் பெருகிற்று. இரு பக்கத்திலும் பலர் மாண்டனர்.

இந்திரஜித்தை அங்கதன் தாக்கினான். அரக்கனுடைய குதிரைகளையும் சாரதியையும் கொன்று தேரையும் பொடி

யாக்கினான். வானரர்கள் அங்கதனுடைய சாமர்த்தியத்தைக் கண்டு உற்சாகமடைந்து ஜெயகோஷம் செய்தார்கள். வானர யுவராஜனுடைய தைரியத்தையும் பலத்தையும் சாமர்த்தியத்தையும் பார்த்துச் சேனையிலிருந்த வீரர்கள் அனைவரும் புகழ்ந்தார்கள். தேரை இழந்த இந்திரஜித்து கோபாவேசமாகி, தன் மாய வித்தைகளை உபயோகிக்க ஆரம்பித்தான்.

மந்திரத்தினால் யாருக்கும் காணப்படாமல் மறைந்து நின்று யுத்தம் செய்தான். ராம லட்சுமணர்கள் மேல் பலவித பாணங்களைப் பிரயோகித்து அவர்களை உபத்திரவப் படுத்தினான். பல வீரர்கள் அவன் இருக்குமிடத்தைத் தேடித் தேடிப் பார்த்தார்கள். மாய மந்திரத்தின் சக்தியால் மறைந்து நின்ற ராவண குமாரனை அவர்களால் காணமுடியவில்லை. அவன் சரமாரியாக அம்பெய்து கொண்டே இருந்தான்.

பிறகு ராம லட்சுமணர்கள் மேல் நாக பாணங்களை எய்தான். அதனால் அவர்கள் கட்டுண்டு அசைய முடியாமல் யுத்த பூமியில் வீழ்ந்தார்கள். ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டே இன்னது செய்வது என்று தோன்றாமல் திகைத்தார்கள். ராமனுடைய நிலையைப் பார்த்து லட்சுமணன் மிகவும் துக்கப்பட்டான். வானரர்கள் சூழ்ந்து கொண்டு பிரலாபிக்கலானார்கள்.

இந்திரஜித் ராட்சச சேனையைப் பாராட்டிவிட்டு, லங்கா நகரம் சென்றான். வெற்றிக் கொண்டாட்டத்தோடு தகப்பனிடம் போய், "ராம லட்சுமணர்களின் காரியம் முடிந்தது. யுத்த பூமியில் பிரக்ஞையற்றுக் கிடக்கிறார்கள். என்னால் வதம் செய்யப்பட்டார்கள்" என்று சொன்னான். ராவணன் மகிழ்ச்சிப் பரவசமானான். குமாரனைக் கட்டியணைத்துக் கொண்டு 'வீரனே!' என்று புகழ்ந்தான்.

ராஜகுமாரர்கள், வானர வீரர்கள் உள்பட எல்லோரும் காயமடைந்து, தைரியமிழந்து விழுந்து கிடப்பதைப் பார்த்துத் தோற்றோம் என்று நிச்சயம் செய்துகொண்டு,

இன்னது செய்வது என்று தெரியாமல் சுக்ரீவன் திகைத்து நிற்பதை விபீஷணன் பார்த்தான். "இது தகாது; ராம லட்சுமணர்களின் முகங்களைப் பாருங்கள். பொலிவு குறைய வில்லை. பயப்படாதீர்கள். சீக்கிரத்தில் இந்த மயக்கம் தீர்ந்து மறுபடியும் வெற்றியுடன் யுத்தம் செய்ய முனைவார்கள்" என்று சொல்லி வானர ராஜனைத் தைரியப்படுத்தினான். வானரர்கள் பயந்து போகாமலிருப்பதற்கு வேண்டிய காரியங் களைச் செய்யத் தொடங்கினார்கள். சிதறிப் போயிருந்த சேனையை மறுபடியும் ஒழுங்குபடுத்தி, ஜாக்கிரதையாக அணிவகுத்துக் காத்து நின்றார்கள்.

"இந்திரஜித்தால் ராம லட்சுமணர்கள் வதம் செய்யப் பட்டார்கள் என்று, ராவணன் லங்கா நகரத்தில் விளம்பரப் படுத்தினான். ராட்சசிகளை யழைத்து, "உடனே போய்ச் சீதைக்குச் சொல்லுங்கள், 'ராமன் இறந்தான். இரு ராஜ குமாரர்களும் யுத்த பூமியில் மாண்டு கிடக்கிறார்கள். அவர் களுடைய வானரசேனை அழிக்கப்பட்டது' என்று சொல்லுங் கள். மாய புஷ்பக விமானத்தில் அவளை ஏற்றிக் கொண்டு நீங்களும் போங்கள். போய் யுத்தத்தின் நிலையைச் சீதைக்குக் காட்டுங்கள். அந்தப் பிடிவாதக்காரிக்கு இப்போது விளங்கும். என்னைத் தவிர வேறு ஆதரவு இல்லையென்று தெரிந்து கொண்டு என்னைச் சேருவாள்" என்றான்.

அந்த ராட்சசிகள் அப்படியே செய்தார்கள். ஜானகி யுத்த பூமியை ஆகாயத்தில் விமானத்திலிருந்து பார்த்தாள். பார்த்துத் துக்கக் கடலில் மூழ்கினாள். ராமலட்சுமணர்கள் தரையில் அசைவற்றுக் கிடப்பதையும் அவர்கள் அருகில் அவர்களுடைய ஆயுதங்கள் பிடிப்பாரின்றிச் சிதறிக் கிடப்பதையும் பார்த்தாள். இனித் தனக்கு ஒரு கதியுமில்லை என்று எண்ணிப் பிரலாபித்தாள். "வருங்கால விஷயமறிந் தவர்கள் என்னைப் பற்றிச் சொல்லியதெல்லாம் பொய்யா யிற்றே. புருஷன் மாண்டு போவான். நான் விதவையாவேன்

என்று அவர்கள் சொல்லவில்லையே! மக்களைப் பெறுவேன். பட்ட மகிஷியாயிருப்பேன் என்றெல்லாம் அவர்கள் சொன்னது முற்றிலும் பொய்யாயிற்றே! ஐயோ கௌசல்யே, குமாரன் வருவான் என்று எதிர்பார்த்த வண்ணமிருக்கும் அவளுடைய துக்கத்தை யார் தீர்ப்பார்கள்? கடலைத் தாண்டி வந்து ஒரு குளத்தில் மூழ்கி உயிர் நீத்ததுபோல் ஆயிற்றே. உங்களுடைய திவ்விய அஸ்திரங்கள் எல்லாம் என்னவாயிற்று? எந்த எதிரியும் உங்களை வெல்ல முடியாது என்றார்களே! எல்லாம் பொய்யாயிற்றே!" என்று பிரலாபித்தாள். அப்போது சீதைக்குத் துணையும் காவலுமாக இருந்த ராட்சசிகளில் ஒருத்தியான திரிசடை சீதைக்குத் தைரியம் சொன்னாள். "பிரியமான சீதையே! நீ ஒன்றும் துக்கபட வேண்டாம். உன் புருஷனாவது லட்சுமணனாவது இறக்கவில்லை. முகலட்சணங்களைப் பார். இறந்தவர்களின் முகம் வேறு விதமாக இருக்கும். அவர்கள் மாயா அஸ்திரத்தால் கொஞ்ச நேரம் கட்டுண்டிருக்கிறார்கள். சேனை ஒழுங்கைப் பார். நீ தைரியமாக இருக்கவேண்டும். இந்தக் காட்சியைக் கண்டு பயப்பட வேண்டாம்." என்றாள். அமிருதம் போன்ற இந்த வார்த்தையைக் கேட்டுச் சீதை மறுபடியும் தைரியம் அடைந்தாள். பிறகு விமானம் லங்கைக்குத் திரும்பிச் சென்றது. சீதை மறுபடியும் அசோக வனத்தில் விடப்பட்டாள். அவளும் ராக்ஷசிகள் மத்தியில் துயரத்தில் மூழ்கிக் கிடந்தாள்.

* * *

நாகபாசத்தின் சக்தி தளர்ந்தது. ராமன் கண்களைத் திறந்து எழுந்தான். பலமான காயங்கள் பட்டிருந்தாலும், தன் தேக பலத்தாலும் ஆன்ம சக்தியாலும் சுவாதீனமடைந்து எழுந்தான். எழுந்தாலும் பக்கத்தில் வீழ்ந்து கிடந்த தம்பியைப் பார்த்து, "ஐயோ" என்று அலறினான். "நாம் இனி என்ன வெற்றியடைந்து என்ன பயன்? உன்னை ஏன்

என்கூடக் காட்டுக்கு அழைத்து வந்து கொன்றேன்? நீயின்றி ஊருக்குத் திரும்பி, நான் எப்படிப் போக முடியும்? நான் துக்கப்படும்போது எல்லாம் சமாதானமும் தைரியமும் சொல்வாயே! இப்போது ஒன்றும் பேசாமல் மௌனமாக இருக்கிறாயே! நான் உன்னை இழந்து எப்படி உயிர் வைத்திருக்க முடியும்? உன்னைப் போன்ற ஒரு வீரன் உண்டா? யாரையும் சம்பாதிக்கலாம்; உன்னைப் போன்ற ஒருவனை நான் எங்கே கண்டு பெறமுடியும்? நூற்றுக் கணக்கில் கைகளைப் பெற்ற கார்த்தவீரியார்ஜுனனைப் போல் இரண்டு கைகளைக் கொண்டே நீ சரமாரி பெய்து அரக்கர்களைக் கொன்றாயே! எப்படித்தான் நீ மாண்டாய்? என்கூட அரண்ய வாசத்துக்கு வந்தாய். இப்போது உன்கூட நான் யமாலயம் செல்கிறேன். தோற்றேன். விபீஷணனுக்கு நான் கொடுத்த வாக்குறுதி பொய்யாயிற்று. வானர ராஜனே! வானரவீரர்கள் அனைவரையும் கூட்டிக் கொண்டு கிஷ்கிந்தைக்குச் செல்லுங்கள். எனக்காக நீங்கள் உழைத்தீர்கள். மித்திர தருமத்தைக் குறைவின்றிக் காத்தீர்கள். உங்களுக்கு நான் நன்றி செலுத்துகிறேன். இனி நீங்கள் மாய்வதில் பிரயோஜனமில்லை. உங்கள் நகரத்துக்குத் திரும்பிப் போங்கள். நான் இங்கே உயிரை விடுவேன்!" என்று ராமன் துயரம் தாங்காமல் தைரியம் இழந்து பிரலாபித்தான்.

அச்சமயம் விபீஷணன் கதாபாணியாக வந்து சேர்ந்தான். கன்னங்கரேலென்று பிரகாசித்த விபீஷணனுடைய பெரும் வடிவத்தைக் கண்டு வானரர்கள் இந்திரஜித்தே வந்து விட்டான் என்று பயந்து சிதறிப்போக ஆரம்பித்தார்கள். பிறகு விபீஷணன் என்று கண்டுகொண்டு அமைதியடைந்தார்கள்.

திகிலடைந்த வானரர்கள் விபீஷணனைக் கண்டதும் இவன் இந்திரஜித்தே என்று எண்ணி விழுந்து ஓடியபோது "இதென்ன வானரர்கள் இப்படிச் சிதறி ஓடுகிறார்கள்? காரணம் என்ன?" என்று சுக்ரீவன் கேட்டான்.

"ராம லட்சுமணர்கள் காயப்பட்டு வீழ்ந்திருப்பது நீ அறியாயா?" என்றான் அங்கதன்.

"அப்படியல்ல, இவர்கள் கலைந்து ஓடுவதைப் பார். வேறு காரணம் இருக்க வேண்டும்" என்றான் சுக்ரீவன்.

பிறகு விபீஷணனைக் கண்டு யார் என்று அறிந்து கொள்ளாமல், இந்திரஜித்தின் மாயையால் ஹிம்சிக்கப் பட்ட வானரர்கள் இப்படிப் பயந்து ஓடுகிறார்கள் என்பதை அறிந்தான்.

ஜாம்பவான் மூலம் வானரர்களுக்கு விஷயம் தெரியப் படுத்தி, அவர்களை ஓடாமல் தடுத்து நிறுத்தி, அமைதியை ஏற்படுத்தினான்.

விபீஷணன் ராம லட்சுமணர்களைப் பார்த்தான். அவர்கள் காயம்பட்டு உடல் நிறைய அம்புகள் பாய்ந்து அசையாமல் கிடப்பதைப் பார்த்து அழ ஆரம்பித்தான்.

"காரியம் எல்லாம் கெட்டுவிட்டதே, இனி என்ன செய்வது?" என்று விபீஷணன் பிரலாபிப்பதைப் பார்த்து, சுக்ரீவன் அவனுக்குத் தைரியம் சொன்னான். தன் மாமன் சுஷேணனைப் பார்த்து, "நீர் ராம லஷ்மணர்களை எடுத்துக்கொண்டு கிஷ்கிந்தைக்குப் போவீர். நான் இந்த ராவணனைத் தொலைத்துவிட்டு, சீதையை மீட்டுக் கொண்டு வருவேன்" என்றான்.

சுஷேணன், "இந்த ராஜகுமாரர்களின் காயங்களைச் சொஸ்தப்படுத்தும் மருந்துகள் உண்டு. அந்த மூலிகைகள் இருக்கும் இடம் நம்மில் சிலருக்குத் தெரியும். இதோ இருக்கிறாரே ஹனுமான், இவரை அனுப்பினால், அந்த மருந்துகளைக் கொண்டு வருவார்" என்றான்.

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருந்த சமயம் காற்றும் கடலும் கலங்கிற்று. பார்க்கையில் மிகப் பெரிய பறவை-கருடன் வருவதைக் கண்டார்கள்.

கருடன் வந்ததும், ராம லக்ஷ்மணர்கள் உடல்களில் பாய்ந்திருந்த பாணங்கள் அப்படியே மாயமாய் ஓடி மறைந்தன. அவை யாவும் விஷ நாகங்கள். இந்திரஜித்தின் மந்திர பலத்தால் அம்புகளாக வடிவம் கொண்டு, அவன் மாயையால் ராம லட்சுமணர்கள் உடலில் பாய்ந்திருந்தன. தங்களுடைய யமனாகிய கருடன் வந்ததும், ராம லட்சுமணர் களின் தேகங்களை விட்டு ஓடிவிட்டன.

பிறகு கருடன் ராமலட்சுமணர்களைத் தடவிக் கொடுத்து அவர்களுக்குச் சகல சக்தியும் மறுபடியும் உண்டாக்கி விட்டான். காயங்கள் எல்லாம் உடனே போய், முன்னைவிடப் பலமும் தேஜஸும் பெற்று எழுந்தார்கள்.

"எங்களுக்கு இந்த உபகாரம் செய்த நீ யார்?" என்று ராமன் கேட்டதற்குக் கருடன், "நான் உனக்குப் பரம சிநேகிதன், தோழன். உனக்கு மங்களம். நான் போய் வருகிறேன். யுத்தத்தில் வெற்றி பெறுவாய். பிறகு நான் யார் என்பதைப் பேசிக் கொள்ளலாம்" என்று ஹரி வாஹனனாகிய கருடன் சொல்லிச் சென்று விட்டான்.

ராம லட்சுமணர்கள் மறுபடியும் பூரண பலத்துடன் நின்றதும், வானரர்கள் மிக மகிழ்ச்சியும் உற்சாகமும் அடைந்து, ராவணனுடைய கோட்டையைத் தாக்கினார்கள்.

## 87. "இன்று போய் நாளை வா"

அரண்மனைக்குள்ளிருந்த ராவணன் வானரர்களுடைய கோஷங்களையும் ஆரவாரத்தையும் கேட்டு ஆச்சர்யப் பட்டான். பக்கத்திலிருந்த அரக்கர்களுக்குச் சொன்னான்; "இதுவென்ன வியப்பாக இருக்கிறது! என்ன காரணம் இந்த வானரர்கள் இப்படிச் சந்தோஷப்படுவதற்கு? ராம லட்சு மணர்கள் காயப்பட்டு, பிரக்ஞையற்றுக் கிடக்க இவர்கள் கவலைப்பட்டுக் கலவரப்பட வேண்டிய சமயத்தில், இப்படி உற்சாகமாகக் கூச்சலிடுவதன் காரணம் என்ன? ஏதோ

விசேஷம் நடந்திருக்கிறது என்பது நிச்சயம். பார்த்து வாருங்கள்" என்றான்.

சில ராக்ஷசர்கள் மதிலின்மேல் ஏறிப் பார்த்து ராவணனிடம் திரும்பி வந்து பயந்து சொன்னார்கள்; "அரசனே! சுக்ரீவன் தலைமையில் வானர சேனை மிக உற்சாகமாகக் கோட்டையைத் தாக்குகிறது. ராம லட்சுமணர்கள் உயிருடன் இருக்கிறார்கள். கட்டப்பட்ட யானைகள் கயிற்றை அறுத்துக்கொண்டு வெளியேறிய மாதிரி ராம லட்சுமணர்கள் தங்களைக் கட்டிய நாகபாசங்களை யெல்லாம் அறுத்து விட்டுச் சேனையுடன் வந்திருக்கிறார்கள். இளஞ் சிங்கங்களைப்போல் திரிகிறார்கள். இந்திரஜித்து அவர்களைக் கட்டிய பாசங்கள் வீணாயின" என்றார்கள்.

ராவணனுடைய முகம் வாடிற்று. கவலை கொண்டான். "இதுவரையில் எவனும் இந்த பாணங்களினின்றும் தப்பியது கிடையாது. நீங்கள் சொல்லுவது வியப்பாக இருக்கிறது. இந்தப் பாணங்களே வீணாயின என்றால் ஆபத்துதான்" என்றான்.

பிறகு ரோஷம் மேலிட்டு "ஏய் தூம்ராக்ஷனே!... நீ இருக்க நான் ஏன் கவலைப்படவேண்டும். வேண்டிய ஆட்களைக் கூட்டிக் கொண்டு உடனே போய் அவர்களை வதம் செய்துவிட்டுத் திரும்புவாய்" என்றான்.

தூம்ராக்ஷன் மகிழ்ச்சியடைந்தான். தனக்கு இந்த கவுரவம் அரசன் தந்தானே என்று பெருமைப்பட்டுச் சேனையைக் கூட்டிக் கொண்டு புறப்பட்டான். கோட்டைக்கு வெளியே சென்று வானரர்களுடன் யுத்தம் செய்தான்.

ஹனுமான் தலைமையில், மேற்கு வாயிலைத் தாக்கிக் கொண்டிருந்த வானரர்களை எதிர்த்தான். அவ்விடம் நடந்த பெரும் யுத்தத்தில் இரு பக்கத்திலும் ஏராளமான உயிர்ச் சேதம் நேர்ந்தது. முடிவில் தூம்ராக்ஷன் மாருதியால் கொல்லப்பட்டான். அரக்கர்களில் சிதறியோடிக் கோட்டைக்

குள் புகுந்து தப்பியவர்கள் தவிரப் பெருந் தொகையினர் மாண்டார்கள்.

இந்தத் தோல்வியை அறிந்து இராவணனுக்கு அடங் காக் கோபம் மேலிட்டது. வாய் பதற, வஜ்ர தம்ஷ்ட்ரனை நோக்கி, "வீர சிகாமணியே, உடனே போ!, இனித் தாமதம் செய்வதற்கில்லை-இந்த துஷ்டர்களை நிர்மூலம் செய்து விட்டு மறுவேலை பார்ப்பாய்" என்று உத்தரவிட்டான்.

வஜ்ரதம்ஷ்ட்ரனும் அரசனைப் பிரதக்ஷணம் செய்து நமஸ்கரித்து, பெரும் சேனையைக் கூட்டிக் கொண்டு தெற்குக் கோட்டை வாசல் வழியாகப் புறப்பட்டான். அங்கே அங்கதனை எதிர்த்தான்.

வஜ்ரதம்ஷ்ட்ரனுடைய தலைமையில் ராக்ஷசர்கள் கோரமான யுத்தம் செய்தார்கள். எண்ணற்ற வானரர்கள் மாண்டனர். ஆயினும் வானர சேனை பின்வாங்கவில்லை. பாறைகளையும் மரங்களையும் பிடுங்கியெடுத்து வீசி எண்ணற்ற அரக்கர்களைக் கொன்றார்கள். இரு தரப்பிலும் தீவிர முறையில் யுத்தம் நடந்தது. அங்கதனும் அரக்கத் தலைவனும் ஒருவரை ஒருவர் தாக்கி, நெடுநேரம் சண்டையிட்டனர். முடிவில் வஜ்ரதம்ஷ்ட்ரன் கொல்லப் பட்டான்; அரக்கர் சேனை சிதறி ஓடிற்று. அங்கதனைச் சூழ்ந்து கொண்டு வானரர்கள் வீர கர்ஜனை செய்தார்கள்.

* * *

ராவணன் பிரஹஸ்தனைப் பார்த்து, "யுத்தத்தில் நிபுணனாகிய அகம்பனனை, பயங்கர ராக்ஷசர்களைப் பொறுக்கி அழைத்துச் சென்று, இந்த வானரப் படையையும், ராமனையும் சுக்ரீவனையும் வதம் செய்துவரச் சொல்வாய். அகம்பனனுடைய வீரமும் சாமர்த்தியமும் வீண்போகாது" என்றான்.

பிரஹஸ்தன் ராவணனுடைய உத்தரவுப்படி அகம் பனன் தலைமையில் சேனையை அனுப்பினான். அகம்பனன்

தன் பெயருக்குத் தகுந்தபடியே அசைக்க முடியாத யுத்த சாமர்த்தியம் பெற்றவன். ஆயுதங்கள் எடுத்துப் பெரும்படையுடன் சென்றான். கெட்ட நிமித்தங்கள் தோன்றின. இதை அவனாவது அவன் படையாவது கொஞ்சம்கூட லட்சியம் செய்யவில்லை. அரக்கர்கள் செய்த சிம்மநாதம் கடலைக் கலக்கிற்று.

பெரும்போர் நடந்தது. ரத்தவெள்ளம் ஓடிற்று. ஆகாயம் அளாவச் செந்தூள் கிளம்பிற்று. இருள் மூடிக் கொண்டது. இரு கட்சியிலும் கணக்கற்றவர்கள் மாண்டார்கள். வானர வீரர்களாகிய குமுதன், நளன், மயிந்தன், துவிவிதன் இவர்கள் அகம்பனனை எதிர்த்தார்கள். அகம்பனனும் மகாவீரத்துடன் அவர்களை எதிர்த்தான்.

வானர வீரர்கள் பலமாகத் தாக்கப்பட்டு ஓட ஆரம்பித்தார்கள். அப்போது அனுமான் வந்து சேர்ந்தான். அகம்பனன் சரமாரி பொழிந்தான். அனுமான் அதை லட்சியம் செய்யாமல் ஒரு பெரிய பாறையை எடுத்துக் கரகரவென்று சுழற்றி அகம்பனன் மேல் விட்டெறிந்தான். அரக்கன் தன் பாணங்களால் அதைத் தடுத்துப் பொடி செய்துவிட்டான். ஹனுமான் தன் தேகத்தை வளர்த்துக் கொண்டு சூரியனைப் போல் கண்கூசும்படியாகப் பிரகாசித்தான். ஒரு பெரிய மரத்தைப் பிடுங்கி வீசி எறிந்து, அரக்கனைத் தாக்கி அவனைக் கொன்று விட்டான். ராக்ஷசர்கள் பூகம்பத்தில் மரங்கள் அசைவன போல் நடுங்கி ஓடினார்கள். ஓடும்போது பின்னால் பார்த்துக்கொண்டே ஓடினார்கள். அரக்கர்களில் மாண்டவர்கள் போக எஞ்சியவர்கள் கோட்டைக்குள் புகுந்து கொண்டு தப்பினார்கள். ஹனுமானை வானரர்கள் எல்லோரும் கொண்டாடி ஆரவாரித்தார்கள்.

* * *

அகம்பனன் மாண்டதையறிந்து ராவணன் முகம் வாடிற்று. கோபாவேசமாக யோசனை பண்ணினான். மறுபடியும் நகரத்தின் காப்பு நிலையைச் சுற்றிப் பார்த்துவிட்டுத் திருப்தியடைந்து திரும்பினான். சேனாபதி பிரஹஸ்தனோடு கலந்து பேசினான்:

"இந்த வானர முற்றுகையை ஒழித்துக் கட்ட வேண்டும். சேனையுடன் வெளிச் சென்று பலமான யுத்தம் செய்து இவர்களுடைய தலைவர்களை வதம் செய்தால்தான் இது முடியும். நான், கும்பகர்ணன், நீ, இந்திரஜித்து, நிகும்பன் இந்த ஐவர்களுள் ஒருவர் இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டு, சேனையுடன் கோட்டையை விட்டுப் புறம் சென்று யுத்தம் செய்யவேண்டும். இந்த வானரர்களைக் கண்டு நாம் இவ்வளவு பயப்படுவதா? நம்முடைய ராக்ஷசர் களின் கர்ஜனையைக் கேட்டாலே இந்தப் பிராணிகள் சிதறியோடும். யுத்த முறையில் அறிவும் பயிற்சியுமில்லாத இவர்களை ஓட்டுவது கஷ்டமல்ல."

பிரஹஸ்தன் இதைக் கேட்டு வினயமாகப் பேசலானான்:

"நாம் முன்பு எதிர்பார்த்தபடியே எல்லாம் நேர்ந்திருக் கின்றது. சீதையைத் திருப்பித் தந்துவிடுவதே சரியான முறை, க்ஷேமத்துக்கு வழி, என்று நான் முன்பே சொன்னேன். நான் உமக்குக் கடன் பட்டிருக்கிறேன். என் பிராணன், பொருள், குடும்பம் அனைத்தையும் யுத்தத்தில் ஆஹுதியாகப் பெய்து எரித்துவிடுவதற்குச் சம்மதம். நான் சேனையுடன் செல்கிறேன்" என்றான்.

பெருஞ்சேனைக்கு உத்தரவிட்டான். எல்லாம் தயாராக இருந்தது. நகரத்தில் ஹோமம், சாந்தி பிராம்மண பூஜை எல்லாம் நடத்தப்பட்டன. காற்றெல்லாம் பரிமளம் நிரம்பிற்று. பிறகு பேரிகை கோஷத்துடன் பிரஹஸ்தன் புறப்பட்டான்.

அவலக்ஷண சகுனங்கள் காணப்பட்டன. அவற்றைக் கவனியாமல் சென்றான். பிரஹஸ்தன் தலைமையில் பெருஞ் சேனை கோட்டையை விட்டுக் கிழக்கு வாயிலின் வழி வெளிவந்ததைக் கண்டதும், வானரர்கள் கர்ஜித்து யுத்தத்துக்குச் சன்னத்தமானார்கள்.

நெருப்பில் பூச்சிகள் ஆவேசமாக விழுவனபோல் பிரஹஸ்தன் தலைமையில் ராக்ஷசர்கள், வானர சேனையின் மேல் பாய்ந்தார்கள்.

*  *  *

"அங்கே வருகிறானே, பெருங்கூட்டத்துடன், அந்த ராக்ஷசன் யார்?" என்றான் ராமன்.

"அவன்தான் பிரஹஸ்தன்; ராவணனுடைய சேனாதிபதி. லங்கா சேனைகளில் மூன்றில் ஒரு பாகம் இவன் ஆதிக்கம்" என்றான் விபீஷணன்.

பிறகு மலையும் மரமும் ஆயுதமாகக் கொண்ட வானரர்களுக்கும் கத்தி, சூலம், ஈட்டி, கோடரி, தடிகள் முதலிய ஆயுதங்களை எடுத்து வந்த ராக்ஷசப் பெருஞ் சேனைக்கும் கோர யுத்தம் நடந்தது. கல்மாரியும் சரமாரியும் பொழிந்தும், கைகலந்தும் யுத்தம் செய்தார்கள். எண்ணற்ற வானரர்களும், அரக்கர்களும் மாண்டார்கள்.

பிரஹஸ்தனுடைய வீரர்களான நராந்தகன், மகாநாதன், கும்பஹனு முதலியவர்களைத் துவிவிதன், துர்முகன், ஜாம்பவான் ஆகிய வீரர்கள் எதிர்த்துக் கொன்றார்கள். அதன்மேல் பிரஹஸ்தனுக்கும், நீலனுக்கும் கடும்போர், வெகு நேரம் நடந்தது.

முடிவில் பிரஹஸ்தன் தன் இரும்பு உலக்கையை எடுத்துக் கொண்டு நீலன்மேல் பாய்ந்தான். உடனே நீலன் ஒரு பெரிய பாறையைப் பெயர்த்தெடுத்துப் பிரஹஸ்தன் தலையை நொறுக்கி விட்டான். ராக்ஷச வீரர்கள் மூலைக்கு

மூலை ஓடினார்கள். இவ்வாறு பெரும் வெற்றியடைந்த நீலன், ராம லக்ஷ்மணர்கள் இருந்த இடம் சென்று நமஸ்கரித்து, நடந்த போரைப் பற்றிச் சொன்னான். ராம லக்ஷ்மணர்களும் நீலனுடைய சௌரியத்தை மிகவும் பாராட்டி உபசரித்தார்கள்.

*    *    *

மகாபாரதம், ராமாயணம் இரண்டிலுமே யுத்த காண்டக் கதை கவர்ச்சியின்றி நீடித்து ஒரே விதச் சித்திரம் திரும்பத் திரும்ப வரும். ஆதை நான் சுருக்கமாகவே சொல்லி முடிக்கிறேன்; ஆயினும் சொல்லில் சுருக்கமாகவே இருப்ப தனால் யுத்தம் சுருக்கமாக முடிந்து விட்டதாக எண்ணக் கூடாது. ஆயுதங்களும் காயங்களும் ரத்தப் பிரவாகமும் உயிர்ச்சேதமும் ரகளையும் பிரமாண்டமாகத்தான் இருந்தன.

அக்கினி புத்திரனான நீலன், பிரஹஸ்தனைக் கொன்று விட்டான், என்கிற செய்தியை யுத்த களத்திலிருந்து சிதறி ஓடினவர்கள் அரக்க அரசனுக்குத் தெரிவித்தார்கள். அவனுடைய கோபம் பொங்கிக் கிளம்பிற்று. "இந்திரனையும் அவன் தேவப்படையையும் ஜெயிக்கவல்ல என் சேனாதிபதி பிரஹஸ்தன் இந்த வானரர்களால் கொல்லப்பட்டான். இனி அலட்சியம் செய்வதற்கில்லை. இந்த ராம லக்ஷ்மணர் களையும் அவர்களுடைய குரங்குப் படையையும் நிர்மூலம் செய்துவிடவேண்டும்" என்று தானே தேர் ஏறிப் பூதகணங் களால் சூழப்பட்ட ருத்திரனைப்போல் சென்றான். தகதக வென்று ஜொலித்த தேரில் நகரத்தை விட்டு வெளி யேறினதும், அலைகடலைப்போல் சப்தித்துக் கொண்டு நின்ற வானர சேனையைக் கண்டான்.

ராவணன் தலைமையில் அரக்கர்படை வந்ததைக் கண்டதும், வானரர்கள் கையில் மரங்களும் கற்பாறை

களுமாக ஆயத்தமாக நின்றார்கள். வந்த அரக்க வீரர்களைப் பற்றி விபீஷணன ராமனுக்கு எடுத்துச் சொன்னான். "அதோ அந்தத் தேரின்மேல் பாலசூரியனைப்போல் பிரகாசிக்கின்றானே, அவனே இந்திரஜித்து" என்று இவ்வாறு பலரைச் சொல்லி, "அதோ அந்தப் பெருந்தேரில் சூரிய தேஜஸுடன் நிற்கும் தசமுகன், அவனே ராவணன்" என்றான். ராமனும் ராவணனுடைய வடிவத்தையும் பிரகாசத்தையும் கண்டு வியந்தான். "மகா வீரன், மகா பலவான் என்பதில் சந்தேகமில்லை. ஆயினும் பாபியான இவனை ஒழிப்பேன்" என்றான்.

ராவணன் பல வானரர்களைத் தாக்கி, அவர்களை வீழ்த்தினான். நீலன் ராவணனைப் பலவாறு எதிர்த்து இம்சை செய்தான். ராவணனும் அவனை அக்கினி அஸ்திரம் செலுத்தி நினைவிழக்கச் செய்தான். ஹனுமான் ராவணனைப் பலமாக எதிர்த்தான். பெரிய முஷ்டி யுத்தம் நடந்தது. ராவணன் அசையவில்லை. எதிர்த்த வானர வீரர்கள் ராவணனுடைய பாணங்களால் அடிபட்டுப் பிரக்ஞை இழந்து விழுந்தார்கள்.

பிறகு லக்ஷ்மணனுக்கும் ராவணனுக்கும் போர் நடந்தது. லக்ஷ்மணனும் நினைவு அற்று விழுந்தான். இதைக் கண்ட ஹனுமான் இடையில் புகுந்து லக்ஷ்மணனை எடுத்து ராமனிடம் கொண்டுபோய்ச் சேர்த்து விட்டான். பிறகு ராமனே ஹனுமானுடைய தோளின்மேல் ஏறி ராவணனுடன் யுத்தம் செய்தான். ராக்ஷசேந்திரன் பலமாகத் தாக்கப் பட்டான். கிரீடம் உடைந்து, தேரிழந்து, ஆயுதம் இழந்து, ஒன்றும் செய்ய முடியாத நிலையில் நின்றான்.

"இன்று தப்பிப்போ, நன்றாக யுத்தம் செய்தாய். திரும்பிப் போய் இளைப்பாறி நாளை ஆயுதம் எடுத்துக் கொண்டு மறுபடியும் வா" என்று ராமச்சந்திரன் ராவணனுக்குச் சொன்னான். ராவணனும் அவமானப்பட்டு நகரத்துக்குள் திரும்பிச் சென்றான்.

## 88. கும்பகர்ணன் எழுந்தான்

யுத்த பூமியில் ராவணன் கிரீடம் உடைந்து அவமானப்பட்டுக் கோட்டைக்குத் திரும்பிப் போவதைக் கண்ட தேவர்கள் சந்தோஷமடைந்து ஆரவாரம் செய்தார்கள். "நம்முடைய கஷ்டங்கள் தீரும் காலம் சமீபித்தது" என்று ஆனந்தமடைந்தார்கள்.

ராவணனோ மானபங்கமடைந்து மிகக் கவலை கொண்டவனாகக் கோட்டைக்குள் புகுந்தான். ஆலோசித்து மனத்தை ஸ்திரப்படுத்திக்கொண்டு, தம்பி கும்பகர்ணனை எழுப்பச் சொல்லி உத்தரவிட்டான்.

கும்பகர்ணன் தான் அடைந்த சாபத்தால் மாதக் கணக்காகத் தூங்கிப் போவான். ராவணன் அவமானப்பட்டுத் திரும்பியபோது, கும்பகர்ணன் படுக்கப்போய்ச் சில நாட்களே ஆனபடியால், அந்த இளந் தூக்கத்திலிருந்து அவனைச் சுலபமாக எழுப்பக்கூடும் என்று ராவணன் தீர்மானித்து, "எப்படியாவது தம்பியைத் தூக்கத்தினின்று எழுப்பி யுத்தத்துக்கு தயாராகும்படி செய்யுங்கள்" என்று தன் மந்திரிகளுக்கு உத்தரவிட்டான்.

"என் தவங்களெல்லாம் வீணாயிற்று. ரிஷிகள் சொன்னது உண்மையாகும் போலிருக்கிறது. கோட்டையை எல்லாப் பாகங்களிலும் வீரர்கள் கவனமாகக் காவலிருந்து பார்த்துக் கொள்ளச் சொல்வீர்களாக. தம்பி சுகமாகத் தூங்குகிறான். அவன் தூக்கம் மாதக் கணக்காக இருக்குமே. அவன் படுத்து இன்று ஒன்பது தினங்கள்தானாயின. அவனை உடனே எழுப்பி விடுங்கள். அவன் யுத்தத்துக்குச் சென்றால் எதிரிகள் சிதறி ஓடுவார்கள். கும்பகர்ணனுக்கு எதிரில் யார் நிற்க முடியும்? அவன் எழுந்து போருக்கு நின்று விட்டால் எனக்கு ஒரு பயமுமில்லை. கவலைப்படுகிறேன் என்பதை அவன் அறியவில்லை, தூங்குகிறான்."

இப்படி ராவணன் சொன்னதும் ஆட்கள் கும்பகர்ணனுடைய அரண்மனைக்குச் சென்றார்கள். அவன் எழுந்ததும் அவனுக்கு அடங்காத பசியாக இருக்கும் என்று ஆகாரம் தயாரித்து மலையாகக் குவித்து வைத்தார்கள். பிறகு அவனை எழுப்புவதற்காக அனேக பேரிகைகள், சங்குகள் முதலியவைகளைக் கொண்டு பெரிய சத்தம் போட்டார்கள் பல அரக்கர்கள் கூடி அவனைத் தட்டிக் குத்தித் தள்ளினார்கள். அவர்கள் போட்ட இரைச்சலும், பேரிகை, சங்கம் முதலிய கோஷங்களும் ஆகாயமளாவிச் சென்றன. பறவைகளும் மிருகங்களும் பறந்து கத்தின.

கும்பகர்ணனுடைய சாப நித்திரை இதையெல்லாம் கேட்கவில்லை. தூங்கினவன் தூங்கிக்கொண்டேயிருந்தான். பல ராக்ஷசர்கள் கூடித் தூக்கத்தில் கிடந்தவனை மிக உபத்திரவப்படுத்தினார்கள். அவன்மேல் யானைகளை நடக்கச் செய்தார்கள். கம்புகள் எடுத்து அடித்தார்கள். இப்படி உபத்திரவம் செய்தபின், கும்பகர்ணன் கண்ணைத் திறந்து, தூக்கத்திலிருந்தவன் கொசுக்கடிக்காகக் கையால் தட்டுவது போல் அனைவரையும் தட்டித் துரத்திவிட்டுக் கொட்டாவி விட்டான்.

பிறகு, என்ன காரணம் தன் தூக்கத்தை இவ்வாறு கெடுத்தது ஏன் என்று பெருங் கோபம் கொண்டான். விஷயம் தெரிவதற்குமுன் தாங்காத பசி மேலிட்டு, மலைக் குவியல்களாகக் கிடந்த மாமிசத்தையும் மற்ற ஆகாரப் பண்டங்களையும் எடுத்து விழுங்கிப் பானைகளில் வைக்கப் பட்டிருந்த ரத்தத்தையும் மதுவகைகளையும் குடித்துத் தாகம் தீர்த்துக் கொண்டான். அதன்மேல் அவன் கோபம் கொஞ்சம் தணிந்ததென்று அரக்கர்கள் அவனையண்டி விஷயத்தைச் சொன்னார்கள்.

இராவணனுடைய மந்திரி யூபாக்ஷன் பேசினான்: "சுவாமி, யுத்தத்தில் அடிபட்டு நாம் அபாயத்திலிருக்கிறோம்.

சீதையின் காரணமாக வந்தது யுத்தம். வானரர்களும் ரகு குமாரர்களும் இதுவரையில் நாம் கண்டிராத முறையில் நம்முடைய சேனையையும் வீரர்களையும் மாய்த்து வருகிறார்கள். லங்கா நகரத்தைச் சுற்றிக் கடல்போன்ற வானரக் கூட்டம் நிற்கிறது. ராவணேசுவரரே யுத்தத்தில் அடிபட்டுத் திரும்பிவிட்டார். அவர் உயிருடன் தப்பியதே நம்முடைய அதிர்ஷ்டம்" என்றான்.

இதைக் கேட்டதும் கும்பகர்ணன் அடக்கமுடியாத கோபாவேசமானான். "இந்தக் கணம் எதிரிகளை நிர்மூலம் செய்வேன். வானரச் சேனையைக் கொன்று, ராம லக்ஷ்மணர்களுடைய ரத்தத்தைக் குடிக்கப் போகிறேன். காரியத்தை முடித்துவிட்டு ராவணனைப் போய்ப் பார்ப்பேன்."

இவ்வாறு ரோஷத்தோடு பேசியதைக் கேட்ட மந்திரிகள் மகிழ்ச்சியடைந்து, "முதலில் அரசனைக் கண்டு ஆலோசித்து, அதற்கு மேல் தக்கது செய்யுங்கள்" என்று கும்பகர்ணனிடம் விண்ணப்பம் செய்தார்கள்.

கும்பகர்ணன், "சரி, அப்படியே" என்று சொல்லி முகம் கழுவிக்கொண்டு தன் பலத்தை விருத்தி செய்து கொண்டு, பூமி அதிர யமனைப்போல் லங்கேசன் அமர்ந்திருக்கும் மண்டபத்துக்குச் சென்றான். கும்பகர்ணன் போகும் பொழுது, ராஜ மார்க்கத்தில் நின்று கொண்டிருந்த அரக்கர்கள் தைரியமும் மகிழ்ச்சியும் அடைந்து கைகூப்பி வணங்கினார்கள். அவன்மேல் புஷ்பமாரி பெய்தார்கள்.

அரண்மனைக்குள் பிரவேசித்து ராவணன் சந்நிதியில் நின்றான். ராவணனும் தன்னுடைய நிகரற்ற தம்பி எழுந்து வந்து விட்டான் என்று அடங்காத மகிழ்ச்சியுடன் எழுந்து ஆசனத்திலிருந்து இறங்கி அவனைத் தழுவி வரவேற்றான்.

"செய்ய வேண்டியது என்ன அண்ணா?" என்றான் கும்பகர்ணன். "ஏன் என்னை எழுப்பச் சொன்னீர்? உமக்கு

என்ன பயம் ஏற்பட்டிருக்கிறது? யார் பிரேதமாய் விழுந்து போகக் காத்திருக்கிறார்கள்? சொல்லுவீர்" என்றான்.

"தம்பி! உனக்குத் தெரியவில்லை. நீ உன்னுடைய தூக்கத்தில் ஆழ்ந்து கிடந்தாய். கடலைப்போல் வானர சேனை லங்கையைச் சூழ்ந்து கொண்டிருக்கிறது. நம்முடைய வீரர்கள் அவர்களை எதிர்த்துத் தோல்வியடைந்து மடிந்துவிட்டார்கள். பெருஞ் சேனையுடன் ராமன் சமுத்திரத்தில் சேது ஒன்று கட்டி, நம்முடைய குலத்தை வேரோடு அழிக்க வந்திருக்கிறான். என் செல்வம், என் சேனை எல்லாம் தீர்ந்து போயிற்று. நீதான் நம்முடைய குலத்தைக் காப்பாற்ற வேண்டும். உன்னை நம்பியிருக்கிறேன்; நீ தேவர்களையெல்லாம் யுத்தத்தில் சிதற அடித்திருக்கிறாய். என்னிடம் உனக்கு உள்ள பிரியத்தை நான் அறிவேன். யுத்தத்தில் உனக்கு உள்ள பிரியமும் உன் வீரமும் அறிவேன். உடனே சென்று இந்தச் சத்துருக்களை வதம் செய்து என்னையும் லங்கையையும் காப்பாற்றுவாய்" என்றான் ராவணன்.

இதைக் கேட்ட கும்பகர்ணன் சிரித்தான். ராவணன் கவலைப்பட்டும், துக்கப்பட்டும் பிரலாபித்துப் பேசினதைக் கேட்டதும் முதலில் தனக்கு இயற்கையாகப் பாசத்தால் உண்டான கோபத்தின் வேகம் மறைந்துபோய், விஷயங்கள் நினைவுக்கு வந்து, விவேகம் மேலிட்டு அண்ணன் செய்த தவறுகளை எண்ணிச் சிரித்துவிட்டுப் பேசலானான்.

"மன்னிக்க வேண்டும் அண்ணா! முன், நீர் மந்திராலோசனை செய்த சமயத்தில் நாங்கள் என்ன எச்சரித்தோமோ அது இப்போது நடந்திருக்கிறது. நாங்கள் உம்முடைய நன்மைக்கென்று சொன்னதை அப்போது நீர் உதறித் தள்ளினீர். சீதையை அபகரித்த பாப காரியத்தின் பயனை இப்போது அனுபவிக்கிறீர். ஆசை தூண்டப்பட்டுக்

காரியத்திலுள்ள தோஷத்தை ஆராயாமல் ஒருவன் புகுந்தால் கஷ்டத்தை அனுபவிக்க வேண்டியதுதானே! யோசனை செய்து பிறகு காரியத்தில் பிரவேசிப்பதற்குப் பதிலாக, காரியத்தில் பிரவேசித்துவிட்டுப் பிறகு யோசிப்பது அறிவீனம். ராஜரீதிக்கு விரோதம். இதை நான் எடுத்துக் காட்டினேன். சீதையை அபகரிக்கப் பிரியப்பட்டாலும், விரோதிகளான ராம லக்ஷ்மணர்களை வதம் செய்துவிட்டுப் பிறகு அல்லவோ சீதையை அபகரித்திருக்க வேண்டும்? தலைகீழாக வேலையைச் செய்துவிட்டீர். நன்மை தீமைகளை யோசித்துச் சொல்லக்கூடிய மந்திரிகள், மித்திரர்கள், பந்துக்கள் இவர்களோடு கலந்து ஆராயாமல், அல்லது அவர்கள் சொன்னதைப் புறக்கணித்துவிட்டு, செய்யப்படும் காரியங்கள் அபாயத்திலும் நஷ்டத்திலும் கொண்டு போய்விடும். இது நீர் அறிந்திருக்கவில்லையா? யார் சரியான யோசனை சொல்லுகிறவர்கள், யார் அல்ல என்பதை அரசன் அறிந்து கொள்ள வேண்டும்."

இவ்வாறு கும்பகர்ணன் செய்த தர்மோபதேசமும் நீதி சாஸ்திர விளக்கமும் ராவணனுக்குப் பிடிக்கவில்லை. ராவணனுடைய முகத்தில் கோபக் குறிகள் உண்டாயின. ஆயினும் அபாய நிலையிலிருந்தபடியால் கோபத்தை ஒருவாறு அடக்கிக் கொண்டு ராவணன் பேசினான். "தம்பி! இப்போது இந்த ஆராய்ச்சியில் ஒரு பிரயோசனமும் இல்லை. காலம் தாண்டிவிட்டது. இப்போது நான் கோருவது உன்னுடைய பராக்கிரமத்தின் வேகத்தை. நியாயமாகவோ அநியாயமாகவோ, விவேகமாகவோ அவிவேகமாகவோ, கர்வத்தாலோ அறிவீனத்தாலோ ஒரு காரியம் நடந்து விட்டால் அதைப்பற்றிக் காலம் கடந்தபின் விமர்சனம் செய்துகொண்டு இருப்பதில் பயன் என்ன? நடந்தது நடந்து விட்டது. இப்போது இத்தனை சங்கடத்தில் என்ன செய்வது என்பதுதான் கேள்வி. நடந்துபோன தவறுகளால் நேர்ந்திருக்கும் கெடுதியை உன் வீரத்தாலும் சாமர்த்தியத்

தாலும் தீர்ப்பது உன் கடமை. தவறுகள் செய்துவிட்ட படியால் அபாயத்திலும் கஷ்டத்திலும் சிக்கினவனுக்கு உதவி செய்கிறவனே மித்திரன். அவனே பந்து. என்பேரில் உனக்குப் பிரியம் இருப்பது உண்மையாயின் இப்போது எனக்கு நீ உதவுவாய். உன் சாமர்த்தியமும் பலமும் தெரிந்துதான் இப்படிப் பேசுகிறேன். கவலைப்பட்டுக் கொண்டிருக்கும் எனக்குத் தைரியம் சொல்லி, என்னைக் கைவிடாமல் சூரனாக நடந்து கொள்வாய்" என்றான்.

கும்பகர்ணன் சொன்னான்: "நீர் கவலைப்பட்டது போதும். உமக்குப் பயம் உண்டாக்கியிருக்கும் சத்துருக்களை இப்போதே வதம் செய்வேன். நான் உம்முடைய தம்பி. ஒரு போதும் உம்மைக் கைவிடமாட்டேன். ராம லக்ஷ்மணர்கள் மாண்டார்கள் என்று நிச்சயமாக இருப்பீராக. இந்த வானர சேனையைச் சின்னாபின்னமாக அடித்து வதம் செய்வேன். சந்தேகப்பட வேண்டாம். ராமனுடைய தலையை உமக்கு எதிரில் கொண்டு வந்து போடப் போகிறேன். பயப்படாதீர். சுக்ரீவனுடைய ரத்தம் அருவிபோல் பாய்வதைக் காண்பீர். என்னைக் கொன்றுவிட்டுப் பிறகு அல்லவா ராமன் உம்மிடம் வரவேண்டும்? என்னை யாரும் வென்று கொல்ல முடியாது என்பது உமக்குத் தெரியும்."

இப்படிப் பேச ஆரம்பித்ததும் கும்பகர்ணனுடைய அகம்பாவம் பொங்கிக் கிளம்பிற்று. "எந்தச் சத்துருவாயினும் அழிப்பேன். யமனே வரட்டும். சூரியனே வந்து எதிர்க்கட்டும். அக்கினியேயாயினும் சரி, வரட்டும். அனைவரையும் கடித்துத் தின்று விழுங்கி விடுவேன்" என்று பலவாறாகப் பேசி, அண்ணனுக்குத் தைரியம் உண்டாக்கிப் போர்க் களத்துக்குப் போகக் கிளம்பிவிட்டான்.

* * *

முதலில் பெருந் தூக்கத்தினின்று எழுந்ததும் இயற்கை வேகத்தில் பேசினான். பிறகு பசி ஓரளவு தீர்ந்ததும்

சுபாவத்தில் நீதி உணர்ச்சி கொண்டவனானபடியால் ராவணனிடம் விஷயங்களை ஆராய்ந்து ஹிதத்தை எடுத்து உரைத்தான். அதன்பின், ராவணனுடைய தற்கால கஷ்ட நிலையைக் கண்டு உருகி, அன்பு மேலிட்டு, மற்றதை யெல்லாம் மறந்தொழித்தான்.

"உன்னைப்போன்ற வீரன், உன்னைப் போன்ற தம்பி, ஆபத்தில் உதவும் மித்திரன் வேறு யார் கும்பகர்ணா!" என்று ராவணன் மகிழ்ச்சிப் பரவசமாகப் பேசித் தம்பியை யுத்தத்துக்கு அனுப்பினான். தம்பி கட்டாயமாக ஜெயிப்பான் என்று ராவணன் எண்ணினான். தான் செத்துப் பிழைத்தது போன்று மகிழ்ச்சி அடைந்தான்.

கும்பகர்ணன் சூலத்தை எடுத்துக்கொண்டு ஒருவனாகவே போகப் புறப்பட்டான். அப்போது ராவணன் அவனைத் தடுத்து, "இப்படிச் செல்லலாகாது; சேனையைக் கூட்டிக் கொண்டு போ" என்று சொல்லி, தம்பியின் பெரிய தேகத்துக்கு ஆபரணங்களைப் புனைந்தும் மாலை போட்டு அலங்கரித்தும் ஆசீர்வதித்து, "போ வீரனே! சத்ருக்களை நிர்மூலம் செய்து விட்டு ஜெயகோஷத்துடன் திரும்பி வா" என்றான்.

கும்பகர்ணனும் திவ்ய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டுத் திரிவிக்ரமனைப் போலவே ஜொலித்தான்.

அண்ணனை வலம் செய்து வணங்கி, நீண்ட சூலத்தை எடுத்துக்கொண்டு சென்றான். பெருஞ்சேனை அவனைப் பின் தொடர்ந்து சென்றது. கும்பகர்ணன் நடந்து சென்றபோது லங்கையில் உள்ள ராக்ஷசர்கள் அவன்மேல் மலர்கள் தூவினார்கள். எரிமலையைப்போல் ஜொலித்துக் கொண்டு சென்றான்.

அவன் மதில் சுவர்களைக் காலாலே தாண்டிக் காலாந்தக யமனைப்போல் வந்ததைக் கண்ட வானரர்கள் பலர் பயந்து இங்குமங்கும் ஓட ஆரம்பித்தார்கள். வானரத்

தலைவர்கள், படைக்குத் தைரியம் சொல்லி மிகக் கஷ்டப்பட்டுச் சேனையைச் சிதறிப் போகாமல் காத்து வந்தார்கள்.

## 89. நாராயணன் தானோ?

அங்கதனுடைய தேற்றுதலினால் வானரர்கள் தைரியம் கொண்டு ஒன்று சேர்ந்து கும்பகர்ணனைத் தாக்கினார்கள். பெரிய மரங்களையும் பாறைகளையும் பறித்தெடுத்து அவன்மேல் வீசி எறிந்தும், அடித்தும், நொறுக்கியும் பார்த்தார்கள். அவனோ இவற்றைக் கொஞ்சமும் லட்சியம் செய்யாமல், சிரித்துக்கொண்டே வானரர்களைத் துவம்சம் செய்தான். கும்பகர்ணனுடைய வீராவேசமும் குரூர யுத்தமும் வானரர்களைச் சிதற அடித்தன. கடலிலும், தாங்கள் கட்டின சேதுவிலும், ஆகாயத்திலும், காட்டிலும், ஓடி மறையப் பார்த்தார்கள். மறுபடியும் அங்கதன் வானர வீரர்களுக்கும், வானரப் படைக்கும் தைரியம் சொல்லி, ஒன்று சேர்த்துக் கும்பகர்ணனைத் தாக்கச் செய்தான். துவிவிதன், ஹனுமான், நீலன், விருஷபன், சரபன் முதலிய வீரர்கள் கும்பகர்ணனைப் பலமாகத் தாக்கினார்கள். அவனோ அதை யெல்லாம் லட்சியம் செய்யவில்லை. வானர வீரர்களை ஒருவர்பின் ஒருவராக அடித்து நொறுக்கிக் கீழே தள்ளினான். வானர சேனைக்குப் பயங்கர நாசம் விளைவித்தான். அங்கதனே அடிபட்டு நினைவற்றுப் பூமியில் விழுந்தான். சுக்ரீவனும் அடிபட்டுப் பிரக்ஞையற்றுக் கீழே விழுந்தான். நினைவற்றுக் கிடந்த சுக்ரீவனை எடுத்துத் தூக்கிக் கொண்டு கும்பகர்ணன் வெகு மகிழ்ச்சியுடன் லங்கையை நோக்கி ஓடினான். ராட்சச சேனை பெருமகிழ்ச்சி யடைந்து ஆரவாரித்தது. அண்ணன் ராவணனிடம் வானர ராஜனைக் கொண்டுபோய்த் தான் தந்த பரிசாகக் கொடுக்க கும்பகர்ணன் சென்றான்.

* * *

இவ்வண்ணம் பிரக்ஞை இழந்த வானர ராஜனைத் தூக்கிக்கொண்டு லங்கா நகர ராஜவீதியில் வெற்றிகரமாகச் சென்ற கும்பகர்ணன் மேல் மாடமாளிகையிலிருந்து அரக்கர்களும், அரக்கிகளும் புஷ்பமும், சந்தனக் குழம்பும் ஏராளமாகப் பொழிந்தார்கள். சிறிது நேரம் கழிந்தது. சுக்ரீவன் நினைவு அடைந்தான். "என்ன இது? எங்கே இருக்கிறேன்?" என்று நாற்புறமும் பார்த்து விஷயம் அறிந்து கொண்டான். திடீர் என்று அரக்கனுடைய காதுகளையும் மூக்கையும் பல்லால் கடித்தும், நகங்களால் கிழித்தும் ரணமாக்கித் துன்பப்படுத்தினான். அரக்கன், அந்த வேதனை யின் காரணமாக சுக்ரீவனைக் கீழே போட்டுக் காலால் துவைக்கப் பார்த்தான். உடனே சுக்ரீவன் குதித்தெழுந்து ஆகாய மார்க்கமாக ராமச்சந்திரனிருந்த இடத்துக்குப் பாய்ந்து போய்விட்டான்.

இப்படிச் சுக்ரீவன் செய்வான் என்பதை முன்னமேயே ஹனுமான் உணர்ந்துகொண்டு, கலங்கிப்போன வானர சேனையை வியூகப்படுத்தி, அமைதியாகவும் தைரியமாகவும் நிற்கச்செய்து, மறுபடியும் யுத்தத்துக்கு ஆயத்தமாக்கினான். காதுகளும் மூக்கும் அறுபட்டு, ரத்த வெள்ளமாகக் கும்பகர்ணன், சாயங்கால மேகத்தைப்போல், செக்கச் சிவந்து ஏமாற்றமடைந்து பெருங்கோபத்தோடு காலாந்தகனைப் போல், ஒரு பெரிய இரும்பு உலக்கையைக் கையில் தூக்கிக்கொண்டு யுத்த களத்துக்கு மறுபடியும் திரும்பினான்.

யாராலும் கும்பகர்ணனைத் தடுக்க முடியவில்லை. கொன்றும் தின்றும் வானர சேனையை அழித்துக்கொண்டே வந்தான். அவன்மேல் வானரர்கள் ஏறி, மலைபோன்ற அவன் தேகத்தைக் குத்தியும் கிழித்தும் பார்த்தார்கள். அவனோ இதை ஒன்றும் லட்சியம் செய்யவில்லை. ஈயை ஓட்டி உதறுவதுபோல் உதறித் தள்ளினான். வானரத் தலைவர்கள் யாராலும் அவனை அழிக்க முடியவில்லை. லட்சுமணனும்

அம்புகள் எய்து எதிர்த்தான். ஆனால் அரக்கன் அவனை விட்டுவிட்டுத் தாண்டிச் சென்று ராமனை எதிர்க்க ஓடினான்.

ராமச்சந்திரன் அரக்கனோடு நெடுநேரம் போர் செய்தான். ஏழு மராமரங்களையும், வாலியின் வஜ்ரதேகத்தையும் துளைத்துச் சென்ற அம்பு கும்பகர்ணனுடைய உடலை ஒன்றும் செய்ய முடியவில்லை. வேறு பலமான கூரிய அம்புகளை எய்து, கைகளை வெட்டித் தீர்த்தான். ஆயினும் அரக்கன் யுத்தத்தை நிறுத்தவில்லை. கால்கள் வெட்டப் பெற்று நின்ற முண்டங்காலாலேயே நடந்து, கும்பகர்ணன் விடாமல் கோர யுத்தம் நடத்தினான்.

கடைசியாக ராமன் தன் வில்லை வளைத்து, ஓர் அம்பு செலுத்தி, அரக்கனுடைய தலையை அறுத்துத் தள்ளினான். அறுக்கப்பட்ட தலை, இராமன் செலுத்திய சரத்தின் வேகத்தால் ஆகாயத்தில் கிளம்பி, லங்கா நகரத்தினுள் ஒரு மலைவிழுவதுபோல் ஜ்வாலையுடன் விழுந்தது.

"காலாந்தகனைப் போன்ற உமது தம்பி கும்பகர்ணன் உத்தமலோகம் அடைந்துவிட்டான். அநேக ஆயிரம் வானரர்களைக் கொன்று தின்று, வெகுநேரம் ராம லட்சுமணர்களுடைய வானர சேனையைத் தத்தளிக்கச் செய்தான். பிறகு ராமனுடைய சரத்துக்கு இரையானான். அவனுடைய தேகம் புஜங்களும் கால்களும் அறுபட்டு விகாரமடைந்து, காட்டுத் தீயால் எரிபட்ட ஒரு மகா விருட்சத்தைப்போல் கிடக்கிறது. வெட்டுண்ட அவன் தேகத்தின் துண்டுகள் பாதி கடலில் விழுந்தும், பாதி கோட்டை வாசலை ஒரு மலைபோல் அடைத்துக் கொண்டுமிருக்கின்றன. தலை அறுபட்டு ஆகாய மார்க்கமாக லங்கையில் விழுந்தது. தங்களுடைய அன்புக்குரிய சகோதரன் வீரசுவர்க்கம் அடைந்துவிட்டான்."

இவ்வாறு ராட்சசர்கள் ராவணனிடம் தெரிவித்தபோது, தன் உயிரே போய்விட்டதாக எண்ணினான். ராவணன், சோகத்தால் நினைவு இழந்தான்.

— — —

பிறகு பிரக்ஞை வந்தபின், "ஹா வீரனே! எல்லையற்ற பலவானே! என்னைத் தனியாக விட்டுவிட்டு யமலோகம் சென்றாயே! என் வலக்கை வெட்டுண்டது! எந்தச் சத்துருவும் கிட்ட நெருங்க முடியாதிருந்த நீ ராமனால் கொல்லப் பட்டாயா? வானத்தில் தேவர்கள் சந்தோஷப்படுவதைக் காண்கிறேன். வானரர்கள் ஆனந்தக் கூத்து ஆடுகிறார்கள். இனி இந்த ராஜ்யம் எனக்கு என்னத்துக்கு? என் அருமைத் தம்பி போனபின் என் உயிரை நான் எதற்காக வைத்திருக்க வேண்டும்? தம்பியைக் கொன்ற ராமனை நான் சித்திரவதை செய்யவேண்டும்" என்று துக்கமும் ரோஷமும் மேலிட்டுக் கத்தினான். மீண்டும், "ஐயோ, விபீஷணன் வார்த்தையைக் கேளாமற் போனேனே?" என்று பிரலாபித்தான்.

திரிசரன் முதலிய மக்கள்மார் இராவணனைத் தேற்றினார்கள். "பிரலாபிப்பதில் ஒரு பயனுமில்லை. பிரம்மாவிடம் சக்தியும் கவசமும் வில்லும் பாணங்களும் கிடைத்திருக்க ஏன் மனத்தளர்ச்சி அடைகிறீர்?" என்று சொல்லித் தேற்றினார்கள். திரிசரன் யுத்தத்துக்குப் புறப்பட்டான்.

"நான் முந்தி", "நான் முந்தி" என்று வேறு பலரும் யானை மேலும் ரதங்களில் ஏறியும் திரிசரனைத் தொடர்ந்து சென்றார்கள்.

பெரும் யுத்தம் நடந்தது. நராந்தகன் ஒரு குதிரையின் மீது ஏறி ஈட்டி எடுத்துக்கொண்டு, வானர சேனையைத் தாக்கித் திணறச் செய்தான். சுக்ரீவனையே நோக்கிச் சென்ற நராந்தகனை அங்கதன் ஆயுதமின்றி எதிர்த்து, அவன் குதிரையையும் அவனையும் கொன்று வீழ்த்தினான்.

இப்படியே தேவாந்தகனும் திரிசிரஸும் மாருதியாலும், மகோதரன் நீலனாலும் கொல்லப்பட்டார்கள். அதிகாயன் லக்ஷ்மணனுடைய அஸ்திரத்துக்கு இரையானான்.

இந்த நால்வரும் நான்கு யமன்களைப்போல் கோரயுத்தம் செய்து வானரப் படைக்குப் பெருஞ்சேதம் இழைத்த பின்னரே மாண்டார்கள்.

அதிகாயனும் மாண்டான் என்பதை அறிந்ததும் ராவணன் மனம் கலங்கிப் போனான்.

"என்ன ஆச்சரியம்! மலைபோன்ற தேகங்களும் கடலைப் போன்ற கலங்காத தைரியமும் கொண்ட என் வீரர்கள், ஒருவர் பின் ஒருவராக இந்தச் சத்துருக்களால் மாண்டார்கள். இதுவரையில் தோல்வி என்பதை அறியாத என் சூரர்கள் எல்லோரும் இப்போது தோல்வியடைந்து வீழ்த்தப்பட்டார்கள். என் மகன் ஒப்பற்ற இந்திரஜித்து கட்டிய நாகபாசத்தைதயுங்கூட எப்படியோ தெறித்துவிட்டு நிற்கிறார்கள். இந்த ராமனுடைய பராக்கிரமம் எனக்கு விளங்காத ஒரு விந்தையாக இருக்கிறது. இவன் நாராயணனே என்று எண்ணுகிறேன்."

இவ்வாறு ஆச்சரியப்பட்டும் கவலைப்பட்டும் யோசிக்கலானான்; மனமுடைந்தான் என்றே சொல்லலாம்.

கோட்டைக்குள் சத்துருப்படை புகுவதற்கில்லாமல் முக்கியமாக அசோக வனத்துக்குள் சத்துருக்கள் நுழையாமலிருப்பதற்குத் தீவிர ஏற்பாடுகள் செய்துவிட்டு, அரண்மனைக்குள் தீனனாய்ப் போய்ச் சேர்ந்தான்.

## 90. இந்திரஜித்து மாண்டான்

"நான் உயிருடன் இருக்கத் தாங்கள் ஏன் கவலைப் படுகிறீர்கள்" என்றான் இந்திரஜித்து.

இப்படித் தகப்பனுக்குத் தைரியம் சொல்லிவிட்டு, சேனையைத் திரட்டிக் கொண்டு யுத்த களம் சென்றான்.

வானர சேனையைத் தாக்கி முறியடித்து, லக்ஷக்கணக் கான உயிர்ச்சேதமும் படுகாயங்களும் உண்டாக்கினான்.

வானர சேனை தோல்வியுற்று ஒன்றும் செய்ய முடியாமல் தத்தளித்தது.

ராம லக்ஷ்மணர்களும் இந்திரஜித்தின் பிரம்மாஸ் திரத்தால் கட்டுண்டு பிரக்ஞையற்றுக் கிடந்தார்கள். அரக்க வீரன் கவலை கொண்டிருந்த தந்தையிடம் இந்தப் பெரிய வெற்றியைச் சொல்லிச் சந்தோஷப்படுத்தலாம் என்று சென்றான்.

விபீஷணன் வானரத் தலைவர்களைத் தேடித் தேடிக் கண்டுபிடித்துத் தேற்றிக்கொண்டு வந்தான்.

ஜாம்பவான் அரை ஜீவனாகக் கிடந்தவன் மெதுவாகச் சென்று வானரர்களை விசாரித்தான். 'மாருதி உயிரோடிருக் கிறானா?" என்று கேட்டான். மாருதி 'இதோ இருக்கிறேன்' என்று ஜாம்பவானின் பாதத்தில் பணிந்து நமஸ்கரித்தான்.

"அப்பனே! உடனே வடக்கே செல்வாய். கடலைத் தாண்டி இமயமலைத் தொடருக்குப்போய் ரிஷப பர்வதத்துக்கும் கயிலாய பர்வதத்துக்குமிடையில் இருக்கும் ஔஷத பர்வதத்தின் உச்சியில் நான்கு மருந்துச் செடிகள் இருக்கின்றன. அவற்றைக் கொண்டு வந்தாயானால் ராமலஷ்மணர்களும் வானர சேனையும் நினைவு அடைந்து ரணங்கள் தீர்ந்து ஆரோக்கியம் அடைவார்கள். இதைக் கால தாமதமின்றி உடனே செய்வாய். இதைச் செய்ய கூடியவன் நீ ஒருவன்தான்!" என்றான்.

அவ்வாறே ஹனுமான் குதித்துக் கிளம்பினான். ஆகாய மார்க்கமாகச் சென்று குறிப்பிட்ட பர்வதத்தை அடைந் தான். ஆனால் ஔஷதிகளைக் கண்டெடுக்க அவனால் முடியவில்லை. பர்வதத்தையே தூக்கியெடுத்துக் கொண்டு லங்கைக்குத் திரும்பினான்.

ஹனுமான் தூக்கி வந்த சஞ்சீவி மலை ஆகாயத்தில் லங்கையை நெருங்கிய உடனே, ராம லக்ஷ்மணர்களும் வானர

சேனையும் உடலில் ஏறிய சரங்கள் நழுவிக் காயங்கள் ஆறி, பூரண சுக நிலையில் எழுந்து நின்றார்கள்.

* * *

சுக்ரீவன் ராமனிடம் கலந்து யோசித்துச் சில வானரர் களைப் பொறுக்கியெடுத்து லங்கைக்குள் பிரவேசித்து நகரத்துக்கு நெருப்பு வைக்கும்படி உத்தரவிட்டான்.

அப்படியே வீரர்கள் ராத்திரி முன் ஜாமத்தில் தீவட்டி களுடன் பிரவேசித்தார்கள். காவலாளிகளை அடித்துத் தள்ளி லங்கையிலுள்ள கோபுரங்கள், மாளிகைகள் இவற்றுக்கு நெருப்பு வைத்தார்கள். ஆயிரக்கணக்கான வீடுகள் எரிந்து சாம்பலாயின. செல்வமும் நாகரிகமும் நிறைந்த லங்கா நகரம் கோரமான நாசம் அடைந்தது.

இந்தச் சம்பவத்தை வால்மீகி முனிவர் மிக விவரமாகச் சித்திரித்திருக்கிறார். அதைப் படித்தால் இந்த யுகத்தில் நடத்தப்படும் யுத்தங்களில் நடைபெறும் நகர நாசக் கதையாகவே காணப்படுகிறது.

வானரர்களால் லங்கா நகரம் எரிக்கப்படுவதைக் கண்ட ராவணன் பெருங்கோபம் கொண்டு, கும்பகர்ணனுடைய புத்திரர்களான கும்பன், நிகும்பன் இவர்களை யூபாக்ஷன் முதலிய அரக்க வீரர்களுடன் யுத்தகளத்துக்கு அனுப்பினான். ராக்ஷசர்களுக்கும் வானரர்களுக்கும் கோர யுத்தம் நடந்தது.

கும்பன் சுக்ரீவனாலும், நிகும்பன் மாருதியாலும் வதம் செய்யப்பட்டார்கள்.

கரனுடைய மகன் மகாராக்ஷன் என்ற அரக்கன் ராமனையே எதிர்த்து ராமனுடைய ஆக்னேய அஸ்திரத்துக்கு இரையானான்.

இன்னும் பல பெரிய அரக்கர்கள் மாண்டார்கள். அதன் பேரில் இராவணன் சொல்லியபடி இந்திரஜித்து மறுபடியும்

புறப்பட்டான். இந்திரஜித்து அசுர வேள்வி ஒன்று செய்து அதன் பயனாக ஆகாயம் ஏறிக் கண்ணுக்கு மறைந்து யுத்தம் செய்தான்.

* * *

இந்திரஜித்து, தன்னுடைய மாய வித்தையினால் ஒரு பொய்ச் சீதையை உண்டாக்கி, அவளைத் தேரில் ஏற்றிச் சென்று வானர சேனைக்கு எதிரில் நிறுத்தி அவளை அவர்கள் முன்னிலையில் கொன்றான். இதைக் கண்டு வானர வீரர்களும் மற்றவர்களும் ஏமாந்துபோய், இனி யுத்தம் செய்து என்ன பயன் என்று யுத்தத்தை நிறுத்திவிட்டு, ராமனிடம் போய் யோசிக்கச் சென்றார்கள். இவ்வாறு ஜாலம் நடத்திவிட்டு, இந்திரஜித்து வேறொரு பெரிய அசுர யாகம் செய்யச் சமயம் செய்து கொண்டான். இது வானர வீரர்களுக்காவது ராம லக்ஷ்மணர்களுக்காவது தெரியாது. அவர்கள் சீதை உயிரிழந்தைப்பற்றி ஆறாத துக்கம் அடைந்து இன்னது செய்வது என்று தோன்றாமல் அறிவு இழந்து கிடந்தார்கள். அப்போது விபீஷணன் வந்து என்ன விஷயம் என்று விசாரித்தான். நடந்ததையெல்லாம் அவனுக்குத் தெரிவித்தார்கள். 'ஐயோ! இப்படி நீங்கள் மோசம் போனீர்களே. ஒருநாளும் ராவணன் சீதையைக் கொல்லவிட மாட்டான். இது ஒரு யுக்தி. பொய்யும் மாயையும் செய்து இந்திரஜித்து தன்னுடைய சூழ்ச்சியை நிறைவேற்றப் பார்க்கிறான். மற்ற எவ்விதத்திலும் காரியம் நிறைவேறாது என்று அவன் இப்போது அசுரயாகம் செய்யப் போகிறான். அது முடிந்து விட்டால் பிறகு நம்மால் அவனை ஜெயிக்க முடியாது. ஆனபடியால் உடனே அந்த யாகத்தை நாம் தடுத்துவிட வேண்டும். சீதை இறந்தாள் என்று எண்ணி ஏமாந்து போகாதீர்கள். லக்ஷ்மணன் உடனே சென்று இந்திரஜித்தினுடைய வேள்வியைக் கலைத்து விடவேண்டும்" என்று யோசனை சொன்னான்.

இந்த யோசனையே சரி என்று ஒப்புக்கொண்ட ராமச்சந்திரன் தம்பியை அனுப்பினான். அவனுடன் ஆஞ்சனேயனும், பல வானரர்களும், விபீஷணனும் சென்றார்கள்.

இந்திரஜித்து பூதகணங்களுக்குச் செய்யவிருந்த யாக பூமிக்குச் சென்றார்கள். வேள்வி தடைபட்டு அங்கே, வெகுநேரம் பெரும் யுத்தம் நடந்தது. தேரின்மேல் நின்று ராவண குமாரன் பாணங்கள் செலுத்தினான். லக்ஷ்மணன் ஆஞ்சநேயன் மேல் நின்று பாணங்கள் செலுத்தினான். இருவரும் விற்போரில் நிபுணர்கள். ஒருவருக்கு ஒருவர் குறைந்தவர்களில்லை. நிகரற்ற திறமையுடன் வெகுநேரம் யுத்தம் நடத்தினார்கள். விபீஷணன் லட்சுமணனுக்கு உற்சாகம் ஊட்டிக் கொண்டு நின்றான். இந்திரஜித்தின் தேர் அழிந்தது. பிறகு தரையில் நின்று இருவரும் போர் செய்தார்கள். முடிவில் லட்சுமணன் இந்திராஸ்திரம் மந்திரம் சொல்லி, ராமன் மேல் ஆணையிட்டுப் பாணத்தைச் செலுத்தினான். இந்திரஜித்தின் தலை அறுபட்டு ஜொலித்துக் கொண்டு தரையில் விழுந்தது. தேவ கானவ கந்தர்வர்கள் ஆகாயத்திலிருந்து புஷ்பமாரி பெய்தார்கள்.

இந்திரஜித்தை வீழ்த்திவிட்டு லஷ்மணன், ராமன் இடம் சென்றான். உடம்பெல்லாம் காயப்பட்டு ரத்தம் பெருகிய நிலையில் லக்ஷ்மணன் மெள்ள ஜாம்புவான், ஹனுமான் இவர்கள் பேரில் சாய்ந்து நடந்தான். இந்திரஜித்தின் வதத்தையறிந்த ராமன், தம்பியை ஆலிங்கனம் செய்து, "லக்ஷ்மணா! இனி ராக்ஷஸ குலம் மடிந்தது" என்று சொல்லி மகிழ்ச்சிப் பரவசப்பட்டான். அடக்கத்துடன் ஒதுங்கி நின்ற லக்ஷ்மணனை ராமச்சந்திரன் தன் மடிமேல் உட்கார வைத்து, உச்சிமோந்து தன் ஆனந்தத்துக்குப் போக்குவிட்டுப் பேசலானான்: "ஒருவராலும் செய்ய முடியாத வீரச்செயலைச் செய்து

தீர்த்தாய். ராவணனுடைய வலக்கை உன்னால் இன்று வெட்டப்பட்டது. விபீஷணனுக்கும், ஹனுமானுக்கும், உனக்கும் சமானம் யார்? இனி எனக்கு ஒரு கவலையுமில்லை. இந்திரனை ஜெயித்த வீரனை நீ ஜெயித்து வதம் செய்துவிட்டாய். சீதையை அடைந்துவிட்டேன் என்றே எண்ணுகிறேன்" என்றான்.

இந்திரஜித்து லக்ஷ்மணனால் வதம் செய்யப்பட்டான் என்கிற செய்தி ராவணனுக்கு எட்டியது. "உன் மகனை விபீஷணனுடைய சகாயத்தைக் கொண்டு லக்ஷ்மணன் கொன்றான்" என்று சொல்லக் கேட்டதும், அவன் துக்கமும் கோபமும் சமுத்திரம்போல் பொங்கி, எரியும் சுடர் எண்ணெய்த் துளிகள்போல் கண்ணீர் விட்டான். அரக்கனுடைய வாயினின்றும் புகையும் நெருப்புமாக மூச்சு வெளிவந்தது.

"ஐயோ! என் அருமைக் குழந்தாய்! ஒப்பற்ற வீரனே! மகேந்திரனை வென்ற சூரனே! யமன் வெற்றியடைந்து விட்டானா! நீ வீர சுவர்க்கம் அடைந்துவிட்டாய். நான் துக்கப்படலாகாது" என்றான்.

"இந்திரஜித்து மாண்டானா! உலகம் எனக்குச் சூன்யமாகிப் போய்விட்டது" என்றான் மறுபடியும்.

"உன் தாயார் மண்டோதரியையும், உன் பிரிய மனைவியையும் என்னையும் விட்டு போய்விட்டாயே! உன் பிரதிக்ஞையை நிறைவேற்றாமலும் பழி தீர்க்காமலும் எங்களை விட்டுப் போய்விட்டாயே!" என்று கதறினான்.

"இந்த விபத்துக்களுக்கெல்லாம் காரணமான ஜானகியைக் கொன்றுவிடுவதே நலம். என் குமாரன் மாயை செய்து சீதையைக் கொன்றதாகக் காட்டினான். இன்று உண்மைச் சீதையையே நான் வெட்டிக் கொல்லப்போகிறேன்" என்று கத்தி எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

சில மூர்க்க அரக்கர்கள் ராவணன் கோபமாகப் புறப்பட்டதைக் கண்டு சந்தோஷ ஆரவாரம் செய்தார்கள். ஆனால் சுபார்சவன் என்ற மந்திரி ராவணனைத் தடுத்தான்.

"மகாராஜனே! என்ன செய்யத் துணிந்தீர்! என்ன காரியம் செய்யப் போகிறீர்! தசக்ரீவா! குபேரனுடைய தம்பியாகிய நீர் ஒரு பெண்ணைக் கொன்று, அந்த அவமானத்தையும் தோஷத்தையும் சம்பாதிக்கப் போகிறீர்! கோபத்தை இவ்விதத்திலா போக்குவது? வேதங்களை ஓதிச் சகல வித்தையும் கற்று விரதம் அனுசரித்த நீர் இப்படிச் செய்யலாகாது; உமக்கு நிகர் யார்? யுத்தத்தில் உம்மை எதிர்ப்பவர்கள் யார்? யுத்தத்தில் வென்று சீதையைக் கிரமமாக அடைவீர்! சந்தேகமில்லை. ராமன் பேரில் கோபத்தைச் செலுத்துவோம். இன்று சதுர்த்தசி; இரவு கழிந்தால் நாளை அமாவாசை. எல்லாப் பலத்தையும் கொண்டு லங்கையிலிருந்து புறப்பட்டு ராம லக்ஷ்மணர்களை வதம் செய்து வெற்றி பெறுவீர். பிறகு சீதையை அடைவீர். பிரம்மாவிடமிருந்து பெற்றிருக்கும் கவசத்தைத் தரித்து ரதம் ஏறிக் கிளம்புவீராக!" என்றான்.

சுபார்சவன் சொன்னதே சரியென்று ராவணனும் ஒப்புக் கொண்டான்.

சிம்மாசனத்தின் மேல் உட்கார்ந்து கொண்டு கொஞ்ச நேரம் பேசாமல் யோசனையில் ஆழ்ந்த வண்ணமாக இருந்தான். பிறகு சேனைத் தலைவர்களுக்குக் கைகூப்பி "நீங்கள் சகல பலத்துடனும் உடனே சென்று இந்த ராமனை வதம் செய்யுங்கள். உங்களால் முடியாவிட்டால் நானே சென்று அவனை ஹதம் செய்வேன்" என்றான்.

மலைகளைப் போன்ற ரதங்களிலும் யானைகளிலும் குதிரைகளிலும் ஏறி ராக்ஷசசேனை முழுபலத்துடன் யுத்தத்திற்குப் புறப்பட்டது.

வானரர்கள் கற்பாறைகளையும், மரங்களையும் பிடுங்கி எடுத்து ராக்ஷசர்களைப் பலமாகத் தாக்கினார்கள். ராக்ஷசர்களும் வானரப்படையைப் பலமாகத் தாக்கினார்கள். ரத்த வெள்ளம் ஆறாகப் பெருகிற்று. வானரர்கள் தாவித் தாவி அரக்கர்களையும் அவர்கள் ரதங்களையும் வாகனங்களையும் ஆயுதங்களையும் ஒடித்தும் அறுத்தும் கிழித்தும் துவம்சம் செய்தார்கள். ஒவ்வொரு ராக்ஷசனையும் அநேக வானரர்கள் சூழ்ந்து கொண்டு கொன்றார்கள்.

ராக்ஷசர்களும் வானரர்களைச் சும்மா விடவில்லை; பலமாக தாக்கி பதினாயிரக் கணக்கில் கொன்றார்கள்.

* * *

ராமன் தன் வில்லை வளைத்து அரக்கர்கள் பேரில் சரமாரி பொழிந்தான். நெருப்பைப்போல் ராக்ஷச சேனையை அவன் பாணங்கள் எரித்தன. தங்களுடைய சகாக்கள் விழுந்து மடிவதைத்தான் கண்டார்கள்; அம்பு மழையில் ராமனை அவர்கள் காணவில்லை. அதற்குப் பதிலாக அநேக ராமன்களைக் கண்டார்கள். எங்கும் அவனைக் கண்டார்கள். எண்ணற்ற ராக்ஷசர்கள் மாண்டார்கள். எண்ணற்ற யானைகளும் மடிந்தன; ரதங்களும் ஒடிந்தன. அரக்கர் சேனை அழிந்தது. எஞ்சினவர்கள் சிதறி ஓடினார்கள். தேவர்களும் கந்தர்வர்களும் சித்தர்களும் ராமனைக் கொண்டாடினார்கள். லங்கையில் ராக்ஷச ஸ்திரீகள் ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு பெரும் கூக்குரலிட்டுப் பிரலாபித்தார்கள். "ராவணனுடைய அறிவீனத்தால் இப்படி ஆயிற்றே" என்று அழுதார்கள்.

## 91. ராவணன் முடிந்தான்

லங்கையில் ஒவ்வொரு வீட்டிலும் பெண்களுடைய அழுகுரல்.

ராவணனுடைய துக்கமும், வெட்கமும், கோபமும், கொந்தளித்துக் கடல்போல் பொங்கிற்று. இனி, தானே தன் முழுப்பலத்துடன் யுத்தம் செய்து, இந்தச் சத்துருவை அழிக்கவேண்டும் என்று தீர்மானம் செய்துகொண்டு, புறப்பட்டான். தன் பலத்தைப் பற்றியும், சௌரியத்தைப் பற்றியும், தான் அடைந்த வரங்களின் சக்தியைப் பற்றியும் அவனுக்குச் சந்தேகமே இருக்கவில்லை. ஆனபடியால் வெகு தைரியமாகவே சென்றான்.

எட்டுக் குதிரைகள் பூட்டி, எல்லாவித ஆயுதங்களும் நிறைந்த திவ்வியமான தன் தேரில் ஏறினான்.

ரதம் பூமி அதிரச் சென்றது. அரக்க வீரர்கள் பலர் தத்தம் தேர்களில் ஏறி அவனைச் சூழ்ந்து சென்றார்கள்.

லங்கையிலிருந்து ராவணன் புறப்பட்டதும் பட்சிகள் கோரமாகக் கூவின; சூரியனுடைய ஒளி மங்கிற்று. இன்னும் பல கெட்ட சகுனங்கள் காணப்பட்டன. ராவணன் இவற்றைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல், வடக்குக் கோட்டை வாயில் வழியாக யுத்த களத்துக்குச் சென்றான். விரூபாக்ஷன், மகோதரன், மகாபார்சவன் என்ற அரக்க வீரர்கள் ராவணனைத் தொடர்ந்து தங்கள் ரதங்களில் சென்றார்கள்.

ராவணனைத் தொடர்ந்து சென்ற வீரர்கள், சுக்ரீவனாலும் அங்கதனாலும் வீழ்த்தப்பட்டு உயிர் நீத்தார்கள். லக்ஷ்மணன் லங்கேசனை எதிர்த்தான். லக்ஷ்மணனுடைய தாக்குதலை ராக்ஷச ராஜன் கொஞ்சமும் லட்சியம் செய்யவில்லை. லக்ஷ்மணனுடைய அம்புகளைத் தன் பாணங்களால் எளிதாக அகற்றிவிட்டு, ராவணன், ராமனை நோக்கி நேராகச் சென்று தாக்கினான். பலமான பாணங்களைச் செலுத்தினான். அவற்றை ராமன் தன் பாணங்களால் தடுத்துவிட்டதைக் கண்டு, இன்னும் அதிக சக்தி பொருந்திய பாணங்களைப் பிரயோகம் செய்தான்.

அதிலும் பயன் அடையவில்லை, யுத்தம் மிகக் கடுமையாக வெகு நேரம் நடந்தது.

ராவணனுடைய அம்புகள் ராமனுடைய நெற்றியில் பட்டும், அவை அவனை ஒன்றும் தேசப்படுத்தவில்லை. ராமனுடைய கோதண்டத்திலிருந்து பாய்ந்த சரங்களும் ராவணனுடைய கவசத்தைப் பிளக்கவில்லை. ராமனுடைய அஸ்திரங்களை ராவணனும் தன் பாணங்களால் தடுத்துத் தள்ளினான்.

இவ்வாறு ராவணனுக்கும் ரகுவீரனுக்கும் அற்புத யுத்தம் நடந்தது. இருபக்கத்திலும் விடப்பட்ட அஸ்திரங்கள் மந்திர சக்தி பொருந்தியவை. அவற்றின் பிரமிக்கத்தக்க செய்கைகளை அதுவரையில் யாரும் கண்டதில்லை. ராவணனுடைய அஸ்திரங்களின் சக்தியைக் கண்டு ராமன் மிக வியந்தான். இருவரும் ஒன்றுக்குமேல் ஒன்றாக மிகச் சக்தி வாய்ந்த அஸ்திரங்களைப் பிரயோகித்தார்கள். அஸ்திரங்களின் ஜ்வாலைகளினால் ஆகாயமெல்லாம் பல சூரியன்கள் சேர்ந்தாற்போல் பிரகாசித்த மாதிரி ஜோதி உண்டாயிற்று.

ராவணனுடைய சகல அங்கங்களையும் பாணங்களால் ராமன் துளைத்தான். ஆயினும் யுத்தம் முடிவு பெறவில்லை.

பிறகு லக்ஷ்மணனும் விபீஷணனும் ராவணனைத் தாக்கினார்கள். ராவணன் தன் தம்பியைக் கொல்ல மிகக் கோபத்துடன் ஒரு சக்தி ஆயுதத்தை வீசியெறிந்தான். அது விபீஷணன் மீது விழுவதை லக்ஷ்மணன் ஒரு பாணத்தால் தடுத்து விட்டான். அது துண்டிக்கப்பட்டு எரியும் கொள்ளிக்கட்டையைப் போல் பூமியில் விழுந்தது. மறுபடியும் ஒரு சக்தி ஆயுதத்தை, 'இதோ செத்தாய்' என்று வீசினான். அந்தச் சக்தியின் தாக்குதலினால் லக்ஷ்மணன் பூமியில் பிரக்ஞையிழந்து விழுந்தான். ஆனால் உயிர் போகவில்லை.

இதைக் கவனிக்காமல், ராமன் ராவணனை மிகப் பலமாகத் தாக்கிக் கொண்டேயிருந்தான். அவ்விருவருக்கும் யுத்தம் நடந்து கொண்டிருக்கும்போது, வானர வீரர்கள் யோசித்து லக்ஷ்மணனுடைய உயிரைக் காப்பாற்றுவதற்காக ஆஞ்சநேயனை ஔஷதி மலைக்கு அனுப்பினார்கள். ஹனுமான் இரண்டாம் தடவை வடக்கே ஆகாயத்தில் தாவிச் சென்று ஔஷதிகளைத் தேட அவகாசமில்லையென்று மலையையே தூக்கிக்கொண்டு திரும்பி வந்தான். ஔஷதிகளைப் பிரயோகம் செய்த பிறகு லக்ஷ்மணன் சொஸ்தப்பட்டு எழுந்து, யுத்தத்தில் மறுபடியும் கலந்து கொண்டான்.

இதற்குள் இந்திரனுடைய தேரை மாதலி, யுத்தபூமிக்கு ராமனுக்காகக் கொண்டுவந்து சேர்த்தான்.

"தேவராஜன் தங்களுக்காக அனுப்பியிருக்கிறான். தேரில் ஏறுவீராக! தேவர்களுக்குச் சத்துருவான ராவணனை வதம் செய்வீராக!" என்றான், இந்திரனுடைய சாரதி. ராமனும் ரதத்தை வலம் செய்து நமஸ்கரித்துவிட்டு ஏறினான்.

பிறகு அற்புத யுத்தம் நடந்தது. ராவணன் மிகவும் அடிப்பட்டு மனம் தளர்ந்து மயக்கமாக இருந்தான். இதைக்கண்ட அவன் சாரதி மெதுவாகத் தேரை யுத்த பூமியிலிருந்து வெளியே நடத்திக் கொண்டு போனான்.

கொஞ்ச நேரத்தில் ராவணன் மயக்கம் தெளிந்து "ஏன் தேரை யுத்த பூமியை விட்டுக் கொண்டு வந்தாய்?" என்று சாரதியைக் கோபித்து, மறுபடியும் திருப்பச் சொல்லி ராமனுடைய தேர்முன் நின்றான். மறுபடியும் கோர யுத்தம் ஆரம்பித்தது.

அஸ்திரத்துக்குப் பிரதியஸ்திரம் செலுத்திக்கொண்டு இருவரும் அதுவரையில் யாரும் கண்டிராத அற்புத முறையில் ரதங்களைச் செலுத்தி நீண்ட நேரம் யுத்தம்

நடத்தினார்கள். சேனையிலிருந்த வீரர்கள் பிரமித்துப்போய் அப்படியே பார்த்துக்கொண்டு நின்றார்கள்.

அதைக் கவனித்து வந்த சாரதி மாதலி, ராமனுக்கு மெதுவாகச் சொன்னான். "அரக்கனுடைய விநாச காலம் நெருங்கிவிட்டது. தாமதித்துக் கொண்டிருப்பது ஏன்? பிரம்மாஸ்திரத்தை மறந்து விட்டீரா?"

இவ்வாறு மாதலி சொன்னதும், ராமன் அந்த திவ்வியாஸ்திரத்தை உரிய மந்திரத்தைச் சொல்லிச் செலுத்தி விட்டான். அதுவரையில் எத்தனையோ தடவை அரக்கனுடைய தலைகள் அறுபட்டாலும் புதிய தலைகள் முளைத்துக் கொண்டே வந்தன.

பிரம்மாஸ்திரமானது ஜ்வாலை விட்டுக்கொண்டு, ராவணனை நோக்கிச் சென்று அரக்கனுடைய மார்பைத் துளைத்தது. லங்கேசனுடைய கையிலிருந்த வில் கீழே நழுவி விழுந்தது. அரக்கன் உயிர் மாய்ந்தது. ரதத்திலிருந்து உயிரற்றுக் கீழே விழுந்தான்.

தேவ துந்துபிகள் முழங்கின. ஆகாயத்திலிருந்து புஷ்பமாரி பெய்தது. ராகவனையும் அவனுடைய ரதத்தையும் புஷ்பக் குவியல் மறைத்து விட்டது. லக்ஷ்மணன், விபீஷணன் ஜாம்பவான் முதலிய வீரர்கள் சூழ்ந்துகொண்டு, ராமனைப் பூஜித்து ஆனந்தத்தில் மூழ்கினார்கள்.

விபீஷணன் உயிரற்றுக் கிடந்த அண்ணனைப் பார்த்து, "ஹா வீரனே! அற்புதச் செயல்களைச் செய்தவனே! சகல சாஸ்திரங்களையும் படித்து அறிவு பெற்றவனே! வீர விக்ராந்த விக்யாத விநீத நய கோவிந்தனே! வீழ்த்தப்பட்டு இன்று இரு புஜங்களையும் நீட்டிப் பரப்பி உயிர் துறந்து தரையில் கிடக்கிறாயே!" என்று அழுதான். அண்ணன் மரணத்துக்குத் தானே வேலை செய்தான். ஆனபோதிலும், செத்துக்கிடந்த அண்ணனைப் பார்க்கும்போது, அந்தச் சந்தர்ப்பத்தில் சமீபத்தில் நடந்ததெல்லாம் மறந்துபோய்,

பழைய வாசனையும், வாழ்க்கையும், நினைவுகளும் தோன்றி, ரத்த பாசத்தின் பயனாகத் துக்கம் உண்டானது சகஜம்.

"ஆணவத்தால் மதியிழந்து, துராலோசனை சொன்னவர்களால் சூழப்பட்டு நான் சொன்னதை நீ புறக்கணித்தாய். என்ன விளையும் என்று சொன்னேனோ அதுவே நடந்து விட்டது! செய்த பெருந் தவறுகளின் பயனை அடைந்துவிட்டாய். மதம் சொரியும் யானை வீழ்த்தப்பட்டுக் கிடப்பது போல் மண்ணில் கிடக்கிறாயே! சூரர்களுக்குள் மகா சூரனாயிருந்த ராக்ஷஸேந்திரா!" என்றான்.

இவ்வாறு துக்கப்பட்டுக் கொண்டிருந்த விபீஷணனைப் பார்த்து, ராமன் மெதுவாகப் பேசலானான்.

"மகா வீரனைப்போல் யுத்தம் செய்தான். தன் சௌரியத்தைப் பூரணமாகக் காட்டிவிட்டு உயிர் நீத்தான். இத்தகைய மரணம் மேலான மரணம். இதற்குத் துக்கப்படலாகாது. போரில் புறங்காட்டாமல் இறப்பது வீரர்களுக்கு உண்டாகக்கூடிய முடிவு அல்லவா? வெற்றியோ மரணமோ எதுவாயினும் சரியே என்றல்லவோ வீரர்கள் யுத்தத்தில் இறங்குகிறார்கள். வீரசுவர்க்கத்தை ராவணன் அடைந்தான் என்பதில் சந்தேகமில்லை. மேலும் நடக்க வேண்டிய காரியத்தை தம்பியாகிய நீர் நடத்துவீர். உயிர் நீத்தபின் பகை என்பது தீர்ந்துவிட்டது. லங்கேசனுக்கு உத்திரகிரியைகளை விரோதியாய் இருந்த நானே செய்யலாம். உம்முடைய சகோதரன் எனக்கும் சகோதரனே ஆவான் அல்லவா?" என்று ராமன் சொல்லி, விபீஷணனுடைய மனத்திலுண்டான குழப்பங்களை அகற்றி, ராவணனுடைய உத்தம கதிக்காகச் செய்ய வேண்டிய கிரியைகளை நடத்தும்படியாகச் சொன்னான்.

ராவணனுடைய அந்தப்புர ஸ்திரீகள் வந்தார்கள். அவர்களுக்குப் பின் சோகமே வடிவம் எடுத்ததுபோல் வந்தாள் பட்டமகிஷியும் ராவணேசுவரனுடைய மிகப்பிரிய

மனைவியுமான மண்டோதரி. அழகிகளுக்குள் அழகியான அவள் தரையில் விழுந்து கிடந்த தன் புருஷனைக் கண்டதும். 'ஓ' என்று கதறி அவனை அணைத்துக் கொண்டு புரண்டாள்.

"உமக்குக் கோபம் வந்தால் இந்திரனும் எதிரில் நிற்க மாட்டானே. தேவ யக்ஷ கந்தர்வர்கள் எவருமே உம்மைக் கண்டு நடுங்கி எட்டுத் திசைகளிலும் ஓடுவார்களே. ஒரு மானிடனால் தோல்வியடைந்து வீழ்த்தப்பட்டீரே. உமக்குக் கோபம் வரவில்லையா? காட்டில் திரிந்துவந்த ஒரு மானிடன் உம்மை வீழ்த்தி விட்டானே! இது எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! மூன்று லோகங்களிலும் பரவிய உம்முடைய வீர பராக்கிரமம் இதை எப்படிப் பொறுத்தது? ஐயனே! நான் முந்தியே சொன்னேன் அல்லவா? இந்த ராமன் மானிடன் அல்ல. இந்திரனும் அக்கினி தேவனும் யமனும்கூட உம்மை வெல்ல முடியாது. இவன் ஆதி இடை அந்தம் அற்ற மகா விஷ்ணுவே. மனித உடல் எடுத்து அவதரித்து வந்தவன். இவன் ஜனஸ்தானத்தில் உம்முடைய சகோதரன் கரனைத் தரையில் நின்று வதம் செய்தபோதே நான் சொன்னேன் அல்லவா? யாரும் பிரவேசிக்க முடியாத இந்த லங்கைக்குள் ஹனுமான் புகுந்து நகரத்தை நாசம் செய்தபோதே எனக்குத் தெரிந்துவிட்டது. 'இந்த விரோதத்தைக் கட்டிக் கொள்ளாதீர்' என்று நான் சொன்னதை நீர் கேட்கவில்லை. மகா பதிவிரதையான சீதையின்மேல் ஏன் மோகங் கொண்டீர்? என்னைவிட அவளுடைய வடிவழகு எவ்விதத்தில் மேலானது என்று மதியிழந்தீர்? தனியாக இருந்த அவளை எடுத்து வந்தது மகா பாவம் ஆயிற்றே! அதைச் செய்துவிட்டு, இப்போது அதன் பயனை அனுபவித்தீரே! அழிந்து போகவே மதியிழந்தீர். விபீஷணன் அல்லவோ நல்ல பேறு அடைந்து விட்டான்? நீரோ பிரேதமாகக் கிடக்கின்றீர். காலன் அல்லவோ சீதையின் வடிவுகொண்டு உம்மை இழுத்துச் சென்று இந்த விநாசத்தில் தள்ளிவிட்டான். சீதையும் ராமனும் இப்போது சந்தோஷமாகக் கூடிவிட்டார்கள்.

என்னையும் உம்முடைய குலத்தையும் அனைவரையும் துக்க சாகரத்தில் தள்ளிவிட்டுப் போய்விட்டீரே. ஐயோ! உம்முடைய அழகிய திருமேனி இந்த நிலைமையிலிருக்கிறதே! ராம பாணங்களால் துளைக்கப்பட்டு, ரத்தச் சேறும் புழுதியும் படிந்து பிரகாசமிழந்து கிடக்கிறீரே? என்னால் பொறுக்க முடியவில்லையே! நான் என்ன செய்வேன்! லங்கேசன் என் புருஷன்! இந்திரனை வென்றவன் என் மகன்! எனக்கு என்ன குறை என்று கர்வங்கொண்டு மோசம் போனேனே! ஒரு வார்த்தை பேசமாட்டீரா? என்னை விதவையாகச் செய்துவிட்டீரே! நான்தான் கெட்டேன்!"

இவ்வாறு பிரலாபித்துக்கொண்டு மண்டோதரி ராவணனுடைய பிரேதத்தின்மேல் விழுந்து பிரக்ஞையற்றுக் கிடந்தாள்.

## 92. மங்களம்

ராமச்சந்திரனுடைய ஏவலின்படி, விபீஷணனுக்கு லங்காபுரியில் ராஜ்யாபிஷேகம் உடனே விமரிசையாக நடத்தப்பட்டது. லங்கேசனாகப் பட்டம் சூட்டப்பட்ட விபீஷணன், நகரத்துக்கு வெளியில் பாசறைக்குள்ளிருந்த ராமனிடம் வந்து வணங்கினான்.

"அரசனுடைய உத்தரவு பெற்று லங்கைக்குள் சென்று சீதைக்குச் செய்தியைத் தெரிவிப்பாய்" என்று ராமன் ஹனுமானிடம் சொல்ல, அவனும் அவ்வாறே விபீஷணன் ஆணையைப் பெற்று அசோக வனம் சென்றான்.

ஹனுமான் சீதையைக் கண்டான். பிராட்டியின் ஆனந்தம், பேச்சுக்கு இடம் தரவில்லை.

"ஏன் அம்மணி பேசவில்லை?" என்றான் ஹனுமான்.

"பேச முடியவில்லை, என் அப்பனே! உனக்கு நான் என்ன செய்து, நான் பட்ட கடனைத் தீர்ப்பேன்? உன்

விவேஹம், உன் வீரம், உன் மனோபலம், உன் பொறுமை, உன் வினயம் உலகத்தில் வேறு யாருக்கு உண்டு? உனக்குச் சமானம் இந்த பூவுலகில் ஒருவரும் இல்லை" என்றாள். கண்களில் ஆனந்த வெள்ளம் பெருக இவ்வாறு சீதை சொன்னாள். அப்போது ஹனுமான் சிறை காத்த அரக்கிகளைப் பார்த்தான். அவர்களைக் கண்டதும் அவனுடைய பழைய கோபம் மறுபடியும் பொங்கிற்று.

சீதையைப் பார்த்து, "உம்மை வேதனை செய்த இந்தப் பாபிகளை வதம் செய்வேன். உத்தரவு அளிப்பீராக!" என்றான் ஹனுமான்.

"வேண்டாம் அப்பனே. தவறு செய்யாதவர்கள் உலகத்தில் யாரே உளர்?" என்றாள் சீதை.

ந கஸ்சித் ந அபராத்யதி

பிராட்டியின் இந்தச் சொற்களை வைஷ்ணவ பக்தர்கள் அமிருதமாகப் பாவிக்கிறார்கள். தேவியின் அருள் இருக்கப் பயம் என்பது கிடையாது. எந்தப் பாபியும், பிராட்டியின் பொன்னடியை அடைந்து உய்யப் பெறலாம் என்பது சாஸ்திரம்.

"அரசனுடைய உத்தரவை அவர்கள் நடத்தினார்கள். அவர்கள் பேரில் என்ன குற்றம்? அரசன் மாண்டான், இவர்களை இப்போது தண்டிப்பது நியாயமல்ல" என்றாள் சீதை.

"ராமனுக்கு என்ன செய்தி கொண்டுபோக உத்தரவு?" எனறு ஹனுமான் கேட்டான்.

"அவரைக் காண ஆசைப்படுகிறேன். அவ்வளவே!" என்றாள்.

ராமனிடம் ஹனுமான் திரும்பிச் சென்று, சீதையைத் தரிசித்து வந்ததாகச் சொன்னான். என்ன காரணமோ

ராமனுடைய முகம் கருத்தது. கண் கலங்கிற்று. பெரும் யோசனையில் ஆழ்ந்தான். கொஞ்ச நேரங் கழித்து, "விபீஷணா! சீதையை நீராட்டிச் சகல பூஷணங்களும் தரிக்கச் செய்து அழைத்து வருவீர்" என்றான்.

செய்தியை அசோக வனத்துக்குக் கொண்டுபோனதும் சீதை, "நான் இருக்கும் இந்த நிலையிலேயே போக விரும்புகிறேன்" என்றாள்.

"அப்படியல்ல தேவி! சக்கரவர்த்தித் திருமகன் உத்தரவுப்படி செய்யவேண்டும்" என்று விபீஷணன் சமாதானப்படுத்தினான்.

மங்கல நீராடி, சகல பூஷணங்களும் தரித்துப் பல்லக்கில் சென்றாள் சீதை.

* * *

சீதை வருகிறாள்' என்று தெரிந்ததும், ராமன் தன் தியானத்தினின்று விழித்தான். நடந்துபோன நிகழ்ச்சிகள் எல்லாம் அவன் மனத்தில் சமுத்திர அலைகளைப்போல் மோதின. ரோஷம், துயரம், சந்தோஷம் கலந்த நிலையில் இருந்தான்.

வானரப் படையின் அபாரமான கூட்டத்துக்கு நடுவில் சீதையைப் பல்லக்கில் எடுத்து வரும்பொழுது, வானரர்கள் தேவியைப் பார்க்க ஆசைப்பட்டுப் பெருங்கூட்டமாகச் சுற்றிக் கொண்டார்கள். வானரத் தலைவர்கள் அவர்களைத் தள்ளி அப்புறப்படுத்தவும் பெருங் குழப்பம் உண்டாயிற்று.

"யாரையும் தடை செய்ய வேண்டாம். எனக்கு உதவிய இந்த வானரர்கள் என் ஆப்த நண்பர்கள் ஆவார்கள். என்னைச் சுற்றி இவர்கள் இருப்பதே அவர்களுக்கு மகிழ்ச்சி தரும். யாரையும் விலகச் சொல்ல வேண்டாம்" என்றான் ராமன்.

ராமனுடைய இப்போதைய மன நிலையானது பக்கத்திலிருந்த நண்பர்கள் யாருக்கும் விளங்கவில்லை. லக்ஷ்மணனுக்குக்கூட விளங்கவில்லை.

பல்லக்கிலிருந்து இறங்கித் தரையைப் பார்த்த வண்ணமாகச் சீதாதேவி ராமனை நோக்கி நடந்தாள். "ஆரிய புத்திரனே!" என்று ஒரு சொல்லைச் சொல்லிவிட்டு விம்மி விம்மி அழுதாள்.

"சத்துருவை வதம் செய்தேன்; உன்னை மீட்டேன்; என் க்ஷத்திரியக் கடமையைச் செய்து முடித்தேன். என் சபதம் முடிந்தது" என்றான் ராமன்.

இவ்வாறு பொருள் விளங்காத, கொஞ்சமும் எதிர்பாராத சொற்கள் வெளிவந்ததும் அல்லாமல், சக்கரவர்த்தித் திருமகனுடைய முகம் ஏனோ கருத்தது; பிறகு இன்னும் கடுஞ்சொற்களைச் சொன்னான்.

"உனக்காக அல்ல இந்த கோர யுத்தத்தை நான் நடத்தியது. என் கடமையைத் தீர்க்கத்தான் செய்தேன். உன்னையடைந்தது எனக்கு இப்போது மகிழ்ச்சி தரவில்லை. அபவாதம் என்கிற புகை உன்னை மூடி மறைக்கிறது. இப்போது என்ன செய்யப் பிரியப்படுகிறாய்? நீ என்னை விட்டுத் தனியாகத்தான் இருக்கவேண்டும். நம்முடைய பந்துக்கள் நண்பர்கள் இவர்களில் எவருடைய பாதுகாப்பிலாவது நீ இருக்கலாம். க்ஷத்திரியனான ஒருவன் அயலான் இல்லத்தில் வெகு காலம் இருந்த தன் மனைவியை எப்படித் திரும்ப அழைத்துக் கொள்வான்? உன் யோசனை என்ன?"

சீதை ராமனை நோக்கினாள். அவள் கண்களில் நெருப்புப் பொறி பறந்தது. "தகாத மொழிகளைப் பேசினீர். இதயத்தைப் பிளக்கும் சொற்களைக் காதால் கேட்டேன். பாமரர்கள் சொல்லக்கூடிய சொல் ஆரியபுத்திரனுடைய வாயினின்று வந்தது. அரக்கன் என்னை பலாத்காரமாகத்

தூக்கி வந்தான். உம்முடைய ரோஷம் உம்முடைய விவேகத்தைக் குலைத்து விட்டது. நாதனே! நான் எந்தக் குலத்தில் பிறந்தவள் என்பதை மறந்தீர். ஜனகராஜன் என் தகப்பனார் ஆவர். அவரால் வளர்த்துப் பண்பட்டவள் நான். லக்ஷ்மணா! கட்டைகளைக் கொண்டு வருவாய் தீயை வளர்ப்பாய்!' என்றாள்.

அப்போது, ராமன் செய்து வந்ததையெல்லாம் பார்த்து மகா கோபம் பொங்கிப் பொறுக்கமாட்டாமலிருந்த லக்ஷ்மணன், சீதையின் உத்தரவைக் கேட்டதும், ராமன் முகத்தைப் பார்த்தான்.

ராமன், "வேண்டாம்" என்று சொல்லவில்லை. மனம் இளகினதாக யாதொரு சின்னமும் காணப்படவில்லை.

சீதை சொன்னபடியே லக்ஷ்மணன் தீ மூட்டிவிட்டான். பிராட்டியானவள் தரையைப் பார்த்த வண்ணமாகக் கணவனை வலம் செய்துவிட்டு, "தெய்வங்காள்! உங்களை வணங்குகிறேன்! மகரிஷி கணங்களே! உங்களை நமஸ்கரிக்கிறேன். அக்கினியே! என் பரிசுத்தத்தை நீ அறிவாய். இதோ உனக்குள் பிரவேசிக்கிறேன்" என்று சொல்லிக் கொழுந்துவிட்டு எரியும் தீயில் குதித்து விழுந்தாள்.

தேவர்கள் அனைவரும் வந்து கூடிவிட்டார்கள். பிரமன் பேசினான்.

"நாராயணா, ராவணனைச் சம்ஹாரம் செய்ய அவதரித்த சர்வேசுவரனே! இவள் உம்முடைய பிராட்டி லக்ஷ்மியன்றோ!" என்றான் பிரமன். எல்லோரும் துதித்த வண்ணம் நின்றார்கள். அச்சமயம் ஓர் அற்புதம் நிகழ்ந்தது.

சாக்ஷாத் அக்கினி தேவன் எரியும் நெருப்பிலிருந்து கிளம்பிச் சீதையை அப்படியே வஸ்திர பூஷண தாரியாக எடுத்து ராமனிடம் தந்தான்!

பிரமனைப் பார்த்து ராமன் சொன்னான்:

"நான் தசரதன் மகன். அவ்வளவுதான் எனக்குத் தெரியும். நான் யார், எங்கிருந்து வந்தேன் என்பது உங்களுக்குத்தான் தெரியும். நீங்கள்தான் சொல்ல வேண்டும்."

இவ்வாறு ராமன் பிரமனுக்குச் சொல்லிவிட்டுத் தேவியை அழைத்துக் கொண்டான்.

"சீதையே! உன் பழியற்ற புனிதம் எனக்குத் தெரியாதா? நான் செய்த பரீட்சை மக்களின் திருப்திக்காகவே. ஜனங்கள் சொல்லுவார்கள் அல்லவா- 'ராமன் காமத்தால் மதியிழந்தான். உலக வழக்கத்துக்கு மாறுபட்டு நடந்து கொண்டான்' - என்று அவர்கள் எண்ணுவார்களே, அதற்காகவே இப்படி செய்தேன்" என்று சொல்லி ராமன் அவளை இரு கைகளையும் நீட்டி அழைத்துக் கொண்டான்.

அப்போது தசரதனும் வந்து இறங்கி, சக்கரவர்த்தித் திருமகளைத் தன் மடியில் வைத்து ஆசீர்வதித்தான்.

"குழந்தாய்!" என்று தசரதன் சீதையை நோக்கி, "என் மகனை மன்னிப்பாய்! உலக தருமத்தைக் காப்பதற்காக அவன் செய்த குற்றத்தைப் பொறுத்துக் கொள்வாய். உனக்கு மங்களம்!" என்றான்.

விவேகம் படைத்த தலைவர்கள், பாமரர்களைத் திருப்தி செய்ய, அவர்களுடைய அவிவேகத்துக்கு இணங்கி நடப்பதை இந்தக் காலத்தில் பார்க்கிறோம் அல்லவா? ராமச்சந்திரனுடைய காலத்திலும் இந்தக் குறை இருந்ததாகக் காணப்படுகிறது. இதைத்தான் தசரதன் எடுத்துக்காட்டி, "என் மகனை மன்னிப்பாயாக குழந்தாய்" என்று சீதையைக் கேட்டுக் கொண்டான்.

இந்திரனும் வரம் தந்தான். யுத்தத்தில் ராமனுக்காக மாண்டு பிரேதங்களாகக் கிடந்த வானரர்கள் அனைவரும் உயிர் பெற்று எழுந்தார்கள்.

* * *

வனத்தில் ஆசிரமத்தில் தனியாக விட்டுப்போன தேவியை இழந்து துயரத்தில் மூழ்கி, பிறகு ராமன் தடையும் தடங்கலும் தாண்டி, மகா பல பராக்கிரமம் பெற்ற அரக்கனாகிய திருடனை வதம் செய்துவிட்டு, மறுபடியும் தேவியை அடைந்தான். சீதையும் நாதனை அடைந்து விட்டாள். இருவரும் விமானத்தில் அயோத்திக்குத் திரும்பிச் சென்றார்கள். கூட, நண்பர்களாகிய வானர வீரர்களும் விபீஷணன் முதலியவர்களும் சென்றார்கள். ராவணனுடைய புஷ்பக விமானத்தின் மேலே வாயு மார்க்கமாகப் போய்க்கொண்டிருந்தபோது, சக்கரவர்த்தித் திருமகன், தானும் லக்ஷ்மணனும் என்றும் மறக்க முடியாத எல்லா இடங்களையும் சீதைக்குக் காட்டி விளக்கிக்கொண்டே சென்றான். "அதோ பார்! உன்னை நான் அடைவதற்காக நளன் கட்டித் தந்த சேது! அதோ பார் கிஷ்கிந்தை! ஹனுமானையும், சுக்ரீவனையும் நான் நண்பர்களாக அடைந்த இடம் இதுவே!" என்றெல்லாம் சொல்லிக் காட்டிக் கொண்டே சென்றான்.

பரத்துவாஜ ஆசிரமத்தில் தங்கி, அங்கிருந்து குகனுக்கும் பரதனுக்கும் முன்னதாகச் செய்தி அனுப்பினார்கள்.

அயோத்தி நகரம் ஆனந்த வெள்ளத்தில் தெப்பமாக மிதந்தது. பரதனைச் சேர்ந்து விட்டான் ராமன். கூனியும் கைகேயியும் பரதனுக்காகப் பதவியை விரும்பினார்கள். விரும்பி ஏதோதோ செய்தார்கள். அவர்கள் கோரிய பயனைக் காட்டிலும் பன்மடங்கு பெரிய மகிழ்ச்சியையல்லவோ இப்போது அடைந்தான் பரதன், ராமனடியில் பணிந்து! எந்தக் கிரீடம் தரும் ராமன் பாதங்கள் அளிக்கும் மகிழ்ச்சியை? எந்த ராஜ்ய பதவி தரும், பரதன் அடைந்த பல்லாண்டு புகழை? 'பரிசுத்தத்தில் பரதாழ்வானுக்கு ஒப்பாகார் பெருமாள்; யோக்யதையில்

பரதாழ்வானுக்கு ஒப்பாகார் பெருமாள்.' இவ்வாறு திவ்வியப் பிரபந்தங்களில் ஸ்ரீராமனுக்கும் மேலே தைரியமாகப் பரதாழ்வனை வைத்துச் சொல்லப்படுகிறது.

ராமன் திரும்பி வரும்வரை, பதினான்கு வருஷங்கள் அண்ணன் பாதுகைகளைச் சிம்மாசனத்தில் வைத்து, ராஜ்யத்தைத் தொட்டுக்கொண்டு தவம் கிடந்தான் பரதன். இப்போது தந்தை தசரதன் முதலில் விரும்பிய வண்ணம், ராமன் ராஜ்ய பட்டாபிஷேகம் பெற்றதைக் கண்டு, இவ்வளவு நாள் தவம் கிடந்த பரதன், உள்ளம் பூரித்து மகிழ்ந்தான்.

ஆஞ்சனேயனைப் பற்றிச் சொல்லவேண்டியதே இல்லை. பிராட்டி, ராமன் கையிலிருந்த முத்து மாலையை வாங்கி ஹனுமான் கழுத்தில் போட்டாள். போடும் சமயம் தேவியின் அன்பு முகத்தில் முறுவலாகப் பூத்தது! ஹனுமானுக்கு வேறு என்ன வேண்டும்?

வால்மீகியால் பாடப்பட்ட சக்கரவர்த்தித் திருமகன் கதையைச் சுருக்கமாகச் சொல்லி முடித்தேன். கணக்குப் பார்க்காமல் எழுதிக்கொண்டு போனதும், எப்படியோ விஜயதசமியன்று சரியாக முற்றுப் பெற்றது. படித்தோரும் கேட்டோரும் எல்லாப் பாபத்தினின்றும் கஷ்டத்தினின்றும் மீள்வார்களாக!

ஞான சாகரமான ஸ்ரீசங்கரர் சொன்னார்: "தசரதன் திருமகனை நாம் துதித்து, ஆராதித்துத் தியானித்து, உள்ளத்தில் நிறுத்தி வைத்தோமானால் செய்த பாவங்களனைத்தும் அற்றுப் போகும். ராமாவதாரத்துக்குப் பிறகு மகா சௌலப்ய மூர்த்தியாக மீண்டும் அவதரித்தான் பகவான். கோவிந்தனாக இடையர்களுடன் வாசம் செய்து வளர்ந்து, பிறகு அர்ஜுனனுக்கு வார் பிடித்துக் கோல் எடுத்துத் தேர் ஓட்டினான். பார்த்தனுக்கு ஞானம் உபதேசித்துவிட்டு, முடிவில் பகவான் சொன்னான்: "நான்

ஒருவனே புகலிடம் என்று அறிந்து, ஐயம் தீர்ந்த உள்ளத்துடன் என்னை அடைவாய், எல்லாப் பாபங்களி னின்றும் உன்னைத் தவிர்ப்பேன். இது சத்தியம். அன்பனே கவலைப்படாதே!" கண்ணபிரான் செய்த இந்தச் சூளுரை நம் எல்லோருக்குமாகச் செய்த சூளுரையாகும். நம் அனைவருக் காக அர்ஜுனன் அந்த வாக்கைப் பகவானிடம் பெற்றான்.

## 93. முடிவுரை

சீதா தேவியை ஆன்மாவாகவும் ராமனை ஆண்ட வனாகவும் வைத்து, ஆண்டவனை மறந்து ஆன்மாவைப் பகவானே தேடித் துரத்திப் பிடிப்பவராக ராமாயணத்திற்கு அத்யாத்ம உரை பெரியோர்கள் சொல்லி உபந்யஸிப்பார்கள். அதாவது ஆட்கொள்வதில் பகவானே ஆவலாக இருக்கிறான்; நாம் தடை செய்யாமல் மட்டும் இருந்தால் போதும் என்று.

மற்றொரு விதமாகவும் சொல்லுவார்கள்; பிராட்டி ஆண்டவனுடைய கருணைத் தத்துவத்தின் மூர்த்தியாவாள். அந்தக் கருணை வடிவமே ஆண்டவன் மார்பில் இடம் பெற்றிருப்பதாகக் கொண்டு, மகாவிஷ்ணுவைப் பக்தி செய்கிறோம். தேவியின் கருணைக் கண்ணோட்டமே நாம் பகவான் பாதங்களை அடையும் சாதனம் என்றும் உரைத்து உபந்யஸிப்பார்கள்.

'தையலிடம் கொண்ட பிரான் தன்கழலே
சேரும்வண்ணம் ஐயன் எனக்கு அருளியவாறு'

என்று மாணிக்கவாசகர் பாடியதும் இதுவே.

தேவி வேறு, ஆண்டவன் வேறு அல்ல. ஈசனும் அவன் கருணையும் பிரிந்துபோனால், அதாவது ஈசனின் கருணையை நாம் பெறாமல் போனால், நாம் அனைவரும் ராவணன் பட்டபாடு படவேண்டியதாகும்.

ராமாயணத்துக்கு இன்னும் பல உரைகள் தந்து கொண்டு அனுபவிக்கலாம். நிஜ வைரக் கல்லின் ஒளியில் பல நிறங்களைக் காண்பதுபோல் காணலாம்.

பெரியோர்கள் என்னுடைய எழுத்திலும் கருத்துக்களிலும் பல குறைகள் காண்பார்கள். இதில் ஒன்றும் ஆச்சரியம் இல்லை. குறைகளை மறந்து என்னுடைய எழுத்தினால் உண்டான பயனைப் பாராட்டுவார்களாக!

குழந்தைகளுக்கு ஒரு வார்த்தை:

நான் சக்கரவர்த்தித் திருமகன் எழுதினது முக்கியமாக உங்களுக்காவேதான். வால்மீகியை வீட்டில் பெரியவர்கள் படிக்கலாம். கம்பரையும் அவர்கள் படிப்பார்கள். பாடத் தெரிந்தவர்கள் தியாகராஜ சுவாமி தந்த ராமகீர்த்தனைகளையும் ஆனந்தமாகப் பாடுவார்கள். குழந்தைகளாகிய நீங்கள் யாருடைய உதவியும் இல்லாமல் நான் எழுதிய ராமாயணத்தை நீங்களாகவே படிக்கலாம். ராமனும், லக்ஷ்மணனும், பரதனும், ஹனுமானும் உங்களுடைய தகப்பனார், அண்ணன்மார்கள் போலவே உங்களுக்கு எப்போதும் துணையாகவே இருப்பார்கள். பரதனையும் லக்ஷ்மணனையும் ஹனுமானையும் போல் நீங்கள் பாக்கியம் பெற்று வாழ்வீர்களாக.

சீதையின் சரித்திரத்தை முழு உணர்ச்சியுடன் அனுபவிப்பது தாய்மார்களுக்குத்தான் முடியும். ஆதி கவிஞர் எழுத்திலும், கம்பர் பாட்டிலும், சீதா சரித்திரத்தைப் பொறுத்தமட்டில் தாய்மார்கள்தான் முழுக்கருத்தை உணர்வார்கள். ஏன், ஜடாயுவினுடைய சாகஸத்தையும் தாய்மார்கள் நூற்றுக்கு நூறாக உணர்ந்து மகிழ்வார்கள். சீதையினுடைய கஷ்டங்கள் ராமாயணத்தில் முடிவாகவில்லை. தாய்மார்கள் வாழ்க்கையில் அந்தச் சரித்திரம் இன்னும் நடந்து கொண்டே இருக்கிறது.

தான் ஈசுவர அவதாரம் என்பது அறியாத அவதாரம் ராமாவதாரம், தான் ஈசுவரன் என்று பூரணமாக அறிந்து அவதரித்ததும், லீலை நடத்தியதும் பகவான் கிருஷ்ணனுடைய விசேஷம். இந்த வேறுபாட்டை நினைவில் வைத்துக்கொண்டு நாம் ராமன் கதையையும், கண்ணன் கதையையும் படிக்கவேண்டும். அவதார ஞானமில்லாத ராமச்சந்திரன், மனிதனாக அடைந்த மனச்சோர்வும் பட்ட துயரமும் கண்ணன் கண்டதே கிடையாது. பேய்ச்சியின் பால் உண்டபொழுதும், கட்டுண்டு மொத்துண்ட பொழுதும், கவலை என்பதோ துக்கம் என்பதோ கண்ணனுக்குக் கிடையாது. யுத்தத்தில் ஆயுதமின்றி நிமித்த மாத்திரம் பிறரைக்கொண்டு மூர்க்கர்களைத் தீர்க்கும் சக்தியை ஐயமற்றுக் கண்டான் கண்ணன். இன்னும் ஒவ்வொரு கட்டத்திலும் மேலே சொன்ன இரு வேறு நிலைகளைக் காணலாம்.

வால்மீகி முனிவர் எழுதிய ராமாயணத்தில் சொன்னபடி, நான் சக்கரவர்த்தித் திருமகனில் எழுதி இருக்கிறேன். பாமரர்களிடையே பழங்கதை ஒன்று முனிவர் காலத்துக்கு முன் அனாதியாக வழங்கி வந்திருக்க வேண்டும்- அதாவது அபவாதத்துக்கு அஞ்சி ராமன் சீதையைக் காட்டுக்கு அனுப்பிவிட்டதாக. இந்தத் துயரக் கதை நம்முடைய தேசத்துப் பெண்மணிகளின் கடல்போன்ற துக்கத்தில் தானாக உதித்த ஒரு கற்பனை. அதுவே உத்தரகாண்ட புராணமாக வடிவம் எடுத்தது. அது அழகும் துக்கமும் கலந்த புராணமேயாயினும் மனத்துக்குச் சமாதானமாகப் படவில்லை என்பதும் ஒப்புக்கொள்ள வேண்டும். யுத்தபூமியில் அக்னி பரீட்சை மூலமாக அந்த அபவாத கட்டத்தை முனிவர் ஒருவிதமாக முடித்துவிட்டார். ஆனால் இந்தப் பரீட்சையும் என் புத்தியில் ராமனுடைய குணத்துக்கு அவ்வளவு பொருத்தமாக இல்லை. படிக்கும்போது கஷ்டமாக இருக்கிறது.

சக்கரவர்த்தித் திருமகன் மிதிலையிலிருந்து திரும்பியபோது பரசுராமனுடைய சந்திப்பு நிகழ்ந்தது. அந்தச் சந்திப்புடன் பரசுராமனுடைய விஷ்ணு அவதாரம் முடிந்து போனதாகப் பெரியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். அப்படியே ராவண சம்ஹாரத்துடன் ராமச்சந்திரனுடைய விஷ்ணு அவதாரம் முடிந்ததாகவும் வைத்துக் கொள்ளலாம். அதற்குப்பின் ராமன் இக்ஷ்வாகு வம்சத்து அரசனாகத்தான் எஞ்சி நின்றான். இப்படி வைத்துக் கொண்டால், யுத்த காண்டத்தில் சீதையை நடத்திய முறையும், பிறகு உத்திர காண்டத்தில் சொல்லப்படும் விஷயங்களும் சிக்கல் தீர, உலக நீதியின்படி அயோத்தி மன்னன் நடந்ததாக வைத்துக் கொள்ளலாம்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் சுவடியில் எழுதிச் சேதப்பட்டோ சேதப்படாமலோ வந்த நூலைப்பற்றி எதையும் நிச்சயமாகச் சொல்ல இயலாது. யுத்த காண்டத்தில் அக்கினிச் சோதனைக்கு உள்ளாகிய பிறகும், காட்டுக்கு அனுப்பப்பட்டதாக உத்தர காண்டத்தில் சொல்லப்படுகிறது. பிராட்டியின் துயரமே துயரம்! நம்முடைய ஸ்திரீ சமுதாயத்தின் சொல்லுக்கு அடங்காத துயரங்கள் இதில் பிரதிபலிக்கின்றன.

துன்பம் என்ன? இன்பம் என்ன?-எல்லாம் ஈசுவரலீலை. ஆண்டவனே தன் கருணாமூர்த்தியான பிராட்டியையும் கூட அழைத்துக்கொண்டு, மக்களோடு சமமாக, மானிடர்களாக அவதரித்து, அந்த இன்பதுன்ப லீலையை முற்றிலும் ஆடிக் காட்டியிருப்பதாக ராமாயண புராணத்தில் காணலாம்.

வானத்தினின்று மழை பெய்கிறது. அது ஆறாக ஓடிக் கடலில் சேருகிறது. மறுபடியும் கடலினின்று நீரைச் சூரியன் உறிஞ்சி அது வானத்துக்கு ஏறி, மழை பெய்யவும் ஆறுகள் ஓடவும் செய்கின்றன். இவ்வாறே நாட்டு மக்களின் உள்ளத்தினின்று கருத்துக்கள் எழுந்து முனிவர் உள்ளத்தில்

தெய்வீகக் கவி உருவாகி, அது மக்கள் உள்ளத்தில் மறுபடியும் ஒளியும் கருத்தும் தருகிறது. இப்படி ஒன்றுக்கொன்று தொடர்ச்சியாக உதவிக்கொண்டு எல்லா நாடுகளிலும் மக்களின் கருத்துக் கடலும், கவிகளின் பிரபந்தங்களும் சம்பந்தப்பட்டு வருகின்றன. பாரத நாட்டுப் பெண் மக்களின் தூய பண்பும் அவர்கள் படும் துயரங்களும் உத்தர ராமாயணமாக உருவமெடுத்தது. ஆகவே பாரத நாட்டுப் பெண்களின் உள்ளத்துக்கு ஒளியும் சாந்தியும் தரும் நந்தா விளக்காகவும் ஆகிறது. ஒரு தேசத்து மக்களின் நம்பிக்கைகளினின்று இதிகாச, புராண, திவ்விய பிரபந்தங்கள் உண்டாயினவா, அல்லது இதிகாச புராணங்களால் மக்களின் கொள்கைகளும் நம்பிக்கைகளும் உண்டாயினவா என்பது கேள்வி. இதை அவரவர்கள் தத்தம் போக்கின்படி தீர்த்துக்கொண்டு திருப்தியடைவார்கள். செடியினின்று விதை உண்டாயிற்றா, விதையினின்று செடி உண்டாயிற்றா? — என்ற கேள்வியைப் போலவே இது ஆராய்ச்சியில் தீராத ஒரு பிரச்சினை. பறவை முதற்காரணமா, முட்டை முதற்காரணமா? கடலினின்று மேகங்கள் உண்டாயினவா, அல்லது மழை பெய்து ஆறுகள் யுகாந்தரமாக ஓடிக் கடல் நிறைந்ததா? இத்தகைய பிரச்னைகள் நம்மை முடிவில் ஆண்டவன் பாதங்களில், வாக்குக்கும் கருத்துக்கும் அப்பாற்பட்ட இடத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கின்றன.

வேறொரு விஷயம்: சீதையை ராவணன் எடுத்துப் போன இடத்தில் வால்மீகிக்கும் கம்பராமாயணத்துக்கும் ஒரு பேதம் இருக்கிறது. ராவணன் சீதையைக் கையால் தூக்கி எடுத்துப் போனதாக வால்மீகியில் சொல்லியிருப்பதை மாற்றி, கம்பராமாயணத்தில் தேவியைத் தீண்டாமல் தரையோடு அப்படியே அலாக்காக எடுத்துப் போனான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. கம்பராமாயண முறையில்

தான் பாகவதர்கள் கதை அநேகமாகச் சொல்லி வருகிறார்கள். ஏனெனில் அதுவே நம்முடைய மக்கள் உள்ளத்திற்குச் சமாதானம் தருகிறது. அதருமமாகவும் மிருகத்தனமாகவும் ஒரு கொடியவன் ஒரு ஸ்திரீயிடம் நடந்துகொண்டால், நிரபராதியான அவளை அதனால் ஏதொரு பாவமும் தொடருவதில்லை. அவமானமும் ஆகாது. ஆயினும் நம்முடைய நாட்டில் அது அந்த ஸ்திரீயினுடைய சீலத்துக்கு ஒரு களங்கம் என்று தவறாக எண்ணி வருகிறார்கள். இதற்கு விட்டுக் கொடுக்கத்தான் கம்பர், வால்மீகி ராமாயணத்தை இந்த இடத்தில் மாற்றிவிட்டார். இதே காரணமாகத் தான் துளசி ராமாயணத்திலும் ராவணன் தூக்கிப்போனது உண்மைச் சீதையை அல்ல என்றும், ஒரு மாயா சீதையை நிறுத்திவிட்டுப் பிராட்டி மறைந்து போனதாகவும் சொல்லப்படுகிறது. இப்படித்தான் வடக்கே அனைவரும் ராமாயணத்தைச் சொல்லி வருகிறார்கள். அக்கினிப் பரீட்சையின் போது மாயா சீதை நெருப்பில் மறைந்து போனதாகவும், தீயிலிருந்து உண்மைப் பிராட்டி உதித்து வந்ததாகவும், துளசி ராமாயணத்தில் அழகாக முடிகிறது.

'கல்கி' பத்திரிகையில் வாராவாரம் தொடர் கதையாக வந்தபோது, ஹனுமானைப் படம் எழுத வேண்டுமானால் ஒரு பக்கத்தில் அடக்குவதற்கு மேல் எழுத முடியாது. நீங்களோ ஹனுமானையாவது ராவணனையாவது கும்பகர்ணனையாவது உங்கள் கற்பனையில் ஆகாயம் அளாவ எழுதலாம்.

மிக அறிந்தவனைப் போல் ஏதேதோ சொல்லிக் கொண்டு போனேன். மற்றவர்களுக்குச் சொல்லுவது இருக்கட்டும், சொந்தச் சமாச்சாரம் என்ன?

பல மாதங்கள் 'கல்கி'க்குத் தொடர்கதையாக ராமாயணத்துடன் கூடிக் குலாவி அதற்குப் பணிசெய்யும்



ஆனந்தத்தில் இருந்தேன். அந்தக் கனவு முடிந்து போயிற்று. பிராட்டியினின்று பிரிந்தபோது சக்கரவர்த்தித் திருமகன் துயரமடைந்தான்; அயோத்தியை விட்டுப் பிரிந்தபோது துக்கப்படவில்லை. அதைப்போலவே என்னளவில் என் சொந்தக் கதையும். பலவிதப் பணிகளிலும் பொறுப்பு களிலும் பதவிகளிலும் நான் இருந்து பிரிந்திருக்கிறேன். பிரிந்தவுடன், இன்னது செய்வது என்பது தோன்றாமல் குழப்பம் அடையவில்லை. ஆனால் சக்கவர்த்தித் திருமகன் கதையைக் கல்கியில் சொல்லும் பணி முடிந்து போனதும் மூர்த்தியில்லாத கோயிலைப்போல், எல்லாம் ஏதோ வெறித்துப் போன மாதிரியிருந்தது. பணியற்ற வாழ்வின் கதி இதுவே என்பதை யாவரும் தெரிந்து கொள்ள வேண்டும். பணியை ஒரு பாரமாக நினைக்க வேண்டாம். பணியே உயிருக்கு உயிர் தரும் ரகசியம். 'குர்வன்னேவைஹ கர்மாணி ஜிஜிவிஷேத் சதம்ஸமாஹ் ஏவம் தவயி நான்யதே தோஸ்தி' என்று ரிஷி சொன்னது இதுவே. செய்யும் காரியங்களில் பசை வைத்துக்கொண்டு அலையக்கூடாது. ஆனால் பணிகள் செய்து கொண்டிருந்தால் மட்டுமே வாழ்க்கையைச் சகிக்க முடியாது.

சக்கரவர்த்தித் திருமகன் என்கிற பெயரிட்டு
ராஜாஜி தமிழ் மக்களுக்கு எழுதிய இராமாயணம் முற்றிற்று.

ஓம்: